கழக வெளியீடு: கஉஅஅ

3075

# குறள் முதுமொழி வெண்பாக் கொத்து

1288

சோமேசர் முதுமொழி வெண்பா முருகேசர் முதுநெறி வெண்பா இரங்கேச வெண்பா (நீதி சூடாமணி)

ஆகிய

மூன்று முதுமொழி வெண்பாக்கள் :
உரை, விளக்கம்,
கதைக்குறிப்புக்களுடன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1967



Ed 1 April 1967



KURAL MUDUMOZHI VENBAAK KOTTHU
Appar Achakam, Madras-1.

# பதிப்புரை

திருக்குறள் ஓர் அறிவுக்கருவூலம். தொட்டனைத் தூறும் மணற்கேணியென அதனைக் கற்கும் மாந்தரின் பட்டறிவுக் கேற்பப் பல உண்மைகள் அதன்கண்

காணக்
கிடைக்கும். அங்ஙனம் கண்டு தெளிந்த அறிஞர்கள் தம் கருத்தைக் கவிதைகளாகவும், கட்டுரைகளாகவும், கதைகளாகவும் வெளியிடலாயினர். அவ்வகையில் வெளி வந்தவைகளுள் குறள் முதுமொழி வெண்பாக்கள் ஒருவகை.

இவ்வெண்பாக்கள் ஒவ்வொன்றும் சில நீதிகளையும், நல்லொழுக்கக் கருத்துக்களையும் உள்ளடக்கி நிற்பன. செய்யுள் அமைப்பில் கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பன வெண்பாக்களே. எனவே பண்டைத்
தமிழ் அறிஞர்கள் இவ்வெண்பா யாப்பில் முன்னிரண்டடி களில் தாம் சொல்லக் கருதிய பொருளையும், அதனை வலியுறுத்தப் பின்னிரண்டடிகளில் அதற்கேற்ற திருக் குறளையும் அமைத்து முதுமொழி வெண்பாவென நூல் யாத்தனர்.

இத்தகைய பயனுள்ள வெண்பாக்களை ஒரே
தொகுப்பில் காணும் வாய்ப்பு மக்களுக்குக் கிட்டுமாயின் நலமாயிருக்குமெனக் கருதினோம். அதன் விளைவாகவே இக்குறள் முதுமொழிவெண்பாக் கொத்து உருவாயிற்று.

இதன் கண் மாதவச் சிவஞானயோகிகள் இயற்றிய சோமேசர் முதுமொழிவெண்பா, சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள் இயற்றிய முருகேசர் முதுநெறி வெண்பா, பிரசைச் சாந்தக் கவிராயர் இயற்றிய இரங்கேச வெண்பா என்னும்

நீதி சூடாமணி ஆகிய மூன்று நூல்களும் உரை, தொகுத்துத்

விளக்கம், கதைக்குறிப்பு ஆகியவற்றுடன் தரப் பெற்றுள்ளன. அன்பர்கள் இதனைக் கற்றுச் சுவையும் பயனும் காண்பார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

# உள்ளுறை

பக்கம்


எடுத்தாளப் பட்ட திருக்குறட் பாக்களின்
முதற்குறிப்பு அகரவரிசை
சோமேசர் முதுமொழி வெண்பா ....
1-192

(மாதவச் சிவஞான யோகிகள்)

முருகேசர் முதுநெறி வெண்பா ....
1-176

(ஈசானிய மடம் ராமலிங்க சுவாமிகள்)
இரங்கேச வெண்பா என்னும்
நீதி சூடாமணி ....

| | | | |
|---|---|---|---|
| அகடாரா ரல்ல (மு) | 125 | அறஞ்சாரா நல்குர (நீ) | 144 |
| அகர முதல (சோ) | 4 | அறத்தினூஉங் காக்க (நீ) | 10 |
| அகர முதல (மு) | 4 | அறிகொன் றறியா (மு) | 86 |
| அகர முதல (நீ) | 5 | அறிகொன் றறியா (நீ) | 91 |
| அகழ்வாரைத் தாங்கு (நீ) | 28 | அறிதோ றறியாமை (மு) | 146 |
| அங்கணத்து ளுக்க (மு) | 97 | அறிவிலார் தாந் (நீ) | 117 |
| அஞ்சாமை யல்லாற் (மு) | 68 | அறிவுடையா ராவ (மு) | 58 |
| அஞ்சுவதஞ்சாமை (சோ) | 67 | அறிவுடையா ராவ (நீ) | 64 |
| அடுக்கிய கோடி (நீ) | 132 | அற்றார்க் கொன்றாற்று (நீ) | 138 |
| அடுக்கி வரினு (சோ) | 94 | அனிச்சமு மன்னத் (நீ) | 154 |
| அணங்குகொ லாய் (மு) | 144 | அன்பிலா ரெலாந் (நீ) | 17 |
| அரங்கின்றி வட்டாடி (நீ) | 62 | அன்பிற்குமுண்டோ (சோ) | 17 |
| அரம்பொருத பொன் (மு) | 118 | அன்போ டியைந்த (மு) | 14 |
| அரியவற்று ளெல்லா (சோ) | 69 | ஆக்கங் கருதி (சோ) | 71 |
| அருமறை சோரு (மு) | 114 | ஆக்க மதர்வினாய்ச் (நீ) | 86 |
| அல்லல்பட் டாற்று (சோ) | 84 | ஆக்கமுங் கேடு (சோ) | 97 |
| அல்லல்பட் டாற் (நீ) | 81 | ஆங்கமை வெய்திய (சோ) | 110 |
| அவர்நெஞ் சவர்க் (சோ) | 186 | ஆங்கமை வெய்தியக் (மு) | 100 |
| அவாவினை யாற்ற (நீ) | 56 | ஆய்ந்தாய்ந்து கொள் (மு) | 107 |
| அவையறிந் தாரா (நீ) | 101 | ஆவிற்கு நீரென் (சோ) | 154 |
| அழிவந்த செய்யினு (சோ) | 119 | ஆவிற்கு நீரென் (நீ) | 146 |
| அழிவி னவை (மு) | 106 | ஆற்றி னளவறிந்து (சோ) | 108 |
| அழிவி னவை (நீ) | 109 | ஆற்றி னளவறிந்து (மு) | 98 |
| அழுக்கா றவா (சோ) | 10 | ஆற்றாரு மாற்றி (சோ) | 75 |
| அழுக்கா றுடையார்க் (சோ) | 31 | ஆற்றி னொழுக்கி (மு) | 10 |
| அழுக்கா றுடையார்க் (நீ) | 29 | இகலானா மின்னாத (சோ) | 125 |
| அழுக்காற்றினல்ல (மு) | 26 | இகலின் மிகலினி (மு) | 115 |
| அளவளா வில்லா (சோ) | 80 | இகல்காணா னாக்கம் (நீ) | 119 |
| அளித்தஞ்ச லென்ற (மு) | 153 | இகழ்ச்சியிற் கெட் (சோ) | 81 |


குறிப்பு: சோ: சோமேசர் முதுமொழி வெண்பா, மு: முருகேசர் முதுநெறி வெண்பா, நீ: நீதி சூடாமணி.

இகழ்ச்சியிற் கெட் (நீ) 79
இகழ்ந்தெள்ளா தீ (சோ) 152
இடனில் பருவ (மு) 32
இடுக்கட் படினு (மு) 89
இடுக்கண் கால் (சோ) 149
இணரெரி தோய் (சோ 50
இதனை யிதனா (நீ) 76
இம்மைப் பிறப்பிற் (மு) 172
இம்மைப் பிறப்பிற் (நீ) 178
இயல்பாகு நோன் (சோ) 55
இயல்பினா னில் (சோ) 12
இயல்பினா னில் (நீ) 12
இரத்தலு மீதலே (நீ) 145

இரவா ரிரப்பார் (மு) 137
இருநோக் கிவளு (மு) 145
இருந்துள்ளி யென் (சோ) 180
இலனென்று மெவ்வ (மு) 33
இல்லாரை யெல்லா (நீ) 106
இல்லாள்கட் டாழ் (சோ) 134
இழுக்க லுடையுழி (நீ) 63
இளைதாக முண்மரம் (நீ) 121
இறுதி பயப்பினு (சோ) 102
இறுதி பட்பினு (நீ) 97
இறைகடிய னென்று (மு) 77
இறைகாக்கும் வைய (மு) 74
இன்சொ லினிதீன் (சோ) 20
இன்பங் கடன் (சோ) 169
இன்பங் கடனமறு (நீ) 160
இன்ப மொருவற் (மு) 140

இன்மை யிடும்பை (மு) 141
இன்மை யென (மு) 138
இன்றுசெய் தாரை (மு) 44
இன்றுசெய் தார்க் (சோ) 145
இன்றுசெய் தார்க் (நீ) 136
இன்று திறக்கப் (சோ) 39
இன்று தினனில் லூர் (சோ) 167
இன்றுமை இன்ப (மு) 85
இன்றுமை இன்ப (நீ) 90
ஈட்ட மிவற் (மு) 133
ஈத லிசைபட (சோ) 41
ஈர்ங்கை விதிரார் (சோ) 155
உடைத்தம் வலிய (சோ) 72
உடைத்தம் வலிய (மு) 65

உடைத்தம் வலிய (நீ) 71
உண்டார்க ணல்ல (சோ) 156
உப்பமைந் தற்று (மு) 171
உரனசைஇ யுள் (சோ) 182
உரனென்னுந் தோட் (நீ) 8
உருவுகண் டெள் (சோ) 99
உருவுகண் டெள் (நீ) 95
உவப்பத் தலைக் (சோ) 61
உவப்பத் தலைக் (மு) 54
உழவினார் கைம் (சோ) 150
உழுவா ருலகத்தார்க் (நீ) 143
உள்ளக் களித்த (சோ) 184
உள்ளத்தா னுள் (நீ) 45

உள்ளினுந் தீராப் (நீ) 165
உறாஅ தவர்போற் (சோ) 158
உற்றநோய் நீக்கி (மூ) 61
ஊக்க முடையா (சோ) 73
ஊடலிற் றோற்ற (சோ) 189
ஊடி யவரை (நீ) 177
ஊடுதல் காமத்து (மூ) 173
ஊடுதல் காமத்து (நீ) 179
ஊதிய மென்ப (சோ) 117
ஊழி பெயரினும் (மூ) 131
ஊழிற் பெருவலி (மூ) 51
ஊழிற் பெருவலி (நீ) 57
ஊழையு முப்பக்கம் (மூ) 84
ஊழையு முப்பக்கம் (நீ) 88
எட்பக வன்ன (சோ) 130
எட்பக வன்ன (நீ) 122

எண்சேர்ந்த நெஞ் (மு) 122
எண்ணியா ரெண்ண (நீ) 73
எந்நன்றி கொன்றார் (மு) 18
எய்தற் கரிய (மு) 67
எல்லார்க்கு மெல் (சேர) 88
எல்லைக்க ணின்றார் (நீ) 112
எழுதுங்காற் கோல் (நீ) 175
எழுபிறப்புந் தியவை (நீ) 15
எள்ளாத வெண்ணிச் (மு) 64
எள்ளாமை வேண் (சோ) 47

என்றென் றிரங்குவ (சோ) 98
எனைத்தானு நல் (மு) 56
எனைப்பகை யுற்றாரு (மு) 31
எனைமாட்சித்தாகிய (சோ) 111
எனைமாட்சித் தாகிய (மு) 101
எனைமாட்சித் தாகி (நீ) 104
எனைவகையாற் றேறி (சோ) 78
எனைவகையாற் றேறி (மு) 70
ஏதிலா ரார (நீ) 116
ஏந்திய கொள்கை (சோ) 132
ஏந்திய கொள்கை (மு) 120
ஏவவுஞ் செய்க (சோ) 124
ஐயப் படாஅ (சோ) 105
ஐயப் படாஅ (மு) 96
ஐயப் படாஅ (நீ) 99
ஐயுணர் வெய்திய (நீ) 55

ஒண்ணுதற் கோஒ (நீ) 150
ஒப்புரவினால் வருங் (நீ) 36
ஒருதலையா னின்னா (மு) 157
ஒருதலையா னின்னாது (நீ) 163
ஒருநா ளெழுநா (மு) 166
ஒருமைக்கட் டான் (நீ) 61
ஒலித்தக்கா லென் (சோ) 114
ஒலித்தக்கா லென் (மு) 104
ஒலித்தக்கா லென் (நீ) 107
ஒல்லுங் கரும (சோ) 121
ஒல்லும் வகையா (மு) 8
ஒழுக்கத்தி னெல்கா (மு) 22
ஒழுக்க முடைமை (26) 26
ஒழுக்க முடைய (சோ) 26
ஒறுத்தார்க் கொரு (சோ) 29
ஒறுத்தாற்றும் பண் (சோ) 86
ஒறுத்தாற்றும் பண் (நீ) 84

ஒற்றினா லொற்றி (மு) 80
ஒற்றினா லொற்றி (நீ) 85
ஒன்றா வுலகத் (மு) 35
ஒன்றெய்தி நூறிழக்(சோ)138
ஓதி யுணர்ந்தும் (மு) 113
கடலன்ன காம (சோ) 165
கடிந்த கடிந்தொரார் (நீ) 93
கடுஞ்சொல்லன் கண் (சோ) 85
கடைக்கொட்கச் (மு) 91
கண்டது மன்னு (சோ) 166
கண்டது மன்னு (மு) 152

கண்ணொடு கண்ணிணை (நீ) 151
கண்ணின்று கண் (மு) 28
கண்ணோட்டத் துள்ள (மு) 78
கதுமெனத் தாநோ (சோ) 170
கதுமெனத் தாநோ (நீ) 161
கருமஞ் செயவொரு (மு) 136
கல்லா வொருவன் (மு) 55

களவின்கட் கன்றிய (மு) 41
களித்தறியே னென் (நீ) 128
களித்தானைக் கார (சோ) 137
களித்தொறுங் கள் (நீ) 157
கற்றறிந்தார் கல்வி (சோ) 106
கற்றுருட் கற்று (நீ) 102
கற்றில னாயினுங் (சோ) 64
கற்றீண்டு மெய்ப் (மு) 49

காக்க வொருளா (நீ) 25
காணுங்காற் காணே (மு) 169
காதலரில் வழி (மு) 161
காத லவரில (மு) 164
காமக் கடும்புன (மு) 150
காமக் கடும்புன (நீ) 156
காமமு நாணு (மு) 154
காமம் வெகுளி (சோ) 56
காலங் கருதி (நீ) 72
காலை யரும்பி (சோ) 177
கான முயலெய்த (சோ) 115

குடிபுறம் காத்து (சோ) 83
குடிப்பிறந்தார் கண் (மூ) 127
குடிப்பிறந்து தன்கட் (நீ) 111
குன்றினனையாருங் (நீ) 134
குன்றேறி யானைப் (சோ) 112
குன்றேறி யானைப் (மூ) 102
கூடிய காமம் (நீ) 172
கூற்றத்தைக் கையால் (நீ) 123
கெடுப்பதூஉங் கெட் (நீ) 6
கெட்டார்க்கு நட்டா (மூ) 170
கைவேல் களிற்றொடு (நீ) 108
சமன்செய்து சீர் (சோ) 23



காதலின் இன்னாத (நீ) 37

சாயலு நாணு (மு) 156
சிறியா ருணர்ச்சியு(சோ) 143
சிற்றின மஞ்சும் (நீ) 69
சீரினுஞ் சீர் (மு) 129
சீருடைச் செல்வர் (சோ) 147
சீர்மை சிறப்பொடு (நீ) 33
செயற்பால செய்யா (மு) 60
செய்யாமற் செய்த (நீ) 21
செல்லாமை யுண்டேல்(நீ) 159
செல்லா விடத்து (நீ) 48
செல்விருந் தோம்பி (நீ) 18
செவிகைப்பச் சொ (சோ) 60
செற்றார்பின் செல்லா (மு) 165
சொல்லப் பயன் (மு) 142
சொல்லுக சொல்லை (நீ) 92
சொல்லுக சொல்லை (மு) 87
சொல் வணக்க மொன்(நீ) 114

சொற்காட்ட யில்லது (மு) 19
தக்கா ரினத்தனாய் (நீ) 68
தந்நலம் பாரிப்பார் (நீ) 127
தந்நெஞ்சத் தெம் (சோ) 174
தம்மிற்றம் மக்க (சோ) 15
தலைப்பட்டார் தீர (மு) 48
தவமறைந் தல்லவை (மு) 40
தவமுந் தவமுடை (சோ) 44
தனியே யிருந்து (நீ) 176
தன்னுயிர் நீப்பினுஞ் (சோ) 53
தன்னுயிர் நீப்பினும் (நீ) 51
தன்னூன் பெருக்கற் (சோ) 43
தன்னை யுணர்த்தி (சோ) 188
தாம்வீழ்வார் மென் (சோ) 161
தாம் வீழ்வார் மென் (நீ) 153
தானந் தவமிரண்டுந் (சோ) 6
தானந் தவமிரண்டும் (மு) 5

திணைத்துணை நன்றி (சோ) 21
திணைத்துணையாங் குற் (நீ) 66
தீயவை தீய (நீ) 34
யௌ வன்றி (நீ) 131
துஞ்சினார் செத்தா (மு) 124
தெய்வந் தொழாஅள் (சோ) 14

தெரிந்த இனத்தொடு (நீ) 70
தேரான் தெளிவுந் (நீ) 75
தேரான் பிறனை (மு) 69
தேரான் பிறனைத் (சோ) 76
தோன்றிற் புகழொடு (நீ) 38
நகுதற் பொருட் (சோ) 116
நகையுள்ளு மின்னா (நீ) 137
நடுவின்றி நன் (சோ) 32
நடுவின்றி நன்பொரு (மு) 27
நடுவின்றி நன்பொருள் (நீ) 31
நட்டார்போ னல்ல (சோ) 122
நயனின்று நன்றி (நீ) 20

நயனுடையா லல் (சோ) 38
நலத்தகை நல்ல (சோ) 187
நல்லாண்மை யென்ப (நீ) 141
நல்லாற்ற ுடை (மு) 36
நல்வினைத் திறாங்கும் (சோ) 70
நல்வினைத் திறாங்குந் (மு) 83
நற்பொரு ளைன் (சோ) 151
நனவினாற் கண்ட (சோ) 176
நனவினா னல்கா (நீ) 167
நனவென வொன்றில் (மு) 160
நன்றறி வாரிற் (நீ) 148
நன்றே தரினு (நீ) 23
நாங்காதல் கொண் (சோ) 178
நாண்வேலி கொள் (மு) 135
நாணா லுயிரைத் (சோ) 148
நாணா லுயிரை (நீ) 139

நிலையஞ்சி நீத்தாரு (மு) 46
நில்லாத வற்றை (சோ) 54
நில்லாத வற்றை (மு) 47
நில்லாத வற்றை (நீ) 52
நிறைமொழி மாந்தர் (சோ) 8
நிறைமொழி மாந்தர் (மு) 7
நிறையுடைமை நீங்கா (மு) 24
நினைத்தொன்று சொல் (நீ) 170
நோய்நாடி நோய் (சோ) 139
நோய்நாடி நோய்முத (மு) 126
பகச்சொல்லிக் கேளி (சோ) 34
பகச்சொல்லிக் கேளிர் (நீ) 32
பகைபாவ மச்சம் (சோ) 28



பகைபாவ மச்சம் (மு) 23

பசந்தா ளிவளென் (நீ) 162
பசப்பெனப் பேர் (சோ) 172
படைகொண் டார் நெஞ் (மு) 37
பணிவுடைய னின் (மு) 16
பணை நீங்கிப்பைங் (சோ) 179
பணை நீங்கிப் பைங் (மு) 162
பண்பிலான்பெற்ற (சோ) 146
பண்புடையார்ப் பட் (மு) 132
பயனில்சொல் பாரா (சோ) 35
பரியது கூர்ங்கோட் (சோ) 90
பருகுவார் போலி (மு) 111
பழைய பெனக் (சோ) 104
பழைய மெனக் (நீ) 98
பல்லார் முனிய (மு) 29
பனியரும்பிப் பைதல் (நீ) 168
பன்மாயக் கள்வன் (சோ) 181

பன்மாயக் கள்வன் (நீ) 171
பாலொடு தேன்கலந் (நீ) 155
பிரித்தலுப பேணிக் (சோ) 95
பிறர்க்கின்னா முற் (சோ) 52
பிறர்க்கின்னா முற் (நீ) 49
பிறன்பனை நோக்காத (நீ) 27
புரந்தார்கண் ணீர்மல் (மு) 105
பெண்ணிற் பெருந் (மு) 11
பெண்ணிற் பெருந் (நீ) 13
பெரிதாற்றிப் பெட்(சோ) 184

பெரிதாற்றிப் பெட்ப(மு) 167
பெரிதினிது பேதை(சோ) 123
பெருமை யுடையவ(நீ) 135
பெரும் பொருளாற் (நீ) 103

பெறுமவற்றுள் யாம (மு) 13
பேணாது பெட்டா (மு) 155
பேதைப் படுக்கு (சோ) 59
பேதை பெருங் (நீ) 113
பேதைமை யொன் (மு) 109
பொதுநலத்தார் புன் (சோ) 136
பொய்ம்மையும் வாய் (சோ) 49
பொய்யாமை பொய் (மு) 42
பொருட்பொருளார் (மு) 123
பொருளற்றார் பூப்ப (சோ) 42

பொருளாட்சிபோற்றா (நீ) 41
பொருள் கெடுத் (நீ) 130
போற்றி னரியவை (மு) 95
மடிமை குடிமக்கண் (நீ) 67
மடியிலா மன்னவ (சோ) 92

மடியிலா மன்னவ (மு) 82
மயிர்நீப்பின் வாழா(சோ) 142
மறத்தல் வெகுளியை (மு) 43
மறந்தும்பி றன்கேடு (சோ) 36
மனத்தி னமையா (மு) 112
மனத்தொடு வாய்மை (நீ) 47
மனைவிழைவார் மாண் (நீ) 1. 5
மன்னர்க்கு மன்னு (மு) 76
மன்னுயி ரோம்பி (நீ) 40
முகைமொக்கு ளுள் (நீ) 174
முடிவு மிடையூறு (சோ) 101
முடிவு மிடையூறு (மு) 92
முயக்கிடைத் தண் (நீ) 169
முயற்சி திருவினை (சோ) 93

முறிமேனி முத்த (சோ) 162
முறிமேனி முத்த (மு) 148
முறைசெய்து காப் (மு) 53
முறைசெய்து காப் (நீ) 60
மூன்றுறக் காவா (மு) 73
மேலிருந்து மேலல் (மு) 130
மேற்பிரந்தா ராயி (சோ) 63

யாகாவா ராயினு (சோ) 25
யாகாவா ராயினு (மு) 20
யாமு புளேங்கொ (மு) 159
டானென தென் (நீ) 54
வருமுன்னர்க் காவா (சோ) 68
வருவிருந்து வைகலு (சோ) 19

வருவிருந்து வைகலு (மு) 15
வலியாற்கு மாறே (சோ) 126
வலியாற்கு மாறேற் (மு) 116
வலியி னிலைமையான் (சோ) 46
வலியி னிலைமையான் (நீ) 44
வழங்குவ துள் வீழ்ந் (சோ) 141
வழிநோக்கான் வாய் (நீ) 120
வாழ்த லுயிர்க் (சோ) 163
வாழ்த லுயிர்க் (மு) 149



விடுமாற்றம் வேந்தர் (மு) 94
விருப்பறாச் சுற்ற (மு) 71
விருப்பறாச் சுற்ற (நீ) 77

வெள்ளத் தனைய (மு) 81
வேண்டிய வேண்டி (மு) 39
வேண்டியவேண்டியாங் (நீ) 43

வில்லே ருழவர் (சோ) 127
வில்லே ருழவர் (மு) 117
வினையான் வினையாக்கி (நீ) 96
வெருவந்த செய் (நீ) 83

வேண்டுங்கால் வேண் (சோ) 58
வேண்டுங்கால் வேண் (மு) 50
வேலன்று வென்றி (நீ) 80

---

கழக வெளியீடு : ௩

# சோமேசர்
# முதுமொழி வெண்பா

மூலமும் உரையும்

ஆசிரியர் :
மாதவச் சிவஞான யோகிகள்
உரையாசிரியர் :
சென்னைக் கிறித்தவ கலாசாலைத்
தமிழாசிரியராயிருந்த
வா. மகாதேவ முதலியாரவர்கள்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி சென்னை.
First Edition: September 1921
Reprints: Oct, 1928; Sept, 1958.



:Published by
THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

Head Office:
98, EAST CAR STREET, TIRUNELVELI.

Paari Achakam, 127, Broadway, Madras-1. K-11

# பதிப்புரை

" சோமேசர் முதுமொழி வெண்பா " என்னும்

இந்நூல் சோமேசர் என்ற பழமொழியைக் கொண்ட வெண்பாவால் ஆகிய நூல் என விரியும். சோமேசர் என்பது சோமா + ஈசர் என்ற வடமொழி கூடிச் சோமேசர் எனப் புணர்ந்து நின்றது என அறியலாம். சோமனாகிய ஈசர் என்றுவது சோமேசனைத் தரித்த ஈசர் என்றுவது விரியும். சோமன் = சிவன். சந்திரனையும் உணர்த்தும் வடமொழியில் சா + உமா + ஈசர் என்பது சோமேசர் எனப் புணர்ந்து நிற்கும் எனவும் தெரிகிறது. சா என்பது கூடிய என்னும் பொருளை யுணர்த்துவதால் உமையுடன் கூடிய ஈசர் என வடமொழியாய்ப் பொருள்கொள்வர் போலும். இது மாதவச் சிவஞான யோகிகளால் இயற்றப் பெற்றதற்கு உரை வகுத்தவர் சென்னைக் கிறித்தவ உயர்நிலைப் பள்ளித் தமிழ் ஆசிரியராகிய உயர்திரு. வா. மகாதேவ முதலியார் அவர்கள். இது முன்னர் இருமுறை எம் கழகத்திற் பதித்து வெளியிடப்பட்டது. மூன்றும் முறையாக இப்போது வெளி வருகின்றது.

திருக்குறளில் ஒவ்வோர் அதிகாரத்திலும் ஒவ்வொரு கவியை எடுத்து அதற்குப் பொருந்திய கதையை மேலிரண்டு அடிகளில் அமைத்துத் தனிச் சொல்லும் அமைத்துப் பின்னிரண் டடியிற் குறளை அமைத்து நேரிசை வெண்பாவாக்கி முடித்துள்ளார். இரண்டு அடிகளில் கதையைச் சுருக்கிக் காட்டுவதும் எதுகை மோனை தனிச்சொல் அதற்கு ஏற்ப அமைப்பதும் மிகவும் அருமையான செயலாகும். நூற்று முப்பத்து மூன்று கதைகளும் நனி மிகப்

பொருத்தமானவைகளாகும். குறள் நீதிகள் மனத்திற் பதிவதற்குப் பொருத்தமான கதைகளை யுணர்வது மிகவும் சிறந்த முறையாகும். அது குறித்தே பல ஆன்றோர்கள் திருக்குறட் கருத்துக்களுக்கியைந்த கதையை முன்னிரண்டடியிலும் பின்னிரண்டடியில் குறட்பாவையும் அமைத்துச் செய்த நூல்கள் சில. இரங்கேச வெண்பா, சிவசிவ

ச சோமேசர் முதுமொழி வெண்பா

வெண்பா, முதலியன. குறள் ஆயிரத்து முந்நூற்று மூப்பதுக்கும் கதை வரைந்து காட்டி யிருக்கும் ஒரு பெருமை பெற்ற நூல் திருக்குறட் குமரேச வெண்பா என்பது.

தெய்வப் புலமைத் திருவள்ளுவர் குறட்பாவைப் பல வழியிற் பரப்பி மக்களுக்கு நல்லொழுக்கத்தையும் நற்பண்புகளையும் பதித்துத் தமிழ் மொழியின் வளர்ச்சி தமிழ்நாட்டு முன்னேற்றம் காணவேண்டும் என்பது எமது கழகத்தின் நோக்கமாகும். பள்ளியிற் பயிலும் மாணவர்கட்குப் பெரும்பாலும் மனப்பாடம் செய்வதற்கு ஏற்ற நூல் இதுவே. ஆசிரியர்களுக்கும் கதையை விளக்கிக் கற்பிப்பது எளிய முறையாகும். இளமைப் பருவத்தில் இவ்வெண்பாக்களை மனப்பாடஞ் செய்து கருத்தில் இருத்தினால் அந்த நீதி என்றென்றும் அழியாமல் நிலைத்து நிற்குமென்பதிற் சிறிதும் ஐயமில்லை. எம்கழகத்தின் நோக்கம் மேன்மேலும் பெருகும் வண்ணம் தமிழ் நாட்டு

மக்கள் அனைவரும் இந்நூலை வாங்கிக் கற்று நீதிவழுவாது நடந்து நாட்டு நலங் கருதுக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# ஆசிரியர் வரலாறு

**பிறப்பு**

சண்டிய வளனுடைப் பாண்டி நன்னாட்டில், கதிதரு தமிழ் வரு *பொதியிலின் சாரலில், தேவநேசர்கள் வாழ் **பாவநாசத்தைச்** சார்ந்த **விக்கிரமசிங்கபுரத்தில்** ஏழு கால்வழிவரை ஆழி போற் பரந்த புலமை நிரம்புமாறு **அகத்தியனார்பால்** வரம் பெற்ற பரம்பரைச் சைவ வேளாளர் குலத்தில், கல்வியுஞ் செல்வமும் ஒருங்கமையப் பெற்றுச் சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்து விளங்கிய **ஆனந்தக்கூத்தர்** என்பார்க்கு

'...............நிலத்து மாணிடர்க்கே
யுரிய தாகி யுருதமுன் பெரிது
முற்றுழி நீங்குவ தொன்றுமாம் வேட்கை
யென்னு மதனுக் கென்றும்வே றாகி
மனத்தொடு மனத்தினை மன்றப் பிணிக்குங்
கட்புல னாகக் கனிவெனுங் கயிறு
வெண்டா தின்றொடர் மேதகு பட்டு
முடிச்சென வொருகவி முன்பணி பெறவே
கழறிய கழிபெருங் காதன்மிக் கொத்த

கற்பினும் பொற்பினுங் கன்மகள் பொன்மக
'ளென்ன லாகு மில்லக் கிழத்தி' யாகிய
மயிலம்மையார் மணி வயிற்றிருந்து ஏழாவது காலவழியாக நற்றமிழ் நாடு முற்றிய தவத்தால் ஆசிரியர் திருத்தோற்றஞ் செய்து முக்களாலிங்கரென்னும் பிள்ளைத் திருப்பெயர் பெற்று, 'விளையும் பயிர் முளையிற் றெரியும்' என்பதற் கொப்ப அன்பும் அருளும் வாய்மையுந் தூய்மையும் பருவத்திற் பன்மடங்கு கொண்ட மதிநுட்பமும் உடையராய்ப் பெற்றூர்க்கும் உற்றூர்க் கும் அடங்கா மகிழ்ச்சி தந்து ஐந்தாவது ஆண்டடைந்தனர்.

---

*பொதியமலை என்பது பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சேர்ந்த அம்பாசமுத்திரத்திற்கு ஏழு கல்லில் உள்ளது.



அவ்வாண்டில் வித்தியாரம்பஞ் செய்யப் பெற்றுப் பாடசாலை சென்று வருவாராயினர்.

### திருவாவடுதுறை முனிவர்களை உபசரித்தல்

அவ்வாறு சென்று வருங்கால் ஒரு நாள் திருவாவடு துறையினின்றும் போந்து பரமன் எழுந்தருள்கின்ற பதிபலபுக்கு வணங்கி விக்கிரமசிங்கபுரத்து வீதிவழி வந்த சில முனிவர்களைக் கண்டு வீழ்ந்திறைஞ்சி முகமன் வழங்கித் தமது இல்லம் அழைத்துச் சென்று அருந்ததி யொத்த தமது அன்னையாரை அவர்கட்குத்

திருவமுது அருத்து மாறு இரந்துகூற, அவ் வம்மை யார் அதற்கு ஒருப்பட்டு அவர்களை இனிது அருத்த அதைக் கண்டு ஞானவிருத்தராகிய ஆசிரியர்.

'அருந்ததியென் னம்மை யடியவர்கட் கென்றுக்
திருந்த வமுதளிக்குஞ் செல்வி—பொருந்தவே
யானந்தக் கூத்த ரகமகிழத் தொண்டுசெயு
மானந் தவாத மயில்'

என்னுஞ் செய்யுளை ஆண்டுக் கூறினர். அதன்பின் வீடுபுக்க ஆனந்தக் கூத்தர் இவ் வருஞ்செயல் கேட்டுப் பேரின்பப் பரவை
யுட் படிந்து அரும்பெறற் புதல்வனை மார்புறத்தழீஇ,
'கருவினிற் றிருவுடைக் காதல! திருவமுது செய்து சென்ற முனிவர்களை எனக்குக் காட்டுக. யானும் அவர்கள் அடிகளிற் றாழ்தல் வேண்டும்' என, ஆசிரியர் தம் தந்தையாரை அவர் கள் இருந்துழி அழைத்துச் செல்ல, அவரும் எட்டுறுப்பும் ஐந்துறுப்புந் நிலந் தோய வீழ்ந்து வணங்கி நின்றுழி அதி தீவிர பக்குவமுடையராகிய ஆசிரியர் தந்தை தாயாரை நீத்து அறவாழி யந்தணன் றாள் சேர்ந்து பிறவாழி நீந்தப் பரிந்து அம் முனிவர் களோடு தாஞ் செல்ல மனங் கொண்ட குறிப்பினை யுணர்த்தச் சற்புத்திரரைப் பிரியச் சற்றும் மனமின்றியும் அதற்கு ஒருப் பட்டு அவரை அங்கு விட்டுத் தமியராய்த் திரும்பி வீடு புக்கார்.

## தீக்கையும் துறவும்

ஆசிரியர் அம் முனிவர்களோடு வழிக்கொண்டு இடைப் பட்ட பல சிவதலங்களைத் தரிசித்துத் திருவாவடுதுறை யடைந்து நூலாசிரியர் வரலாறு

எ

மடாலயத்தினுட் புகுந்து ஆதீன பரமாசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகளை இறைஞ்சி அன்னார் அருளுக்குற்று, ஒடுக்கத்தின்க ணெழுந்தருளியிருந்த ஞானாசாரியராகிய பின் **வேலப்ப தேசிகரைக்** கண்கள் களிகூரக்கண்டு வணங்கிச் சின்னாளில் அந்த ஞான தேசிகர்பாற் சிவதீக்கையும் சைவத்துறவும் சிவஞானயோகிக ளென்னும் தீக்கைத் திருப்பெயரும் பெற்று மெய்கண்ட சாத்திர பண்டார சாத்திரங்களைக் கற்று வடநூற் கடலுந் தென்னூற் கடலும் எல்லைகண் டுணர்ந்தனர்.

**ஆசிரியருக்கு உபதேசகுரு வேலப்பதேசிகரென்பது,**

'எவ்வெவகோட் படுபொருளு மஞ்செழுத்தி
னடக்கியவற் றியல்பு காட்டி
மெய்வகையஞ் சவத்தையினு நிற்குமுறை
யோதுமுறை விளங்கத் தோற்றி
யவ்வெழுத்தி னுள்ளீடு மறிவித்துச்
சிவபோகத் தழுத்தி நாயேன்
செய்வினையுங் கைக்கொண்ட வேலப்ப
தேசிகன்றாள் சென்னி சேர்ப்பாம்'

**என்னுங் காஞ்சிப் புராணச்** செய்யுளா னறிதற்பாற்று.

## காலம்

ஆசிரியர் காலம் இற்றைக்கு ஏறக்குறைய நூற்றைம்பது ஆண்டுகளென்பதற்குப் பல சான்றுகளுண்டு. அவற்றுட் சில கூறுதும்:—

(1) ஈண்டுப் பட்டத்தெழுந் தருளியிராநிற்கும் மகா சந்நிதானத்திற்கு அறுவர்க்கு முன் ஆண்டு எழுந்தருளியிருந்த பின் வேலப்ப தேசிக ஞானாசாரியர் மாணவர் என்பது.

(2) சற்றேறக் குறைய முப்பதாண்டுகட்கு முன்னர்ச் சென்னைக்கட் டமிழிலக்கணத்தைப் பன்னிலங்களின் விதைத்துப் பயிர் செய்த இராமாநுச கவிராயரென்பார் ஆசிரியர் மாணாக்கர் பன்னிருவருள் இராமநாதபுரம் சோமசுந்தரம் பிள்ளையவர்கள்பாற் கல்வி பயின்றனரென்பது.



(3) விசுவாவசு ஆண்டு எங்கு நிறை நிலையடைந்தனரென்பது. இது சென்ற விசுவாவசுவிற்கு மூன்றும் விசுவாவசு வாதல் வேண்டுமாகலின், கி. பி. 1785 ஆண்டென்க.

## பாவன்மையும் புத்துணர்வும்

திருநாவுக்கரசு நாயனர் கல்லைத் தெப்பமாகக் கொண்டு
கடலினின்றுங் கரையேறிய திருப்பாதிரிப்புலியூர்ச் சிவாலயத்
தின்கட் புலவர் சிலவரும் செல்வர் பலவருங் கூடிய அவையில்
நூறு பொன் கொண்ட கிழியொன்று தூக்கி, 'கரையேற விட்ட
முதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ' என்னும்
ஈற்றடி தந்து 'பாட்டினை நிரப்புநர் இக் கிழி பெறுக' என்றனர்.
ஆண்டு அங்கண் யாத்திரை வந்து எழுந்தருளிய ஆசிரியர்
அச் செய்தி யறிந்து ஓ ரந்தணனை அக் கிழி கொள்ளுமாறு ஏவி

'வரையேற விட்டமுதஞ் சேர்தனிட வருந்தினைவல் வினை மென் ருனு
முரையேற விட்டமுத லாகுமோ வெனைச்சித்தென் றுரைக்கி லென்னு
நரையேற விட்டமுத ளைவனைக் கொண்டுசுறும் புலிசை மேவுங்
கரையேற விட்டமுதல் வாவுன்னை யன்றியுமோர் கதியுண் டாமோ'

என்றொரு நொடிப் போதிற் பாட்டினை

நிறைத்தனரென்ப.

ஒருநாள் மடத்துச் சுயம்பாகி ஆசிரியரை யணுகி 'இன்று யான் என்ன கறி சமைப்பது?' என்றவுடன் தட்டொன்று மின்றி,

'சற்றே துவையலரை தம்பியொரு பச்சடிவை
வற்றலே தேனும் வறுத்துவை—குற்றமில்லை
காயமிட்டுக் கீரைகடை கம்மென வேமிளகுக்
காயரைத்து வைப்பாய் கறி'

என்ற வெண்பாவைக் கூறினாரென்ப. ஆசிரியர் நிலைக்குத் தக்க ஊண் கொண்டன ரென்பதும் இன்மொழி வழங்கினரென்பதும் இதனால் விளங்குமாறு காண்க.



ஆசிரியர் காஞ்சிமா நகரத்து வீற்றிருந்துழி வைணவ ரொருசிலர் கம்பரையும் அவர் கவித் திறத்தையும் பலபடி புகழ்ந்து பேசித் தமிழ் மொழிக்கட் கம்பராமாயணத்தைப் போல்வதொரு காவியம் வேறின்றெனத் தருக்கிக் கூற, ஆசிரியர் அக் கம்பராமாயணத்து மங்கலமாகிய

'நாடிய பொருள்கை கூடு ஞானமும் புகழு
முண்டாம்
வீடியல் வழிய தாக்கும் வேரியங் கமலை நோக்கு
நீடிய வரக்கர் சேனை நீறுபட் டழிய வாகை
சூடிய சிலையி ராமன் றோள்வலி கூறு வோர்க்கே'

என்னுஞ் செய்யுண் முற்றுங் குற்றமுடைத்தெனத் தடை பல கூற, அவற்றொன்றற்கேனும் விடை கூற வியலாது அவ்வைணவர்கள் விழிக்கத் தாமே அவை யாவற்றிற்கும் விடை கூறினாரென்ப. அத் தடை விடைக ளடங்கிய நூல் 'கம்ப ராமாயண முதற்செய்யுட் சங்கோத்தர விருத்தி' என்னும் பெயரொடு உலவுதலறிக.

ஆசிரியர் காஞ்சிமாநகர் வீற்றிருப்புழிச் சில புலவர்கள் ஒருங்குகூடி ஆசிரியரை நோக்கி நீவிர் காஞ்சிப் புராணஞ் செய்யப் புக்கு அதன்கட் கடவுள் வாழ்த்துள்,

'சங்கேந்து மலர்க்குடங்கைப் புத்தேளு
மறைக்கோவுந் தழல்கால் சூல
மங்கேந்து மம்மானுந் தத்தமது
தொழிறலைநின் றூற்றச் செய்தோர்
பங்கேந்தும் பெருமாட்டி விழிகளிப்ப
வீருமுனிவர் பணிந்து போற்றக்
கொங்கேந்து மணிமன்றுட் குனித்தருளும்
பெருவாழ்வைக் குறித்து வாழ்வாம்'

என்னுஞ் சபாநாயகர் துதியை முன்னர் அமைத்து,

'தண்ந்தபெருந் துயர்க்கடன்மீக் கூர்தலினான்
மலைபயந்த தரள மூரற்
கணங்குழையாள் புரிபூசை முடிவளவுந்
தரியாம லிடையே கம்பை
சோமேசர் முதுமொழி வெண்பா

யணங்கினைத்து தெனவிடுத்து வலிந்திறுகத்
தழீஇக்கொள்ள வமையாக் காதன்
மணந்தருளிக் குறிபூண்ட வொருமாவிற்
பெருமானை வணக்கஞ் செய்வாம்'

எனத் தலநாயகராகிய ஏகாம்பரநாதர் துதியைப் பின்னர் வைத்தது தவறென்று சாதிப்ப ஆசிரியர் தமது மாணுக்கரைக் கொண்டு அவர்களைப் பங்கப்படுத்தலே தகுதியெனத் திருவுளத் தமைத்து ஆண்டுச் சென்னைக்கண் வீற்றிருந்த உச்சிமேற் கொளத்தகு கச்சியப்ப முனிவரை ஆங்கு வருவித்து ஏகாம்பர நாதராலய மண்டபத்திற் பேரவை யொன்று கூட்டித் தாம் ஏவியவாறு கச்சியப்ப முனிவர் பிரசங்கஞ் செய்யப் புகுமுன் அத் தலத்து ஓதுவாரைத் தேவாரப் பதிக மொன்றோதுமாறு பணிக்க அவர் 'திருச்சிற்றம்பலம்' என்று தொடங்கினர். அங்கு அவையோரை "ஓதுவார் 'திருச்சிற்றம்பலம்' என்றது உமக்கு உடன்பாடோ? இப் பிருதிவித் தலத்தில் தேவாரம் ஓதப்புகுங்கால் ஏன் 'பிருதிவியம்பலம்' எனத் தொடங்குமாறு செய்வித்த லாகாது?" என வினவுவித்துப் புலவர்களைத் தலை வணக்கினர் என்ப.

## ஆசிரியர் அருளிச்செய்த நூல்களாவன :

### இலக்கணம்.

1. தொல்காப்பியச் சூத்திர விருத்தி.
2. இலக்கண விளக்கச் சூருவளி. 3.

சங்கர நமச்சிவாயப் புலவர் நன்னூல் விருத்தியுரைத் திருத்தம்.

## இலக்கியம்.

1. காஞ்சிப்புராணம் (முதற் காண்டம்).
2. சோமேசர் முதுமொழி வெண்பா.
3. திருவேகம்பரந்தாதி.
4. திருமுல்லைவாயிலந்தாதி.
5. கலைசைப் பதிற்றுப்பத்தந்தாதி.



6. இளசைப் பதிற்றுப்பத்தந்தாதி.
7. கச்சியானந்தருத்ரேசர் பதிகம்.
8. திருவேகம்பர் ஆனந்தக்களிப்பு.
9. செங்கழுநீர் விநாயகர் பிள்ளைத் தமிழ்.
10. அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்.
11. செப்பறைப்பதி அகிலாண்டேசுவரி பதிகம்.
12. திருத்தொண்டர் திருநாமக்கோவை.
13. நமச்சிவாய மூர்த்திகண்மாலை முதலியன.

## தருக்கம்.

இயற்றிய நூல்கள்

1. தருக்க சங்கிரகமும் அன்னம் பட்டீயம் என்னுஞ் சங்கிரக தீபிகையும்.

தருக்க

## தத்துவம்.

1. சிவஞானபோத பேருரை.
2. சிவஞானபோதச் சிற்றுரை.
3. சிவஞான சித்தியார் (சுபக்கம்) உரை.
4. சித்தாந்தப் பிரகாசிகை.
5. 'எடுத்து' என்னுஞ் சொல்லுக் கிட்ட வயிரக் குப்பாயம். 6. சிவசமவாத வுரை மறுப்பு.

## சமயம்.

1. சுலோக பஞ்சக மொழிபெயர்ப்பு.
2. சிவதத்துவ விவேகம்.

## சம்பிரதாயம்.

1. திருவாவடுதுறை மரபட்டவண மறுப்பின் மறுப்பு.

இவ்வாறு பல நூல்களையும் பலவுரைகளையும் பல கண்டனங்களையுஞ் செய்து தமிழ் இலக்கண இலக்கிய நூல்களுந் தருக்க நூல் தத்துவநூல் சமயநூல் முதலியனவும் நன்மாணுக் கர்க்குப் போதித்து 'வான் செய்த வுதவிக்கு வையக மென்கொ
சோமேசர் முதுமொழி வெண்பா

செய்யும்' என்றவாறு மர்றில்லாத பேருதவியை இவ் வையகத் திற்குச் செய்த 'ஆதீன குலதெய்வ' மென

*ஆன்றோர் போற்றுஞ் செந்தமிழ்ச் சிவஞானபோதப் பேருரை செய்தருளிய பெரும் பேராசிரியர் சித்திரைமதி ஆயிலிய நாளில் சிவபெருமானின் திருவடிநீழலெய்தினர்.*

*இதனை,*

*மன்னும் விகவா வசுவருட மேடமதி*
*யுன்னிரவி நாட்பகலோ தாயிலியம்—பன்னுந்*
*திருவாள னெங்கோன் சிவஞான தேவன்*
*றிருமேனி நீங்கு தினம்.*

*என்னும் வெண்பாவா னறிக.*

**சிவஞான சுவாமிகள் சேவடி வாழ்க.**

---

உ

*திருச்சிற்றம்பலம்*

## குளத்தூர்ச்

# சோமேசர் முதுமொழி வெண்பா

காப்பு

மதுவளரும் பூஞ்சடில மல்குசோ மேசர்
முதுமொழிவெண் பாவை மொழியப்—பொதுளு
மடம்பிடுங்கி யன்பர்க்கு வான்வீ டளிக்குங்
கடம்பொழி முக்கட் களிறு.

எடுத்துக்கொண்ட நூலிடையூறின்றி இனிது முடியுமாறு விநாயக வணக்கங் கூறுகின்றார்.

(இதன் பொருள்) மது வளரும் பூ வளராநின்ற கொன்றைப் பூமாலை தரித்த

சடிலம்-தேன்
சடையானது,

மல்கு - நிறைந்த, சோமேசர் - சோமேசரது, முதுமொழி வெண்பாவை - முதுமொழி வெண்பா என்கிற நூலை, மொழிய - (யான்) நன்கு இயம்ப, மடம் பிடுங்கி - அறியாமையை (வேரோடு) களைந்து, அன்பர்க்கு - (தன் திருவடிக்கண்) அன்பு வைததார்க்கு, வான் வீடு - (மற்றெல்லாவற்றிலும்) உயர்வுடைய முத்தியை, அளிக்கும் - அருள்கின்ற, கடம்பொழி - மத நீரைப் பொழியும், முக்கண் களிறு - மூன்று கண்களையுடைய யானைமுகன், பொதுளும் - (என் உள்ளத்தின்கண்) எழுந்தருளுவன் என்றவாறு.

தாமே பிரணவப்பொரு ளென்றுணர்ந்து உயிர்கள் தம்மையே வழிபட்டு எளிதின் உய்யுமாறு கருணைகொண்டு பிரணவ வடிவமாகிய கொன்றையைச் சடையிற் றரித்தவ ரென்பார் "மதுவளரும் பூஞ்சடில மல்கு சோமேசர்' என்றும், தன்னை அன்பொடு வழிபடுவார்க்குப் பேரின்ப வீட்டையும் அளிக்கும் தயாநிதி என்பார் 'அன்பர்க்கு வான் வீடளிக்கும்' களிறு என்றும், அத்தகைய தயாநிதி தன் தந்தையின் தொடர்புடைய இந்நூல் இனிது முடியுமாறு என் உள்ளத்திலிருந்து உணர்த்தல் பெரிதன் றென்பார் 'சோமேசர் முதுமொழி வெண்பாவை மொழியப் பொதுளும்,' என்றுங் கூறினரெனக் க.

'கடம்பொழிமுக் கட்களிறே காப்பு' என்பது பாடமாயின், பொதுளும் மடம் பிடுங்கி—நிலையும் அறியாமையை (வேரோடு) களைந்து, அன்பர்க்கு வான் வீடு அளிக்கும்—(தன் திருவடிக்கண்) அன்புவைத்தார்க்கு உயர்வுடைய முத்தியை அருள்கின்ற, முக்கண்களிறே—மூன்று கண்களை யுடைய யானைமுகனே, காப்பு—காப்பாம்' என்றுரைத்துக் கொள்க; ஈண்டு ஏகாரம் பிரிநிலை. வான் வீடு—வானும் வீடும் என்றுமாம்.

கரும்பு பிடுங்குதல் யானைக்கு இயல்பாகலின், பிடுங்கி' என்றதன் பொருத்தங் காண்க. அந்தமில் தழிவில் வீடாகலின் 'வான் வீடு' என்றார்.

'மடம்
இன்பத்

பூ, களிறு என்பன ஆகுபெயர். 'பூப்பெயர் முன்னின மென்மையுந் தோன்றும்' என்றிருத்தலின் 'பூஞ்சடிலம்' என்றூ யது.

'சோமேசர் முதுமொழிவெண்பா' என்னும் மொழி 'சோமேசரது முதுமொழிவெண்பா' என

தொடர்
விரியும்;
இஃது ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத் தொடர். 'சோமேச ரது திருநாம சம்பந்தமுடைய முதுமொழிவெண்பா' என்பது பொருள்.

'ஸோமேச' என்னும் வடமொழித் தொடர், ஸோம ஈச எனப் பிரிந்து, 'சந்திரனுக்கு' இறைவன் எனப் பொருள்படு மென்க. இது குணசந்தி பெற்ற தொடர். இனி, இத்தொடர் 'ஸ உமா ஈச' எனப் பிரிந்து, உமையோடு கூடிய இறைவன் எனப் பொருள்படுமாலோ வெனின், குளத்தூரென்னும் இப்பதி சந்திரனுக்கு அருள் புரிந்த திருப்பதி யாகலின், ஈண்டுப் படா ததனை விடுக்க. இந் நூலாசிரியருந் தா மியற்றிய அமுதாம்பிகை பிள்ளைத்தமிழுள் 'தெளிக்குமெய் யன்பினால் வழிபட்ட நாளனது செல்லனைத் தவிர்த்த ளித்த, திருச்சோமநாதனார்' என்றார்.

சோமேசர் முதுமொழி வெண்பா

க

அப்பதியின்கண் தீர்த்தமும் 'சோமதீர்த்தம்' எனப்படுதலை,
"தேமலர்ச் சந்திர தீர்த்த மாடிநஞ், சோமநா தனுக்கலர் தூய்க்கு ளக்கையின், யாமமா யினும்வதிந் திருக்கப் பெற்றவர், காமனைக் காலனைக் காய வல்லரே' என்னுங் குளத்தூர்ப் பதிற்றுப்பத் தந்தாதி விருத்தத்தா னறிக.

'முதுமொழி' என்பது பண் புத்தொகை நிலைத்தொடர்;
'முதுமையாகிய சொல்' என விரிதலின் [முதுமை—பழைமை]. ஈண்டு இத் தொடர் திருக்குறட்பாவினைக் குறித்தமையின் அடை

யடுத்த சினையாகுபெய ரென்றுதல், பண்புத்தொகைப்
பிறந்த அன்மொழித்தொகை யென்றுதல் இலக்கணங்

புறத்துப்
கூறுப.

'முதுமொழி வெண்பா' என்பது 'முதுமொழியை யுடைய வெண்பா' என்றுதலின், இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனு முடன் றொக்க தொகை என்க.

'வெண்பா' என்பது வெண்பாக்களாகிய நூலுக்குக் யாகுபெயராம்.

கருவி

'சோமேசரே பாட்டுடைத்தலைவ ரென்று ணர்த்தல்

வேண்டி ஒவ்வொரு பாவினும் 'சோமேசா!' என விளித்தா ரென்க.

[இஃது ஆடூஉ முன்னிலை] இங்ஙனம் விளித்தல் ஒருவகைக் கவிமரபாம். தண்டலையார் சதகம், குமரேச சதகம், அறப் பளீசுர சதக முதலியவற்றுள்ளுங் கடவுண் முன்னிலை காண்க.

'இனி, சோமேசர்
'குன்றத்தூர்' என்னும்

என்பது தொண்டைநாட்டின்கணுள்ள
சிவஸ்தலத்தில் திருக்கோயில் கொண்ட

ருளும் பெருமானுர் திருநாமமென்றறிக.
புழித் 'தெற்கு என்பது இயைபின்மை

'தென்குளத்தூர்' என் நீக்கிய அடைமொழி எனக் கொள்க. என்ப. அன்றி,

இதனை வடநூலார் 'அயோகவியவச்சேதம்' என் அழகுமாம்.

தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனுர் அருளிச் செய்த உத்தரவேதம் எனப் போற்றிக்கொள்ளப்பெறுவதாகிய திருக்குறளின்கணுள்ள நூற்றுமுப்பத்துமூன் றதிகாரங்களுள் அதிகாரத்திற் கொருபாட்டினைப் பின்னிரண்டடியினும், அப்பாட்டின் பொருளை இனிது விளக்குதற் கேற்ற கதையை முன்னிரண்டடியினும் அமைத்துச் சோமேசரை முன்னிலைப்படுத்து வெண்பாவின் யாத்ததொரு நூல் இது. ஆகலின், நீதிநூலா மென்க. ஒவ்வொரு பாவினும் இரண்டாமடியின் மூன்றுஞ்சீர் "சோமேசா!" என் றோரிடமுறைபற்றி நிற்றல் காண்க.

---

## நூல்

### க-ஆம் அதிகாரம்

## கடவுள் வாழ்த்து

சீர்கொளிறை யொன்றுண்டத் தெய்வமே யென்றே
ற்பபாற் சோர்விலடை யாற்றெளிந்தோஞ்
சோமேசா—வோரில் அகர முதல வெழுத்தெல்லா
மாதி
பகவன் முதற்றே யுலகு.

அஃதாவது ஆசிரியர் தாம் வழிபடு கடவுளையேனும் எடுத்துக் கொண்ட பொருளுக்கு ஏற்புடைக் கடவுளையேனும் வாழ்த்து தல். இவ்வாழ்த்து அவ்விரண்டுமாம். வழிபடுகடவுள என்றல் கூறுதே அமையும். சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங் களான் அறம், பொருள், இன்பம் என மூன்றாகிய உறுதிப் பொருட்கு அவற்றான் அரி, அயன், அரன் என மூவராகிய சிவத் தொடு இயைபுண்மையின், அம் மூன்று பொருளையும் கூறப் புக் கார்க்கு அம் மூவரையும் வாழ்த்துதல் முறைமையெனக்கொண்டு அம் மூவருமான சிவத்தை வாழ்த்துதலின் இஃது ஏற்புடைக் கட வுள்வாழ்த்துமாமெனக. மூவராகிய ஒரு முதலை வாழ்த்தின் அம் மூவரையும் வாழ்த்தியதாதலை 'மூவ ருக்கு முதற்பி றப்புநின் முக்குணக்கட லென்றுமுன், சேவ டிக்கணி ருப்பர் சென்னி குவித்த செங்கை பிரிக்கிலார், பூவெ டுத்தவர்சென்னி வைத்திடு போத முற்றவ ரம்மைநின், காவ லர்ப்பொதி தாளில் வைக்கவு மூவர் சென்னிக ளிருக்குமே' என்னுஞ் சங்கராசாரியர் வாக்கு வற்புறுத்துமென்க.

க. (இ-ள்) சோமேசா - சந்திரனுக்கு அருள்புரிந்த இறைவ! - எழுதது எல்லாம் - எழுத்துக்களெல்லாம் அக ரம் முதல - அகரததை முதலாக வுடையன, (அதுபோல) உலகு, - ஆதிபகவன் முதற்று - ஆதிபகவனாகிய முதலை யுடைத்து, ஓரில் - (என்னும் பாவினை) ஆராயின்; ஒப் பால்—உவமையானும், சோர்வுஇல் அடையால் - தவறில் லாத அடைமொழியானும், (முறையே) சீர்கொள் இறை ஒன்று உண்டு (என்று) - சிறப்பைக்கொண்ட இறைவன் ஒருவன் உண்டு எனவும், அ தெய்வம் நீ என்று—அவ்

இறைவன் நீயே எனவும், தெளிந்தோம் - தெளிவோம் (எ-று).

(ஐயமின்றித்)

'எழுத்தெல்லாம்' என்பது அகரத்தை ஒழித்து 'முனிவர் வந்தார், அகத்தியரும் வந்தார்' என்புழிப்போல நின்றதறிக. இதனை வடநூலார் வசிஷ்டமுனிநியாய மென்ப. தமிழெழுத்திற்கேயன்றி வடவெழுத்திற்கு முதலாதல் நோக்கி, 'எழுத்தெல்லாம்' என்றார். 'ஆதிபகவன்' ஆதிசக்தியையுடைய பகவன் என்னும் பொருட்டு' இவ் விரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும் உடன்றொக்க தொகை வடநூல் முடிபாகலின் இயல்பாயிற் றென்க. இஃது எடுத்துக்காட்டுவமை; மறுபொருளுவமை யென்பது மது. வடமொழிவாணர் திருஷ்டாந்தாலங்காரம் என்ப; பிரதிவஸ்தூபமாலங்கார மென்பதும் அது. எடுத்துக்காட்டுவமையாவது உவமான உவமேயங்களைத் தனித்தனி வாக்கியங்களாக நிறுவி இஃதுவமானம் இஃதுவமேயம் என்பதுதோன்ற இடையில் 'அதுபோல' என்னும் உவம வுருபு கொடாது கூறுவதென்ப. இலக்கண விளக்க முடையார் 'அகர முதல வெழுத்தெல்லா மாதி, பகவன் முதற்றே யுலகு' என்புழி இரண்டு பொருள் வேறு வேறு கூறியதன்றி அகர முதல வெழுத்தெல்லாம் அதுபோல என்றானும், ஆதிபகவன் முதற்றே உலகு அதுபோல என்றானும் ஒன்றாகத் துணியு மாற்றான் உவமையும் பொருளும் நீதியின் நிறுவாமையின் அது வேறுபடவந்த உவமத்தோற்றமாய் இதன்பாற்படும்: என்னை? 'வேறுபடவந்த வுவமத்தோற்றங்—கூறிய மருங்கிற் கொள் வழிக் கொளாஅல்' [தொல், உவமவியல்—சூத். 33.] என்ப வாகலின். மறுபொருளுவமை எனினும் எடுத்துக்காட்டுவமை எனினும் ஒக்கும்' என்றார்.

ஆசிரியர் பரிமேலழகர் அது கொண்டு 'அகரத்திற்குத் தலைமை தலைமைபற்றி வந்ததெனக் விகாரத்தானன்றி நாதமாத் திரையாகிய செயற்கை'

இயல்பாற் பிறத்தலானும்; ஆதிபகவற்குத் தலைமை யுணர்வானன்றி இயற்கை யுணர்வான் முற்று முணர்தலானும் கொள்க ' எனக்கூறி அதற்கேற்ப ' உலகென்ற தீண்டுயிர்கண்மேனின்றது . காணப்பட்ட வுலகத்தாற் காணப்
படாத கடவுட் குண்மைகூற வேண்டுதலின் 'ஆதிபகவன் முதற்றே' என உலகின்மேல் வைத்துக் கூறினார். கூறினாரேனும் 'உலகிற்கு முதலாதி பகவனென்பது கருத்தாகக் கொள்க' என

முடித்தார். அகரத்திற்கும் ஆதிபகவற்கும் தலைமையே பொதுமை யென்பது அவர் கருத்தென்றுணர்க. இதனை வடமொழியாளர் ' ஆதிசாமாந்யம் ' என்ப. ஆசிரியர் நச்சினார்க்கினியர் அங்ஙனம்

கொள்ளாது, நிறைவுபற்றி வந்ததெனக்கொண்டு, 'மெய்யி னியக்க மகரமொடு சிவணும்' [தொல். எழுத்து. மொழிமரபு— சூத்.13.] என்னும் சூத்திரவுரையில், 'இறைவன் இயங்குதிணைக் கண்ணும் நிலைத்திணைக் கண்ணும் பிறவற்றின்கண்ணும் அவற்றின் றன்மையாய் நிற்குமா றெல்லார்க்கும் ஒப்பமுடிந்தாற் போல அகரம் உயிர்க்கண்ணும் தனிமெய்க்கண்ணும் கலந்து அவற்றின் றன்மையாயே நிற்குமென்பது சான்றோர்க்கெல்லா மொப்ப முடிந்தது. அகர முதலவென்னும் குறளான் அகர மாகிய முதலையுடைய எழுத்துக்களெல்லாம் அதுபோல இறைவ னாகிய முதலை யுடைத்துலகமென வள்ளுவனார் உவமை கூறிய வாற்றானும், கண்ணன் 'எழுத்துக்களில் அகரமாகின்றேன் யான்' எனக் கூறியவாற்றானும் பிறநூல்களானும் உணர்க' எனக் கூறிப் போந்தார். அகரத்திற்கும் ஆதிபகவற்கும் நிறைவே பொதுமை என்பது அவர் கருத்தென் றுணர்க. இதனை 'ஆப்தி சாமாந்யம்' என்ப வடமொழியாளர். சீர் என்றது தோற்றக் கேடுக ளின்மையை 'அகரமுதல வெழுத்தெல்லாம்' என்றதனை 'ஒப்பு' என்றும், 'ஆதி' என்றதனை 'அடை' என்றுங் கூறினு ரென்றறிக. 'சோர்வில் அடை' என்றார் 'பகவனே யீசன் மாயோன் பங்கயன் சினனே புத்தன்' என்பது கொண்டு ஈண்டுப் 'பகவன்' என்னுஞ் சொல் எத் தெய்வத்தைக் குறித் ததோ வென்றையுற்றுச் சோராமைக் கேதுவாகலின், 'சிவமெ னும்பொருளு மாதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்ல தாம்' எனச் சங்கராசாரியர் கூறியவாற்றானும் பிறர் கூற்று னும் ஆதிசத்தி சிவத்திற்கே யுரித்தாதல் காண்க. தெளிந் தோம்—இது துணிவுபற்றி வந்த காலவழுவமைதி என்க. (க)

---

உ-ஆம் அதிகாரம்

## வான்சிறப்பு

கேய புகழ்த்துணையார் நீராட்டுங் கைதளர்ந்துன்
றாயமுடி மேல்வீழ்ந்தார் சோமேசா—வாயுங்கால்

தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

அஃதாவது அக்கடவுளது ஆணையின் உலகமும் அதற்கு உறுதியாகிய அறம், பொருள், இன்பங்களும் நடத்தற்கு ஏதுவாகிய மழையினது சிறப்புக்கூறுதல்.

சோமேசர் முதுமொழி வெண்பா

எ

(இ - ள்.) சோமேசா—! ஆயுங்கால் - ஆராயுமிடத்து, வானம் வழங்காதெனின் - மழை பெய்யாதாயின், வியன் உலகம் - அகன்ற உலகத்தின்கண், தானம் தவம் இரண்டும் - தானமும் தவமும் ஆகிய இரண்டறமும், தங்கா - உளவாகா, - (அதற்கு எடுத்துக்காட்டு அஃதாவது திருட்டாந்தம்) - நேயம் புகழ்த் துணையார் - அன்பினை யுடைய புகழ்த்துணை நாயனார், நீர் ஆட்டும் கை தளர்ந்து - நீரை அபிடேகம் செய்த கை சோர்ந்து,

உன் தூய முடிமேல் வீழ்ந்தார் - உனது திருமுடியின்மேல் வீழ்ந்தனர் (எ. று.)

பரிசுத்தமான

தானமாவது அறநெறியான் வந்த பொருளைத் தக்கார்க்கு உவகையோடுங் கொடுத்தல். தவமாவது மனம் பொறி வழியிற் போகாமல் நிற்கும் பொருட்டு விரதங்களான் உண்டி சுருக்குதல் முதலியன.
றத்தின் மேலும் தவம்

பெரும்பான்மை பற்றித் தானம் இல்ல மறந்தன்றி
துறவறத்தின் மேலும் நின்றன. மெய்ம் என்றார்.

வீழ்ந்தாரென்பது தோன்ற 'நேயபுகழ்த்துணையார்'
நேயம்—நேசம். 'நேயபுகழ்த்துணையார்' என்னும்

இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனும்
நிலைத்தொடர் வடநூன் முடிபொத்து

உடன்றொக்க தொகை
இயல்பாயிற்றெனக.

'தூயமுடி.' என்றது ஊனடைந்த வுடம்புகொண்டு நினைத்த போதெல்லாம் அன்பர்களூந் தீண்டற்கு ஒண்ணுமை தெரித்தற் கென்க. நேயமிக்குடையராகவின் நினைத்தபோதெல்லாம் தீண்டலுஞ் செய்யாத திருமுடிமேல் மெய்ம்மறந்தமையின் வீழ்ந்தார் என்பது குறிப்பாதல் காண்க. இது வேற்றுப் பொருள் வைப்பணி. இந்நூலிற் பல பாக்கள் இவ்வணி கொண்டன. வேற்றுப் பொருள் வைப்பணியாவது பொதுப் பொருள் ஒன்றினைச் சிறப்புப் பொருள் ஒன்று கொண்டு விளக்குதல்.

**கதை :** செருவிலிபுத்தூரின்கண் ஆதிசைவமரபில் அவ

தரித்த புகழ்த்துணை
பஞ்சம் மேலிட்டுழி,

நாயனார் பன்னெடுநாள் மழை பெய்யாது
ஊணின்றியும் தங் கொள்கை விடாது

சிவபூசை செய்யும்போது பசியால் அழிந்து மெய்ம்மறந்து தேவ தேவன் திருமுடிமேல் வீழ்ந்தார். அந்நிலையில் நித்திரை வர, ஐயன் கனவின்கண் எழுந்தருளி, 'அன்ப! இப்பஞ்சம் நீங்கும் வரை உனக்கு நாடோறும் ஒரு காசு தருவன்; கொள்க' எனப் பணித்தனன். நாயனார் நாடோறும் பீடத்தின்கீழ் ஒரு காசு

அ சோமேசர் முதுமொழி வெண்பா

இருக்கக் கண்டு தமது திருத்தொண்டு வழாது நடத்திச் சிவ வடிப்பேறு பெற்றார். [இது திருத்தொண்டர்புராணத் துளது] ஆளுடைய நம்பிகளும் தமது திருப்புத்தூர்த் தேவாரத்தில்,

'அகத்தடி மைசெய்யு மந்தணன்றா னரிசிற்
புனல்கொண் டுவந்
தாட்டுகின்றான்
மிகத்தளர் வெய்திக் குடத்தை நும் முடிமேல்
விழுத்திட்டு
நடுங்குத லும்
வகுத்தவ னுக்குநித் தற்படியும் வருமென்றொரு
காசினை
நின் றநன் றிப்

புகழ்த்துணை கைபுகச் செய்துகந்தீர் பொழிலார்

திருப்புத்தூர்ப்
புனிதனீரே'
என் றருளிச்செய்தவாறு கண்டறிக.
(உ)

---

## ௩-ஆம் அதிகாரம்
# நீத்தார் பெருமை

அத்திரவாக் காற்புத்தன் சென்னியறுத்
தார்சண்பைச் சுத்தனூர் தம்மன்பர் சோமேசா—
நித்த
நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

அஃதாவது முற்றத்துறந்த முனிவரது பெருமை.

௩. (இ-ள்) சோமேசா-! நித்தம்—என்றும் அழியாத, நிறைமொழி மாந்தர்-(பயன்) நிறைந்த மொழியினையுடைய துறந்தாரது, பெருமை-பெருமையை, நிலத்து-நிலவுலகத்தின்கண், மறைமொழி-(அவர் ஆணையாகச் சொல்லிய) மந்திரங்களே, காட்டிவிடும்-கண்கூடாகக் காட்டும்,-(அதற்கு எடுத்துக்காட்டு)-சண்பைச் சுத்தனூர்தம்-சீகாழிப் பிள்ளையாராகிய தூயவரது, அன்பர்-அன்பராகிய

சம்பந்தசாணாலய ரென்பார், அத்திரவாக்கால்-அத்திரமென்கிற திருவாக்கினால், புத்தன்-புத்தநந்தி என்பவ

ஹுடைய, சென்னி, அறுத்தார்-தலையை அறுத்து
தினர் (எ-று).

விழ்க்

மறைமொழியாவது அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயன்களைப் பயந்தேவிடு மொழி. காட்டுதல் பயனல் உணர்த்துதல். 'மறைமொழி மாந்த ராணையிற் கிளந்த, மறை மொழிதானே மந்திர மென்ப' என்பர் ஆசிரியர் தொல்காப்பிய னார். 'புறத்தார்க்குப் புலனாகாமல் மறைத்துச் சொல்லுஞ் சொற்றொடர்' என்பர் உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கி னியர். இவற்றான் மறைமொழி என்பது மந்திரமாத லறிக. சம்பந்தசரணலயர் புத்தன் தலையறுத்தற்கு ஓதிய 'புத்தர் சமண் கழுக் கையர் பொய்கொளாச், சித்தத் தவர்க டெளிந்து தேறின, வித்தக நீறணி வார்வி னைப்பகைக், கத்திர மாவன வஞ்செ ழுத்துமே' என்னும் திருப்பாடலின்கண் 'அத்திரமாவன அஞ் செழுத்துமே' என்றிருத்தலின், அவ் வத்திரம் என்னுஞ் சொற் பிரயோகத்தானே புத்தன் தலையறுத்தாரெனத் தெரித்தற்கு 'அத்திரவாக்கால்' என்றார். திருத்தொண்டர்புராணத்தும்' 'தலையுமெய்யும் அத்திரவாக்கதனு லன்ப ரறுத்ததுவும்' என் றிருத்தல் காண்க. 'அத்திரம்போலும் வாக்கால்' என விரிப் பினுமாம். பிள்ளையார்க்கு ஆணவ மல பந்த மின்மையின், 'சுத் தனர்' என்றார். 'ஆர்' விகுதி உயர்வுபற்றி வந்த தென்க.

கதை:—ஸ்ரீ ஞானசம்பந்தப்பிள்ளையார் திருத்தெளிச்சேரியைத் தரிசித்துப் பௌத்தர்கள் வாழ்ந்த போதிமங்கையைச் சமீபித்தார். திருச்சின்னங்கள் முழங்கின. பிள்ளையார் வரவறிந்த சிவனடியார் அரகோஷஞ் செய்யப் பொறாத பௌத்தர்கள் தூண்டப் புத்தநந்தி என்னும் பிடகநூல் வல்லோன் சிவனடியார்களை நோக்கி 'எம்மை வாதின் வென்றன்றோ திருச்சின்னம் முழக்கல் வேண்டும்?' என்று விலக்கினான். பிள்ளையார் 'அவன் வாதம் செய்வது காண்போம்' என, அவன் வாதத்திற்கு வருமுன் தேவாரபாசுரங்களை எழுதுஞ் சம்பந்தசரணாலயரென்பார் 'புத்தர் சமண் கழுக்கையர்' என்று தொடங்குந் திருப்பாடலை ஓத இடி விழ்ந்து புத்தன் தலையைத் துமித்தது. (௩)

[இதுவுந் திருத்தொண்டர் புராணத் துளது.]

---

௪-ஆம் அதிகாரம்

## அறன் வலியுறுத்தல்

தக்கனார் வேள்வித் தவத்தைமேற் கொண்டிருந்
தும்தொக்கவற மாயிற்றோ சோமேசா—மிக்க
அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொன் னான்கு
மிழுக்கா வியன்ற தறம்.

அஃதாவது அம் முனிவரான் உணர்த்தப்பட்ட அவ் வறம் பொருளின்பங்களுள் மற்றைப்பொருளும் இன்பமும்போலன்றி, அறன் இம்மை மறுமை வீடென்னும் மூன்றனையும் பயத்தலான் அவற்றின் வலியுடைத் தென்பது கூறுதல். 'சிறப்புடை மரபிற் பொருளு மின்பமு, மறத்து வழிப்படூஉந் தோற்றம் போல' எனப் புறப்பாட்டினும் இருத்தல் காண்க. 'அறன்' என்புழி, மகரத்திற்கு னகரம் ஈற்றுப்போலி என்க.

௪. (இ-ள்) சோமேசா-! மிக்க-(மற்றைக் குற்றங் களின்) மிக்க, அழுக்காறு-பிறர் ஆக்கம பொறாமையும், அவா - (ஐம்புலன்கண்மேற் செலலுகின்ற) அவாவும், வெகுளி-(அவை ஏதுவாகப் பிறர்பால் வரும்) வெகுளியும், இன்னாச்சொல்-(அதுபற்றி வரும்) கடுஞ் சொல்லும் ஆகிய), நான்கும்-இந் நான்கினையும், இழுக்கா-நீக்கி, இயன்றது- இடையறாது நடந்தது, அறம்-அறமாவது,-(அதற்கு எடுத்துக்காட்டு) - தக்கனார் - தக்ஷனென்பான், வேள்வித் தவத்தை-யாகமாகிய தவவொழுக்கத்தை, மேற கொண்டிருந்தும்-(செய்து முடிப்பதாக) ஏற்றுககொண் டிருந்தும், (அவ்வேள்வி), தொக்க அறம் ஆயிற்றோ-பொருந்திய அறமாயிற்றோ, இல்லை, மறமாயிற்று என்ற வாறு.

இக் குறளான் அழுக்காறு முதலியவற்றோடு கலந்து நடந்தது அறமெனப்படா தென்பதூஉம் அருத்தாபத்தியாற் கொள்க. அருத்தாபத்தியாவது கூறியதொரு பொருளோடு மற்றொரு பொருளும் பெறுதல். அருத்தாபத்தி—பொருட்பேறு, அழுக்காறு என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயர்; 'அழுக்

கறு' என்பது முதனிலை; இஃது 'ஏக்கறு' என்பதுபோல ஒரு சொல். இனி, அழுக்கு அறு என்ற இரு சொற்கள் ஒரு சொற்றன்மைப்பட்டுப் பசி, இரப்பு, நல்குரவு முதலியனபோல எதிர் மறை இலக்கணை (விபரீத லக்ஷணை)யால் அழுக்கு உறு என்னும் பொருட்டாயிற்று என்பாருமுளர். உம்மை முற்றும்மை. தக்கனார்—'உடலினார் கிடந் தூர்முனி பண்டமே' என்புழிப்போல, ஈண்டு 'ஆர்' இழிபு குறித்ததென்க. மேற்கொண்டிருந்தும் என்புழி உம்மை உயர்வு சிறப்பும்மை, தக்கன் அழுக்காறு முதலிய நான்குங் கொண்டிருந்தமையின் தவச் செய்கையாகிய வேள்வியும் புண்ணியம் விளைத்தலின்றிப் பாவத்தை விளைத்ததென்பது கருத்து. 'அரனடிக் கன்பர் செய்த பாவமு மறம தாகும், பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும், வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமை யாகி, நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே' என்னும் **சிவஞானசித்தித் திருவிருத்தத்தா**னும், புண்ணியம் பாதக மாகப் போற்றிய, அண்ணலங் தக்கனு ரகத்து நாணிய, புண்ணியம் பாதக மாகப் போற்றிய, அண்ணலங் தண்டித னடிகள் போற்றுவாம்' என்னுந் **தணிகைப் புராணச்** செய்யுளானு மறிக.

**கதை** :—நான்முகன் புதல்வனுன தக்ஷமுனிவன் வரங்கிடப்பத் தன்பாற் றோன்றித் தாக்ஷாயணி யென்னும் பெயர்கொண்ட உமையம்மையாரைச் சிவபெருமானுக்குத் திருமணம் புரிவித்துப் பின் அப் பெருமானோடு மாறுபட்டு யாகஞ் செய்கையில், தாக்ஷாயணி தன் மணாளன் சொற் கேளாது அவன் யாகசாலை புகுந்து அவனால் அவமதிக்கப்பெற்றுத் தீக்குளித்துத் தக்ஷபுத்திரியான உருவம் நீங்கிவிட, அதனை யறிந்து கோபங்கொண்ட பெருமான் வீரபத்திரரைத் தோற்றித் தக்ஷனைத் தண்டித்தற்கு விடுக்க, அக்கடவுள் காளியோடும் பூதகணங்களோடுஞ் சென்று அந்த யாகத்தை அழித்து அங்கிருந்த தேவர்களை அங்கபங்கஞ் செய்து தக்ஷனைத் தலைதுமித்தார். (அ)

[இது கந்தபுராணத் துளது]

---

ரு-ஆம் அதிகாரம்

# இல்வாழ்க்கை

இல்வாழ் தரும னியற்சந் திரசேனன்
றொல்வார்த்தை கீழ்ப்படுத்தான் சோமேசா—நல்ல
இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை.

அஃதாவது மனைவியோடு கூடி வாழ்தலின் சிறப்பு.

ரு. (இ-ள்) சோமேசா-! இல்வாழ்க்கை- இல்வாழ்க்கைக்கண் நின்று, நல்ல இயல்பினன் வாழ்பவன் என்பான்-(அதற்குரிய) நல் இயல்போடு கூடி வாழ்பவ

னென்று சொல்லப்படுவான், முயல்வாருள் எல்லாம்-(ஐம்புலன்களைவிட) முயற்சிசெய்வா ரெல்லாருள்ளும், தலை-மிக்கவன்,-(அதற்கு எடுத்துக்காட்டு)-இல்வாழ் தருமன் - மனைவியொடுகூடி வாழ்ந்த தருமனென்பான், இயல் சந்திரசேனன் - துறவியலை மேற்கொண்ட சந்திர சேனனுடைய, தொல் வார்த்தை-பழமையாகிய பெருமை யமைந்த சொல்லை, கீழ்ப்படுத்தான் -(தன் சொற்குத்) தாழ்வாக்கினன் (எ-று).

முற்றத்துறந்தவர் ஐம்புலன்களையும்
.வாரென்றது வானப்பிரஸ்தரை யென்க.

விட்டமையின், முயல்
இவ் வாச்சிரமம் பல

வகைப் படுதலின் 'எல்லாருள்ளும்' எனவும், அத்தகை முயற்சி செய்யாமலே பயனடைதலின் 'தலை' யெனவுங் கூறினர்.

'என்பான்' என்புழிப் 'படு' விகுதி தொக்கது. முயல் வாருள்—ஈண்டு ஏழனுருபு கூட்டிப் பிரித்தற் பொருட்டு. 'இயல் சந்திரசேனன்' என்றார் அவனும் தன் நிலைக்குத்தக ஒழுகினபடி குறித்தற்கு. தொன்மை—பழமை; அஃது ஈண்டுப் பழமை யாகிய ஏற்றத்தை உணர்த்தி நின்றது.

கதை:—ஆடவதேயத்தில் மாலிய நகரில் சுபுத்தன் விபுல னென்னும் இரண்டு அந்தணர்கள் வாழ்ந்தார்கள். அவர்களில் சுபுத்தனுக்குத் தருமன் என்னும் ஒரு மகனும்; விபுலனுக்குச் சந்திரசேனன், மிருதுசந்திரனென்னும் இரு மகாரும் உண்டு.

இவர்களுள், தருமன் சந்திரசேனன் ஆகிய இருவரும் வித்தியானந்த னென்னும் அருந்தவனை அடைந்தார்கள். அவன் இல்லத்தின் இழிவையும் துறவறத்தின் உயர்வையும் எடுத்துக்கூறச் செவியேற்று விடைபெற்று வீடு புகுந்தார்கள். சந்திரசேனன் தன் தந்தையினிடந் தான் துறக்க வேண்டினன். மற்றொரு மகனிருத்தலின் அவனும் அதற்கு இசைதலின், சந்திரசேனன் திரிதண்ட சந்நியாசியாயினன். அது கிடக்க. தருமன் தன் தந்தையினிடந்தான் துறக்க நின்றதை அறிவித்தான். சுபுத்தன் தன் கால்வழிக்கு வேறு பிள்ளையின்மையால், அது கூடாதெனப் பலபடி கூறியுந் தருமன் அவன் சொற்களைச் செவியேற்றிலன்; துறக்க நின்றான். தாய் தந்தையரும் தமர்களும் அழுது வருந்தினார்கள். அப்போது அங்கு எழுந்தருளிய பிருகு முனிவர் தருமனுக்குப் பல ஏதுக்கள் காட்டித் துறவாது தடுத்து மணம்புரிவித்துப் பஞ்சாக்ஷரோபதேசஞ்செய்து போனார். தருமனும் குருமொழி வழிநின்றான். சிலகாலஞ் சென்றபின் துறந்துசென்ற சந்திரசேனன் அங்கு வரக்கண்டு தருமன் அவனொடு அளவளாவினன். அப்போது சந்திரசேனன் தான் பெற்ற பேற்றைப் பெரிதாகக் கூறித் தருமனை இழித்துப்பேசி 'இந்திரனையும் இங்குத் தருகுவன்' என்றிறுமாந்து நிற்கவே, தருமன் 'அது காண்பன்' என, உடனே அவன் இந்திரனை அழைத்தான். இந்திரன் வந்து தன்னைப் பணிந்து நின்ற சந்திரசேனனுக்கு ஒன்று முரையாது அப்போதே சென்றான். சென்றபின், தருமனும் அவ்விந்திரன் அங்கு வருமாறு நினைத்தான். நினைத்த வளவில் இந்திரன் அங்கு வந்து அவனை வணங்கிப் பலவாறு ஏத்தி விடைபெற்றுச் சென்றான். இவ்வேறுபாட்டைக் கண்ட சந்திரசேனன் அதிசயமடைந்து நிற்கையில் தருமன் 'யான் பிரமனையு மழைப்பன், காண்டி' என்று வரவழைப்ப, அது செய்யமுடியாத சந்திரசேனன் ஊக்கமிழந்து இரந்து அவனிடம் பஞ்சாக்ஷரோபதேசம் பெற்றான். இருவருஞ் சிவகதியடைந்தனர். [இஃது உபதேசகாண்டத் துளது.] (இ)

---

# வாழ்க்கைத் துணைநலம்

மூவர் தடுப்பவுங்கொண் மூவைப் பணிகொண்டா
டூய வனசூயை சோமேசா—மேவுபிற
தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை.

அஃது அவ் வில்வாழ்க்கைக்குத் துணையாகிய மனைவியது நன்மை.

(இ-ள்.) சோமேசா-! மேவு-பொருந்திய, பிற தெய்வம் தொழாஅள்-பிற தெய்வத் தொழாது, கொழுநன்-தன் தெய்வமாகிய கணவனை, தொழுது எழுவாள்-தொழாநின்று துயிலெழுவாள், பெய்யென-பெய் யென்று சொல்ல, மழை பெய்யும்,-(அதற்கு எடுத்துக் காட்டு)-தூய அனசூயை-அகத்தூய்மை புறத்தூய்மை களையுடைய அநசூயை, மூவர் தடுப்பவும்-அயன், அரி, அரனென்னும் மும்மூர்த்திகளும் தடுக்கவும், கொண் மூவை-மேகத்தை பணிகொண்டாள்-அடிமைப் படுத் தாள் (அஃதாவது) தன் ஏவலை மேற்கொள்ளச் செய் தாள் (எ-று).

இவ் வருமைத் திருக்குறள் சீத்தலைச்சாத்தனார் என்னும் புலவர் பெருமான் தமது மகாகாவியமாகிய மணிமேகலையுள், மருதி கதை கூறப்புக்கவழி, 'தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள், பெய்யெனப் பெய்யும் பெருமழை யென் றவப், பொய்யில் புலவன் பொருளுரை தேருய்' என எடுத் தாண்டது. 'தெய்வந் தொழுதற்கு மனந்தெளிவது துயிலெழுங்

காலத் தாகலின் 'தொழுது எழுவாள்' என்முர். தொழாகின் றெனபது தொழுதெனத் திரிந்துநின்றது என் றுரைவகுத்தார் ஆசிரியர் பரிமேலழகியார். எழுந்தன்றித் தொழுதல் கூடாமை யின் 'தொழா நின்றெழுவாள்' என்றது பொருந்தா தென்பர் ஒரு சிலர். துயில் கூடுங் காலத்து எந் நினைவு அந்தக்கரணத் தின்கண் வாசனை வடிவாய் நிற்பதோ அந் நினைவு துயிலெழுங் காலத்து முன்பின் என்பதின்றி வெளிப்பட்டு நிற்குமென்பது

சோமேசர் முதுமொழி வெண்பா

கடு

நூலோர் துணிபாகலின் அவர் உரை வெற்றுரையென விடுக்க.

மூவர்-தொகைக்குறிப்புமொழி உம்மை உயர்வு

'அநசூயை'—'ந அசூயா' எனப் பிரிந்து யில்லாள்' எனப் பொருள்படு மென்ப.

சிறப்பும்மை.

'பொருமை

கதை :—திரிமூர்த்திகள் திருவுளப்படி வடநாட்டின்கண் ஒருபஃதாண்டு வானம் வழங்காது வற்கடங் கூர்ந்துழி, அத்திரி முனிவர் பத்தினியாகிய அநசூயை என்பார் உயிர்கள் வாடுதல் நோக்கித் தமது கற்பின் மாட்சியிற் கங்கை பெருகவும் செடி கொடி முதலியன தழைக்கவும் மழை பெய்வித்தார். (கூ)

[இஃது இராமாயண முதலிய நூல்களி னுளது.]

## எ-ஆம் அதிகாரம்

# புதல்வரைப் பெறுதல்

*பாடினர்மூ வாண்டினிற்சம் பந்தரென*
*யாவோருஞ் சூடு மகிழ்ச்சிமெய்யே*
*சோமேசா—நாடியிடில் தம்மிற்றம் மக்க*
*ளறிவுடைமை மாநிலத்து மன்னுயிர்க் கெல்லா*
*மினிது.*

அஃதாவது பிரம க்ஷத்திரிய வைசிய ரென்னும் இருபிறப்பாளர் மூவராலும் இயல்பாக இறுக்கப்படுஉங் கடன் மூன்றனுள் முனிவர் கடன் கேள்வியாலும், தேவர் கடன் வேள்வியாலும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலாலும் அன்றி இறுக்கப்படாமையின், அக்கடன் இறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல்.

'தனிமரந் தோப்பாகாது, தனிப்பிள்ளை குடியாகாது' எனவும், 'ஒரு பிள்ளை பெற்றவள் மலடி' எனவுங் கூறுபவாகலின், புதல்வரை எனப் பலர்பாலாற் கூறினார்.

எ. (இ-ள்) சோமேசா-நாடியிடில் ஆராய்ந்து பார்க்கில், தம் மக்கள் அறிவுடைமை-தம் மக்களது அறிவுடைமை, மாநிலத்து-பெரிய நிலத்து, மன் உயிர்க்கு எல்லாம்-பொருந்திய உயிர்கட் கெல்லாம், தம்மின் இனிது-தம்மினும் இனிதாம், (அதற்கு எடுத்துக்காட்டு) சம்

பந்தர் - ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார், மூ ஆண்டினில் - மூன்றுவது பிராயத்தில், பாடினர் - (தேவாரத் திருப் பதிகங்கள்) பாடி யருளினர், என - என்று, யாவோரும் சூடும் மகிழ்ச்சி - உலகத்தார் எல்லோருங் கொள்ளும் மகிழ்ச்சி, மெய்யே - உண்மையானதே (எ - று.)

ஈண்டு அறிவென்றது இயற்கையறிவோடு கூடிய கல்வியறி வினை. மன் உயிர் என்றது ஈண்டு அறிவுடையார்மேல் நின்றது; அறிவுடைமை கண்டு இன்புறுதற் குரியாரவராகலின், தம்மின் என்ற விடத்து 'இன' உருபு எல்லைப் பொருளது. பாடுதலாகிய அரிய பெரிய செயலையும் மூவாண்டாகிய அதற்கு ஏலாச் சிற்றறஞ் சிறுபருவத்தையும் வியந்தார் அவற்றை முதற்கட் கூறினர். நாடியிடில்—'இடு' துணைவினை. மெய்யே—ஏகாரம் தேற்றம்.

கதை :—சீகாழியில் சிவபாதவிருதயர் திருக்குமாரராய் அவ தரித்த ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார் மூன்றுவது பிராயத்தில் ஒரு நாள தமது தந்தையார் நீராடப் புறப்படுகையில் அழுது பின்தொடர, அவரும் உடன் அழைத்துச் சென்று சிவாலயத் தின்கணுள்ள பிரமதீர்த்தக் கரையில் பிள்ளையாரை யிருத்தி நீராடி அகமருஷண மந்திர செபஞ் செய்தற்கு நீரின் மூழ்கிச் சிறிது நேரம் இருப்ப, பிள்ளையார் தமது தந்தையாரைக் காணுது திருக்கோயிற் சிகரத்தைப் பார்த்து 'அம்மே! அப்பா!' என்று அழ, கருணைக் கடலாகிய சிவபெருமான் தேவியாரைப் பார்த்துத் திருமுலைப்பால் ஊட்டுமாறு பணிக்க, அம்மையாரும் சிவஞானத்தைக் குழைத்துத் திருமுலைப்பால் ஊட்டச் சிவபெரு மான் தாமே அழுகை தீர்த்து அனுக்கிரகஞ் செய்தருளினர்.

செபமுடித்துக் கரை ஏறின தந்தையார் பிள்ளையார் வாயிற் பால் வடிவது கண்டு "எச்சில் மயங்கிட உனக்குப் பால் தந்தது யாவர்?" எனப் பயமுறுத்துக் கேட்ப, பிள்ளையார் ஒரு கைவிர லாற் சுட்டி ஆகாயத்தி லெழுந்தருளிய பெருமானைக் காட்டித் "தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண் மதிசூடிக், காடுடைய சுடலைப் பொடிபூசி யென்னுள்ளங் கவர்கள்வன், ஏடுடைய மலரான் முனைநாள் பணிந்தேத்தவருள் செய்த, பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே" என்று தொடங்குந் திருப்பாசுரத்தை ஓதினர். அவ் வற்புதத்தைக் கண்டு விண்ணவர்கள் பூமாரி பொழிந்தார்கள், மண்ணவர்கள் கண்மாரி பொழிந்தார்கள். (எ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது]

அ-ஆம் அதிகாரம்

# அன்புடைமை

தோன்று வகைகரந்துந் தோன்றலைக்கண்
டுண் ணெகிழ்ந்து தோன்றகின்றான் முன்புளன்
சோமேசா-தோன்றுகின்ற அன்பிற்கு முண்டோ
வடைக்குந்தா ழார்வலர்
புன்கணீர் பூச றரும.

அஃதாவது அம் மனைவியும் மக்களுமாகிய தொடர்பு டையா ரிடத்தே காதலுடையனாதல். இல்லறம் இனிது நடத்தலும், பிற வுயிர்கண்மேல் அருள் பிறத்தலும் வேண்டப்பட்ட தென்க.

அன்பின் பயனுகலின், இது

அ. (இ-ள்.) சோமேசா-! தோன்றுகின்ற -

(மனத்
திற்) பிறக்கின்ற, அன்பிற்கும் அடைக்கும் தாழ் உண்டோ - அன்பிற்கும் பிறரறியாமல் அடைத்து வைக்கும் தாழ் உளதோ? ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும் - (தம்மால் அன்பு செய்யப்பட்டாரது துன்பங் கண்டுழி) அன்புடையார் கண் பொழிகின்ற புல்லிய கண்ணீரே (உள் நின்ற அன்பினை) எல்லாரும் அறியத்தூற்றும் ஆதலான், - (அதற்கு
எடுத்துக்காட்டு)-முன்பு-முற்காலத்தில்,
நளன்-, தோன்றுவகை கரந்தும்-(தான் இன்னனென்று பிறர்க்குத்) தெரியாதிருக்கும்படி மறைந்தும், தோன்றலை கண்டு - தன் மகனைப் பார்த்தவளவில், உள் நெகிழ்ந்து-மனமுடைந்துருகி,
னென்று பிறர்க்கு)

தோன்ற நின்றான் - (தானின்ன
விளங்கும்படி (கண்ணீர் பெருக்கி)
நின்றான்.(எ - று.)

உம்மை சிறப்பின்கண் வந்தது. அன்புடையாரது புன்மை அவர் கண்ணீர்மேல் ஏற்றப்பட்டது; புன்மை—ஈண்டுத் தடுக்கும் வலியின்மை. அன்புடைமை காட்சியளவையான் அறியப்படாதாயினும் அனுமானவளவையான் வெளிப்படுமென்பதாம். பூசல்தரும்—ஒரு சொல் நீர்மைத்து. 'கரந்தும்' என்புழி உம்மையும் சிறப்பும்மையேயாம்.

சோ—2

கதை:—நிடத தேசத்தில் மாவிந்த நகரத்தில் அரசாண்ட நளச்சக்கரவர்த்தி, விதர்ப்பதேசத்துக் குண்டினபுரத்தில் அரசு புரிந்த வீமராசனது மகளாகிய தமயந்தியை மணந்து இந்திரசேனன், இந்திரசேனை என்னும் இரண்டு மக்களைப் பெற்று இனிது வாழ்ந்திருக்குங்காற் கலிபுருஷன் பற்றப் புஷ்கரனோடு சூதாடி யாவும் இழந்து வனம் புகுந்து தன் மக்களை ஓர் அந்தணனைக் கொண்டு வீமனிடஞ் சேர்ப்பித்து ஒரு கடுங்காடு சென்று நள்ளிரவில் உறங்கும்போது மனைவியைத் தனிக்கவிட்டு அகன்றான். வழியில் கார்க்கோடகனென்னும் மாநாகத்தாற் கடிக்கப்பட்டு உருக்குலைந்து வாகுகனென்னும் பெயரோடு அயோத்தி புகுந்து ருதுபர்ணராசனுக்குத் தேர்ப்பாகனாய் அமர்ந்தான். அது நிற்க. தன்னந் தனியாய் வருந்தித் தந்தையை யடைந்த தமயந்தி நளனைத் தேடப் புரோகிதனைவிட அவன் எங்கெங்குந் தேடி அயோத்தி சேர்ந்து தேர்ப்பாகனைக் கண்டு அவன் மொழிகளால் அவன் நளனாதல் வேண்டுமென் றறிந்து மீண்டு தமயந்தியினிடம் அச்செய்தி கூற, அந்தப் பாகனை வரவழைத்தற்கு ஓர் உபாயமாகத் 'தமயந்திக்கு இரண்டாவது சுயம்வரம்' என்று ருதுபர்ணனுக்குத் தெரிவிக்க, ஆசையொடு சுயம்வரத்திற்கு வந்த ருதுபர்ணனுக்குத் தேர் செலுத்திக்கொண்டு வாகுகன் குண்டினபுரம் சேர்ந்தான். அவ்வாறு சேர்ந்த பாகன் நளன் தானே யென்று துணிதற்குத் தமயந்தி தன் தோழி ஒருத்தியொடு கூட்டித் தன் மக்களை அவன் எதிரில் விளையாட விட, அம் மக்களைப் பார்த்த வளவில் வாகுகன் அன்பான் மனமுடைந் துருகி அடக்கமாட்டாது கண்ணீர் பெருக்க அதனால் அவனே நளனென்று துணிந்தார்கள். "மக்களைமுன் காணா மனநடுங்கா வெய்துயிராப், புக்கெடுத்து வீரப் புயத்தணையா-மக்காணீர், என் மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான் வன்மக் களியானை மன்", "ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி, நீங்கா வுயிரோடு நின்றிட்டான்-பூங்காவில், வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன், உள்ளம்போற் கண்ணீ ருகுத்து' என்னும் நளவெண்பாப் பாக்களும், "அடைந்த மக்களைக் காண்டலு மனவிடு மெழுகி, னுடைந்த துள்ளநீ ரூற்றிருந் தொழுகின நெடுங்கண், தொடர்ந்த மும்மல முருக்கிவெம் பவக்கட லுருவைக், கடந்து ளோர்களுங் கடப்பரோ மக்கண் மேற் காதல்" என்னும் நைடதப் பாட்டும் ஈண்டு அறியத்தக்கன.

[இது நளவெண்பாவினும், நைடதத்திலு முளது.] (அ)

---

## கூ-ஆம் அதிகாரம்
# விருந்தோம்பல்

பொன்னனையா ளன்பருக்கே போனகமீந்
துன்னருளாற் சொன்னமிகப் பெற்றளே
சோமேசா—பன்னில் வருவிருந்து வைகலு
மோம்புவான் வாழ்க்கை பருவந்து பாழ்படுத
லின்று.

அஃதாவது விருந்தினரை யுபசரித்தல்.

தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்கிற ஐம்புலத்துள் முன்னைய
இரண்டும் கண்ணுக்குப் புலனாகாதாரை நினைந்து செய்வன ஆகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கிதலன்மையானும் இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்றென்க.

கூ. (இ-ள்.) சோமேசா-! பன்னில்-ஆராயு மிடத்து, வருவிருந்து - (தன்னை நோக்கி) வந்த விருந்தை, வைகலும் - நாடோறும், ஓம்புவான் - உபசரிப்பானது,

வாழ்க்கை - இல் வாழ்க்கை, பருவந்து - வறுமையான் வருந்தி, பாழ்படுத லின்று - கெடுத லில்லை, - (அதற்கு எடுத்துக்காட்டு) - பொன்னனையாள் - பொன்னனையாள் என்னும் மாது, அன்பருக்கே - அன்புடை அடியார்களுக்கே, போனகம் ஈந்து - அன்னமிட்டு, உன் அருளால் - உனது திருவருளால், சொன்னம் - பொன்னை, மிகப் பெற்றாள் - மிகுதியாகப்பெற்றாள். (எ - று.)

இக் குறளின் கருத்து நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற் பொருள் தொலையாது, மேன்மேற் கிளைக்கு மென்பதாம். அன்பருக்கே—ஏகாரம் பிரிநிலை. சொன்னம்—'ஸ்வர்நம்' என்னும் வடசொற் றிரிபு.

**கதை** :—திருப்பூவணம் என்னும் திருப்பதியில் பொன்னனையாளென்னும் ஒரு வேசைமாது சிவனடிக்கண் அன்பு பூண்டு சிவபூசை வழுவாது நடத்திச் சிவனடியார்களைச் சிவனெனப் பாவித்து அருச்சித்து வழிபட்டு அவர் மனங்களிக்க அறுசுவையுண்டி அருத்தி, எஞ்சினதையே தான் உண்டுவருநாளிற் சிவா

நுக்கிரகத்தால் தான் ஒரு விக்கிரகம் வார்க்கவேண்டுமென்று ஆசை கூர்ந்தாள்; கருக்கட்டியும் வைத்தாள். நாடோறும் செய்யும் அடியார் பூசைக்கே தன் வருவாய் முற்றும் செலவழிந்தமையின் விக்கிரகம் வார்த்தற்கு இடம் பெருது வருந்தினுள். அவள் ஆதரங் கண்ட சிவபெருமான் ஒரு சித்தராய் வந்துபொன்னனையாள் திருமாளிகைப் புறத் தொருபக்கம் வீற்றிருந்தார். அஃதுணர்ந்த அவள் அறை உள்ளே எழுந்தருளித் திருவமுது செய்யும்படி இரந்து வேண்டினுள். அப்போது அவர் அவள் தேக மிளைத்திருத்தற்குக் காரணம் வினவ, அவளும் பெருமான் விக்கிரகம் அமைத்தற்கிடம் பெருமையென விடுக்க அதன்மேல் வந்த சித்தர் உன் வீட்டிலுள்ள பித்தளை, ஈயம், செம்பு, இரும்பு முதலியவற்றுலாகிய பாண்டங்களை எல்லாம் கொணர்ந்து ஓரிடத்திடுகவெனப் பணித்து அவ்வாறு செய்தவுடன் அப் பாண்டங்களின்மேல் விபூதியைத் தூவி அன்றிரவு அவற்றை நெருப்பிலிடும்படி கட்டளையிட்டார். அவள் அவரை நோக்கி, 'ஐயரே! நீர் இன்றிரவு இங்குத் தங்கித் திருவமுது செய்து நாளைக் காலையிற் செல்லுக' என்று குறையிரக்கவும், அவர் அதற்கு இசையாது மறைந்தார். அதுகண்டு வியந்து பலவாறு ஏத்திப் பின் தான் எண்ணியவாறே விக்கிரகம் அமைத்துப் பிரதிஷ்டைசெய்து திரு[illegible]நடத்தி [illegible] சில நாள் கழித்து வீடுபெற்றுள். [illegible]

[இது திருவிளையாடற்புராணத் துளது.]

---

௯௦-ஆம் அதிகாரம்

## இனியவை கூறல்

இன்சொ லிராம னியம்ப விரேணுகைசேய்
துன்பமொழி யேபுகன்ருன் சோமேசா—வன்புடை
ய இன்சொ லினிதீன் றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது.

அஃதாவது மனத்தின்கண் மகிழ்ச்சியை வெளிப்படுப்பன வாகிய இன்சொற்களைச் சொல்லுதல்.

சோமேசர் முதுமொழி வெண்பா.

உக

கo. (இ - ள்.) சோமேசா-! அன்புடைய-அன்பொடு பொருந்திய, இன்சொல்—(பிறர்கூறிய) இன்சொல், இனிது ஈன்றல் - (தனக்கு)இன்பம் பயத்தலை, காண்பான்- அநுபவித்து அறிகின்றவன், வன்சொல் வழங்குவது - (அவ் வின்சொலிருக்கப் பிறரிடத்து) வன்சொல்லைச் சொல்லுதல், எவன் - என்ன பயன் கருதி ?- (அதற்கு எடுத்துக் காட்டு) - இராமன் - தசரதராமன், இன்சொல் இயம்ப - இனிய சொற்களைச் சொல்ல, இரேணுகைசேய் - இரேணு கையின் புத்திரனை பாசிராமன், துன்பம் மொழியே புகன்றான் - துன்பத்தைத்தருங் கடுஞ்சொற்களையே கூறி னான் (எ - று.)

'இனிது' என்பது குறிப்பு வினையாலணையும் பெயர். கடுஞ் சொல் பிறர்க்குந் துன்பஞ் செய்தலின், அது கூறலாகாதென்பது கருத்து. ரேணுகை—சூரிய வமிசத்து அரசனை ரேணு என் பான் மகள். பரசிராமன் விஷ்ணுவின் ஆறாவது அவதாரம், தசரதராமன் விஷ்ணுவின் ஏழாவது அவதாரம்.

**கதை** :—இராமன் விசுவாமித்திரரோடு மிதிலைபுகுந்து சிவன் வில்லை ஒடித்துச் சீதையை மணந்து அயோத்திக்குப் புறப்பட்டு வருகையில், எதிர்ப்பட்டு இராமனை நோக்கிச் சமதக்கி புத்ரனை பரசிராமன் பலவகைத் தீமொழிகளைக்கூறி விஷ்ணு வில்லைத் தந்து அதனை ஒடித்தால் பின் தான் போர் செய்வதாகக் கூறினன். (௧௦)

[இஃது இராமாயணத் துளது.]

---

௧௧-ஆம் அதிகாரம்

## செய்ந்நன்றி யறிதல்

பன்னு மசதிகன்றி பாராட்டிக் கோவை நூல்
சொன்னுளே யெளவை முன்பு சோமேசா—மன்னுத்
தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

அஃதாவது தனக்குப் பிறர்செய்த நன்றியை மறவாமை. ௨௨. சோமேசர் முதுமொழி வெண்பா

கக. (இ-ள்.) சோமேசா -! மன்ற - நிலைபெறுத, தினை துணை நன்றி செயினும் - தினையளவிற்றாகிய உபகாரத்தை (ஒருவன் தமக்குச்) செய்தானாயினும், பனை துணையா கொள்வர் - (அதனை அவ்வளவிற்றாகக் கருதாது) பனையளவிற்றாகக் கருதுவர், பயன் தெரிவார்—அக் கருத்தின் பயனை அறிபவர், - (அதற்கு எடுத்துக் காட்டு) - முன்பு - முன்னாளில், ஔவை - அவ்வைப் பிராட்டி, பன்னும் அசதி நன்றி பாராட்டி - (யாவரும், என்ன சிறப்புடையான் என்று) ஆராயும் அசதி என்னும் இடையன் செய்த உபகாரத்தைப் பெரிதாக மதித்து, கோவை நூல் சொன்னாள் - கோவை என்னும் பிரபந்தம் பாடினாள் (எ - று.)

தினை, பனை என்பன சிறுமை, பெருமைகட்குக் காட்டுவன சில அளவை. உம்மை—இழிவு சிறப்பும்மை. ஆ—'ஆக' என்பதன் விகாரம். அக் கருத்தின் பயன் என்றது செய்த நன்றி மிகச் சிறிதாயினும் மிகப்பெரிதாகக் கருதுவார்க்கு வரும் புகழ் புண்ணியங்களை. கோவை: கோ—பகுதி, ஐ—செய்யப்படு பொருண்மை விகுதி. அகப்பொருட்டுறைகளைக் கொண்ட நானூறு பாடல்களாற் கோக்கப்படுதலின், நூலின் கோவையாயிற் றென்க. அகப்பொரு ளென்றது இன்பத்தை. ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் அகப்பொருணூல் 'திருக்கோவையார்' என்னும் பெயர்த்தாதல் காண்க.

கதை :—அவ்வைப்பிராட்டியார் ஒருகால் தென்பாண்டி நாட்டிலொரு காட்டுவழியாகச் செல்லும்போது பசியான்மிக வருந்தி ஆட்டிடையன் ஒருவனைக் கண்டடைந்து 'ஏதேனும் ஊண் தருக' என, அவன் மருது தனக்கென வைத்திருந்த
ஆட்டுப்பால் கலந்த கூழைக் கொடுத்து
பெரிதும் பாராட்டிய பிராட்டியார் அவன்

உபசரிக்க அதனைப் நிலைநிறுத்த நினைந்து
புகழை உலகின்கண் தமையால் 'அசதி'

அவன் பெயரை வினவ, அதை அவன் மறந்
என்ன, பின் ஊரை வினவ அதையும்
மறந்து 'ஊரில் ஐந்து வேலுண்டு' என்ன, கவிதொறும் 'ஐவேலசதி' என்றமைத்து 'அசதிக்கோவை' என்னும் நூலைப் பாடினர். அசதியை அரசனென்பாருமுளர். (கக)

[இது புலவர்புராணத் துளது.]

## கஉ-ஆம் அதிகாரம்

# நடுவுநிலைமை

வேதியனு ளாமோவென் றெள்ளாது
வெண்ணெய்நல்லூர்ச் சோதிவழக் கேபுகழ்ந்தார்
சோமேசா—வோதிற் சமன்செய்து சீர்தூக்குங்
கோல்போ லமைந்தொருபாற் கோடாமை
சான்றோர்க் கணி.

அஃதாவது பகைவரிடத்தும், நண்பரிடத்தும்,

பிறரிடத்தும் அறத்தின் வழுவாது ஒருபடித்தாய் நிற்கும் நிலைமை.

கஉ. (இ-ள்.) சோமேசா-! ஒதில் - சொல்லின், சமன் செய்து - (முன்னே தான்) சமனாகின்று, சீர்தூக்கும் கோல்போல் - பின் தன்கண் வைத்த பாரத்தை வரையறுக்கும் துலாப்போல, அமைந்து - (இலக்கணங்களான்) அமைந்து, ஒருபால் கோடாமை — ஒரு பக்கத்தில் சாயாமை, சான்றோர்க்கு அணி - பெரியோர்க்கு அழகாம், - (அதற்கு எடுத்துக்காட்டு) - வேதியன்-பிராமணன், ஆளாமோ என்று எள்ளாது - (பிறர்க்கு) அடிமையாவனோ (ஆகான்) என்று இகழாது, வெண்ணெய் நல்லூர் சோதி - திரு வெண்ணெய் நல்லூரின்கண் எழுந்தருளியிருக்கின்ற பரஞ்சோதியாகிய சடையப்பரது, வழக்கே புகழ்ந்தார் - வழக்கையே (திருவெண்ணெய் நல்லூர் அந்தண ரவையத்தார்) புகழ்ந்து பேசினார்கள். (எ - று.)

கோலிற்கு அடையாகிய சமன் செய்தலும் சீர்தூக்கலும் சான்றோர்கண்ணும், சான்றோர்க்கு அடையாகிய அமைதலும் ஒருபாற் கோடாமையும் கோலின்கண்ணுங் கூட்டுக. சான்றோர் சீர்தூக்கலாவது தடைவிடைகளாற் (ஆக்ஷேப சமாதானங்களாற்) கேட்டவற்றை முறையே உள்ளவாறுணர்தல். ஒருபாற் கோடாமையாவது அவ்வுள்ளவற்றை மறையாது பகைவர், நண்பர் மற்றையவரென்னும் முத்திறத்தார்க்கும் ஒருபடித்தாகக் கூறுதல். இலக்கணங்களான் அமைதல் கோலின்கண்ணும்.

உரை சோமேசர் முதுமொழி வெண்பா

சான்றோர்கண்ணும் ஏற்ற பெற்றி கொள்க.

வேதியன்—சாதி

பொருமைப்பெயர். ஓகாரம் எதிர்மறை. ஏகாரம் பிரிநிலை.

கதை :—திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில், ஆதி சைவமரபில் சடையனார்க்கும் இசைஞானியார்க்கும் திருக்குமார ராய் அவதரித்த சுந்தரமூர்த்தி நாயனார் நரசிங்கமுனைய ரென்னும் அரசற்குக் காதற்பிள்ளையாய் அந்தண ரொழுக்கமும் அரசர் திருவும் பொருந்தி யௌவன பருவமடைந்தார். அது நோக்கிப் பெற்றோரும் மற்றோரும் புத்தூர்ச் சடங்கவி எனனும் ஆதி சைவர் மகளை மணம்பேசி முடித்து முகூர்த்தநாளில் நாயனாரைக் குதிரைமீதேற்றி மிக்க ஆடம்பரத்துடன் புத்தூர் அழைத்துச் சென்றார்கள். நாயனார் சடங்கவி மனைபுகுந்து மணப்பந்தரின் எழுந்தருளினவுடன் சிவபெருமான் கைலையில் திருவாக்களித் தருளியபடி அவரைத் தடுத்தாட்கொள்ள வேண்டி ஒரு கிழப் பிராமணராகத் திருவுருக்கொண்டுவந்து மணப்பந்தர் புகுந்து, "ஒரு வழக்குண்டு; அதை முடித்தே மணம் புரிதல் வேண்டும். மணச் சடங்குகளை நிறுத்துக' என்றார். நாயனார் யாது கூறு வரோவென்று வியமாய் 'அப்படியே; தங்கள் வழக்கைத் தீர்த் தன்றி மணம் புரியேன்' என, கிழப் பிராமணர் சபையோரை நோக்கி, 'அந்தணீர்! இந்த மணமகன் எனக்கு வழியடிமை' என்றார். அதுகேட்ட நாயனார் நகைக்கவே, கிழவர் வெகுண்டு, 'உன் பாட்டன் எழுதித்தந்த அடிமையோலை இது. நகைத்த தென்?' என்றார். நாயனார் நகை ஒழிந்து, 'ஐயரே! அந் தணர் அடிமையாதல் உண்டோ? நீர் பித்தரோ? அடிமை யோலை உளதாயிற் காட்டுக' என்றார். கிழவர், "நீ அடிமை; அதைக் காணுதற்கு நீ அருகனல்லன்" என்று கூறிச், சபை யோர்களுக்கு அதைக் காட்டவே, நாயனார் வெகுண்டு சீறி அவ் வோலையைப் பறித்துக் கிழித்தெறிந்தார். கிழவர் நாயனா ருடையை இறுகப்பற்றி விடாதிழுத்து "இது தகுமோ! இது முறையோ! இது தருமந்தானோ!" என்று அந்தணர்களை நோக் கிக் கூச்சலிடவே, அவ் வந்தணர் "நீர் எங்குள்ளீர்?" என வினவ, 'யான் திருவெண்ணெய் நல்லூர் உளன்' என, இறுக்க, 'அங்ஙனமாயின் உமது வழக்கை அங்குச் சென்று தீர்த்துக் கொள்க' என்று யாவரும் உரைப்ப, கிழவர் அதற்கிசைந்து நாயனாரைப்பற்றிக் கொண்டு திருவெண்ணெய் நல்லூர் சென்று அங்கு அந்தணரவையத்தார் முன்பு நாயனாரை விட்டுத் தமது

வழக்கைத் தெரிவிக்க அவ் வவையத்தார் அந்தணர் அடிமை யாதல் இல்லையென அறிந்துவைத்துங் கிழவர் தம்மிடத் துண் டெனத் தந்த மூல வோலையைக்கொண்டு நாயனர் பாட்டன் கையெழுத்தோடு ஒப்பு நோக்கிச் சிறிதும் வேறுபாடின்மை

சோமேசர் முதுமொழி வெண்பா
உகூ கண்டு "நீர் இவ் வந்தணர்க்கு அடிமையே'
பணித்தார்.
என்று தீர்ப்
(கஉ)

[இது திருத்தொண்டர் புராணத் துளது]

---

கங-ஆம் அதிகாரம்

## அடக்க முடைமை

எல்லா முணர்ந்தும் வியாத னியம்பியவச்
சொல்லாலே நாவயர்ந்தான்
சோமேசா—வல்லமையால் யாகாவா ராயினு
நாகாக்க காவாக்காற்
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

அஃதாவது மெய், மொழி, மனங்கள் தீயவழியிற் செல் லாது அடங்குதல் உடையனுதல்.

கரு. (இ - ள்.) சோமேசா -! யா காவார் ஆயினும்-(தம்மாற் காக்கப்படுவன) எல்லாவற்றையும் காக்க மாட்டாராயினும், வல்லமையால் -(தமக்குள்ள) வன்மை

யால், நாகாக்க-நா ஒன்றனையும் காக்க, காவாக்கால்-(அதனைக்) காவாராயின், சொல் இழுக்குப்பட்டு-சொற் குற்றத்தின்கட் பட்டு, சோகாப்பர்-(தாமே) துன்புறு வார், -(அதற்கு எடுத்துக்காட்டு)-வியாதன்-வேதவியாச முனிவர், எல்லாம் உணர்ந்தும்-எல்லாப் பொருள்களையும் அறிந்துவைத்தும், இயம்பிய அ சொல்லால்-(தாம்) கூறிய 'நாரணனே பரன்' என்னும் அவ்வொரு சொல் லால், நா அயர்ந்தான்-(கை இழந்து) நாவெழாது நின்றார் (எ - று.)

'யா' என்னும் அஃறிணைப்பன்மை வினைப்பெயர் ஈண்டு எஞ்சாமை உணர நின்றது. முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. அஃதாவது 'யாவும்' என்றிருக்கற் பாலது 'யா' என்றாயிற்று. சொற்குற்றம்-சொல்லின்கட் டோன்றுங் குற்றம். அல்லாப்பர்,

உகூ சோமேசர் முதுமொழி வெண்பா

செம்மாப்பர் என்பன போலச் சோகாப்ப ரென்பது ஒரு சொல். வியாதன்-இதற்குச் சொல்லின்படி பொருள் 'பிரித்தவன்' என்பது. உம்மை சிறப்பும்மை. அகரம் உலகறிசுட் டென்க.

கதை :—காசி க்ஷேத்திரத்தில் கங்காதீரத்தில் முனிவர் களுக்கு அறிவுறுக்கவேண்டிப் பரத்துவங் கூறப்புக்க வியாச முனிவர் மனந் தெளியாமையிற் கையெடுத்து 'நாரணனே பரன்' என்று கூற, அக் கையும் நாவு
முழுப் பொய்யென முனிவர்

மெழாது நிற்ப, அவர் கூற்று அறிந்தொழிந்தார். திருமால் வியாசமுனிவர் முற்றேன்றி 'யாவர்க்கு மேலா மளவிலாச் சீருடையான் சிவனே என்றறிதி' என்று கூறத் தெளிந்து பெருமாளைப் போற்றிசெய்து உய்ந்தார்.

'முன்னைநான் மறையு முறைப்பட நிறீஇய, மன்னிருஞ் சிறப்பின் வாதராயணனும், கையிழுந் தனனது பொய்ம்மொழிந் தன்றே' என்னுங் குமரகுருபர சுவாமிகள் திருவாக்குங் காண்க. (கங)

[இது காசிகாண்டத் துளது.]

---

## கச-ஆம் அதிகாரம்

# ஒழுக்கமுடைமை

தீயனவே சொல்லுஞ் சிசுபாலன் முன்புகண்ணன்
றூயதலாச் சொல்லுரையான் சோமேசா—வாயின்
ஒழுக்க முடையவர்க் கொல்லாவே தீய
வழுக்கியும் வாயாற் சொலல்.

அஃதாவது தத்தம் வருணத்திற்கும் ஆச்சிரமத்திற்கும் ஓதப் பட்ட ஒழுக்கத்தினை உடையராதல்.

கச. (இ - ள்.) சோமேசா - ! ஆயின் - ஆராயின், வழுக்கியும் தீய வாயால் சொலல் - மறந்துந் தீயசொற் களைத் (தம்) வாயாற் சொல்லுந் தொழில்கள், ஒழுக்க முடையவர்க்கு ஒல்லா - ஒழுக்கமுடையவர்க்கு முடியா,- (அதற்கு எடுத்துக்காட்டு) - தீயனவே-தீய சொற்களையே, சொல்லும் சிசுபாலன் முன்பு-சொல்லிய சிசு பாலனுக்கு

எதிரில், கண்ணன் - கிருஷ்ணன், தூயது அலா சொல்
உரையான்-குற்றமற்றதல்லாத (ஒரு) சொல்லும் மாட்டாதாருயினன் (எ - று.)

சொல்ல

தீய சொற்களாவன பிறர்க்குத் தீங்கு பயக்கும் பொய் முதலியனவும் வருணத்திற்கு உரியன அல்லனவுமாம். அவை பலவாகலின், சொல்லுதற் றொழில் பலவாயின. சொல்—சாதி யொருமைப் பெயர். சொல்லெனவே அமைந்திருக்க 'வாயால்' என வேண்டாது கூறினர், அவர் வாய் நற்சொற்களையே பயின்ற தெனத் தாம் வேண்டியதன் சிறப்பு முடித்தற்கு. இதனை வட நூலார் தாற்பரிய மென்ப. கண்ணன்—கிருஷ்ணன் என்னும் வடசொற்சிதைவு. கிருஷ்ணன் - இதற்குக் 'கரியன்' என்பது பொருள். ஏகாரம் பிரிநிலை.

கதை :—சிசுபாலன் என்பான் வசுதேவன் உடன் பிறந் தாளும் அதனாற் கண்ணற்கு அத்தையுமாகிய சேதி மன்னன் மனைவி சுருதசிரவை என்பாளுடைய மகன். விஷ்ணுவின் துவாரபாலகராகிய ஜய விஜயர்கள் ஒருகால் வைகுண்டம் புகுந்த ஸனகாதியரைத் தடுத்தமைபற்றி 'மூன்று பிறப்பு விஷ்ணுவிற்குப் பகைவராய்ப் பிறந்து அவ்விஷ்ணுவின் கையால் இறக்க' என அவராற் சபிக்கப்பட்டு இரணிய விரணியாக்ஷராக வும், இராவண கும்பகர்ணராகவும், சிசுபால தந்தவக்ரராகவும் பிறந்தாரென அறிக. இச் சிசுபாலன் பிறந்தபொழுது அவற்கு

நான்கு கைகளும் மூன்று கண்களுமிருந்தன. 'யாவன் தொடில் அவை மறையுமோ அவனால் இவற்கு மரணம்' என்று ஆகாய வாணி கூற, அவ்வாறு பலரும் தொடுகையிற் கண்ணன் தொட்ட வப்போதே அவை மறையக் கண்ணனாலவற்கு மரணம் என்று அறிந்தார்கள். கண்ணனும் அவன் அத்தை வேண்ட நூறு பிழை பொறுப்பதாக வாக்களித்தான். ஏற்கெனவே சிசுபாலற்குக் கண்ணனிடத்துள்ள பகை தமக்கென விருந்த ருக்மிணியைக் கண்ணன் மணந்தபின் மேலிட்டது. தருமபுத்திரர் செய்த இராஜசூய யாகத்தில் அவர் கண்ணற்கு அக்ரபூஜை செய்தமை கண்டு மனம் புழுங்கிக் கொதித்துக் கண்ணனைப் பன்னூறுமுறை வைதமையின், அப்பெருமான் எதிரொன்றுங் கூறாது சக்கரத்தை விட அஃது அவன் தலையைத் துணிக்க, உடன் அவன் உடம்பினின்றும் ஒரு சோதி எழுந்து கண்ணன் திருவடியை அடைந்தது. "பூபால ரவையத்து முற்பூசை பெறுவார் புறங்கானில்வாழ், கோபால ரோவென் றுருத் தங் கதிர்த்துக் கொதித்தோதினான், காபாலி முனியாத வெங்காமனிகரான கவினெய்தியேம், திபால டங்காத புகழ்வீர கயமன்ன



சிசுபாலனே," "திண்ணியநெஞ் சினனான சிசுபாலன் றன்னெஞ் சிற்றீங்கு தோன்ற, வெண்ணியமன் பேரவையி னியம்பியபுன் சொற்களெலா மெண்ணி யெண்ணிப், புண்ணியர்வந் தினிதிறைஞ்சும் பூங்கழலோன் வேறொன்றும் புகலா னாகிப், பண்ணியதன் புரவிநெடும் பருமணித்தேர் மேற்கொண்டான் பரிதிபோல்வான்" என்னும் வில்லிபுத்தூரார் பாரதக் கவிகள் காண்க.

(கஎ)

[இது பாரத பாகவதங்களி னுளது.]

---

கரு-ஆம் அதிகாரம்

# பிறனில் விழையாமை

ஆன்றவெழிற் சீதையைவேட் டைந்நான்கு
திண்கரத்தான் றோன்றுபழி மாறிலனே
சோமேசா—வேன்ற
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

அஃதாவது காம மயக்கத்தால் பிறனுடைய மனைவியை விரும்பாமை.

கரு. (இ - ள்.) சோமேசா - ! இல் இறப்பான் கண் - பிறன் மனைவியின்கண் நெறிகடந்து செல்வானிடத்து, என்ற - பொருந்திய, பகை பாவம் அச்சம் பழி என நான்கும் - பகையும் பாவமும் அச்சமுங் குடிப்பழியும் என்னும் இந்நான்கு குற்றமும், இகவா ஆம் - ஒரு காலும் நீங்காவாம், - (அதற்கு எடுத்துக்காட்டு) - ஆன்ற எழில் - மிக்க அழகுடைய, சீதையை வேட்டு - சீதையை விரும்பி,

ஐந்நான்கு திண்கரத்தான் - இருபது வலிய கைகளையுடைய இராவணன், தோன்று பழி - (அன்று) தோன்றிய பழி, மாறிலன் ஏ - (இன்றளவும்) நீங்கினனில்லையே (எ - று.)

பகை, பாவம், அச்சம் பழியெனவே, இம்மை

மறுமையாகிய
இருமையும் இழத்தல் பெற்றேம். சீதை—'ஸீதா'என்னும் வட
சொற் றிரிபு. வடமொழியில் 'ஸீதா' என்பது கலப்பையிற்



கொழு விரும்பிற்குப் பெயர். யாகத்திற்காகப் பூமியை உழுத போது, கொழுவிரும்பினுல் வெளிப்பட்டமையின், அப்பெயர் ஜானகிக்கு உரித்தாயிற்றென்ப. ஏகாரம் இரக்கக் குறிப்பு.

கதை :—ரகுகுலோத்தமனுன இராமன் தனது சிற்றன்னையாகிய கைகேசி சூழ்வினையால் நாடிழந்து காடடைந்து நின்ற நிலையில், இலக்குமணனு லுறுப்பறுப்புண்ட சூர்ப்பணகை என்னும் அரக்கி சீதையை இராமனிற் பிரிக்கவெண்ணித் தன் தமையனுகிய இராவணனிடம் போய்ச் சீதையின் பேரழகைப் பலபடி வருணிக்க, அவ்வருணனை கேட்ட இராவணன் சீதைபால் மோகங்கொண்டு சந்நியாச வேடத்தோடு சீதா ராம லக்ஷ்மணர்களிருந்த பஞ்சவடியை அடைந்து தன் மாமனுகிய மாரீசனைப் பொன்மானுகப் போக்கி இராமலக்குமணர்களைப் பிரித்துச் சீதையைப் பர்ணசாலையொடு பெயர்த்துக் கொணர்ந்து இலங்கைக்கண் அசோகவனத்திற் சிறைவைத்துத் தன் எண்ணம் முடிவுருது நிற்க, இராமன் சுக்கிரீவன் நட்புப்பெற்று அனுமானை காடவிட்டுச் சீதை இலங்கையிற் சிறை இருந்து வருந்துவ துணர்ந்து வானர வீரர்களோடு திருவணை கட்டிக் கடலைத் தாண்டி இலங்கை சேர்ந்து அரக்கர் யாவரையும் மடித்து முடிவில் இராவணனையும் தன் அம்பிற் கிலக்காக்கினுன். (கரு)

[இஃது இராமாயணத் துளது.]

கசு-ஆம் அதிகாரம்

# பொறையுடைமை

ஒட்டலன்செய் தீமைக் கொருதுகமெ
ரென்றுரைத்தார் ஒட்டியசீர் மெய்ப்பொருளார்
சோமேசா—முட்ட ஒறுத்தார்க் கொருநாளை
யின்பம் பொறுத்தார்க்குப் பொன்றுந் துணையும்
புகழ்.

அஃதாவது காரணம்பற்றியாவது
அறியாமையானாவது ஒருவன் தமக்குத் தீங்கு செய்த
விடத்துத் தாமும் அதை அவன்கட் செய்யாது
பொறுத்தலை உடையராதல்.

கசு. (இ-ள்.)
தார்க்கு - (தமக்குத்

சோமேசா -! முட்ட - மிக, ஒறுத்
தீங்கு செய்தவனை) வருத்தினவர்க்கு,. .௩௦

சோமேசர் முதுமொழி வெண்பா

.(உண்டாவது) ஒரு நாளை இன்பம் - அவ் வொரு நாளை இன்பமே, பொறுத்தார்க்கு-(அதனைப்) பொறுத்தார்க்கு, பொன்றும் துணையும் - (உலகம்) அழியுமளவும், புகழ் - புகழுண்டாம், - (அதற்கு
பெருஞ்சுட்டோடு கூடிய

எடுத்துக்காட்டு) - சுட்டிய சீர் -
சிறப்புடைய, மெய்ப்பொரு

ளார் - மெய்ப்பொருள் நாயனர், செய் தீமைக்கு, (தமது பகைவன்) செய்த தீங்கிற்கு, ஒறுது - (அவனை) வருத்தாது,

நமர் என்று உரைத்தார் - (சிவவேடமிருத்தலின் நம்மவரென்று கூறினர் (எ - று.)

அவர்)

ஒரு நாளை யின்பம்—அந்நா ளொன்றினும் நினைத்தது முடித்தோமென்று தருக்கி இருக்கும் பொய்யின்பம். ஆதாரமாகிய உலகம் பொன்றப் புகழும் பொன்றுமாகலின், 'உலகம்' என்னும் தகுதியுடைய சொல் வருவிக்கப்பட்டது. 'நமரென்றுரைத்தார்' என்புழி 'ஒருவரும் ஒரு தீங்குஞ் செய்யலாகா தென்றார்' என்பது குறிப்பு.

கதை :—சேதி நாட்டில் திருக்கோவலூரில் மலையாளி களுக்கு மன்னராய் அரசுபுரிந்த மெய்ப்பொருள் நாயனார் என்பார் சிவனடியார் திருவேடத்தையே, மெய்ப்பொருளெனக் கொண்டு வழிபட்டு வாழுநாளில், பலமுறையும் அவரை எதிர்த்துப் போர் செய்து தோற்ற முத்திநாத னென்னும் ஓரரசன் வஞ்சனையால் அவரை வெல்லக் கருதிச் சிவசின்னங்கள் தாங்கி உடைவாளைப் புத்தகக் கவளியின் மறைத்துக் கட்டித் தவவேடத்தோடு அவர் அரண்மனை புகுந்து ஏனைய வாயில்களையெல்லாம் எளிதிற் கடந்துசென்று அந்தப்புர வாயில் காப்போனான தத்தன் தடுப்பவும் நாயனார்க்கு ஞானோபதேசஞ் செய்யப் போந்ததாகக் கூறி யுட்சென்று நாயனார் கட்டிலிற் றூங்கவும் அவர் திருத்தேவியார் பக்கத்திலிருப்பவுங் கண்டு அருகணையத் தேவியார் நாயனாரைத் துயிலுணர்த்த அவர் விரைந்தெழுந்து எதிரே வீழ்ந்து வணங்கினார். பொய்வேடத்தனாகிய முத்திநாதன் தான் ஞானோபதேசஞ் செய்யவந்தமையால் தேவியாரும் வேற்றிடஞ் செல்ல நாயனாரும் தானுமே அங்கிருக்க வேண்டுமென்ன நாயனாரும் தேவியாரை வேற்றிடஞ் செலுத்தி வஞ்சனை ஓர் ஆசனத்திருத்தித் தாம் எதிரில் வணங்கி நிற்ப, அப்பாதகன் புத்தகம் எடுப்பது போல உடைவாளை எடுத்துத் தன் எண்ண முடித்தான். நடந்த வற்றை யெல்லாம் கருத்தொடு பார்த்திருந்த தத்தன் ஒரு கணப் பொழுதினுள் வந்து தன் வாளை ஓச்ச, பூமியில் வீழ்கின்ற நாயனார், 'தத்தா! நமர்' என்று தடுத்து வீழ்ந்தார். நாயனார்

பணியை மேற்கொண்டு தத்தன் அவனை அழைத்து வெளிச் சென்று அவன் செய்கை யறிந்து அவனைக் கொல்லச் சூழ்ந்த
வர்களை எல்லாம் விலக்கி அந்நகர் எல்லை யளவும் உடன் சென்று வழிவிட்டு மீண்டு வந்து 'சிவனடியாரை இடையூறின்றி நகர்ப் புறத்து விட்டனன்' என்று சொல்லும் வரை உயிர்தாங்கி இருந்த நாயனுர் 'திருநீற்றன்பு பாதுகாத் தளிப்பீர்' என்று மந்திரி முதலியவர்களுக்கு உரைத்துச் சிவனடி நீழலடைந்தார். (கசு)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## கஎ-ஆம் அதிகாரம்
# அழுக்காறுமை

அன்பரைக் கண்டழுக்கா றுஞ்சமணர் தம்வாயாற்
றுன்பமுற்றார் வெங்கழுவிற் சோமேசா—வன்பாம்
அழுக்கா றுடையார்க் கதுசாலு மொன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

இதனுள் அழுக்காறென்பது ஒரு சொல்லென மேலே உரைத்தோம். அச் சொல் பின் அழுக்காற்றைச் செய்யாமை என்னும் பொருள்பட எதிர்மறை ஆகாரமும் மை விகுதியும் பெற்று அழுக்காறுமை என நின்றது.

கஎ. (இ - ள்.) சோமேசா - !

வன்பாம் - கடுமை
யாகிய, அழுக்காறு - பொறாமை, ஒன்னார் வழுக்கியும் - பகைவரை ஒழிந்தும், கேடு ஈன்பது - கேடு பயப்ப தொன்று (ஆகலின்), உடையார்க்கு - அப் பொறாமை

யுடையார்க்கு, அது சாலும் - (கேடு பயப்பதற்குப் பகைவர் வேண்டா) அதுதானே அமையும் ,-(அதற்கு எடுத்துக் காட்டு,) அன்பரை - ஸ்ரீஞானசம்பந்தப் பிள்ளையாரை, கண்டு-பார்த்து, அழுக்காறு ஆம்-பொறாமைகொண்ட, சமணர் - ஜைனர்கள் , தம் வாயால் - தமது வார்த்தை யால், வெம் கழுவில் - கொடிய கழுவினிடத்தே, துன்பம் உற்றார் - துன்பமடைந்தார்கள் (எ - று.)



அது—பிரிநிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது. ஆகுபெயர்.

வரிய—

கதை: பாண்டி நாட்டைச் சமணக்காடு மூடவே, கூன் பாண்டியனும் அவ்வழிப்பட்டான். அவன் மனைவியாகிய மங்கையர்க்கரசியாரும், மந்திரியாகிய குலச்சிறையாரும் மனமிக வருந்தி என்று பாண்டியன் நல்வழிப்படுவனென் றிருக்குங்கால், ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளிய தறிந்து அவ் விருவரும் விடுத்த ஓலை தாங்கிச்சென்ற ஏவலாளர்கள் அங்குச்சென்று மதுரைக்கு வரவேண்டுமெனக் குறையிரந்தமையான், பிள்ளையார் அவர்க்கு விடைதந்து பின்னர்த் தாமும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு மதுரை அடைந்தார். அச் செய்தி யுணர்ந்த சமண முனிவர்கள் அவர் தங்கின மடத்தில் இராப்போது தீயிடப் பிள்ளையார் அத்தீ, "பையவே சென்று பாண்டியற் காகவே" என்று பணித்தார். அத் தழல் பாண்டியனைச் சுரநோயாகப் பற்றியது; அவன் அதன் கொடுமை யாற்றாது துடித்தான். சமணர்கள் செய்த பரிகாரங்களெல்லாம் நோயை வளர்த்தன. பின் மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் பிள்ளையாரை வருவிக்க அவர் சுரநோயைத் தீர்த்தருளினார். அதன் பின்னும் சமணர்கள் பிள்ளையாரை வாதுக்கு அழைத்து அனல்வாதம், புனல்வாதங்களில் தோற்றுத் தாம் முன்னர்க் கூறியவாறே கழுவேறினார்கள். (கஎ)

[இது திருத்தொண்டர் புராணத்தும் பிறுண்டு முளது.]

---

## கஅ-ஆம் அதிகாரம்

# வெஃகாமை

தின்னபிடே கப்பழத்தை நீண்மறையோர்க்
கீந்தவிறை துன்னுகுடி யோடழிந்தான்
சோமேசா—பன்னில் நடுவின்றி நன்பொருள்
வெஃகிற் குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்.

அஃதாவது பிறர்க்குரிய பொருளை வெளவக் கருதாமை.

கஅ. (இ - ள்) சோமேசா - ! பன்னில் - ஆராயு மிடத்து, நடுவு இன்றி - 'பிறர்க்குரியனவற்றைக் கொள்ளு

சோமேசர் முதுமொழி வெண்பா

௩௩

தல் நமக்கு அறம் அன்று' என்னும் நடுவு நிலைமையின்றி, நன் பொருள் - (அவர்) நன்பொருளை, வெஃகின் - (ஒரு வன்) வெளவக் கருதுமாயின், குடிபொன்றி-(அச்செய்கை அவன்) குடியைக்

களையும், ஆங்கே

கெடச்செய்து, குற்றமும்-பல குற்றங் தரும் - அப்பொழுதே (அவனுக்குக்)

கொடுக்கும், - (அதற்கு எடுத்துக்காட்டு) - டேகப் பழத்தை - உனது அபிஷேகத்திற்கு

நின் அபி உரியவான

(வாழைப்) பழத்தை, நீள் மறையோர்க்கு - மிக்க அந்த ணர்க்கு, ஈந்த இறை - கொடுத்த அரசன், தன்னு குடி யோடு அழிந்தான் - பொருந்திய தனது குடியோடு அழி

வடைந்தான் (எ - று.)

அவர் குடியை வளரச்செய்து அவர்க்குப் பல நன்மையுந் தருந் தன்மைபற்றி 'நன்பொருள்' என்றார். 'பொன்ற' வென்பது பொன்றியெனத் திரிந்துநின்றது; செய்தெனன்பது சொல்லெச்சம் என்றிலக்கண முரைத்தார் ஆசிரியர் பரிமேலழகர். 'பொன்றி' என்பது 'பொன்றுவித்து' என்னும் பிறவினைப் பொருளில் வந்த தன்வினை யென்பது இலகு என்பர் பின்னோர்.

கதை :—விதாதா என்னும் அங்கநாட் டரசனொருவன் அசித்தன் என்னும் புரோகிதன் சொற்படி நடந்து செங்கோல் செலுத்துநாளில், ஒருநாள் நாரதமுனிவர் அங்கு எழுந்தருளி அரசனை நோக்கி, "உன் தந்தை இந்திரபதவிபெற் றினிது வாழ் கின்றான்; உன்னை அறநெறிவழாது நடக்க வேண்டினான்" எனவும், அசித்தனை நோக்கி, 'உன் தந்தை நரகின் வருந்துகின்றான். தான் தேடிய நிதியைப் புதைத்து வைத்த இடம் உனக்குச் சொல்லா திருந்தான் அது தூணடியின் உளதாம். அதனை எடுத்துத் தானஞ் செய்யச்சொன்னான்' எனவுங் கூறிப்போயினார். அவ்வாறே அரசன் பல் அறம் புரிந்துநிற்ப, அசித்தனும் அந் நிதியைத் தூணடியினின்றும் எடுத்துக் கோதானம், பூதானம், ஸ்வர்ண தானம், கன்னிகாதானம் முதலிய செய்தான். அசித்தன் தந்தையும் நரகத்தின் நீங்கிச் சுவர்க்கம் அடைந்தான். இந் நிலையில் அரசனும் அசித்தனும் விந்தியமலை சென்றார்கள். அங்குள்ள திவ்ய நதி தீரத்தில் பிராமண போசனம் செய்விக்க ஆசை கொண்டு பல பண்டங்களையும் வருவித்தார்கள். வாழைப்பழமொன்றுமே கிடைத்திலது. பிராமணர்கள் வாழைப்பழமின்றி உண்ணோமென்ன, அரசன் வீமேச்சுரத்தில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் பெருமானுக்கென விடப்பட்ட தோட்ட மொன்றில் வாழைக்கனிகள் வேண்டியவளவு இருப்பதனை ஓர்

சோ—3

அந்தணன் சொல்லக் கேட்டறிந்து அங்குள்ள குலைகளைத் திருக்கோயி லதிகாரிகள் கருத்திற்கு மாறுபட்டுக் கொணர்ந்து பரிமாறினன். இதனுல் தேவராசனுயிருந்த அவன் தந்தை நிரயம் புக்கான்; அவனும் இறந்தபின் நிரயத் தழுந்தினன்; இக் காரியத்தின் இயைபுடைய யாவரும் நிரயத்திற் பயிர்போல வளர்ந்தார்கள். (கஅ)

[இஃது உபதேசகாண்டத் துளது.]

---

## கக-ஆம் அதிகாரம்

# புறங்கூறுமை

கூனியிரா மன்பிரிந்து போமாறே கூறினளே
ஆகறும்பூங் கொன்றையணி சோமேசா—தானே
பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாட றேற்று தவர்.

அஃதாவது காணுதவழிப் பிறரை
இகழ்ந்துரையாமை.

கசு. (இ - ள்.) தூ நறு கொன்றை பூ அணி-சுத்த மான நல்ல அழகிய கொன்றை மாலையைத் தரிக்கின்ற சோமேசா-! பக சொல்லி - தம்மைவிட்டு நீங்கும்படி புறங்கூறி, கேளிர் பிரிப்பர் - தமது உற்றாரையும் பிரியப் பண்ணுவர்; நக சொல்லி நட்பு ஆடல் தேற்றுதவர் - கூடி மகிழும்படி இனிய சொற்களைச் சொல்லி அயலா ரோடு நட்புக்கொள்ளுதலை அறியாதார், - (அதற்கு எடுத் துக்காட்டு) - கூனி - மந்தரை என்னும் கூனி, தானே - (வேறொருவர் தூண்டலின்றித்) தானே, இராமன் - இராம பிரான், பிரிந்துபோமாறு - (உற்றார் நட்டார் முதலிய யாவரையும் விட்டுப்) பிரிந்து போகும்படி, கூறினாள் - (கைகேசிக்குச்) சொன்னாள் (எ - று.)

சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. கேளிரையும் பிரிப்பர் என்ற கருத்தான், 'அயலாரோடு' என்பது வருவித் துரைக்கப் பட்டது. அறிதல்—தமக்கு உறுதியென்றறிதல். தன் வினை பிற

## சோமேசர் முதுமொழி வெண்பா

கஉ

வினைகட்குப் பொதுவினையாகிய 'தேற்றாமை' ஈண்டுத் தன் வினையாய் நின்றது; 'கடியுமிடந்தேற்றாள் சோர்ந்தனள் கை' என்னுங் கலித்தொகை யடியினும் அஃது அவ்வாறு நிற்றல் காண்க. இராமன்—(வடிவு குண முதலியவற்றான் யாவரையும்) இரமிக்கச் செய்பவன் என்பது சப்தார்த்தம். ஏகாரங்களின் முத லது தேற்றமும் இடையது குறிப்பும் கடையது பிரிநிலையுமாம்.

கதை :—இரகுகுலோத்தமனுன இராமபிராற்குப் பட்டாபிஷேக முயற்சிகள் நடக்கையில், சிறுபோதில் விற்கொண்டெய்த உண்டை தற்செயலாய்த் தன் கூனின் மேற்பட வருந்திய மந்தரை என்னும் கைகேசியின் பணிப்பெண் அதனைத் தடுக்கத் துணிந்து, கௌசலை மகனுகிய இராமனிடத்தும் தன் மகனுகிய பரதனிடத்தும் வேற்றுமை நினையாத கைகேசியின் கொள்கையைத் தன் சொல் வன்மையின் மாற்றி இராமனைப் பதினன்கு வருஷம் காட்டிற்குச்செல்ல ஏவிப் பரதனுக்கு முடி சூட்டும்படி கற்பித்தாள். (கக)

[இஃது இராமாயணத் துளதென்பது வெளிப்படை.]

---

## ௨0-ஆம் அதிகாரம்

# பயனில சொல்லாமை

சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதெனவே
தூக்கியுப தேசித்தார் சோமேசா—நோக்கிற்
பயனில்சொற் பாராட்டு வானை மகனெனல்
மக்கட் பதடி யெனல்.

அஃதாவது தமக்கும் பிறர்க்கும் அறம், பொருள், இன்பங் களாகிய பயன்களுள் ஒன்றும் பயவாத சொற்களைச் சொல் லாமை. பொய், குறளை, கடுஞ்சொல், பயனில்சொல் என வாக்கின்கண் நிகழும் பாவ நான்கனுள் இஃதொன் றென்க.

௨0. (இ-ள்.) சோமேசா - ! நோக்கின் -

ஆராயின், பயன் இல் சொல் பாராட்டுவானை - பயனில்லாத சொற் களைப் பலகாலும் சொல்லுவானை, மகன் எனல் - மக னென்று சொல்லற்க, மக்கள் பதடி எனல் - மக்களுட் பத ரென்று சொல்லுக, - (அதற்கு எடுத்துக்காட்டு) - சேக் கிழார் - சேக்கிழார் நாயனர், தூக்கி - ஆராய்ந்து, சிந்தா கூகூ சோமேசர் முதுமொழி வெண்பா

மணி பயிற்சி தீது ஏ என - சீவக சிந்தாமணி என்னும் நூலிற் பழகுதல் கெடுதியேயென்று, உபதேசித்தார் - இதோபதேசஞ் செய்தார் (எ-று.)

'அல்' என்னும் வியங்கோள் விகுதி முன் எதிர்மறையி லும், பின் உடன்பாட்டிலும் வந்தது. அறிவாகிய உள்ளீடு (பொருள்) இன்மையின் மக்கட் பதடி' என்ருர். பிரிநிலை ஏகா ரம் பிரித்துக் கூட்டப்பட்ட தென்க.

கதை :—தொண்டை நாட்டில் குன்றத்தூரில் வேளாள மர பில் அவதரித்த சேக்கிழார் நாயனருடைய அறிவு ஆற்றல் முதலி யன பலர் சொல்லக்கேட்ட அநபாயன் என்னுஞ் சோழன் அவரை வரவழைத்து அவர் திறத்தைத் தான் நேரே அறிந்து அமைச்சராக்கினன். அந் நாளில், சீவக சிந்தாமணி என்னும் சமண நூலைப் பலரும் ஆதாரத்துடன் கற்ருர்கள். அரசவைக்கு வந்த சிலர் சிந்தாமணிப் பாக்களிற் சில எடுத்துக்கூறி அவற் றின்கண் நயங்களையும் கூறினர்கள். அதுகேட்டிருந்த சேக் கிழார் பெருமான் 'அந்நூற்கதை அவகதையாய் முடிதலின், அதனைக் கற்றலாகாது; சிவகதைகள் எத்தனையோ உள; அவற்றைக் கற்பின் இம்மை, மறுமைப் பயன் பெரிதுண்' டென்ருர். அநபாயன், 'அங்ஙன்மாயிற் சிவகதைகளிற் சில

கூறுக' என்றான். சேக்கிழார் பெருமான் நாயன்மார் கதைகளிற் சிலவற்றையும் அவற்றின் வரலாற்று முறைமையையுங் கூறவே, கேட்டு வியந்த சோழன் திருத்தொண்டர்புராணம் பாடும்படி வேண்டச் சிதம்பரத்திலிருந்து ஓராண்டின் முடித்து அரங்கேற்றினர். (உ0)

[இது சேக்கிழார்புராணத் துளது.]

---

## உக-ஆம் அதிகாரம்
# தீவினையச்சம்

குற்றொருவர்க் கூறைகொண்டு கொன்றதிம்மை
யேகூடல் சொற்றதுகை கண்டோமே சோமே
சா—வற்றான் மறந்தும் பிறன்கேடு சூழற்க சூழின்
அறஞ்சூழுஞ் சூழ்ந்தவன் கேடு.

அஃதாவது பாவங்களாயின செய்தற்கு அஞ்சுதல்.

சோமேசர் முதுமொழி வெண்பா

கஎ

உக. (இ - ள்.) சோமேசா—! கூறைகொண்டு - துணிமூடையைக் கவர்ந்துகொண்டு, ஒருவரை குற்று கொன்றது - ஒருவரைக் குத்திக் கொன்றதன் பயன், இம்மையே கூடல் - இப்பிறப்பிலேயே வந்தடைதலை, சொற்றது - (ஆசாரிய சுவாமிகள்) அருளிச்செய்தது, கை கண்டோம் - லோகாநுபவத்தின் (உண்மையெனக்) கண்டோம், அற்றான் - ஆனபடியால், பிறன் கேடு மறந்தும்

சூழற்க - (ஒருவன்) பிறனுக்குக் கேடு பயக்கும் வினையை மறந்தும் எண்ணற்தொழிக, சூழின் - எண்ணுவானாயின், சூழ்ந்தவன்கேடு அறம் சூழும் - (அவ்வாறு எண்ணிய) தனக்குக் கேடு பயக்கும் வினையை அறக்கடவுள் எண்ணும் (எ - று.)

கேடென்பன ஆகுபெயர். சூழ்கின்ற பொழுதே தானும் உடன் சூழ்தலின், இவன் பிற்படினும் அறக்கடவுள் முற்படுமென்பது பெறப்பட்டது. அறக்கடவு ளெண்ணுதலாவது அவன் கெடத் தான் நீங்க நினைத்தல்' தீவினை எண்ணலும் ஆகாது என்பதாம். கொன்றது—ஆகுபெயர். ஏகாரம் பிரிநிலை. சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்புறம்பயத்தி லருளிச்செய்த திருப்பதிகத்தில் 'குற்றொருவரைக் கூறை கொண்டு கொலைகள் சூழ்ந்த களவெலாஞ், செற்றொருவரைச் செய்த தீமைகளிம்மையேவருந் திண்ணமே' எனப் பணித்தமை காண்க. இங்ஙனம் பொருள் கூறின் கதை இன்றாம்; ஆயின் என்? "ஓதாநா ளோதுகலை யொத்தினைத்தாள் சீதை யென்றான், சூதாரர் வான்மீகி சோமேசா" என்புழிப் போல, மற்றுஞ் சில பாக்களினுங் கதை இன்றாதல் உற்றறிக. இனி, இம்மையே கூடச் சொற்றது' எனப் பாடமோதித் தன்னைக் கொல்லவந்த கள்வன் அப்போதே இறக்கும்படி வெகுண்டு கூறின சாதிதருமந் தவறுதவளும் சிவபக்தியிற் சிறந்தவளுமான திருப்புறம்பயம் என்னுந் திருப்பதியில் வாழ்ந்த வசந்ததிலகை என்னும் வேசைமாதின் கதையைப் பொருத்திப் 'புறம்பயத்து மின்னையுயிர் போக்கவந்தான் பட்ட, திறந்தெரி யாதோ சிவசிவா' என்னும் வெண்பாவை மேற்கோள் காட்டுப ஒரு சிலர். கதை தெரித்தற்கு உரிப்பெயரேனும் பரியாயப் பெயரேனும் பிறகுறிப்பேனுங் காணப்படாமையாற் கதை யாண்டையதென விடுத்தொழிக்க.' கைகண்டோமே' என்னுஞ் சொற் பிரயோகமுங் கதை யுண்டெனற்குப் பாதகமேயாம். (உக)

## உஉ-ஆம் அதிகாரம்
# ஒப்புரவறிதல்

*பண்டைவினை வெண்ணிகொந்தார் பாகஞ்செய்*
*மாறநாந் தொண்டர் மனைவியார்*
*சோமேசா—கண்டோ நயனுடையா னல்கூர்ந்தா*
*ஞுதல் செயுநீர*
*செய்யா தமைகலா வாறு'*

அஃதாவது உலக நடையினை அறிந்து செய்தல். உலக நடை வேத நடைபோல அற நூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யுந் தன்மைத் தாகலின், ' ஒப்புர வறிதல் ' என்றார். ஒப்புரவு—உபகாரம்; ஒப்பு உரவு எனப் பிரிந்து உலகத்தாரொடு ஒத்துச் செய்யும் வன்மை எனப் பொருள் படுமென்ப.

உஉ. (இ-ள்.) சோமேசா-! நயன் உடையான் நல் கூர்ந்தான் ஆதல் - ஒப்புரவு செய்தலை யுடையான் வறிய ஞுதலாவது, செயும் நீர - தவிராது செய்யுந் தன்மைய வான அவ் வொப்புரவுகளை, செய்யாது அமைகலா ஆறு - செய்யப்பெறாது வருந்துகின்ற இயல்பாம், (என்னும்

உண்மையைக்) கண்டோம் - அறிந்தோம், - பாகம் செய்- (வறுமை நிலையில் சிவனடியாரைத் திருவமுது செய்வித்

தற்குச்) சமையல்
யார் - இளையான்

செய்த- மாறர் ஆம் தொண்டர் மனைவி
குடிமாற நாயனா ரென்கிற அடியாரது
மனைவியார், பண்டை நினைவு எண்ணி நொந்தார்
- முன்னைய செல்வ நிலையின் ஞாபகத்தான்
(இப்போதைக் குறையை) எண்ணி வருந்தினர் (எ -
று.)

தான் அனுபவிப்பனவற்றை அனுபவிக்கப்

பெருமை வறிய
நுதல் அன்றென்பதாம். 'பாகஞ் செய் மனைவியார்' என முடிபு செய்க. நயன்—நயம் என்பதன சுற்றுப்போலி. நல்கூர்ந்தான் என்புழி, நல்குஊர் என்னும் இரண்டு வினைப்பகுதிகள் தொடர்ந்து நின்று நல்கூர் என ஒரு சொல் தன்மைப்பட்டு
'(பிறர்) நல்குதலால் உயிர் வாழ்தல்' எனப் பொருள் கருத லறிக. 'மாறர்' என்னுஞ் சொற்குக் (காமாதிகளுக்குப்) பகைவர்' எனப் பொருள் விரிப்ப.

கதை :—இளையான்குடி என்னும் ஊரில் வேளாள மரபிற் பிறந்த மாற நாயனார் அடியார்களுக்கு அமுது செய்வித்து வரு நாளில், சிவபெருமான் அவருக்கு வறுமை தர, உள்ளன விற்றும் கடன் கொண்டுந் தமது திருப்பணியை விடாது செய்து வந்தார். ஒருநாள் ஒன்றும் பெறக்கூடாமையால் நாயனாரும் அவர் மனைவி யாரும் பகல் முழுதும் போசன மின்றிப் பசித்துப் பட்டினி விட்டு வருந்துகையில், சிவபெருமான் ஓ ரடியார்போல இரவில் எழுந்தருள, நாயனார் அவரை அன்போடு வரவேற்று ஆசனத் திருத்தித் தம் மனைவியாரோடு யாது செய்வதென யோசிக்க, அவர் உரைத்தபடியே அவ் விரவில் மழையில் நனைந்து இருளின் வழிநடந்து அன்று வயலில் விதைத்த முளைகளை வாரிவந்து விற கிற்குக் கூரையிலுள்ள வரிச்சல்களை அறுத்து வீழ்த்திக் கறிக் குப் புறக்கடையிலுள்ள குழி நிரம்பாத புன்செய்ப் பயிர்களைக் கொணர, அவற்றைக்கொண்டு அம்மையார் தம் கை வன்மை யால் கறிவகைகளோடு அமுது அமைக்க, உறங்கினாற்போல நடித்த பெருமான் அருகிற்சென்று நாயனார் அமுது செய்தற்கு அழைக்க மறைந்து சோதி வடிவாய்த் தோன்றிப் பார்வதி சமேதராய் இடபாரூடராய்க் காட்சிதந்து இருவருக்குஞ் சிவபதம் அருளினார். (உஉ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## உ௩-ஆம் அதிகாரம்

### ஈகை

மீஎன் றுரைப்பளவு மிக்குவகை பெற்றிலர்வன்
றேஎள றியற்பகையார் சோமேசா—நீனுலகில் இன்னா
திரக்கப் படுத லிரந்தவ
ரின்முகங் காணு மளவு.

அஃதாவது வறியராய் ஏற்றூர்க்கு மாறுக ஒன்றும் கொடுத்தல்.

பெறுது

௫௩. (இ - ள்) சோமேசா ! நீள் உலகில் - இவ் வகன்ற உலகின்கண், இரக்கப்படுதல் இன்னுது - (இரத் தலேயன்றி) இரக்கப்படுதலும் இனிதன்று, இரந்தவர் இன் முகம் - (ஒரு பொருளே) இரந்தவர் (அதனைப் ருல்) இனிதாகிய அவர் முகத்தை, காணும்

பெற்றத

அளவு — ௬௦ சோமேசர் முதுமொழி வெண்பா

காணும் அளவும், - (அதற்கு எடுத்துக் காட்டு)-வன்தோள் இயற்பகையார் - வலிய தோள்களேயுடைய இயற்பகை நாயனுர், மிக்கு உவகைபெற்றிலர் - மிக்க மகிழ்ச்சியைப் பெற்றூரில்லே, மீள் என்று உரைப்பளவும் - (தமது மனைவி யைக்கொண்ட அடியார்) "மீள்க" என்று சொல்லு மளவும் (எ - று).

எச்சவும்மையும் முற்றும்மையும் விகாரத்தாற்ருெக்கன. இரக்கப்படுதலாவது இரப்பார்க்குக் கொடுப்பனென்றிருத்தல். அதனை 'இன்னுது'என்றது "எல்லா மிரப்பார்க் கொன்றீயாமை" கூடுமோ என்னும் அச்சம் நோக்கி. மிக்குவகை என்புழி அகரம் தொக்கதென்க. இயற்பகையார்—(அடியார்க்குத் தமது மனைவி யைத் தந்து) உலகியலைப் பகைத்தார்.

கதை:—சோழநாட்டில், காவிரிப்பூம்பட்டினத்தில் வணிகர் குலத்தில் அவதரித்த இயற்பகை நாயனார் சிவனடியார் திறத்து அன்பு பூண்டு அவர் வேண்டின யாவும் பரிந்தளித்து வந்தார். பெருமான் அவர் திருத்தொண்டின் பெருமையை உலகர்க்கு உணர்த்த வேண்டி ஒரு தூர்த்த வேதியராய்த் திருவுருக் கொண்டு வந்து உபசரிக்கப்பெற்று, 'அன்ப! கேட்பது தருவாயோ?' என்றார் அதற்கு நாயனார், 'என்னிடத்துளதாயின் அஃது உமதே' என, 'உன் மனைவியை விரும்பி வந்தேன்' என்றார். அதுகேட்டு மகிழ்ந்து மனைவியாரை அவருக்குத் தர, மனைவியாரும் அவருடன் செல்ல இசைந்தார். அதன்பின், நாயனார் 'இனி யான் செய்யுங் குற்றேவல் ஏதேனும் உளதோ?' என்ன, அதற்குப் பெருமான் 'நீ எனக்கு வழித்துணையாக வர வேண்டும்' என்றார். அது யான் ஏவாமலே செய்யக் கடவது அன்றோ! என்று கூறி அவர்களுடன் சென்றார். உறவினர்கள் இதனை யறிந்து வழிமறித்தார்கள். அவர்களை எதிர்த்து வாளால் வீசிக் கொன்று திருச்சாய்க்காடு என்னும் திருப்பதியை அணையுங்காற் பெருமான் "வீட்டிற்கு மீள்க" என, நாயனார் பணிந்து மனைவியாரிடம் பற்றொன்று மின்றித் திரும்பியும் பாராது செல்வதறிந்து "இயற்பகை முனிவா! ஓலம்" என்று உரத்துக் கூற, யாவர் எதிர்த்தார்களோ வென்று விரைந்தோடி வந்தார். பெருமானைக் கண்டிலர், மனைவியாரையே கண்டனர். பெருமான் அவ் விருவருக்குங் காட்சி கொடுத்துக் கதி அருளினார். (உகூ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது].

---

## உச-ஆம் அதிகாரம்

# புகழ்

போசன் கவிஞருக்கே போதப் பரிந்தளித்துத்
தூசிலாக் கீர்த்திகொண்டான்

சோமேசா—வாசையுடன் ஈத லிசைபட வாழ்த
லதுவல்ல
தூ தியமில்லை யுயிர்க்கு

அஃதாவது இல்லறத்தின் வழுவாதார்க்கு இம்மைப்பயனுகி இவ் வுலகின்கண் நிகழ்ந்து இறவாது நிற்குங் கீர்த்தி.

உச. (இ-ள்) சோமேசா - !
துடன், ஈதல் - (வறியார்க்கு) ஈக,

ஆசையுடன் - ஆதரத்
இசைபட வாழ்தல் -
(அதனுற்) புகழுண்டாக வாழ்க, அது அல்லது - அப் புகழல்லது, உயிர்க்கு ஊதியம் இல்லை-மக்களுயிர்க்குப் பயன் வேறொன்றில்லை யாகலான், - (அதற்கு எடுத்துக்காட்டு) போசன் - போசராசன், கவிஞருக்கே பரிந்து போத அளித்து - பாவலர்க்கே ஆசைகொண்டு மிகக் கொடுத்து, தூசுஇலா கீர்த்திகொண்டான் - குற்ற மற்ற புகழைப் பெற்றான் (எ - று.)

இசைபட வாழ்தற்குக் கல்வி, ஆண்மை முதலிய வேறு காரணங்களும் உண்டெனினும் "உணவின் பிண்ட முண்டி முதற்று" ஆதலின், ஈதல் சிறந்ததென்பதற்கு ஞாபகமாக 'ஈதல்' என்றார்.

'உயிர்க்கு' என்பது ஈதலும் இசைபட வாழ்தலும் குயிர்கட்கு ஏலாமையின், மக்களுயிர்மேனின்றது. விலங் கிலை. 'போத அளித்து' எனக்கூட்டுக

ஏகாரம் பிரி

கதை:—மாளவதேயத்து இராசதானியாகிய தாரா நகரத்தி லிருந்து கொண்டு கௌடதேயத்தொடு கூடிய தென்தேசங்களை யும் ஆண்ட போஜன் என்னும் அரசன் தன்னை அடுத்த கவிநவ
ரத்நமெனப்பெறுங் காளிதாசன் முதலிய ஒன்பதின்மருக்கும் பிற வடமொழிப் புலவர்களுக்கும் மிக்க பொருள் வழங்கி அவர் களாற் புகழப்பெற்று வாழ்ந்தான். சிலர் கூறிய அரிய கவி

களைக் கேட்டு வியந்து அக்ஷரத்திற்கு லக்ஷம்பொன் வீதம் பரி சளித்தா னென்றால் இவன் கொடையையும் அதனால் இவன் பெற்ற புகழையும் பற்றிக் கூறவும் வேண்டுமோ! (உக)

---

## உரு-ஆம் அதிகாரம்

# அருளுடைமை

மூர்த்திபால் வன்கண்மை மூண்ட வடுகரசன்
சூர்த்திறந்தா னுய்ந்தானே சோமேசா—கூர்த்த
பொருளற்றார் பூப்ப ரொருகா லருளற்றா
ரற்றார்மற் றாத லரிது.

அஃதாவது ஓரியைபுமின்றி இயல்பாகவே எல்லா மேலுஞ் செல்வதாகிய கருணை.

வுயிர்கண்

உரு. (இ - ள்.) சோமேசா - !கூர்த்தபொருள் அற்றார் ஒருகால் பூப்பர் - (ஊழான்) மிக்க பொருளை இழந்து வறியராயினார் (அவ்வறுமை நீங்கிப் பின்) ஒரு காலத்திற் செல்வத்தாற் பொலிவர், அருள் அற்றார் அற்றார் - (அவ்வாறன்றி) அருளிலாதார் (பாவம் அருமையின்) அழிந்தாரே, மற்று ஆதல் அரிது - பின்னொரு காலத்தும் (அருளுடையர்) ஆதலில்லை, - (அதற்கு எடுத்துக்காட்டு) - மூர்த்தி பால் - மூர்த்தி நாயனாரிடத்தே, வன்கண்மை மூண்டவடுகுஅரசன் -
கூர் திறத்தான் - (தன்)

பகைமை மிக்க வடுக மன்னன்,
வீரத்தன்மையால்) உய்ந்தானோ -
பிழைத்தானோ, இல்லை (எ - று.)

மற்று - வினைமாற்றின்கண் வந்தது. அருமை - ஈண்டு இன்மை குறித்து நின்றது. ஓகாரம்—எதிர்மறை.

கதை:—பாண்டிநாட்டில் மதுரைமாநகரில் வணிகர்குலத்தில் அவதரித்த மூர்த்தி நாயனார் மிக்க அன்போடு சுந்தரேசப் பெருமானுக்குச் சந்தனக்காப்பணியும் திருத்தொண்டு வழாது புரிந்து வருநாளில், வடுக மன்னனொருவன் பாண்டியனை எதிர்த்துப் போர்செய்து வெற்றிபெற்று அந் நாட்டிற்கு அரசனாயினான். அவன் சமணமதத்தைச் சார்ந்தவனாகலின் நாயனார் திருப்பணி ஒன்றுனும் முட்டுப்படாது நடத்தலைக்கண்டு பொறாமை கொண்டு சந்தனக்கட்டை எங்கும் அவர்க்கு அகப்படாவாறு செய்தான். அன்று நாயனார் கோயில் புக்குச் 'சந்தனக்கட்டைக்கு முட்டுவந்ததேனும், என் கைக்கு முட்டுவந்த தில்லையே' என்று தமது முழங்கையைச் சந்தனக்கல்லின்மேல் தேய்க்கப் பெருமான் பொறாது " அன்ப! நிற்க. நானே நீ இந்நாட்டரசைப்

பெறுவாய்'' என்று அசரீரியாய்த் தெரிவிக்க நின்றார். அன்றிரவே அக் கொடிய மன்னன் இறந்து பட்டனன். அவனுக்கு மகப்பேறின்மையால் பட்டயானையை அலங்கரித்து விட அது திருக்கோயிலில் ஒருபுற மிருந்த நாயனாரை எடுத்துத் தன் முதுகின்மேல் வைத்துக்கொள்ள மந்திரி முதலியோர் அவரைப் பணிந்து அழைத்துச் சென்று முடிசூட்டினார்கள். (உடு)

[இது திருத்தொண்டர் புராணத் துளது]

---

உசு - ஆம் அதிகாரம்

## புலான் மறுத்தல்

மச்சஞ் சுமந்துய்ப்ப வானோர்ப் பணிகொண்டான்
றுச்சனுஞ் சூரபன்மன் சோமேசா—நிச்சயமே
தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பா
னெங்ஙன மாளு மருள்.

அஃதாவது ஊன் உண்ணுதலை ஒழிதல்.

உக. (இ - ள்.) சோமேசா—! தன் ஊன் பெருக்கற்கு - தன் உடம்பினை வீக்குதற்கு, தான் பிறிது ஊன் உண்பான் - தான் பிறிதோருயிரின் உடம்பைத் தின்பவன், நிச்சயமே - உண்மையாகவே, எங்ஙனம் ஆளும்

அருள் -
எப்படி நன்றாக நடத்தும் அருளினை,—(அதற்கு எடுத்துக் காட்டு) - துச்சன் ஆம் சூரபன்மன் - இழிந்தோனாகிய சூரபதமா என்னும் அசுரன், மச்சம் சுமந்து உய்ப்ப - மீன்களைச் சுமந்துகொண்டு வந்து தரவும், வானோர் பணிகொண்டான் - (சுத்தர்களாகிய) தேவர்களை ஏவினான் (எ - று.)

பயனில்லாத ஊன் பெருக்கலைப் பயனெனக் கருதி இக் கொடுமை செய்வானை அறிவிலாத கொடியோன் என்றவா
றாயிற்று. 'எங்ஙனம் ஆளும் அருள்' என்பது
னும் பொருள்பட நின்ற இகழ்ச்சிக்குறிப்பு
இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

"ஆளான்" என்
உய்ப்ப - சண்டு

கதை:—அசுரேசனுடைய மகளாகிய மாயை என்பாளிடங் காசிப முனிவ ரருளாற் பிறந்த சூரபத்மன் தனது தாய்மொழி

கொண்டு சிங்கமுகன், தாரகன் என்னுந் தன் தம்பியருடன் வடதிசையிற் புக்குச் சிவபெருமானைக் குறித்து அரியதொரு வேள்வியை நெடுங்காலஞ் செய்தும் அவ் வேள்வித் தீயில் தன் உடற்றசைகளையெல்லாம் அரிந்தரிந்து சொரிந்தும் அப் பெருமான் தோன்றாமையால் ஓம குண்டத்தில் வீழ்ந்து இறப்பப் பெருமான் பார்வதி சமேதராய்த் தோன்றி அவன் உயிர்பெற்றெழும்படி அனுக்கிரகஞ் செய்து ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டு யுகமளவும் ஆள வரமளித்துப் பாசுபதாஸ்திர முதலியனவு முதவிச் சென்றார். சூரபத்மன் வரபல முதலியவற்றான் மயங்கித் தேவர்கள் மீன் சுமத்தன் முதலிய ஏலாத குற்றேவல் களுஞ் செய்ய ஏவி அவர்களை மிக வருத்தம் பொறாத அத் தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்கிச் சிவ குமாரனாய்த் தோன்றிய ஸ்ரீ சுப்பிரமணியக் கடவுளைப் பாலனென எள்ளிப் போரில் எதிர்த்துப் பலவற்றையும் இழந்து முடிவில் தானு மழிந்தான். 'நீள்வா ரிதியி னெடுமீன் பலசுமந்து, தாழ்வாம் பணிபலவுஞ் செய்துந் தளர்ந்துலகில், வாழ்வா மெனவே மதித்திருந்தோ மற்ற தன்றிச், சூழ்வா லொருதீமை சூரபன்ம னுன்னினனே, 'மீனும் வடியும் வியன்றசையுந் தான்சுமந்த, வீன மதுவன்றி யீதோர் பழிசுமக்கின், மான மழிய வருமே யதுவன்றித், தீன முறுசிறையுந் தீராது வந்திடுமே' என்னுங் கந்தபுராணப் பாக்கள் காண்க.

[இது கந்தபுராணத் துளது].

---

## உ௭-ஆம் அதிகாரம்

# தவம்

ஏர்மணநல் லூர்ச்சுடருள் யாருமனு கச்சிலர்தாந்
தூரநெறி நின்றயர்ந்தார் சோமேசா—வோரில்
தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை
யஃதிலார் மேற்கொள் வது.

அஃதாவது மனம் பொறிவழி

விரதங்களான் உண்டி சுருக்கலும்

போகாது நிற்றற்பொருட்டு
கோடைக்கண் வெயில் நிலை
நிற்றலும் மாரியினும் பனியினும் நீர் நிலை நிற்றலும்
முதலிய செய்கைகளை மேற்கொண்டு அவற்றாற் றம்
உயிர்க்கு வருந் துன்பங்களைப் பொறுத்துப்,
பிறவுயிர்களை ஓம்புதல்.

உஎ- (இ-ள்.) சோமேசா-! ஓரில்-ஆராயின் தவமும்-
(பயனையன்றி) தவந்தானும் (உண்டாவது), தவம் உடை



யார்க்கு
அதனை -
ஆகும் - முற்றவமுடையார்க்கே (ஆகலான்),
அத் தவத்தை, அஃது இலார் மேற்கொள்வது
அவம் - அம் முற்றவமில்லாதவர் முயல்வது

பயனில்

முயற்சியாம், - (அதற்கு எடுத்துக்காட்டு) - மண நல்லூர்
ஏர் சுடருள் - ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார் திருமணம்
நடந்த திரு நல்லூரில் தோன்றிய அழகிய சோதியுள்,-

யாரும் அணுக - (அங்கிருந்த) யாவருஞ் சேர, சிலர் தூர நெறி நின்று அயர்ந்தார் - சிலர் தூரவழியில் நின்று (அப்போது சேரப் பெறாது) மனஞ் சோர்ந்தார்கள் (எ - று.)

முற்றவமுடையார் பழக்கத்தால் அறிவும் ஆற்றலுமுடைய ராய் மேற்கொள்ளுந் தவத்தை இனிது முடித்தலின் 'தவமுடையார்க்கு ஆகும்' என்றும், முற்றவமிலாதார் பழக்கமின்மையால் அறிவும் ஆற்றலுமில்லராய் அதனை முடிக்கமாட்டாமையின் 'அவம்' என்றுங் கூறினர். உம்மை எச்சவும்மை என்க.

கதை:—முதியோர்கள் ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையாருக்குத் திருநல்லூரிலுள்ள நம்பாண்டார் நம்பிகளுடைய மகளை மணம் பேசிமுடிக்க முகூர்த்த நாளன்று பிள்ளையாரும் பந்து மித்திராதிகளுடன் திருநல்லூருக்கு எழுந்தருளி மணவினை தொடங்கி ஏனைச் சடங்குகள் முற்றித் தீவலம் வருங்கால் அங்கிருந்த எல்லோருடனுஞ் சிவசாயுச்சியம் பெறத் திருவுளங்கொண்டு திருப்பதிகமோதிய வளவில் ஒரு சோதி தோன்ற அதனுட் பிள்ளையாரும் அவர் மனைவியாரும் ஐக்கியமாகப் பின் யாவரும் அதனுட் கலந்தார்கள். தூரத்தே நின்ற சிலர்க்கு அப்போது வாய்க்கவில்லை; அதனை இழந்து வருந்தினார்கள்.

'கொள்ளைகொள்ள வீடுதவிக் கூற்றைப் பிடர்பிடித்துத்,
தன்னுந் திருஞான சம்பந்தா' என்றும்,
'கட்டைமுட் டழுவுதா ணெட்டிதழு டுத்தசெங்

கமலநான் முகவெகினமுங், கவுத்துவ மணிப்பணியொடம்போரு காடவி'
கவித்தபச் சைப்பன்றியு, மட்டுலவு சீர்பாத மின்றளவு கண்டிலா வானவனு மோரொருவரை, வழிவருஞ் சரிதாதி வருவித்து வீடுதரும் வன்னதமிழ்க் காழிமேவி, யெட்டுணையு மறிவரு மனந்தசீ வரைவதுவை யென்றுபெய ரிட்டழைத்தங், கிரும்புண்ட நீரிற் றிரும்பாத வீடுதரு மினியகவு ணியர்விளக்கே, திட்டமொடு வரமுதவு சமரபுரி முருகவேள் சிறுபறை முழக்கியருளே, செறிகலப மயின்முதுகி னுதயசின் மயதூய சிறுபறை முழக்கியருளே' என்றுங் கூறினர் பிறரும். (உஎ)

---

## உஅ-ஆம் அதிகாரம்

# கூடாவொழுக்கம்

மாயனவ்வே டங்கொண்டே வன்சலந்த ரன்கிழத்தி
தூய நலங்கவர்ந்தான் சோமேசா—வாயின்
வலியி னில்லையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று.

அஃதாவது தாம்விட்ட காமவின்பத்தை வலிமையின்மையின் விரும்புமாறு தோன்ற அவ்வாறே கொண்டு நின்று தவத்தோடு பொருந்தாததாகிய தீயவொழுக்கம்.

உஅ. (இ - ள்.) சோமேசா—! ஆயின் - ஆராயின், வலிஇல் நிலைமையான் வல் உருவம்—(மனத்தைத் தன் வழிப்படுத்தும்) வலியில்லாத இயல்பினையுடையான் வலியுடையோர் வேடத்தைக் கொண்டு தான் அம் மனத்தின் வழிப்படுதல், பெற்றம் - பசு, புலியின் தோல் போர்த்து -(காவலர் கடியாமற்) புலியின் றோலைப் போர்த்து,—மேய்ந்

தற்று - பைங்கூழை) மேய்ந்தாற் போலும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வன் சலந்தரன் கிழத்தி - வலிய சலந்த ராசுரன் மனைவியாகிய பிருந்தையினுடைய, தூயநலம் -

குற்றத்தினீங்கிய இன்பத்தை, மாயன் - திருமால், வேடம் கொண்டே - அச் சலந்தரன் உருவத்தைத் கியே, கவர்ந்தான் - கைக்கொண்டான் (எ - று.)

அவ்

தாங்

'பெற்றம் புலியின் றோல் போர்த்து மேய்ந்தற்று' என்பது இல்பொருளுவமை. இதனை 'அபூத வுவமை' என்ப வடமொழியாளர். 'அவனி யில்லா வன்னதோர் பொருளை, யுவமைசெய் துரைக்கு மபூத வுவமையும்' என்றார் இலக்கண விளக்க முடையார். வலியினிலைமையா னென்னும் அடையானும், மேய்ந்தற் றென்னுந் தொழிலுவமையானும் வல்லுருவத்தோடு மனவழிப் படுதல் என்பது பெற்றும். காவலர் கடியாமை...புலி புல் தின்னு தென்பதனுலும் அச்சத்தாலுமாம்; ஆகவே. வல்லுருவங் கொள்ளுதற்குப் பயன் தவத்தினர் சிற்றின்ப நுகரா ரென்பதனு லும் அருகணைந்தாற் சாப நேருமென்னும் அச்சத்தாலும் உலகத் தார் ஐயப்படாமையாயிற்று. இவ்வாறு தனக்குரிய மனைவியை யும் துறந்து வலியுமின்றிப் பிறர் ஐயப்படாத வல்லுருவமுங்



கொண்டு நின்றவன் மனவழிப்படுதலாவது தன் மனம் ஓடிய வழியே ஓடி மறைந்து பிறர்க்குரிய மகளிரை விழைதலாம். அவ் வாறுதல் பெற்றம் தனக்குரிய புல்லைவிட்டுப் பிறர்க்குரிய பைங் கூழை மேய்ந்தாற் போலு மென்ற உவமையானறிக. 'மேய்ந் தற்று' என்புழி, 'ஆல்' என்னும் வினையெச்ச விகுதி புணர்ந்து கெட்டதென்க. கொண்டே—ஏகாரம் தேற்றம். ஜலந்தரன்— ஜலம் தரித்தவன் அஃதாவது கடல் தரித்தவன் என்பது சொல் லின்படி பொருள்.

கதை:—சலந்தராசுரன் தன் மனைவியாகிய பிருந்தை தடுத்துங் கேளாது சிவபெருமானோடு போர்புரிய வேண்டிக் கைலை நோக்கிவரும் வழியில் அப் பெருமான் ஓரந்தண வடிவங் கொண்டு நின்று 'எங்குச் செல்கின்றனை' என்று வினவ, அவன் 'சிவனோடு போர்புரிந்து வெல்லச் செல்கின்றேன்' என்ன, பெருமான் 'அஃதுனக்குக் கூடுமோ? கூடுமாயின், தரையின் யான் கீறுஞ் சக்கரத்தை எடுப்பாய்' என்று ஒரு சக்கரங் கீற, அதை அவன் தோளின்மீது எடுக்க, அப்போது அஃது அவன் உடம்பைப் பிளக்கவே அவன் இறந்தொழிந்தான். அஃதறிந்த திருமால் தாம் அவன் மனைவியாகிய பிருந்தையினிடத்து மோகத்தைத் தணித்துக்கொள்ளுதற்குத் தக்க தருணம் அதுவேயென நினைத்து அச் சலந்தரன் வடிவந் தாங்கிச் சென்று எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்கையில் வஞ்சனையறிந்த பிருந்தை உடனே தீப்புக்காள். திருமால் பிரிவாற்றுது அவள் சாம்பரிற் புரண்டார். 'இடுகாட்டுண் மாதரெலும்பிற் புரண்மால், சுடுகாட்டு ளாடுவாற் சுட்டி—நெடுகாட்டுஞ், சம்பந்தா வென்பு நின்பாற் றந்தாக்கிக் கொண்டிலனென், கும்பந்தா மென்னு முலைக் கொம்பு' என்னுஞ் செய்யுளை நோக்குக. (உஅ)

*[இஃது இலிங்கபுராணத் துளது]*

---

## உகூ-ஆம் அதிகாரம்

## கள்ளாமை

நாய்வாற் களவினன் ஞாலமிக முப்பட்டான்
றாயனுங் காதிமகன் சோமேசா—வாயதனால்
எள்ளாமை வேண்டுவா னென்பா
னெனைத்தொன்றுங் கள்ளாமை காக்கதன்
னெஞ்சு.

அஃதாவது பிறருடைமையா யிருப்பது யாதொரு பொருளை யும் அவரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாமை கருதலும் செய் தலோ டொத்தலின் 'கள்ளாமை' என்றார்.

உகூ. (இ - ள்.) சோமேசா-! தூயன் ஆம் காதி மகன்-பரிசுத்தனுகிய விசுவாமித்திரன், நாய் வால் களவினல் - நாயினது (நீரில் ஊறிய) வாலைக் களவு செய்தமையால், ஞாலம் இகழப் பட்டான் - உலகத்தாரான் இழித்துரைக் கப்பட்டான், ஆயதனல் - ஆனதுபற்றி, எள்ளாமை வேண்டுவான் என்பான் - (முத்தியை) இகழாது விரும்பு வான் இவனென்று (தவத்தோரான்) நன்கு மதிக்கப்படு வான், எனைத்து ஒன்றும் - யாதொரு பொருளையும், கள்ளாமை - பிறரை வஞ்சித்துக் கொள்ளக் கருதாவகை, தன் நெஞ்சு காக்க - தன் நெஞ்சினைக் காக்க (எ - று.)

'எள்ளாது' என்னும் எதிர்மறை வினையெச்சம் 'எள் ளாமை' எனத் திரிந்து நின்றது. முத்தியை இகழ்தலாவது உலகாயத முதலிய மயக்க நூல்களைத் தெளிந்து அவற்றிற்கு ஏற்ப ஒழுகுதல். ஞானத்திற்கு ஏதுவான மெய்ந்நூற் பொருளை யாயினும் ஆசிரியனை வழிபட்டன்றி அவனை வஞ்சித்துக் கொள்ளின் அதுவுங் களவாமாகலின் 'எனைத் தொன்றும்' என்றார். 'நெஞ்சு கள்ளாமற் காக்க' எனவே ஈண்டுக் கள்ளுதல் கள்ளக் கருதுதலென்பது பெற்றும். காதி—ஒரு முனிவன். களவு சிறிதாயினும் பழி பெரிதென்பார் 'நாய் வாற் களவினன் ஞால மிகழப்பட்டான்' என்றார்.

கதை:—விசுவாமித்திர முனிவர் நீண்டகாலம் நிஷ்டை கூடி இருந்து கண் விழித்தபோது எங்கும் வற்கடஞ் சென்றமையால் தமது பசித்தீயைத் தணித்தற் கொன்றும் பெருது ஒரு வேடன் மனையில் நாய் இறைச்சி இருக்கக்கண்டு களவாடி வாலை யுண்ணப் புகுமளவில் வேடன் வர நடந்தது கூறிப் பொறுத்துக் கொள்ள வேண்டிப் பின் மழை பெய்வித்தார். (உக)

---

## ௩௦-ஆம் அதிகாரம்

## வாய்மை

பிள்ளையுட னுண்ணப் பேசியழைத் தாரன்பு துள்ளு
சிறுத்தொண்டர் சோமேசா—வுள்ளுங்காற்
பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

அஃதாவது மெய்யினது தன்மை.

௩௦. (இ-ள்.) சோமேசா!—உள்ளுங்கால்-நினைக்கு மிடத்து, புரை தீர்ந்த நன்மை-(பிறர்க்குக்) குற்றந் தீர்ந்த நன்மையை, பயக்கும் எனின் - தருமாயின், பொய்ம்மையும் - பொய்ம்மைச் சொற்களும், வாய்மை யிடத்த - மெய்ம்மைச் சொற்களின் இடத்தனவாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு)-அன்பு துள்ளு சிறுத்தொண்டர் - அன்பு மிக்க சிறுத்தொண்ட நாயனுர், பிள்ளை - தன் மகனுகிய சீராளன், உடன் உண்ண - வைரவருடன் உண்ணும்படி, பேசி அழைத்தார் - (அவன் உயிரோடிருப்பது போலச்) சில சொல்லி அழைத்தார் (எ - று.)

குற்றந் தீர்ந்த நன்மையாவது அறம்; அதனைப் பயத்த லாவது கேடேனும் சாக்காடேனும் எய்த நின்ற தோருயிர் அச் சொற்களின் பொய்ம்மை யானே அதினீங்கி இன்புறுதல். நட வாததைச் சொல்லுதலும் நன்மை தாராதாயின் பொய்ம்மை யாம், தருமாயின் மெய்ம்மையா மென்பது கருத்து. சிறுத் தொண்டர் - அடியார்களுக்கு எதிரில் மிகச் சிறியராய் இருந்து நடந்துகொண்டமையின் இப் பெயர் பெற்றாரெனக. வைரவர் பிள்ளையை அழையு மென்றபோது தாம் பிள்ளையைக் கறி சமைத்தனம ஆகிய நடந்த செய்தியைக் கூறாது 'இப்போ துதவா னவன்' எனக் கூறியது மன்றிப் பின்னும் பிள்ளை உயி ருடன் இருப்பதுபோலச் "செய்ய மணியே சீராளா வாராய் சிவனு ரடியார்யாம், உய்யும் வகையாலுடனுண்ண வழைக் கின்றார்' எனப் பேசி அழைத்தமையின் நாயனார் பொய்ம்மை கூறினாராதல் அறிக.

கதை :—சோழநாட்டில் திருச்செங்காட்டங்குடியில் அமாத் தியர் குலத்தில் அவதரித்த பரஞ்சோதியார் சிவனடியார் திறத்து அன்பு மேலிட்டாராய் அரசன் வேண்டுகோளின்படி அடியார்

சோ—4

பணிசெய்து அமுது அருத்திச் சிறுத்தொண்ட நாயனுரென

எங்கும் புகழ்பெற்று வாழுநாளிற் சிவபெருமான் வைரவராக வேடங்கொண்டு வந்து நாயனுர் உபசரித்தழைக்க, "அன்பனே! வடதேயத்திலிருந்து உன்னைப்பற்றிக் கேள்விப்பட்டு வந்தோம். யாம் ஆறுமாதத்திற்கு ஒருநாள் உண்போம் அந்நாள் இந்நாளே. ஆயினும், அமுதுபடைக்க உன்னுல் முடியாது. நரமாமிசமின்றி உண்ணேம். ஐந்து பிராயமும், பழுதில்லாத உறுப்பும் உடைய ஞய் ஒரு குடிக்கு ஒரு பிள்ளையாய் இருக்கவேண்டும். தாய் பிடிக்கத் தந்தை அரியவேண்டும்' என்ருர். வைரவர் கூறிய இலக்கணங்களெல்லாம் தன் மகன் சீராளனுக்கு இருத்தலின் மகிழ்வுற்ற நாயனுர் அவரைத் திருவமுது செய்விக்க ஒருப்பட்டு "ஐயரே! உமக்கு வேண்டியபடி அமுது படைப்பேன்' என்ன, வைரவரும் அவர் மனைக்கு எழுந்தருளினுர். பள்ளிக்குச் சென் றிருந்த பாலனை அழைத்து வந்து வைரவர் கூறியபடி கறி சமைத்து நிற்க, வைரவர் "ஓரடியாருடனன்றி உண்ணேம்" என் ருர். நாயனுர் எங்கெங்கும் ஓடித் தேடியும் ஒரு சிவனடியா ரகப்

படாது திரும்பி வந்து கூற, வைரவர், 'நீ என்ருர். அதற்கும் இசைந்தபின், வைரவர்

என்னுடன் உண்க'
'உன் பிள்ளையை

அழைப்பாய்' என்ருர். நாயனுர் 'அவன் இப்போது உதவான்' என்று சொல்லியுங் கேளாமையால் தம் வீட்டு வாயிலில் நின்று, 'சீராளா! வாராய்!' என் றழைத்தார். சீராளன் வரும் வழக்கப் படியே பள்ளியினின்றும் வந்ததும், வைரவர் மறைந்தார். சிவ பெருமான் காட்சி தந்து கதி யளித்தார்.

'தான்பெறு மழலை மொழிமகன் றன்னைத் தன்கையா லுளங் களித் தரிந்து, சமைத்துல கறிய விடுபெருந் தொண்டன் றனைச்
சிறுத் தொண்டனென்

யென்று லுரிமையோர்

றவன்சே, யூன்பெறு நீயே யுரைத்தனை
சற்றுமி லாதே, னுன்றிருத் தொண்ட

னென்றிருப் பதனுக் குன்னுதல் பெரும்பிழை யன்றோ'
நெடுங்கழிநெடிற் பாட்டு கண்டு அறியத்தக்கது.

என்னும்
(கூ0)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## நுக-ஆம் அதிகாரம்

# வெகுளாமை

பல்லவர்கோன் வந்து பணியக் கருணைசெய்தார்
தொல்லைநெறி வாகீசர் சோமேசா—கொல்ல
இணரெரி தோய்வன்ன வின்னா செயினும் புணரின்
வெகுளாமை நன்று.

சோமேசர் முதுமொழி வெண்பா

இக

அஃதாவது, சினத்தைச் செய்தற்குக் காரணம் ஒருவ னிடத்தேயுள்ளதாயினும் அதனைச் செய்யாமை.

கூக. (இ - ள்.) சோமேசா—! கொல்லக் - கொல்

லக் கருதி, இணர் எரி தோய்வு அன்ன - பல சுடரை உடைத்தான பேரெரிவந்து தோய்ந்தாற் போன்ற, இன்னா செயினும் - துன்பங்களை ஒருவன் செய்தானாயினும், வெகுளாமை - (அவனை) வெகுளாமை, புணரில் - (ஒருவனுக்குக்) - கூடுமாயின், நன்று - (அது) நன்று,—(அதற்கு எடுத்துக் காட்டு) - தொல்லை நெறி வாகீசர் - பழைமையான வழியில் சென்ற

வந்து பணிய -

திருநாவுக்கரசு நாயனார், பல்லவர்கோன் பல்லவராசன் வந்து வணங்க கருணை செய்தார் - திருவருள் பாலித்தார் (எ - று.)

இன்னாமையின் மிகுதி தோன்ற 'இணரெரிதோய்வன்ன' என்றுவமை கூறினாரெனவும் அதனை மேன்மேலுஞ் செய்தல் தோன்ற 'இன்னா' என்னும் பன்மைப்பாலாற் கூறினாரெனவுங் கொள்க. முனிவரையும் வெகுள்விக்கு மென்பது தோன்றப் 'புணரின்' என்றார். தொல்லை நெறியாவது பண்டைப் பெரியோர் சென்ற நெறி.

கதை:—திருமுனைப்பாடி நாட்டில், திருவாமூரில் வேளாள மரபில், குறுக்கையர் குடியிற் புகழனார்க்கும் மாதினியார்க்கும் புத்திரரா யவதரித்த திருநாவுக்கரசு நாயனார் சகல கலைகளினும் வல்லராய்ப் பாடலிபுத்திரம் என்னும் பதி புகுந்து சமணரொடு கூடி தருமசேனனென்னும் பெயரோடு சமணகுருவாய் விளங்குவதைக் கேட்ட திலகவதியா ரென்னும் அவர் தமக்கையார் தம் தம்பியைச் சமணப் படுகுழியினின்றும் எடுத்தருளல் வேண்டுமென்று சிவபெருமானை நாடோறும் பிரார்த்தித்தார். அவ்வாறிருக்கையில் தருமசேனருக்குச் சூலை நோய் கண்டு சமணர்

செய்த முயற்சி ஒன்றுனும் நீங்காதாக, தமது தமக்கையார் தொண்டு செய்திருந்த திருவதிகை வீரட்டானம் அடைந்து அவரைக் கண்டு விபூதிபெற்று வீரட்டேசுவரர் சந்நிதி யடைந்து "கூற்றா யினவா றுவிலக் ககிலீர் கொடுமை பலசெய் தனநா னறியேன்; ஏற்றா யடிக்கே யிரவும் பகலும் பிரியா துவணங் குவனெப் பொழுதும், தோற்றா தென்வயிற் றினகம் படியே குடரோ டுதொடக் கிமுடக் கியிட, வாற்றே னடியே னதிகைக் கெடில வீரட் டானத் துறையம் மானே' என்னுந் திருப்பதிகமோத அப்போதே சூலைநோய் விட்டொழிந்தது. அஃதறிந்த சமணர்கள் தமது அரசனாகிய பல்லவனுக்கு இல்லாததும் பொல்



லாததுஞ் சொல்லி நாயனாரை வருவித்து நீற்றறை வைத்தல், நஞ்சூட்டல், கல்லோடு கடலிடுதல் முதலிய பலகொடுமைகள் செய்தும் நாயனார் திருப்பதிகங்களோதிச் சிவாநுக்கிரகத்தால் ஒரு தீங்குமின்றி இருந்தார். இதைக் கண்ட பல்லவன் நாயனாரை வணங்கிச் சைவனாகிப் பாடலிபுத்திரத்திலிருந்த சமண் பள்ளிகளையும் பாழிகளையும் அழித்து அங்குக் குணதர வீச்சுரம் என்னுந் திருக்கோயிலைக் கட்டினான். (௩௧)

[இது திருத்தொண்டர்புராணத் துளது].

---

## ௩உ-ஆம் அதிகாரம்

# இன்னாசெய்யாமை

பிள்ளையார் வைப்பினிற் றீப் பெய்வித்த மீனவன்றீத்
துன்னுவெப்பு நோயுழந்தான்

சோமேசா—வெள்ளிப்
பிறர்க்கின்னா முற்பகற் செய்பிற் றமக்கின்னா
பிற்பகற் றாமே வரும்.

அஃதாவது தனக்கு ஒரு பயன் நோக்கி யேனும் பகைபற்றி யேனும், சோர்வானேனும் ஓ ருயிர்க்கு இன்னாதவற்றைச் செய்
யாமை.

௩௨. (இ - ள்.) சோமேசா -! எள்ளி - இகழ்ந்து,
பிறர்க்கு இன்னா - பிறர்க்குத் துன்பங்களை,
பின் - ஒரு பகலினது முற்பகுதியின்கண்

முற்பகல் செய்
செய்வாராயின்,
தமக்கு இன்னா - தமக்குத் துன்பங்கள்,
பிற்பகல்- அதன்
பிற்பகுதியின்கண், தாமே வரும் - அவர்
செய்யாமற்
றாமே வரும், - (அதற்கு எடுத்துக்காட்டு) - பிள்ளையார் -
ஸ்ரீஞானசம்பந்தப் பிள்ளையார், வைப்பினில் - (எழுந்தருளி யிருந்த) திருமடத்தின்கண், தீ பெய்வித்த மீனவன் - தீ

இடுவித்த பாண்டியன்,
தான் - தீக் கொதிப்பு

தீ துன்று வெப்பு நோய் உழந்

மிக்க சுரநோயான் வருந்தினன்
(எ - று.)

முற்பகல், பிற்பகல் என்பன முன்பின்
வேற்றுமைத் தொகை ; இஃது இலக்கணப்

ளுகைத் தொக்க ஆறும்
போலி என்க. தவம்

சோமேசர் முதுமொழி வெண்பா

இரு

அழிதலின் துன்பங்கள் அவ்வாறு விரைவினும்
எளிதினும் வரும்; அதனால் அவை செய்யற்க
என்பதாம். மீனவன்—கூன் பாண்டியன்.
(௩௨)

கதை :—மேல் உரைத்தாம். [17-வது பாட்டுரை
காண்க.]

---

௩௩- ஆம் அதிகாரம்

## கொல்லாமை

வேந்துமகற் றேர்க்கால் விடலஞ்சி மந்திரிதான்
சோர்ந்துதன தாவிவிட்டான் சோமேசா—வாய்ந்
[துணர்ந்தோர்
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

அஃதாவது ஐயறிவுடையன முதல் ஓரறிவுடையன உயிர்களைச் சோர்ந்துங் கொல்லுதலைச் செய்யாமை.

ஈருன

கூகூ. (இ - ள்.) சோமேசா - ! தன் உயிர் நீப்பினும் - (அது செய்யாக்கால்) தன் உயிர் உடம்பினின்றும் நீங்கிப் போமாயினும், பிறிது இன் உயிர் நீக்கும் வினை - தான் பிறிதோரினிய உயிரை அதன் உடம்பினீக்கும் தொழிலை, ஆய்ந்துணர்ந்தோர் செய்யற்க - (பொருள்களின் இயலை) ஆராய்ந்து உள்ளவாறு உணர்ந்தோர் செய்யற்க, - மந்திரி - (மனுச் சோழனது) மந்திரி, வேந்து மகன் - அம் மனுச்சோழன் மகனாகிய வீதிவிடங்களை, தேர்க்கால் விடல் அஞ்சி - தேர்க்காலில் விட்டு ஊர்தற்கு அஞ்சி, சோர்ந்து, தனது ஆவி விட்டான் - மனஞ்சோர்ந்து தன்னுடைய உயிரை விட்டான் (எ - று.)

தன்னை அது கொல்லினும் தான் அதனைக் கொல்லற்க என்றது, பாவம் கொலையுண்ட வழித் தேய்தலும் கொன்றவழி வளர்தலும் நோக்கி. 'உணர்ந்தோர் தன்னுயிர் நீப்பினும்' என்புழி ஒருமைப் பன்மை மயக்கங் காண்க.

கதை:—மனுச்சோழனுடைய மகனாகிய வீதிவிடங்கன் ஒரு நாள் தேரேறி அரசுவீதியிற் றுணை சூழச் செல்லுங்கால் ஓரான் கன்று துள்ளிவந்து தேர்க்காலினிடைப் புகுந்து இறந்ததாக

அவ் வான் அரண்மனை வாயிலிற் கட்டிய ஆராய்ச்சிமணியைக்
கொம்பினால் அடிக்க, அம்மணியொலி கேட்ட
ணம் வினவி அறிந்து அளவிலாத் துயரமடைந்து,

சோழன் கார
தன் குலத்திற்

கொரு மகனென்பது மறந்து, 'திருவாரூரிற் பிறந்த ஓருயிரைக்
கொன்றதனா லதற்குப் பிராயச்சித்தமில்லை. அவ் வான் அடைந்த

துன்பத்தை யானும்
மந்திரியை நோக்கி

அடைதல் முறை' என்று கூறி, ஒரு ஆர்க' என்று
'முன்னிவனை யவ்வீதி முரண்டேர்க்கா உயிர் துறப்பத்

ஏவினான். அவன் அது செய்தற்கு அஞ்சித் தன்
தன் மகனைத் தானே தேர்க்கால் அவன் மார்பின்
மீது செல்லும்படி ஊர்ந்த வளவில் வீதிவிடங்கப் பெருமான்
காட்சிதந்து ஆன் கன்றும் சோழன் மகனும் மந்திரியும் உயிர்
பெற்றெழச் சோழனுக்குத் திருவருள் பாலித்தார். (௩௩)

[இது திருத்தொண்டர்புராணத் துளது]

---

## ௩௪-ஆம் அதிகாரம்

# நிலையாமை

ஆக்கையு மாயிரத்தெட் டண்டங் களுநிலையாத்
தூக்கியழிந் தான்சூரன்
சோமேசா—நோக்கியிடில்
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

அஃதாவது தோற்ற முடையன யாவும் நிலையுத லிலவாந் தன்மை. மயங்கியபோது பேய்த்தேரிற் புனல்போலத் தோன்றி மெய்யுணர்ந்தபோது கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய் யென்பாரும், நிலைவேறுபட்டு வருதலாற் கணந்தோறும் பிறந் திறக்குமென்பாரும், காரியத்தின் வேறுபடுதலும் காரணத்தின் வேறுபடாமையும் உடைமையின் நிலையுதலும் நிலையாமையும் ஒருங்கே யுடைய வென்பாரு மெனப் பொருட் பெற்றி கூறுவார் பல திறத்த ராவர். இவரை முறையே மாயாவாதிகள் (கேவ லாத்துவிதிகள்), க்ஷணிக விஞ்ஞான வாதிகள் (பௌத்தர்கள்), சற்காரிய வாதிகள் (விசிட்டாத்துவிதிகள், சுத்தாத்துவிதிகளுள் ளிட்டோர்) எனக் கொள்க. அவ ரெல்லார்க்கும் அவற்றதுநிலை யாமை உடன்பா டாகலின், ஈண்டு அதனை யே கூறுகின்றார்.

௩௪. (இ - ள்.) சோமேசா!—நோக்கி யிடில்-ஆரா யின், நில்லாதவற்றை - நிலையுதல் இலவாகிய பொருள்

களை, நிலையின என்று - நிலையுதலை யுடைய வென்று, உணரும் - கருதுகின்ற, புல் அறிவு ஆண்மை - புல்லிய அறிவினை யுடையராதல், கடை - இழிவு, - (அதற்கு எடுத்துக் காட்டு) - சூரன் - சூரபன்மன், ஆக்கையும் - (தன்) உடம்பும், ஆயிரத்தெட்டு அண்டங்களும் - (தான் அரசு செலுத்திய) ஆயிரத்தெட்டு அண்டங்களும், நிலையா தூக்கி - நிலையுவனவாகக் கருதி, அழிந்தான் - அழிவடைந்தான் (எ - று.)

புல்லறிவாளர் பெரும்பான்மையும் பற்றுச் செய்வது சிற்றின்பத்திற்கு ஏதுவாகிய செல்வத்தின்கண்ணும் அதனை அனுபவிக்கும் யாக்கையின் கண்ணுமாகலின், "ஆக்கையு மாயிரத் தெட் டண்டமும்" என்றார்.

ஆக்கை - யாக்கை என்பதன் மரூஉ. 'யா' வென்னும் பகுதிக்குக் 'கட்டு' என்பது பொருள். நரம்பு முதலியவற்றான் யாக்கப்படுதலின் உடம்பு யாக்கை யாயிற்றென்க. (௩௪)

**கதை:**—மேல் உரைத்தாம் (26-வது பாட்டுரை காண்க.)

---

௩௫—ஆம் அதிகாரம்

## துறவு

கோவணமொன் றிச்சிப்பக் கூடினவே
பந்தமெல்லாந் தூவணஞ்சேர் மேனியாய்
சோமேசா—மேவில் இயல்பாகு நோன்பிற்கொன்
றின்மை யுடைமை மயலாகு மற்றும் பெயர்த்து.

அஃதாவது புறமாகிய செல்வத்தின்கண்ணும்

அகமாகிய யாக்கையின்கண் ணும் உளதாய பற்றினை அவற்றின் நிலையாமை நோக்கி விடுதல்.

௩௫. (இ-ள்.) தூவணம் சேர் மேனியாய் - பரிசுத்தமான நிறம் பொருந்திய திருமேனியை யுடையாய்! சோமேசா!—மேவில் - கூடுமாயின், ஒன்று இன்மை - பற்றப்படுவது ஒரு பொருளும் இல்லாமை,
நோன்பிற்குதவஞ் செய்வார்க்கு, இயல்பு
ஆகும்-இயல்பாம், உடைமை ௧௩௫
சோமேசர் முதுமொழி வெண்பா

—(அவ்வாறன்றிப் பற்றப்படுவது ஒன்றாயினும்) உடைமை,
பெயர்த்து - (அத்தவத்தைப்) போக்குதலின், மற்றும் மயல் ஆகும் - மீண்டும் மயக்குதற் கேதுவாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு),—கோவணம் ஒன்று இச்சிப்ப - கௌபீனம் ஒன்றையே விரும்ப, பந்தம் எல்லாம் கூடின - பற்றுக்கள் யாவும் (வந்து) சேர்ந்தன (எ - று.)

ஒன்று என்புழி இழிவு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நோன்பென்பதூஉம் மயலென்பதூஉம் ஆகுபெயர். பெயர்த்தலான் என்பது பெயர்த்து எனத் திரிந்தது. நோன்பைப் பெயர்த்தலான் என வேற்றுமைப் படுத்துக் கூட்டுக. எல்லாப் பொருள்களையும் விட்டு ஒரு பொருளை விடாத வழியும், அது சார்பாக விட்டன வெல்லாம் மீண்டுவந்து தவத்திற்கு இடையீடாய் மனக்கலக்கஞ் செய்யுமென்பது கருத்து. கோவணமொன்று என்புழிப் பிரிநிலை ஏகாரம் தொக்கதென்க.

கதை:—ஒரு துறவி தன் கோவணத்தை எலி கறித்தல் கண்டு எலி பிடித்தற்கு ஒரு பூனை வளர்க்க, பின் அதற்குப் பால்

தர ஒரு பசுக் கொள்ள, அப் பசுவை ஓம்புதற்கும் மதாழுவத்தைச் சுத்தி செய்தற்கும் ஒரு பணிப்பெண்ணை அமைக்க, முடிவில் அப்பணிப்பெண்ணை ஏவல் கொள்வதற்கு ஒருத்தியை மணந்து குடும்பியானர். வடமொழியில் 'கௌபீன சம்ரக்ஷணார்த்தம் அயம்படாடோப:' என்னும் வழக்குண்மை காண்க.

---

## ௩௬-ஆம் அதிகாரம்
# மெய்யுணர்தல்

காரிகையா ரைப்பொன்னைக் காட்டவுங்கா
மா திழும்மைச் சோர்விழந்துய்க் தாரரசர்
சோமேசா—வோருங்காற் காமம் வெகுளி மயக்க
மிவைமூன் ற
னுமங் கெடக்கெடு நோய்.

அஃதாவது பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களை யும் ஐயந்திரிபுகளான் அன்றி உண்மையாலுணர்தல். இதனை வட நூலார் தத்துவஞான மென்ப.

௩௬. (இ - ள்.) சோமேசா!—ஓருங்கால் - நினைப்பின், காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன் நாமம்

சோமேசர் முதுமொழி வெண்பா

கௌ

கெட - ஞானயோகங்களின் முதிர்ச்சி

யுடையார்க்கு

விருப்பு, வெறுப்பு, அவிச்சை யென்னும் இக் குற்றங்கள் மூன்றனுடைய பெயருங் கெடுதலான், நோய் கெடும் - (அவற்றின் காரியமாகிய) வினைப்பயன்கள் உண்டாகா,— (அதற்கு எடுத்துக்காட்டு) - அரசர் திருநாவுக்கரசு நாயனார், காரிகையாரை - அரம்பை மாதரையும், பொன்னை - பொன்னையும், காட்டவும் - காட்டுதலும், காமாதி மும்மைச் சோர்வு - காமமுதலிய முக் குற்றங்களின், இழந்து - நீங்குதலான், உய்ந்தார் - பிழைத்தார் (எ - று.)

அவிச்சை, அகங்காரம், அவா, ஆசை, கோபம் எனக் குற்றம் ஐந்தென்ப வடநூலார். அவற்றுள், அகங்காரம் அவிச்சைக்கண்ணும், அவா ஆசைக்கண்ணும் அடங்குதலான் இவர் மூன்றென்றார். நாமம் என்புழிச் சிறப்பும்மை தொக்கது. 'கெட' என்பது எச்சத் திரிபு. நோய் என்பது சாதியொருமைப் பெயர். காரணமான அக் குற்றங்களைக் கெடுத்தார் காரியமாகிய இருவினைகளைச் செய்யாமையின் அவர்க்கு வரக்கடவ துன்பங்களுமில்லை என்பது இதனாற் கூறப்பட்டது. காட்டவும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பும்மை. "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்புழிப்போல மும்மை யென்ப திண்டெண்ணின் கணின்றது. இழத்தலான் என்பது இழந்து எனத் திரிந்ததென்க.

கதை:—திருநாவுக்கரசு நாயனர் பூம்புகலூர்ப் பெருமானை நாடோறும் தொழுது உழவாரத் திருப்பணி செய்து வருநாளில் பெருமான் நாயனருடைய நன்னிலைமையை உலகத்தார்க்குக் காட்டவேண்டி உழவாரப்படை நுழைந்த விடமெல்லாம் பொன்னும் நவமணியும் பிரகாசிக்கும்படி செய்தருளினர். நாயனர் அவற்றைப் பருக்கை யெனவே மதித்து உழவாரப் படையி னேந்தித் திருக்குளத்தில் எறிந்தார். அதன்பின் அரம்பையர்கள் வந்து ஆடல் பாடல்களாலும் பிறசெய்கை களாலும் மயக்கியும் நாயனர் மயங்காமை கண்டு அவரை வணங்கிச் சென்றூர்கள். (௩௬)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## ௩௭-ஆம் அதிகாரம்

# அவாவறுத்தல்

தாய்கருவில் வாழ்குழவி தாமெல்லாம் வேண்டுவது
தூயபிற வாமையொன்றே சோமேசா—வாயதனுல்
வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்.

அஃதாவது சஞ்சித, ஆகாமியங்களின் தொடர்பறுத்தார்க்கு நடுவுநின்ற உடம்பும் அது முகந்துநின்ற பிராரத்தமும் நின்றமை யின், வேதனைகண்டு ஒருகால் துறக்கப்பட்ட புலன்கண்மேற் பழைய பயிற்சி வயத்தான் நினைவு செல்லுமன்றே, அந்நினையும் அவிச்சைபோலப் பிறவிக்கு வித்தாகலின், அதனை இடைவிடாத மெய்ப்பொருளுணர்வான் அறுத்தல்.

௩௭. (இ-ள்.) சோமேசா—! தாய்

கருவில் வாழ் - தாயினது கருப்பையில் வாழ்கின்ற, குழவி எல்லாம் - குழந்தைகளெல்லாம், வேண்டுவது - விரும்புவது, தூய பிறவாமை ஒன்றே - குற்றமற்ற பிறவாமை ஒன்றையே, ஆயதனால் - ஆனதுபற்றி, வேண்டுங்கால்-(பிறப்புத் துன்ப மாதல் அறிந்தவன் ஒன்றை) வேண்டின், பிறவாமை வேண்டும் - பிறவாமையை வேண்டும், அது அப்பிறவாமை, வேண்டாமை வேண்ட - (தான் ஒரு பொருளையும்) அவாவாமையை வேண்ட, வரும் - தானே யுண்டாம் (எ - று.)

அநாதியாகத் தான் பிறப்புப் பிணி மூப்பு இறப்புக்களாற் றுன்பமுற்று வருகின்றமை யுணர்ந்தவனுக்கு ஆசை இன்பத்தின் கண்ணேயாகலின் 'பிறவாமை வேண்டும்' என்றும், சண்டைச் சிற்றின்பங் கருதி ஒரு பொருளை அவாவின் அது பிறப்பினும் வித்தாய்ப் பின்னும் முடிவில்லாத துன்பமே விளைத்தலின், 'அது வேண்டாமை வேண்ட வரும்' என்றுங் கூறினர். பிறவாமை யின் சிறப்புக் கூறிப் பின் அது வரும் வழிகூறத் தொடங்கு கின்றமையின் மற்று வினைமாற்றின்கண் வந்தது. ஒன்றே— ஏகாரம் பிரிநிலை. குழவி தாயின் கருப்பையில் வாழ்கையில் அதற்குத் தான் முன் எடுத்த பிறப்புக்களின் நினைவும் அவ்வப்

பிறப்புக்களின் அடைந்த துன்பங்களின் அறிவும் உளவாகலிற் பிறவாமை வேண்டுமென்பதனை, 'எட்டா மதியி லங்கங்க ளெல்லா நிரம்பி யுந்திவழி, மட்டார் குழற்று யுண விரத மருவ நுகர்ந்து வளர்போது, முட்டா முன்னைப் பவ நிகழ்ச்சி முளைப்பக் கொடிய நிரயத்துப், பட்டாழ் பவரி னனி வருந்திப் பாங்கு பெறவின் னனகினையும்,' 'அளவில் யோனி களிற பிறந்தா மளவில் கருமம் பலநுகர்ந்தா, மளவில் பேருற் றிருந்தா மளவி றுன்ப மனுபவித்தா, மளவில் புவநீங் குறு முயற்சி யாதும் புரிந்த மலம்பிறந்த, வளவி லளவின் மறை முடிக்கு மப்பா லானை யளவிலியை,' 'தாய்தந் தையுமில் லாதானைத் தாய்தந் தையுமா கியபரனை, நோய்தந் தடுவெங் கூற்றுயிரை நொடியிற் குடித்த கழலானைச், சேய்தந் தவனை மும்மதிலுஞ் செற்ற மூரற் பெருமானை, யாய்தந் திடுமன் பானுளு மலர்தூ வடித்தொண் டினிதியற்றி,' 'குரவ னருளின் மறையுண்மை கொளுத்தக் கொண்டு நித்தியமும், பரவு நைமித் தியமும்விதிப் படியே புரிந்து மோகாதி, யுரவு கெடாநல் வைராக முற்று நிட்கா மியம்புரிந்து, விரவு முண்மை ஞானத்தின் மேலா முத்தி யடைந்திடுவாம், என்னுஞ் சூத சங்கிதைச் செய்யுட் களால் அறிக. (௩௭)

---

## ௩அ-ஆம் அதிகாரம்

## உளழ்

முன்ன ரமண்மதத்து மூண்டரசர் பின்சைவந்
துன்னியது மென்வியப்போ
சோமேசா—வுன்னுங்காற் பேதைப் படுக்கு மிழவு
மறிவகற்று
மாகலூ மூற்றக் கடை.

அஃதாவது இருவினைப்பயன் செய்தவனையே

சென்றடை - தற் கேதுவாகிய நியதி. ஊழ், பால், முறை, உண்மை, தெய்வம், நியதி விதி யென்பன ஒரு பொருட் கிளவி.

௩அ. (இ - ள்.) சோமேசா—!

உன்னுங்கால்-நினைப்

பின், இழவு ஊழ் உற்றக்கடை - (ஒருவனுக்கு எல்லா அறிவும் உளவேனும்) பொருளிழத்தற் கேதுவாகிய ஊழ் வந்து உற்ற விடத்து, பேதைப்படுக்கும் - (அஃது அவ் வறிவைப்) பேதையாக்கும். ஆகல் ஊழ் உற்றக் கடை -

௬௦ சோமேசர் முதுமொழி வெண்பா

(இனி அவன் அறிவு சுருங்கி இருப்பினும்) பொருளாதற் கேதுவாகிய ஊழ் வந்து உற்றவிடத்து, அறிவு அகற்றும் - (அஃது அவ்வறிவை) விரிக்கும்,-(அதற்கு எடுத்துக்காட்டு)-

அரசு - திருநாவுக்கரசு நாயனார், முன்னர் அமண மதத்து மூண்டு - முன்பு சமண சமயத்தின் மிக்க பற்றோடு நின்று, பின் சைவம் துன்னியதும் - பின்பு சைவ சமயத்தை அடைந்ததும், வியப்போ - அதிசயமோ? அதிசயமாகாது (எ - று.)

என் - என்ன?

பொருளென்பது அதிகாரத்தான் வந்தது. இழவும், ஆக

லூம் என்பன நான்காம் வேற்றுமை யுருபும் பயனு

முடன்
ெருக்க தொகை. உற்றக்கடை
.பட்டது. ஊழ் இயற்கையாறுய

என்பது மூன்னுங் கூட்டப்
அறிவையும் வேறுபடுக்கும்

என்பதாம். துன்னியதும் என்புழி
ஓகாரம் வினை. 'என்' என்பது
யுறுத்து நின்றதென்க.

உம்மை இழிவு சிறப்பும்மை.
எதிர்மறைப்பொருளை வலி
(௩அ)

கதை மேல் உரைத்தாம் [31-வது பாட்டுரை காண்க.]

---

## ௩௯ - ஆம் அதிகாரம்

# இறைமாட்சி

பார்சீதை சீலம் பழித்துரைத்துங் காகுத்தன்
சோர்வுறமுன் சீறிலனே சோமேசா—தேறிற்
செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை
வேந்தன் கவிகைக்கீழ்த் தங்கு முலகு.

அஃதாவது அரசனது நற்குண நற்செய்கைகள்.
திருமாலின்
அம்ஸமாய் நின்று உலகங்காத்தலின் 'இறை' என்றார்.
விஷ்ணு: பிருதிவீபதி' 'திருவுடை மன்னரைக் காணின்
மாலைக் கண்டேனே யென்னும்' என்றிருத்த லறிக. ௭

' ௩௭
திரு

௩௯. (இ-ள்.) சோமேசா—! தேறின்-ஆராயின்,
சொல் செவி கைப்ப - (நோவ உரைக்குஞ்) சொற்களைத் (தன்) செவி பொறுதாகவும், பொறுக்கும் - (விளைவு நோக்கிப்) பொறுக்கும், பண்புடை வேந்தன்-பண்புடைய



அரசனது, கவிகை கீழ் தங்கும் உலகு - குடை நிழற் கண்ணே தங்கும் உலகம்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - பார் - உலகத்தார், சீதை சீலம் - சீதையினது ஒழுக்கத்தை, பழித்துரைத்தும் - இகழ்ந்து பேசியும், காகுத்தன் - இராமன், சோர்வு உற - தளர்ச்சி அடையும்படி, முன் - (அவள்) எதிரில், சீறிலன் - வெகுண்டானில்லை (எ-று.)

நாவிற்கு விஷயமாஞ் சுவையைச் செவிமேலேற்றிக் 'கைப்ப' என்றார்.

பண்புடைமை—விசேட வுணர்வினறுதல். அற

நீதிகளிற்
றவருமையின், மண் முழுதுந் தானே யாளுமென்பதாம். பார்—ஆகுபெயர். உம்மை—இழிவு சிறப்பும்மை. காகுத்தன்—இது வடமொழித் தத்திதம். சோர்வு உற—என்பதற்குத் 'தான் குற்ற மடைய' எனினுமாம்.

கதை :—இராமன் சீதையை
வைத்த இராவணனைக் கொன்று

அசோகவனத்திற் சிறை
அவளை மீட்டு அயோத்தி

வந்து பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு வாழ்கையில் 'இராமன் பிறன்பாற் பத்து மாதமிருந்த ஒருத்தியை மீட்டுவந்து பட்ட

மங்கை யாக்கிக்கொண்டான்'
இராமன் அவள் எதிரில் கடுஞ்

என்று யாவருங் கூறியும்
சொல் ஒன்றுங் கூறாது அவளை
வனத்தில் விடும்படி செய்தார்.
(௩௧)

[இஃது இராமாயணத் துளது]

---

## ௪௦-ஆம் அதிகாரம்
## கல்வி

சம்பந்தர் நாவரசர் பாற்கண்டோஞ் சார்ந்துவப்ப
தும்பியிவி னுள்ளுவதுஞ் சோமேசா—நம்பி

உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

அஃதாவது ஒருவன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல்- அவையாவன அறநூல் நீதிநூல் முதலாயின.

கூஉ சோமேசர் முதுமொழி வெண்பா

- ௪௦- (இ-ள்.) சோமேசா—! நம்பி உவப்ப தலைக்கூடியாவரையும் அவர் விரும்பி உவக்குமாறு கூடி, உள்ள பிரிதல் - இனி இவரை யாம் எங்ஙனம் கூடுதுமென நினையு மாறு நீங்குதலாகிய, அனைத்து - அத்தன்மைத்து, புலவர் தொழில் - கற்றறிந்தாரது தொழில்,—சம்பந்தர் நாவரசர்பால் - திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருநாவுக்கரசு நாயனர் ஆகிய இவர்களிடத்தில், சார்ந்து உவப்பதும் - கூடிமகிழ்தலையும், பிரிவின் உள்ளுவதும் - நீங்குங்கால் இனி எங்ஙனங் கூடுதுமென நினைவதும், கண்டோம் - கண்டறிந்தோம் (எ - று.)

தாம் நல்வழி யொழுகல் பிறர்க் குறுதி கூறல் என்பன இரண்டுந் தொழிலென ஒன்ருய் அடங்குதலின் 'அனைத்து' என்ருர். அத்தன்மை அப்பயனைத்தரும் தன்மை. நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு இனிமையும் உறுதியுமான சொற்கள் நிகழ்காலத்தும் எதிர்காலத்தும் இன்பம் பயத்தலானுங் கற்ருரிடத்தே எல்லாரும் அன்புடையராவரென்பதாம். தலைக்கூடல் என்பது ஒருசொல் தலை என்பது தமிழ் உபசர்க்கம் என்பாரு முளர். நம்புதல்—விரும்புதல், 'நம்பு மேவு நசையா கும்மே' என்ருர் ஆசிரியர் தொல்காப்பியனுர்.

கதை :—திருநாவுக்கரசு நாயனூர் சிதம்பரத்தில் திருப்பணி செய்து அமருநாளில், அம்மையார் ஞானப்பாலூட்ட உண்ட காழிப்பிள்ளையாரைக் காண விருப்பங்கொண்டு காழிக்குச் செல்ல, அவர் வருகை அறிந்த பிள்ளையார் திருக்கூட்டத்தோடு எதிர்கொள்ள, நாயனூர் கண்டவுடன் அடியில் வீழ்ந்து பணிய, பிள்ளையார் எடுத்து இறைஞ்சி 'அப்பரே!' என, நாயனூரும்

'அடியேன்' என, இருவரும் உவகைக் கடலின்
'பிள்ளையார் கழல்வணங்கப் பெற்றேனென்

மூழ்கினூர்கள்.
றரசுவப்பப்

பெருகு ஞான, வள்ளலார் வாகீசர் தமைக்காணப் பெற்றதற்கு மகிழ்ச்சி பொங்க, உள்ளநிறை காதலினூ லொருவரொரு வரைக்

கலந்த வுண்மையோடும், வெள்ளநீர்த் திருத்தோணி வீற்றிருந் தார் கழல்வணங்கும் விருப்பின் மிக்கார்' என்னும் பாட்டு நோக்குக. (௪0)

[இது திருத்தொண்டர் புராணத் துளது].

---

சக-ஆம் அதிகாரம்

## கல்லாமை

மெய்த்ததிரு வள்ளுவனூர் வென்றுயர்ந்தார் கல்விநலக்
துய்த்தசங்கத் தார்தாழ்ந்தார்

சோமேசா—வுய்த்தறியின் மேற்பிறந்தா ராயினுங்
கல்லாதார் கீழ்ப்பிறந்துங் கற்ரு ரனைத்திலர்
பாடு.

அஃதாவது கற்றலைச் செய்யாமை; என்றது அதனல் ஆகிய இழிவினை. மேல் விதிமுகத்தாற் கூறின வளவில் முற்றுப் பெருமை நோக்கி எதிர்மறைமுகத்தானுங் கூறுகின்ருர்.

சக. (இ - ள்.) சோமேசா!—உய்த்து அறியின் - ஆராய்ந்தறிவோமாயின், கல்லாதார் - (மெய்ப்பொருளைக்) கற்றறியாதார், மேல் பிறந்தார் ஆயினும் - உயர்ந்த சாதிக் கட் பிறந்துவைத்தும், கற்ருர் பாடு அனைத்து இலர் - (அத
னைக்) கற்றறிந்தாரது பெருமை யளவிற்ருய பெருமை யிலர்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - மெய்த்த திருவள் ளுவனுர் - மெய்ம்மையைக் கொண்ட திருவள்ளுவநாய ஞர், வென்று உயர்ந்தார் - வெற்றி பெற்று மேம்பட்டார், கல்வி நலம் துய்த்த - (மெய்ம்மை நாடாது) கல்வி யின்பத் தையே நுகர்ந்த, சங்கத்தார் - கடைச்சங்கப் புலவர்கள், தாழ்ந்தார் - தாழ்வடைந்தார் (எ - று.)

லும்

உடலோ டொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல் மெய்ப்பொருட் கல்வி யுயர்ச்சி சிறப்புடைத் தென்பதாம். அனைத்து—அத்தனைத்து என்பதன் மரூஉ. 'ஆர்'—உயர்வுபற்றி வந்தது. நலம் என்புழிப் பிரிநிலை ஏகாரம் செய்யுள் விகாரத் தாற் ெருக்கது. சங்கத்தார்—நக்கீரர் முதலிய நாற்பத்தொன் பதின்மர். மெய்த்தல்—மெய்ப்பொருளை உணர்ந்து அதன் வழி நிற்றல். சாதியி னிழிவுதோன்ற 'வள்ளுவனார்' எனச் சாதியா னவர் பெயர் கூறினமையின், சங்கத்தார் சாதியினுயர்ந்தாரென் பது அருத்தாபத்தியாற் பெறப்படு மென்க. கல்விநலந் துய்த் தல்—சொற்சுவை பொருட்சுவைகளைக் கண்டு மகிழ்தல். துய்த் தல்—நுகர்தல். இனிச் சிறுகல் எனவும் திரிதல் எனவும் பொருள் கொண்டு 'துய்' என்னும் பெயரடியாகப் பிறந்த எச்ச மென்பாரு மாளர். அவர் 'துய்' என்பதற்குப் பஞ்சின் நுனி



யென்றுதல் அறிவின் றிரிபென்றுதல் பொருள் கூறுப. சங்கப் புலவர்கள் கலைமகள் கூறு எனப் புராணங்கள் கூறுவது நோக்கிலர் போலும்.

கதை;—திருவள்ளுவநாயனார் தாம் அருளிச்செய்த திருக் குறளை அரங்கேற்றுதற்குச் சங்கத்திற்கு வந்தபோது, சங்கத் தார் 'நாங்களிருக்கும் இந்தச் சங்கப் பலகை உமது நூலுக்கு இடந்தருமாயின் அதைக் கொள்வோம்' என்றார்கள். அவ்வாறே நாயனார் தமது நூல் எழுதிய ஏட்டினை அப் பலகையின்மீது வைத்த வளவில் அப் பலகை அவ் வேட்டினளவு சுருங்கவே, அதன்மீதிருந்த புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் பொற்று மரையில் வீழ்ந்தார்கள். வீழ்ந்து தள்ளாடிய அப் புலவர்கள் கரையேறி நாயனாரையும் அவர் நூலையும் பலபடியாகப் புகழ்ந் தார்கள்.

தெரிந்து

'அறம்பொருளின்பம்வீ டென்னுமிந் நான்கின்,றிறந்
செப்பிய தேவை—மறந்தேயும்,—வள்ளுவ னெப்பா
ஞேர் பேதை யவன் வாய்ச்சொல், கொள்ளா ரறிவுடை
யார்' என்னுஞ் செய்யுளிண்டறியற் பாலதென்க.

---

(சுக)

## சஉ-ஆம் அதிகாரம்

# கேள்வி

ஊனுக்கூ னென்று முரைகண் டுவந்தனரே
தூநற்சீர்க் கண்ணப்பர் சோமேசா—வானதனுற்
கற்றில ஞயினுங் கேட்க வஃதொருவற்
கொற்கத்தி னூற்றுந் துணை.

அஃதாவது கேட்கப்படும் பொருளை அறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனின் ஆகிய அறிவை வலியுறுத்துவதும், கல்லாதவழி அறிவை யுண்டாக்குவதும் இது.

சஉ. (இ-ள்.) சோமேசா—! தூ நல் சீர் கண்ணப்பர்-குற்றமற்ற நல்ல சிறப்பு வாய்ந்த கண்ணப்ப நாயனுர், ஊனுக்கு ஊன் என்னும் உரை-'ஊனுக்கு ஊன்' என்று வேடர்கள் கூறக்கேட்ட மொழியை, கண்டு-(தம் எதிரிற்) கண்டு, உவந்தனர்-களித்தார், ஆனதனல் - ஆனதுபற்றி, கற்றிலனுயினும்-(ஒருவன் உறுதி நூல்களைத் தான்) கற்றி

லனுயினும், கேட்க-(அவற்றின் பொருளைக் கற்றறிந்தார் சொல்லைக்) கேட்க, அஃது - அக் கேள்வி, ஒருவற்கு - ஒரு வனுக்கு, ஒற்கத்தின் ஊற்றாம் துணை - தளர்ச்சி வந்துழிப் பற்றுக்கோடாந் துணையாகலின் (எ - று).

'உம்மை' கற்கவேண்டு மென்னும் பொருள் தோன்ற நின்றது. தளர்ச்சி வறுமையானுவது அறிவின்மையானுவது துன்பம் அடைந்தக்கால் மனந் தளர்தல். அதனைக் கேள்வியின் ஆய அறிவு நீக்குமாகலின், 'ஊற்றாந்துணை' என்றார். ஊன்று என்பதன் னகரம் றகரமாகத் திரிந்து நின்றது. ஊன்று என்பது இங்கு ஊன்று கோலுக்கு ஆகி வருதலின் தொழிலாகுபெயரென்க. ஊன்—இறைச்சி. தூநற்சீர் என்றது அன்பின் சிறப்பினை. 'கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை கண்டபின், என்

னப்ப னென்னொப்பி லென்னையுமாட் கொண்டருளி, வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச், சுண்ணப்பொ னீற்றற்கே சென்றூதாய் கோத்தும்பீ' என்றார் மாணிக்க வாசகப் பெருமானும்.

**கதை** :—கண்ணப்ப நாயனர் பொத்தப்பி நாட்டில் உடுப்பூரில் வேடர் தலைவனை நாகன் என்பானுக்கும் தத்தை என்பாளுக்கும் புத்திரராய் அவதரித்துத் திண்ணனர் என நாமகரணஞ் செய்யப்பெற்று வளர்ந்து காளைப்பருவமடைந்தார். அப்போது நாகனுக்குக் கிழப்பருவமானதால் வேட்டைக்கு நெடுங்காலஞ் செல்லவில்லை. மிருகங்கள் எங்கும் மிகுந்து பயிர்களையும் உயிர்களையும் அழிவு செய்தன. அதனுல் வேடர்கள் யாவரும் நாகனிடஞ் சென்று அந் நிலைகூற, அவன் தனக்கு வேட்டையாட

வலியின்மையின், தன் மகற்குத் தலைமை நல்கி அவனை நன்னாளில் வேட்டைக்கு விடுத்தான். வேட்டைமேற் சென்ற திண்ணனார் ஒரு பன்றியைப் பின் தொடர்ந்தார். நாணன், காடன் என்னும் இரண்டு வேடர்களே அவருடன் ஓடினார்கள். அப் பன்றி சீகாளத்தி மலைவரையுந் தப்பி ஓடிற்று. முடிவில் திண்ணனார் அதைக் குத்திக் கொன்றார். அப் பன்றி இறைச்சி யுண்டு பசி தீர வெண்ணித் தீக்கடையக் கட்டளையிட்டு நாணனை யழைத்துக்கொண்டு குடுமித் தேவரைக் கும்பிடுதற்குத் திண்ணனார் பொன்முகரி யாற்றைக் கடந்து மலை ஏறினார். அவருக்கு மலையேறவேறப் பாரம் ஒன்று குறைவது போலத் தோன்றிற்று. குடுமித் தேவரைத் தரிசித்த வளவில் அன்புருவாயினார். சிவலிங்கப் பெருமானைக் கட்டியணைத்தார்; உச்சிமோந்தார்! நெடுநேரம் நெட்டுயிர்த்தார்; ஆனந்த பரவசராயினார் திண்ணனார். பெருமான் திருமுடியிற் பூக்களிருக்கக் கண்டு, இஃதென்னவென்று நாணனைக் கேட்டார். நாணன் முன்னொருகால் நான் இங்கு.

சோ—5

வந்தேன். அப்போது ஒரு பார்ப்பான் தேவர் தலைமேல் நீரை வார்த்துப் பச்சிலைகளையும் மலர்களையும் இட்டு, ஊண் உதவி, ஏதோ சில பேச்சுக்கள் எதிரில் நின்று பேசினான்' என்றான். அது கேட்ட திண்ணனார் யானுமது செய்வேனென்று துணிந்தார். பெருமானைத் தனியே விட்டுப் போகவே மனமில்லை. ஆயினும் நீர், பூ, ஊண் முதலிய கொண்டுவர வேண்டுமென்று பரிந்தார். ஒருவாறு துணிந்து சென்று பொன்முகரி கடந்து தாம் கொன்ற பன்றி இறைச்சியைத் தமது வாயிலிட்டு அதுக்கிப் பார்த்துச் சுவைகண்டு சுவை மிக்க இறைச்சிகளை யெல்லாம் ஒரு கல்லையில் வைத்துக்கொண்டு தமது வாய் நிறைய நீர் முகந்து பூக் கொய்து குடுமியிற் செருகிப் பெருமான் பசித்திருப்பாரே யென்று விரைந்தோடிவந்து வாய் நீரைத் திருமுடி மீது உமிழ்ந்து, பூக்களை யும் பெய்து, கொணர்ந்த இறைச்சியைப் படைத்து உண்பித்தார். நாணன் முதலியவர்கள் இவரைத் தெய்வம் பிடித்துக்கொண்ட தென்று ஊர்க்குத் திரும்பினார்கள். அன்றிரவெல்லாம் இமை கொட்டாது பெருமானுக்குக் காவல் இருந்தார். மறுநாள் அதி காலையில் பெருமானுக்கு ஊன் முதலியன கொணரவேண்டிக் காடு புக்கார். அவர் சென்றதும் நாடோறும் பூசை செய்துவருஞ் சிவகோசரியார் என்னும் அருச்சகர் வந்து இறைச்சி இறைந் திருத்தல் கண்டு உடல் நடுங்கி அவற்றை எல்லாம் சுத்தஞ் செய்து மறுபடி நீராடிப் போந்து வழக்கப்படி பூசித்தார். இவர் பூசை முடித்துச் சென்றதும், திண்ணனார் வந்து தமது பூசையைச் செய்து முடித்துப் பெருமான் எதிரில் நின்ற நிலையில் இமை கொட்டாதிருந்தார்.

ஐந்து நாள் இவ்வாறு நடக்கவும், சிவகோசரியார் மிக்க வருத்தமடைந்தார். ஐந்தாநாளிரவில் பெருமான் அவர் கனவிற் றோன்றி 'அன்ப! நீ வருந்த வேண்டா. அவனை வேடனென்று நினைத்தல் கூடாது. அவனுடைய பெருமையை நானே யறிவாய். நீ நமக்குப் பின் ஒருபுறம் ஒதுங்கி மறைந்திருப்பாய்' எனப் பணித்தார். மறுநாள் அவ்வாறே சிவகோசரியார் செய்ய, அன்று வழக்கப்படி வேட்டையாடி இறைச்சி கல்லையிற் கொண்டு வாயினீர் முகந்து குடுமியிற் பூத்தாங்கி வந்த திண்ணனார் பெருமானுடைய வலக்கண்ணில் இரத்தம் வடிதலைக் கண்டார்; விழுந்தார்; எழுந்தார்; பதைத்தார்; துடித்தார்; அருகிற்சென்று இரத்தத்தைத் துடைத்தார். அது நிற்கவில்லை. ஓடிப்போய்ப் பச்சிலைகள் கொணர்ந்து அக் கண்ணிற் பிழிந்தார். இரத்தம் பெருகுதல் பின்னும் அதிகமாயிற்று. மயங்கினார். திகைத்தார். இன்னது செய்வதென்று தோன்றவில்லை. அப்போது வேடர்கள் கூறும் 'ஊனுக் கூன்' என்னும் பழமொழி அவர் எதிரில்வந்து நிற்கக் கண்டார். உடனே, தன் வலக்



கண்ணைத் தோண்டி அப்பினார். இரத்தம் நின்றது; கண் பழைய படி ஆயிற்று. திண்ணனார் களிப்படைந்தார். பெருமான் தமது இடக்கண்ணில் இரத்தம் காட்ட, ஒரு கண்ணை இழந்த திண்ணனார், 'இன்னும் ஒரு கண் எனக்குண்டு; இதற்கு அஞ்சேன்' என்று இடனறிதற்குச் செருப்புக் காலைப் பெருமான் இடக்கண்ணில் வைத்துத் தமது இடக்கண்ணையும்

தோண்ட அம்பை ஊன்றினர். பெருமான் அது பொருது 'நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப!! அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப!!!' வென்றருளித் தோண்டுங் கையைத் தமது திருக்கரத்தாற் பற்றிக்கொண்டு, 'கண்ணப்ப! எமக்கு வலப்பால் நீ என்றும் இருக்க' எனத் திருவருள் புரிந்தார். (சஉ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## சந-ஆம் அதிகாரம்
## அறிவுடைமை

அன்றமணர் தீவைப்ப வஞ்சியதென்
னென்னன்மின்
றுன்றியசீர்ச் சம்பந்தர் சோமேசா—நன்றேயாம்
அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்

சஉ. (இ - ள்.) சோமேசா—! அஞ்சுவது அஞ்சாமை பேதைமை - அஞ்சப்படுவதனை அஞ்சாமை பேதைமை யாம், அஞ்சுவது அஞ்சல் அறிவார் தொழில் - அவ் வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார் தொழிலாம், (ஆகலின்) சீர் துன்றிய சம்பந்தர் - சிறப்பு மிக்க ஸ்ரீ ஞானசம்பந்தப் பிள்ளையார், அன்று - அந்நாள், சமணர் தீ

வைப்ப - சமணர்கள் (தாம் தங்கிய மடத்தில்) நெருப்பிட, அஞ்சியது என் என்னன்மின் - அஞ்சியது யாது பற்றி என்று நினையாதிர், நன்றே ஆம் - (அவ்வாறு நன்மையே ஆகும் (எ - று.) அஞ்சியது)

பாவமும் பழியுங் கேடு முதலாக அஞ்சப்படுவன பலவாயி
னுஞ் சாதிபற்றி 'அஞ்சுவது' என்றார். அஞ்சாமை—எண்ணாது செய்து நிற்றல். அஞ்சுதல்—எண்ணிச் செய்யாது விடுதல். அஞ்சு



தல் காரியமன்று என்று இகழப்படாதென்பார் 'அறிவார் தொழில்' என்றார். 'அன்று அமணர்' என்பது வினைத்தொகை. நிலைத்தொடரெனக் கொண்டு 'பகைத்த சமணர்கள்' எனினு மாம். 'துன்றிய சீர்' பெயரெச்சத்தொடர். நன்றே—ஏகாரம் தேற்றம். 'சோமேசா' என்னுங் கடவுள் முன்னிலையோடு 'என்னன்மின்' என்னும் ஏவற்பன்மை இயையா தென்றுரைத்துத் தென்னன்மின், என்று பாடத்தை மாற்றி 'மங்கையர்க்கரசியாரும்' என்று உரைகூறுவாரு முளர். இஃ தொருமைப் பன்மை மயக்கமென்றொழிக. (சு௩)

கதை:—மேல் உரைத்தாம் (கஎ-வது பாட்டுரை காண்க.)

---

## சச-ஆம் அதிகாரம்
## குற்றங்கடிதல்

ஈரைந் தலையா னணுகியபின் னேகலுற்றுச் சூரந்
தொலைந்தானே சோமேசா—வோரின்
வருமுன்னர்க் காவா தான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

அஃதாவது காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் எனப்பட்ட குற்றங்கள் ஆறனையுங் கடிதல். இவற்றை வடநூலார் அரிவர்க்க மென்ப (அரி—பகை.)

சச. (இ – ள்.) சோமேசா—! ஓரின் - ஆராயின், வருமுன்னர்-குற்றம் வரக்கூடவதாகின்ற முற்காலத்திலே, காவாதான் - (அதனைக்) காவாதானது, வாழ்க்கை - வாழ்வானது, (அது வரின்) எரி முன்னர் வை தூறு போல - நெருப்பின்முகத்து நின்ற வைக்குவைபோல, கெடும் - அழிந்துவிடும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - ஈர் ஐந்து தலையான் - பத்துத் தலைகளையுடைய இராவணன், அணுகிய பின் - (குற்றம் வந்து தன்னை) அடைந்த பின், ஏகல் உற்று - (போர்க்குச்) சென்று, சூரம் தொலைந்தான் - ஆண்மை அழிந்தான் (எ - று.)

குற்றம் என்பது அதிகாரத்தான் வந்தது. முன்னர்—'அர்' பகுதிப்பொருள் விகுதி. 'வரும்' என்னும் பெயரெச்சம் முன்னர்

என்னுங் காலப்பெயர் கொண்டது; அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றஞ் சிறிதாயினும் அதனாற் பெரிய செல்வம் அழிந்தேவிடு மென்பது உவமையாற் பெற்றும் 'ஈரைந் தலையான்' என்றது அவனது வலி குறித்தற்கென்க; அவனுக்குத் 'தசமுகன்' என்பது வடமொழிப் பெயராதலு மறிக. 'அணுகிய பின்' என்புழிக் 'குற்றம்' என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. ஈண்டுக் குற்றமாவது பிறன்மனை வெளவுதலா மென்க. (சச)

கதை:—மேல் உரைத்தாம் (கஙு-வது பாட்டுரை காண்க.)

---

சரு-ஆம் அதிகாரம்

## பெரியாரைத் துணைக்கோடல்

எத்திறமு மேயர்கோ ணட்பாமா றெண்ணினரே
சுத்தநெறி யாரூரர் சோமேசா—வைத்த
அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

அஃதாவது ஒருவன் தீநெறி விலக்கி நன்னெறிச் செலுத் தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளுதல்.

சரு. (இ - ள்.)

சோமேசா!—பெரியாரைப் பேணி-
பெரியவர்களை அவர் உவப்பன அறிந்து செய்து, தமரா
கொளல் - தமக்குச் சிறந்தாராகக்

அரியவற்றுள் எல்லாம் - அரியன

கொள்ளுதல், வைத்த
வென்று வைத்தெண்
ணப்பட்ட பேறுகள் எல்லாவற்றினும், அரிது - அரிதா
கும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - சுத்த நெறி ஆரூரர் - குற்றமற்ற நல்வழியில் நின்ற சுந்தரமூர்த்தி நாயனார், எதிறமும் - எல்லா வழியானும், ஏயர்கோன் - ஏயர்கோன் கலிக்காம நாயனார், நட்பு ஆம் ஆறு - (தமக்கு) படி, எண்ணினர் - நினைத்தார் (எ - று.)

நட்பாகும்

இப்பேறு சிறந்ததென்றது, அரியன பிறவெல்லாம் உண்டாதலைநோக்கி. ஏழனுருபு கூட்டிப் பிரித்தற் பொருட்டு. எத்திறமும்—எகரவினா எஞ்சாமை குறித்தது; உம்மை முற்றும்மை.

கதை:—சோழ நாட்டிலுள்ள திருப்பெருமங்கலத்தில் வேளாண்மரபிற் பரம்பரையாகச் சோழர்களுக்குச் சேனாபதித் தொழில் செய்துவந்த ஏயர்குடியில் அவதரித்துத் திருப்புன்கூர் என்னும் க்ஷேத்திரத்தில் திருப்பணி புரிந்த கலிக்காம நாயனார் என்பார் சுந்தரமூர்த்தி சுவாமிகள் பெருமானைப் பரவையாரிடத் தூதுவிட்ட செய்தி கேள்வியுற்றுப் "பெருமானையும் இவ்வாறு ஏவல்கொள்வா ருண்டோ?" என்று மனம் வருந்திச் சுந்தரமூர்த்தி சுவாமிகளிடம் பகை வைத்திருந்தமை கண்ட பெருமான் இருவர்க்கும் நட்பாகத் திருவுளங்கொண்டு கலிக்காம நாயனார்க்குச் சூலைநோய் தந்து அவர் ஆற்றுறாது வருந்தும் நிலையில் அவர் கனவி லெழுந்தருளி, 'இந்நோய் வன்றொண்டனாகிய சுந்தரராற் றீரும்' என்ன, நாயனார் 'யான் இறப்பினும் அங்குச் செல்லேன்' என்றிருந்தார். பெருமான் சுந்தரமூர்த்தி சுவாமிகள் முன் திருவுருக் கொண்டு தோன்றி 'நீ ஏயர்கோன் சூலைநோயைத் தீர்ப்பாய்' என்றருளினார். அவ்வாறே சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பெருமங்கலம் புக்குத் தம் வருகையைக் கலிக்காம நாயனாருக்கு அறிவிக்குமாறு ஒற்றரை ஏவ, ஒற்றரால் அவர் வருகை யறிந்த கலிக்காமனார், "பெருமானைத் தூதுவிட்டவனையோ யான் காண்பது?" என்று தம் உடை வாளான் வயிற்றிடைக் குத்திக்கொண்டிறந்தார். அவர் மனையாரும் உடன் உயிர்துறக்க நின்றார்; அத் தறுவாயில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் அவர் மனைக்கு எழுந்தருள அவர் மனைவியார் 'நாயனாருக்குக் கெடுதி ஒன்றுமில்லை. அவர் அறையில் 'பள்ளி கொள்கின்றார்' என்ன, சுவாமிகள் 'யாம் அவரைக் காணாது செல்லோம்' என்னக் கலிக்காமனாரைக் காட்டினார். நாயனார் உடைவாளாற் குத்திக்கொண்டு தம் பொருட்டு இறந்தாரென்பதை அறிந்து தாமும் அது செய்ய உடைவாளை எடுத்தார். பெருமான் திருவருளால் அந்நிலையில் ஏயர்கோன் உயிர்பெற்றெழுந்து சுவாமிகளை வணங்கினார். சுவாமிகளும் அவர் அடிகளில் வீழ்ந்து வணங்கினார். அன்றுமுதல் அவர்கள் நட்புக்கொண்டிருந்தார்கள்.(௬௫)

[இது திருத்தொண்டர் புராணத் துளது].

---

## ௪௯ - ஆம் அதிகாரம்

# சிற்றினஞ்சேராமை

*அற்கா வமண்மொழிகேட் டல்லலுற்றான்*
*மாறனில்லாள் சொற்கேட்டு நோய்தீர்ந்*
*தான்சோமேசா—தற்காக்கு நல்லினத்தி னூங்குந்*
*துணையில்லை தீயினத்தி னல்லற் படுப்பதூஉ மில்.*

சோமேசர் முதுமொழி வெண்பா

௭௧

அஃதாவது சிறிய இனத்தைப் பொருந்தாமை. சிறிய இனமாவது நல்லதன் நன்மையும் தீயதன் தீமையும் இல்லை என்போரும், விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்ட கூட்டத்தார்.

௪௬. (இ-ள்.) சோமேசா—; தற்காக்கும்—(ஒருவனுக்குத்) தன்னைக் காக்கும், நல் இனத்தின் ஊங்கு—நல்லினத்தின் மிக்க, துணையும் இல்லை—, தீ இனத்தின் (ஊங்கு)—தீய வினத்தின் மிக்க, அல்லற் படுப்பதூஉம் - இல் - பகையும் இல்லை, - (அதற்கு எடுத்துக்காட்டு)மாறன் - (கூன்) பாண்டியன், அற்கா - (அறிவொடு) தங்காத), அமண்மொழி கேட்டு - சமணருடைய சொற்களைக் கேட்டு, அல்லல் உற்றான் - துன்பமடைந்தான், இல்லாள் (தனது) மனைவியாரது, சொல்கேட்டு - சொல்லைக்கேட்டு, நோய் தீர்ந்தான் - (சுர) நோய் நீங்கினன் (எ-று).

'நல்வினத்தின், தீயினத்தின்' என்புழி ஐந்தனுருபுகள் எல்லைப்பொருளின் வந்தன. ஊங்கு என்பது பின்னுங் கூட்டப்பட்டதென்க. உம்மை மாற்றிப் பொருளுரைத்தாம். நல்வினம் அறியாமையினின்றும் நீங்கித் துன்பமடையாதபடி காத்தலின் அதனைத் 'துணை' யென்றும், தீயினம் அறிவினின்றும் நீங்கித் துன்பமடைவித்தலின் அதனைப் 'பகை' என்றுங் கூறினார். அல்லற்படுப்பது என்பது ஏதுப்பெயர். அற்கா—'அல்கா' என்பது திரிந்து நின்றது. சொற்கேட்டலாவது அதன்படி நடத்தல். நோயின் றொழில் அதனை உடையான்மேல் ஏற்றப்பட்டமை காண்க.

கதை :—மேல் உரைத்தாம் (கஎ-வது பாட்டுரை காண்க).

---

சஎ - ஆம் அதிகாரம்

## தெரிந்து செயல்வகை

சானகியை யிச்சித்துத் தன்னுயிரும் போக்கினனே
தூநீ ரிலங்கையர்கோன் சோமேசா—வானதனுல்
ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
யூக்கா ரறிவுடை யார்.

அஃதாவது ஒருவன் தான் செய்யும் வினைகளை செய்யுந் திறம்.

ஆராய்ந்து: எஉ சோமேசர் முதுமொழி வெண்பா

சுஎ. (இ - ள்) சோமேசா—! தூய்மை நீர் இலங்கை

யர் கோன் - பரிசுத்தியுடைய கடல்சூழ்ந்த இலங்காதிப னாகிய இராவணன், சானகியை இச்சித்து - சீதையை விரும்பி, தன் உயிரும் போக்கினன் - தனது உயிரையும் போக்கிக்கொண்டான், ஆனதனால் - ஆனதுபற்றி, ஆக்கம் கருதி - மேல் பெறக்கடவதாகிய இலாபத்தை நோக்கி,

முதல் இழக்கும் செய்வினையை - முதலையும் ஏதுவாகிய செய்வினையை, அறிவுடையார் அறிவுடையார் மேற்கொள்ளார் (எ - று).

இழத்தற்கு

ஊக்கார் -

கருதி என்னும் வினையெச்சம் இழக்கும் என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. முதல் என்புழி இறந்தது தழீஇய எச்ச வும்மை விகாரத்தாற் றொக்கது. ஆக்கமேயன்றி முதலும் இழக்

கும் செய்வினைகளாவன வலியும், காலமும், இடனும் அறியாது பிறர் பொருள் கொள்ளச் சென்று தம் பொருளையும் இழத்தல் போல்வன. முன் செய்து வந்த வினையாயினும் என்பார் 'செய்

வினை' என்றார். ஈண்டு ஆக்கம் இன்பமும் முதல் உயிருமாம். சானகி—சனக புத்திரி. இது வடமொழித் தத்திதம், உயிரும்

உம்மை எச்சவும்மை எனக் கொள்க. இலங்கை—லங்கா என்னும் வட சொற்றிரிபு ; லங்கா என்பதற்குத் தீவு பொருள்.
என்பது
(சசு)

கதை :—மேல் உரைத்தாம் (சுடு-வது பாட்டுரை காண்க.)

---

சஅ-ஆம் அதிகாரம்

## வலியறிதல்

சக்கரத்தை யேற்பன் சலந்தரனென் றெடுத்துத்
துக்கமுற்று வீடினனே சோமேசா—வொக்கும்
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

அஃதாவது வினைவலி, தன்வலி, பகைவலி, துணைவலி ஆகிய நால்வகை வலியையும் அளந்தறிதல்.

சஅ. (இ-ள்.) சோமேசா—! உடை தம் வலி அறியார் - செய்பவராதலையுடைய தமது வலியின் அளவறி

சோமேசர் முதுமொழி வெண்பா

யாதே, ஊக்கத்தின் ஊக்கி - மன வெழுச்சியில் (தம்மின் வலியாரோடு) வினை செய்தலைத் தொடங்கி, (அவர் எதிர்த்தலான் அது செய்து முடிக்கப் பெறாது) இடைக் கண் முரிந்தார் பலர் - இடையே கெட்டவர் (உலகத்துப்) பலராவர், ஒக்கும் - (இஃது) ஒக்கும், (ஏனெனின்) நான்

சலந்தரன் - (சலந்தராசுரன்) நான்

லின்), சக்கரத்தை ஏற்பன் - (நீர்

சலந்தராசுரன், (ஆக

பூமியிற் கீறிய இச்)

சக்கரத்தைத் தாங்குவேன், என்று

சொல்லி, எடுத்து - (சிவபெருமான்

- என்று (தருக்கிச்)

கீறிய சக்கரத்தை)

எடுத்து, துக்கம் உற்று வீடினன் - துன்பமடைந்து அழிந்தான் (எ - று.)

உடைய என்பது அவாய் நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. அறிவுடையார் சில ராதலின், 'முரிந்தார் பலர்' என்றார். அதனால் என்பது குறிப்பெச்சம்.

தம் வலி அறிந்தே வினை தொடங்குக

(சஎ)

கதை :—மேல் உரைத்தாம் (உஅ-வது பாட்டுரை காண்க).

---

## சகூ-ஆம் அதிகாரம்
# காலமறிதல்

*வீமனவை முன்மனையை வேட்டானைக்*
*கண்டுமொரு தூமொழியே னும்புகலான்*
*சோமேசா—வாமென்றே வூக்க முடையா*
*ஞெடுக்கம் பொருதகர்*
*தாக்கற்குப் பேருந் தகைத்து.*

*அஃதாவது வினை செய்தற்கு ஏற்ற காலத்தை அறிதல்.*

*சகூ.* (இ - ள்.) *சோமேசா!—வூக்கம் உடையான்*
*ஒடுக்கம்* - *வலி மிகுதி யுடையான் (வினைசெயற் கேற்ற) காலம் பார்த்திருக்கின்ற இருப்பு, பொருதகர் தாக்கற்கு பேரும் தகைத்து* - *போர் செய்கின்ற ஆட்டுக் கிடாய் (தன் பகை கெடப்) பாய்தற் பொருட்டுப் பின்னே கால் வாங்குந் தன்மைத்து,—(அதற்கு எடுத்துக்காட்டு), வீமன்-*

 சோமேசர் முதுமொழி வெண்பா

*வீமன், அவைமுன் - அரசவைக் கெதிரில்,*

மனையை
வேட்டானை கண்டும் - தமது மனைவியாகிய திரௌபதியை விரும்பினவனான கீசகனை (நேரே) கண்டும், ஆம் என்று - (அவனைக் கொல்லுதற்கு ஏற்றகாலம்) வாய்க்குமென்று, ஒரு தூ மொழி யேனும் புகலான் - வன்சொல் ஒன்றை யேனும் உரைத்தானில்லை (எ - று.)

உவமைக்கண் தாக்கற்கு என்றதனால் பொருளினும் வெற்றி எய்தற் பொருட் டென்பது கொள்க. பேரும்—பெயரும் என்ப தன் மரூஉ, வீமன்—(பகைவர்க்குப்) பயங்கரன் என்பது தாதுப் பொருள். உம்மைகள் இழிவு சிறப்பு. தூ—வலிமை; 'தூவறத் துறந்தாரை' 'தூத்தகை வயிரம்' என்னுஞ் சங்கநூற் பிரயோகங்

காண்க. இனி, 'தூய தூற்றம் பகை தசையுந் தூவே' எனப் பிங்கலந்தை கூறுதலின் 'தூ மொழி' என்பதற்குப் 'பகைச் சொல்' எனப் பொருள் கோடலுமாம். ஏனும்—எனினும் என் பதன் மரூஉ.

கதை:—பாண்டவர்கள் சூதாடி நாடிழந்து காடுறைந்து கரந்துறைதல்வேண்டி மாறுவேடமும் வேறு பெயருங்கொண்டு விராடராசனைச் சார்ந்து ஒவ்வொரு தொழிலில் அமர்ந்து வாழ்கையில் திரௌபதி விராடராசனுடைய மனைவியாகிய சுதேஷ்ணைக்குப் பணிப்பெண் ஆனாள். ஒருநாள் அச் சுதேஷ்ணையின் உடன் பிறந்தோனாகிய கீசகன் அவளிடம் வந்தபோது திரௌபதியைக் கண்டு மோகங்கொண்டு சுதேஷ்ணை என்ன சொல்லியுங் கேளாது அவளை அணுகினான். அவள் ஓடிப்போய் விராடராசனது சபையின் முன் விழுந்தாள். அங்கும் அவளைவிடாது தொடர்ந்துவந்த கீசகன் கைப்பற்று முன் சூரியனால் ஏவப்பட்ட ஓர் ஏவலாளன் அவனை எடுத்து அப்பால் எறிந்தான். அது கண்டு பலாயனனென்னும் பெயரோடு மடைத்தொழிற் றலைவனாய் இருந்த வீமன் அவனைக் கொல்லுதற்கு ஒரு மரத்தைப் பெயர்த்தெடுக்கச் சென்றபோது, கங்கபட்டரென்னும் பெயரோடு சந்நியாசியாய்ச் சபையில் விராடனருகிலிருந்த தருமபுத்திரர் 'இம் மரம் எரியாது' என்ற குறிப்புணர்ந்து அப்போது ஒன்றுஞ் சொல்லாது வாளாவிருந்தான். மறுநாள் நள்ளிரவில் திரௌபதியைக் கொண்டு ஆசைகாட்டிக் கீசகனை ஒரு சோலைக்கு வருவித்துக் கொன்றான். (சக)

[இது பாரதத் துளது.]

---

## ருo–ஆம் அதிகாரம்

# இடனறிதல்

*காட்டு முயலுங் கதக்கரியைக் கொல்லுமாற்*
*றோட்டலர்நீர்க் கச்சியினுட்*
*சோமேசா—நாட்டியிடின் ஆற்றரு மாற்றி யடுப*
*விடனறிந்து*
*போற்றார்கட் போற்றிச் செயின்.*

அஃதாவது வலியும் காலமும் அறிந்து வினை

செய்வான் தான் வெல்லுதற்கேற்ற நிலத்தினை அறிதல்.

௫௦. (இ - ள்.) சோமேசா!—நாட்டியிடின்-துணிந்து சொல்லின், ஆற்றாரும் - வலியர் அல்லாதாரும், ஆற்றி அடுப - வலியராய் வெல்லுவர், இடன் அறிந்து - அதற் கேற்ற இடத்தினை யறிந்து, போற்றி - (தம்மைக்) காத்து, போற்றார்கண் செயின் - பகைவரிடத்து வினை செய்வ ராயின்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - தோடு அலர் நீர் கச்சியினுள் - இதழ்களையுடைய மலர்கள் பொருந்திய நீர் வளம் மிக்க காஞ்சிமா நகரில், காட்டு முயலும் - காட்டின் கண் வாழ்கின்ற முயலும், கதம் கரியை கொல்லும் - சினத்தையுடைய யானையை வருத்திற்று (எ - று.)

தம்மை என்பதூஉம் வினை என்பதூஉம் அவாய் நிலையின் வந்தன. காத்தல் - பகைவரான் நலிவு வராமல் அரணானும் படையானுங் காத்தல். இவ்வாறு வினை செய்வராயின், மேற் சொல்லிய வலியின்றியும் வெல்வர் என்பதாம். தோடு – தொகு தியுமாம். கொல்லும் – இது காரணமின்றி இயல்பினால் வந்த கால வழுவமைதி யென்க. கொல்லுதல் - வருத்தல்; அஃ தப் பொருட்டாதலை, 'கொல்லச் சுரப்பதாங் கீழ்' என்னும் நாலடி யார் பிரயோகத்தானுமறிக.

கதை:—காஞ்சியின்கணுள்ள ஒரு சிறிய முயல் அத் தல வாசஞ் செய்யும் வலிமையின் ஒரு யானையை வருத்தி ஓட்டிற்று. 'மன்னு கின்றவத் திருநகர் வரைப்பின் மண்ணின் மிக்கதோர் நன்மையி னாலே, துன்னும் யானையைத் தூற்றில்வாழ் முயன் முன் முரக்க வெய்திய தொலைவினாக் கத்தாற், றன்னி லத்துநின் றகற்றுதல் செய்யுந் தான மன்றியுந் தனுவெழுந் தரணி, யெந்நி லத்தினுங் காண்பரு மிறவாத் தான மென்றிவை யியல்பினி

.லுடைத்தால்' என்னும் பெரிய புராணச் செய்யுளேயும்,
.யிப, மொன்று குறுமுயலுக் கோடு மிடம்பார்த்து'
.ஏகாம்பர நாதருலா வடிகளேயுங் காண்க.

'வென்றி
என்னும்
(௫௦)

[இது காஞ்சிப்புராணத் துளது.]

---

## ௫௧-ஆம் அதிகாரம்
# தெரிந்து தெளிதல்

-தேருமா னக்தனைமுன் றேறிப் பழிபூண்டான்
சூரியசன் மாவென்பான் சோமேசா—தாரணிமேல்
தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
.தீரா விடும்பை தரும்

அஃதாவது ஒருவன் தன்னோடு இயைபுடையார்
அல்லாதாரைப் பிறப்புக் குணம் அறிவெ
வன்பனவற்றையும் செயலேயும் .காட்சி, கருத்து,
ஆகமம் என்னும் அளவையான் ஆராய்ந்து
தெளிதல். காட்சி - பிரதியக்ஷம், கருத்து
- அனுமானம், ஆக
.மம் - சப்தம், அளவை - பிரமாணம்.

௫௧. (இ - ள்.) சோமேசா!—பிறனை - தன்னொடு இயைபுடையான் அல்லாதானை, தேரான் - (பிறப்பு முத லியவற்றானும் செயலானும்) ஆராயாது, தெளிந்தான் - தெளிந்த ஒருவனுக்கு, (அத்தெளிவு) வழிமுறை தீரா-தன் வழி முறையினும் நீங்காத, இடும்பை தரும் - துன்பத்தைக் கொடுக்கும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - தாரணிமேல் - இப்பூமியின்கண், தேரும் ஆனந்தனை - (பிறப்பு முதலிய வற்றானும் செயலானும்) ஆராய்தற்கு அரிய ஆனந்த னென்பானை, சூரிய சன்மா - சூரியசன்மா வென்பான், தேறி - தெளிந்து, பழி பூண்டான் - பழியை அடைந் தான் (எ - று.)

இயைபு—தன் குடியொடு மாறுபடாத வழக்கு. இதனான், தன் குடி வழக்கொடொத்த வழக்கும் வேண்டுமென்பது பெற் றும். தெளிதல்—அவன் கண்ணே தொழிலை வைத்தல்; அஃதா வது அவனைத் தன் காரியம் பார்க்க நியமித்தல். அத் தொழில் கெடுதலால் தன் குலத்துப் பிறந்தாரும் பகைவர் கைப்பட்டுக்



கீழாய்
ஒருபு

விடுவரென்பதாம். 'தெளிந்தான்' என்புழி நான்க விகாரத்தாற் றொக்கது. என்பான்—எனப்படுவான்; ஈண்

டுப் 'படு' விகுதி தொக்கது. சன்மா—சர்மா என்னும் சொற்றிரிபு; இஃது அந்தணர்க்குரிய பட்டப்பெய ரென்க.

கதை :—கௌசிக நாட்டில் விக்கிரமநகரத்தில் ஆனந்தன், சூரியசன்மா என்று இரண்டு அந்தணர்கள் இருந்தார்கள். வஞ்சகனாகிய ஆனந்தன் சூரியசன்மாவை எதிர்த்து வெல்லுதல் கூடாதென்றறிந்து வஞ்சனையால் வெல்லக்கருதி ஒரு நாள் அவனிடம் வந்து, 'ஐயரே! அறிவின்மையால் இத்தனை நாள் உம்மைப் பகைத்து வந்தேன். பொறுத்தருள்க?' என்று வீழ்ந்து வணங்கினான். சூரியசன்மா அவனிடங் கொண்ட பகைமை முற்றும் அப்பொழுதே மறந்து அவனோடு அளவளாவினான். இருவரும் நெருக்கமாய் நெடுநாள் பழகினார்கள். ஒருநாள் ஆனந்தன் தன் எண்ணத்தை முடித்துக் கொள்ள வெண்ணி, ஐயரே! நமது வீதியில் புலி யொன்று இரவில் வருகிறது. நான் அது வருஞ் சமயம் பார்த்திருந்து அழைக்கிறேன். நீர் உடனே வெளிவந்து அதனைக் கொல்லுக' என்று கூறி ஒரு பசுவிற்குப் புலித்தோல் போர்த்து நிறுத்தி நள்ளிரவில் சூரியசன்மாவை அழைத்தான். சூரியசன்மா ஓடிவந்து அம்பெய்து அப் பசுவைக் கொன்றான். அவனைக் கோஹத்தி பற்றியது. அதனோடு அமையாது ஆனந்தன், 'ஐயரே! நீர் இங்கேயே இருக்க, நான் நுமது மனைக்கணுள்ள கள்வர்க்கு அஞ்சாது அங்குச்சென்று வருவேன்' என்று கூறிப் போய்ச் சூரியசன்மாவின் மனையாட்டியிடஞ் சென்று, 'அம்மையாரே! கள்வர் வருவர். நீர் இங்கிராதீர். உமது மகன் விடுதியிற் சென்றிருக்க' என்று அவளை அவள் மகனிருக்கையின் விட்டு, அவள் மகனையும் மருகியையும் அவன் விடுதியிற் கொணர்ந்து விட்டுத் திரும்பிச்சென்று 'ஐயரே! ஓர் அடாத செய்கை நடைபெறுகின்றது. நுமது மனைவியாள் வேற்றுமகனொருவனுடன் ஒரு பாயலிற் கிடக்கக் கண்டேன், காண்க' எனவே அவன் விரைந்து சென்று வாயில்கள் அடைத்திருந்ததனாற் புறக்கடைவழியாக வந்து மதிற் சுவர் ஏறிக் குதித்து உட்புகுந்து தன் விடுதியில் ஒருவனும் ஒருத்தியும் ஒரு பாயலில் இருக்கக்கண்டு அவர்கள் மகனும் மருகியும் என்றறியாது கொன்றான். மறுநாட் காலையிற் சூரியசன்மாவின் மனைவி தன்னகம் புக்கபோது மகனும் மருகியுங் கொலையுண்டு கிடப்பது கண்டு வாயினும் வயிற்றினும் அடித்துக்கொண்டு கதறினாள்.

அவள் அழுகையொலி கேட்ட சூரியசன்மா ஓடிவந்து பார்த்து நடந்த வஞ்சனை யறிந்து தானும் புலம்பினன். அதற்குள் ஆனந்தன் அந்தணர் அவைக்குச்சென்று 'சூரியசன்மா பசுக் கொலை செய்தது மன்றித் தன் மகனையும் மருகியையுங் கொன்



றிட்டான்' என்று அறிவித்தான். அவையத்தார் சூரிய சன்மாவை வருவித்து விசாரித்தனர். சூரியசன்மா மனமிக வருந்தி 'ஐயன்மீர்!' சூதால் விளைந்த கெடுதி இவை. ஆனந் தனே இவற்றிற் கெல்லாம் காரணம்' என்றான். அவையத்தார் 'அங்ஙனமாயின் நீ கேதாரநாதன் சந்நிதியிலுள்ள இடபத் திற்குப் புல் அருத்துவாய்' என்றனர். அதற்கு அவன், 'அந்த ஓர் இடபத்திற்கே யன்று; திருமதில் இடபத்திற்கும், கோபுரத் திடபத்திற்கும் உடன் அருத்துவன், வருக' என்றான். நான்கு அந்தணர்கள் அவனுடன் சென்றார்கள். 'கேதார நாதன் திரு நாமமாகிய பஞ்சாக்ஷரத்திற்குத் திருவருளுண்டெனில், இடபங் களே வருக!' என்றான் சூரியசன்மா. உடனே அவ் விடபங்கள் வந்து அவன் தந்தபுல்லை அருந்தின. அவ் வருஞ் செயலை வியந்து சூரியசன்மாவை யாவரும் வணங்கினார்கள். அப் போது அவன் மனையாள் அவனை நோக்கி 'இறந்து பட்ட பசுவும், மகனும், மருகியும் உயிர் பெற்றெழும்படி செய்க' என்று வேண்டினாள். அவன் பஞ்சாக்ஷரத்தை ஓதிய வளவில் பசுவும், மகனும், மருகியும் துயினீத்தவர்கள்போல எழுந் திருக்கவே, யாவரும் மனமகிழ்ந்தார்கள். ஆனந்தன் ஓடிக் காட்டில் ஒளித்துக் கடும்பிணி கொண்டு மாய்ந்து நரகமடைந் தான். (௩௧)

[இஃது உபதேசகாண்டத் துளது.]

---

## ௩௪-ஆம் அதிகாரம்

# தெரிந்து வினையாடல்

தேசிகனுக் கொண்ட சுரரிறைக்குத்
தீங்கிழைத்தான் றூசார் துவட்டாச்சேய்
சோமேசா—பேசில் எனைவகையாற் றேறியக்
கண்ணும் வினைவகையான் வேறுகு மாந்தர் பலர்.

அஃதாவது அத் தெளியப்பட்டாரை அவர் செய்யவல்ல வினைகளை அறிந்து அவற்றின் கண்ணே ஆளுந் திறம்.

ருஉ. (இ-ள்.) சோமேசா—! பேசில்-சொல்லுமிடத்து, எனை வகையால் தேறியக்கண்ணும் - எல்லா வகையானும்

ஆராய்ந்து தெளிந்து வினை வைத்த பின்னும், வினை வகை யான் - அவ் வினையின் இயல்பானே, வேறுகும் மாந்தர்



பலர் - வேறுபடும் மாந்தர் (உலகத்துப்) பலர் -(அதற்கு எடுத்துக் காட்டு) - தூசு ஆர் துவட்டா சேய் - குற்றம் நிறைந்த துவட்டா என்னும் அசுரன் மகனுகிய விச்சுவ வுருவனென்பான், தேசிகனு கொண்ட -(தன்னைக்) குரு வாகக் கொண்ட, சுரர் இறைக்கு - இந்திரனுக்கு, தீங்கு இழைத்தான்—கெடுதி செய்தான் (எ - று.)

தன் அரசனுகிய சச்சந்தன் அவன் மனைவியாகிய விசயை பால் மிக்க மோகங்கொண்டு அரசாட்சியை அமைச்சனுகிய தன் பால் விட்டு அந்தப்புரத்திலேயே இராப்பகல் கழிக்க, அவனைக் கொன்ற கட்டியங்காரன் போல அரச இன்பத்தினை வெஃகி

விகாரப்படுவதன்றி அதனைக் குற்றமென்றெழுந்து தம் இயல்பில் நிற்பார் அரியராகலின் "வேறாகு மாந்தர்பலர்' என்றார் [சச்சந்தன்-சீவகன் தந்தை] வினை வைப்பதற்கு முன் எல்லாக் குணங்களும் உடையராய், வைத்தபின் விகாரப்படுவாரை இடையாய தொரு வினையை வைத்தறிந்து ஒழிக்க என்பதாம். அவ் வினையின் இயல்பாவது நற்குணமுடையாரையும் மனவுறுதியின்றெனின் தீச்செயல் புரிய ஏவும் அத் தொழிலது தன்மை. இதனான் ஒரு வகையான் ஒழிக்கப்படுவார் இவரென்பது கூறப்பட்டது. ஆ-'ஆக' என்பதன் விகாரம்.

கதை:—கிரேதயுக மொன்றில் இந்திரன் அரியணை மேலிவீற்றிருந்து அரம்பையர் ஆடலினும் பாடலினும் மனத்தைச் செலுத்திக் களித்திருக்கும்போது தன் குருவாகிய பிரகஸ்பதி அங்கு வரக் களிமயக்கினால் அவரை வழிபடா திருந்தான். அது கண்டு பிரகஸ்பதி அங்கு நில்லாது விரைவின் ஏகினார். இந்திரனுடைய செல்வங் குன்ற, இது குருவை வழிபடாமையின் வந்த கேடென்றறிந்து அவன் அவரை எங்கெங்குந் தேடினான்; ஓரிடத்துங் கண்டானில்லை. அதனாற் சத்தியலோகஞ் சென்று நான்முகனுக்கு நிகழ்ந்த செய்தியைக் கூற அவன் வஞ்சனையாக 'உனது குருவை நீ காணுமட்டுந் துவட்டா என்னும் அசுரனது மகனாகிய விச்சுவவுருவனைக் குருவாகக் கொள்க' என்றான். அவ்வாறே அவ் விச்சுவவுருவனைக் குருவாகக் கொண்டு ஒரு வேள்வி இயற்றிய வளவில், அவன் அசுரர்க்கு நன்மையுஞ் சுரர்க்குத் தீமையும் உண்டாக நினைந்து அதனைச் செய்ய அஃதறிந்த இந்திரன் அவனை வச்சிராயுதத்தால் தாக்கினான். அப்போது விச்சுவவுருவனுடைய மூன்று தலைகளும் மூன்று பறவைகளாய்ப் பறந்து சென்றன. அப்பொழுதே பிரமபாவம் இந்திரனைப்பற்றியது. தேவர்கள் அதனைப்பகுந்து மண், மகளிர், நீர்,மரம் இவற்றிற்குக் கொடுத்தனர். அது மண்ணினிடம் உவராகியும், மகளிரிடம் பூப்பாகியும், நீரினிடம் நுரையாகியும், மரத்தினிடம்

பயிர்களையும் கழிய அத் தேவர்கள் அதற்கு மாறுக மண்ணும் தூர்ந்து வடு நீங்கவும், மகளிர் மகப்பெறுமளவும் அகழி
நாயக
னொடு இன்பநுகரவும், நீர் இறைக்குந்தொறும் ஊறி நிறைய வும் மரம்வெட்டுந்தோறும் தளிர்ந்து நிற்கவும் நலமுதவினார்கள்.

[இது திருவிளையாடர்புராணத் துளது]

---

## ருரு-ஆம் அதிகாரம்

# சுற்றந்தழால்

ஆர்வீ டணனோ டளவளா வாதரக்கன்
சோர்விலா வாழ்விழந்தான் சோமேசா—நேரே
அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்
கோடின்றி நீர்நிறைந் தற்று.

அஃதாவது ஒருவன் தன் கிளைஞரைத் தன்னைவிட்டு நீங்காமல் அணைத்தல். 'சுற்றம்' என்பதில் 'சுற்று' பகுதி, 'அம்' வினைமுதற்பொருள் விகுதி எனவும், தழால் என்பதில் 'தழுவு' பகுதி, 'ஆல்' தொழிற் பெயர் விகுதி எனவுங் கொள்க.

ருரு. (இ - ள்.) சோமேசா—! நேரே - தகுதியாகவே, அளவளா இல்லாதான் வாழ்க்கை - (தன்) சுற்றத்தோடு

நெஞ்சு கலத்தல் இல்லாதானுடைய வாழ்க்கையானது, குளவளா—குளத்தினுடைய பரப்பு, கோடு இன்றி - கரையின்றி, நீர் நிறைந்தற்று-நீர் நிறைந்தாற்போலும்-(அதற்கு எடுத்துக்காட்டு) - அரக்கன் - இராவணன், ஆர் வீடணனோடு - (அன்போடு) பொருந்திய (தம்பியாகிய) விபீஷணனுடனே, அளவளாவாது - மனங் கலத்தலின்றி, சோர்வு

இலா வாழ்வு
உயிர்வாழ்தலை

இழந்தான் - குறைவற்ற செல்வத்தோடு
இழந்துவிட்டான் (எ - று).

சுற்றத்தோடு என்பது அதிகாரத்தான் வந்தது.

அளவளா-
முதனிலைத் தொழிற்பெயர்; அதன் பொருள் தன் அளவும் சுற்றத்தின் அளவும் விசாரித்தறிதல் என்பது. அஃதீண்டு ஆகுபெயராய் 'நெஞ்சு கலத்தல்' என்னும் பொருளதாயிற் றென்க.

வாழ்க்கை ஆகுபெயராய் அதற் கேதுவாகிய செல்வங்களை உணர்த்தி நின்றது. நிறைதல் என்னும் குளமாகிய இடத்தின் கண் நிகழ் நீராகிய பொருளின் தொழில், குளமாகிய இடத்தின்

மேனின்றது ; இஃது உபசார வழக்கு, நிறைந்தற்று என்புழி 'ஆல்' என்னும் வினையெச்ச விகுதியேனும், 'து' என்னும் தொழிற்பெயர் விகுதியேனும் புணர்ந்து கெட்ட தென்க. 'ஆர் வீடணன்' என்பதற்கு (நற்குணங்கள்) நிறைந்த விபீஷணன் எனினும் இழுக்காது வீடணன்—விபீஷணன் என்னும் வட சொல்லின் விகாரம் ; அது (பகைவர்க்கு) மிக்க பயங்கரனானவ னெனப் பொருள்படுமென்க.

கதை :—இராம பத்தினியாகிய சீதையை இராவணன் அசோக வனத்திற் சிறை வைத்தமை யறிந்த அவன் தம்பியாகிய விபீஷணன் 'இஃது அடாத காரியம் ; சீதையை இராமன் பால் விட்டுச் சரண் புகுவாய்' எனப் பலமுறை கூறியுங் கேளானாய் அவனைச் சினந்து பேச, நன்மொழி கொள்ளாத தமையனை விட்டு நீங்கி இராமனைச் சரணடைந்தான். (ருக)

[இஃது இராமாயணத் துளது.]

---

## ருச-ஆம் அதிகாரம்

# பொச்சாவாமை

முப்புரத்தோர் வேவ வுடனிருந்த மூவரே
துப்பினாற் கண்டறிந்தார் சோமேசா—வெப்பால்
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

அஃதாவது உருவும் திருவும் ஆற்றலும் மகிழ்ந்து தன்னைக் காத்தலினும் பகையை காரியங்களினுஞ் சோர்தலைச் செய்யாமை.

முதலாயவற்றன்
அழித்தல்[முதலிய

ருச.° (இ - ள்.) சோமேசா—! தம்
மகிழ்ச்சியின்
தாம் மைந்துறும் போழ்து - (யாவரும்) தமது மகிழ்ச்சி யின் கண் தாம் வலியுறும்பொழுது, இகழ்ச்சியின்-மூற் காலத்து அதனால் ஆகிய சோர்வினால், எப்பால் கெட் டாரை உள்ளுக-எவ்வகையானும் கெட்டவர்களை நினைக்க,- (அதற்கு எடுத்துக்காட்டு)-முப்புரத்தோர் வேவ - திரிபுரத் தார் (தீயின்) வேவ, உடன் இருந்த மூவரே - அவர் களுடன் இருந்த (சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும்),

சோ—6

அஉ சோமேசர் முதுமொழி வெண்பா

மூவரே, துப்பினால் கண்டறிந்தார் - அனுபவத்திற் கண் டறிந்தனர் (எ - று.)

உரு, திரு, ஆற்றல் முதலிய காரணங்களோடு அவர்க்குள தாகிய உரிமையை மகிழ்ச்சிமே லேற்றித் 'தம் மகிழ்ச்சியின்' என்றும், இகழ்ச்சியுங் கேடும் உடன் தோன்றுமாகலின், 'மகிழ்ச் சியின் மைந்துறும் போழ்து' என்றுங் கூறினார். கெட்டவர்களை நினைக்கவே, நாமும் அவ்வாறே கெடுவோமென்று அதன்கண்
மைந்துறுரென்பது கருத்து. 'எண்ணுக'
வாருமுளர். மூவரே—ஏகாரம் பிரிநிலை.
மூற்றும்மையும் விகாரத்தாற் றொக்கன.

வென்று பாடமோது
எப்பால்—ஆனுருபும்

**கதை:**—தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி என்னும் அசுரர் மூவர் மிக்க சிவபத்தியுடையார் தேவர்களைத் துன்புறுத்தியதுடன் பொன், வெள்ளி, இரும்பு ஆகிய இவற்றாலாகிய மூன்று அரண்களில் இருந்து எங்கெங்கும் பறந்து சென்று கீழிறங்கி உயிர்களுக்குக் கேடு செய்தனர். திருமால் புத்தனைத் தோன்றி அவர்கள் சிவபத்தி கெடப் போதித்தார். அதனால் அவர்களும் மயங்கினார்கள். அதன் பின் திருமாலாதி தேவர்கள் கைலை சென்று பெருமானை யடைந்து, அவர்கள் செய்யுந் துன்பத்தை விண்ணப்பித்து அவர்களை அழிக்கவேண்டினார்கள். பெருமான் அதற்கு இன்றியமையாத கருவிகள் அமைக்கவென ஏவத் தேவர்கள் பூமியைத் தேராகவுஞ் சந்திர சூரியர்களை உருளைகளாகவும் மேருவை வில்லாகவும் வாசுகியை நாணாகவும் விஷ்ணுவை அம்பாகவும் அக்னியை அம்பி னுனியாகவுஞ் செய்து கருவிக ளமைத்தார்கள். பெருமான் அவை கொண்டு பூரதமீதேறிச் சென்று திரிபுரத்தை யடைந்து நகைத்த வளவில் அப்புர மூன்றும் வெந்து நீறாயின. அவ்வாறாக; அப்புரத்தாருள் மற்றையோரெல்லாம் வெந்து அழியவும், புத்தன் போதனையால் மயங்கிச் சிவபூசையைக் கைவிடாத சுதன்மன், சுசீலன், சுபுத்தி என்னும் மூவரே பிழைத்துப் பெருமான் பணித்தவாறே காஞ்சியில் இலிங்கப் பிரதிஷ்டை செய்து பூசித்த பின் கைலையில் இருவர் துவாரபாலகர்களாகவும் மற்றொருவர் முழாமுழக்குபவராகவும் நியமிக்கப் பெற்றனர்.

'மூவார் புரங்க ளெரித்த வன்று மூவர்க் கருள்செய்த' வென ஆளுடைய பிள்ளையாரும் 'மூவெயில் செற்றஞான் றுய்ந்த மூவரிலிருவர் நின்திருக் கோயிலின் வாய்தல், காவலாளரென் றேவிய பின்னை யொருவ நீகரி காடரங் காக, மானை நோக்கியோர் மாநட மகிழ மணி முழாமுழக் கவருள் செய்த

'தேவ தேவரின் றிருவடி யடைந்தேன் செழும்பொ
ழிற்றிருப் புன்கூரு ளானே' யென ஆளுடைய
காண்க.
நம்பிகளும் பணித்தமை
(௫௪)
[இது காஞ்சிப்புராணத் துளது]

---

## ௫௫-ஆம் அதிகாரம்
# செங்கோன்மை

மைந்தனை யுமலச மஞ்சன் றனைவெறுத்தான்
சுந்தரச்செங் கோற்சகரன் சோமேசா—முந்துங்
குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்

அஃதாவது அரசனாற் செய்யப்படும் முறையினது தன்மை, அம் முறை ஒருபாற் கோடாது செவ்விய கோல்போலுதலின் செங்கோல் எனப்பட்டது. வடநூலாரும் தண்டம் என்பர்.

௫௫. (இ - ள்.) சோமேசா—! முந்தும் குடி - முன்
னேறுதற்குரிய குடிகளை, புறக்காத்து - பிறர்
காத்து, ஓம்பி - தானும் (வருத்தாது) பேணி,

வருத்தாமற்
குற்றம் கடி

தல் - (அவரிடத்துக்) குற்ற நிகழின் (அதனை ஒழிக்க வேண்டித்) தண்டித்தல், வேந்தன் வடு அன்று - அரச னுக்குப் பழியன்று, தொழில் - தொழில் ஆகலான், — (அதற்கு எடுத்துக்காட்டு) - சுந்தரம் செங்கோல் சகரன் - அழகு பொருந்திய நீதியையுடைய சகரனென்னும் அர சன், அசமஞ்சன்தன் - அசமஞ்சனை, மைந்தன் எனுமல் (தன்) மகனென்று கருதாமல், வெறுத்தான் - வெறுத்துத் துரத்தினன் (எ - று.)

துன்பஞ் செய்தல், பொருளைக்கொள்ளுதல், கொல்லுதல் எனத் தண்டம் மூன்றாகலின் அவற்றுட் குடிகளிடத்திற் செய் தற்கேற்பன முன்னைய இரண்டுமே என்பது 'குற்றங் கடிதல்' என்பதனாற் பெற்றாம். தன்கீழ் வாழ்வாரைத் தண்டித்தல் அறம் அன்றாகலின் வடுவாமென்பதனைத் தடையாக்கி, வடுவாகாது. அரசனுக்கு அவரை அக் குற்றத்தி னீக்கித் தூயராக்குதலுஞ் சாதிதருமமென விடை கூறினா ரென்க. எனுமல்—என்னுமல் என்பதன்கண் னகரமெய் தொக்கது.

## சோமேசர் முதுமொழி வெண்பா

[illegible]து;—சூரிய வமிசத்திற் றோன்றிய சகரன் என்னும் சக் கரவர்த்தி தன மகன் அசமஞ்சன் என்பான் தீவழி யொழுகிப் பற்பல சிறுவர்களைச் சரயுநதியி லெறிந்து கொன்றமை கண்டு தன் நாட்டை விட்டுத் துரத்தினன். (௩௫)

[இஃது இராமாயணத் துளது.]

ருகூ-ஆம் அதிகாரம்

# கொடுங்கோன்மை

ஐவரில் லாளமூத வன்றேகண் டேக்குற்றூர்
துய்யகங்கை சேய்முதலோர்
சோமேசா—மெய்யேயாம்
அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

அஃதாவது அம் முறையினது
கொடுங்கோல் ஆகிய உவமையின்
காயிற்று.
கோடுதற்றன்மை. இங்கும்,
பெயர் அஃதியாகிய பொருட்

ருசு. (இ-ள்.) சோமேசா—! அல்லல்பட்டு-(அரசன் முறை செய்யாமையாற் குடிகள்) துன்பமுற்று, ஆற்றாது - (அதனைப்) பொறுக்கமாட்டாது, அழுத கண் நீர் அன்றே - அழுத கண்ணீர் அன்றே, செல்வத்தை தேய்க்கும் படை - (அவன்) செல்வத்தைக் குறைக்குங் கருவி, மெய்யே ஆம் - உண்மையாகவே (அக் கண்ணீர் கருவி) யாகும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - ஐவர் இல்லாள் அழுத அன்றே - பஞ்ச பாண்டவரது மனைவியாகிய திரௌபதி (அரசவையில் துரியோதனன் தன்னை மானபங்கஞ்செய்ய) அழுத அப்பொழுதே, கண்டு - (அதனைக்) கண்டு, தூய்ய கங்கைசேய் முதலோர் - பரிசுத்தியுடைய கங்காநதியின் புத்திரரான பீஷ்மர் முதலிய பெரியோர்கள், ஏக்குற்றார் - (துரியோதனதியர்க்கு வாநின்ற அழிவை அறிந்து) ஏக்கமடைந்தார்கள் (எ - று.)

அழுத கண்ணீர்—அழுதலான்

பது காரணப்பொருட்டில் வந்த

வந்த கண்ணீர்; அழுத என்

பெயரெச்சமென்க. செல்

வத்தை மர மென்றது கண்ணீரைப் படையென்றது

ஏகதேச

சோமேசர் முதுமொழி வெண்பா

அ௫

வுருவகவணி யென்க. அல்லற் படுத்திய பாவத்தினது தொழி லாகிய செல்வத்தைத் தேய்த்தல் அப் பாவத்திற்கு ஏதுவாகிய கண்ணீர்மேனின்றது; இஃது உபசார வழக்கு. அக் கண்ணீரிற் கொடிது வேறின்மையின், செல்வம் விரைவிற் றேயுமென்பது கருத்து. ஐவர்—தொகைக் குறிப்பு. ஏக்குற்றூர்—எக்கழுறு என்பதன் விகாரமாகிய 'ஏக்குறு' பகுதி. 'தூய்மை' படிந்தோர் பாவத்தைப் போக்குங் கங்கைக்கேனும் மூவாசை முதலற நீத்த கங்கை சேய்க்கேனும் அடையாமென்க. கண்ணீர் படை ஒக்கு மென்றது, கண்ணீரையே படையென்றதனால் பொருளுக்கும் உவமைக்கும் ஐக்கியங் கூறுங் காட்சியணி இருத்தல் காண்க. இதனை வட நூலார் 'நிதர்சனலங்காரம்' என்ப. 'ஐவரில்லா ளுண்ணந்த' என்பது பாடாந்தரம்.

கதை:—தருமபுத்திரன் சகுனியுடன் சூதாடி அரசுமுதலிய செல்வம் யாவுந் தோற்றபின் துரியோதனன் ஏவலால் துச்சாத னன் திரௌபதியைத் தலைமயிர் பற்றி இழுத்து வந்து சபையில் நிறுத்தித் துகிலுரிந்து மானபங்கஞ்செய்ய முயன்றபோது அவள் கண்ணீர் ஆறாய்ப்பெருக அழுதமை கண்டு பீஷ்மர், துரோணர் முதலிய பெரியோர்கள் துரியோதனனுக்கு அஞ்சிச் செயலற் றிருந்தாரேனும் இக் கண்ணீர் அத் துரியோதனன் குலம் அழிதற் கேதுவாம் என்று ஏங்கினார்கள். 'ஆறாகி யிருதடங்க ணஞ்சன வெம்புனல்சோர வளகஞ் சோர, வேறான துகிறனைந்த கைசோர மெய்சோர வேறோர் சொல்லுங், கூறாது கோவிந்தா கோவிந்தா வென்றரற்றிக் குளிர்ந்து நாவி, னூறாத வமுதூற வுடல்புளகித் துள்ளமெலா முருகி னாளே' என்னும் பாரதக் கவியை நோக்குக. (ருக)

[இது பாரதத் துளது.]

---

## ருஎ-ஆம் அதிகாரம்
# வெருவந்த செய்யாமை

வெய்துரையா லக்கணமே வீந்தான் சிசுபாலன்

றுரய்யின் முலையுமைபாற் சோமேசா—வுய்யாக்
கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

அஃதாவது பிறர் அஞ்சுவதும் தா
னஞ்சுவதுமாகிய தொழில்களைச் செய்யாமை.



ருஎ. (இ—ள்.) தொய்யில் முலை உமையால் - தொய்யிலெழுதிய தனத்தையுடைய உமாதேவியின் பாகம் அமைந்த, சோமேசா!—கடுஞ் சொல்லன் - (ஒருவன்) கடிய சொல்லையும் உடையனாய்-கண் இலன் ஆயின்- கண்ணோட்டமும் இலனாமாயின், நெடுஞ்செல்வம் - (அவனது) பெரிய செல்வம், நீடு இன்றி - நீடுதலின்றி, ஆங்கே கெடும்-அப்பொழுதே கெடும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - சிசுபாலன் - சிசுபாலன் என்பான், வெய்து உரையால் - கடிய சொல்லால், உய்யா - (சிறிது காலமும்) பிழைத்திராமல், அக்கணமே - அந்தக் கணத்திலேயே, வீந்தான் - இறந்தான் (எ - று.)

'வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு ளீட்டங் கட் காமமோ டேழு' எனப்பட்ட விதனங்க (விசனங்க) ளுட் கடுஞ் சொல்லையும் மிகு தண்டத்தையும் நாயனார் இவ் வெருவந்த செய்தலுள் அடக்கினார். கண்—தாக்ஷிண்யம்; ஆகுபெயர். நீடுதல்—நீட்டித்தல். உய்யா—உய்யாமல்; வினை யெச்ச வீறு தொக்கது. (ருஎ)

கதை:—மேல் உரைத்தாம் [-கஉவது பாட்டுரை காண்க.]

---

## ௫அ-ஆம் அதிகாரம்
# கண்ணோட்டம்

*மாலான் முதலிகழ்ந்த வானவர்தீங்*
*கும்பொறுத்துத் தோலா விடமுண்டாய்*
*சோமேசா—சால*
*ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணோடிப்*
*பொறுத்தாற்றும் பண்பே தலை.*

*அஃதாவது தன்னோடு பழகினாரைக் கண்டால் அவர் கூறி யன மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் கண் சென்றபோது நிகழ்வதாகலின், அப் பெயருடைய தாயிற்று.*

௫அ. (இ - ள்.) சோமேசா!—சால ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணும் - தம்மை மிக வருத்தும் இயல்புடையாரிடத்தும், கண் ஓடி - கண்ணோட்டம் உடையராய்

சோமேசர் முதுமொழி வெண்பா

அஎ

பொறுத்தாற்றும் பண்பே - (குற்றத்தைப்) பொறுக்கு மியல்பே, தலை - தலையாய இயல்பாவது,—(அதற்கு எடுத் துக்காட்டு) - மாலான் முதல்-திருமால் முதலிய, இகழ்ந்த வானவர் தீங்கு - (நின்னை இறையென நினையாது மயங்கி) அவமதித்த தேவர்களுடைய குற்றத்தை, பொறுத்தும் - பொறுத்தும், தோலா - (ஒன்றற்கும்) பின்னிடாத (யாவ ரையும்) அழிக்க வெழுந்த, விடம் உண்டாய் - விடத்தைப் புசித்தாய் (எ - று.)

'பண்பினர்' என்றதனல் அவரொடு பழகுதல் பெற்றும். ஒறுத்தாற்றும், பொறுத்தாற்றும் என்பன ஒரு சொன்னீர. 'மால்' என்றது 'மாலான்' என்றது மயக்கமுடைமை தோன்ற நின்றது (மால்—மயக்கம்.) ஈங்கு பொறுத்தும் என உம்மை பிரித்துக் கூட்டுக; இஃது எதிர்மறை யும்மை, பொறுக்கலாகாதது என்னும் பொருளைத் தருதலின். தோலா—தோலாத; ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'செற்றுல முயிரனைத்து றண்டிடவே நிமிர்ந்தெழலும்' (கந்தபுராணம்,) 'வருகனல்வல் விடந்தாக்கி மாயவன்வெண் ணிறமேனி, கருகின்ற லன்று தொட்டுக், கரியனெனப் பெயர்பெற்றுன்', 'திருமலரோ னுடற் பொன்மை திரிந்துபுகை நிறமுற்றுன்' (காஞ்சிப் புராணம்,) 'வானவரு மிந்திரனு மாலயனு மேசெத்துப், போனவிடம் புன் முளைத்துப் போகாதோ—ஞானபிரா, னத்த னருணேச னன் றெழூஉ நஞ்சுதனைப், புத்தியுடன் கொள்ளாத போது' (திருவருணைத் தனி வெண்பா,) இன்னோரன்ன பாட்டுக்களான் அவ்விடம் தோலாவிடமாத லறிக.

கதை:—சுராசுரர்கள் அமுதம் வேண்டித் திருப்பாற் கடலில் மந்தரகிரியை மத்தாக நாட்டி வாசுகியைக் கயிறுகப் பூட்டிக் கடைந்தினைத்தார்கள்; மந்தரகிரியும் நிலைபெருது தாழ்ந்தது. அப்போது அங்கு வந்த வாலி உதவியாய் நின்று மேலுங் கடையத் திருமால் கூர்மவடிவங்கொண்டு மந்தரகிரியைத் தாங்கினர். மிக்க கடுமையாகக் கடையும்போது வாசுகி வருத்தம் பொருது விஷத்தைக் கக்கிப் பெருமூச்செறியக் காளகூட மென்னும் விஷம் கடலினின்றும் எழுந்து கடனீரைச் சுவற்றி அண்ட கடாகத்தையும் எரித்து உயிர்த்தொகைகளை எல்லாஞ் சுட்டு வருத்த, வாலி அஞ்சி ஓடினன்; பிரம விஷ்ணுக்கள் உருக்குலைந் தார்கள். இறைவனை மறந்தமையால் எடுத்த காரியம் இடையூறுற்றதன்றித் தமக்கெல்லாம் இறுதியும் வரநின்றதெனு அஞ்சிக் கைலை புகுந்து நிகழ்ந்தவற்றை விண்ணப்பித்து, 'இதுபொழுது காத்திலையேல் மெய்க்கிறுதியின்றேயாம், விதுமுடித்த

பெருங்கருணை வெள்ளமே' என்றிரக்கப் பெருமான் இருந்த நிலையில் திருக்கரத்தை நீட்ட, அவ் விடந் திரண்டு அதனுள் அடங்க, அக்கணமே அதனை உண்டு கண்டத்தின் வைத்தார். இஅ

[இது காஞ்சிப்புராணத் துளது.]

---

## ருகூ-ஆம் அதிகாரம்

# ஒற்றுடல்

வேதனில்லாள் வீந்ததிற மீனவற்கு நீதெரித்தாய்
சோதி பழியஞ்சுஞ் சோமேசா—பூதலத்தின்
எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்
வல்லறிதல் வேந்தன் றொழில்

அஃதாவது பகை நொதுமல் நட்பு என்னும் முத்திறத்தாரிடத்தும் நிகழ்ந்தன அறிதற்கு ஒற்றரை ஆளுதல்.

௫௬. (இ - ள்.) சோதி-சோமசூரியாக்கினிகளுடைய சோதிக்கெல்லாம் மூலமாகிய பரஞ்சோதியே, பழியஞ்சுங் - (பாண்டியற்கு வாநின்ற) பழிக்கு அஞ்சின, சோமேசா!— பூதலத்தின் - பூவுலகின்கண், எல்லார்க்கும் - எல்லார்கண்ணும், நிகழ்பவை எல்லாம் - நிகழ்வன எல்லாவற்றையும், எஞ்ஞான்றும் - நாடோறும், வல் அறிதல் - (ஒற்றனால்) விரைந்தறிதல், வேந்தன் தொழில் - அரசனுக்குரிய தொழில்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வேதன் - ஓர் அந்தணனுடைய, இல்லாள் வீந்த திறம் - மனைவி இறந்த விதத்தை, மீனவற்கு - பாண்டியனுக்கு, நீ தெரித்தாய் - நீயே தெரிவித்தாய் (எ - று).

எல்லார்க்கும் என்றது முத்திறத்தாரையும்; எல்லார் கண் ணும் எனப் பொருள் படுதலின், இது வேற்றுமை மயக்கம். நிகழ் வனவெல்லாம் என்றது நல்லனவுந் தீயனவும் ஆகிய சொற்களை
யுஞ் செயல்களையும், அவை நிகழ்ந்த பொழுதே அவற்றிற்குத் தக்கபடியாவது தெளிதலாவது செய்யவேண்டுதலின், 'வல்லறி

தல்'
லின்

என்றும், அவ்விரண்டு தொழிற்கும் அறிதல் காரணமாக அதனையே உபசார வழக்கால், 'தொழில்' என்றுங் கூறி

சோமேசர் முதுமொழி வெண்பா

அக

ஞர். ஒற்றஞல் என்பது அதிகாரத்தான் வந்தது. நீ பிரிசிலே ஏகாரம் விகாரத்தாற் ெருக்கது.

என்புழிப்

கதை:—குலோத்துங்க பாண்டிய னென்பான் செங்கோல் செலுத்துநாள், ஓர் அந்தணன் தன் மனைவியோடும் கைக் குழந்தையோடுந் திருப்புத்தூரினின்றும் புறப்பட்டு மாமஞர் வீடுசெல்ல மதுரைக்கு வருகிற வழியில் தாகவிடாய்கொண்ட மனைவியைக் குழந்தையுடன் ஒரு பெரிய ஆலமரத்தி னடியில் விட்டு நீர் கொணரச் சென்ருன். அவ் வாலமரத்தில் நெடுங் காலமாய்ச் சிக்குண்டிருந்த ஓர் அம்பு காற்ரு லலைப்புண்டு வீழ்ந்து அப் பார்ப்பனி வயிற்றின் ஊடுருவிற்று; அவளும் உயிர் இழந்தாள். அத் தருணத்தில் அம்பெறிட்ட வில் லேந்தியவ ஞெ வேடன் ஒருவன் வெயிற்கு ஒதுங்கி அவ் வாலடியில் நின் ருன். நீர் கொணரச் சென்ற அந்தணன் நீரோடு திரும்பிவந்து தன் மனைவி இறந்து கிடப்பதைக் கண்டான். இஃ தியாவர்

செய்தாரென்று சுற்றிப் பார்த்தான்; வேடன் ஒருபுறம் நிற்கின் ருன். அவனே செய்தானென்று துணிந்து அரசனுணைகொண்டு

அவன் தன்னுடன் வரும்படிசெய்து இறந்த மனைவியைத் தன் முதுகிலிட்டுக் குழந்தையை இடுக்கி மதுரை நோக்கி வழிநடந்து வந்து பாண்டியன் அரண்மனை வாயிலில் வேடனை விட்டு மனைவி யின் சவத்தை இட்டு, 'நீதி தவருத மன்னவ! இது முறையோ!' என்று கதறினன். வாயில் காப்போர் நிகழ்ந்தன யாவும் பாண் டியதற்குத் தெரிவித்தார்கள். பாண்டியன் உடனே தன் அரி யணையினின்றும் போந்து அந்தணன் நிலை கண்டு வருந்தி விசா ரித்தான். அந்தணன் நிகழ்ந்தன கூறி அவ் வேடனே கொன்ருனென்றான். அதன் பின் அரசன் வேடனது வாய்ப் பிறப்பைக் கேட்டான். அவன் தான் கொன்றதுமில்லை, கொன்றாரைக் கண் டதுமில்லை என்ருன். மேல் தான் இட்ட கட்டளைப்படி அவ்வேட னைச் சிறையிலிட்டுத் தண்டலாளர்கள் பலவாறு கடுந்தண்டனை செய்தும் அவன் ஒரு சொல்லாகச் சொன்னமையாலுங் கொன்ற குறிப்பு முகத்திற் ருேன்ருமையாலும் ஒன்றுந்தோன்ருது பாண் டியன் சுந்தரேசப்பெருமான் திருமுன் புகுந்து, 'மன்ருடு மணியே! ஒன்ருலும் என் ஐயம் தீர்தற் கிடனில்லை. நீரே என்

தாழ்வு கெட நிகழ்ந்தவற்றைத் 'தெரிவிக்கவேண்டும்' என்று பிரார்த்தித்தான். உடனே 'வணிகவீதியின்கண் ஒரு வீட்டில்

மணம் நடக்கிறது. அந்தணனோடு நீ
ஐயந் தெளியும்' என்று ஆகாயவாணி

அங்கு வருவாய். உனது
கூறக்கேட்டு அவ்வாறே
அன்று இரவு அந்தணனோடு அவ் வீட்டில் ஒரு பக்கம்

மறைந் திருந்தான. அன்று அம மணமகன ஆயுள முடிய

யமதூதர்கள் அவனுடைய உயிரைக் கவர வந்தார்கள். பாண்டியனும் அந்தணனும் கேட்கும்படி வந்த தூதர்களி லொருவன் 'யாம் எவ் கூ0


வாறு இம் மணமகன் உயிரைக் கொள்வது? அவன் உடம்பிற் பிணி யொன்றுமில்லையே! காரணமின்றி உயிர் கொள்ளப் படாதே'! என்றான். அதற்கு மற்றவன், 'அன்று ஆலமரத்திற் சிக்குண்டிருந்த அம்பைக் காற்றால் விழும்படி செய்து எவ்வாறு பார்ப்பனியின் உயிரைக் கவர்ந்தோமோ அவ்வாறு ஒருபாயத் தால் இவன் உயிரையும் கவரவேண்டும். ஒன்று செய்க. வாத் திய முழக்கொலியால் இவ் வீன்றணிமையுடைய பசுவை வெருட் டித் தாம்பறுத்துவிட்டு இவனுயிரைக் கவர்க என்றான். பாண் டியன் அந்தணனை நோக்கி, 'கேட்டீரோ? மனந்தெளிந்ததோ!' என்றான். அதற்கு அந்தணன், 'நிற்க. இம் மணமகன் இவ் வாறு இறப்பனேல், என் மனைவி இறந்தது அவ்வாறெனக் கொள்வன்' என்றான். மணவினை தொடங்கினார்கள்; பல வாத் தியங்களும் முழங்கின. அம் முழக்கொலியான் வெருண்டு கட் டிய தாம்பு அறுந்துபோக அப் பசுவானது ஓடிப்போய் மண மகனை முட்டியது; அவன் அக்கணமே உயிர் துறந்தான். ஐயம் நீங்கி யாவர்க்கும் இது கூறி மகிழ்ந்து அந்தணனுக்கு மறு மண முடிக்கப் பொருளுதவி விடைதந்து சிறையிலிருந்த வேட னுக்கு இடப்பட்ட விலங்கைக் கழற்றுவித்துத், 'தெளியாது யாங் கடுந்தண்டஞ் செய்தோம். பொறுத்துக் கொள்க' என்று இரந்துவேண்டி அவனுக்கு வேண்டியன கொடுத்துவிட்டான் பாண்டியன். (கூக)

[இது திருவிளையாடற்புராணத் துளது.]

---

## கூ0-ஆம் அதிகாரம்
## ஊக்கமுடைமை

வெங்கரியைப் பாகரைமுன் வீட்டினு ரேகராய்த்
துங்க வெறிபத்தர் சோமேசா—வங்கம்
பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்.

அஃதாவது. மனம் மெலிதலின்றித் தொழில் செய்தலிற் கிளர்ச்சி யுடைத்தாதல்.

கூ௦. (இ - ள்.) சோமேசா—! அங்கம் பரியது-எல்லா விலங்கினும் தான் பேருடம்பினது, கூர்(மை) கோட்டது - (அதுவேயுமன்றிக்) கூரிய கொம்பையும் உடையது, ஆயி



னும்-ஆனாலும், யானை புலி தாக்குறின் வெரூஉம் - யானை யானது (தன்னைப்) புலி எதிர்ப்படின் (அதற்கு) அஞ்சும்,- (அதற்கொப்ப) - துங்கம் எறிபத்தர் - உயர்ச்சியுடைய எறிபத்த நாயனர், ஏகராய் - தமியராய் இருந்துவைத்தும், வெம் கரியை (உம்) - கொடிய யானையையும், பாகரையும்,யானைப் பாகரையும், வீட்டினர் - கொன்றார் (எ - று.)

பேருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்பும் உடைத்தாயினும், யானை ஊக்கமின்மையான் அஃதுடைய அதற்கு அஞ்சுமென்ற இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச்சிறப்பும் உடையராயினும் ஊக்கமிலராயின்

அஃதுடையார்க்கு அஞ்சுவரென்பது தோன்ற நின்றமையின் பிறிதுமொழிதலணி. ஒட்டணி, நுவலாநுவற்சியணி என்பதும் அது. கரியை என்பதனோடும் உம்மையைக் கூட்டுக. ஏகராய் என்புழி இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.

கதை.—எறிபத்த நாயனார் என்பார் கருவூரில் திருவானிலை என்னும் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் பசுபதிச்சுரன் பாத தாமரைகளையே பற்றுகக் கொண்டு அவனடியார்க்குத் தீங்கு செய்யுங் கொடியரைக் கொன்றொழிக்க மழுப்படை ஏந்தி வாழ்கையில் ஒருநாள் சிவகாமியாண்டார் என்னும் அந்தணர் ஆனிலையடிகட்குத் திருப்பள்ளித்தாமங் கட்டிச் சாத்தத் திருப் பூக்கூடை நிறையக் கொண்டு வந்த பூக்களைப் புகழ்ச்சோழனது பட்டவர்த்தன யானை சிந்த, அதனால் அவர் மிக வருந்துவது கண்டு, யானை சென்ற வழி கேட்டறிந்து ஓடிப்போய்த் தமது மழுப்படையால் யானையின் துதிக்கையை வெட்டி வீழ்த்திப் பரிந்துவந்து எதிர்த்த பாகரையுங் கொன்று நின்றார். இச்செய்தி அறிந்த சோழன் அங்கு வந்து தன் யானையையும் பாகரையுங் கொன்றார் ஒரு சிவனடியாரென்ப துணர்ந்துதா னொருவனே அருகின் வந்து 'யானை செய்த கொடுமை யாதோ?'' என வினவ, நாயனார் நிகழ்ந்தபடி கூறக் கேட்டு மனம் புழுங்கி 'எனது யானை செய்த கொடுமைக்கு அதையும் பாகரையும் கொன்றமை போதாது; என்னையுங் கொல்லுக' என்று தன் வாளை நீட்டினான். 'இவன் அன்பிருந்தவாறென்னே! இவனையோ யான் கொல்வது!' என்று நினைந்து அவ் வாளை வாங்கி நாயனார் தமது கழுத்திற் பூட்ட அரசன் அவர் கரத்தையும் வாளையும் பிடித்துக்கொண்டு தடுத்தான். அப்போது, 'அன்பர்களே! உங்கள் பெருமையை உலகிற்கு அறிவிக்க வேண்டிச் சிவபெருமான் அப் பூக்களை யானை சிதறும்படி திருவுளம் பற்றினார்' என்றோர் அசரீரி எழுந்தது; உடனே யானையும் பாகரும்

உயிர்பெற்றெழுந்தார்கள்; திருப்பூக்கூடையிற் பூக்கள் நிரம்பின. சிவகாமியாண்டார் மகிழ்ந்து தமது திருப்பணிமேற் சென்றார். சோழன் நாயனாரை அப் பட்டவர்த்தன யானைமீதேற்றி அரண்மனை கொண்டு சென்று உபசரித்தான். மேலும் நாயனார் தமது திருத்தொண்டு வழாது நடத்திக் கைலையிற் சிவகணங்களுக்குத் தலைவராயினார். (சுO)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

கூக - ஆம் அதிகாரம்

## மடியின்மை

பொன்மலையின் வேங்கை பொறித்துமீண்
டான்சென்னி தொன்மைவலி யாண்மையினாற்
சோமேசா—பன்னின் . மடியிலா மன்னவ னெய்து
மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு

அஃதாவது கருதியன செய்யுங்காற்
சோம்புதலில்லாமை.

சுக. (இ - ள்.) சோமேசா—! பன்னின்
ஆராயின்

அடி அளந்தான் தாஅயது எல்லாம் - தன்
அடியளவானே

எல்லாவுலகையும் அளந்த திருமால் தாவிய பரப்பு முழு வதையும், மடியிலா மன்னவன் ஒருங்கு எய்தும் - சோம் புதலில்லாத அரசன் (முறையானன்றி) ஒருங்கே எய்தும், (அதற்கு எடுத்துக்காட்டு) - சென்னி-(கரிகாற்) சோழன், தொன்மைவலி ஆண்மையினுல் - பழமையான வலியை யாளுந் தன்மையான், பொன் மலையின் - இமயமலையி னிடத்தே, வேங்கை - (தன் கொடியின்கணுள்ள) புலியை, பொறித்து - எழுதி, மீண்டான் - திரும்பினுன் (எ - று.)

அடியளந்தான் என்பது சொல்லாற்றலாற் பொருளுணர்த் தாது வாளா திருமாலின் பெயராய் நின்றது. எப்பொழுதுந் தொழிலின்கண்ணே முயற்சி செய்தலின் ஒருசேர எய்தும் என்ப தாம். பொன்மலை என்றது ஈண்டு இமயத்தை; இமயம் பொன் மலை யாதலை, 'புள்ளி மால்வரை பொன்னென நோக்கிவான், வெள்ளி வீழிடை வீழ்த்தெனத் தாரைகள், உள்ளி யுள்ளவெ லாமுவந் தீயுமவ், வள்ளியோரின் வழங்கின வானமே' என்னுங்

## சோமேசர் முதுமொழி வெண்பா

கக-

கம்பராமாயணச் செய்யுளானும், 'பொன்னின் வெண்டிரு நீறு

புனைந்தெனப், பன்னு நீள்பனி மால்வரைப் பாலது, தன்னை யார்க்கு மறிவரியா னென்று, மன்னி வாழ்கயி லைத்திரு மாமலை' என்னுந் திருத்தொண்டர் புராணச் செய்யுளானு மறிக. புள்ளி மால்வரை—இமயமலை, ['மற்றும் இமயமலையின் பெயர்—மேரு வும் புள்ளியும் விளம்புவ ரதற்கே' பிங்கல நிகண்டு.]

கதை:—காவிரிப்பூம்பட்டினத்தை யாண்ட கரிகாற் பெருவளத்தான் என்னுஞ் சோழன் தென்தேசத்திலுள்ள நாடுகளை வென்று வடதேசம் புக்கு அங்குள்ள அரசர்களையும் புறங்கண்டு இமயமலை வரையுந் தன ஆணை செல்வதற்கு அறிகுறியாகத் தனது அடையாளமாகிய புலியை அம்மலைக்கண் எழுதித் திரும்பினன். (சுக)

---

## சுஉ-ஆம் அதிகாரம்

# ஆள்வினையுடைமை

கூற்றுவர்மூ வேந்தர் கிலமுங்கைக் கொண்டாரே
தோற்றுந்தா ளாண்மையினுற் சோமேசா—சாற்று
முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
யின்மை புகுத்தி விடும்.

அஃதாவது இடை விடாத மெய்ம்முயற்சியுடையனுதல். அம் மெய்ம்முயற்சியாகிய காரணம் ஆளும் வினையென அதன் காரியத்தாற் கூறப்பட்டது.

கூஉ. (இ-ள்.) சோமேசா—! சாற்றும் முயற்சி - (வினையை ஆளுதற்கு இன்றியமையாததென்று அறிந்தோர்) சொல்லும் முயற்சி, திருவினை ஆக்கும் - செல்வத்தினை வளர்க்கும், முயற்று இன்மை - அம்முயற்சி இல்லாமை, இன்மை புகுத்திவிடும் - வறுமையை அடைவித்துவிடும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - கூற்றுவர் - கூற்றுவ நாயனு ரென்பார், தோற்றும் தாள் ஆண்மையினுல் - (வினை செய்தலிற்) பிறந்த ஆண்மையினுல், மூவேந்தர் நிலமும் - சேரசோழ பாண்டியராகிய மூவரசரது நாட்டையும், கைக்கொண்டார் - கைப்பற்றினுர் (எ - று.)

கூச சோமேசர் முதுமொழி வெண்பா

செல்வம், அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு
என்னும் அறுவகை அங்கங்கள். வறுமை அவ் வங்கங்களின் வறியராதல். அவ் வறுமையை அடைவிக்கவே பகைவரான் அழிவரென்பது கருத்து. நிலமும் என்புழி உம்மை முற்றும்மை.

கதை:—திருக்களந்தை என்னும் பதியில் இடைவிடாத பஞ்சாக்ஷர செபம், சிவபத்தி, சிவனடியார் பத்திகளும் உடையயாராய்ச் சிவபெருமான் பெருங்கருணையால் சேனுபலம் மிகுந்து

சேர சோழ பாண்டியர்களை வென்று அவர்கள் நாடுகளைக் கைக்கொண்டு திருமுடியொன்றுழிய மற்றைய மன்னர் திருவெல்லாம் பெற்றுர். அவர் தமக்குத் திருமுடி சூட்டும்படி தில்லை

வாழந்தணர்களை வேண்ட, அவர்கள் சோழர்கட்கு
பிறர்க்கு நாங்கள் முடிசூட்டோமென்ன, அதனல்
மடைந்து சிவபெருமானை வேண்டி அவர் திருவடிகளை

அன்றிப்
வருத்த
முடியிற்

சூட்டப்பெற்று அவற்றையே திருமுடியாகக் தாங்கி
புரந்து சிவனடி நீழ லடைந்தார்.

[இது திருத்தொண்டர் புராணத் துளது].

உலகம்
(சஉ)

---

## சுங-ஆம் அதிகாரம்
# இடுக்கணழியாமை

என்றுமொரு மீனேவக் கின்மைமிக வுந்தளரார்
துன்றே ரதிபத்தர் சோமேசா—மன்ற
அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
விடுக்க ணிடுக்கட் படும்.

அஃதாவது தொழிலின்கண் முயல்வான் தெய்வத்தாலவது, பொருளின்மையாலவது மெய்வருத்தத்தாலவது தனக்குத் துன்பம் வந்துழி, அதற்கு மனங் கலங்காமை.

கூ௫. (இ-ள்.) சோமேசா—! மன்ற அடுக்கிவரினும்மேன்மேல் மிகவந்தனவாயினும்-அழிவிலான் உற்ற இடுக் கண் - தன் உள்ளக்கோட்பாடு விடாதான் அடைந்த துன்பங்கள், இடுக்கண்படும் - துன்பத்திற் பட்டுப்போம்,— (அதற்கு எடுத்துக்காட்டு) - ஏர் துன்று அதிபத்தர் - அழகு மிக்க அதிபத்தநாயனார் என்பார், என்றும் ஒரு.

சோமேசர் முதுமொழி வெண்பா

கூ௫

மீனே வந்து-எந் நாளினும் ஒரு மீனே வலையிலகப்பட்டு, (அதனால்) இன்மை மிகவும் - வறுமை வளர்ந்தும், தளரார்- (தமது உள்ளக் கோட்பாடு விட்டுச்) சோராதா ராயினர் (எ - று.)

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன கலந்து வருத லும் அடங்க 'அடுக்கிவரினும்' என்றார். அழிவென்னுங் காரணப்பெயர் அதன் காரியமாகிய உள்ளக் கோட்பாடு விடு தற்கு ஆயிற்று. என்றும்—உம்மை முற்றும்மை. ஒரு மீனே— ஏகாரம் பிரிநிலை மிகவும்—இது சிறப்பும்மை. 'துன்று ஏர்' என்பது வடநூன் முடிபு. 'ஏர்' என்றது அன்பின் அழகினை.

கதை:—சோழநாட்டில் நாகைப்பட்டினத்தில் நுளைப் பாடியில் பரதவர் குலத்துதித்த அதிபத்த நாயனுர் நாடோறும் முதன் முதல் வலையி லகப்படு மீனை அரனுக்கென விடுவதே கோட்பாடாகக் கொண்டொழுகு நாள், நாடோறும் ஒரு மீனே அகப்பட அதனை வழக்கப்படி விட்டுவந்தமையால் நாளடைவில் வறுமையடைந்து பசியான் மெலிந்தார். ஒருநாள் முதல் மீனை வழக்கப்படி விட்டு இரண்டாமுறை வலை வீச நவரத்தினங்க ளிழைக்கப்பெற்றதொரு பொன்மீன் அகிற்பட, அதன் அழகைக் கண்டு அதையும் பெருமானுக்கே யெனக் கடலில் விட்டார். அப்போதே பெருமான் பார்வதி சமேதராய்க் காட்சி தந்து சாலோக பதவி அருளினுர். (௬௩)

[இது திருத்தொண்டர்புராணத் துளது].

---

## ௬௪-ஆம் அதிகாரம்

# அமைச்சு

கால்சேய் கதிர்சேயைக் காத்தரச னட்புதவித்
தூலமுடி சூட்டுவித்தான் சோமேசா—சாலப்
பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

அஃதாவது அமைச்சனது குணங்களும் செயல்களும்.

௬௪. (இ-ள்.) சோமேசா—! சால பிரித்தலும்-(பகைவர்க்குத் துணையாயினுரை அவரை விட்டுப் பிரிக்கவேண்டினுல்) மிகப் பிரித்தலும், பேணிக் கொளலும் - (தம் பக்கத் ௬௬

தாரை அவர் பிரியாமற் கொடையினாலும் இன் சொல்லி ·னாலும்) காத்துக்கொள்ளுதலும், பிரிந்தார் பொருத்த லும் - (முன்னே தம்மையேனும் தம் பக்கத்தாரையேனும் விட்டுப்) பிரிந்தாரை (மறுபடி பொருத்த வேண்டினால்) பொருததலும், வல்லது அமைச்சு - வல்லவனே அமைச்ச ஞவான்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - கால்சேய் - வாயு புத்திரனை ஆஞ்சநேயன், கதிர் சேயை - சூரிய குமார னை சுக்கிரீவனை, காத்து - பாதுகாத்து, அரசன் நட்பு உதவி - இராமபிரானது நேசத்தைச் செய்வித்து, தூல முடி சூட்டுவித்தான் - பெரிய கிரீடத்தைத் தரிப்பித் தான் (எ - று).

பிரித்தல், பேணிக்கொளல், பொருத்தல் ஆகிய இம் மூன்ற னுள் அப்பொழுதை நிலைக்கேற்ற செயல் அறிதலும் அதனை அவர் அறியாமல் ஏற்ற உபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரிய வாதல் நோக்கி 'வல்லது' என்றார். வடநூலார் பொருத்தலைச் சந்தி என்றும், பிரித்தலை விக்கிரகமென்றுங் கூறுப. சேய்— செம்மை என்னும் பண்படியாகப் பிறந்த பெயர். கதிர்—ஆகு பெயர். தூலம்—ஸ்தூலம்.

**கதை:**—வாலி என்னும் வானரத்தலைவன் மாயாவி என்பா னொடு நெடுங்காலம் போர்புரிந்து, போர்க்காற்றாது மாயாவி ஒரு பிலம் புக்கது கண்டு அவனைத் தொடர்ந்து செல்லவேண்டித் தன் தம்பியாகிய சுக்கிரீவனை அப் பிலவாயிலிற் காவலாக நிறுத் தித் தானும் உட்புகுந்து ஓராண்டிற்கு மேல் ஆகியும் திரும்பி வாராமையால் சுக்கிரீவன் அவன் மாண்டா னென்று புலம்பி

அப் பிலத்துவாரத்தை ஒரு பெரிய கல்லான் மூடிவிட்டுக் கிஷ்கிந்தை புகுந்தான். வானரப் பெரியோர் யாவரும் கூடி அவனைப் பலவாறு தேற்றி அவன் மறுத்தும் அவனுக்கு முடி சூட்டினர். சிறிதுகாலங் கழித்து மாயாவியைக் கொன்று திரும்பின வாலி பிலவாயில் மூடுண்டிருத்தல் கண்டு வெகுண்டு மூடிய கல்லைக் காலால் உதைத்துத் தள்ளிக் கிஷ்கிந்தைசென்று தன் தம்பி அரசாளுதலைக் கண்டு அடங்காச் சினத்தனாய் அவனைக்கொல்ல ஓடினன்: அது கண்டு சுக்கிரீவன் எங்கெங்கும் ஓடியும் வாலி விடாது பின்தொடர உய்யும் வகை காணாது மயங்கிப் பின் மதங்கமுனிவர் சாபத்தால் வாலி வரலாகாத ரிசியமுக பருவதத்தில் தங்கினன். ஆஞ்சநேயரும் அவனுடன் இருந்து அவனைப் பாதுகாத்து அங்கு வைகினர். அங்ஙனம் வைகுழி, இராமலக்ஷ்மணர் ஆங்கு வரக்கண்ட வானரங்கள் அஞ்சி ஓட தாம் நிதானித்து நின்று அவர்கள் மன நிலையை யூகித்து உணர்ந்து



அவர்களைக் கிட்டி அவர்களொடு சொல்லாடிப் பின் சுக்கிரீவனுக்கும் இராமனுக்கும் நட்புச் செய்வித்தார். இவ்விருவரும் நட்புக் கொண்டபின் இராமன் வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு முடி சூட்டினன். 'உயிரொடுயிர் சேர வுடம்படுமெய் தோன்று, மியலி னநுமானன் னிருந்தே—செயிர்திர், நரபதியோடவ்வா னரபதியை யேழ்நா, வரனறிய நட்பித்தான் வாய்ந்து' என விருத்தல் காண்க. (கஅ)

[இஃது இராமாயணத் துளது.]

---

## கூடு - ஆம் அதிகாரம்

# சொல்வன்மை

நித்தியத்து வங்கேட்பா னித்திரையென்
றேமயக்கந் துய்த்தனனுங் கும்பகன்னன்
சோமேசா—எத்திறத்தும் ஆக்கமுங் கேடு மதனால்
வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

அஃதாவது தான் கருதிய வினை முடியும் வகையால் அமைச்சியல் நடத்துதற்கேதுவாகிய சொற்களைச் சொல்லவல்லனாதல்.

கூறு. (இ-ள்.) சோமேசா—; ஆக்கமும் கேடும்-ஆதலும் அழிதலும், அதனால் எ திறத்தும் வருதலான் - தஞ் சொல்லான் எவ்வழியானும் வருமாதலான், சொல்லின் கண் சோர்வு (அத்தன்மைத்தான) சொல்லின்கட் சோர்தலை, காத்து ஓம்பல் - (அமைச்சர் தங்கண் நிகழாமற்) போற்றிக் காக்க,—(அதற்கு எடுத்துக்காட்டு) - கும்பகன்னன் - கும்பகன்னன் என்னும் அரக்கன், நித்தியத்துவம் கேட்பான் - நித்தியத்துவம் கேட்க(வந்து), (சொற் சோர்வான்) நித்திரை என்று - நித்திரைத்துவம் என்று கேட்டு, மயக்கம் துய்த்தனன் - (நித்திரை) மயக்கத்தை அனுபவித்தான் (எ-று.)

ஆக்கத்திற் கேதுவாகிய நற்சொல்லையும் அழிவினுக் கேதுவாகிய தீச் சொல்லையும் சொல் ஆகின்ற ஒப்புமைபற்றி 'அதனால்' என்றார். செய்யுளாகலின் சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வுபோலன்றி உயிர்கட்கெல்லாம் ஒருங்கு வருதலால் 'காத்தோம்பல்' என்றார். நித்தியத்துவம் - அழியாமை.

கதை:—கும்பகர்ணன் நித்தியத்துவத்தை விரும்பிப் பிரமனை நோக்கித் தவம்புரிய அது கண்டு தேவர்கள் அஞ்சிப் பிரமனை யடைந்து முறையிட அவற்கு நித்தியத்துவம் அருளிற் கெடுதி யுண்டாமென்று கலைமகளை நோக்கி அவன் நாவினின்று 'நித்திரைத்துவம்' கேட்கும்படி செய்ய ஏவிக் காட்சி தந்து அவன் முன் நிற்ப, கலைமகள் விரகினல் 'நித்தியத்துவம்' என்பதொழிந்து 'நித்திரைத்துவம் வேண்டும்' என்று வரங் கேட்க, 'அஃதாகுக' என்று பிரமன் மறைந்தனன். அன்று தொட்டு அவன் நித்திரை மயக்கங் கொண்டான்.

" இந்தப் படிக்கு நாமகளை யிசைவித் தடவி
யிருந்தவஞ்செய்
அந்தக் கும்ப கன்னனிடை யமரர் சூழ வயன்வந்துன்
சிந்தைக் கினிய வரந்தருவென் செப்பென்றுரைப்ப
நாமகளு
வுந்தத் துயில்வேண் டுவனென்ன வுற்ரு யென்ருங்
கயனுரைத்தான்.
[இஃது இராமாயணத் துத்தரகாண்டத் துளது.]

---

## கூகூ-ஆம் அதிகாரம்

# வினைத்தூய்மை

தக்கனுனே யெள்ளிமகஞ் சாடும்போ

தெண்ணியெண்ணித் துக்கமுற்ற னவதென்னே
சோமேசா—எக்காலும் எற்றென் றிரங்குவ
செய்யற்க செய்வானேன் மற்றன்ன
செய்யாமை நன்று.

அஃதாவது செய்யப்படும் வினைகள் பொருளே
ழும் புகழுந் தந்து நல்லன ஆதல்.

யன்றி அற

சுசு. (இ-ள்) சோமேசா—! எற்று என்று இரங்குவ-யான் செய்தது எத்தன்மைத்து என்று (பின்தானே) இரங்கும் வினைகளை, எக்காலும்-ஒருகாலும், செய்யற்க-செய்யா தொழிக, செய்வானேல்-ஒருகால் - மயங்கி அவற்றைச் செய்யுந் தன்மையனாயின், மற்று அன்ன-பின் இருந்து அவ் விரங்கல்களை, செய்யாமை நன்று-செய்யா தொழிதல் நன்று,—(அதற்கு எடுத்துக்காட்டு)-தக்கன்-தக்ஷன், உனை எள்ளி-உன்னை இகழ்ந்து, மகம்



சாடும்போது-(அவன்)
எண்ணி எண்ணி-நினைத்து

யாகத்தை அழிக்கும்போது,
நினைத்து, துக்கமுற்றான்-துன்ப

மடைந்தான், ஆவது என் -
தனுல்)வரக்கடவதாகிய பயன்

(அவ்வாறு துன்பமடைந்த
என்ன, ஒன்றுமில்லை(எ-று.)

'இரங்குவ' என முன் வந்தமையாற் பின் 'அன்ன' எனச் சுட்டியொழிந்தார். அவ் வினைகளது பன்மையான் இரக்கமும் பலவாயின. அச் செயற்குப் பின்னிருந்து இரங்குவனுயின்; அது தீரும்வழி அறிந்திலன் எனவும், உறுதி இலன் எனவும், பயனில்லாதன செய்கின்றுன் எனவும், தன் பழியைத் தானே தூற்றுகின்றுன் எனவும் எல்லாரும் இகழ்தலிற் பின்னிரங்காமை நன்று என்றுர். 'எண்ணி எண்ணி' என்ற அடுக்கு இடை விடாமை மேலது. எ—இரக்கக் குறிப்பு. (சுசு)

கதை:—மேலுரைத்தாம் (4-வது பாட்டுரை காண்க.)

---

## சுஎ-ஆம் அதிகாரம்

# வினைத்திட்பம்

செவ்வேலைப் பாலனென வெள்ளித் திறலழிந்தான்
றுவ்வாத வெஞ்சூரன் சோமேசா—வவ்வா
றுருவுகண் டெள்ளாமை வேண்டு
முருள்பெருந்தேர்க் கச்சாணி யன்னா ருடைத்து.

அஃதாவது அத் தூயவினை
மனவலிமை.

முடிப்பானுக்கு வேண்டுவதாகிய

௯௭. (இ-ள்.) சோமேசா—! துவ்வாத வெம் சூரன் - தூய்மை யுறாத கொடிய சூர்பன்மன், செவ்வேளை - கந்தவேளை, பாலன் என எள்ளி-பிள்ளையென இகழ்ந்து, திறல் அழிந்தான் - வலியழிந்தான், உருள் பெருந்தேர்க்கு - உருளாநின்ற பெரிய தேர்க்கு, அச்சாணி அன்னார் - அச்சின்கண் ஆணிபோல வினையில் வலியாரை, உடைத்து - உடைத்து (உலகம்), (அதனால்) அவ்வாறு - அவன் செய்தபடி, உருவு கண்டு எள்ளாமை வேண்டும் - அவரை வடிவின் சிறுமை நோக்கி இகழ்தலை ஒழிக (எ - று.)



செவ்வேள்—முருகவேள், ஈண்டுச் செம்மை என்னும் அடைமொழி மதவேளாகிய மன்மதன் இயைபு நீக்குதலின், பிறிதினியைபு நீக்கிய அடைமொழி என்க. இதனை வடநூலார் அந்ய யோகவியவச்சேதம் என்ப. 'எள்ளாமை வேண்டும்' என்பதனானும் உவமையானும் உருவின் சிறுமை பெறும். அச்சு—உருள் கோத்த மரம். ஆணி-உருள் கழலாது அதன் கடையிற் செருகுவது. அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக்கொண்டு செலுத்தும் வலிமையுடைத்து. அதுபோல, வடிவாற் சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டு செலுத்தும் வலிமையுடைய அமைச்சரு முண்டு; அவரை அவ் வலிமை நோக்கி அறிந்து கொள்க என்பதாம்.

ஆறுமுகப் பெருமானை முன்னர்ப் பாலனென இகழ்ந்தமையும் அப் பெருமான் தனது பழைய பேருருக் காட்டக் கண்ட பின்னர் அவனைப் புகழ்ந்தமையுங் கீழ்வரும் பாட்டுக்களாற் காண்க :...

கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் றன்னைப்
பாலனென் றிருந்தே னந்நாட் பரிசிவை யுணர்ந்தி

லேன்யான் மாலயன் றனக்கு மேனே வானவர் தமக்கும் யார்க்கு மூலகா ரணகாய் நின்ற மூர்த்தியிம் மூர்த்தி யன்றே ' சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னி லோர்க்குறு மொளியுஞ் சீரு மிளமையு மெழிலு மெல்லா மார்க்குள வுலகி லம்மா வற்புதத் தோடும் பல்காற் பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை யின்னுமென் பார்வை தானும்' ஆயிர கோடி காம

ரழகெலாந் திரண்டொன் றாகி மேயின வெனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னிற் றாயநல் லெழிலுக் காற்றா தென்றிடி னினைய தொல்லோன் மாயிரு வடிவிற் கெல்லா முவமையார் வகுக்க வல்லார்.'(கஎ)

கதை:—[மேல் உரைத்தாம்.] உசு-வது பாட்டுரை காண்க.

---

## கூஅ-ஆம் அதிகாரம்

# வினைசெயல் வகை

வெள்ளிவெற்பை யெண்ணா தெடுப்பனென
வீறெய்தித் துள்ளியழிந் தானரக்கன்
சோமேசா—மெள்ள முடிவு மிடையூறு முற்றியாங்
கெய்தும் படுபயனும் பார்த்துச் செயல்.

அஃதாவது அவ் வலிமையுடைய அமைச்சன் அவ்
செய்யுந் திறம்.
வினையைச்
சூ-அ.
எண்ணுது

(இ - ள்.) சோமேசா—! அரக்கன்-இராவணன்,
- ஆராயாது, வெள்ளி வெற்பை - வெள்ளிமலை

யாகிய கைலையை, எடுப்பன்
னென்று இறுமாப்படைந்து,

என வீறு எய்தி - எடுப்ப தாடி
துள்ளி அழிந்தான் - கூத் கால்)

மாண்டான்,—(அதனுல்)
அது முடிதற் குளதா

- முடிவும் - வினை செய்யுங்
முயற்சியும், இடையூறும் -
(அதற்கு வரும்) இடையூறும், முற்றியாங்கு
எய்தும் படு பயனும் - (அது நீங்கி) முடிந்தால் தான்
எய்தும் பெரும் பயனும், மெள்ள பார்த்து செயல் -
செய்க (எ - று.)
விரையாது சீர்தூக்கிச்

முடிவு—ஆகுபெயர். முயற்சி இடையூறுகளின் பயனது அளவு பெரிதாயிற் செய்க என்பதாம்.



கதை:—ஒருகால் இராவணன் புட்பக விமானமேறி வானாறு செல்லுங்கால், கைலைமலை இடைப்பட அதன்மீது செல்ல முயன்றான். அது கண்டு நந்திதேவர் அவனை நோக்கி, 'அடா! எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் மலைமீது செல்லுதல் அடாது' எனத் தடுக்க அவன் அவரை இகழ்ந்துரையாடி 'யான் ஒருகாலும் இறங்கிச் செல்லேன். இக் கைலைமலையைத் தூக்கி வீசி யான் செல்லாற்றிற் செல்வேன்' என இறுமாந்து கூறி அம் மலையை எடுக்க முயன்று அதனை ஒரு சிறிது அசைத்தான். பெருமான் தனது கால் விரலா லூன்ற அம் மலைக்கீழ் அகப்பட்டு உய்யுமா றின்றி வருந்துகையில், அதனை வலம்வந்த வாகீச முனிவர் அவன் படுந் துயரங் கண்டு பொறாது அவற்கு உய்யுமாறு குறிப்பின் உணர்த்த வேண்டிச் 'சங்கரா! சாம



வேதப்ரியா!' என்று சொல்லிக்கொண்டு வலம்வந்தார். அவன் அக் குறிப்புணர்ந்து சாமவேத கானஞ் செய்து பெருமான் திருவருள்பெற் றுய்ந்தான்.

'வந்தோ ரரக்கனார் வண்கைலை மால்வரையைத்
தந்தோள் வலியினையே தாங்கருதி—யந்தோ
விடந்தா ரிடந்திட் டிடாற்கீ ழெலிபோற்
கிடந்தார் வலியெலாங் கெட்டு'

என்னும் நக்கீரனார் வாக்கு நோக்குக.

(கஅ)

[இது கூர்மபுராணத் துளது.]

---

## சுகூ-ஆம் அதிகாரம்

# தூது

*தன்றுயர நோக்கான் றனைவிடுத்தோர்க் கேயுறுதி*
*துன்றமொழிந் தானிடதன் சோமேசா—என்றும்*
*இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்*
*குறுதி பயப்பதாந் தூது.*

அஃதாவது பொருத்தல் பிரித்தல்களைச் செய்தற்கு வேற்றரசரிடஞ் செல்வாரது தன்மை. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவானெனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சனோ டொப்பானாகலானும் பின்னோன் அவனிற் காற்கூறு குணங் குறைந்தோனாகலானும் இஃது அமைச்சிய லாயிற்றென்க.

சுகூ. (இ-ள்.) சோமேசா—! என்றும்-எக்காலத்தும், இறுதி பயப்பினும் - (அவ்வார்த்தை தன் உயிர்க்கு) முடிவைத் தருமாயினும், எஞ்சாது - (அதற்கு) அஞ்சி ஒழியாது, இறைவற்கு உறுதி - (தன் அரசன் சொல்லியவாறே) அவனுக்கு மிகுதியை, பயப்பது - (வேற்றரசரிடத்துச்) சொல்லுவானே, தூதாம் - தூதனாவான்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - நிடதன் - நிடததேசாதிபதியாகிய நளன், தன் துயரம் நோக்கான் - தனக்கு உளதா

மிருக்குந் துன்பத்தைக் கருதாது, தனை விடுத்தோர்க்கு - தன்னைத் (தூதாக) விட்டவர்களுக்கு, உறுதி துன்ற ஏ மொழிந்தான் - மிகுதி சேரவே சொல்லினன் (எ - று.)

இறுதி பயப்பினும்
வேண்டா வாயிற்று.
தேற்றம்.
என்றதனால், ஏனைய பயத்தல் சொல்ல
நோக்கான்-முற்றெச்சம். ஏகாரம்—

கதை:—நிடத தேசாதிபதியாகிய நளன் விதர்ப்ப தேசத்தரசனாகிய வீமன் தமன முனிவர் அனுக்கிரகத்தாற் பெற்ற தமயந்தியின் அழகு, குணமுதலியன கேட்டு அவள் மாட்டுக் காதல் கொண்டான். அவளும் அவனுடைய அழகு, ஆண்மை முதலியன பலர் கூறப் பன்முறை கேட்டு அவன் மீது காதல் வைத்தாள். அங்ஙனமாக, ஒருநாள் தனது உத்தியானவனஞ் சென்றிருக்கையில் ஒரு தடாகத்தில் ஒரு பொன் அன்னத்தைக் கண்டு அதைப் பிடித்தான். அவ் வன்னம் கலங்கி அரசனை நோக்கி "என்னை விடுக. யான் உமக்கு ஒரு நன்மை செய்வன்" என்றது. உடனே நளன் அவ் வன்னத்தைத் தமயந்திபாற்

றாது விட்டான். அது விதர்ப்பதேசம் புகுந்து தமயந்தியைச் சோலையிற் கண்டு நளன் வடிவழகு முதலியவற்றைக் கூறிற்று. அவற்றைக் கேட்ட தமயந்தி முகத்தில் வியர்வை அரும்ப அரண் மனை சென்றாள். வீமன் அது கண்டு மணமுடிப்பது தகுதியென் றெண்ணி அரசர்களுக்குச் சுயம்வர வோலை நீட்டி விட்டான். அத் தறுவாயில் நாரத முனிவர் தேவலோகஞ் சென்று இந்திர னுக்குத் தமயந்தியின் அழகு முதலியவற்றைப் பற்றியும் நடக்க நின்ற அவள் சுயம்வரத்தைப் பற்றியுங் கூறவே, இந்திரன் அவளை மணக்க ஆசைப்பட்டு இயமன், அக்நி, வருணன் இவர் களை உடன் அழைத்துக்கொண்டு விதர்ப்பதேசம் புக்கான். சுயம்வர வோலை பெற்ற நளனும் அங்கு வந்தான். இந்திரன் நளன் அழகைக்கண்டு இவனே அத் தமயந்திக்கு ஏற்ற வரனாக லின் அவள் ஒருபோதும் தனக்கு மாலை சூட்டாளென்றறிந்து அந் நளனையே தனக்குத் தூதாகச் செல்லுமாறு வேண்டினன். நளனும் அதற்கு இசைந்து அவன் கூறிய மந்திரத்தால் வாயில் காப்போர் முதலியவர்கள் தனது உருவத்தைக் காணாமல் தம யந்தி கன்னிகாமாடத்தினுள் நுழைந்து இந்திரன் மேன்மையை யும் அவன் காமபாணத்தால் வருந்துகின்றமையையுங் கூறி அவ னுக்கு வாழ்க்கைப் படுதலே முறையென்றான். அவள் 'அஃது ஒரு காலத்தும் நடவாது. நளனுக்கே மாலை சூட்டுவேன். இன் றெனின், உயிரிழப்பேன்' என்றாள். அது கேட்டுத் திரும்பி வந்து நிகழ்ந்தவற்றைக் கூறினன் நளன். அதன்மேல் இந்திரன் முதலிய நால்வரும் நளன்போல வடிவங்கொண்டு சுயம்வர மண்

டபம் வந்தார்கள்; நளனும் அங்கு வந்தான்; ஏனை அரசர்களும் நெருங்கினர்கள். தமயந்திக்குக் கலைமகள் தோழியாக நின்று ஒவ்வோ ரரசனையுங் காட்டி அவனவன் ஆண்மை முதலியவற்றைக் கூறி வருமளவில், நளனுக வடிவங்கொண்டிருந்த இந்திரன், இயமன், அக்நி, வருணன் இவர்களைக் காட்டுகையில் இந்திரன் முதலியவர்களுக்கும் நளனுக்கும் பொருள்படும்படி சிலேடையாகக் கூறினள். இவ்வாறு தோழி சிலேடைப் பொருள்படக் கூறியதாலும், நளன் மாலையில் வண்டு வீழ்ந்து பண் பாடியதாலும் உண்மை நளன் இன்னனென் றறிந்து தமயந்தி அவனுக்கே மாலையிட்டாள்.

'இன்னணந் தேவர் மாழாந் திருநில வரைப்பிற் போந்துன், பொன்னவிர் திதலை யார்ந்த புணர்முலைப் போகம் வேட்ப, முன்னமெத் தவஞ்செய் தாய்கொ லியைவதே முறைமை யென்னனல்வில் லொளித்து நின்ற காமனே யனைய நீரான்' எசு

னும் நைடதப் பாட்டை நோக்குக.

[இது நைடதத் துளது.]

---

## ௭௦-ஆம் அதிகாரம்
## மன்னரைச் சேர்ந்தொழுகல்

ஊமனு னென்னு மதத்தா லுனையிகழ்ந்து
தோழுற்றூர் தக்கனர் சோமேசா—வாமே
பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

அஃதாவது அமைச்சர் அரசரைப் பொருந்தி நடக்குமாறு.

எ௦. (இ - ள்.) சோமேசா—! பழையம் என கருதி - அரசனுக்கு யாம் பழையமென நினைத்து, பண்பு

அல்ல செய்யும் கெழுதகைமை - தமக்கு இயல்பல்லாதன வற்றைச் செய்யும் உரிமை, ஆமே - ஆகுமோ - ஆகாது, கேடுதரும் - (அமைச்சர்க்குக்) கேட்டினைத் தரும்,— (அதற்கு எடுத்துக்காட்டு) - தக்கனர் - தக்ஷன் என்பான், மாமன் நான் என்னும் மதத்தால் - (அரசனுக்கு) மாமன்



நான் என்கிற செருக்கினல், இழித்துப் பேசி, தோம் உற்ருர் ஞன் (எ - று). உனை இகழ்ந்து - உன்னை - குற்றத்தைப் பொருந்தி

அவன் பொருது வருத்தும்போது அப் பழமை நோக்கித் தாக்ஷிண்யங் காட்டாது உயிரை வெளவுதலான், அவன் வேண்

டாதன செய்தற் கேதுவாகிய கெழுதகைமை 'கேடு ருர். ஆமே—ஏகாரம் மறைவினு.

தரும்' என்

(எ0)

**கதை** :—(மேலே உரைத்தாம்) 4-வது பாட்டுரை காண்க.

---

எக-ஆம் அதிகாரம்

# குறிப்பறிதல்

அப்பூதி யார்மறைத்தும் வாகீச ரக்கரவைத்
துப்பா னறிந்தனரே சோமேசா—இப்புவியில்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

அஃதாவது ஒருவர் கருதிய அதனை அவர் கூறுமல் அறிதல்.

எக. (இ-ள்.) சோமேசா!—அப்பூதியார் - அப்பூதி யடிகள் என்பார், மறைத்தும் - மறைத்துவைத்தும், வாகீசர் - திருநாவுக்கரசு நாயனார், அ காவை - அம்மறைப் பிணி, துப்பான் அறிந்தனர் - (திருவருள்) வலியால் அறிந்தார், ஆதலின், இப்புவியில் - இந்தப் பூமியில், அகத்தது - (ஒருவன்) மனத்தின்கண் நிகழ்வதனை, ஐயப்படாஅது உணர்வானை - சந்தேகப்படாமல் (துணிவாக) அறிய வல்லானை, தெய்வத்தோடு ஒப்ப கொளல் - (மகனேயாயினும்) தெய்வத்தோடொப்ப நன்கு மதிக்க. (எ - று).

ஆர்—சிறப்புப் பற்றிவந்த விகுதி. மறைத்தும்—உம்மை சிறப்பும்மை. உடம்பு முதலியவற்றான் ஒவ்வாறாயினும் பிறர் நினைத்த துணருந் தெய்வத்தன்மையுடைமையின், 'தெய்வத்தோ டொப்ப' என்றார். கொளல்—அல்ஈற்று உடன்பாட்டு வியங் கோள். படா அது என்புழி அளபெடை அசைநிறை யளபெடை யென்க.



கதை:—திருநாவுக்கரசு நாயனார் திங்களூர் வழிச் செல்லுங் கால் அவ்வூரின்கண் அப்பூதி யடிகள் என்பார் தமது புதல்வர் களுக்குத் திருநாவுக்கரசு என்னுந் திருப்பெயரை இட்டழைத்து வருதலையும்; அன்னசாலை, கிணறு, குளம், தண்ணீர்ப்பந்தர் முத லியன திருநாவுக்கரசு என்னுந் திருப் பெயரால் அமைத்துள் ளதையுங் கேட்டுங் கண்டும் அவரது திருமாளிகைக்கு எழுந் தருள அடிகள் நாயனாரைப் பணிந்து மிக்க ஆர்வத்துடன் திரு வமுது செய்யக் குறையிரந்து வேண்ட அவரும் அதற்கு ஒருப் பட அடிகள் தமது மூத்தகுமாரனை வாழைக்குருத்தொன்று கொண்டு வரும்படி ஏவ, அவன் அது செய்யும்போது அவனை நாகப்பாம்பு தீண்ட, அஃதறிந்த அவன் விரைவின் ஓடி வந்து தாயாரிடத்து வாழைக்குருத்தைத் தந்து மரிக்க, அடிகளும் அவர் மனைவியாரும் எங்கு நாயனார் திருவமுது செய்தல் தடைப் படுமோ வென்று அஞ்சி மகன் சவத்தை மறைத்து வைத்து அவர்பால் வந்து 'திருவமுது செய்தற்கு எழுந்தருள்க' என, நாயனார் நடந்த செய்தியைத் திருவருளால் உணர்ந்து சவத்தைச் சிவாலயத்தின் முன் கொணர்வித்து 'ஒன்று கொலாமவர்' என்று தொடங்குந் தேவாரப் பதிகத்தை ஓதி அம் மகனை உயிர்ப் பித்தார். (எக)

[இது திருத்தொண்டர் புராணத் துளது.]

---

## எஉ-ஆம் அதிகாரம்

# அவையறிதல்

ஓர்சங்கத் தார்கல்வி யூமைச்சேய்க் குக்காட்டிச்
சோர்வுநலக் தேர்ந்தனரே
சோமேசா—வோருங்காற் கற்றறிந்தார் கல்வி
விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

அஃதாவது அவையினது இயல்பை அறிதல்.

எஉ. (இ - ள்.)
`மிடத்து, கசடு அற

சோமேசா!—ஒருங்கால் - ஆராயு
சொல் தெரிதல் வல்லார் அகத்து-
குற்றம் நேராமல் சொற்களை ஆராய்தல் வல்லவர் அவைக்
கட் சொல்லின், கற்று அறிந்தார் கல்வி-(பலநூல்களையும்)
கற்று (அவற்றாலாய பயனை) அறிந்தவரது கல்வி, விளங்

கும்-(யாவர்க்கும்) விளங்கித் தோன்றும், - (அதற்கு எடுத்துக் காட்டு) - ஓர் சங்கத்தார் - ஒப்பற்ற சங்கப் புலவர், கல்வி - (தமது) கல்வியாற் செய்த உரைகளை, ஊமைச் சேய்க்கு காட்டி,-(உருத்திரசன்மனார் என்னும்) ஊமைப் பிள்ளைக்குக் காட்டி, சோர்வு நலம் தேர்ந்தனர் - குற்றத்தையுங் குணத்தையுந் தெளிந்தனர் (எ - று.)

சொல்லின் என்பது அவாய்நிலையான் வந்தது. அத்தகைய அவையின் கண்ணே சொல்க என்பதாம். சங்கத்தார்—கடைச் சங்கத்தார். மேலது, கல்வி—ஆகுபெயர்.

கதை:—ஒருகாற் பாண்டிநாட்டிற் பன்னிரண்டாண்டு பஞ்சஞ் செல்ல, அரசன் புலவர்களை அயல் நாடு புகுமாறு வேண்டினன். அவரும் அவ்வாறு செய்தனர். நாடு மலிய மழைபெய்து செழித்தபின் அரசன் கிங்கரரை ஏவிப் புலவர்களைக் கொணர்வித்தான். பொருளதிகாரம் வல்லார் அகப்பட்டாரில்லையாகலின், அரசன் மனம் கவன்றான். அது கண்டு ஆலவாயின முனிறக் கடவுள் அறுபது சூத்திரஞ் செய்து மூன்று செப்பிதழி னெழுதிப் பீடத்தின்கீ ழிட்டான். மறுநாள் அருச்சகன் அவற்றைக் கண்டெடுத்து அரசன்பாற் றர அரசன் மகிழ்ந்து புலவர்களை அந்நூற்குரை காணுமாறு பணித்தனன். புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரும் வெவ்வே றுரை கண்டனர். அவற்றுள் நேரிதான உரையாதெனத் தேர்தற் கொரு காரணிகனைத் தரல் வேண்டுமென அரசன் வரங்கிடப்ப, 'இவ்வூர் உப்பூரிக்குடி

கிழார் மகனுவான் உருத்திரசன்மனென்பான் பைங்கண்ணன் புன்மயிரன் ஐயாட்டைப்பிராயத்தான் ஒரு மூங்கைப் பிள்ளை உளன், அவனை அன்னனென் றிகழாது கொண்டு போந்து ஆசனமே விரீஇக் கீழிருந்து சூத்திரப் பொருளுரைத்தாற் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும், மெய்யாயின உரை கேட்ட விடத்து. மெய்யல்லா உரை கேட்ட விடத்து வாளா இருக்கும்; அவன் குமார தெய்வம்; அங்கொரு சாபத்திறை் றேன் றினன்' என முக்கால் இசைத்த அசரீரி கேட்டு அவ் வுருத் திரசன்மனைக் கொடுபோந்து வெள்ளுடை யுடுத்து வெண் பூச் சூட்டி வெண் சாந் தணிந்து கனமாப் பலகை யேற்றிக் கீழிருந்து சூத்திரத்திற் பொருளுரைப்ப, எல்லாரும் உரைக்கக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிளநாகனுர் உரைத்த விடத்து ஓரோவிடத்துக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் நிறுத் திப் பின்னர் நக்கீரர் உரைத்தவிடத்துப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம் மயிர் சிலிர்ப்ப இருந்தான். (எஉ)

[இஃது இறையனரகப்பொரு ளுரையி னுளது].

---

## எ௩-ஆம் அதிகாரம்

## அவையஞ்சாமை

வாழ்வாத ஆரர் வளவனவை முன்னெதிர்த்துச்
சூழ்தே ரரைவென்றூர்—சோமேசா—தாழ்வகல
ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

அஃதாவது சொல்லுதற் குரிய அவையினை ஒருங்கால் அதற்கு அஞ்சாமை.

யறிந்து சொல்

எஉ. (இ - ள்.) சோமேசா-! அவைஅஞ்சா-அவைக்கு அஞ்சாமல், மாற்றம் கொடுத்தற் பொருட்டு - (எதிரிகள் சொல்லிய சொற்கு) உத்தரஞ் சொல்லுதற் பொருட்டு, ஆற்றின் - சொல்லிலக்கண நெறியானே, அளவு-அளவை நூலை, அறிந்து கற்க - உட்பட்டுக் கற்க, - (அதற்கு எடுத்துக்காட்டு) - வாழ் - வாழ்ந்த, வாதவூரர் - திருவாதவூரடிகள், வளவன் அவை முன் எதிர்த்து - சோழன் அவையின் முன் எதிர்த்து நின்று, சூழ் - (அவ்வவைக்கட்) சூழ்ந்த, தேரரை - (தமது) பகைவர்களாகிய புத்தர்களை, தாழ்வு அகல - (அவர்கள்) கீழ்மை நீங்கும்படி, வென்றார் - வெற்றி கொண்டார் (எ - று.)

அளவைநூல் சொல்நூல் கற்றே கற்க வேண்டுதலின், அதற்கு அஃதாறெனப்பட்டது. அளக்குங் கருவியை அளவென்றது ஆகுபெயராம். அளவை நூல்—தருக்க சாஸ்திரம், அவர் சொல்லை வெல்வதொரு சொல். சொல்லலாவது நியாய சாஸ்திரத்து வாத செற்ப விதண்டைகளுஞ் சல சாதிகளும் முதலிய கற்றார்க்கே யாகலின் அவற்றைப் பிழையாமற் கற்க என்பதாம்.

வாதம் என்பது உண்மைப் பொருளையறியும் வேட்கையுடையா ரிருவரில் ஒருவருக் கொருவர் சொல்லுந் தடைவிடையாகிய கதை. செற்ப (ஜல்ப) மாவது ஒருவரையொருவர்வெல்லும் வேட்கையுடையாரிருவர் இரண்டு பக்கங்களையும் நிலைநிறுத்தாத கதை. விதண்டையாவது வெல்லும் வேட்கையுடையார் தமது பக்கத்தை நிலைநிறுத்த லில்லாக் கதை. சலமாவது ஒரு பொருள் கருதிச் சொல்லியதற்கு வேறு பொருள் கற்பித்துக்கொண்டு பழித்தல், சாதியாவது போலி

புத்தர முதலிய என்றதனுல் தோல்வித்தானம், ஏதுப்போலி, ஆத்மாசிரயதோஷம், அந்யோந்யாசிரயதோஷம், சக்கிரிகை, அநவஸ்தா தோஷம், பிரமாண பாதித்தார்த்தப் பிரசங்கம், விகிகமக விரகம் முதலியன கொள்க. 'வாழ் வாதலூரர்' என்ருர் ஆதிதெய்விகம், அத்யாத்மிகம், ஆதிபௌதிகமென் னும் தாபத்திரயங்களின் நீங்கி உய்ந்தமையின். தாம் ஒருவராக எதிரிகள் பல ரென்பது தோன்றச் 'சூழ் தேரரை' என்ருர்.

கதை.—சைவப்பெரியா ரொருவர் ஈழநாடு சென்று அங்குத் தம் வழக்கப்படி இருக்கினும் நிற்கினும் நடப்பினும் 'சிதம்பரம்' என்று கூற, அதைக் கேட்ட புத்தர்கள் அரசன்பாற் சென்று அதைத் தெரிவித்தார்கள். அரசன் அவரை வரவழைக்க அவரும் அதற்கு ஒருவாறு ஒருப்பட்டு அரண்மனை புகுந்து அரசவையில் 'சிதம்பரம்' என்று சொல்லிக்கொண்டு உட்கார்ந்தார். அப்போது அரசன் 'அஃதென்?' என்றுன். அதற்கவர் " அஃது இருதய புண்டரீகத்தின்கண்ண தாகிய தகராகாச க்ஷேத்ரம்; முத்தி க்ஷேத்ரம்'' எனக் கூறி அத்தலத்தின் மகிமையையும் நன்கு விரித்து அங்கு ஆனந்த தாண்டவம் புரியுஞ் சபாநாயகரது பரத்வத்தையும் பிரசங்கித்தார். அவ் வவையத் திருந்த புத்தகுரு அவ்

மனம் புழுங்கி ' அப்படியானல், யான்

வார்த்தைகளைக் கேட்டு

அச் சிதம்பரஞ் சென்று

புத்தனே தெய்வமென்று மூன்று நாட்களில் நாட்டுவேன்' என்று சூளுரைத்துச் சிதம்பரம் புகுந்தான். புத்தராஜனும் தன்

ஊமை மகளையும் அழைத்துச்கொண்டு அங்கு அடைந்தனன். யாவருந் திருக்கோயிலின்கண் ஒன்று கூடினார்கள். தீக்ஷிதர் களும் சிவனடியார்களுங் கண்டு புத்த குருவையும் பிறரையும் திருக்கோயிலைவிட்டு அகலுமாறு கூற, புத்தகுரு ' யான் சோழ ராஜன் முன் எனது புத்தனே தெய்வமென்று நிறுத்தியன்றிப் புறஞ்செல்லேன்' என்றான். அதுகேட்டு யாவரும் மனம்வெந்து சோழனுக்கு ஓலை போக்கினார்கள். போது சாய்ந்தது. அன்றிரவு பெருமான் தீக்ஷிதர்கள் கனவில் எழுந்தருளி 'நமது தில்லையில் திருவாதவூரனென்னும் மாணிக்கவாசக னுளன். அவனை அழைத்து வரின் வெல்வான்' எனப் பணிக்க அப் பணி சிரமேற் கொண்டு தில்லை மூவாயிரவர்கள் தில்லையில் அடிகள் எழுந் தருளியிருந்த பர்ணசாலையை யடைந்து நடந்த செய்தியை அறிவிக்க, பெருமான் பணித்தவாறே அடிகளும் உடன் வந்து பௌத்தர்கள் சூழ்ந்த மண்டபத்திற்குப் போய் அவர்கள் முகத் தைப் பார்க்கலாகாதெனத் திரை விடுவித்து ஓர் ஆசனத் திருந்து வாதஞ் செய்யப்புக்கு அவர் வாக்கிலுங் கலைமகணின்று சொல்லாடுதல் கண்டு சினந்து, ' வாணீ ! இது சிவாக்கினை, இவ் வஞ்சகருடைய நாவை விட்டுச் செல்க' என்ற வளவிற் புத்தர்



கள் யாவரும் மூங்கைய ரானார்கள். அவர்களை ஊமையர்களாக்க வல்ல அடிகளுக்குத் தன் ஊமைமகளைப் பேசுவிக்கவுங் கூடு மென்றறிந்த ஈழநாட்டரசன் அடிகள் திருவடிகளில் தன் மகளை இட்டுத் தானும் வீழ்ந்து அவளைப் பேசுவிக்கும்படி குறையிரந்து கூறினான். அடிகள் அம் மகளை நோக்கி, 'புத்தர்கள் வினாக்களுக்கு விடை பகர்க' என, அவளும் அது செய்யப் புத்தர் வினாக்களையும் அவள் கூறிய விடைகளையுந் திருச்சாழல் விளையாட்டிற் கூறி யனவாகப் பாடலின் அமைத்தார். ஈழமன்னனும் விபூதிருத்ராக்ஷந் தரித்துச் சைவனானான். பின்னர்த் தில்லை மூவாயிரவர் வேண்டு கோளின்படி அடிகள் ஊமர்களாகிய புத்தர்களையும் பேசுவித்த னர். அவர்களுஞ் சிவதீக்ஷை பெற்றார்கள். (எ௩)

[இது திருவாதவூரர்புராணத்தும் பிறாண்டும் உளது].

## எச-ஆம் அதிகாரம்

## நாடு

மேல்வளமெல் லாமமைந்தும் வீர மகேந்திரந்தான்
றோல்வியுற்று மாய்ந்ததே சோமேசா—ஞாலமிசை
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

அஃதாவது அரசனாலும் அமைச்சனாலுங் கொண்டுய்க்கப் படுவதாய் ஏனை அரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாட்டின் இயல்.

எச. (இ - ள்.) சோமேசா—! ஞாலமிசை - பூமியினிடத்தே, வேந்து அமைவு இல்லாத நாடு - வேந்தனோடு பொருந்துதலில்லாத நாடானது, ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் - மேற்சொல்லிய குணங்களெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும், பயம் இன்று - அவற்றாற் பயனுடைத்தன்று,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வீரமகேந்திரம் - வீரமகேந்திரபுரியானது, மேல் வளம் எல்லாம் அமைந்தும் - மற்றைக் குணநலங்கள் யாவும் அமையப் பெற்றும், தோல்வியுற்று - தோல்வியடைந்து, மாய்ந்தது - அழிந்தது (எ - று.)

.. வேந்தமைவாவது ஏனைக் குணங்களோடு பொருந்தியதற் கேற்ப அரசனும் நற்குண நற்செய்கை யுடையனாதல். மேற் சொல்லிய குணங்களாவன உழவரும் அறவோரும் செல்வரும் ஒருங்கு வாழ்தல், அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத் தானும் விரும்பத் தக்கதாய்க் கேடின்மையோடு கூடி மிகவிளை தல், பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வரினும் அவற்றைத் தாங்கி அதன்மேற் றன் னரசனுக்கு இறைப் பொருண் முழுவதையும் உடம்பட்டுக் கொடுத்தல், மிக்க பசி யும் நீங்காத நோயும் புறத்து நின்றுவந் தழிவு செய்யும் பகையு மின்றி இனிது நடத்தல், மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும் உட்பகையும் வேந்தனை அலைக்குங் கொல்வினைக் குறும்பரும் இலதாதன் முதலியன. வீரமகேந்திரம் என்பது சூரபத்மன் நகரம். இதனைச் சூரபத்மன் வேண்டியவாறு விசுவகர்மா சுக்கிரன் கூறிய எல்லைச்சுட் கடலின் நடுவின் நிருமித்தனன். இதற்கு மற்றை வளங்கள் யாவும் குறைவின்றி அமைந்து கிடந் தமையை 'ஆணமில் சிந்தை வீர னச்சுதன் முதலோர் வைகுஞ், சேணகர் நோக்கிச் சூழுந் திசைநகர் போக்கிப் பாரின், மாணகர் நோக்கி வீரமகேந்திர நோக்கிச் சூர, னீணகை ரிதற்கி யாவு நிகரில போது மென்றான்' என்னுங் கந்தபுராணச் செய்யுளா னறிக.

கதை:—அறுமுகக்கடவுள் சூரபன்மன் நகரமாகிய வீரமகேந் திரத்தை யுண் ணுமாறு கடலை நோக்கிப் பணிப்பக் கடலும் அவ் வாறே உண்டு அதன்கண் வாழ்ந்த அசுரர்களை எல்லாம் அழித் தது. 'வேலவன்முன் விழுங்குகெனப் பணித்திடலும் வீரமகேந் திரத்தை யுண்டு, சாலவத னிடத்தமர்ந்த தகுவர்குலமேயழித் துத் தங்கிட் டீங்கு, நீலநெடுங் கடறனது நவையுமவ னருட்டி றத்தா னீங்கிப் பண்டு, போலதனைச் சூழ்கிடந்தாற் போன்றது பொன் மதிலுடுத்த கிடங்கு மாதோ' என்னுந் தணிகைப் புராணச் செய்யுளா னறிக. (எச)

[இது கந்தபுராணத் துளது.]

---

## எரு—ஆம் அதிகாரம்

வல்லதிகன் றன்னரணம் வாள்வளவன்
சேனைசெலத் தொல்லைவலி மாண்டதே
சோமேசா—நல்ல வினைமாட்சித் தாகியக் கண்ணும்
வினைமாட்சி யில்லார்க ணில்ல தரண்.
கக௨ சோமேசர் முதுமொழி வெண்பா

எ-ரு. (இ - ள்.) சோமேசா!—அரண் - அரணனது, வினை நல்ல மாட்சித்து ஆகியக்கண்ணும் - மற்றைய நன் மாட்சியெல்லா முடைத்தாய விடத்தும், வினைமாட்சி இல்லார்கண் - வினை செய்தற்கண் மாட்சி யில்லாதார் மாட்டு, (அம்மாட்சி யெல்லாம்) இல்லது - இலதாம்,— (அதற்கு எடுத்துக்காட்டு) - வல் அதிகன் அரணம் - வலி மையுடைய அதிகனது அரணனது, வாள் வளவன் சேனை செல - வாளையுடைய புகழ்ச்சோழ நாயனாது சேனை சென்றதும், தொல்லை வலி மாண்டது - பழமையான வலிமை அழிந்தது (எ - று.)

வானா விருத்தலும், அளவறியாது செய்தலும், ஏலாதது செய்தலும் அடங்க, 'வினைமாட்சி யில்லார்' என்றும், ஏற்ற வினையை அளவறிந்து செய்து காவாக்கால் அம் மாட்சிகளாற் பயனின்றி அழியுமென்பார் 'இல்லது' என்றுங் கூறினார். அரணம்-அம்முச் சாரியை பெற்ற பெயர்.

கதை:—சோழமண்டலத்தில் உறையூரில் உலகமுழுவதும் ஒரு குடைக்கீ ழாண்ட புகழ்ச்சோழ நாயனர் என்பார் கருவூரை யடைந்து அத்தாணி மண்டபத்திருந்து சிற்றரசர் கொணர்ந்த திறைகளைப் பெற்று அமைச்சர்களை நோக்கி "திறை கொடாத அரசருளரேற் கூறுக" என, அவர்கள் 'அருகுள்ள தொரு மலையரணத்து அதிகனென்பானுளன். அவனே கீழ்ப்படிந்து திறை கொடாதவன்' என, அவன்மேற் படையெடுத்துச் செல்லுமாறு அவர்களுக்கு ஆஞ்ஞாபித்தார். அவ் வாஞ்ஞையை மேற்கொண்டு அமைச்சர்கள் நாற்பெரும் படையுடன் சென்று அம் மலையரணை யடைந்து அதிகனுடைய சேனையை வதைத்தார்கள். அதிகனும் அஞ்சி ஓடி ஒ ரருஞ்சுரம் புக்குய்ந்தான். (எ௰)

[இது பெரியபுராணத் துளது]

---

## எ௲-ஆம் அதிகாரம்

# பொருள்செயல் வகை

உக்கிரனுர் மேருவைவென் றொண்ணிதியம்
பெற்றமையாற் றொக்ககுடி காத்தனர்காண்
சோமேசர்—மிக்குயர்ந்த குன்றேறி யானைப்போர்
கண்டற்றாற் றன்கைத்தொன் றுண்டாகச்
செய்வான் வினை.

சோமேசர் முதுமொழி வெண்பா

ககரு

அஃதாவது பெரும்பான்மையும் நாட்டானும் அரணானும் ஆக்கவுங் காக்கவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம்.

எசு. (இ - ள்.) சோமேசா—! தன் கைத்து உண்டாக

ஒன்று உண்டாக

செய்வான் வினை - தன் கையதாகிய பொருள் ஒரு வினையை எடுத்துக்கொண்டான் அதனைச்

செய்தல், மிக்கு உயர்ந்த குன்று ஏறி - (ஒருவன்) மிக உயர்ந்த மலைமேலேறி நின்று, யானை போர் கண்டற்று - யானைப்போரைக் கண்டாலொக்கும்,—(அதற்கு எடுத்துக் காட்டு) - உக்கிரனர் - உக்கிரகுமார பாண்டியர், மேருவை வென்று - மேருவைச் (செண்டாலடித்து) வெற்றிகொண்டு, ஒள் நிதியம் பெற்றமையால் - ஒளி பொருந்திய நிதியைப் பெற்றதனால், தொக்க குடி காத்தனர்-திரண்ட குடிகளைப் பாதுகாத்தனர் (எ - று.)

பின் 'செய்வான்' என்றதனால் 'ஒன்று' என்பதற்கு 'ஒருவினை' எனப் பொருளுரைத்தாம். குன்றேறினன் அச்சமும் வருத்தமு மின்றி நிலத்திடை யானையொடு யானை செய்யும் போரைத் தான் இனிதிருந்து காணுமாறுபோல, பொருளுண்டாக ஒரு வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமு மின்றி வல்லாரை ஏவித் தான் இனிதிருந்து முடிக்கு மென்பதாம். காண்—அசை.

கதை:—உக்கிரகுமார பாண்டியன் அரசுபுரியுநாளில் மழை சுருங்கக் குடிகளுக்குப் பருக நீர் பெறுதலும் அரிதாயிற்று. மன்னவன் சுந்தரேசப்பெருமான் சந்நிதி புகுந்து குறைகூறி இரந்து அரண்மனை மீண்டு மனம் வருந்தி அன்றிரவு உறங்கும் போது பெருமான் ஒரு சித்தராய்க் கனவிற் றோன்றி குமர! மழை இப்போது அரிது. அதை வேண்டி

'வடிவேற்

வருந்தல்
வேண்டா. மேருமலையின்கண் ஒரு குகையுட் சேமநிதி யுளது. ஆங்குச் சென்று அதனைச் செண்டாலடித்துச் செருக்கடக்கி வேண்டியவளவு நிதிகொண்டு அக் குகையை அடைத்து நின்குறி பொறித்து வருதி' என்றருள, மன்னவனும் அப்படியே செய்து பொன் கொணர்ந்தனன். (எசு)

[இது திருவிளையாடற்புராணத் துளது.]

---

சோ—8

## எஎ-ஆம் அதிகாரம்
## படைமாட்சி

நகைப்ப முப்புரமு நீறாகி மாய்ந்ததே
தூநகையாள் பாலமருஞ் சோமேசா—வானின்
ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

அஃதாவது படையினது தன்மை.

எஎ. (இ - ள்.) தூ நகையாள் பால் அமரும் -

வெள்
ளிய பற்களையுடைய உமையம்மையார் இடப்பக்கத்தில் வீற்றிருந்தருளும், சோமேசா!—எலி பகை - எலியாகிய பகை (திரண்டு,) உவரி ஒலித்தக்கால் என்னும்-கடல்போல ஒலித்தால் (நாகத்திற்கு) என்ன துன்பம் வரும், நாகம் உயிர்ப்ப கெடும் - அந்த நாகம் உயிர்த்த வளவில் அது தானே கெடும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - நீ நகைப்ப - நீ நகை செய்ய, முப்புரமும் - திரிபுரங்களும், நீறு ஆகி வானின் மாய்ந்தது - பஸ்மமாகி ஆகாயத்தின்கண் அழிந்தது (எ - று.)

உவரி என்புழிப் 'போல' என்னும் உவமைச் சொல் தொக்கது. இந்தத் தொழிலுவமையாற் றிரட்சி பெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டு ஆர்த்தால் அதற்கு வீரன் அஞ்சான், அவன் சீறிய வளவில் அவர்தாங் கெடுவ ரென்பது தோன்ற நின்றமையின் இது பிறிதுமொழிதலென்னும் அணி; இதையே ஒட்டணியெனவும் நுவலாநுவற்சியணி யெனவுங் கூறுப: 'கருதிய பொருடொகுத் ததுபுலப் படுத்தற், கொத்ததொன் றுரைப்பி னஃ தொட்டென மொழிப' என்பது சூத்திரம்; 'நினைத்த பொருளை மறைத்து அப் பொருள் புலப்படுத்தற்கேற்ற பிறிதொரு பொருளை யுரைத்தல் ஒட்டணி' என்பது அதன் பொருளென்க. வீரரல்லாதார் பலரினும் வீரனொருவனே ஆற்றல் நன்றென்பது கருத்து. முப்புர மென்பது ஆகாயத்திற் பறக்கும் மூன்று அரண்களாலாயினமையின் 'வானின்......மாய்ந்ததே' என்றார். (எஎ)

கதை:—மேலே உரைத்தாம் [கூச-வது பாட்டுரை காண்க.]

---

## எஅ-ஆம் அதிகாரம்
## படைச்செருக்கு

மன்மதனின் னோடெதிர்த்து வீறழிந்து
மாண்டாலுந் துன்னுபுக ழேபெற்றான்
சோமேசா—புன்னெருங்குங் கான முயலெய்த
வம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

௭௮. (இ-ள்.) சோமேசா!—புல் நெருங்கும் கானம் முயல் எய்த அம்பினின் - புல் லடர்ந்த காட்டின் ஓடும் முயலைப் (பிழையாம) லெய்த அம்பை யேந்தலினும், யானை பிழைத்த வேல் ஏந்தல் - (வெள்ளிடைநின்ற) யானையை யெறிந்து பிழைத்த வேலை ஏந்துதல், இனிது - நன்று,— (அதற்கு எடுத்துக்காட்டு) - மன்மதன் - காமன், நின்னோடு எதிர்த்து வீறு அழிந்து மாண்டாலும் - உன்னோடு எதிர்த்துப் பெருமை கெட்டு இறப்பினும், துன்னு புகழே பெற்றான் - மிக்க புகழையே அடைந்தான் (எ - று.)

கானமுயல் என்றதனால் - வெள்ளிடை நின்ற என்பதும், பிழைத்த என்றதனால் பிழையாமல் என்பதும், முயற்குத் தக்கவாறு எய்த என்றதனால் யானைக்குத் தக்கவாறு எறிதலும் வருவிக்கப்பட்டன. இது வேற்றரசன் படையோடு போர்செய்து அப்படை முதுகுகாட்டி ஓடினமை கண்டு நாணிப் பின் அவன் மேற் செல்லலுற்ற வீர னொருவனது கூற்றென் றறிக. உம்மை இழிவு சிறப்பு, ஏகாரம் பிரிநிலையோடு தேற்றம்.

கதை:—இந்திரன் மகன் சயந்தனைச் சூரபத்மன் மகன் பானுகோபன் சிறையிட இந்திரன் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து அவர் பிரதியக்ஷமான போது 'கருணைக் கடலே! சூரபத்மன் முதலியவர்களால் யாங்கள் படுந் துன்பம் பெரிதாகலின் அவர்களை ஒழித்தருளல் வேண்டு' மென, பெருமான் 'எம்மிடம் ஒரு புதல்வன் தோன்றி அவர்களை அழிப்பான்' என்று மறைந்தருளிய பின் ஸனகாதியர்களுக்குத் தத்துவஞானத்தை அறிவுறுத்த வேண்டி ஒரு கணப்போது ஞானமுத்திரை தாங்கி மோன நிலையிலமர்ந்தருளினார். இந்திரன் பிரமனிடஞ் சென்று நிகழ்ந்தன கூறிப் பெருமானது மோன நிலையைப் பிரித்தாலன்றி உய்தியில்லை என்று கூறப் பிரமன் மன்மதனை அழைத்து அவனுடைய பாணங்களாற் பெருமானது மோன நிலையைக் குலைக்க



வேண்டினன். அவன் அதற்கு அஞ்சி ஒருப்படானாக அதுகண்டு பிரமன் 'சபிப்பேன்' எனக் கடிந்துரைக்க வேறு செய்வதொன்றறியாது மன்மதன் அப் பிரமன் சாபத்தா லிறத்தலைவிடப் பெருமான் கோபத்தா லிறப்பதே தகுதியென் றெண்ணிக் கைலை புகுந்து பிரமன் ஏவியவாறே செய்யப் பெருமான் தமது மோன நிலை நீங்கி நெற்றி விழியைச் சிறிது திறப்ப மன்மதன் நீறாகி மாண்டனன். (எஅ)

[இது கந்தபுராணத்துளது]

---

## எகூ-ஆம் அதிகாரம்

## நட்பு

வரக்கரசர் பிள்ளா யெனவலித்து மாற்றலுற்றார்
தூக்குபிள்ளை யார்செலவைச் சோமேசா—நோக்கி
நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்

மேற்சென் றிடித்தற் பொருட்டு.

அஃதாவது ஒத்த உணர்ச்சியுடையா ரிருவர்மாட் நட்பினது இயல்.
டுளதாம்

௭௯. (இ — ள்.) சோமேசா!—நட்டல்-நட்புச் செய் தல், நோக்கி—(ஒருவனை யொருவன்) முகநோக்கி, நகு தற்பொருட்டு அன்று - தம்முள் நகுதற்கு இயைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று, மிகுதிக்கண் - (அவர்க்கு) வேண்டாத செய்கை யுளதாய வழி, மேற் சென்று இடித்தற் பொருட்டு - முற்பட்டுக் கடிந்து சொல்லுதற் பொருட்டு,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வாக்கரசர் - திருநாவுக்கரசு நாயனர், தூக்கு பிள்ளையார் செலவை - (தமது வலிமையும் மாற்றாராகிய சமணர் வலி மையும்) ஆராய்ந்தறிந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் (தீய நாளிற் சமணர்மேற்) செல்லுதலை, பிள்ளாய், என - பிள்ளாய் என்று விளித்துப் பருவத்திற் கொவ்வாத செய் கையென, வலிந்து - வற்புறுத்துக் கூறி, மாற்றலுற்றார்— தடுத்தார் (எ - று.)

பழியும் பாவமுந் தருஞ் செய்கை துன்பமே தருதலான் வேண்டப்படுவ தன்றாகலின் அதனை 'மிகுதி' என்றும், அது

சோமேசர் முதுமொழி வெண்பா ககஎ

செய்த ற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்று' என் றும், இன்சொற்கு மீளாமையின், 'இடித்தற் பொருட்டு' என் றுங் கூறினர்.

*பிள்ளாயென விளித்தமை 'அரசருளிச் செய்கின்றார் பிள்ளா யந்த வமண்கையர் வஞ்சனைக்கோ ரவதி யில்லை, யுரை செய்வதுள துறுகோ டானுந் தீய வெழுந்தருள வுடன்படுவ தொண்ணு தென்னப், பரசுவது நம்பெருமான் பழுதணையா தெனப்பகர்ந்து பரமர் செய்ய,*

*கழல்க ளென்றும்*
*விரைசெய்மலர்த்*
*தாள்போற்றிப் புகலி வேந்தர் வேயுறுதோ ளியையெடுத்து விளம்பி னாரே' என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக் கானு மறிக.*

**கதை:**—திருஞானசம்பந்தப் பிள்ளையாருந் திருநாவுக்கரசு நாயனாருந் திருமறைக் காட்டில் எழுந்தருளியிருந்த தறுவாயில், பாண்டி நாட்டிற் சமணசமய மேலிட்டிருத்தலைப் பிள்ளையார்க் கறிவித்துச் சமணர்களை ஒழிக்க வெண்ணி அங்குப் போந்த மங்கையர்க்கரசியாரும் குலச்சிறை நாயனாரும் விடுத்த தூதர் வேண்டியவாறே பிள்ளையாரும் மதுரைக்கு எழுந்தருளுதற்கு ஒருப்பட்டுப் புறப்பட்டார். அப்போது திருநாவுக்கரசு நாயனார் பிள்ளையாரது இளமையையுஞ் சமணரது வஞ்சனையையும் நாளினது தீமையையும் எடுத்துக் கூறித் தடுத்தார். (எகூ)

*[இது திருத்தொண்டர்புராணத் துளது.]*

---

## அ0-ஆம் அதிகாரம்

# நட்பாராய்தல்

*போற்றுஞ் சுசீலன் புயபலனை நீத்தகன்றான்*
*றேற்றிறைவி தும்மிடவுஞ் சோமேசா—வேற்றதே*

ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

அஃதாவது நண்பினரை ஆராயுந் திறம்.

அ0. (இ.- ள்.) சோமேசா—! ஒருவற்கு ஏற்றது ஊதியம் என்பது - ஒருவனுக்குப் (பெறத்)தக்க பேறென்று சொல்லப்படுவது, பேதையார் கேண்மை ஒரீஇ - அறிவிலாரொடு நட்புக்கொண்டானாயின் அதனை யொழிந்து,



விடல் - (அவரின்) நீங்குதல்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - போற்றும் சுசீலன் - (யாவரும்) புகழ்ந்து சொல்லிய சுசீலன் என்னும் அந்தணன், தோற்று இறைவி தும்மிடவும் - (அவனைத் தடுப்பதற்கேற்ற புத்தி) தோற்றிய அரசி தும்மிடவும், புயபலனை நீத்து அகன்றான்-புயபல னென்னும் அரசனை நீங்கிச் சென்றான் (எ - று.)

நட்பொழிந்தாலும் நீங்காக்கால் வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோலத் தீங்கு வருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங்கொழிதலே யன்றி இம்மை மறுமையின்பத்திற்குரிமை யெய்தலு முடைமையின் அதனை 'ஊதியம்' என்றுங் கூறினார்.

'வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோல' என்றது வேடர் புனத்திற்கு இடுந் தீப்பட்ட வழிப் பயனில்லா மரங்களொடு நன்மணங் கமழ்கின்ற சந்தனமரமும் வேங்கை
மரமும் ஒக்க வேகுதலினென்க. 'மனத்தான் மறுவில ரேனுந் தாஞ் சேர்ந்த, வினத்தா லிகழப் படுவர்-புனத்து, வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே, எறிபுனந் தீப்பட்டக் கால்'

என்ற நாலடியார் பாவினைக் காண்க. 'தோற்று இறைவி, என் பதற்கு 'எதிர் தோற்றிய அரசி' எனப் பொருளுரைப்பினு மமையும். உம்மை—எதிர்மறை.

கதை:—வங்கதேயத் தரசனாகிய புயபலன் என்பான் முறை கோடாது அரசு செலுத்துநாளில் ஓராண்டு உத்தராயண புண்ணிய காலம் வர அற்றை நாள் அந்தணர்க்குத் தானஞ் செயய எண்ணி அறிவித்தான். அதனைக் கேள்வியுற்ற சுசீலன் என்னும் பிராமணோத்தமன் விதர்ப்பநாட்டினின்றும் அங்கு வர மற்றைப் பிராமணர்கள் யாவரும் அவனைக் கண்டு போற்றி அழைத்துச் சென்று அரசற்கு அவன் பெருமை கூறி 'முன்னர் அவற்கே தானஞ்செய்க' வென்றார்கள். அரசன் மகிழ்ந்து தானம் வழங்கும்போது சுசீலன் அவன் முக நோக்கி விபூதியில்லாமை கண்டு விபூதி யணியா யாயின் தானங்கொள்ளே னென மறுத்தும், 'செய்யதிரு நீறு தொட்டுத் தரியாதார் பெருஞ்செல்வஞ் சிதையு மன்னர், கொய்யுளைய பரித்திரளுங் கரித்திரளு மறுமன்னர் கொள்வர் வேட்ட, தையலொழிந் தருமகவு தணந்துபெரும் பிணியுடனுய்ச் சரிப்ப ரன்றி, மெய்யினுறுப் புக்குறைந்து புலைய ரினுங் கடைப்பிறவி மேவு வாரால்' என விளைவு கூறியும் அரசன் ஓரேபிடியாய் விபூதி தரித்தற் கிசையா னாயினான். சுசீலன் உடன் எழ அது கண்ட அரசன் தேவி தனது நாசித் தொளையில் ஒரு துரும்பு திருகித் தும்மி 'இது தடை; நிற்க'

என்றாள். மறையவன் அவ்வுரை செவி யேலாது தன்னூடு சென்றான். பின்னர் அவன் கூறியவாறே அரசன் செல்வஞ் சிதைந்து நாடிழந்து காடு புகுந்து மனைவி யொழிந்து மகவு தணந்து குட்டநோய் பெற்று உறுப்பு அரியுண்டு கிடக்கு நிலையில் அவனைச் சந்தித்து வணங்கி விபூதி பெற்றுப் பழைய நிலைமை யடைந்தான். (அ0).

[இஃது உபதேசகாண்டத் துளது].

---

அரு-ஆம் அதிகாரம்

## பழைமை

இல்லானைப் பற்றிழும் கென் றிடவு மன்புகுன்றார்
தொல்லைநெறி நீலகண்டர் சோமேசா—வொல்லா
தழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

அஃதாவது நட்டாரது பழையராந் தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல்.

அக. (இ - ள்.) சோமேசா—! அன்பின் வழிவந்த கேண்மை யவர் - அன்புடனே பழையதாய் வந்த நட்பினை

யுடையார், அழிவு வந்த செய்யினும் - நட்டார் தமக்கு அழிவு வந்தவற்றைச் செய்தாராயினும், ஒல்லாது - (அன்பு நீங்க) மாட்டாது, அன்பு அறார் - அவ் வன்பு நீங்காதிருப்பர்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - தொல்லை நெறி நீலகண்டர்-பழைமையான வழியினின்ற திருநீலகண்ட நாயனார், இல்லாளை பற்றி மூழ்கு என்றிடவும் - மனைவியைக் கைப்பற்றிக் குளத்தின் மூழ்குவாய் என்று சொல்லியும், அன்பு குன்றார் - அன்பு குன்றாராயினார் (எ - று.)

'அழி' என்பது முதனிலைத் தொழிற் பெயர். அழிவு— பொருட் கேடுங் காரியக் கேடும். உம்மை—சிறப்பும்மை.

கதை:—தில்லையம்பதியிற் குயவர்குலத் துதித்த திருநீல

கண்ட நாயனார் சிவனடியார்க்கு மட்கலம் வனைந்து

தரு நாட்களில் சிற்றின்ப நுகர்ச்சி மிக வேண்டி

ஒரு பரத்தைமாதை கஉ0 சோமேசர்

முதுமொழி வெண்பா

அணைந்து வர அவர் மனைவியார் அதனை அறிந்து அவரோடு கூடி உடனிருக்க இசையாராயினார். கட்டழகியாரான தமது மனைவியார் தடுத்தும் நாயனார் அவரைத் தீண்டச் சென்றபோது "தீண்டுவீ ராயி னெம்மைத் திருநீல கண்டம்'' என்று ஆணை யிடவே, நாயனார் அவ்வாணைக் கஞ்சி 'எம்மை' எனப் பன்மை யாற் கூறினமையின் 'மற்றை மாதரார் தமையு மென்றன் மனத் தினுந் தீண்டேன்' எனச் சூளுரைத்து அன்று முதல் ஒரு சேக்கையிற் றுயின்றும் அவரைத் தீண்டாது வாழ்ந்தார். அவ் வாறு வாழ்க்கையிற் சிவபெருமான் சிவனடியார்போலத் திரு வுருத்தாங்கி வந்து திருவோடொன்று கொணர்ந்து தந்து அதற் கெப்பொருளும் நிகரில்லை யென்றுரைத்து அதனைச் சேமித்து வைக்குமாறு பணித்தார். அவ்வாறே நாயனார் சேம மிக்க தோரிடத்தி லதனை வைத்தார். பல ஆண்டுகள் கழிந்தபின் பெருமான் சிவனடியாராக மறுபடி வந்து அத் திருவோட்டைக் கேட்ப, நாயனார் உட்புகுந்து தேடிக் காணாது மயங்கி நிகழ்ந்தது கூறிப் பிழை பொறுக்குமாறு வேண்ட, அடியார் அதற் கொருப் படாது 'நீர் அதனை இழந்தது உண்மையாயின் உமது மகன் கையைப்பற்றிக் குளத்தின் மூழ்கிச் சத்தியஞ்செய்வீர்' என, அதற்கு நாயனார் 'எனக்கு மகனில்லையே' என. அப்படியாயின், 'உமது மனைவி கையையேனும் பற்றி மூழ்குக' என, அதற்கும் நாயனார் 'அதுவும் ஒரு சபதத்தா லிசையாது' என, அடியார் நாயனாரைத் தில்லைவாழ்ந்தணர் பேரவைக்கு அழைத்துச்சென்று நிகழ்ந்தது கூற, அவர்களும் 'மனைவி கைப்பற்றி மூழ்குதல் கடன்' என்று தீர்ப்புச் செய்தார்கள். நாயனார் மனைவியாரைத் தீண்டமாட்டாமை கூற நாவெழாது அதற்கு இசைந்து அடி யாரை உடன்கொண்டு திருப்புலீச்சுரஞ் சென்று அங்குள்ள தொரு குளத்தின் மூழ்கிட மூங்கிற் றண்டி னொரு கோடியைத் தாமும் மற்றொன்றைத் தமது மனைவியாரும் பற்ற, அடியார் 'அவ்வாறு மூழ்குதல் கூடாது, கையைப்பற்றியே மூழ்குதல் வேண்டும்,' என அப்போது நாயனார் தமக்குந் தமது மனைவி யார்க்கும் ஏற்பட்ட சபதத்தை யாவருங் கேட்க வெளியிட்டு மூழ்கினார். அங்ஙனம் மூழ்கின இருவரும் முதுமை நீங்கி இளமை பெற்று எழுந்தார்கள்; தேவர்கள் பூமாரி பொழிந்தார்கள். சிவ பெருமான் பார்வதி சமேதராய் விடைமேற் றோன்றி அவர்களிரு

வானவருக்குஞ் சாமீப்பிய பதவியை அருளினார். (அஎ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## அஉ-ஆம் அதிகாரம்

# தீ நட்பு

ஆங்கா ரியந்தடுத்த வங்கணைசொற்
கேட்டிறந்தான் றூங்காத் தசரதன்றான்
சோமேசா—ஈங்கிதனால் ஒல்லுங் கரும முடற்று
பவர்கேண்மை
சொல்லாடார் சோர விடல்.

அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாகிய நட்பு. குணத்தின்றீமை ஒற்றுமைபற்றி உடையார் மேலதாய், அது பின் அவரோடு செய்த நட்பின் மேலதாயிற்று.

அஉ. (இ - ள்.) சோமேசா!—தூங்கா

தசரதன்—
(வினை செய்தலிற்) சோர்வில்லாத தசரத சக்கரவர்த்தி, ஆம் காரியம் தடுத்த அங்கனை சொல் கேட்டு - செய்ய வேண்டிய நற்செயலைச் செய்யவொண்ணுதபடி தடை செய்த மாதாகிய கைகேயியின் வார்த்தையைக் கேட்டு, (அதனுல்) இறந்தான் - இறந்து பட்டான், ஈங்கு இதனுல் அங்ஙனம் தீங்கு நேர்ந்த இவ்வரலாற்றினுல்,—ஒல்லும் கருமம் உடற்றுபவர் கேண்மை - தம்மான் முடியுங் கரு மத்தை முடியாதாக்கிச் செய்யாதாரொடு கொண்ட நட் பினை, சொல் ஆடார் - (அது கண்டால்) அவாறியச் சொல் லாதே, சோரவிடல் - சோரவிடுக (எ - று.)

முடியா தாக்குதல்—முடியாதாக நடித்தல். சோர விடல்— விடுகின்றவாறு தோன்றுமல் ஒருகாலைக் கொருகால் ஓயவிடுதல். அறியச் சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அது பொழுது பரிகரித்துப் பின்னும் நட்பாயொழுகக் கருதுவ ராக லின், 'சொல்லாடர்' என்றும், 'சோரவிடல்' என்றுங் கூறினர். 'அங்கநா' என்கிற வடசொற்குச் 'சிறந்த அவயவங்க ளுடை யாள்' என்பது பொருள்; அஃதாவது அழகியவளென்க. தான்—அசை.

கதை:—சீதா விவாகத்தின் பின் தசரதர் இராமபிரானுக் குப் பட்டாபிஷேகஞ் செய்ய முயன்றுர். மந்தரை என்னுங் கூனியின் சூழ்ச்சியால் மனநிலைகலங்கிய கைகேயி தனது கணவ ரான தசரதர் முன்னொருகால் தனக்கு வேண்டியபோது தருவ தாகக் கூறின வரம் இரண்டி னென்றுற் பரதன் நாடாள்வும்,

மற்றென்றால் இராமன் பதினான்கு ஆண்டு காடேகவுங் கேட்ப அவர் மனங்கலங்கி வாளாதிருப்பவும் அவனே இராமன்பாற் சென்று "ஆழிசூ ழுலக மெல்லாம் பரதனே யாள நீபோய்த், தாழிருஞ் சடைக டாங்கித் தாங்கருந் தவமேற் கொண்டு, பூழி வெங் கான நண்ணிப் புண்ணியத் துறைக ளாடி, யேழிரண் டாண்டின் வாவென் றியம்பின னரச" னென்றானாக அவனும் 'மின்னொளிர் கான மின்றே போகின்றேன் விடையுங் கொண் டேன் 'என்று தன் பட்டாபிஷேகத்திற்குக் குறித்த அந்நாள் அயோத்தி விட்டு நீங்க அது கேட்டுப் பொறாத தசரதர் உயிர் நீத்தார். (அஉ)

[இஃது இராமாயணத் துளது.]

---

## அங-ஆம் அதிகாரம்

## கூடாநட்பு

*தாய்தீண்டத் தூசுடுத்துச் சாரெனுஞ்சொற் றீதென்று*
*தூய சுயோதனற்குச் சோமேசா—வாயதனால்*
*கட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்சொ*
*லொல்லை யுணரப் படும்.*

அஃதாவது பகைமையான் அகத்திற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுமளவும் புறத்தாற் கூடியொழுகுவார் நட்பு.

அங. (இ - ள்.) சோமேசா!—தூய சுயோதனற்கு - மனக்களங்க மற்ற துரியோதனனுக்கு, தாய் - அன்னையா கிய காந்தாரி, தீண்ட தூசு உடுத்து சார் எனும் சொல்

தீது - (அன்னை) தீண்டுதற்கு ஏதேனும்
திக்கொண்டு செல்வாய் என்ற சொல்

ஓராடை உடுத் என்றாள் - என்று
தீமையுடைத்து, நட்டார் போல்

சொன்னாள், — ஆயதனால் - ஆதனால், —
நல்லவை சொல்லினும் - நட்டார்
போன்று நன்மை பயக்குஞ் சொற்களைச்
சொன்னாயி
னும், ஒட்டார்சொல் ஒல்லை உணரப்படும் - பகைவர்
சொற்கள் (அது பயவாமை) அச் சொல்லிய பொழுதே
அறியப்படும் (எ - று).





சொல்லினும் எனவே, சொல்லாமையே பெற்றும். ஒட்டா
ராதலிற் றீமை பயத்தல் ஒருதலை என்பார் 'ஒல்லை யுணரப்படும்'
என்றார். 'சுயோதனன்' என்னும் வடமொழிப் பெயர்க்கு 'நல்ல
யுத்தத்தை யுடையவன்' என்பது பொருள்.

**கதை:**—துரியோதனன் தாயாகிய காந்தாரி ஒருநாள் அவனை
நோக்கி 'நீ நிருவாணமாய் என்பால் வருக. யான் உனது உடம்பு

முற்றும் தடவுவன்; அதனால் உனது உடம்பு வயிரவுடம்பாம்'
என்றாள். அவன் அதற்கொருப்பட்டிருக்குந் தறுவாயிற் சகுனி

அஃதறிந்து "அஃது அடாது தாய் சொல்லினும் அவளிடம்
நீ கோவணமேனு மின்றிச் செல்லுதல் தகுதியன்று' என அச்

சொற்கள் நல்லவையெனக்கொண்டு
கோவண மொன்றுடன் செல்ல, அவள்

அவனும் அவ்வாறே
தடவிப் பார்த்து 'ஆ!

என்ன காரியஞ் செய்தனை! ஆடையுடுத்துச்
யாரோ கூறிய மாற்றம் தீமை பயப்பதென்

சாரென்று உனக்கு உனக்கு யான் கூறியபடி வயிர
றறிந்தாயில்லையே! கூடாதே!' என வருந்தினன்.

வுடம்பு பெறுதல் இனிக்
(அங)

[இது பாரதத் துளது.]

---

அச-ஆம் அதிகாரம்

## பேதைமை

வன்சமணர் தம்பிரிவால் வாகீசர்க் கின்பமன்றித்
துன்பமென்ப தில்லையே சோமேசா—நன்காம்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

அஃதாவது யாது மறியாமை.

அச. (இ - ள்.) சோமேசா!—பிரிவின்கண்

பிழை
தருவது ஒன்று இல் - (பின்) பிரிவுவரின் அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை, (ஆதலால்) பேதையார் கேண்மை பெரிது இனிது-அறிவிலிகள் (தம்முட்கொண்ட

நட்பு மிக இனிது, நன்கும் ஆம் - நல்லதுமாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வாகீசர்க்கு-திருநாவுக்கரசு நாயனார்க்கு, வன் சமணர் பிரிவால் - கொடிய சமணரது பிரிவினால்,



இன்பம் அன்றி - இன்பமல்லாது, துன்பம் என்பது இல்லை-துன்ப மெனப்படுவ தொன்றில்லை (எ - று.)

நாடோறுந் தேய்ந்து வருதலிற் றுன்பந் தாராதாயிற்று. பேதையார் நட்பைப் புகழ்வார்போன்று பழித்தவாறு. 'என்பது' என்புழிப் 'படு' விகுதி தொக்கது.

கதை:—மேலே உரைத்தாம் [௬க-வது பாட்டுரை காண்க.]

---

## அரு-ஆம் அதிகாரம்
# புல்லறிவாண்மை

இல்லாண் மறுப்பவுஞ்சென் றேகிச் சலந்தரன்றான்
றொல்வலிபோய் மாண்டனனே

சோமேசா—வல்லமையால் ஏவவுஞ் செய்கலான்
றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

அது புல்லிய வறிவினை ஆளுதற்றன்மை யென விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனாயிருந்தே தன்னைப் பேரறிவின னாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற் கொள்ளாமை.

அரு. (இ - ள்.) சோமேசா—! ஏவவும்

வல்லமையால்
செய்கலான் - (புல்லறிவாளன் தனக்கு உறுதியானவற்றை) அறிவுடையார் சொல்லவும் (தனக்கு) வன்மை யிருப்ப தாகக் கருதலால் அவற்றைச் செய்யான், தான் தேறான் - (அதுவன்றித்) தானாகவும் இவை செய்வனவென்று அறி யான், அ உயிர் போம் அளவும் ஓர் நோய் - அவ்வுயிர் உடம்பினின்றும் நீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற் கரியதொரு நோயாம், (அதற்கு எடுத்துக்காட்டு)—சலந் தரன் - சலந்தராசுரன், இல்லாள் மறுப்பவும் செ
சன்று ஏகி-
தன் மனைவியாகிய பிருந்தை தன்னைத் தடுக்கவுஞ் சென் றணைந்து, தொல்வலிபோய் மாண்டனன் - பழைமையான வலியழிந்து இறந்தான் (எ - று.)

உயிர்
,வயத்தான்

தான் உணர்தற்றன்மையாயிருந்தும் நின்ற உடம்பின் மருடற்றன்மைத்தாய் வேறுபடுதலின் 'அவ் வுயிர்'

என்றும், உடம்பொடு கூடியபொழுது ஏவச்செய்தல், தானுக அறிதல் ஆகிய இரண்டு மின்றி இருந்த உயிர்க்கு அதனின் நீங்கியபொழுதே அவ் விரண்டனுள் ஒன்ருகிய தானுக அறிதல் கூடுதலிற் 'போ ஓ மளவும்' என்றும், எட்டுக்குலமலை முதலியன பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவவுடம்பு பெரும் பொறையாய்த் துன்பஞ் செய்தலின், 'ஓர் நோய்' என்றுங் கூறினுர். இக் குறள் நன்னூல் விருத்தி யுரையிற் கோபத்தின் வருந் தினைவழுவமை திக்கு உதாரணமாகக் காட்டப்பட்டதறிக. 'சென்று ஏகி' ஒரு பொருட் பன்மொழி எனக்கொண்டு 'விரைந்து சென்று' எனினுமாம். (அ௫)

**கதை:—மேலே உரைத்தாம் [உ௮-வது பாட்டுரை காண்க.]**

---

## அ௬-ஆம் அதிகாரம்

# இகல்

எத்திறத்துங் கெட்டா னிகலாற் சுயோதனன்சீர்
துய்த்தனனட் பாற்றருமன் சோமேசா—மொய்த்த
இகலானு மின்னுத வெல்லா நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு.

அஃதாவது இருவர் தம்முட் போர் செய்து வலிதொலைதற் கேதுவாகிய மாறுபாடு.

அ௬. (இ-ள்.) சோமேசா—! மொய்த்த இன்னுத எல்லாம்
இகலான் தீயன வெல்லாம்

ஆம் - நெருங்கிய மாறுபாடொன்றான்
உண்டாம், நகலான் நல்நயம் என்னும்

செருக்கு ஆம் -
பெருஞ் செல்வம்

நட்பொன்றான் நல்ல நீதியென்னும்
உண்டாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு)-

சுயோதனன் - துரியோதனன், இகலான்-மாறுபாட்டான், எ திறத்தும் கெட்டான் - எல்லாவிதத்திலும் அழிவடைந்தான், தருமன் - தருமபுத்திரன், நட்பால் - நட்பான், (எத்திறத்தும்) சீர் துய்த்தான் - (எல்லா விதத்திலும்) மேன்மை யடைந்தான் (எ - று).
தல்;

இன்னுதன—வறுமை, பழி, பாவமுதலாயின. நகல்-மகிழ் ஈண்டு அதற்குக் காரணமாகிய நட்பிற்காயிற்று. செருக்கு-

களிப்பு; இதுவும் அதற்குக் காரணமாகிப் பெருஞ் செல்வத்திற் காயிற்று. இவ்வை யிரண்டுங் காரிய வாகுபெயரென்க. இனி, நல்ல நீதி காரணமும் பெருஞ் செல்வங் காரியமுமாக, 'நன்னய மென்னுஞ் செருக்கு' எனக் காரியத்தைக் காரணமாக தார். 'எத்திறத்தும்' என்பதனைச் 'சீர்௸துய்த்தான்' னோடுங் கூட்டுக.
உபசரித்
என்பத

கதை:—துரியோதனன் ஆதி தொட்டு அந்தம் வரையும் தரும புத்திரன் முதலிய பாண்டவர்களிடந் தீராத பகைமையே கொண்டு மன மொழி மெய்களாற் செய்யக்கூடிய பல தீங்கு செய்து தன் சேனையும் வலியும் அழிந்து பழி பாவங்க ளடைந்து இறந்து பட, தருமபுத்திரன் ஒத்துவாழ வேண்டு மென்கிற கருத்தே கொண்டு நேர்ந்தபோ தெல்லாம் அவனுக்கும் அவனைச் சேர்ந்தார்க்கும் பல நன்மை செய்து எல்லாச் செல்வங்களையும் புகழ் புண்ணியங்களையும் பெற்று வாழ்ந்தான். (அசு)

[இது பாரதத் துளது.]

---

## அஎ-ஆம் அதிகாரம்
# பகைமாட்சி

ஏனையர்பால் வெற்றிகொண்டா னின்னோ
டெதிர்த்திறந் தூசுறும்பூ வாளியான்
சோமேசா—மானம் [தான் வலியார்க்கு
மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

அஃதாவது அறிவின்மை முதலிய பகையை மாட்சிப்படுத்தல்.

குற்றங்களுடைமையாற்

அஎ. (இ-ள்.) சோமேசா— மானம் வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக - கொண்டாட்டத்தையுடைய (தம்மின்) வலியார்க்குப் பகையா யெதிர்தலே ஒழிக, மெலியார் மேல் பகை ஓம்பா மேக -(ஏனை) மெலியார்க்குப் பகையாதலே யொழியாது விரும்புக,—இஃதென்னை யெனின்,- தூ நறு பூ வாளியான் - பரிசுத்தமான நல்ல பூ வம்புடைய மன்மதன், ஏனையர்பால் வெற்றி கொண்டான் - மற்றவர்களிடத்தில் வெற்றி யடைந்தான், நின்னேடு எதிர்த்து இறந்தான் - உன்னேடு எதிர்த்து இறந்தனன்(எ-று.)

## சோமேசர் முதுமொழி வெண்பா

கஉஎ

வலியா ரென்புழித் துணைவலியு மடங்கலின், மெலியா ரென்புழித் துணைவலியின்மையுங் கொள்ளப்படும். அத் துணையாவது படை பொருண் முதலிய வேற்றுமைத் துணையும் நல்லறிவுடைமை நீதிநூல் வழி யொழுகன் முதலிய ஒற்றுமைத் துணையுமென இரண்டாம். அவ்விரண்டு மில்லாரை வெல்வார்க்கு வலி தொலையாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. (அஎ)

கதை:—மேலே உரைத்தாம் (எஅ-வது பாட்டுரை காண்க.)

---

## அஅ-ஆம் அதிகாரம்

# பகைத்திறந்தெரிதல்

நந்தி கலம்பகத்தான் மாண்டகதை நாடறியுஞ்
சுந்தரஞ்சேர் தென்குளத்தூர்ச்
சோமேசா—சந்ததமும் வில்லே ருழவர்
பகைகொளினுங் கொள்ளற்க சொல்லே ருழவர்
பகை.

அஃதாவது மாட்சிமைப்படாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகி நின்ற பகையுள் நட்பாக்கற்பாலதும் நொதுமலாக்கற்பாலதும், அவற்றின்கட் செய்வதும், ஏனைக் களைதற் பாலதன்கட் செய்வனவும், களையும் பருவமும், களையாக்காற் படு மிழுக்கும் என்று இத் திறங்களை ஆராய்தல்.

அ-அ. (இ-ள்.) சோமேசா—அழகு அமைந்த, தென் குளத்தூர் சோமேசா - தென்குளத்தூரில் எழுந்தருளி யிருக்கின்ற சோமேசா! சந்ததமும் - (ஒருவன்) எப் பொழுதும், வில் ஏர் உழவர் பகை கொளினும் - வில்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொண்டானாயினும், சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க - சொல்லை ஏராக வுடைய உழவரோடு பகை கொள்ளா தொழிக, அஃ தென்னை யெனின்,—நந்தி-நந்தித் தொண்டைமா னென் பான், கலம்பகத்தால் மாண்ட கதை - (தன் தம்பி யியற் றிய வசை நூலாகிய) கலம்பகத்தினால் இறந்த வர லாற்றை, நாடு அறியும் - உலகத்தார் அறிவார்கள் (எ - று.)

சொல் ஆகுபெயரான் நீதிநூன்மே னின்றது. வில் ஏர் உழுவர்—வில்லை ஏராகக் கொண்டு பகையாகிய புலத்தை உழுபவர்; அஃதாவது வீரரென்க. வீரம் சூழ்ச்சி என்னும் ஆற்றல்களுள் வீரமேயுடையாரொடு பகை கொண்டாற் கேடு வருதல் ஒருதலை யன்று, வந்ததாயினும் தனக்கேயாம்; ஏனைச் சூழ்ச்சியுடையாரொடு பகைகொண்டாற் றன்வழியினுள்ளார்க்குந் தப்பாது வருதலின் அது கொள்ளினும் இதுகொள்ளற்க என்றார். கொளினும் என்புழி உம்மை எதிர்மறை உம்மை; அதுவும் ஆகாதென்னும் பொருள் படுதலின். இரண்டு முடையாரொடு பகைகொள்ளலாகாமை சொல்லவேண்டா வாயிற்று. இதனை வடநூலார் கைமுதிய நியாயத்தாற் பெறுதும் என்ப. வில்லேருழவர், சொல்லே ருழவர் என்பன உருவக விசேடம். 'ஏர்' என்றேனும் மற்றைக் கருவிகளையும் 'ஒருமொழியொழி தன்னினங் கொளற் குரித்தே' என்னும் விதிபற்றிக் கொள்க. இங்ஙனம் கொள்ளுதலை, உபலக்ஷணத்தாற் கொள்ளுத லென்பர் வடமொழி வாணர். கலம்பகம் என்பது ஒருவகைப் பிரபந்தம்; அதுகுறம், மறம் முதலிய பதினெட்டுறுப்புக்களுடைய தென்க.

நந்திபோத வர்ம னென்பான் இற்றைக்கு ககசுசு ஆண்டுகளுக்குமுன் ௫0 ஆண்டளவு தொண்டைநாட்டை அரசுபுரிந்த பல்லவராசனென்றும், இவன் தெள்ளாறு என்னும் இடத்திற் பாண்டியன் முதலிய மன்னர்களுடன் பொருது அவர்களைப் புறங் கண்டனனென்றும், இவன் பெயர் நந்திவர்மன், நந்திபோதராசன் எனவும் வழங்கப்பெறுமென்றும், இவன் பல்லவல்லனென்னும் பட்ட முடையனென்றும் இவன் இரணியவர்மராசனது குமாரனென்றும், இவன் கல்வியின் மிக்க பிரியமுடையனுய்ப் பல புலவர்களைத் தன் அருகின் வைத்து ஆதரித்தமையிற் 'பண்டிதராலயன்' எனச் சிறப்பித்துக் கூறப்படுவனென்றுங் கூறுவர்.

கதை:—நந்தித் தொண்டைமான் தனது தந்தைக்கு அபி மான ஸ்திரீயினிடம் பிறந்த பிள்ளை.. இவன் தந்தைக்குப் பட்ட மகிஷியினிடம் பிறந்த பிள்ளை இருக்கவும், இவன்மாட்டு வைத்த ஆசையால் மூத்தவ னெனக்கூறி இவனுக்கு முடிசூட்டி அறிவுற் சிறந்த கம்பிய னொருவனை மந்திரியாக அமைத்தான். குடிகள் இச்செயல் கண்டு தரியாது நந்தியைக் கொல்ல முயன்றார்கள். இதனை அறிந்த கம்பியனாகிய மந்திரி சூழ்ச்சியால் தன்மீது படுத் திருப்பவர் உறங்கும்போது ஒலி செய்வதும் விழிக்கு நிலையிற் சும்மா விருப்பதுமான ஒரு கட்டில் அமைத்து அரசன் அதிலேயே படுத்துறங்குமாறு செய்தான். இச் சூழ்ச்சி யுணராத பகை வர்கள் ஒரு நாள் நள்ளிரவில் அரசனது படுக்கையறைச் சுவரிற் கன்னகமிட்டுக் கட்டிலின் ஒலிகேட்டு அரசன் விழித்திருக்கின்ற

னென்று வாளாவிருந்தார்கள். அரசன் ஆளரவங் கேட்டு விழித்துக் கன்னகமிட்டிருத்தலைக் கண்டு உடைவாளை யுருவிக் கன்ன கவாயிலின் பக்கத்தில் நின்றான். அப்போது. கட்டிலின் ஒலி நின்றது. பகைவர் அரசன் உறங்கினனென நினைத்து ஒவ்வொருவராய்க் கன்னகவாயிலுள் நுழைந்தார்கள். அங் ஙனம் நுழைந்தவர்களை யெல்லாம் அரசன் உடை வாளால் தலை துணித்தனன். உள் நுழைந்தவரொருவரும் மீளாமை கண்ட குலமகன் ஒரு மூங்கிற் றண்டின் நுனியில் ஒரு கரிப்பானையைக் கவிழ்த்து அக் கன்னக வாயிலுள் நுழைக்க, அரசன் அதனையும் ஒரு தலையென்று கருதி வாளால் தாக்க அவ் வொலி கேட்ட வளவில் உள் நிகழ்வது இன்னதென அறிந்த குலமகன் ஓடி விட்டான். பின்னர் நந்தி புறத்தில் வந்து பார்த்து ஒருவரையுங் காணாது நிகழ்ந்தன யாவும் மந்திரிக்குக் கூற அவன் முன்னை யிலும் மிக்க காவலா யிருந்தான். ஓடிப்போன குலமகன் அரசனைக் கொல்லுதற்கு வேறொருபாயமுங் காணாது அவன்மீது வசைநூலாக ஒரு கலம்பகம் பாடி அதனை அரசவையில் அரங்கேற்றக் கொணர்ந்தான். வஞ்சனை யறிந்த மந்திரி அதனை அரசனுக்குக் காட்ட லாகாதென்று அவனைத் துரத்திப் பின் அந் நாட்டில் ஒருவரு மதனை ஓதலாகாதெனப் பறை சாற்று வித்தான். அது நிற்க. நந்திக் கலம்பகம் பாடிய அக் குலமகன் தான் நாடோறும் இரவிற் செல்லும் வேசை வீட்டிற்கு ஒருநாளிரவு காலந் தாழ்ப்ப, அவன் வரவை எதிர்பார்த்து நின்ற வேசையும் அயர்ந்து வீட்டின் இடைவழியில் உறங்கினளாக, ஊர்க்காவலன் அவ் வீட்டு வாயிற் கதவு திறந்திருத்தல் கண்டு பதிவிருந்தனன். சிறிதுபோது கழிந்த பின்னர்க் குலமகன் அங்குப் போந்து வேசை இடைவழியில் உறங்குவது கண்டு சந்தனக் குழம்பை அவண்மீ தெறிந்து ஒருபுறம் ஒதுங்கினான். அவள் விழித்து நின்று அங்கு ஒருவரையுங் காணாது மயங்கி "இது செய்தார் யாவர்?" எனத் திகைக்கும்போது குலமகன் எதிர் நின்று 'செந்தழலின் சாற்றைப் பிழிந்து செழுஞ்சீதச், சந்தனமென் றூரோ தடவினார்' என்னும் நந்திக் கலம்பகப்பா வடிகளைக் கூறக் கேட்ட ஊர் காவலன் அவனைப் பிடித்து அரச

னிடங் கொண்டு சென்றான். அவ் விரண்டடிகளைக் கேட்ட நந்தி. 'மற்றை இரண்டடிகளையுஞ் சொல்லுக ' என, இளவல் 'பைந் தமிழை, ஆய்கின்ற கோனந்தி யாகந் தழுவாமல், வேகின்ற நெஞ்சே விரைந்து' என்றது கேட்டு அவன் பாடிய கலம்பக முற்றுங் கேட்க விரும்பி அதனை அறிவிக்க, அதற்கவன் 'அந் நூலை இம் முறையிற் கேட்டல் வேண்டும். காடு சேர்ந்து சந்தன விறகுகள் கொண்

நீ பல்லக்கேறி இடு
டடுக்கிய சிதையின
மீது இருந்து கேட்டல் வேண் டும் ' என்றான். அமைச்சன் பல வாறு தடுத்துங் கேளாது அரசன் ' வருவது வருக, நூல் கேட்

சோ—9



டலே துணிவு ' என்றுரைத்து அவ்வாறே இருந்து கேட்குமள வில் வரவரத் தாதுக்கள் ஒடுங்கிவந்து நூல் முற்றிய வளவில் தன் கணையாழியைக் கழற்றிக்கொள்ளும்படி தம்பிக்குச் சமிக்கை செய்து சாய்ந்து பட்டான்.

இனி, அவன் சொற்படி தான் காட்டிற்கும்

அரண்மனைக்
கும் நடுவில் வரிசையாய்த் தொண்ணூற்றென்பது பந்தர் இட்டு ஒவ்வொரு பந்தரில் நின்று ஒவ்வொரு கவிகேட்டு அப் பந்தர் ஒவ்வொன்றும் உடனுக்குடன் வெந்துபோவதைக் கண் கூடாகக் கண்டும் நந்தித் தொண்டைமான் கவியின்பத்தையே வியந்து முற்றக் கேட்டு மாண்டனனென்பர் ஒரு சிலர். அரசன் இறந்தபின் கலம்பகம் பாடிய அவன் தம்பியாகிய குலமகன் கொல்லாபுரிச்சந்திர னென்பான் முடிசூட்டித் தொண்டைநாட் டரசனாயினான்.

' பொன்னா நுழைவழிப் பொய்த்தலை நீட்டும்

புலவன்முன்
சொல், கள்ளாருஞ் செஞ்சொற் கலம்பக மேகொண்டு காயம் விட்ட, தெள்ளாறை நந்தி யெனுந்தொண்டை மான்கவி தீர்ப்ப தற்கு, வள்வார் முரச மதிர்த்தாண் டதுந்தொண்டை மண்ட லமே,' 'வெல்லாமல் வென்றுநற் சந்தனக் காட்டத்தின் மேலிருந்து, நல்லாறை நந்தி கலம்பகங் கேட்டபி னற்றுணைக் குக், கொல்லா புரிச்சந்த்ரன் மாமுடி சூட்டக் குடைகவித்து, மல்லார் புரித்தொண்டை மானுன துந்தொண்டை மண்டலமே' என்னுந் தொண்டைமண்டல சதகப் பாட்டுக்களும், 'வானுள மதுயை யடைந்ததுன் வதனம் வையக மடைந்ததுன் கீர்த்தி, கானுறு புலியை யடைந்ததுன் வீரங் கற்பக மடைந்தவுன் கரங்கள், தேனுறு மலரா ளரியிடஞ் சேர்ந்தாள் செந்தழல் புகுந்ததுன் மேனி, யானுமென் கவியுமெவ்விடம் புகுவே மெந் தையே நந்திகா யகனே' என்னும் நந்திக் கலம்பகப் பாட்டும் இங்கு நோக்கத்தக்கவை. (அஅ)

---

## அகூ-ஆம் அதிகாரம்

# உட்பகை

மர்ற்றூர் முடியும் வளமையுங்கொண் டேகலந்
தோற்றான் வழுதிமகன் சோமேசா—ஆற்றலிலா
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ள தாங் கேடு.

சோமேசர் முதுமொழி வெண்பா

கஅக

அஃதாவது புறப்பகைக்கு இடனாக்கிக் கொடுத்து அது வெல்லுந் துணையும் உள்ளாய் நிற்கும்

பகை.

அகூ. (இ.-ள்.) சோமேசா—! ஆற்றல் இலா-வலி யில்லாத, உட்பகை எள் பகவு அன்ன சிறுமைத்தே ஆயி னும்-(அரசனது) உட்பகை (அவன் பெருமையை நோக்க) எள்ளின் பிளவை யொத்த சிறுமை யுடைத்தே யாயினும், கேடு-(பெருமை யெல்லாம் அழியவரும்) கேடு,
உள்ள
தாம் - அதன்
வழுதிமகன் -

அகத்ததாம், - (அதற்கு எடுத்துக்காட்டு) - வீரபாண்டியன் மகன், மாற்றார் - பகைவர், முடியும் வளமையும் கொண்டு ஏக - தனது முடியையும் செல்வத்தையுங் கவர்ந்துகொண்டு செல்ல, நலம் தோற்றான் - பெருமை இழந்தனன் (எ - று.)

மிகப் பெரிதாகிய கேடு தனக்கு எல்லை வருமளவும் மிகச் சிறிய உட்பகையுள் அடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டு நிற்குமென்பதாம். இதனால் அது சிறிதென்று இகழப்படா தென்பது கூறினார். வழுதிமகன் என்பது 'சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்' என்புழிப்போலப் பாண்டியன் முடிசூட்டப் பெறுத சிறுவன் என்னும் பொருட்டாயிற்றென்க.

கதை:—வீரபாண்டியற்குக் காமக்கிழத்தியர்பால் பல மைந்தர்கள் பிறந்தும், அவனும் அவன் தேவியும் பல விரதங் களை நோற்றுச் சுந்தரேசப்பெருமான் திருவருளால் ஒரு மைந்த னைப்பெற்றார்கள். பெற்ற சில நாளைக்கெல்லாம் வீரபாண்டியன் வேட்டைமேற் சென்று காட்டிற் புலிக்கோட்பட்டான். இதனை யறிந்த காமக்கிழத்தியர் மைந்தர்கள் சோர்வு நோக்கிப் பண்டா

ரத்திலுள்ள செல்வத்தையும் கிரீடத்தையும் கவர்ந்தார்கள். மந்திரிமார் குலமகனைக்கொண்டு வீரபாண்டியற்குச் செய்ய வேண்டிய கடன் யாவும் நிரப்பிய பின்னர் அவனுக்கு முடிசூட்ட எண்ணிப் பண்டாரத்தைத் திறந்தார்கள்; அங்கு நவமணி மகுடத்தைக் கண்டாரில்லை. அதனால் 'என் செய்வோம், வேறுமுடி அமைத்தற்கு ஏற்ற மாணிக்கமில்லையே' என்று வருந்தி மைந்தனை அழைத்துக்கொண்டு மதுரேசன் சந்நிதி புகுவார் கோபுர வாயிலில் மாணிக்க வியாபாரியாகிய ஒரு வணிகன் வரக் கண்டார். அவ் வணிகனும் அவர்கள் குறையை விசாரித்தறிந்து தான் அவர்களுக்கு வேண்டிய நவரத்நந் தருவதாகக் கூறிப் பல ரத்நங்களை எடுத்துக்காட்டி அவற்றின் தோற்றம், செயல் குண முதலியவற்றை விளக்கி மணிமுடி யமைத்தற்கு வேண்டிய அரதனங்களைத் தெய்வம் பரவி ஆசிர்வதித்துத் தர மைந்தனும்



அவற்றை இரண்டு கைகளையும் விரித்தேற்றான். அப்போது வணிகன் மைந்தனையும் மந்திரிகளையும் நோக்கி 'இம்மணிகளான் முடியமைத்துச் சூட்டுக. மைந்தனை அபிடேக பாண்டியனென் றழைக்க' என்றான். அதன்பின் மந்திரிகள் அவ்வணிகற்கு விலை கொடுக்க வேண்டிப் பொன் கொணர்ந்து பார்க்க, அவனை அங்குக் கண்டாரில்லை. அங்ஙனமே விடையின்மேல் உமையா

ளோடு பெருமான் திருக்கோயிலிற் புகக் கண்டனர். வந்த வணிகன் பெருமானென்று அவன் கருணைத் திறத்தை வியந்து துதித்து அவன் பணித்தவண்ணமே திருமுடியமைத்து மகுடந் தரித்தனர். 'மற்ற வேலைகா மக்கிழத் தியர்பெறு மைந்த, ரற்ற கோக்கியீ தமையமென் றுனைமா வாதி, யுற்ற பல்பிற பொருணிதியொண்கல னேடுங், கொற்ற மௌலியுங் கவர்ந்தனர் கொண்டு போய் மறைந்தார்' என்னும் புராணப் பாட்டைக் காண்க. (அக)

[இது திருவிளையாடற்புராணத் துளது].

௯௦-ஆம் அதிகாரம்

# பெரியாரைப் பிழையாமை

*கொன்படைக் ணீருகக் கோசிகனுர் சாபத்தாற்*
*றுன்பமுற்ருர் நால்வேந்தர்*
*சோமேசா—இன்புதவும் எந்திய கொள்கையார்*
*சீறி னிடைமுரிந்து*
*வேந்தனும் வேந்து கெடும்.*

அஃதாவது பெரியாராயினுரை அவமதித்து ஒழுகாமை.

௯௦. (இ - ள்.) சோமேசா—! இன்பு உதவும் ஏந்திய கொள்கையார் - (எல்லா வுயிர்கட்கும்) நன்மையைச் செய்கின்ற சிறந்த விரதங்களை யுடையாராகிய பெரியோர், சீறின்-வெகுள்வாராயின், வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும் - இந்திரனும் இடையே தன் பதம் இழந்து கெடும், (அதற்கு எடுத்துக்காட்டு) - கோசிகனுர் சாபத்தால் - கோசிக முனிவரது சாபத்தால், நால்வேந்தர்-நான்கு அரசர்கள், கொன் படைகள் நீறு ஆக துன்பம் உற்ருர் - பெருமையுடைய (தமது) சேனைகள் சாம்பராய் அழிந்து போகத்(தாங்களும்)துன்ப மடைந்தார்கள். (எ-று.)

சோமேசர் முதுமொழி வெண்பா

வேந்தன் என்பது இந்திரனென்னும் பொருட்டாதலை 'வேந்தன் மேய தீம்புன லுலகமும்' என்னுந் தொல்காப்பியத் தானு மறிக. நகுடனென்பான் நூறு அசுவமேத முடித்து இந்திர பதம் பெற்றுப் பெருங்களிப்போடு சிவிகையேறிச் செல்கின்ற காலத்து இந்திராணிமேல் வைத்த காதன் மிகுதியால் தன் சிவிகை தாங்கிச் சென்ற எழுமுனிவருட் குறுமுனிவராகலின் மெல்லென நடந்த அகத்தியரை நோக்கி, 'ஸர்ப்ப, ஸர்ப்ப (ஓடு, ஓடு)' என்று கூறினனாக, அகத்தியர் வெகுண்டு 'நீ ஸர்ப்ப மாகுக' என்று சபிக்க, அதனால் அப் பதம் இழந்து உடனே பாம்பாகி நிலத்தில் விழுந்தன னென்னும் வரலாற்றை யுட் கொண்டு இவ்வாறு கூறினர். இதனை, 'சுகுடஞ்சேர் பரிமகநூ றியற்றிவா னரசுகன்னல் சுவைபோற் பெற்றான், சகுடம்போ லவன்மனதிற் சசிகாமம் பிடித்தலைப்பத் தலைகி ழாக, மகுடம் போய் வானகம்போய் வையகம்போ யரசுபோய் மலைப்பாம்பாக, நகுடன்போ யிறந்தகதை யறியாயோ தெரியாயோ நளினத் தாரோய்' என்னுந் திருக்குற்றாலப் புராணச் செய்யுளானு மறிக. கொன்—அச்சமுமாம், உம்மை உயர்வு சிறப்பு.

கதை:—கௌசல தேயத்தரசனுன கௌசிகனென்னும் அரசற்கு அயை முதலிய நான்கு புத்திரிக ளிருந்தனர். அவர் கட்கும் பருவம் வந்தவளவில், கௌசிகன் சுயம்வரங் கோடித்து எல்லாத் தேயங்கட்குஞ் செய்தி தெரிவிக்க வந்து கூடிய அரசர் களுள் நிடததேயத்தரசனுன மகேந்திரனையும், காம்போச தேயத்தரசனுன சானந்தனையும், அங்கதேயத்தரசனுன கீர்த்தி மாலியையும், கொங்கணதேயத்தரசனுன விசால நேத்திரனையும் அந் நான்கு மங்கையரும் முறையே தமது விருப்பின்படி மாலே சூட்டி மணம் புரிந்தனர். அந் நான்கு அரசர்களும் சில நாள் அங்குத் தங்கி மாமனுரிடம் விடை பெற்றுத் தேரேறிச் சேனை கள் சூழத் தத்தம் நகர்நோக்கிப் புறப்படுகையில், கோசிக முனிவர் எதிர்ப்பட்டு அவர்களை அழைக்க வாத்திய கோஷத் தாலும் சேனையின் ஆரவாரத்தாலும் அவ் வொலி கேளாராக, முனிவர் தம்மை அவமதித்தாரெனக் கொண்டு சீறி நோக்கிய வளவிற் சேனைகள் யாவும் வெந்து சாம்பராயின. அதுகண்ட அரசர்கள் முனிவரை அணுகித் தம்பாற் குற்றமின்மை கூறவும் அவர் சினந் தணியாராய் அவர்களை நோக்கி 'உங்கள் கண்கள் காணுதனவாக நீங்கள் மாதரொடு சேரிற் றலைவெடித்திறக்க; நாடுநகரந் துறந்து வனஞ்சென்று வருந்துக' என்று சபிக்க அவர்கள் அவ்வாறே பெருந் துன்பமடைந்தார்கள். "வாம்ப ரித்தடந் தேருறை மன்னரு மனையார், தேம்பு சிற்றிடைத் தேவி யார் நால்வருந் திரக், கூம்புடைக்கொடித் தேர்முதற் சேனையுங் குழுவுஞ், சாம்ப ராயின வருந்தவன் கடுஞ்சினத் தழலால்,"

கங-ச சோமேசர் முதுமொழி வெண்பா

'தெளித்த மாதவக் கோசிக னடுசினத் தீயாற், களித்த யானை யுஞ் சேனையுஞ் சாம்பராய்க் கழிய, வெளிப்படும்புல னிழந்திரு செவிப்புலன் வியக், குளிர்த்த கல்லரு விப்புனங் குறுகின ரிவர்கள்' என்னும் புராணச் செய்யுள்கள் காண்க. (கூ0)

[இஃது உபதேசகாண்டத் துளது.]

---

கூக.ஆம் அதிகாரம்

# பெண்வழிச் சேறல்

கற்பின்மை யில்லாள்பாற் கண்டுமய
லுற்றழிந்தான் சொற்புண்ட ரீகாக்கன்
சோமேசா—பொற்பெண்ணி இல்லாள்கட் டாழ்ந்த
வியல்பின்மை யெஞ்ஞான்று நல்லாரு ணாணுத்
தரும்.

அஃதாவது தன் வழி ஒழுகற்பாலளாகிய இல்லாள்
தான் ஒழுகுதல்.
வழியே

கூக. (இ-ள்) சோமேசா—! இல்லாள்கண்
தாழ்ந்த
இயல்பு இன்மை - ஒருவன் மனைவிமாட்டுத் தாழ்தற்கேது
வாகிய அச்சம், நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும் -
அஃதிலராய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவ
னுக்கு எக்காலத்தும் கொடுக்கும்,
காட்டு) - சொல் புண்டரீகாக்கன் -

-(அதற்கு எடுத்துக் காகூமென்னும் வைணவ
புகழுடைய புண்டரீ இன்மை கண்டும் - தன்

அந்தணன், இல்லாள்பால் கற்பு
மனைவிமாட்டுக் கற்பில்லாமை

யைக் கண்டு வைத்தும், பொற்பு எண்ணி மயல் உற்று

அழித்தான் - (அவள்) அழகை நினைத்து மயக்கங் கொண் டழிந்தான் (எ - று.)

அவள் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின் அவளை அஞ்சுதல் இயல்பின்மையாயிற்று. அங்ஙனம் அஞ்சி ஒழுகுதலின், அவளை நயப்பாரில்லையாம்; ஆகவே, எல்லாக் குற்றமும் விளையுமென் பது நோக்கி 'எஞ்ஞான்றும் நாணுத் தரும்' என்றார்.

**கதை:—**கோமேதகத் தீவின்கண் வாழ்ந்த விசிட்டனென் னும் அந்தணற்கும் சுவேதை யென்னும் குலபத்தினிக்குஞ் சித்



திரரேகை என்னும் பெண் பிறந்தாள். இவள் மிக்க வடிவழ குடையாள். இவளை இத் தீவிற் பூச்சக்கரமென்னும் ஒரு நகரத் தில் வாழ்ந்த அரிசன்மன் மகன் புண்டரீகாக்ஷன் மணந்தான். இவன் வைணவத் தலைமை பூண்டோன்; இடைவிடாது லக்ஷ்மீ காந்தனைத் தியானிக்கும் பெற்றியோன். ஆயினும், தன்மாட் டிளமைமீதூர்ந்தமையானும் மனைவி பேரழகின ளாதலானும் அவள் போகத்தையே சில நாள் விரும்பிக் கிடந்தான். மனைவி பேரழகுடையளேனும் அவன்மாட்டு மாட்சி யில்லை. தன் நாய கனுடைய மாணுக்கரென்றும் நண்பரென்றும் பிறரென்றும் பாராது வியபசரித்தாள். இங்ஙனம் நிகழ்வுழி ஒருநாள் புண்டரீ காக்ஷனிடந் துருவாசமுனிவர் வர அவரைக் கண்டு அவன் நன் குபசரித்து இல்ல மழைத்துச் சென்று ஆசனத்திருத்திப் போச னத்திற்குத் தங்கும்படி வேண்டி மனைவியைச் சமைக்க ஏவினன். அவளுஞ் சமைத்தான பின் முனிவர் தனித்திருந்த இடத்திற் சென்று அவர் பெருமை யறியாது கலவியை விரும்பித் தழுவ அவர் விழித்துப்பார்த்த வளவில் அஞ்சி ஓடி ஒ ராலமரத்தடியில் ஆட்டுமந்தை யிடையி லொளித்தாள். முனிவர் யோகபலத்தால் அவளிருந்த விடத்தை யறிந்து வைணவத் தலைவனை நோக்கி

'உன் மனைவி இன்ன ஆலமரத்தடியில் ஆட்டுமந்தை யிடையி லிருக்கின்றனள். அவளை அம் மரத்துச்சியில் ஏற்றுவாய்' என்று கட்டளையிட அவனுஞ் சென்று அங்கு அவளைக் கண்டு அவளைப் பிடித்து அவ் வாலமரத்துச்சியி லேற்றினான். அவள் அங்குச் சினைகளாடுந்தோறும் மனம் வருந்தி அலறினாள்; கொம்பைப் பிடித்துக்கொண்டு குலுங்கினாள். அந்தணன் அவள் பிரிவாற்றாது கலங்கித் துருவாசரை யடைந்து "அடிகளே! என் மனைவியை யான் பெற விரும்புகிறேன். அவள் ஆலமரத்தைவிட்டிறங்கிவரும்படி திருவருள் செய்யவேண்டும்" என்று குறையிரப்பத் துருவாசமுனிவர் அதுகேட்டு வியப்புற்று "அங்ஙனமாயின், அவ்வாலடி சென்று 'மனைவி! வருக' என்க" என்றார். அந்தணனும் அங்குச் சென்று அங்ஙனங் கூறியவளவில் அவள் நான்கடி இறங்கினாள். அந்தணன் மறுபடி ஓடி வந்து நிகழ்ந்தது கூறி வருந்தினான். அப்போது முனிவர் "அவளிடத்து இன்பந் துய்த்த ஆடவர் யாவருஞ் சென்று 'இறங்கு' எனக் கூறின இறங்குவள்" என்றார். அதற்கிணங்கி அத்தகைய ஆடவர்களை ஏவ அவர்கள் 'இறங்கு' எனக் கூறியபோதும் பாதிமரம் இறங்கினாள். அதனையும் அறிவித்து வேண்ட முனிவர் "உன் மாணாக்கர் யாவரும் அங்ஙனங் கூறின் இறங்குவள்" என்றார். அவர்கள் அவ்வாறு அழைத்தபோது அடிக் கவைக்கு வந்தாள். அந்தணன் அது கூறி அழ முனிவர் 'அவள் தன்பால் இன்பநுகர்ந்தார் பெயர்களை எல்லாம் கூறின், இறங்குவள்' என்றார். அதனை அந்தணன் அவளுக்கு அறிவிப்ப அவள் ஆசை நாயகர் பெயர்களை எல்லாங்



கூறினாள். அப்போது அவள் கீழ்க்கவைக்கு வந்து தங்கினாள். அதன் பின் முனிவரும் அவ் வாலடி சென்று அந்தணனைப் பல

வாறு இகழ்ந்து கூறி "நீ சைவனுகாது புறச்சமயத்தவனுய்ப் போக" என்றும், அவன் மாணுக்கரை நோக்கி "நீங்கள் குருபத்தினியைக் கூடினதால் உங்கள் மனைவிமார் வேசையராகுக" என்றும், அவனை நோக்கி "எம்மை மேல்விழுந்து தீண்டலாலும் ஆட்டுமந்தையில் ஒளித்தலாலும் நீ அசுரகுலத்தில் ஆட்டு முகத்துடன் பிறக்க" என்றுஞ் சபித்தார். (கக)

[இஃது உபதேசகாண்டத் துளது.]

---

கூஉ-ஆம் அதிகாரம்

## வரைவின் மகளிர்

வேண்டு முருப்பசியைப் பார்த்தன் வெறுத்தனனே
தூண்டு மறைப்பரியாய் சோமேசா—யாண்டும்
பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

அஃதாவது தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதன்றி அதற்கு ஆவார் ஆகாதார் என்னும் வரைவிலாத மகளிரது இயல்பு.

கூஉ. (இ - ள்.) தூண்டு மறை பரியாய் - செலுத்துகின்ற வேதமாகிய குதிரையுடையாய்! சோமேசா—! யாண்டும் - எக்காலத்தும், மதி நலத்தின்

மாண்ட அறி
வினவர் - இயற்கையாகிய மதி நன்மையான் மாட்சிமைப் பட்ட செயற்கை அறிவினையுடையார், பொதுநலத்தார் புன்மை நலம் தோயார் - (பொருள் கொடுப்பார்க் கெல் லாம்) பொதுவாகிய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - பார்த் தன்-அருச்சுனன், வேண்டும் உருப்பசியை வெறுத்தனன்-(தன்னை) விரும்பிய ஊர்வசியை வெறுத்தான் (எ - று.)

மதி நன்மை—முற்பிறப்பிற் செய்த நல் வினைகளான் மனந் தெளிவுடைத்தாதல். அதனாலன்றிக் கல்வி யறிவு மாட்சிமைப்



படாமையின் 'மதிநலத்தின் மாண்ட வறிவினர்' என்றும், அவ் வறிவுடையார்க்குப் பொதுமகளிரது ஆசையின் பொய்ம் மையும் மெய்ந்நலத்தின் பொதுமையும் விளங்கித் தோன்றலின் "தோயார்" என்றுங் கூறினார்.

கதை:—அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெற்ற பின் இந்திரன் தோன்றி அவனைக் கற்பகநாட்டிற்கு அழைத்துச் சென்று கொலுமண்டபத்தின்கண் அவனொடு ஓராசனத்திருந்து ஊர்வசியை நடிக்க ஏவினன், அருச்சுனன் அந் நாடகத்தைக்கண்டு மிக மெச்சினன். சூரியாஸ்தமனமானபின் இந்திரன் அருச்சுனனை

ஒரு மாளிகையி லிருக்கச்செய்து தன்னகம் புக்கனன் அருச்சுனன்பால் மோகங்கொண்ட ஊர்வசி அன்றிரவு அவன் இருந்த மாளிகைக்கு வர அருச்சுனன் அவள் தன் தந்தையாகிய இந்திரற்குரியவளாகலின் தாயென்னு முறைபற்றி அவளடிகளில் விழ்ந்தான். அப்போது ஊர்வசி கோபங்கொண்டு "யான் உன் தோள்களைத் தழுவுதற்கு வர இவ்வாறு பழித்தனையாகலின், நீ பேடியாகுக" வென்று சபித்தாள். அருச்சுனன் மனம் நொந்து ஒரு வத்திரத்தால் உடம்பை மூடிக்கொண்டான். போது விடிந்தது. இந்திரன் ஒரு கந்தருவனை அருச்சுனனை அழைத்து வரும்படி விட, அவன் அருச்சுனற்கு நேர்ந்தமை கூற, இந்திரன் வருந்தி மைந்தனை அணுகி ஒருவாறு தேற்றி ஊர்வசியை யடைந்து அவன் வேண்டும்போது அப் பேடியுருவம் வருமாறு அருளவேண்டு மென்று வரம் பெற்றனன்.(கஉ)

[இது பாரதத் துளது.]

---

## கூரு-ஆம் அதிகாரம்

# கள்ளுண்ணுமை

தக்கன்பான் ஞானத் ததீசியுப தேசமெல்லாந்
தொக்கதனு லானதென்னே சோமேசா—மிக்குக்
களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

அஃதாவது கள்ளினை யுண்ணுமை.

ணம்

கஎ. (இ - ள்.) சோமேசா—! மிக்கு களித்தானை கார
காட்டுதல் - மிகக் கள்ளுண்டு களித்தா னொருவனை

கஅ சோமேசர் முதுமொழி வெண்பா

(இஃதர்கா தென்று பிறனொருவன்) காரணங்காட்டித் தெளிவித்தல், கீழ் நீர் குளித்தானை தீ துரீஇ அற்று - நீருண் மூழ்கினு னொருவனைப் பிறனொருவன் விளக்கினுல் தேடுதலை ஒக்கும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - ஞானம் ததீசி உபதேசம் எல்லாம் - ஞானத்தையுடைய ததீசி முனிவாது உபதேசமெல்லாம், தக்கன் பால் - தக்கனி டத்தே, தொக்கதனுல் ஆனது என் - ஒன்று கூடியதனு லாகிய பயன் என்ன? ஒன்றுமில்லை (எ - று.)

களித்தானை என்பது வேற்றுமை மயக்கம்; நான்காவதன் உருபு நிற்கவேண்டியவிடத்தில் இரண்டாவதன் உருபு நிற்ற லின். நீருள் விளக்குச் செல்லாத வாறுபோல அவன் மனத்துக் காரணஞ் செல்லா தென்பதாம்.

கதை:—தக்கன் தான் மாமன் என்னும் மதத்தாற் சிவ பிரானை இகழ்ந்து அவனை நீங்கி ஓர் யாகஞ் செய்ய எண்ணி யாக சாலை ஒன்றமைத்துத் தேவர் முனிவர் முதலியோர்க்குத் தூதரை விட மற்றியாவரும் யாகத்திற்கு வர இசைய அகத்தியன், ஸன காதியர், அத்திரி, வசிட்டன், பிறகு, ததீசி, பராசரன் ஆகிய இவர்கள் வாரோமென் றறிவித்தார்கள். அதைக்கேட்டுத் தக்கன் வெகுண்ட வளவில் ததீசி முனிவர் அங்கு எழுந்தருளி அவற்குச் சிவபரத்வ முதலியவற்றை இனிது உபதேசித்தும் அவன் அம் முனிவர் மொழியாற் சிறிதும் பயன் எய்திறைனில்லை. (கஅ)

[இது கந்தபுராணத் துளது].

## ௯௪-ஆம் அதிகாரம்

### சூது

முற்பணயத் தாற்பின்னு மூண்டிழந்தார்
சூதரொடு சொற்படுஞ்சூ தாடினோர் சோமேசா—
அற்பமாம் ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு
முண்டாங்கொல் நன்றெய்தி வாழ்வதோ ராறு.

௨

அஃதாவது அறம் பொருள் இன்பங்கட்குத் தடையாகிய சூதாடல்.

சோமேசர் முதுமொழி வெண்பா

௧௫௯

௬௪. (இ - ள்.) சோமேசா—! சூத்ரோடு - சூதாடல் வல்லாரோடு, சொற்படும் சூது ஆடினோர் - (நூல்களான் மறுத்துச்) சொல்லப்படுஞ் சூதாட்டத்தை ஆடினவர்கள், முன் பணயத்தால் - முன்வைத்த பந்தயப் பொருளைப் பெறுதலால், பின்னும் மூண்டு - மேலும் (ஆடுதற்கு) ஊக்கங்கொண்டு, இழந்தார் -(கைப்பொருள் யாவும்) இழந்தார்,—அதனால்,—அற்பமாம் ஒன்று எய்தி - (தூண்டிற் பொன் போன்ற) அற்பமாகிய தொரு பொருளை முன் பெற்று, நூறு இழக்கும் சூதர்க்கும் - (இன்னும் பெறுதும் என்னுங் கருத்தால்) நூற்றினை இழந்து வறியராஞ் சூதர்க்கும், நன்று எய்தி வாழ்வது ஓர் ஆறு உண்டாங் கொல் - பொருளால் அறனு மின்பமு மெய்தி வாழ்வ தொரு நெறியுண்டாமோ ? ஆகாது (எ - று.)

ஒன்றற்கு நூறாகப் பொரு ளிழந்தே வருதலின், அதனால் எய்தும் பயனும் அவர்க்கில்லை யென்பதாம். சொற்படும்—என்பது 'செய்தக்க' என்றாற் போல நின்றது. (௬௪)

---

## ௯௫-ஆம் அதிகாரம்

# மருந்து

நல்ல திலகவதி யார்மொழியை நம்பிவெந்நோய்
சொல்லரசர் தீர்ந்துய்ந்தார் சோமேசா—புல்லிய
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

அஃதாவது பழவினை யானும் காரணங்களானும் மக்கட்கு.
வாத முதலிய பிணிகள் வரும்; அவற்றுட் பழவினையான் வருவன அதன் கழிவின்க ணல்லது தீராமையின் அவை யொழித்து, ஏனைக் காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் றிறம். காரணங்களாவன உணவு செயல்களது ஒவ்வாமை யாகலின், பிணிகளுங் காரணத்தான் வருவன வாயின.

கூ௫. (இ—
வுக்கரசு நாயனர்,

ள்.) சோமேசா—! சொல்லரசர்-திருநா
நல்ல திலகவதியார் மொழியை நம்பி கஉ0

சோமேசர் முதுமொழி வெண்பா

நன்மையுடைய திலகவதியார் என்னும் தமது தமக்கை யார் வார்த்தையை நம்பி, வெம் நோய் - கொடிய சூலை நோய், தீர்ந்து உய்ந்தார் - நீங்கிப் பிழைத்தார்,-அதனல் - புல்லிய தன் நோய் நாடி - (இடையிற்) சேர்ந்த தனது
நோயை அதன் குறிகளால்
நோய் முதல் நாடி - பின்

இன்னதெனத் துணிந்து,
அது வருதற்காரணத்தை
ஆராய்ந்து தெளிந்து, அது தணிக்கும் வாய் நாடி - பின்
அது தீர்க்கும் உபாயத்தினை அறிந்து, வாய்ப்ப செயல் -

(அதனைச் செய்யுங்கால்) பிழையாமற் செய்க (எ - று.)

காரணம் - உணவு செயலென முற்கூறிய விரண்டும். அவற்றை ஆயுள்வேத முடையார் நிதான மென்ப. அவை நாடுதற்பயன்—நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்து செய்தல், உதிரங் களைதல், அறுத்தல், சுடுதல் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு 'அது தணிக்கும் வாய்' என்றார். வாய்—வழி; புறநானூற்றிலும் "கழுவாயுமுள" என்றிருத்த லறிக. பிழையாமை-பழைய மருத்துவர் செய்து வருகின்ற முறை தவறாமை. 'நல்ல' என்பதனை 'மொழியை' என்பதனோடு முடிப்பினுமாம்.

கதை:—திருநாவுக்கரசு நாயனார் சைவசமயத்தை

விட்டுச்
சமணசமயத்தை மேற்கொண்டு அச் சமயநூ லுண்பொருளு ணர்ந்து அச் சமயத்தார்க்குக் குருவாய் இருக்கையில் ஒரு நாள் நாயனார்க்குத் தமக்கையாராகிய திலகவதியம்மையார் திருவதிகை வீரட்டானேசரை வணங்கி வழிபடுவார் தமது தம்பியாரை நினைத்துப் 'பெருமானே! என் தம்பியைச் சமணப் படுகுழியி னின்றும் எடுத்தருளல் வேண்டும்' என்று பிரார்த்திக்கப் பெரு மானும் 'அம்மை! அஞ்சல்! யான் உன் தம்பிக்குச் சூலை நோய் தந்து ஆட்கொள்வன்' என் றருள்புரிந்தார். உடனே நாய னாருக்குச் சூலைநோய் கண்டு வரவர வலி மிக்கது. சமணர்கள் என்ன என்னவோ பரிகாரங்கள் செய்தார்கள்; செய்யச் செய்ய நோய் பொறுக்க முடியாதாயிற்று. அதன்மேல் நாயனார் தம் தமக்கையார்பாற் சென்று நோயின் கொடுமை கூற, அவ் வம்மை யாரும் 'திருவதிகை வீரட்டானேசர்க்குத் திருத்தொண்டு செய்க' என்று கூறித் திருநீறிட்டுக் கோயிற்கு அழைத்துச் செல்ல, அங்குப் பெருமான் சந்நிதி புக்கதும் நாயனார்க்குப் பாமாலை சாத்தும் ஞானமுண்டாக, அவர் 'கூற்றாயின வாறு' என்று தொடங்குந் திருப்பதிக மோதினார். உடன் நோய் நீங்கிற்று. (கூ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது]

கூசு-ஆம் அதிகாரம்

## குடிமை

மங்கலியம் விற்றும் வழாதுபணி செய்துவந்தார்
துங்கமறை தேர்கலயர் சோமேசா—வங்கண்
வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

அஃதாவது உயர்ந்த குடியின்கட் பிறந்தாரது தன்மை உயர்குடிப் பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் உரிய தென்றறிக.

கூசு. (இ - ள்.) சோமேசா—பழங் குடி - தொன்று தொட்டு வருகின்ற குடியின்க ட் பிறந்தார், அங்கண் - அப்
போது, வழங்குவது - (தாம்) கொடுக்கும் பொருள், உள் வீழ்ந்தக் கண்ணும் - (பண்டையிற்) சுருங்கிய விடத்தும், பண்பின் தலைப்பிரிதல் இன்று - தம் பண்புடைமையின்

நீங்கார், - (அதற்கு எடுத்துக்காட்டு) - துங்கம் மறை தேர் கலயர் - உயர்ச்சியுடைய வேதம் வல்ல கலய நாயனார், மங்கலியம் விற்றும் - (தமது மனைவியாரது) மங்கலியத்தை விற்றும், பணி வழாது செய்து வந்தார்-தமது குங்குலிய தூபமிடுந் திருப்பணியைத் தவறாது செய்துவந்தனர்.

தொன்று தொட்டு வருதல்—சேர சோழ பாண்டிய ரென்றாற் போலப் படைப்புக்காலந் தொடங்கி மேம்பட்டுவருதல். அவர்க்கு வறுமையாவது வழங்குவது உள்வீழ்வதாகலின் அதனையே கூறினார்.

கதை:—சோழநாட்டில், திருக்கடவூரில் அந்தணர் குலத்தில் கலயனார் என்பார். பெருமானுக்குக் குங்குலியதூப மிடுகின்ற திருப்பணி செய்து வருகையில் வறுமை வந்தெய்தவும் மனஞ் சோராது நிலம் அடிமை முதலிய யாவும் விற்றுத் தமது திருப்பணியை நடத்தி இனி விற்பதற் கொன்றுமில்லையாக, மக்களுஞ் சுற்றமும் ஊணின்றி வாடினமை கண்டு தமது மனைவியார் நெற் கொணர்தற்குத் தந்த அவர் மங்கலியத்தை விற்கப் புக்கு எதிரிற் குங்குலியப் பொதி கண்டு அம் மங்கலியத்தைத் தந்து அதை வாங்கி ஆலயஞ் சென்று அதைப் பண்டாரத்தி

விட்டு அங்கிருந்தார். அவர் வீட்டின் மனைவி மக்கள் பசி பொறுது உறங்கினார்கள். அப்போது பெருமான் நாயனார் வீடு முழுவதும் பொன்னும் நெல்லும் பிறவளமும் நிறைத்து அவர் மனைவியார் கனவில் எழுந்தருளி அதனை அறிவித்தார். மனைவியார் விழித்தெழுந்து பல வளமுங் கண்டு மகிழ்ந்து தமது கணவர்க்கு அமுது சமைக்க முயன்றார். அதன்மேல், பெருமான் கலயநாயனாருக்குத் தோன்றி 'வீடு சென்று பாலும் அடிசிலும் உண்டு பசி தீர்க' என, அவ் வாணையை மறுக்க வஞ்சி நாயனார் வீடு புகுந்தார்; நிதிகளைக் கண்டார். அன்று முதல் சிவனடியார்க்குத் திருவமுது செய்வித்து மகிழ்ந்து வாழ்ந்தார். (கசு)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## கள-ஆம் அதிகாரம்

## மானம்

அச்சுவத்தா மாப்பட்டா னென்ன வமர்துறந்தான்
றுச்சி றுரோணனென்பான் சோமேசா—நச்சு
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

அஃதாவது எஞ்ஞான்றும் தம் நிலையிற் றாழாமையும், ஊழாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்.

கள. (இ - ள்.) சோமேசா!—நச்சும் மயிர்

நீப்பின்
வாழா கவரிமா அன்னார்—(தான்) விரும்புகிற (மயிர்த் திர ளின்) ஒரு மயிர் நீங்கினும் உயிர் வாழாத கவரிமாவை யொப்பார், மானம் - (உயிரை நீத்தலான்) மானம் (எய்தும் எல்லை) வரின், உயிர்
இறப்பர்,—(அதற்கு

நீப்பர் - (அவ்) வுயிரைத் தாங்காது
எடுத்துக்காட்டு) - துச்சில் துரோ
ணன் என்பான் - ஒதுங்கியிருந்த துரோணன்
எனப்படு வான், அச்சுவத்தாமா பட்டான் என்ன -
(தருமபுத்திரன்) அச்சுவத்தாமா இறந்தான் என்று
சொன்னவளவில், அமர் துறந்தான் - போரை
விட்டு உயிர் நீங்கினான் (எ - று.)
கது.

'நீப்பின்' என்புழி இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் உயிரும் மானமும் உடன் நில்லாதபோது, பின்னும்

ருெக்
போவ .

தாய உயிரை நீத்து என்றும் நிலைபெறுவதாய மானத்தை எய் துவரென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விளக்கி நின்றது. மரீசி அகத்தியன் முதலிய முனிவர்கள் வந்து 'போராண்மை அரசர்க்குரியது; உமக்குக் கோபம் வேண்டா; மனத்தை ஒரு முனைப்படுத்துக' என்று கூற, அவ்வளவில் போரில் ஆசை நடவாது மனம் ஒடுக்கம் எய்துதலின் துரோணன்' என்றார்.

'துச்சில்

கதை:—பதினைந்தாநாட்போரில் திருட்டத்துய்மன் துரோணனை எதிர்த்து நிற்கையில் கண்ணன் போதனையால் தருமபுத்திரன் அச்சுவத்தாமா என்னும் யானையொன்று இறக்குந் தறுவாயில், 'அஸ்வத்தாமா ஹத: குஞ்சர:' என்று கூறத் தன் மகன் அச்சுவத்தாமா இறந்தானென்று கொண்டு வில்லையும் அம்பையும் இட்டுத் துரோணன் உயிர் துறந்தான். (கஎ)

[இது பார்தத் தினது.]

---

## கூஅ-ஆம் அதிகாரம்

# பெருமை

தண்டி யடிகளிரு தாளிணைபே ணுதழிக்தார்
தொண்டராம் பேய்ச்சமணர் சோமேசா—மிண்டுஞ்
சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

றங்

அஃதாவது செயற்கரிய செய்தல், தருக்கின்மை, பிறர் குற் கூறுமை என்றிவை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை.

கூஅ: (இ - ள்.) சோமேசா!—பெரியாரை
பேணி . கொள்வேம் என்னும்
நோக்கு—பெரியாரை வழிப்பட்டு
அவர் இயல்பினை யாம் கொள்ளுதும்
மீண்டும் சிறியார் உணர்ச்சியுள்

என்னுங் கருத்து,
இல்லை - மதத்தாற்
பிழைக்குஞ் சிறியராயினூர் மனத்தின்கண் உளதாகாது,—
(அதற்கு எடுத்துக்காட்டு) - தொண்டர் ஆம் பேய் சமணர்
- அடியாராகிய பேய் போன்ற சமணர்கள், தண்டியடிகள்
இருதாள் இணை பேணுது அழிந்தார் -
தண்டியடிகளுடைய கசை சோமேசர் முதுமொழி
வெண்பா

ணுாது இரண்டு ஒப்பற்ற திருவடிகளை
விரும்பாது அழிந்
தார்கள் (எ - று.)

குடிமை, செல்வம், கல்வி என்றிவற்றது உண்மை மாத்தி ரத்தில் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கு இயல்பென்று அமைந்திருப்பாரை வழிப்பட்டு அஃதுடையராதல் கூடாதென் பதாம். சமணமுனிவ ராகலின், 'தொண்டராம்' என்றும், பிறரை உண்மயக்குதலிற் பேய் போறலின், 'பேய்ச்சமணர்' என் றுங் கூறினூர்.

கதை:—சோழநாட்டில், திருவாரூரிற் பிறவிக் குருடரும் அகக்கண்ணால் அறவாழி யந்தணனாகிய தியாகேசப்பெருமானைக் கண்டு பூசிக்கிறவருமான தண்டியடிகணாயனார் திருக்கோயிலுக்கு மேலைத்திசையிலுள்ள திருக்குளக்கரை யெங்குஞ் சமணர் பாழிகள் நெருங்கிய தறிந்து திருக்குளத்தைப் பெருக்கல் வேண்டிக் குளத்தினுள் ஒரு தறியும் அதன் கரைக்கண் ஒரு நட்டு இரண்டிற்கும் ஒரு கயிறு கட்டி அதைத் தடவிச்

தறியும்
சென்று
மண்ணைக் கல்லிக்கொணர்ந்து கரையிற் கொட்டி வருநாளிற் சமணர் பொறாது மறுக்க அதற்கு அவர் செவி சாய்த்தாரில்லை. "கண்கடா மில்லை, செவியு மில்லையோ?" என்றவர் பரிகசித்துக் கூறி மண்வெட்டியையுங் குறித்தறிகளையும் பிடுங்கி எறிந்தனர். அடிகள் மனம் நொந்து பெருமானைப் பிரார்த்திக்கப் பெருமான் சோழனது கனவில் எழுந்தருளி 'அடிகள் குறைமுடிப்பாய்' எனப் பணிக்கச் சோழன் விழித்தெழுந்து அடிகள்பாற் போந்து குறையறிந்து சமணர்களை அழைப்பித்து, வினவ, 'அவர் தமது கண் பெறலும் எமது கண் கெடலுஞ் செய்வாராானால் யாங்கள் இவ்வூரை விட்டுச் செல்லுவம்' என்றார்கள். அடிகள் பெருமான்
திருவருளால் அவ்வாறே செய்ய அவர்கள் அவ்வூரை விட்டுச் சென்றார்கள். சோழன் அமண் பாழிகளை இடித்துத் திருக்குளத்தின் கரையைக் கட்டி நாயனார் திருவடிகளைப் பணிந்து சென்றான்.
(கஅ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது]

---

## கக-ஆம் அதிகாரம்

# சான்றாண்மை

*வன்மைச் சுயோதனற்கும் வானோர் சிறைமீட்டான்*
*றொன்மை நெறித்தருமன்*
*சோமேசா—பன்முறையும் இன்னாசெய் தார்க்கு*
*மினியவே செய்யாக்கா லென்ன பயத்ததோ சால்பு.*

*அஃதாவது பல குணங்களாலும் நிறைந்து*
*தற்றன்மை.*

*அவற்றை ஆளு.*

கூகூ. (இ-ள்.) சோமேசா!—பன் முறையும் - பல காலும், இன்னா செய்தார்க்கும்-(தமக்குத்) துன்பமானவற்றைச் செய்தார்க்கும், இனிய செய்யாக்கால் - (சால்புடையார்) இன்பமானவற்றைச் செய்யாராயின், சால்பு என்ன பயத்தது - அச்சால்பு என்ன பயனையுடைத்து (ஒரு பயனையு முடைத்தன்று),—(அதற்கு எடுத்துக்காட்டு) - தொன்மை நெறி தருமன் - தொன்று தொட்ட அறவழியின் கண் நின்ற தருமபுத்திரன், வன்மை சுயோதனற்கும்- மனக் கடுமையுடைய துரியோதனனுக்கும், வானோர் சிறை மீட்டான்-தேவர்களது சிறையை மீட்டுதவினான் (எ-று.).

இன்னா செய்தார்க்கும் என்புழி உம்மை இழிவு சிறப்பும்மை. அது அவர்கள் இன்னா செய்யப்பெறுதற் கேற்றவராதல் விளக்கி நின்றது. ஓகாரம் அசை. என்ன பயத்தது என்னும் வினா எதிர் மறைப் பொருட்டு. தாமும் இன்னா செய்வாராயின், சால்பா லொரு பயனுமில்லை என்பதாம்.

கதை:—பாண்டவர் சூதாடித்தோற்றுக் காடுறையும் நாளில், துரியோதனன் தன் பெருமையை அவர்களுக்குக் காட்ட வெண்ணிக் குடும்பத்துடன் அக் காடு புகுந்து அவர்கட்கு எதி

ரில் தன் ராஜ போகத்தை யெல்லாம் அநுபவித்துக் காட்டினன். அப்போது இந்திர னேவலாற் சித்திரசேன னென்னுங் கந்தருவ மன்னன் சில தேவருடன் வந்து துரியோதனனை கயிற்றாற் கட்டி வானத்திற் றூக்கிச் செல்ல முயல, அது கண்ட கன்னன் முதலியோர் அவர்களுடன் பொருது தோற்றோடத் தருமபுத்திரர் கண்டு வீமார்ச்சுனர்களை ஏவித் துரியோதனனைச் சிறை மீட்டார்.





[ஞாதிகள் தமக்குட் பகைமை யிருப்பினும் பிறர்க்கிடந்தா ராமற் சமயத்திற் சேர்ந்து கொள்ளுதலைக் குறித்து மீமாஞ்சையிலும் "குருபாண்டவ நியாயம்" என்றொரு நியாய மிருத்தல் காண்க.] (கக)

[இது பாரதத் துளது.]

---

## கoo-ஆம் அதிகாரம்

## பண்புடைமை

உன்பணிக்கென் றோதிகல்காச் செல்வ முதநியுறத்
துன்பமுற்றார் நால்வணிகர்
சோமேசா—வன்புமிகும் பண்பிலான் பெற்ற
பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

அஃதாவது பெருமை சான்றாண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லாரியல்புகளும் அறிந் தொத்தொழுகுதல். பண் பெனப்படுவது பாடறிந்தொழுகல்' என்றார் கலித்தொகை

யினும்.

௲00. (இ-ள்.) சோமேசா!—அன்புமிகும் பண்பிலான் - அன்புமிக்க தன்மையில்லாதவன், பெற்ற பெருஞ் செல்வம் - (முன்னை நல்வினையினு) லெய்திய பெரிய செல்வம் (ஒருவர்க்கும் பயன் படாது கெடுதல்), நன்பால் - நல்ல ஆவின்பால், கலம் தீமையால் - (ஏற்ற) கலத்தின் குற்றத்தால், திரிந்தற்று - (இன்சுவைத் தாகாது) கெட்டாற் போலும்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - நால் வணிகர் - நான்கு வணிகர்கள், உன் பணிக்கு என்று ஓதி - உனது திருப்பணிக்குத் தருவே மென்று சொல்லி, நல்கா செல்வம் - தாராத செல்வம், உததி உற துன்பம் உற்ருர் - கடலில் விழத் துன்ப மடைந்தார்கள் (எ - று.)

கலந்தீமை என்பது மெலிந்து நின்றது. தொழிலுவமாக விற் பொருளின்கண் தொழில் வருவிக்கப்பட்டது. செல்வத்தைப் படைக்கும் ஆற்றலிலனுதல் தோன்றப் 'பெற்ற' என்றும், எல்லாப் பயனும் கொள்ளுதற்கேற்ற இடமுடைமை தோன்றப்



'பெருஞ் செல்வம்' என்றுங் கூறினர். உற—காரணப் பொருட்டில் வந்த செயவெனெச்சம்.

கதை:—யவன தேசத்தில் ஆதித்த புரத்தில் விச்சுவ வசு என்பான் ஒரு வணிகன் இருந்தனன். அவற்கு நால்வர் மக்கள். அவர்கள்பால் ஆதித்தேச்சுரற் கடிமை பூண்ட அந்தணனொருவன் பன்னாள் நடந்தான். பெருமான் திருப்பணிக்குப் பொருள் தருவதாகக் கூறி அவனை ஏமாற்றினர். அதனால் அவன் மனம் புழுங்கி மீண்டான். அதன்பின் அவர்கள் நால்வரும் கலத்திற் சரக்கேற்றிக் கடலோடினர். கலம் வழி தவறிச் சென்று சுழல் காற்றடிக்கக் கடலி லாழ்ந்தது. (கOO)

[இஃது உபதேசகாண்டத் துளது.]

---

## கOக-ஆம் அதிகாரம்
# நன்றியில் செல்வம்

எல்லா மறையவர்க்கீக் தேவழியன் போலானன்
சொல்லாருங் கீர்த்திரகுச் சோமேசா—நல்லதே
சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

அஃதாவது தேடினவர்க்கும் பிறர்க்கும் பயன் லாத செல்வத்தினது இயல்பு.

படுதலில்

கOக. (இ-ள்.) சோமேசா!—நல்லதே சீர்
உடை செல்
வர் - நன்மைமிக்க புகழுடைத்தாய
செல்வத்தினையுடை

யாரது, சிறு துனி நிற்குங் காலஞ் சிறிதாகிய வறுமை,
மாரி வறங்கூர்ந்த (து) அனையது உடைத்து - (உலகத்தை
யெல்லாம் நிலைநிறுத்தும்) மேகம் வறுமை மிக்காற் போல்
வதோ ரியல்பினை யுடைத்து,—(அதற்கு எடுத்துக்காட்டு)- சொல் ஆரும் கீர்த்தி ரகு - சொன்னிறைந்த புகழினை யுடைய இரகு வென்பான், எல்லாம் மறையவர்க்கு ஈந்தே - (தன்னிடத்தவாய) பொருள்களெல்லாவற்றையும் அந்தணர்கட்குத் தந்தே, வறியன் போல் ஆனான்-தரித்திரனைப் போல ஆயினான் (எ - று.)



துனி—வெறுப்பு; வறுமை அதனைச் செய்தலாற் றுனி யெனப்பட்டது. யாவர்க்கும் பயன்பட்டார் வறியரான விடத்தும் அவ் வறுமை விரைவி னீங்குதலிற் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவ ரென்பது உவமையாற் பெற்றும். நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று. ஏகாரம் தேற்றம்.

கதை:—சூரியவமிசத்திற் பிறந்த இரகு வென்னும் அரசன் ஒரு வேள்வி செய்து முடித்துத் தன் பண்டாரத்திலுள்ள பொருளை எல்லாம் அந்தணர்க்குத் தானஞ் செய்தான். (கOக)

[இஃது இரகுவமிசத் துளது.]

---

## கOஉ-ஆம் அதிகாரம்

# நாணுடைமை

புண்ணு டியிர்வாழ நாணியுயிர் போக்கினன்
றுண்ணெனவே வாலிமுனஞ்
சோமேசா—எண்ணியிடில் நாணு லுயிரைத்
துறப்ப ருயிர்ப்பொருட்டா ணண்டுறவார் நாணுள்
பவர்.

அஃதாவது மேற் சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களா லுயர்ந்தோர் தமக் கொவ்வாத கருமங்களில் நாணுடைய ராந் தன்மை.

கoஉ. (இ - ள்.) சோமேசா!—எண்ணியிடின்-ஆராயின், நாணுள்பவர்-நாணினது சிறப்பறிந்து அதனை விடா தொழுகுவார், நாணால் உயிரை துறப்பர் - (அந் நாணும் உயிருந் தம்முண் மாறுய விடத்து) நாண் சிதையாமற் பொருட்டு உயிரை நீப்பர், உயிர் பொருட்டால் நாண் துறவார்-உயிர் சிதையாமற் பொருட்டு நாணினை நீக்கார். - (அதற்கு எடுத்துக்காட்டு) - வாலி - (வானரத் தலைவனுய) வாலி, முன்னம் - முன்னாளில், புண்ணொடு 'உயிர் வாழ நாணி - இராமபிரான் அம்பு தைத்த) புண்ணொடு உயிர் வாழ்தற்கு நாணி, துண்ணென - விரைவின், உயிர் போக்கினன் - உயிரை நீத்தான் (எ - று.)

உயிரினும் நாண் சிறந்த தென்பதாம். துண்ணென்ன நின்டு விரைவுக்குறிப்பிடைச் சொல் என்க.

என்ப

கதை:—கிட்கிந்தைக்கரசனான வாலிக்கு அஞ்சி அவன் வரலாகாத ரிசியமுக பர்வதத்தில் வசித்திருந்த அவன் தம்பி சுக்கிரீவனோடு இராமபிரான் நட்புக்கொண்டு சுக்கிரீவனை வாலியைப் போர்க்கு அழைக்கும்படி ஏவி, வாலி போர்க்கு வந்து சுக்கிரீவனோடு பொருகையில் வாலிக்கும் சுக்கிரீவற்கும் உருவில் வேற்றுமை காணாது அது காணச் சுக்கிரீவனைக் கொடிப்பூச் சூடிச் செல்க வென்று ஏவித் தாம் மறைந்துநின்று வாலிமீது அம்பெய்தார். வாலிதன் மார்பிற்றைத்த அவ் வம்பைப் பிடுங்கி அஃதிராமபிரான் அம்பென் றறிந்து மேல் உயிர் வாழ நாணி உயிர் நீத்தான்.

[இஃது இராமாயணத் துளது.] (௧0௨)

---

## ௧0௩-ஆம் அதிகாரம்

# குடிசெயல்வகை

மற்றிருத ராட்டிரன்சந் தானமெலா மாய்ந்ததே
சுற்றுநீர்த் தென்குளத்தூர்ச் சோமேசா—பற்றும்
இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளில்லாத குடி.

அஃதாவது ஒருவன் தான் பிறந்த குடியை உயரச் ... லின் திறம்.

செய்த

க0ௌ. (இ - ள்.) நீர் சுற்று தென்குளத்தூர் சோமேசா!—நீர் சூழ்ந்த தென்குளத்தூரில் எழுந்தருளிய சோமேசா! நல் ஆள் இலாத குடி - பற்றுவன கொடுத்துத் தாங்கவல்ல நல்ல ஆண்மகன் பிறவாத குடியாகிய மரம், பற்றும் இடுக்கண் கால் கொன்றிட - கைக்கொள்ளுந் துன்பமாகிய கோடரி புகுந்து தன் முதலை வெட்டிச் சாய்க்க, வீழும் - ஒரு பற்றின்றி வீழாநிற்கும்,—(அதற்கு எடுத்துக்காட்டு)-மல் திருதராட்டிரன் - மற்போரையுடைய திருதராஷ்டிரனுடைய, சந்தானம் எல்லாம் மாய்ந்தது சந்ததி எல்லாம் அழிந்தது (எ - று.)

கஓ0 சோமேசர் முதுமொழி வெண்பா

முதல்—அக் குடியின் வழிக்குரியார். வளர்ப்பாரைப் பெறின் வளர்ந்து பயன்படுதலும் பெறுக்காற் கெடுதலுமுடைமையின் மரமாக்கினர். இடுக்கணைக் கோடரியாகவும் குடியை மரமாகவும் அடுத்தூன்றும் என்ற குறிப்பான் அறிய உருவகஞ் செய்தலின், இது குறிப்புருவகவணி. சுற்று நீர் என்பது வடநூன் முடிபு.

கதை:—திருதராஷ்டிரன் தனது மகன் துரியோதனனுக்கு நன்மதி கூறிப் பாண்டவர்களுக்குத் தாயபாகந் தரும்படி செய்யாமையின், துரியோதனாதி நூற்றுவரும் சந்ததியுடன் மாண்டார்கள். (கOௌ)

[இது பாரதத் துளது.]

---

## கOச-ஆம் அதிகாரம்

# உழவு

வேள்வித் தொழிற்கு முழுதொழின்முன்
வேண்டுமால் சூழிசூழ் தென்குளத்தூர்ச்
சோமேசா—வாழும் உழவினர் கைம்மடங்கி னில்லை
விழைவதூஉம் விட்டேமென் பார்க்கு நிலை.

அஃதாவது சிறுபான்மை வாணிகர்க்கும் பெரும்பான்மை வேளாளர்க்கும் உரித்தான உழுதற் றொழில். பிறரும் இதனைச் செய்விக்க உரியர்.

கஎச. (இ - ள்.) சூழி சூழ் தென்குளத்தூர் சோமேசா - குளங்கள் சூழ்ந்த தென்குளத்தூரில் எழுந்தருளிய சோமேசா!—வாழும் உழவினர் கை மடங்கின்— வாழ்கின்ற உழவர்களுடைய கை (உழவுத் தொழிலைச்) செய்யாது மடங்குமாயின், விழைவதூஉம் - யாவரும் விரும்பு முணவும், விட்டேம் என்பார்க்கு நிலை - யாந் துறந்தோ மென்பார்க்கு அவ் வறத்தின்கண் நிற்றலும், இல்லை-உண்டாகா; வேள்வித் தொழிற்கும் உழுதொழிற்கு இன்றியமையாத மழைக்குக் காரணமாகிய வேள்வித்



தொழிற்கும்; உழுதொழில் முன்வேண்டும்-உழுதொழின் முன்னே வேண்டும் (எ - று.)

'சிலே' என்பதனேடு உம்மை வந்தியைந்தது. உணவின்மையால் தாமுண்டலும் இல்லறஞ் செய்தலும் யாவர்க்கும் இல்லையாயின. இல்லறஞ் செய்யாமையின், துறந்தோ மென்பார்க்கு அத் துறவறநெறிக்க ணிற்றலுமில்லை யாயிற் றென்க. அவ் ருறுப்பு மாத்திரமாகிய கை வாளாவிருப்பின் உலகத்துக்கு இம்மை, மறுமை, வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம். 'வேள்வி நற்பயன் வீழ்புன லாவது' எனப் பெரியாரும் பணித்தலின் மழைக்கு வேள்வியே காரணமாத லறிக. அம் மழையின்றி உழுதொழில் நிகழாதென்க. எனவே, உழுதொழிற்குப் பரம்பரைக் காரணமாகிய வேள்விக்கும் உழுதொழில் வேண்டும் என்பதாயிற்று. 'முன்' என்ருர் பின் அதனைத் தருதலின். (௧0௪)

---

## ௧0௫-ஆம் அதிகாரம்
## நல்குரவு

நற்றருமன் வெற்றியினை நாடி விராடனெதிர்
சொற்றமொழி சோர்ந்ததே
சோமேசா—கற்றறிவால் நற்பொரு ணன்குணர்ந்து
சொல்லினு நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு
படும்.

அஃதாவது நுகரப்படுவன யாவு மில்லாமை.

௧0௫. (இ-ள்) சோமேசா—!கற்ற
அறிவால்-கற்ற
நூலறிவினல், நல் பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் - மெய்ப்பொருளைத் தெளிய வறிந்து சொன்னராயினும், நல்கூர்ந்தார் சொல் - வறியர் (சொல்லுஞ்) சொல், பொருள் சோர்வுபடும் - பொருளின்மையைத்

தலைப்படும்.

(அதற்கு எடுத்துக்காட்டு) - நல் தருமன்-நற்குணமுடைய தருமபுத்திரன், வெற்றியினை நாடி - (நிரைமீட்சிப்போரில்) வெற்றியை ஆராய்ந்தறிந்து, விராடன் எதிர் - விராட மன்னற் கெதிரில், சொற்ற மொழி - (போர் வென்றவன் பேடியே என்று) சொல்லிய சொல், சோர்ந்தது - பயனில் சொல்லாய் முடிந்தது (எ - று.)

கஉ௨ சோமேசர் முதுமொழி வெண்பா

பொருளின்மையைத் தலைப்படுதல் பயனில் சொல்லாய் முடிதல்.

கதை:—நிரைமீட்சிப் போரில் தன்மகன் உத்தரன் வென்றானென்று தூதர் சொல்லக்கேட்டு மகிழ்ந்த விராடன் தன்னிடம் கங்கபட்டரென்கிற பெயரோடு புரோகிதராயிருந்த தருமபுத்திரரைச் சூதாடற் கழைத்துச் சில ஆட்டங்க ளாடித்தோற்று அவரை நோக்கி, 'இந்த ஆட்டத்தில் உத்தரன் முன் பகைவர் சேனை அழிந்ததுபோல நீர் அழிவீர்' என்றான். அதுகேட்ட தருமபுத்திரர் பகைவர் அழிய வென்றவன் நின் மகனல்லன்; பிருகந்நளை என்னும் பேடியே. அவனைப் பேடி யென்று நினையற்க. அவனே காண்டவ மெரித்தகாளை' என்ன, விராடன் 'அந்தணீர்! அரசன் சொல்லை அவன்பாலுள்ளார் மறுத்துப் பேசலாமோ?' என்றான். அப்போதுந் தருமபுத்திரர் 'துரோணர் பீஷ்மர் அசுவத்தாமா முதலியவர்களை நின்மகன் வெல்ல வல்லவனோ?' எனக் கூற விராடன் கோபங்கொண்டு சூதாடு கருவியா லெறிந்தான்; அஃதவர் நெற்றியிற்பட்டது. (கOஉ)

[இது பாரதத் துளது.]

கoகூ-ஆம் அதிகாரம்

# இரவு

கஞ்சாறர் சோபனப்பெண் கூந்தல் கடி தளிக்கத்
துஞ்சு மகிழ்ச்சிகொண்டாய் சோமேசா—நெஞ்சின்
இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ள
முள்ளுளுவப்ப துடைத்து.

அஃதாவது மானந்திரா இரவின் திறம்.

கoகூ. (இ – ள்.) சோமேசா!—நெஞ்சின் இகழ்ந்து எள்ளாது ஈவாரை காணின் - மனத்தின்கண் (தம்மை) அவமதித்து இழிவு சொல்லாது பொருள் கொடுப்பாரைக் கண்டால், உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து-அவ் விரப்பாரது உள்ள மகிழ்ந்து உள்ளுள்ளே

சோமேசர் முதுமொழி வெண்பா

கநூ

யுவக்குந் தன்மையுடைத்து,—(அதற்கு எடுத்துக்காட்டு) - கஞ்சாறர் - மானக்கஞ்சாற நாயனார், சோபனப் பெண் - கல்யாணப் பெண்ணினது, கூந்தல் கடிது அளிக்க-கூந்தலை விரைவின் அன்பொடு கொடுக்க, துஞ்சு மகிழ்ச்சி கொண்டாய் - மிலைபெற்ற மகிழ்ச்சி கொண்டாய் (எ

- ரு.)

'இகழ்ந் தெள்ளாது' எனவே நன்கு மதித்தலும் இனியவை கூறலும் பெறப்படும். வறுமைத் துன்பங் கெடுதலளவேயன்றி ஐம்புலன்களானும் பேரின்ப மெய்தினராகக் கருதலான் 'உள்ளூ ளுவப்பதுடைத்து' என்ருர்.

கதை:—கஞ்சாறூரில் வேளாளர் குலத்தில் அவதரித்த மானக்கஞ்சாற நாயனுர் என்பார் சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்தவராய் வாழ்கையில் மக்கட்பே றின்றிப் பெருமானை வழி பட்டு ஒரு பெண் மகவு பெற்றெடுத்தார். அப் பெண் மணப் பருவ மடைந்தபோது சில பெரியோர் அவளை ஏயர்கோன் கலிக் காம நாயனுருக்கு மணம் பேசி முடித்தனர். குறித்த சுபதினத் தில் ஏயர்கோன் கலிக்காம நாயனுரும் மணக்கோலங் கொண்டு உற்ருர் நட்டார்களோடு கஞ்சாறூர்க்குப் புறப்பட்டார். அவர் அவ்வூரை யடைவதற்கு முன், பெருமான் மாவிரதசமயத்தார் போலக் கோலங்கொண்டு மானக்கஞ்சாற நாயனுர் இல்லிற்கு வர அவர் அன்புட னெதிர்கொண்டழைத்து முகமன்கூறி வணங்கினுர். வந்த பெருமான் 'என்ன சிறப்பு?' என்று வினவ, நாயனுர் என் மகள் மணம் நடக்கப்போகிறது என விடை பகர்ந்தார். பெருமான் 'உமக்குச் சோபனம் உண்டாகும்' என்று ஆசி கூற நாயனுர் தமது மகளை அழைத்துவந்து அவர் பாதத்தில் வீழ்வித்தார். அப்போது பெருமான் 'இப் பெண் ணின் கூந்தல் நமது பஞ்சவடிக்கேற்கும்' என, உடனே நாயனுர் அப்பெண் கூந்தலை அரிந்து நீட்டினுர். மாவிரத சமயத்தாராய் நின்ற பெருமான் விடைமேல் உமையோடு காட்சி தந்து மறைந் தார். பின் பெருமாள் அருளால் கூந்தல் வளரப்பெற்ற மகளை ஏயர்கோன் கலிக்காம நாயனுர் மணந்து வாழ்ந்தார். (க0௬)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## கூ0எ-ஆம் அதிகாரம்
# இரவச்சம்

எண்ணெயிரப் பஞ்சியுட லேவருத்தித் தீபமிட்டார்
துண்ணெனன் கணம்புல்லர்
சோமேசா—கண்ணியிடில் ஆவிற்கு நீரென்
றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

அஃதாவது மானந் தீரவரு மிரவிற்கு அஞ்சுதல்.

கூ0எ. (இ-ள்.) சோமேசா!—கண்ணியிடில்-ஆராயுமிடத்து, ஆவிற்கு-(தண்ணீர் பெருது இறக்கு நிலைமைத் தாயதோர்) ஆவினைக்கண்டு, நீர் என்று இரப்பினும்-(அறனேக்கி) இதற்குத் தண்ணீர் தரல்வேண்டு மென்றிரந்து சொல்லுங்காலும், நாவிற்கு இரவின் இளிவந்தது இல்-(அவ்விரவு போல ஒருவன்) நாவிற்கு இழிந்தது பிறிதில்லை, -(அதற்கு எடுத்துக்காட்டு)-துண்ணெனகணம் புல்லர்-அச்சமுற்ற கணம்புல்ல நாயனர், எண்ணெய் இரப்பு அஞ்சி-எண்ணெய் இரத்தற்கு அஞ்சி, உடலே வருத்தி தீபம் இட்டார்-(தமது) உடம்பையே வருத்தித் திருவிளக்கிட்டார் (எ-று.)

ஆவைக் காத்தோம்பல் பேரறமாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள் கொடுத்துக் கொள்ள வேண்டா எளிமைத்தாதலின் 'நீர்' என்றும், இரக்கின்றனுக்கு-இழிவு அச் சொல்லளவே யாக

வின் 'நாவிற்கு' என்றும், அதுதான் எல்லா இழிவினும் மேற்படு தலின் 'இளிவந்ததில்' என்றுங் கூறினர். இதனல் அறமும் முயன்று செய்வதல்லது இரந்து செய்யற்க என்பது கூறப் பட்டது. ஏகாரம் பிரிநிலை. துண்ணென் என்பது அச்சக் குறிப் பிடைச்சொல்.

**கதை:**-வடவெள்ளாற்றிற்குத் தென்கரையிலுள்ள இருக்கு வேளூராலயத்திற் கணம்புல்ல நாயனர் என்பார் திருவிளக் கெரித்து வருநாளில் வறுமை மேலிடத் தில்லைநகர் புக்குச் சபா பதியைத் தரிசித்து நிலம் புலம் மாடு வீடு முதலிய எல்லாவற் றையும் விற்று அங்குள்ள திருப்புலீச்சுரமென்னும் ஆலயத்தில் அத் திருவிளக்கெரிக்குந் திருத்தொண்டு வழாது செய்துவந்தார்.

சோமேசர் முதுமொழி வெண்பா

கஒஞ

பொருள்யாவும் விற்றெழித்த பின், கணம்புற்களை அறுத்து விற்றுத் திருத்தொண்டை நடத்தி வந்தார். ஒரு நாள் அப் புல் லும் விற்றிலதாக, அப் புற்களையே திரித்து விளக்கெரித்தார். அது போதமையால் தந் திருமுடியைப் பேரன்போடு மடுத்து எரித்தார்.

(க0எ)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

## கூ0அ-ஆம் அதிகாரம்

## கயமை

எற்ற துரோணனையன் றெள்ளித் துருபதன்பின்
றேற்றுவிச யற்களித்தான்

சோமேசா—போற்றிடினும்
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

அஃதாவது கீழோரது தன்மை.

கoஅ. (இ - ள்.) சோமேசா!—போற்றிடினும்-புகழ்ந்தாலும், கயவர் - கீழ்மக்கள், கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு - கதுப்பினைநெரிப்பதாக வளைந்த
கையினையுடைய ரல்லாதவர்க்கு-ஈர்ங்கை-தாமுண்டு பூசிய கையை, விதிரார் - (தெறித்தல் வேண்டுமென்றிரந்தா

லும்) தெறியார்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - துருபதன் - பாஞ்சாலன், ஏற்ற துரோணனை - வேண்டு மென்றிரந்த துரோணனை, அன்று எள்ளி - அந்நாள் இகழ்ந்து, பின்
தோற்று - பின்னர்த் தோல்வியடைந்து, விசயற்கு அளித்தான் - அருச்சுனற்குத் தன் மகளைத் தந்தான் (எ - று.)

வளைந்த கை—முறுக்கிய கை. மெலியார்க்கு யாதுங்கொடார் நலிவார்க்கு எல்லாங் கொடுப்பரென்பதாம்.

கதை:—பாஞ்சாலனுந் துரோணனும் ஓராசிரியன்பாற் கல்வி பயின்ற நாட்களி லொருநாள் பாஞ்சாலன் துரோணனை நோக்கி 'யான் அரசனுயின் எனது பூமியிற் பாதி யுனக்குத் தருவன் என்முன். பின் துரோணன் வறுமையால் வருந்தித் தன் மகற்குப் பால் வேண்டியபோது பாஞ்சாலனை யடைந்து 'ஒரு

பசு வேண்டும்' என, அவன் "நீ யாவன்? உன்னை யானறியேன். உனக்கு ஒன்றுங் கொடேன்." என்றான். அது கேட்டுத் துரோணன் மிக்க வருத்தத்தோடு 'போரில் உன்னைத் தேரொடு கவர்வேன்' என்று வஞ்சினங் கூறிப் பீஷ்மனிடம் வர அவன்பணிந்து துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் வில்வித்தை பயிற்றும்படி வேண்ட அங்ஙனமே பயிற்றி அருச்சுனனைப் பாஞ்சாலன்மேற் போர்க்கேவ அவன் சென்று போர்புரிந்து பாஞ்சாலனை வென்று தேரிற் கட்டிக் கொணர்ந்தான். தன் வஞ்சின முடித்து மகிழ்ந்த துரோணன் பாஞ்சாலனை விடுத்தான். பாஞ்சாலன் நாணமடைந்து "துரோணன் தலை துணிக்க ஒரு மகனையும், அருச்சுனனுக்குத் தர ஒரு மகளையும் பெறுவேன்' என்று கூறி உபயாசன், யாசன் என்னும் முனிவரரைக் கொண்டு வேள்வி புரியத் திருஷ்டத்துய்மன் என்னும் மகனும் திரௌபதி என்னும் மகளுந் தோன்றினர். திரௌபதி பின் அருச்சுனனுக்கு மாலை சூட்டினள். (கo௮)

[இது பாரதத் துளது.]

---

## கoகூ-ஆம் அதிகாரம்

# தகையணங்குறுத்தல்

வாய்ந்ததம யந்தியுரு மாணலங்கண் டின்புற்றான்
றேய்ந்தபுக ழானுநளன் சோமேசா—ஆய்ந்துரைக்கி
னுண்டார்க ணல்ல தடுநறாக் காமம்போற்
கண்டார் மகிழ்செய்த லின்று.

அஃதாவது பொழில்
டம் 'நீங்க அவ்விடத்துத்

விளையாட்டு விருப்பான் மகளிர்கூட்
தனித்து நின்றவளை வேட்டை விருப்
பால் இளைஞர் நீங்கத் தனித்து வந்து கண்ட தலைவன்
அவள் அழகு தனக்கு வருத்த முண்டாக்குதலைச்
சொல்லுதல்.

க0கூ. (இ - ள்.) சோமேசா!—ஆய்ந்து
உரைக்கின்-
ஆராய்ந்து சொல்லின், அடு நறு - காய்ச்சப்பட்ட மது
வானது, உண்டார்கண் அல்லது-தன்னை யுண்டார் மாட்டு

மகிழ்ச்சியைச் செய்வதல்லது, காமம் போல - காமம்
போல, கண்டார் மகிழ் செய்தல் இன்று - கண்டார்

சோமேசர் முதுமொழி வெண்பா
கஉள

மாட்டு மகிழ்ச்சியைச் செய்தலுடைத்தன்று, -
(அதற்கு
எடுத்துக்காட்டு) - தோய்ந்த புகழ் ஆளும்
இய புகழை யாள்கின்ற நளன், வாய்ந்த

நளன்-பொருந்
தமயந்தி உரு
மாண் நலம் கண்டு இன்புற்றான்-(எல்லா
விலக்கணங்களும்) அமைந்த தமயந்தியினது
வடிவின் மாட்சிமைப்பட்ட அழகைக் கண்டு

மகிழ்ந்தான் (எ-று.)

காமமென்றது ஈண்டு அது நுகர்தற்கிடனாகிய மகளிரை என்க. 'கண்டார்' என்புழிக் கண் என்னும் ஏழனுருபு
இறுதிக் கட்டொக்கது மகிழ் செய்தற்கட் காமம் நறவினுஞ் சிறந்ததே யெனினும் இவள் குறிப்பாராய்ந் தறியாமையின் யான் அது பெற்றிலேனெனக் குறிப்பெச்சம் வருவித் துரைக்க.

கதை :—நிடத தேசாதிபதியாகிய நளனது வடிவழகையுங் குண நலத்தையுஞ் செல்வப் பெருக்கையும் பற்றிப் பல அறிஞர் சொல்லக் கேட்ட விதர்ப்ப தேசாதிபதியாகிய வீமன் மகளாகிய தமயந்தி அவன் மீது காதல்கொண்டிருப்ப, நளனும் அவளது பேரழகையும் பெற்றியையும் கேட்டு அவள் மீது காதல் கொண்டிருப்புழி வேனிற் காலத்தி லொருநாள் மதன கணைக் காற்றாது மாதர் கூட்டத்தொடு பொழில் புக்கான். அங்கு ஓர் அன்னப் பறவையைக் கண்டு மாதர்களை ஏவிப் பிடிக்கச் சொன்னான். அவர்களும் அதைப் பிடித்து வந்து அவன் முன்னர் வைத்தார்கள். அஃதவனைக் கண்டு கலங்க அவன் 'அன்னமே! அஞ்சற்க' என, அன்னம் அரசனை நோக்கி "வீமன் மகளாகிய
தமயந்தியை உன் புயத்தில் வைகுவிப்பேன்" என்றது. அது கேட்டவுடன் நளன் அன்னத்தை விட்டான். அது விதர்ப்பதேச மடைந்து குண்டினபுரம் புகுந்து தமயந்தி கன்னிகா மடத்தினுட் செல்ல அவள் கண்டு தன் விளையாட்டை நிறுத்தித் தனியே வந்து "செய்தி ஏதேனும்
அன்னம், "ஆம், நளனென்பா

உண்டோ?" என்றாள். அதற்கு
னொருவ னுளன். அவனே உனக்

குத் தக்க வரன்" என்ன, "எனது நிலைமையை அவர்க்குத் தெரிவிப்பின் யான் உயிர் பெறுவேன்" என்றாளவள். அன்னமுஞ் சென்றது. வீமன் தன் மகள் நெற்றி மீது நீர் அரும்ப நிற்பதைக்
கண்டு அவளுக்கு மண முடிக்கவேண்டுமென்று நினைத்து அரசர் களுக்கெல்லாம் சுயம்வர வோலை போக்கப் பல தேயத் தரசரும் குண்டினபுர மடைந்தார்கள். தமயந்திபால் தூது சென்ற அன்னந் திரும்பி வந்து நளற்கு அவள் நிலைமையைச் சொல்லு

கையில் தமயந்தி சுயம்வர விசேஷத்தை அறிவிக்க வீமனிட மிருந்து அவன்பால் தூதர்கள் வந்துசேர்ந்தார்கள். சுயம்வரநா ளறிந்த நளனும் உடனே புறப்பட்டுக் குண்டினபுர மடைந்தான் அந்நிலையில் நாரதமாமுனிவர் இந்திரனை யடைந்து தமயந்தி



யைப் பலபடி புகழ்ந்து கூறி அவள் சுயம்வரத்தைப்பற்றித் தெரிவிக்க அவனும் வருணன், இயமன், அக்கினி ஆகிய இம்மூவருடனுங் குண்டினபுரம் வந்து நளனைக் கண்டு "எம் பொருட்டுத் தமயந்தியின்பால் நீ தூது சென்று எப்படியாவது எங்களிலொருவர்க்கு அவள் மணமாலை சூட்டுமாறு செய்தல் வேண்டும். ஒருவரும் உன்னைக் காணார். நீ கன்னிகா மாடத்துள் பயமின்றிச் செல்லலாம்" என்ன, நளனும் அதற் கொருப்பட்டுச் சென்று தமயந்தியின் அழகைக் கண்டு மகிழ்ந்தான். 'தூதிய ரேகக் கண்ட தோன்றல் செங்கமலக் கண்கண், மேதகு செல்வ மிக்க விதர்ப்பர்கோன் றவத்திற் றோன்று, மாதர்மென் னோக்கி னுடன் வடிவினி லமுந்திப் பின்னு, மாதரம் பெருகி யின்ப வாரியி னாழ்ந்த வன்றே' என்னும் நைடதச் செய்யுள் நோக்குக. (க0க)

[இது நைடதத்தும் பிருண்டு முளது].

# குறிப்பறிதல்

காங்கேயன் வேண்ட வெறுத்துரைத்தாள்
கானவர்மின் றூங்கா வளக்குளத்தூர்ச்
சோமேசா—ஆங்கண் உறுஅ தவர்போற்
சொலினுஞ் செறுஅர்சொ லொல்லை யுணரப்படும்.

அஃதாவது தலைமகன் தலைமகள் குறிப்பறிதலும் தோழி குறிப்பறிதலும் அத்தோழி அவ்விருவர் குறிப்பறிதலுமாம்.

கக0. (இ - ள்.) தூங்கா வளம் குளத்தூர் சோமேசா—
குன்றுத வளத்தையுடைய குளத்தூரி லெழுந்தருளி யிருக்குஞ் சோமேசா—! ஆங்கண் - அப்பொழுது, உறுஅதவர் போல் சொலினும் - புறத்து நொதுமலர் போலக் கடுஞ்சொற் சொன்னாராயினும், செறுஅர் சொல் - அகத்துப் பகையாதவர் சொல் (பின் பயன் படுதல்), ஒல்லை
உணரப்படும் - குறை யடைந்தவரால் விரைவின் அறியப் படும், - (அதற்கு எடுத்துக்காட்டு) - காங்கேயன் - அறுமுகன், வேண்ட - இரந்துகூற, கானவர் மின் - வேடப்

கதை:—விஷ்ணுவின் மக்களாகிய சுந்தரி, அமுதவல்லி என் வேலவனை மணக்கச் சரவணத்தின் முன்பு அரிய தவத்தைச் செய்ய முருகன் அவர்கட் கெதிரிற் றோன்றி, 'அமுதவல்லி! நீ இந்திரன்பா லடைந்திருப்பாய், சுந்தரி! நீ புவியின்கண் ஒரு முனிவர்பாற் றோன்றி வேடர் சார்பில் விளங்குவாய்'' என்றருளினன். அவ்வாறே அமுதவல்லி இந்திரன்பா லணைந்து நாற்கோட்டியானை வளர்த்திடத் தெய்வயானை என்கிற பெயரொடு வைகி முருகன் திருப்பரங் குன்றத்தின் மண முடிக்க மனக்குறை முடித்தாள். சுந்தரி என்பாள் அக்கினி வளர்த்து மூழ்கிச் சூக்ஷ்ம சரீரத்தோடு மேற்பாடிக்கணுள்ள வள்ளிமலைச் சார்பில் தவஞ்செய்து நின்றுள். அக்காலை அங்குத் தவஞ் செய்திருந்த சிவமுனி என்பான் தன் எதிர்வந்ததொரு பெண்மானைக் கண்டு கண்ணுற் கலவி துய்ப்ப அதுகண்டு அச்சுந்தரி அம் மான் கருவிற் புகுந்தாள். அம் மான் கருவடைந்த மகவை வள்ளிக் கிழங்கு கெண்டிய குழியின்று காடு புக்கது. அம் மலைக்கண் வாழ்ந்த வேடர் தலைவனாகிய நம்பி என்பான் அம் மகவைக் கண்டு வியப்புக்கொண்டு தன் மனைவி கையில் தர அவள் மகிழ்ந்தேற்றுப் பாராட்டிச் சீராட்டி வளர்த்தாள். வேடமுதியோர் அம் மகவிற்கு 'வள்ளி' என்று பெயர் வைத்தார்கள். வள்ளி விளையாட்டுப் பருவமடைந்தவுடன் அவளைத் தினைப் புனக் காவலில் வைத்தார்கள். அவளுங் கிளி முதலிய பறவைகள் கடிந்து தினைப்புனங் காத்தனள். ஒருநாள் தணிகைவரையிற் கந்தனைத் தரிசிக்கச் செல்லும் நாரதமா முனிவர் வழியில் வள்ளியைக் கண்டு அறுமுகப்பெருமானுக்கு இப்பெண்மணியை மணமுடிக்கும்படி கூறல் வேண்டுமென்று கொண்டு தணிகைமலை சென்று பெருமானைத் தரிசித்தவுடன் இப் பெண்ணரசின் இயலை உள்ளவாறு கூறி அவளை மணமுடிக்க வேண்டினர். இளைய பிள்ளையாரும் ஏற்குமென் றப்பொழுதே வள்ளிமலை சேர்ந்து ஒரு வேடர் தலைவனாகத் திருவுருக்கொண்டு வள்ளி எதிர் நின்று காதன் மொழி பல கூறுங்கால் அவள் தந்தையாகிய நம்பி வேடர்களுடன் அங்கு வர அப்போது வடிவேலன் ஒரு வேங்கை மரமாய் அங்கு நின்றுன். நம்பியுடன் வந்த வேடர்கள் அதுகண்டு முன்பில்லாத வேங்கை மரமொன்று இங்கிருத்தல் மாயமா மென்று நினைத்து அதனை வெட்டிச் சாய்க்க வேண்டு மென்றார்கள் நம்பி அவர்களைக் கையா னமைக்க வள்ளியா

லனுகி, "ஈதென்ன? இம்மரம் இங்கு எப்படி வந்தது?" என்று கேட்ப, அவள் 'ஐய! யானும் அதனை இப்பொழுதே கண்டேன். எனக்கும் அதனைப்பற்றி ஒன்றுந் தெரியாது' என்றுள். நம்பி இதை வேடர்களுக்கு அறிவித்து 'அம்மரத்தை ஒன்றுஞ் செய்யாதீர். அதனுல் ஒரு குறையும் வாராது' எனப் பணித்து வள்ளியை நோக்கி 'இம்மரம் குன்றுதோ றுடுங் குமரவே ளருளாற் பொருந்தியது போலும். அஃதுனக்குத் துணையாகுக' வென்று சென்றுன். அதன் பின் செவ்வேள் வேங்கைமரத்திற் றன்னெரு கூற்றைக் குலவ வைத்துத் தாெனொரு விருத்தனுகத் திருவுருக்கொண்டு நம்பியை எதிர்ப்பட்டு விபூதி தர, அவன் அதனை ஆதரத்தொடு ஏற்றணிந்து 'அடிகள் வந்த காரணந்தெரிய வில்லையே!' என்றுன். அதற்கு விருத்தன் 'நுமது வரைக் குமரியாட வந்தேம்' என்று இரண்டு பொருள்படக் கூறினுன். அதுகேட்டு அவனை அழைத்துச்சென்று வள்ளிநாயகியிடம் விட்டு அவளை அவ்விருத்தற்கு வேண்டிய செய்யும்படி ஏவினுன். நம்பி அகன்ற பின் விருத்தன் பசியான் மெலிந்தவன்போல நடிக்க வள்ளி தேனும் தினை மாவுந் தந்தாள். அவற்றை உட்கொண்டு நீர் வேட்கை பெரிதெனக் காட்டி வருந்தினுன். வள்ளி நீர் வேட்கை தணிக்க நினைத்து அடுத்ததொரு சுனைக்கண் அழைத்துச் செல்ல அங்கு நீர் பருகியவுடன் வள்ளியை நோக்கி 'இந்தச் சுனை நீரைப் பருகியதும் எனக்கு உன்மீது மோகமிக்கது, அதனைத் தணிக்க வேண்டும்' என்று குறை யிரந்து கூறினுன் விருத்தன். இம்மொழி செவிப்பட்டதும் வள்ளி சினங்கொண்டு அவனைப் பல படப் பழித்து அகலச் சென்றுள். அப்பொழுது விருத்தனுகிய முருகன் றனது தமையனை நினைக்க அவன் யானையாய் வர, அவ்யானையைக் கண்டு வள்ளி அஞ்சி ஒதுங்க முருகன்முன் அவனை எதிர்ப்பட்ட காளை வடிவோடு குறுக்கிட்டு 'அஞ்சற்க' என்று ஒரு திருக்கரத்தால் வள்ளியை அணைத்து மற்றொரு திருக்கரத்தால் யானையை எதிர்ப்பவன் போல அத் திருக்கரத்தைச்

சிரமேல் வைத்துக் கும்பிட, வேட மைந்தனை அஞ்சியதுபோல யானையுஞ் சென்றது.

'மேலா கியதவத்தோர் வேடந் தனைப்பூண்டிங்
கேலா தனவே யியற்றினீர் யார்விழிக்கும்
பாலாகித் தோன்றிப் பருகினு ராவிகொள்ளு
மாலால நீர்மைத்தோ வைய ரியற்கையதே'

'நத்துப் புரைமுடியீர் நல்லுணர்வு சற்றுமிலீ
ரெத்துக்கு முத்தி ரிழிகுலத்தேன் றன்னைவெஃகிப்



பித்துக்கொண் டார்போற் பிதற்றுவீ ரிவ்வேடர்
கொத்துக்கெ லாமோர் கொடும்பழியைச் செய்திரே'
[கந்த புராணம்]

'உரைத்தமொழி நாவினை யொறுப்பலெழி னோக்கும்
புரைத்தவிழி சூன்றிடுவல் புந்திதுயர் மூழ்க
விரைத்திரு கரத்தலம் விழுத்துவ லனைத்து
மரைத்திடுவ லெங்குமிசை யாக்கிடுவ லின்னே'' தேவரி
னொருத்தனலை திண்புவி புரக்குங்
காவலர்க டம்மிலொரு காளைய லுமல்லை
யாவதெ னுறுப்பறையி னார்த்தரிய டர்ப்போன்'
சாவவிழு புன்னரி தடிந்ததிற னுமால்'
[தணிகைப் புராணம்]
என்னுங் கவிகளா லவற் பழித்துரையாடலை யறிக.
[இஃது கந்தபுராணத்தும் பிறண்டு முளது.]

---

## கககூ-ஆம் அதிகாரம்

# புணர்ச்சி மகிழ்தல்

மெய்த்தவத்தைக் காசிபனும் விட்டொழிந்து
மாயைபாற் சுத்தமனம் வைத்தானே
சோமேசா—இத்தலத்தில் தாம்வீழ்வார்
மென்றோட் டுயிலி னினிதுகொ லாமரைக் கண்ணா
னுலகு.

அஃதாவது அங்ஙனம் குறிப்பறிந்து புணர்ந்த தலைமகன் அப்புணர்ச்சியினை மகிழ்ந்து கூறல்.

கககூ. (இ - ள்.) சோமேசா—! இ தலத்தில்-இந்தப் பூமியினிடத்தில், தாம் வீழ்வார் - (ஐம்புலன்களையு நுகர்

.வார்க்குத்) தாம் விரும்பு மகளிர்,
மெல்லிய தோளின்கட் டுயிலுங்

மென்தோள் துயிலின் -
துயில்போல, தாமரை
கண்ணான் உலகு -(அவற்றைத் துறந்த யோகிக
ளெய்துஞ்)

சோ—11

செங்கண் மாலுலகம், இனிதுகொல் - வருந்தாமலெய்த லாமோ, (ஆகாது),—(அதற்கு எடுத்துக்காட்டு) - காசிபனும் - காசிபமுனிவரும், மெய் தவத்தை - அழியாத தவத்தை, விட்டு ஒழிந்து - விட்டு நீங்கி, - மாயைபால் - மாயையினிடத்தே, சுத்த மனம் வைத்தான் - பரிசுத்தமான மனத்தை வைத்தார் (எ - று.)

ஐம்புலன்களையு நுகர்வார் என்னும் பெயர் அவாய் நிலையான் வந்தது. இத்தன்மைத்தான துயிலைவிட்டுத் தவயோகங்களான் வருந்த வேண்டுதலின் எம்மைப் போல்வார்க்கு ஆகாதென்னுங் கருத்தால் 'இனிது கொல்' என்றான். இந்திரனுலகென்பாரு முளர்; தாமரைக் கண்ணனென்பது அவனுக்குப் பெயரன்மையின் அஃதுரை யாகா தென்க. உம்மை உயர்வு சிறப்பும்மை.

கதை:—சுரசை என்னும் அசுரேசன் மகள் சுக்கிரபகவானிடம் மாயவித்தை யெல்லாங் கற்று வல்லவளாகி அவன் கூறியவாறே காசிபமுனிவர் தபோவனத்தை யடைந்து அவரெதிரிற் பேரழகுடையவளாய் நிற்க அவளை அம் முனிவர் கண்டு மயங்கித் தமக்கு இணங்குமாறு பலவாறு வேண்டியும் 'நில்லும்,' என்று சொல்லி மறைந்தாள். அவர் அவளைக் காணாது வருந்திப் புலம்புகையில் அவள் மறுபடி தோன்றி அவர்க் கிணங்கிச் சூரபத்மன் முதலிய மக்களைப் பெற்றாள். (கககக)

[இது கந்தபுராணத்துளது]

---

## ககஉ—ஆம் அதிகாரம்

# நலம்புனைந்துரைத்தல்

ஈன்முன் றிலோத்தமையை யிச்சிக்கி லாங்கவ
ண்மெய் தோன்றுமெழி லென்சொல்வேன்
சோமேசா—வான்ற முறிமேனி முத்த முறுவல்
வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

கசஉ. (இ-ள்.) சோமேசா—! வேய் தோள் அவட்கு-மூங்கில் போலுந் தோளிணையுடையவட்கு, ஆன்ற மேனி முறி - (அழகு) மிக்க நிறந் தளிர் நிறமாயிருக்கும், முறுவல்

சோமேசர் முதுமொழி வெண்பா

கசங

முத்தம் - பல்லு முத்தமாயிருக்கும், நாற்றம் வெறி - (இயல்பாய) நாற்றம் நறுநாற்றமாயிருக்கும், உண் கண் வேல் - (மை) யுண்ட கண்கள் வேலாயிருக்கும், ஈன்முன் - பெற்றோனாகிய பிரமன், திலோத்தமையை இச்சிக்கில் - திலோத்தமையை விரும்பினுல், அவள் மெய் தோன்றும் எழில் என் சொல்வேன் - அவளுடைய உடம்பிற் றோன்றிய அழகினை என்ன (படித்தென்று) சொல்லுவேன்.

'வேய்த்தோள்' என்னும் பெயரடையானும் ஓரியல்பு கூறப்பட்டது. முறி, முறுவல் என்பன ஆகுபெயர். உருவக வகையாற் கூறினமையின் புனைந்துரை யாயிற்று.

கதை:—பிரமன் எல்லா வுலகங்களிலுமுள்ள மங்கையர் அழகையும் எடுத்துத் திலோத்தமையைப் படைத்தனன். படைத்தவுடன் அவள் அழகைக்கண்டு தானே மயங்கி அவளைக் கைப்பற்ற முயன்றான்; அவள் ஒளித்துக்கொண்டாள். நாற்றிசையினுங்கேடி அவன் அவளைக் கண்டு பிடிக்க அவள் பெண் மானாக வடிவெடுத்தோடினாள்; அவன் ஆண்மானாக வடிவெடுத்துத் தொடர்ந்தான். அதன்பின் அவள் பெண்கிளியாய்ப் பறந்தாள்; அவன் ஆண் கிளியாய்த் துரத்தினான். வேறொரு வழியுமின்றித் தான் தூரத்தே கண்ட திருவண்ணாமலையை யணுகி "அண்ணா மலையாரே! யான் உமது அடைக்கலம்" என்று வீழ்ந்தாள். பரமபதி நான்கு வேதங்களும் நான்கு வேட்டை நாய்களாகத் தன்னைத் தொடரத் தான் வேடனாகி அம் மலையினின்று வெளிப்பட்டு 'வெற்பெனுமுலையா டன்னை. விதித்துநீ விரும்புந் தீமை, கற்பகோ டியினுந் தீரா தாயினுங் கருணையாமித், தற்பர மலைகண் டாயே யாதலாற் றவிர்த்தோம் போ' வெனப்பணிக்கப் பிரமன் அஞ்சித் தன்னுலகு புகுந்தான். (கசஉ)

[இஃது அருணாசலபுராணத் துளது.]

---

## கசங-ஆம் அதிகாரம்

# காதற் சிறப்புரைத்தல்

*கானடந்துஞ் சீதைகலப் பாற்களித்தான்*
*பின்னயர்ந்தான் றாநீ ரயோத்தியர்கோன்*
*சோமேசா—ஆனதனால் வாழ்த வுயிர்க்கன்ன*
*ளாயிழை சாத*
*லதற்கன்ன ளிங்கு மிடத்து.*

அஃதாவது, தலைமகன் தன் காதன் மிகுதி கூறல்.

கககூ. (இ - ள்.) சோமேசா!—நீ நீர் அயோத்தியர் கோன் - பரிசுத்தமான நீர் சூழ்ந்த அயோத்தி மன்னனாகிய
இராமன், கான் நடந்தும் - (பரலும் முள்ளும் பரந்த) காட்டில் (மிதியடியுமின்றி அடிகளாலே) நடந்தும், சீதை கலப்பால் களித்தான் - சீதையினது சேர்க்கையால் இன்புற்

றான், பின் - (அச்சீதை பிரிந்த) பின்பு, அயர்ந்தான் - சோர்ந்தான், ஆனதனால் - ஆதலின், ஆயிழை - தெரிந்த ஆபரணத்தினையுடையாள், வாழ்தல் உயிர்க்கு அன்னள் - (எனக்குப் புணருமிடத்து) உயிர்க்குடம்போடு கூடி வாழ்தல்போலும், நீங்குமிடத்து - பிரியுமிடத்து, அதற்கு சாதல் அன்னள் - அவ்வுயிர்க்கு அவ்வுடம்பினின்றும் நீங்கிப் போதல் போலும் (எ - று.)

எனக்கு என்பதும், புணருமிடத்து என்பதும் அவாய்நிலை யான் வந்தன. உயிர் உடம்போடுகூடி வாழுங்காலத்து வேற்
றுமையின்றி அதன் பின் நிற்றலானும், சாங்காலத்து வருத்தஞ் செய்தலானும் அவற்றை அவற்றின் புணர்வு பிரிவுகட் குவமையாக்கினான். உம்மை இழிவு சிறப்பு.

கதை:—(82-வது பாட்டுரையிற் குறித்த கதையொடு பின் வருவனவற்றையுங் கூட்டுக )

அங்ஙனம் 'இன்றே போகின்றேன்' என்று சொல்லித் தன் தாய் கௌசலையினிடம் நிகழ்ந்தது கூறி அரிதின் விடைபெற்றுச் சுமித்திரையை யணுகி உற்றது தெரிவிக்க அவள் தன் மகன் இலக்குமணனை நோக்கி, 'ஆகாததன்றுனக்கவ்வனமிவ் வயோத்தி, மாகாதலிராமனம்மன்னவன் வையமீந்தும், போகா வுயிர்த்தாயர்நம்பூங்குழற் சீதையென்றே, ஏகாயினியிவ்வயினிற் றதுமேதம்,' 'மகனேயிவன்பின் செல்தம்பி, என்னும் படியன்று அடியாரினிலேவல்செய்தி, மன்னும்நகர்க்கேவந்திடின் வாவதன் றேல், முன்னம் முடி' என்று கூறி உடன் செல்லுமாறு ஏவ அவனும் சீரை தரித்து உடன் நின்றான். அதன்பின் இராமன் சீதையைக் கண்டு 'நீ மாமியார்க்குப் பணி செய்துகொண்டிங்கிருக்க' என்ன, அது கேட்டவள் பொருளாக அவளையும் உடனழைத்துச் சென்றான். தண்டகாரணியத்திற் பஞ்சவடியில் இலக்குமணன் அமைத்ததொரு பன்னசாலையில் இவர்கள் இருப்புழிச் சூர்ப்பணகை சீதையினழகைச் சொல்லக்கேட்ட இராவணன் மாரீசனைப் பொன்மானாக ஏவித் தான் ஏகதண்ட சந்நியாசியாய்

சோமேசர் முதுமொழி வெண்பா

கக௬

அங்குவந்து இராம லக்ஷ்மணரைச் சீதையை விட்டுப் பிரித்துத் தான் சீதையைக் கவர்ந்தான்.

(கக௩)

[இஃது இராமாயணத் துளது.]

---

## ககச-ஆம் அதிகாரம்

# நாணுத்துறவுரைத்தல்

காம மிகவுழந்துந் தூதைக் கடிந்துவிட்டாள்
சோம னுதற்பாவை சோமேசா—வாமே
கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.

அஃதாவது அறத்தொடு நிற்பிக்கலுற்ற தலைமகள் தோழிக்குத் தன் நாண் துறவுரைத்தல்.

கoசு. (இ - ள்.) சோமேசா!—கடல் அன்ன காமம் உழந்தும் - கடல்போலக் கரையற்ற காமநோயினை யநுபவித்தும், மடல் ஏறாப் பெண்ணின் - மடலூர்தலைச் செய்யாது
தக்கது

ஆற்றியிருக்கும் பெண் பிறப்புப்போல, பெருந் இல் - மிக்க தகுதியினையுடைய பிறப்பு உலகத்தில் இல்லை, ஆம் - இஃது ஒக்கும்,—(இதற்கு எடுத்துக்காட்டு) - சோமன் நுதல் பாவை - (இளஞ்) சந்திரனையொத்த நெற்றியையுடைய பாவை நாய்ச்சியார், காமம் மிக உழந்தும் - காமநோயினை மிக வநுபவித்தும், தூதை - தூது வந்தவர்களை, கடிந்துவிட் டாள் - நீக்கிவிட்டார் (எ - று.)

பிறப்பு விசேடத்தால் அவ் வடக்கம் எனக்கில்லையாகின் றது, நீ அஃதறிகின்றிலை யென்பதாம்.

**கதை:**—சுந்தரமூர்த்தி நாயனார் தம்மைப் பெருமான்

மணஞ்.

செய்துகொள்ளாதபடி தடுத்தாண்டு கொண்டபின் திருவாரூர்த் தியாகேசப்பெருமானைத் தரிசித்து அங்கிருக்கையில் ஒருநாள் ஆலயத்தில் பரவை நாய்ச்சியார் என்னும் கணிகையரைக் கண்டு

காதல்கூர அந்த அம்மையாரும் அவர் அழகின் ஈடுபட்டு வருந்தினர். பின்னர்ப் பெருமான் அருளால் இருவருக்கும் மணமுடிந்தது. நெடிது நாட் சென்ற பின் நாயனார் சிவத்தல யாத்திரை



செய்துகொண்டு வருகையில் திருவொற்றியூரை யடைந்து அங்குச் சங்கிலி நாய்ச்சியார்பாற் காதல்கொண்டு அவள் வேண்டியவாறு 'இனிப் பரவைபாற் செல்வதில்லை' என்று சத்தியஞ் செய்து அவளை மணந்து அங்கு இருப்புழித் திருவாரூர்த் தியாகேசரைத் தரிசிக்க வேண்டுமென்னும் ஆசை மீதூரத் தமது சத்தியத்தையும் மறந்து திருவொற்றியூரைவிட்டு வழிநடந்து திருவாரூரை யடைந்து பெருமானைத் தரிசித்துப் பரவை நாய்ச்சியார் தம்மிடங் கோபம் மிக்குடையா ரென்பதறிந்து பெருமானைத் தூதுவிடப் பெருமான் திருவாரூர்க் குருக்க ளொருவர் போல முதன் முறை சென்றக்கால் அவர் இசையாராக, இரண்டாவது முறையுஞ் சென்று தன் உண்மையுருக் காட்ட இசைந்தான். (௧௧௪)

[இது திருத்தொண்டர்புராணத் துளது.]

---

௧௧௫-ஆம் அதிகாரம்

# அலரறிவுறுத்தல்

ஓர்நா ளகலிகையை வேட்டின்று மும்பரிறை
சோராப் பழிபூண்டான் சோமேசா—ஆராயிற்
கண்டது மன்னு மொருநா ளலர்மன்னுக்
திங்களைப் பாம்புகொண் டற்று.

அஃதாவது
கூறுகின்ற அலர்

களவொழுக்கம் வேண்டிய தலைமகன் பிறர்
தனக்காகின்றவாற்றைத் தோழிக் கறிவுறுத்த
லும், மணத்தல் உடன்போதலாகிய இரண்டிலொன்று
வேண்டிய தலைமகளுந் தோழியும் அவ்வலரை அவன்
றனக் கறிவுறுத் தலுமாம்.

கசரு. (இ-ள்.) சோமேசா!—ஆராயின் - ஆராயு
மிடத்து, கண்டது ஒருநாள் - கண்ணுறப்பெற்றது ஒரு
நாளே, அலர் திங்களை பாம்பு கொண்டற்று - அதனாலாகிய
அலர் (அவ்வளவிற்றன்றித்) திங்களைப் பாம்புகொண்ட
அலர்போலப் பரந்தது,—(அதற்கு எடுத்துக்காட்டு) - உம்
பர் இறை - தேவர்கோனாகிய இந்திரன், அகலிகையை ஓர்
நாள் வேட்டு-அகலிகையை ஒரு நாளே விரும்பிச்சேர்ந்து,

சோமேசர் முதுமொழி வெண்பா

கசுஎ இன்றும் சோரா பழியுண்டான் - இன்றளவும்
நீங்காப் பழி யடைந்தான் (எ - று.)

அலராகிய காரியத்தைக் காரணமாக வுபசரித்துப் 'பாம்பு கொண்டற்று' என்றாள். ஈரிடத்தும் மன்னும் உம்மையும் அசை நிலை. காட்சி யின்றியும் அலர் பரக்கின்ற இவ்வொழுக்கம் இனி யாகாது, மணத்தல் வேண்டு மென்பதாம்.

கதை:-கௌதம முனிவன் பத்தினியாகிய அகலிகையினிடம் மோகங்கொண்ட இந்திரன் ஒருபாயத்தால் நள்ளிரவி லவளி டத்தினின்று முனிவனைப் பிரித்து அம் முனிவனாக வடிவந்தாங்கி அவளொடு இன்ப நுகருங்கால் அவள் இந்திரனென் றறிந்தும் தாமதித்திருக்க முனிவன் திரும்பிவர இந்திரன் நடுங்கிப் பூனை யாக உருக்கொண்டு சென்றான். நிகழ்ந்த துணர்ந்த முனிவரன் 'ஆயிரமாதர்க்குள்ளவறிகுறி யுனக்குண் டாக' என்று சபித்தான். அச்சாப மொழிகேட்ட இந்திரன் 'மருவொரு குறியு ளாரும் வான்பெறும் புடைவை கொண்டு, பெருகுறச் சூழ்ந்து சூழ்ந்து பெருந்திரோ தானஞ் செய்வார், ஒருவற வுடம்புமுற்று முள குறி பல்ல வென்னில், இருமைமிக் குடையேன் யாதா லெங்ஙன மறைத்து வாழ்கேன்' எனக் கூறி வருந்தச் 'சிந்தையின் முனிவு தீர்ந்து சிறந்தவா யிரங்கண்' ணாக்கினன். அதன்பின் அகலி கையை நோக்கி 'விலைமகளனைய நீயுங், கல்லிய லாதி' என்று சபித்துப் பின் அச்சாபம் இராமபிரான் காற்றுகள் படின் நீங்கு மென் றருள் செய்தான். 'அலர் மன்னுந் திங்களைப் பாம்பு கொண்டற்று' என்றதற் கேற்பக் கம்பரும் 'மாயா, நிரந்தர முலகினிற்கு நெடும்பழி பூண்டா னின்றான்' என்றது ஈண் டறிதற்பாலது. (கக௪)

[இஃது இராமாயணத்தும் பிறண்டு முளது.]

---

## ககரு-ஆம் அதிகாரம்
# பிரிவாற்றாமை

வாழ்விழந்த வின்னலினும் வாசவர்கோன்

மிக்குநொந்தான் சூழ்சசியை முன்பிரிந்து
சோமேசா—வீழ்வார்கட் கின்னா தினனில்லூர்
வாழ்த லதனினு
மின்னா தினியார்ப் பிரிவு.

௧௬அ சோமேசர் முதுமொழி வெண்பா

அஃதாவது மணமுடிந்தபின் தலைமகன் அறம் பொருளின் பங்களின் பொருட்டுத் தலைமகளைப் பிரிந்து விளை ஆற்றாமை.

செல்வுழி அப்பிரி

௧௧௬. (இ-ள்.) சோமேசா—! வீழ்வார்கட்கு - (ஒருவரை யொருவர்) விரும்புந் தலைவர் தலைவியர்களுக்கு, இனன் இல் ஊர் வாழ்தல் இன்னாது - தங்குறிப் பறிவாரில்லாத வேற்றூரின்கண் வாழ்தல் துன்பத்தைத் தருவதாம், இனியார் பிரிவு அதினினும் இன்னாது - தமக்கினியவரைப் பிரிதல் அதனையுங் காட்டில் துன்பத்தைத் தருவதாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வாசவர்கோன் - தேவர்க்கரசனாகிய இந்திரன், வாழ்வு இழந்த இன்னலினும் - (சூரபன்மற்கு அஞ்சி) தனது சுவர்க்கலோக வாழ்க்கையை இழந்ததனாலாகிய துன்பத்தினும், சியை முன் பிரிந்து மிக்கு நொந்தான் - (தன்னை

சூழ்ச
இடை
விடாது) கூடி நின்ற இந்திராணியை
முன்னொருகாற் பிரிந்து அதிகமாகத் துன்பமுற்றான

(ன் - று.)

'இழந்த' என்பது காரணப் பொருட்டில் வந்தமென்க.

பெயரெச்ச

கதை:—சூரபன்மனுக் கஞ்சிப் பொன்னுடு நீங்கி மண்ணுடு புக்குச் சீகாழியின்கண் இந்திராணியுடன் ஒளித்திருந்த இந்திரனைத் தேவர்கள் அணுகித் தங்கள் குறைகளை எடுத்துக்கூறி, 'இனித் துன்பத்திற் காற்ரேம். எங்களை எவ்விதத்திலாயினும்

பாதுகாப்பது உமதுகடன்' என்று குறையிரப்ப, அதற்கு இந்திரன் 'என்னுலாவது ஒன்றுமில்லை. நாமெல்லாருங் கைலையையடைந்து பெருமானிடம் நமது துன்பத்தை விண்ணப்பித்தாலவன் அருள் புரிவன்' என மொழிய அவர்களும் அதற் கொருப்பட அவன் அவர்களை நிறுத்தித் தான் தனியே இந்திராணி இருந்தவிடஞ் சென்று தான் கைலை செல்லவேண்டி யிருத்தலைக்கூறிப் பிரிவுணர்த்த அவள் பிரிவிற் காற்ருளாய் மயங்கி வீழ்ந்து அறிவற்றுக்கிடப்ப, அவளை ஒருவாறு தேற்றிப் பிரிந்து மிக வருந்தினன். (கககூ)

[இது கந்தபுராணத் துளது].

---

## ககஉ-ஆம் அதிகாரம்

# படர்மெலிந்திரங்கல்

இன்பமுற்ருன் மாயைதோ
டோய்ந்துபின்னெண்மடங்கு துன்பமுற்ருன்
காசிபன்ருன் சோமேசா—அன்புடை யின்பங்

கடன்மற்றுக் காம மஃதடுங்காற் [யார்க்
றுன்ப மதனிற் பெரிது.

அஃதாவது பிரிவாற்ருமையாளுகிய பொழுதும் நினைத்தலின் அந் நினைவான் படரான் மெலிந்திரங்கல் என விரிக்க.

துன்பத்தினை எப்
மெலிந் திரங்குதல்.

கக௯. (இ - ள்.) சோமேசா!—அன்புடையார்க்கு - காதலுடையார்க்கு, காமம் இன்பங் கடல் - காமம் புணர்வாலின்பஞ் செய்யுங்கால் அவ்வின்பங் கடல்போலப் பெரிதாம், அஃது அடுங்கால் துன்பம் அதனின் பெரிது - அது தானே பிரிவாற் றுன்பஞ் செய்யுங்கால் அத்துன்பம் அக் கடலினும் பெரிதாம்,—(அதற்கு எடுத்துக்காட்டு) - காசிபன் - காசிப முனிவன், மாயை தோள் தோய்ந்து இன்ப முற்ருன் - மாயையைப் புணர்ந்து இன்பமடைந்தான், பின் - (அதன்) பின்பு, எண்மடங்கு துன்பமுற்ருன் - (அவளைப் பிரிந்து) எட்டுமடங்கு துன்பமடைந்தான்(எ-று.)

'அடுங்கால்' என வந்தமையின் 'இன்பஞ் செய்யுங்கால்' என மறுதலை எச்சம் வருவிக்கப்பட்டது. பெற்ற இன்பத் தொடு ஒத்துவரின் ஆற்றுதல் கூடும்; துன்பம் அவ் வின்பத் தினது அளவுன் றென்பது கருத்து. தான்-அசைநிலை.

கதை:—கககவது பாட்டுரையிற் கூறியபடி, சுக்கிரன் சூழ்ச்சியான் மாயை என்பாள் காசிப முனிவரை மயக்கி அவரோடு கூடிச் சூரபன்மன் முதலிய மக்களைப் பெற்றனபின் 'யான் எனது மக்களைப் புறந்தரல் வேண்டுமாகலின் உம்மை

விட்டுச் செல்கின்றேன்; நீர் வருந்தாதிர்' என்று கூறி மறைந்தாள். முனிவர் அவள் உருக்காணாது அறிவு மயங்கி அழுது புலம்பி உயிர் நீங்கின வுடம்புபோல நின்றார். அதுகண்டு, பிரமன் அவர்முன் தோன்றிக் காமத்தின் தீமைகளை எல்லாம்



பலவாறு எடுத்துக் கூறித் தவத்தை
செய்தனன்.

மேற்கொள்ளுமாறு
(ககஎ)

[இது கந்தபுராணத் துளது.]

---

## ககஅ-ஆம் அதிகாரம்

# கண்விதுப்பழிதல்

தாதையன் றித் தானேதுச் சந்தனைச்சேர்ந் தின்ன
ஆதில் சகுந்தலைதான் சோமேசா—வோதிற்
[உற்றாள் கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழு
மிதுநகத் தக்க துடைத்து.

அஃதாவது கண்கள் தாம் காட்சி விதுப்பான் வருந்தல். காட்சி விதுப்பாவது தலைமகனைக் காண்டற்கு விரைதல்.

ககஅ. (இ - ள்.) சோமேசா—! ஓதின் -

சொல்லு மிடத்து, கதுமென தாம் நோக்கி - கண்கள் அன்று காதல ரைத் தாமே விரைந்து நோக்கி, தாமே கலுழும் இது - இன்றுந் தாமேயிருந் தழுகின்ற உடைத்து - (நம்மாற்) சிரிக்கத்தக்க

விது, நகத்தக்கது வியல்பினையுடைத்து,

—(அதற்கு எடுத்துக்காட்டு)—சூது இல் சகுந்தலை - வஞ்சனையில்லாத சகுந்தலை, தாதை அன்றி - தன் தந்தையாலன்றி, தானே துச்சந்தனை சேர்ந்து - தானே துஷ்யந்தனைக் கூடி, இன்னல் உற்றாள் - துன்பமடைந்தாள் (எ-று.)

'கண்கள்' என்பது அதிகாரத்தான் வந்தது. 'இது' என்றது முன்னே வருவதறிந்து அது காவாதார் அது வந்தவழிப் பொறுத்தலுஞ் செய்யாது வருந்துதலாகிய கழிமடச் செய்கையை. அச் செய்கை வருமுன்னர்க் காப்பார்க்கு நகை விளைக்கு மாகலான் 'நகத்தக்கதுடைத்து' என்றாள்.

கதை:—கண்ணுவ முனிவன் ஒருபெண் புறத்திற் சகுந்த பக்ஷிகளாற் காக்கப்படுதலைக்

குழந்தை வயற் கண்டு அக் குழந் தையை எடுத்து வளர்த்தனன். சகுந்த பக்ஷிகளாற் காக்கப்பட் டமையான், 'சகுந்தலை' என்கிற பெயர் வைத்து அன்போடு வளர்த்துவர அவள்

பருவமடைந்தாள். துஷ்யந்தன் என்னும்

சோமேசர் முதுமொழி வெண்பா

கஎக

மன்னர் மன்னன் வேட்டையாடித் தெய்வ கதியாய்க் கண்ணுவ முனிவன் ஆச்சிரமத்தினருகிற் போந்து பேரழகியாகிய அப் பெண்மணியைக் கண்டு காதல் கொண்டு தன் கருத்தை யறி விக்க முனிவன் அங்கு அப்பொழுது இல்லாமையால் அவன் சம்
மதம் பெருது சகுந்தலை அதற்கு உடன்பட்டாள். துஷ்யந்தன் ஞாபகார்த்தமாக மோதிரம் ஒன்று தந்து சின்னளில் அவளைத் தான் அழைப்பித்துக் கொள்வதாகக் கூறித் தன் நாடடைந்தான். சகுந்தலை பிரிவாற்ருது அவனையே நினைத்து ஏங்கி நிற்கையில் துருவாச முனிவன் அங்கு வர அவனை வரவேற்றலின்றி இருந்தாள். அது கண்ட அம் முனிவன் 'நீ யாரைப்பற்றி நினைக்கின்ருயோ அவன் உன்னை இக் கணந்தொட்டு மறக்க' என்று சபித்தனன். இச் செய்தியை அறிந்த அவள் தோழியர் அச் சாபத்தை நீக்கும்படி முனிவனை வேண்ட, அவன் 'அவன் தந்த மோதிரத்தைக் காட்டிஞல், அவன் மறப்பொழிக' என்று சாபத்தை ஒருவாறு மாற்றினன். தோழியர் இச் செய்தியைச் சகுந்தலைக்குக் கூறிஞரில்லை. சிலநாட் சென்றபின் கண்ணுவ முனிவன் ஆச்சிரமம் வந்து சகுந்தலை மணச்செய்தி கேட்டு மன்னர் மன்னனை மணந்தமைக்கு மகிழ்ந்தேன். இவள் மகன் நன்கு விளங்குவன்' என்றனன். பன்னுட்கள் கழிந்தன; துஷ்யந்தனிட மிருந்து ஒருவரும் வந்திலர். முனிவன் சில முனிவரையும் கெளதமி என்னும் தவமுதியாளையுங் கூட்டி அவர்களோடு சகுந்தலையைத் துஷ்யந்தனிடஞ் செலவிட்டனன். இடைவழி

யில் ஓராற்றில் நீராடுகையில் துஷ்யந்தன் தந்த மோதிரங் கழன்று அதன்கண் விழுந்தது. அதைச் சகுந்தலை அறிந்தாளில்லை. எஞ்சிய வழியும் நடந்து துஷ்யந்தன் அரண்மனை சேர்ந்து யாவருமவளைக் கண்டார்கள். துருவாச முனிவன் சாப முண்மையால், துஷ்யந்தன் வந்தவள் இன்னுளென்று அறிய

வில்லை; ஏற்றுக்கொள்ளவுமில்லை. ஆகலின், சகுந்தலை கண்ணுங் கண்ணீருமாய்க் கலங்கி வெளிச் செல்கையில் ஒரு தேவதை தோன்றி அவளை உடன்கொண்டு சென்றது. சிலநாள் கழிந்த பின் வலைஞனொருவன் அரண்மனைக்கு ஒரு மீன் கொண்டுவர அதன் வயிற்றில் ஒரு மோதிர மிருக்கக்கண்டு ஏவலாளர் துஷ் யந்தனிடம் அதைக் காட்டினார்கள். உடனே அவற்குச் சகுந்

தலை ஞாபகம் வந்தது. தூதரை ஏவி அவளைத் தேடுவித்தான். அவள் எங்கும் அகப்பட்டிலள். ஆண்டுகள் சில சென்றன; சகுந்தலை மகனும் வளர்ந்து விட்டான். ஓரிடத்தில் இம் மகன் ஒரு சிங்கத்துடனும் அதன் குட்டியுடனும் விளையாடிக்கொண் டிருக்கையில், துஷ்யந்தன் கண்டு அவனோடு சொல்லாடி அவன் தன் தாயினிடம் அழைத்துச் செல்ல அவன்பின் சென்று சகுந் தலையைக் கண்டு பின் அவளுடன் இனிது வாழ்ந்தான். (கக அ)

[இது பாரதத் துளது.]

### கக௯-ஆம் அதிகாரம்

## பசப்புறுபருவரல்

கேழ்வரைச் சேடியர்சொல் கீழ்மைக்
கியற்படுஞ்சொற் சூழ்பமின்னர் துன்பத்துஞ்
சோமேசா—தாழ்வில் பசப்பெனப் பேர்பெறுத
லன்றே நயப்பித்தார் நல்காமை தூற்ருரெனின்.

அஃதாவது பசப்புறுதலாகிய வருத்தம்.
பசப்பாவது பிரிவாற்றாமையான் வருவதோர்
வெனவிரிக்க.
நிறவேறுபாடு. பசப்புற்ற பருவரல்

கககூ. (இ - ள்.) சோமேசா—! மின்னார் - தலைவியர், கேழ்வரை சேடியர் சொல் கீழ்மைக்கு - (தமது தலைவரைத்) தோழியர் சொல்லும் இயற்பழிக்குஞ் சொற்கு (மாறாக), இயற்படுஞ் சொல் - இயற்பட மொழிதற்குரிய சொல்லை, துன்பத்தும் சூழ்ப - தாம் துன்புற்ற விடத்தும் ஆராய்வர்,—ஆகலின், நயப்பித்தார்—தமது குறைகளை விரும்பி யேற்குமாறு சொல்லிக் கூடினவர்க்கு, நல்காமை-அருளாமையை, தூற்றாரெனில் - (நட்டோர்) தூற்றாராயின், பசப்பென பேர் பெறுதல் நன்று (பசப்புற்றாளென வேற்றுமையானன்றிப்) பசப்புத்தானாயினாளென ஒற்றுமையாற் றுஞ்சொல்ல அப்பெயரைப் பெறுதல் எனக்கு நன்று, தாழ்வுஇல் - எனக்கு ஒரு தாழ்வு மில்லை. (எ - று.)

நட்டாரென்பது அவாய் நிலையான் வந்தது. இயற்பழித்தல் பொறாது புலக்கின்றாளாகலின், இகழ்ச்சிக் குறிப்பாற் 'பசப்பெனப் பேர் பெறுதனன்று' எனக் கூறினாள். அவரை அருளிலரென்னாது இன்னும் 'பசந்தாளிவளென்கையே யான் ஆற்றும் வழி என்பதாம். கேள்வர் எனற்பாலது ளகர ழகர ஒற்றுமை பற்றிக் 'கேழ்வ' ரென நின்றது. இயற்பட மொழிதலாவது தலைமகன் றன்மை (உள்ளவாறு) தோன்றக் கூறுதல். (கககூ)

---

## ௧௨௦-ஆம் அதிகாரம்

# தனிப்படர்மிகுதி

**பன்முனிவர் பன்னியர்கள் பண்டுன்னைக் காமுறவுந்**
**துன்னியருள் செய்திலையே சோமேசா—வன்னதே**
**நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ**
**தாங்காதல் கொள்ளாக் கடை.**

அஃதாவது துன்பமிகுதி தலைவன்கணன்றித் தன் கண்ணதே யாதல். அறமும் பொருளு நோக்கிப் பிரிதலின், அவன்கண் இல்லையாயிற்று. தனியாகிய படர் மிகுதி என விரிக்க.

கஉ0. (இ - ள்.) சோமேசா—! நாம் காதல் கொண் டார்-நம்மாற் காதலிக்கப்பட்டவர், நமக்கு எவன் செய்ப-
நமக்கு என்ன இன்பத்தைச் செய்வர், தாம் காதல் கொள்ளாக்கடை - அவவாறே தாமும் நம்மிடங் காதல்
செய்யாவழி, அன்னது - (இஃது) அப்படித்து, பண்டு -
முற்காலத்தில், பல் முனிவர் பன்னியர்கள் - பல முனிவர் களது மனைவியர்கள், உன்னைக் காமுறவும் - உன்னைக் காத லிக்கவும், துன்னியருள் செய்திலை-(நீ காதலைப்) பொருந்தி அவர்கட்கு அருள் செய்தாயில்லை(எ - று.)

'தாம்' என்புழி எச்சவும்மை விகாரத்தாற் றொக்கது. அக் காதலுடைமையால் நாம் பெற்றது துன்பமே யென்பதாம். 'பன்னி' என்பது 'பத்நி' என்னும் வடமொழிச் சிதைவு.

கதை:—தாருகாவன முனிவர்கள் சிவபெருமானிடம் அன்பு சிறிது மின்றிக் கருமத்தான் முத்தி யெய்தலாமென்று சற்கருமங்

களை வளர்த்துத் தம்மைப்போல ஒழுக்கமுடைய ஆடவரும் தமது மனைவியர்களைப் போலக் கற்புடை மகளிருமில்லை யெனத் தருக்கி யிருப்புழிப் பெருமான் திருமாலை அழைத்து அவரை மோகினி யுருக்கொண்டு முனிவர்களை மயக்கும்படி ஏவித் தாம் திருவாணமாய்ப் பலிப் பாத்திரமுஞ் சூலமுங் கொண்டு அவர்கள் பன்னிய ரிருந்துழிச் செல்ல, முனிவர்கள் மோகினியைக் கண்டு மயங்கிச் சால்பு அழிந்தனர்; பிக்ஷுவைக் கண்ட பன்னியர் யாவரும் மதிமயங்கி உயிர் பதைத்துக் காதலென்னும் ஆழ் திரைப் பட்டனர்."

கஎச சோமேசர் முதுமொழி வெண்பா

'இன்னவர் பலருஞ் சூழா வீண்டுபு கலையுஞ் சங்குந்
துன்னிய கலனு நாணுந் துறப்பருங் கற்புஞ் சிந்தி
மன்னுயி ரொன்றுந் தாங்கி மால்கொடு தொடர வெங்கோன்
பொன்னடிக் கமலஞ் சேப்பப் புனிதமா மறுகிற் போனன்' என்னுங் கந்தபுராணப் பாவினை ஈண்டறிக. (கஉ0)

[இது கந்தபுராணத்தும் பிறண்டு முளது.]

---

## கஉக-ஆம் அதிகாரம்
## நினைந்தவர் புலம்பல்

தன்னையே யுன்னுந் தமயந்தி மாதைநளன்
றுன்னர்போ னீத்திருந்தான்

சேர்மேசா—அன்னதே தந்நெஞ்சத் தெம்மைக்
கடிகொண்டார் நாணார்கொ
லெந்நெஞ்சத் தோவா வரல்.

அஃதாவது மூன் கூடிய நாள் இன்பத்தினை நினைந்து தலைமகள் தனிமை யெய்தலும், பாசறையின்கண் தலைமகன் தனிமை யெய்தலுமாம். புலம்பல்—தனிமை. பாசறை—போர்மேற் சென்றோ ருறைவிடம்.

கஉக. (இ - ள்) சேரமேசா!—தம் நெஞ்சத்து எம்மை கடி கொண்டார் - தம்முடைய நெஞ்சின்கண்ணே (யாஞ் செல்லாமல்) எம்மைக் காவல்கொண்ட காதலர், எம் நெஞ்சத்து ஓவா வரல் - (தாம்) எம்முடைய நெஞ்சின்கண் ஒழியாது வருதலை, நாணார் கொல் - நாணாரோ, அன்னது - (இஃது) அப்படித்து, நளன்-நளசக்கரவர்த்தி, தன்னையே உன்னும் தமயந்தி மாதை - தன்னையே நினைக்குந் தமயந்தியென்னும் மனைவியை, துன்னார் போல் - பகைவர்போல, நீத்திருந்தான் - விட்டுப் பிரிந்திருந்தான் (எ - று.)

ஒருவரைத் தங்கண் வருதற்கு ஒருகாலும் உடம்படாது தாம் அவர்கட் பலகாலுஞ் செல்லுதல் நாணுடையார் செயலன்மையின் 'நாணார்கொல்' என்றார். ஏகாரம் பிரிநிலை.

சோமேசர் முதுமொழி வெண்பா
களவி கதை:—(கா0கூ-வது பாட்டுரையிற் தொடர்ச்சி.)
குறித்த கதைத்

அதன்பின் உண்மை தவறாமை வேண்டித் தன் வரலாற்றைத் தெரிவித்தான். தமயந்தி அது கேட்டு 'மன்னர் மன்னரே! உம்மை யான் காதலித்தேன். ஆகவே, உம்மையே மணப்பேன்' என்றாள். அதற்கு நளன் 'பெண்மணி! அஃதியலாது. சுரர் வேண்டி நிற்ப நரனொருவனை எப்படி மணப்பாய்? அவர்களிலொருவனை நீ மணந்துகொள். என்னை மணப்பின் அவர்களென்னைச் சபிப்பார்கள்' என்றான். 'சுயம்வரத்திற்கு எத்தனையோ மன்னர்கள் வருகிறார்கள். நீரும் வாரும். எப்படியாவது யான் உமக்கே மாலை யிடுவேன்' என்றாள். அதன்மேல் நளன் போய் இந்திரன் முதலிய தேவர்களுக்கு இவ்விஷயத்தைத் தெரிவித்தான். சுயம்வர தினம் வந்தது. அரசர்களெல்லாம் சுயம்வர மண்டபம் வந்து திரண்டனர். ஐவர் நளனுருவொடு நின்றனர். அவர்களில் உண்மை நளன் இன்னானென்று அறிவதெப்படி? தெய்வத்தைச் சிந்தித்தாள் தமயந்தி; உடனே அவர்களில் நால்வர்க்கு உருவம் நிழல் அளியாமையும் கண்கள் இமையாமையும் மாலை வாடாமையும் வெயர்வை கூடாமையும் கால் தோயாமையும் கண்டு உண்மை நளனுக்கு மாலைசூட்டினாள். இந்திரனும் வருணனும் நளனை ஆசீர்வதித்து அவன் வேண்டும்போது வருவதாகக் கூறினர். மணமுடிந்தது; இரண்டு குழந்தைகளும் பிறந்தன. நால்வர் தேவர்கள் திரும்பித் தமது இருக்கை செல்வுழி வழியில் கலியைச் சந்தித்தார்கள். கலி அவர்களை நோக்கி 'யான் தமயந்தியை மணக்கப்போகிறேன்' என்றான். 'சுயம்வரம் ஆயிற்று' என்றார்கள் அவர்கள். கலி சிலநாள் காத்திருந்து சமயங்கண்டு நளனைப்பற்றிப் புட்கரனை யடைந்து நளனொடு சூதாடுவித்து அச்சூதில் நளன் தோற்கும்படி செய்தான். நளன் அவ் வாட்டத்தில் தன் நாட்டைத் தோற்றதனாற் காடு புகவேண்டியதாயிற்று. மக்களை விதர்ப்பதேயஞ் செலவிட்டுத் தானும் தமயந்தியுங் காடு புகுந்தனர். அங்கு ஊணின்றி ஒற்றைத் துகிலோடு வருந்துகையில் ஓரிரவு ஒரு பாழ்மண்டபத்தில் தமயந்தி நித்திரை செய்யுஞ் சமயமறிந்து ஒற்றைத் துகிலைக் கிழித்துக்கொண்டு அவளைத் தனியே விட்டுச் சென்றான். அவள் தந்தையை யடைந்து நெடுங்காலம் நளனைத் தேடுவித்து அவன் ருதுபர்ணனுக்கு மடையனா யிருத்தலறிந்து இரண்டாவது சுயம்வரஞ் சாற்றி ருதுபர்ணனை விதர்ப்ப தேசத்திற்கு வருவித்த வரையும் அவன் நீங்கி இருந்தான்.

## கஉஉ-ஆம் அதிகாரம்
## கனவுநிலை யுரைத்தல்

அல்லமனை மாயை கனவி லணைந்ததனாற்
சொல்லரிய வின்பமுற்றாள் சோமேசா—நல்ல
நனவினாற் கண்டதூஉ மாங்கே கனவுந்தான்
கண்ட பொழுதே யினிது.

அஃதாவது தலைமகள் தான் கண்ட கனவின்
தோழிக்குச் சொல்லுதல்.
நிலைமையைத்

கஉஉ. (இ - ள்.) சோமேசா!—நல்ல
நனவினால் கண்
டதூஉம் இனிது ஆங்கே - முன் நல்ல நனவின்கண்
ணைக் கண்டு நுகர்ந்த இன்பந்தானு மினிதாயிற்று

அவ பொழுதே, கனவும்
அப் கனவின்கட் கண்டு

கண்டபொழுதே இனிது - இன்று
நுகர்ந்த இன்பமும் அக் கண்ட
பொழுதே இனிதாயிற்று, (அதனான் எனக்கு இரண்டு
மொத்தன),—(அதற்கு எடுத்துக்காட்டு) - மாயை-மாயை
யானவள், அல்லமனை - அல்லமதேவனை, கனவில் அணைந்த

தனால் - கனவின்கட் கூடியதனால், சொல் அரிய இன்பம் உற்றாள் - சொல்வொண்ணாத இன்பத்தை யடைந்தாள் (எ - று.)

இனிஒதன்பது முன்னுங் கூட்டப்பட்டது. கனவு ஆகு பெயர். முன்னும் யான் பெற்றது இவ்வளவே, இன்னும் அது கொண் டாற்றுவன் என்பதாம்.

கதை:—ஸ்ரீ கைலாசகிரியின்கண் அரசாட்சி மண்டபத்துள் மாணிக்கவேதிகையின் மீது சந்திரமௌளி உமாதேவியொடு வீற்றிருக்க ஒரு மகாசபை அங்குக் கூடிற்று. அப்போது உமையம்மை பெருமானை நோக்கி 'நாயக! இத்தனை உயிர்களும் பிறப்பிறப்புக்களிற் சுழலாது வீடு பெறுமோ அல்லது அவற்றிற் சுழலுமோ?'' என்று வினவினாள். அதற்கு ஐயன் ''நாயகி! நாமரூபப் பிராந்தி யுள்ளவரையும் பிரம விஷ்ணுவாதி தேவர்களும் வீடடையார். சுஞ்ஞானியும் நிராங்காரனும் எல்லையில்லாத தவத்தைச் செய்ய எமது உண்மை வடிவத்தோடு 'அல்லமன்' என்னும் மைந்தனானோம். அவ் வல்லமனைக் காண்பது உனக்

கும் அரிது'' என்றார். அது கேட்ட உமையம்மை 'எனக்கும் அரியதொன் றுண்டோ! யான் அவனைக் காண்பேன்' என்று கூறுரைத்துத் தம் தமோகுண வடிவமாகிய மாயையை அழைத்து 'நீ மண்ணுலகு புகுந்து அல்லமனைக் கண்டு வருதி' என் றேவினள். அம் மாயை விளவல தேயத்தில் வனவசை நகரத்தின்கண் மமகாரராஜனுக்கும் மோகினிக்கும் மகளாய்ப் பிறந்து பருவமடைந்து பெருமானைப் பூசிக்கையி லொருநாள் அல்லமன் மத்தளிகன்போல வடிவங்கொண்டு வந்து மத்தளமுழக்க அம் முழக்கங்கேட்டு மயங்கி அவனை அழைப்பித்து நேரிற் கண்டு அவன் அழகான் அறிவழிந்து அவன் புணர்ச்சியை வேண்டி வருந்தத் தோழியர் அவனை இசைவித்துக் கொணர்ந்து சயனத்தில் விட அவன் அணையும்போதெல்லாம் அணையமாட்டாது அயர்ந்து உறங்கி அவனை யணைந்ததாகக் கனாக்கண்டு மகிழ்ந்தாள்.

'விண்ணினைக் குத்திக் கையினைப் பவர்போல்
வேனெடுங் கண்ணியங் கிருந்த, வண்ணலைத் தழுவித்
தழுவிமெய் வருந்தி யவசமுற் றணைமிசை யுறங்கி,
யெண்ணுறு நினைவா லவன்.புணர்ந் ததுபோ லின்கன
வொன்றுகண் டெழுந்தாள், கண்ணக
னிலத்தினிருள்குடிப் பவனுங் கருங்கடன் முகட்டினி
லெழுந் தான்.

'காலையின் மாலை வார்குழன் மாதர்க் கண்டுரை
செய்வ ளல் லமன்றன், கோலமென் சொல்வேன்
விழியெதிர் தோன்றிக்,
குறுகிலென் கைப்படா னதனாற், சாலவு நைந்து துயின்றனன்
கனவிற் றடமுலை குழைந்திடப் புல்லி, மேலுநல் லருள்செய்
துன்னைநா னென்றும் விடுகிலே னென்றன னென்ருள்' என்னும்
பாக்கள் காண்க. (கஉஉ)

[இது பிரபுலிங்கலீலையி லுளது.]

கஉ௩-ஆம் அதிகாரம்

# பொழுதுகண்டிரங்கல்

வானவர்கோன் காமநோய் மாலைவர மிக்கதே
தூநீர்ப் புளினத்திற் சோமேசா—வானதே காலை
யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்.

சோ—12



அஃதாவது மாலைப்பொழுது வந்துழி அதனைக் கண்டு தலைமகளிரங்குதல்.

கஉ௩. (இ - ள்.) சோமேசா!—இந்நோய் - இக்காம
நோயாகிய பூ, காலை அரும்பி - காலைப் பொழுதின்கண் அரும்பி, பகல் எல்லாம் போதாகி - பகற்பொழுதெல்லாம் போரும்பாய், மாலை மலரும் - மாலைப் பொழுதின்கண் மலராநிற்கும், ஆனதே - நிகழ்ந்ததே,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வானவர்கோன் - இந்திரனது, காமம் நோய் - காமநோயானது, தூ நீர் புளினத்தின் - சுத்தமான நீரினிடையுள்ள மணற்றிடரில், மாலைவர மிக்கது - மாலைப் பொழுதுவர மிகுந்தது (எ - று.)

துயிலெழுந்த
தாற்றுதல் பற்றிக்

பொழுதாகலிற் கனவின்கட் கூட்ட நினைந் 'காலை யரும்பி' என்றும் பின் பொழுது செல்

லச் செல்ல அது மறந்து 'பகலெல்லாம் போதாகி'

பிரிவுண்மை யாற்றுளாதல் பற்றிப் என்றும், தத்தந் துணையை யுள்ளி

வந்து சேரும் விலங்குகளையும் மக்களையுங் கண்டு தான் அக் காலத்தில் நுகர்ந்த இன்ப நினைத் தாற்றுமை மிகுதி பற்றி 'மாலை யலரும்' என்றுங் கூறினள். பூப்போல இந்நோய் கால வயத்ததாகாநின்ற தென்பது உருவகத்தாற் பெறப்பட்டது. இஃதேகதேச வுருவகம்.

**கதை:**—குமரேசன் தேவகிரியினின்றும் போந்து அளவற்ற பூதப்படையோடு குமாரபுரியிலெழுந்தருளி யிருக்கையில், சீகாழியிலிருந்து அத் தலத்து வனதேவதை தன்னிடம் இந்திரன் தந்து வைத்த கிழியைக் கொணர்ந்து கொடுத்து 'நீ சீகாழியில் இருந்தபோது என்பால் வைத்த இதனைக் கொள்க' என்று சென்றது. இந்திரன் அக் கிழியை அவிழ்த்து இந்திராணியின் அணிகலங்களைக் கண்டவுடன் அவளைக் கண்டதுபோலக் காமத்தீ சுடத் தட்பம் வேண்டிப் பூஞ்சோலை யொன்றை அடுத் துள்ள புளினத்திற் புகமாலை வந்தது. நிலவுத்தீப் படவே அப் புளினம் வெப்ப மிகச் செய்தது.

'ஒளியிழை யுழத்திய றொளிமென் கூந்தலி, னளியின நறவு ழுய்த் தலரிற் கண்படு, நளியிருந் தண்டலை ஞாங்கர்ப் பொங்கிய, புளினமொன் றதன்மிசைப் புக்கு வைகினன்.' 'தீந்தழல் வெங் கதிர் திளைத்த வாறெனா, நீந்தருங் கங்குலி னிலவுத் தீப்படப், பூந்துணர் பரவிய புளினம் பொன்னகர், வேந்தலுக் காற்றவும் வெம்மை செய்ததே' என்றிருத்தலறிக.

[இது கந்தபுராணத்துளது.]

## கஉச-ஆம் அதிகாரம்

# உறுப்பு நலனழிதல்

*ஓதாநா ளோதுகலை யொத்திளைத்தாள்*
*சீதையென்றான் சூதாரா வான்மீகி*
*சோமேசா—கோதில்*
*பணைநீங்கிப் பைந்தொடி சோருந் துணைநீங்கித்*
*தொல்கவின் வாடிய தோள்.*

அஃதாவது தலைமகளது அவயவங்கள் தம் அழகழிதல்.

கஉச. (இ - ள்.) சோமேசா!—துணைநீங்கி - (அன்றுந்)துணைவர் நீங்குதலான், தொல்கவின் வாடிய தோள் - (அவராற் பெற்ற செயற்கை யழகேயன்றிப்) பழைய வியற்கையழகு மிழந்த இத்தோள்கள், கோது இல் பணை நீங்கி-(இன்று அதற்கு மேலே) குற்றமில்லாத தம்பெருமை யிழந்து, பைந்தொடி சோரும் - வளை கழலா நின்றன (இவை இப்படிச் செய்யத்தக்கன), அதற்கு மேற்கோள்,—சூது ஆரா வான்மீகி - வஞ்சனையோடு பொருந்தாத வான்மீகி முனிவன், சீதை - சீதாபிராட்டி, ஓதா நாள் ஓதுகலை ஒத்து இளைத்தாள் - (இராமபிரானது பிரிவாற்றாது) ஓதலாகாத நாளில் ஓதிய வித்தையைப்போல இளைத்தாள், என்றான் - என்று (தனது இராமாயணத்துட்) சொற்றனன்.

பெருமை யிழத்தல்—மெலிதல். பைந்தொடி—பசிய பொன் னாற் செய்த தொடி. சோரும் என்னும் வினையினது தொழில் தோளின்மே னின்றது. ஓதாநாள்—பிரதமை; இதனை 'அட்ட டமியி லோதினு லாசானுக் காகாது, சிட்டருக்குப் பன்னான்கு தீதாகும்—கெட்டவுவா, வித்தைக்கு நாசமாம் வெய்ய பிரதமை யிற், பித்தரும் பேசார் பிழை' என்ற பாட்டானு மறிக. 'பிரதி பத்பாடஶீலஸ்ய வித்யேவ தநுதாங்கதாம்' என்பதன் பொருள் ஈண்டுக் குறிக்கப்பட்ட தென்க; அது 'பிரதமையிற் பாடம் படித்தவன் வித்தையைப் போலச் சீதையின் அங்கம் அழிந்தது' என்பது.

---

## கஉ௫-ஆம் அதிகாரம்
# நெஞ்சொடு கிளத்தல்

*அன்பன் றுறப்பவு நாளா யனிதேடித்*
*துன்பந் தலைக்கொண்டாள். சோமேசா—முன்பே*
*இருந்துள்ளி யென்பரித னெஞ்சே பரிந்துள்ளல்*
*பைதனோய் செய்தார்க ணில்.*

அஃதாவது ஆற்றாமை மேலிடத் தனக்கோர் பற்றுக்கோடு காணாத தலைமகள் தன் நெஞ்சொடு செய்திறன் அறியாது சொல்லுதல்.

கஉ௫. (இ - ள்.) சோமேசா!—நெஞ்சே! இருந்து - (அவர்பாற்செல்லாதும் இங்கு இறந்துபடாமலும்) இருந்து, உள்ளி - (அவர் வரவு) நினைந்து, பரிதல் என் - நீ வருந்து கின்ற தென்னை? பைதல் நோய் செய்தார்கண்-இத் துன்ப நோயைச் செய்தாரிடத்து, பரிந்து உள்ளல் - நமக் கிரங்கி

வரக் கருதுதல், இல்
காட்டு) - நாளாயனி

- உண்டாகாது,—(இதற்கு எடுத்துக்
- நாளாயனி என்னுங் கற்புடைமாது,
அன்பன் துறப்பவும் - தனது அன்பிற் கிடமாகிய மௌத் கல்ய முனிவன் நீங்கிச் செல்லவும், தேடி - (அவனைத்) தேடி, துன்பம் தலைக்கொண்டாள் - துன்ப மிகுந்தாள். (எ - று.)

நம்மாட்டரு ளுடைய ரன்மையிற் ருமாக வாரார், நாஞ் செல்லுதலே இனித் தகுவது என்பதாம். 'தலை' என்பது தமிழுபசர்க்கமென்ப. நாளாயனி என்பது தத்திதம்; நளாயனன் மகள் ஆதலின்.

கதை:—மௌத்கலிய முனிவன் நாளாயனியை மணந்து அவள் கற்பைத் தெரிந்து தெளிதல் வேண்டித் தன் குட்ட நோயை நாளுக்கு நாள் மிகுமாறு செய்து வந்தும் அவள் அருவருப்பின்றி நடத்தலைக்கண்டு தன் அழுகிய விரலை உண் கலத்துள் வீழ்விக்க அதனையும் நீக்கி மிச்சிலை நுகர்ந்தமை கண்டு வியந்து அவள் வேண்டியவாறு பற்பல வுருவெடுத்து அவளோடு இன்பம் நுகர்ந்து வெறுப்படைந்து தவமேற்கொண்டு கதி புக்கனன். அப்போதும் அவள் ஆசை யடங்காது தேடி வருந்தி நொந்து தானுஞ் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து அப்

பெருமான் எதிர் தோன்றி ஐந்து முறை 'வர' னென்ன, நீ ஐவர்க்கு மனைவியாகிக என்றனன். இவளே திரௌபதியாய்ப் பிறந்தாள்.

(கஉ௯)

[இது பாரதத் துளது.]

---

கஉசு-ஆம் அதிகாரம்

## நிறையழிதல்

கோற்றொடிவிற் பாய்போன்று கூடல் வணிகமின்னார்
தோற்று நிறையழித்தாய்
சோமேசா—சாற்றுங்கால்
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

அஃதாவது தலைமகள் மனத்தின்கண் அடக்கப்படு மவை களை ஆசைமிகுதியான் அடக்கமாட்டாது வாய்விடுதல். "நிறை யெனப்படுவது மறை பிறரறியாமை" என்றார் கலித்தொகை யு டையாரும் .

கஉசு.(இ - ள்.) சோமேசா!—சாற்றுங்கால்

சொல்லு
மிடத்து, நம் பெண்மை உடைக்கும் படை - நமது நிறை யாகிய அரணை அழிக்கும் படை, பல் மாயம் கள்வன் பணி மொழி யன்றோ - பல பொய்களை வல்ல கள்வனுடைய தாழ்ந்த சொற்களன்றோ,—(அதற்கு எடுத்துக்காட்டு)
கோற்றொடி விற்பாய் போன்று - திரண்ட வளையலை விற் பவனைப்போல, கூடல் வணிக மின்னார் தோற்று நிறை - மதுரைக்கணிருந்த வாணிகப் பெண்களது (மிக்குத்) தோன்றின நிறையை, அழித்தாய் (நீ) அழித்தாய். (எ-று.)

பெண்மை ஈண் டுத் தலைமைபற்றி நிறைமேனின்றது:வந்தால்
ஊடக்கடவேமென்றும், ஊடிலுல் அவன்சொற்களானுஞ் செயல் களானும் அவ்வூடல் நீங்கேமென்றும் இவைமுதலாக எண்ணிக் கொண்டிருந்த யாவுங் காணாது கலவியிற் றன்னினும் யான் முற்

படும்படி வந்து தோன்றின னென்பாள் 'பன் மாயக் கள்வன்' என்றாள். பணிமொழி—நம்மினுந் தான் அன்பு மிக்குடைய னாகச் சொல்லுஞ் சொற்கள். அவன் அத்தன்மையனாக, சொற்


கள் அவையாக நமது நிறை யழியா தொழியுமோ' என்பதாம். தொடிவளை கழலாதபடி முன் கையி லணிவது என்ப. விற்பாய்- வினையாலணைந்த பெயர். தோற்று என்பது ஈண்டுத் தன்வினை.

கதை:—(கஉ0-வது பாட்டுரையிற் குறித்த தொடர்ச்சி.)

கதைத்

அங்ஙனம் கற்பழிந்த தமது பன்னியர்களை முனிவர்கள் " மங்கையீர் ! நீர் கருத்துத் திரிந்தபடியால் கூடல் வணிகர் கன்னியராய்ப் பிறப்பீராக' என்று வெகுண்டு கூறினார்கள். அது கேட்டுப் பன்னியர்கள் கடுநடுங்கி 'அந்நிலை எப்பொழுது நீங்கும்?' என, முனிவர்கள் 'சோமசுந்தரக் கடவுள் உமது கை தீண்டுங்கால் அந்நிலை நீங்கும்' என்றார்கள். முனிவர்கள் மொழிப் படியே பன்னியர்கள் கூடல் வணிகர் கன்னியர்களாய்ப் பிறந்தார்கள். அவர்கள் மங்கைப் பருவமடைந்தவுடன் சுந்தரேசப் பெருமான் வளையற் கோவைகளைத் திருத்தோளிற் சுமந்து கொண்டு மதுரை வீதியின் கண் விற்று வரக்கண்ட கன்னியர்

கள் வளையலிடத் தம்மை அழைக்கத் தாமவர்களைத் தனியிடச் சென்று அழகான் மயக்கி உள்ள வளையுங் கழல்வித்து மறைந்து உமாதேவியாருடன் விடைமேற் றோன்றினர். நகரத்தார் யாவரும் அதனைக் கண்டு களித்தார்கள். பெருமான் தமது கைகளைத் தொட்டு வளையிட்டமையால் அக்கன்னியர்கள் கருப்பமடைந்து மகப்பெற்றுச் சில நாளிருந்து சிவனடிப்பேற்றைப் பெற்றார்கள். கஉக

[இது திருவிளையாடற்புராணத் துளது].

---

## கஉஉ-ஆம் அதிகாரம்
# அவர்வயின் விதும்பல்

சந்திரசே னன்வரவு நோக்கியுயிர் தாங்கினளாற்
சுந்தரசீ மந்தனிதான் சோமேசா— முந்தும்

உரனசைஇ யுள்ளந் துணையாகச் சென்றார்
வரனசைஇ யின்னு முளேன்.

அஃதாவது தலைமகனைக் காணுதற்கு விரைதல்.

கஉஎ. (இ - ள்.) சோமேசா—! முந்தும்
உரன்
நசைஇ - (இன்ப நுகர்தலை விரும்பாது) முற்படுதற்
கேது

சோமேசர் முதுமொழி வெண்பா

கஅக

வாகிய வெற்றியை விரும்பி, உள்ளம் துணையாக
சென்றார் - (நாம் துணை யாதலை இகழ்ந்து) தம்
ஊக்கம் துணை யாகப் போயினார், வரல் நசைஇ -
(அவற்றை இகழ்ந்து) வருதலை விரும்புதலான்,
இன்னும் உளேன் - யான் இவ்
வெல்லையினும் உளேனாயினேன் - (அதற்கு எடுத்துக்
காட்டு) - சுந்தரம் சீமந்தனி - அழகினையுடைய சீமந்தனி
என்பாள், சந்திரசேனன் வரவு நோக்கி - சந்திரசேன
னென்னும் தனது நாயகன் வருதலை எதிர்பார்த்து, உயிர்
தாங்கினள் - உயிரை வைத்திருந்தாள் (எ- று.)

உரன்—ஆகுபெயர் ; வலியின்பெயர் ஈண்டு அதனானும்
வெற்றிக் காகலின். அவ் விருப்பா லுயிர்வாழ்கிறேன், அஃதில்லை
யாயின் இறந்து படுவனென்பதாம். உயிர் பாரமாயினமை
தோன்றத் 'தாங்கினள்' என்றார்.

கதை :—ஆரியவர்த்தமென்னும் நாட்டரசனாகிய சித்திர
வர்மன் சில ஆண்மகப் பெற்றும் பெண்மக

வின்மையாற் பல
பகல் அருந்தவம் புரிந்து ஒரு பெண்மகப் பெற்றுச் சோதிடர்களைக் கூவிச் சாதகமெழுதிப் பயன் கேட்க ஒரு சோதிடன் 'உன் மகள் பதினாயிரம் ஆண்டு கணவனோடு இனிது வாழ்வள்' என்றான்; மற்றொருவன் 'பதினான்காவது பிராயத்திற் கணவனை இழப்பள்' என்றான். சித்திரவர்மன் அவற்றைக்கேட்டு 'யாவுஞ் சிவன் செயல்' என்றிருந்தான். உரிய பருவத்திற் சீமந்தனி என்னும் அப் பெண்மணி இரண்டாஞ் சோதிடன் கூறியதைக் கேள்வியுற்று ஒருதவ மூதாட்டியை யடைந்து அதனை விண்ணப்பிக்க அவள் 'நீசோமவார விரத நோற்பாயாயின், உனக்கொரு குறையும் நேராது' என்றாள். அவ்வாறே இவளும் அவ் விரதத்தை மேற்கொண்டாள். அவளை நிடத தேயத்தரசனாகிய இந்திரசேனன் மகன் சந்திரசேனன் என்பான் மணந்து வாழ்கையில் ஒருநாள் அவன் தன் நண்பர் சிலருடன் யமுனையாற்றிலோடை மேறிச் சென்றான். அவ்வோடங் கவிழவே அவன் நண்பர்கள் யாவரும் முதலைவாயி னகப்பட்டனர் தா னொருவனே பாதலம் புகுந்து தக்ஷகன் என்னும் நாகராஜனா லுபசரிக்கப் பெற்று அவனிடம் விடைகொண்டு பூதலந் திரும்பினன். அதற்குள் மூன்று வருஷங்களாயின. திரும்பி வந்து தன் தந்தை நாட்டைப் பகைவர்கள் கைப்பற்றி அவனைச் சிறையிட்டமை யறிந்து விரைந்து சென்று பகைவர்களை ஓட்டித் தந்தையைச் சிறையினின்றும் மீட்டுப் பழையபடி அரசனாக்கிச் சீமந்தனியை இரண்டாமுறை மணந்து இனிது வாழ்ந்தான். கஉஎ)

[இது பிரமோத்தரகாண்டத் துளது].

## கஉஅ-ஆம் அதிகாரம்

# குறிப்பறிவுறுத்தல்

சங்கிலிபா லாரூ ரூழிகணக் தானாகத்
துங்கமிகு மன்புவைத்தார் சோமேசா—பொங்கப்
பெரிதாற்றிப் பெட்பக் கலத்த லரிதாற்றி
யன்பின்மை சூழ்வ துடைத்து.

அஃதாவது தலைமகன் தலைமகள் தோழி என்றிவர் ஒருவர் குறிப்பினை யொருவர்க் கறிவுறுத்தல்.

௧௨௮. (இ-ள்.) சோமேசா!—பொங்க பெரிது ஆற்றி - (காதலர்வந்து தம்பிரிவினாலாகிய துன்பத்தினை) மிகப் பெரிது செய்து, பெட்ப கலத்தல்-நாம் மகிழும் வண்ணங் கலக்கின்ற கலவி (இருந்தவாற்றான்,) அரிது ஆற்றி (மேலும் அத் துன்பத்தினை) அரிதாகப் பொறுத்திருந்து, அன்பின்மை சூழ்வது உடைத்து - அவ ரன்பின்மையை நினையுந்தன்மை யுடைத்து,—(அதற்கு எடுத்துக்காட்டு) - ஆரூரர் - நம்பியாரூரரென்னுஞ் சுந்தரமூர்த்தி நாயனார்,

கணம் ஊழி ஆக-ஒரு கணப்போது ஓர் ஊழிக் காலமாகத் தோன்றுமாறு, சங்கிலிபால் துங்கம் மிகும் அன்பு வைத்தார் - சங்கிலிநாய்ச்சியாரிடத்தே உயர்ச்சிமிக்க அன்பு வைத்தனர் (எ - று.)

பிரிதற்குறிப்பினாற் செய்கின்ற கலவியாதலின் இன்னாதாகாநின்ற தென்பதாம். கணம்—க்ஷணம்.

முடிவில்
(௧௨௮)

கதை:—மேலே உரைத்தாம் (௧௧௪-வது பாட்டுரை காண்க)

---

## ௧௨௯-ஆம் அதிகாரம்

# புணர்ச்சி விதும்பல்

யோசனைகந்தியினைக் காண்டலும்பே
ரோகைகொண்டான் றூசணையாச் சந்தனுத்தான்
சோமேசா—நேசமுடன் உள்ளக் களித்தலுங் காண
மகிழ்தலுங்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு.

சோமேசர் முதுமொழி வெண்பா

கஅ௬

அஃதாவது புணர்ச்சியின்கண்ணே விரைதல்.

கஉக. (இ - ள்.) சோமேசா!—நேச முடன் உள்ள
களித்தலும் காண மகிழ்தலும் - அன்பொடு நினைந்த வளவிலே களிப்பெய்தலும் கண்ட வளவிலே மகிழ்வெய்தலும், கள்ளுக்கு இல் - கள்ளுண்டார்க் கில்லை, காமத்திற்கு உண்டு - காமமுடையார்க் குண்டு,—(அதற்கு எடுத்துக் காட்டு) - தூசு அணையா சந்தனு - குற்றஞ் சேராச் சந்தனு வென்னு மன்னன், யோசனை கந்தியினை காண்டலும் - (யோசனை யெல்லையினும் தன் உடம்பின் மணம் வீசப் பெற்ற) பரிமளகந்தியைக் கண்ட வளவில், பேர் ஓகை கொண்டான் - மிக்க களிப்படைந்தான் (எ - று.)

களித்தல் - உணர் வழியாதது. மகிழ்தல் - உணர் வழிந்தது. இவ்விரண்டும் உண்டுழியல்ல தின்மையிற் 'கள்ளுக்கில்' என்றார். களித்தலும், மகிழ்தலும் என்னு மீரிடத்தும் சென்றியைந்து பொருளை விளக்குதலின் 'உண்டு' என்பது இறுதி விளக்கு; இதனைக் கடை நிலைத் தீபகாலங்கார மென்ப வடமொழிவாணர். அப்பெற்றித்தாய காமமுடைய யான் புலத்தல் யாண்டைய தென்பதாம்.

கதை:—சந்தனு வென்னுங் குருகுலமன்னன் வேட்டையாடுதல் குறித்துக் காளிந்திநதிக் கரையை யடைந்து அங்குத் தாசர்குலத் தலைவன் பெற்ற பரிமள கந்தியைக் கண்டு மோகித்து அவளை 'நீ யார்?' என்று வினவ, அவள் அஞ்சி ஒருபுறம் ஒதுங்கி நின்று கரங் குவித்து 'எனது தந்தை ஏவலினால் ஓடம் விடுவன்யான்' என்றாள். மன்னன் அவள் தந்தைபா லணுகிப் பாகனைக் கொண்டு தன் எண்ணத்தை அறிவித்தான். அவள் தந்தை 'பாராளப் பாகீரதி மைந்தனுளன்; என் மகள் மைந்தனென் செய்வன்?' என்றான். அஃதறிந்து முகஞ் சாம்பித் திரும்பினன் மன்னன். தன் தந்தை முகஞ் சாம்பி யிருத்தலை அறிந்த பாகீரதி மைந்தனாகிய தேவவிரதன் அத் தாசர் தலைவன் பாற் சென்றுயான் மணம் புரிந்து கொள்ளேன். எனது தாதுவும் மூலாக்கினியுடன் மேலெழுந் தன்மைத் தாயிற்று' என்று உறுதிமொழி கூறி அவனை இசைவித்தான்.

'பாசறை முழுது மொருபெருங் கடவுள் பரிமள மொல்லெனப் பரப்பி, யோசனை யளவுங் கரையிரு மருங்கு முயிர்க்கு மெல் லுயிர்ப்பெதி ரோடித், தாசர்தங் குலத்துக் கதிபதி யளித்த



தையலைத் தரணிபர்க் கெல்லா, மீசனு முருகிக்
கண்டுளங் களியா விலங்கிழை யார்கொனீ யென்றான்'
காண்க.

என்னும் பாவினைக்
(கஉக)

[இது பாரதத் துளது.]

---

## கஙo-ஆம் அதிகாரம்

# நெஞ்சொடு புலத்தல்

விக்கிரமன் மற்றொருத்தி
வேட்கையுற்றுங்தேடிநொக்தாள் தொக்க
வுருப்பசியின் சோமேசா—வொக்கும்
அவர்நெஞ் சவர்க்காதல் கண்டு மெவனெஞ்சே
நீயெமக் காகா ததது.

அஃதாவது காரணமுண்டான விடத்தும் புலக்கக் கருதாது புணர்ச்சி விரைகின்ற நெஞ்சுடனே தலைமகள் புலத்தல்.

கஙo.(இ-ள்.) சோமேசா!—நெஞ்சே!—அவர் நெஞ்சு

அவர்க்கு ஆதல் கண்டும் - அவருடைய நெஞ்சு (நம்மை நினையாது) அவர்க்காய் நிற்றல் கண்டு வைத்தும், நீ எமக்கு ஆகாதது எவன் - நீ யெமக்காய் நில்லாது அவரை நினைத் தற் காரணம் யாது, ஒக்கும் - இஃதொக்கும், தொக்க உருப்பசி மின் - (அழகியாவும் ஒன்று) கூடிய ஊர்வசி என்னும் அரம்பை மாது, விக்கிரமன் மற்று ஒருத்தி வேட்கை உற்றும் - புரூரவா வென்னும் குருகுல மன்னன் ஔசீநரி என்னும் தன் மனைவியி னிடத்தே ஆசை வைத் திருப்பவும், தேடி நொந்தாள் - (அவனைத்) தேடி வருந்தினள் (எ - று.)

*அவர்க்காதல்—அவர் நினைத்தற் குடம்படுதல். ஒரு கருமத் தைத் தாமாக அறிந்துசெய்ய மாட்டாதார் செய்வாரைக் கண்டா யினுஞ் செய்வர், நீ யதுவுஞ் செய்கின்றிலை யென்பதாம். ஔசீநரி என்பது தத்திதம்.*

**கதை:**—ஊர்வசி என்னும் தேவமாது பொழில் விளையாட் டயர்கையில் அசுரர் அவளைக் கவர்ந்து விசும்பி னேகினர். அது
கண்டு தேவர்கள் அஞ்சி ஒன்றுஞ் செய்ய மாட்டாது நிற்பப்



புரூரவா என்னுங் குருகுல மன்னன் தன் தேரை அவர்மீது கடவிப் புறங்கண்டனன். ஔசீநரி என்னும் மனைவியொடு கூடி இனிது வாழ்த லறிந்தும் ஊர்வசி அவன் மீது காதல் கொண்டு அவனைத் தேடி வருந்தினள். (கடுo)

*[இது விக்கிரமோர்வசீய நாடகத் துளது.]*

---

## கஙக-ஆம் அதிகாரம்

# புலவி

கொண்ட பரவை கொடும்புலவி யெல்லாம்வன்
றொண்டர்க்குப் பேரழகே சோமேசா—தண்டா
நலத்தகை நல்லவர்க் கேஎர் புலத்தகை
பூவன்ன கண்ணா ரகத்து.

அஃதாவது தலைமகனுந் தலைமகளும் ஊடுதல்.

கஙக. (இ-ள்.) சோமேசா!—தண்டா நலத்தகை நல்லவர்க்கு ஏஎர்-நீங்காத நற்குணங்களாற் றகுதியுடைய ராய தலைவர்க்கும் அழகாவது, பூ அன்ன கண்ணார் அகத்து புலத்தகை - (தம்) பூவன்ன கண்ணார் நெஞ்சின்கண் நிகழும் புலவி மிகுதியன்றே,—(அதற்கு எடுத்துக்காட்டு) - வன்றொண்டர்க்கு - சுந்தரமூர்த்தி நாயனாருக்கு, பரவை கொண்ட கொடும் புலவி எல்லாம் - பரவை நாய்ச்சியார் கொண்ட கொடிய பிணக்கு யாவும், பேர் அழகே - மிக்க அழகே யாயிற்று (எ - று.)

நல்லவிர்க்கு என்புழிச் சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. தவறில்லார்க்கும் புலவி இனிதென்பான் நலத்தகை நல்லவர்க்கும்' என்றான். அழகு—இன்பமாகிய பயனை அடைதல். தான் நுகர்ந்த இன்பத்திற் கேதுவாகிய புலவியை வியந்து கூறியவாறு. (கஙஉ).

கதை:—மேலே உரைத்தாம் [கககச-வது காண்க.]

---

கங௨-ஆம் அதிகாரம்

# புலவிநுணுக்கம்

சீவகன் மஞ்சரியைத் தாழ்த்துரைப்பச் சீறினளே
தூவாய்க் குணமாலை சோமேசா—வாவகையே
தன்னை யுணர்த்தினுங் காயும் பிறர்க்குநீ
ரின்னீர ராகுதி ரென்று.

அஃதாவது தலைமகனுந்
யிருந்துழி அவன் மாட்டுப்

தலைமகளும் ஓரமளிக்கட் கூடி
புலத்தற் காரணமில்லையாகவுங்
காதல் கைம்மிகுதலான் நுண்ணிய தோர் காரண
முளதாக வுட் கொண்டு அதனை அவன் மேலேற்றி
அவள் புலத்தல். காரணத்
தின் நுணுக்கங் காரியத்தின்மே னின்றது. புலவியது
என விரிக்க.

நுணுக்கம்

கஙௗ௨. (இ - ள்) சோமேசா!—தன்னை
உணர்த்தினும்

காயும் - இவ் விதத்தான் ஊடிய தன்னை யான் பணிந்துணர்த்துங்காலும் வெகுளாநிற்கும், பிறர்க்கு நீர் இந்நீரர் ஆகுதிர் என்று - பிறமகளிர்க்கும் அவர் ஊடிய வழி இவ்வாறே பணிந்துணர்த்து நீர்மையுடையீ ராகுதி ரென்று

சொல்லி, ஆவகையே - அவ்வாறே, தூவாய் குணமாலை - குற்ற மற்ற வாய்ச் சொற்களையுடைய குணமாலை, சீவகன் மஞ்சரியை தாழ்த்து உரைப்ப - சீவகனென்பான் சுரமஞ்சரியை . இழித்துக்கூற, சீறினள் - சீற்றங்கொண்டாள்.

(எ - று.)

இவள் தெளிவித்தவழியுந் தெளியாளென்பது பற்றி என் மேலேற்றியவற்றை உடம்பட்டுப் பணிந்தேன், பணிய அது தானும் புலத்தற் கேதுவாய் முடிந்தது. இனி இவண்மாட்டுச் செய்யத் தகுவது யாது என்பதாம்.

கதை:—சீவகன் சுரமஞ்சரியை மணந்து திரும்பி வந்து தன் மனை புகுந்து தன்னையே நினைத்து அழுது புலம்பி யுருகிக்கொண்டிருந்த சுநந்தையையுங் கந்துக்கடனையுங் கண்டு குணமாலை இல்லம்புக்கு அவருக்கு மங்கலவணி செய்துகூட்டம் வேண்டி அவளைத் தீண்ட, அவள் அதற்குடம்படாளாய் மறுக்கச் சுர

சோமேசர் முதுமொழி வெண்பா

கஅசு

மஞ்சரியை இழித்துக் கூறி அவளைப் புகழவும் இலள்.

ஊடல் தீர்ந்
(கரு௨)

'அன்னமென் னடையு நோக்குஞ் சாயலு மணியு மேரு
மின்னினுண் ணுசுப்பும் வெய்ய முலைகளு முகமுந் தோன்ற
வென்மனத் தெழுதப் பட்டா யாயினு மிவை கேளா
யுன்னை யான் பிரிந்த நாளோ ரூழியே போன்ற தென்றான்.

[இது சிந்தாமணியி லுளது.]

---

## கநக-ஆம் அதிகாரம்

# ஊடலுவகை

காயும் புலவியில்வன் றொண்டர் கடைப்பட்டுத்
தோயுமின்பின் மேலானர். சோமேசா—ஆயுங்கால்
ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங்
கூடலிற் காணப் படும்.

அஃதாவது ஊடலாற் றமக் குக் கூ டலின்பஞ் சிறந்துழி அச்சிறப்பிற் கேதுவாகிய அவ் வூடலைத் தலைமகளுவத்தலும் தலைமகனுவத்தலுமாம்.

கககூ. (இ-ள்.) சோமேசா!—ஆயுங்கால் மிடத்து, ஊடலில் தோற்றவர் வென்றார் - (காம

- ஆராய்
நுகர்தற்

குரிய இருவருள்) ஊடலின்கட் டோற்றவர் வென்றாராவர், அது கூடலில் காணப்படும் - அஃதப்பொழுதறியப்படா தாயினும், பின்னைப் புணர்ச்சியின்கண் அவராலறியப்

படும்; (அதற்கு எடுத்துக்காட்டு,) - வன்றொண்டர் - சுந்தரமூர்த்தி நாயனார், காயும் புலவியில் கடைப்பட்டு - வெறுக்கின்ற ஊடலின்கட் டோற்று, தோயும் இன்பின் மேலானார் - நுகரும் புணர்ச்சி யின்பத்தின்கண் மேம்பட்டார். (எ - று.)

தோற்றவர்—எதிர்த்த லாற்றாது சாய்ந்தவர். அவர் புணர்ச்சிக்கட் பேரின்ப மெய்தலின் வென்றாராயினார். மன் ககo சோமேசர் முதுமொழி வெண்பா

னும், உம்மும் அசைநிலை. யான் அதுபொழுது பொழுது பேரின்பம் பெற்றேனென்பதாம்.

சாய்தலின் இது

கதை:—(மேலே உரைத்தாம்) ககசு-வது காண்க.
பாட்டுரை

## சோமேசர் முதுமொழி வெண்பா

முற்றிற்று.

சிவஞான யோகிகள் சேவடி வாழ்க.

திருவள்ளுவ நாயனார் திருவடி வாழ்க.

---

# பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : பக்க எண்]

| | |
|---|---|
| அச்சுவத்தா மாப் | ௧௪௨ |
| அத்திரவாக் காற்புத் | ௯ |
| அப்பூதி யார்மறைத் | ௧0௫ |
| அல்லமனே மாயை | ௧௭௬ |
| அற்கா வமண்மொழி | ௭0 |
| அன்பரைக் கண்டழுக்கா | ௩௧ |
| அன்பன் றுறப்பவு | ௧௮0 |
| அன்றமணர் திலைப்ப | ௬௭ |
| ஆக்கையு மாயிரத்தெட் | ௫௪ |
| ஆங்கா ரியந்தடுத்த | ௧௨௧ |
| ஆர்வீ டணஞே | ௮0 |
| ஆன்றவெழிற் சிதையை | ௨௮ |
| இல்லாண் மறுப்பவுமஞ் | ௧௨௪ |
| இல்லாளைப் பற்றிமூழ் | ௧௧௯ |
| இல்வாழ் தரும | ௧௩ |
| இன்சொ விராம | ௨0 |
| இன்பமுற்றுன் மாயை | ௧௬௧ |
| ஈரைந் தலையா | ௬௮ |
| ஈன்றுன் றிலோத்த | ௧௬௨ |
| உக்கிரனுர் மேருவை | ௧௧௨ |
| உன்பணிக்கென் றேறுதி | ௧௪௬ |
| ஊனுக்கூனென்று | ௯௪ |
| எண்ணெயிரப் பஞ்சியுட | ௧௫௪ |
| எத்திறத்துங் கெட்டா | ௧௨௫ |
| எத்திறமு மேயர்கோ | ௬௯ |
| எல்லா மறையவர்க்கிங் | ௧௪௭ |
| எல்லா முணர்ந்தும் | ௨௫ |
| என்றுமொரு மீனைவங் | ௯௪ |
| ஏர்மணநல் லூர்ச்சுடருன் | ௪௬ |
| ஏற்ற துரோணனையன் | ௧௫௫ |
| ஏனையர்பால் வெற்றி | ௧௨௬ |
| ஐவரில் லாளழுத | ௮௪ |
| ஒட்டலன்செய் திமைக் | ௨௯ |
| ஓதாகா வோதுகலை | ௧௭௯ |
| ஓர்சங்கத்தார் கல்வி | ௧0௬ |
| ஓர்நா ளகலியை | ௧௬௬ |
| கஞ்சாறர் சோபனப் | ௧௫௨ |
| கற்பின்மை இல்லாள் | ௧௩௪ |
| காங்கேயன் வேண்ட | ௧௫௮ |
| காட்டு முயலுங் | ௭௫ |
| காம மிகவுமூந்துங் | ௧௬௫ |
| காயும் புலவியில்வன் | ௧௮௯ |
| காரிகையா ரைப்பொன் | ௫௬ |
| கால்செய் கதிர்சேயைக் | ௯௫ |
| கானடந்துஞ் சீதைகலப் | ௧௯௩ |
| குற்றொருவர்க் கூறை | ௩௬ |
| கூற்றுவர்மூ வேந்தர் | ௯௩ |
| கூனியிரா மன்பிரிந்து | ௩௪ |
| கேழ்வரைச் சேடியர் | ௧௭௨ |
| கொண்ட பரவை | ௧௮௭ |
| கொன்படைக ணீருகக் | ௧௩௨ |
| கோற்றொடி விற்பாய் | ௧௮௧ |
| கோவணமொன் றிச்சிப் | ௫௫ |
| சக்கரத்தை யேற்பன் | ௭௨ |
| சங்கிலிபாலாரூர | ௧௮௪ |
| சந்திரசே னன்வரவு | ௧௮௨ |
| சம்பந்தர் நாவரசர் | ௬௧ |
| சானகியை யிச்சித்துத் | ௭௧ |
| சீர்கொளிறை | ௪ |
| சீவகன் மஞ்சரியைத் | ௧௮௮ |
| செவ்வேளைப் பால | ௯௯ |
| சேக்கிழார் சிந்தா | ௩௫ |
| தக்கனுர் வேள்வித் | ௧0 |
| தக்கனுனை யெள்ளிமகஞ் | ௬௮ |
| தக்கன்பால் ஞானத் | ௧௩௭ |
| தண்டி யடிகளிரு | ௧௪௩ |
| தன்றுயர நோக்கான் | ௧0௨ |
| தன்னையே யுன்றுங் | ௧௭௪ |

தாதையன் றித் தானே கஎ0
தாய்கருவில் வாழ்குழவி ௯அ
தாய்தீண்டத் தூசுடுத் கஉஉ
தீயனவே சொல்லுஞ் உசு
தேசிகனுக்க கொண்ட எஅ
தேருமா னந்தனைமுன் எசு
தோன்று வகைகரந்து கஎ
நந்தி கலம்பகத்தான் கஉஎ
நல்ல திலகவதி கரு௲
நற்றருமன் வெற்றியினை க௯க
நாய்வாற் களவினுன் சஎ
நித்தியத்து வங்கேட்பா ௬எ
நின்னபிகட கப்பழத்தை ரு௨
நிகைப்ப முப்புரமு ககச
நேய புகழ்த் சு
பண்டைவினை வெண்ணி ரு௲
பல்லவர்கோன் வந்து ௯0
பன்முனிவர் பன்னியர் கஎரு
பன்னு மசதிநன்றி உக
பாடினார்மூ வாண்டினிற் க௯
பார்சிதை சீலம் க0அ
மாமனு னென்னு க0ச
மாயனவ்வேடங் கொண் சசு
மாலான் முதலிகழ்ந்த அசு
மாற்றார் முடியும் கரு0
மீளென் றுரைப்பளவு ரு௲
முப்புரத்தோர் வேவ அக
முற்பணயத் க௯எ
முன்ன ரமண்மதத்து ௯௲
மூர்த்திபால் வன்கண்மை சஉ
மூவர் தடுப்பவுங் கச
மெய்த்தவத்தைக் காசிப ககசு
மெய்த்ததிரு வள்ளுவனார் சுரு
மேல்வளமெல் லாமமைந் கக0
மைந்தனெ னுமலச அரு
யோசனைகந்தினை கஅச
வல்லதிகன் றன்னரணம் ககக
வன்சமணர் தம்பிரிவால் கஉரு
வன்மைச் சுயோதனற் கச௯
வாக்கரசர் பிள்ளா ககசு
வாய்ந்ததம யந்தியுரு கசு௯
சு0
வாழ்வாத வூரர்

| | | | |
|---|---|---|---|
| பிள்ளையார் வைப்பினிற் | ருஉ | வாழ்விழந்த வின்னலி | கசுஎ |
| பிள்ளையுட னுண்ணல் | சகூ | வானவர்கோன் காம | களஎ |
| புண்ணோ டுயிர்வாழ | கசஅ | விக்கிரமன் மற்றொருத் | கஅசு |
| பொன்மலையின் வேங்கை | கூஉ | வீமனவை முன்மனையை | எஙு |
| பொன்னனையாளன்பருக் | ககூ | வெங்கரியைப் பாகரை | கூ0 |
| போசன் கவிஞருக்கே | சக | வெய்துரையா லக்கணமே | அரு |
| போற்றுஞ் சுசீலன் | ககஎ | வெள்ளிவெற்பை யென் | க0க |
| மங்கலியம் விற்றும் | கசக | வேண்டு முருப்பசியைப் | கஙுசு |
| மச்சஞ் சுமந்துய்ப்ப | சஙு | வேதனில்லாள் வீந்ததிற | அஅ |
| மதுவளரும் | க | வேதியனுளாமோ | உஙு |
| மற்றிருத ராட்டிரன்சந் | கசகூ | வேந்துமகற் றேர்க்கால் | ருஙு |
| மன்மதனின் றேடெ | ககசு | வேள்வித் தொழிற்கு | கரு0 |

---

கழக வெளியீடு : கஉசக

சிதம்பரம் ஈசானியமடம் இராமலிங்க சுவாமிகள்

இயற்றியருளிய

# முருகேசர் முதுநெறி வெண்பா

மூலமும் உரையும்



உரையாசிரியர் :

கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
லிமிடெட். திருநெல்வேலி - 6.

1965

சென்னை - 1.



Ed 1 Dec. 1965

O31,IC5
*kw*1K5

MURUGESAR MUDUNERI VENBA
(MOOLAMUM VURAIYUM)
Paari Achakam, Madras-1.

# முன்னுரை

---

திருக்குறள் பின்னிரண்டடிகளில் அமையுமாறு முன்னிரண் டடிகளில் அக்குறளுக்கேற்ற எடுத்துக்காட் டுகளைஎடுத்தமைத்து முழுவெண்பாவாகச் செய்யும் முறையில், சினேந்திரவெண்பா, இரங்கேசவெண்பா, தினகரவெண்பா, வடமலைவெண்பா திருமலைவெண்பா, திருமலைக் கொழுந்து வெண்பா, முதுமொழி மேல்வைப்பு, சோமேசர் முதுமொழி வெண்பா, வள்ளுவர் நேரிசை, சிவசிவவெண்பா, முருகேசர் முதுநெறிவெண்பா முதலிய பல நூல்கள் தோன்றின. ஒவ்வொருவரும் தத்தமக்குத் தக்கதாகத் தோன்றிய எடுத்துக் காட்டுகளை யமைத்து நூலை முடித்துள்ளனர். பெரும்பாலார் அதிகாரத்திற்கு ஒரு குறளை எடுத்துள்ளனர். சினேந்திரவெண்பா திருக்குறள் முழுமைக்கும் அமைக்கப்பட்ட ௧௩௩0 பாடல்களைக் கொண்ட நூல் என்று அறியப்படுகிறது. ஆனால் அந்நூல் மறைந்துவிட்டதாகத் தெரிகிறது. சோழுவந்தானூர் அரசஞ் சண்முகனாரும் அதிகாரம் முழுமைக்குமாக அமைத்து இருபதுக்கு மேற்பட்ட அதிகாரங் களுக்கு வள்ளுவர் நேரிசை என்ற தலைப்பில் வெண்பா யாத்துள் ளார். ஆனால் இவருடைய நூல் முடிவு பெறவில்லை. தற்காலத் தில் நம் மிடையே

வாழ்ந்து வரும் பெரும்புலவர் உயர் திரு செக வீரபாண்டிய கவிராசர் அவர்கள் கஙஙரு குறள்களுக்கும் எடுத்துக்காட்டுக் கதைகளமைத்து விரிவான உரையோடு திருக் குறள் குமரேச வெண்பா என்னும் நூலை வெளிப்படுத்தி யுள்ளார்கள்.

முருகேசர் முதுநெறி வெண்பாவாகிய இந்நூலை இயற்றி யவர் சிதம்பரம் ஈசானியமடத்தில் இருந்த இராமலிங்க சாமிகள் என்னும், பெரியாராவர். இவர் வீர சைவக் கொள்கையினர். இலக்கண இலக்கியங்களையும் சங்க நூல்களையுந் தக்காரிடங் கற்றுணர்ந்தவர். தம்மையடுத்தவர்கட்குப் பல நூல்களைப் போதித்துப் புலவர்களாக்கியவர். சொற்பொழிவு செய்யும் ஆற்றல், நூ லியற்றும் ஆற்றல், உரையெழுதும் ஆற்றல் V

முருகேசர் முதுநெறி வெண்பா

முதலியன இவரிடம் நன்கு அமைந்திருந்தன. இவர் பழைய நூல்கள் பலவற்றைத் திருத்தமான முறையில் வெளியிட்டார். முருகேசர் முதுநெறி வெண்பாவாகிய இந்நூலை அதிகாரத்திற்கு ஒருகுறள் வீதம் தெரிந்தெடுத்து முருகக்கடவுளை முன்னிலைப் படுத்தி "முருகேசா!" என விளித்து முடித்திருக்கிறார். கஙஙு அதிகாரங்கட்கும் கஙஙு வெண்பாக்கள் உள்ளன.

இந்நூலுக்கு இவருடைய மாணவர்களில் ஒருவராகிய சோ. குமாரவீரையர் உரையியற்றியுள்ளார்.

அவ்வுரை கதை உரை எல்லாவற்றையும் ஒன்ருகச் சேர்த்துப் பிண்டமாக முடிக்கப்பட்டுள்ளது. தனியாக உரையோ கதையோ இல்லே. நான் இவ்வுரையைப் பெரும்பான்மையுந் தழுவிப் பதவுரையாக எழுதியதோடு கற்போருக்குப் பொருள் எளிதில் விளங்குமாறு பொழிப்புங் கொடுத்துக் கதையையுந் தனியாக அமைத்து முடித்திருக்கிறேன். இதனைக் கொண்டு உரை, பொழிப்பு, கதை முதலியவைகளைத் தனித்தனியே உணர்ந்து கொள்ளலாம்.

20-12-65
பைந்தமிழ்ப்பண்ணை
கருப்பக்கிளர்
தஞ்சைமாவட்டம்.

சு. அ. இராமசாமிப் புலவர்

உ
சிவமயம்
வேலுமயிலுந் துணை

# முருகேசர் முதுநெறி வெண்பா

## மூலமும் உரையும்



காப்பு

கதிநெறியர் நெஞ்சிற் கதிர்க்குமுரு கேசர்
முதுநெறிவெண் பாவை மொழியப்—பதிநடம்வேட்
டற்பகத்தர் மல்குதில்லை யம்பலமேற் பாற்சிகரிக்
கற்பகத்தின் பொற்பதமே காப்பு.

(இதன் பொருள்.) *கதிநெறியர் நெஞ்சில் - வீடுபேற்று வழியை விரும்பும் உணர்வுடையவர்களின் உள்ளத்தில், கதிர்க்கும் முருகேசர் - வெளிப்பட்டு நிற்கும் முருகப் பெருமானை முன்னிலைப்படுத்தி, முதுநெறி வெண்பாவை மொழிய - முதுநெறி வெண்பா என்னும் இந்நூலைக் கூறுதற்கு, பதிநடம் வேட்டு - கூத்தப் பெருமானுடைய திருக் கூத்தை விரும்பி, அன்பு அகத்தர் மல்கு - அன்பினை உள்ளத்திலே கொண்டிருப்பவர்கள் நிறைந் திருக்கின்ற, தில்லை அம்பலம் மேல் பால் சிகரி - திருத் தில்லைப் பொன்னம்பலத்திற்கு மேற்குப் பக்கத்திலேயுள்ள கோபுரத்தில் எழுந்தருளிய, கற்பகத்தின் பொற் பதம் காப்பு - கற்பகப் பிள்ளையாருடைய பொன்போலுஞ் சிறந்த திருவடிகளே காக்கும் துணையாம்.*

(விளக்கம்.) முதுநெறி வெண்பாவை மொழியப் பொற் பதமே காப்பு என்பதாம். கதிநெறி - சிறந்து விளங்கும் நெறி. முதுமை நெறி - முதுநெறி. பழங் காலத்தவர் கூறிய அறநெறி. அன்பு எனற்பாலது எதுகையை நோக்கி அற்பு என வலித்தல் விகாரம் பெற்றது. மல்குதல் - மிகுதிப் படுதல். தில்லை - திருத் தில்லை. அந் நாளில் தில்லை மரங்கள் மிகுந்து காடாக விளங்கிய இடம் பின்னுளில் தில்லை யெனப் பேர் பெற்று நின்றது. இந் நாளில் தில்லை என்னும் வழக்கில்லை. கோயிலின் பெயராகிய சிதம்பரம் என்பதே பெயராக வழங்குகின்றது. தில்லை என்பது அருகி நிற்கின்றது. சிகரி - கோபுரம். மேற்குக் கோபு ரத்தில் கோபுரத்தோடு ஒன்ருகப் பொருந்தியுள்ள பிள்ளையாரின் பெயர் கற்பகப் பிள்ளையார். வேண்டுவார் வேண்டுஞ் சிறப்புக் களை யெல்லாம் அப்பிள்ளையார் அளித்து நிற்றலின் கற்பகப் பிள்ளையார் என்று பெயர் பெற்ருர். (க)

## அவையடக்கம்

தேசுமலி தெய்வத் திருக்குறள்க ளோடுமுரு
கேசனெனு நாமங் கெழுமுதலி—ஞசகன்ருேர்
குற்றமது நோக்காரேன் கோள்கையினுல் நீதிசில
சொற்றனனேர் நூலாத் தொகுத்து.

(இ - ள்.) தேசுமலி - புகழாகிய ஒளிமிகுந்த, தெய்வத் திருக்குறள்களோடு - தெய்வத்தன்மை பொருந்திய திருக் குறட்பாக்களுடனே, முருகேசன் எனும் நாமம் கெழு முதலின் - திருமுருகனுடைய திருப்பெயராகிய முருகேசன் என்னும் பெயரானது பொருந்துகிறபடியினால், ஆசு அகன்றோர் - குற்றமற்ற பெரியோர்கள், குற்றம் அது நோக்கார் என் கொள்கையினால் - குற்றத்தைப் பார்க்க மாட்டார்கள் என்னும் துணிவைக் கொண்டு; நீதிசில - திருக்குறள் நீதிகளிற் சிலவற்றை, ஓர் நூல் ஆ தொகுத்து- ஒரு நூலாகத் தொகுத்து, சொற்றனன் - கூறினேன்.

காப்பு 3

(வி - ம்.) புகழ் பொருந்திய திருக்குறட் பாக்களோடு முருகேசன் என்னும் திருப்பெயரும் பொருந்துகிறபடியினால் பெரியோர்கள் இந்நூலினிடத்தே குற்றங்காணமாட்டார்கள் என்பதாம். தேசு என்பது அழகு ஒளி மிகுபுகழ் முதலிய பொருள்களைக் குறித்து நிற்பது. திருவள்ளுவர் தாஞ் செய்த நூலை அரங்கேற்றுவான் ஆலவாய்ப்பதிக்குக் கொண்டு சென்று சங்கத்தார்களிடங் காட்ட அவர்கள், "தெய்வத் தன்மை பொருந்திய சங்கப்பலகை இந்நூலுக்கு

இடங்கொடுப்பின் நாங்களும் இதனை ஒப்புக் கொள்ளுகிறோம்'' என்று கூறத் திருவள்ளுவனார் தம்முடைய நூலைச் சங்கப் பலகையில் வைக்க அப்பலகை குறளளவாகச் சுருங்கித் திருக்குறளொன்றுக்கே யிடங் கொடுத்துச் சங்கப்புலவர்களையும் பொற்றாமரையில் தள்ளியதாதலின் அச் சிறப்புத் தோன்றத் தெய்வத் திருக்குறள் என்றார். இறையனார், நாமகள், சங்கப்புலவர்களாகியோர் சிறப்புப்பாயிரம் வழங்கியமையானுந் தெய்வத்தன்மை தெளியப் படும். கெழுமுதல் - ஒன்றாகப் பொருந்துதல். குற்றமற்றவர்கள் பிறரிடத்துங் குற்றங் காணமாட்டார்களாகலின், "ஆசகன்றோர் குற்றமது நோக்கார்'' என்றார். ஆயிரத்து முந்நூற்று முப்பது குறள்களினின்றும் நூற்றுமுப்பது குறள்களையே தேர்ந்தெடுத்தாராகலின், "நீதி சில'' என்றார். சொற்றனன் - சொன்னேன்; எதுகை நோக்கி வலித்தல் விகாரமாயிற்று. (உ)

---

உ

## க. அறத்துப் பால்

### கடவுள் வாழ்த்து

1. தேவரையுஞ் சூரனையுந் தேற்றுருவாற்

றேந்தனர்நீ மூவரிறை யென்ன
முருகேசா—வோவில் அகர முதல வெழுத்தேல்லா
மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, நீ மூவர் இறை என்ன - தேவரீரே நான்முகன் திருமால் உருத்திரன் என்னும் மூன்று கடவுளர்கட்கும் தலைவர் என்பதனை, தேவரையும் - தேவர்களையும், சூரனையும - சூரபதுமன் முதலியவர்களையும், தேற்று உருவால் - தெளிவிக்கக் காட்டிய வடிவத்தினால், தேர்ந்தனம் - நன்குணர்ந்து கொண்டோம் ; ஓவில் - ஒழிதலில்லாத, எழுத்து எல்லாம்- எல்லா மொழிகளின் எழுத்தும், அகரம் முதல - அகரமாகிய உயிரெழுத்தை முதலாகக் கொண்டன ; அதைப்போல உலகு - இந்த உலகமானது ; ஆதிபகவன் முதற்று ஆதிபகவனாகிய கடவுளை முதலாகக் கொண்டுள்ளது.

(வி - ம்.) தேவர்களையும் சூரபன்மனையும் மயக்கித் தெளி வித்த படியினால் தேவரீரே மூவர்க்கும் முதல்வர் என்பதை நாங்களுணர்ந்து கொண்டோம் ; எழுத்துக்களெல்லாம்

அகரத்தை முதலாகக் கொண்டிருத்தல் போன்று இவ்வுலகம் கடவுளையே முதலாகக் கொண்டிருக்கின்றது என்பதும் இதனால் பெறப்பட்டது என்பதாம். ஓவின்மை - நீங்குதலின்மை ; ஓ முதனிலைத் தொழிற்பெயர்.



## தெளிவித்த கதை

முருகக்கடவுள் சூரபன்மன் முதலிய அவுணர்களை வென்று தேவர்களைக் காக்கும் பொருட்டுத் தோன்றியருளினார். பாலப் பருவத்திற்கேற்பப் பல திருவிளையாடல்களைப் புரிந்தார். முருகன் திருவிளையாடல்களைப் பார்த்துத் தேவர்களும் அவுணர்களுந் திகைத்தார்கள். அவர்களுடைய திகைப்பைப் போக்க எண்ணிய முருகக் கடவுள் மேருமலையை அடைந்தார். அதன் கொடுமுடிகளைப் பறித்து நான்கு பக்கங்களிலும் வீசினார். பல திருவிளையாடல்களை அங்கும் புரிந்தருளினார். இந்திரன் முதலியோர் உலகத்தை நிலை கலங்கச் செய்கிறவன் இவனே. இவனை இப்பொழுதே கொன்றொழிக்க வேண்டும் என்று எண்ணியவர்களாய்ப் போர் செய்யத் தொடங்கினார்கள். போரின் முடிவில் தம்முடைய உண்மை வடிவத்தை அவர்களுக்குக் காட்டினார். அதனால் தேவர்கள் தம்முடைய மயக்கம் நீங்கி உண்மையை உணர்ந்தார்கள். போர் நிகழ்ந்த காலத்தில் முருகக்

கடவுள் தம்முடைய உண்மை வடிவத்தைச் சூரபன் மனுக்கு ஒரு கணப் பொழுது காட்டினர். அப்பொழுது சூரபன்மனும் முழுமுதற் கடவுள் முருகக்கடவுளே என்னும் உண்மையை உணர்ந்துகொண்டான்.

## வான் சிறப்பு

2. அன்பரிடர் கண்டரன்பா லப்பருஞ்சம் பந்தரோடு
முன்போருகா சேற்ருர் முருகேசா—இன்புதருந்
தானந் தவமிரண்டுந் தங்கா வியனுலகம்
வானம் வழங்கா தெனின்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே, அப்பரும் சம்பந்தரொடு-திருநாவுக்கரசு நாயனரும் திருஞானசம்பந்த ரோடு கூடி, அன் பர் இடர்கண்டு - அடியார்கள் பசியாலடையும் துன்பத்தைப் பார்த்து, அரன்பால் - சிவ பெருமானிடத்தில், முன்பு ஒரு காசு ஏற்ருர் - முன்னுளிலே



ஒரு காசைப் பெற்றுக் கொண்டார்; ஆகவே, வியன் உலகம்- பரந்த இந்த உலகத்திலே, வானம்

வழங்காது எனின்மழை பெய்யாமற் போனால், தானம் தவம இரண்டும் தங்காதானமுந் தவமுமாகிய இரண்டும் இவ்வுலகிலே நிலைபெற மாட்டாவாம்.

(வி - ம்.) அடியார்களுடைய பட்டினித் துன்பத்தைக் கண்ட திருநாவுக்கரசரும், திருஞானசம்பந்தரோடு சிவ பெருமானிடம் இருந்து காசைப் பெற்றுக் கொண்டார் ; மழை பெய்யா தொழிந்தால் உலகில் தானமுந் தவமும் நிலைபெற மாட்டா என்பதாம். அன்பர் - திருநாவுக்கரசரையும் திருஞான சம்பந்தரையுஞ் சூழ்ந்திருந்த அடியார்கள். அப்பரும் என்பதி லுள்ள உயர்வு சிறப்பும்மை அப்பர் தாம் இறைவனுக்குக் கைத் தொண்டு செய்தலேயன்றி அவ்விறைவனிடம் எந்நாளினும் விரும்பி வேண்டாதிருந்த விழுமிய மாண்பைச் சுட்டி நின்றது.

## காசு பெற்ற கதை

திருஞான சம்பந்தரும் திருநாவுக்கரசரும் அடியார்களுடைய திருக்கூட்டத்தோடு திருவீழிமிழலையை அடைந்து அங்கு இறை வழிபாடு செய்துகொண்டு தங்கியிருந்தார்கள். அப்பொழுது மழையில்லாத படியால் வற்கட மேற்பட்டு எல்லோரும் வருந்தினார்கள். இவர்களோடு சென்றிருந்த

அடியார்களும் உணவு கிடைக்காமல் திண்டாடினார்கள். இவர்களுடைய வருத் தத்தைக் கண்ட சிவபெருமான் இருவருடைய கனவிலுந் தோன்றி, "இப்பஞ்சத்தினால் உங்களுக்கு வருத்தமில்லா விடினும் அடியார்கள் பொருட்டு இரண்டு பொற்காசு கிழக்குப் பீடத்திலும் மேற்குப் பீடத்திலும் வைக்கின்றோம். அதனை நீங்களிருவரும் எடுத்து உணவுப் பொருள் வாங்கி அடி யார்கட்கு அமுது படையுங்கள்" என்று திருவாய் மலர்ந்தருளினார். அவ்வாறே இரண்டிடங்களினும் காசு வைத்தார். அதனை இருவரும் எடுத்து அடியார்கட்குணவளித்துக் கொண்டிருந் தனர். பிறகு இருவரும் அவ்விடம் விட்டுச் சென்றார்கள்.



## நீத்தார் பெருமை

3. ஈண்டுதேச தோற்றமா லேய்ந்தான் பிருகுரையால்
    மூண்டரற்பூ சித்தும் முருகேசா—பூண்ட
    நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
    மறைமொழி காட்டி விடும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, மூண்டு அரன் பூசித்தும் - மிகுதியான அன்பு கொண்டு சிவ பெருமானைப் பூசைசெய்தும் வசவுரைப் பயனைப் போக்கிக் கொள்ளமுடியாமல்,

மால் - திருமாலானவர், பிருகு உரை யால் - பிருகுமுனிவருடைய வசவுரை மொழியினால், ஈண்டு- இவ்வுலகத்தில், தசதோற்றம் ஏய்ந்தான் - பத்துப் பிறப்புக்களை எடுத்தார்; ஆகவே; பூண்ட - பொருந்திய, நிறைமொழி மாந்தர் பெருமை - பயன்நிறைந்த மொழிகளை யுடைய பெரியோர்களின் பெருமையை, நிலத்து - இவ்வுலகத்திலே, மறைமொழி காட்டி விடும் - அவர்க ளுடைய சீரிய மொழிகளே புலப்படுத்தி விடுவனவாம்.

(வி - ம்.) பிருகுமுனிவருடைய சாபமொழியைப் பெற்ற திருமால் இறைவனைப் போற்றி வழிபட்டுங்கூட அச்சாப மொழியின் பயனைப் போக்கிக் கொள்ள வியலாமல் பத்து வகையான பிறவிகளை யெடுத்தார்; வாக்குநலமுடைய பெரியோர் களுடைய பெருமையை அவர்களுடைய அரிய உரைகளே காட்டிவிடும் என்பதாம்.

## பத்துப் பிறப்பெடுத்த கதை

ஒருகாலத்திலே தேவர்கட்கும் அசுரர்கட்கும் போர் மூண்டது. அப்போரில் தேவர்கள் தோல்வி யடைந்து திருமாலிடஞ் சென்று தங்களுடைய துன்பங்களைக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள். திருமால் அசுரர்களோடு போருக்குச் சென்று அசுரர்களை விரட்டியடித்தார்.

திருமாலோடு போர் செய்ய முடியாத அசுரர் கள் தங்களுடைய குலகுருவாகிய 8 முருகேசர் முதுநெறி வெண்பா

சுக்கிராச்சாரியாரின் தந்தையான பிருகுமுனிவருடைய இருப் பிடத்தை யடைந்து முனிவருடைய மனைவியாகிய கியாதி என்பவளிடம் அடைக்கலம் புகுந்தனர். கியாதி அவர்களைக் காப்பதாகக் கூறி மறைத்து வைத்தனள். திருமால் துரத்திக் கொண்டே அங்கு வந்தார். கியாதி உள்ளே செல்லக் கூடாது என்று தடுத்ததையும் பொருட்படுத்தாமல், அவள் தமக்கு மாமியாக இருத்தலோடு முனிவருடைய மனைவியாகவும் உள்ளாள் என்பதையும் நோக்காமல் அவளையுங் கொன்று உள்ளே போய் அசுரரையுங் கொன்று சென்றார். இச் செய்தியை உணர்ந்த பிருகு முனிவர், "திருமாலே! நீ நிலவுலகத்தின்கண் பத்துப் பிறவிகளை யெடுப்பாயாக" என்று வசவுரை வழங்கினர். இவ்வசவுரையை உணர்ந்த திருமால் இதனைப் போக்கிக் கொள்ளுமாறு சிவபிரானைப் பூசித்து வழி பட்டார். ஆயினும் முனிவருடைய தீ மொழியிலிருந்து விடுபட முடியவில்லை. நிலவுலகில் பத்துப்பிறப்புக்கள் எடுக்க வேண்டியதாகவே முடிந்துவிட்டது.

## அறன்வலியுறுத்தல்

4. அற்றமின்றிச் சாமந்தன்

கோனிதியா லண்ணல்பணி முற்றுவித்தின் புற்றான்
முருகேசா—மற்றதனல் ஒல்லும் வகையா னறவினை
யோவாதே செல்லும்வா யெல்லாஞ் செயல்.

(இ - ள்.) முருகேசா-முருகப் பெருமானே !, சாமந்தன்- சாமந்தன் என்பவன், அற்றம் இன்றி - சிறிதும் சோர் வில்லாமல், கோன் நிதியால் - அரசனுடைய பொருளினால், அண்ணல் பணி - சிவபெருமானுடைய திருப்பணிகளை, முற்றுவித்து அதனால் இன்பு உற்றான் - நிறைவேறச் செய்து -அதனால் இன்பத்தை அடைந்தான்; அறவினை - அறச் செயலை, ஓவாதே - ஒழியாமல், ஒல்லும் வகையால்செய்யக் கூடிய அளவோடு, செல்லுமவாய் எல்லாம் செயல்செல்லுமிடமெல்லாம் செய்தல் வேண்டும்.

அறத்துப் பால் 9

(வி- ம்.) சாமந்தன் என்பவன் அரசனுடைய பொருளைக் கொண்டு சிவபெருமானுடைய திருப்பணிகளைச் செய்து மகிழ்ந் தான்.-அறச் செயலை ஒழிவில்லாமல் இயன்ற பொழுதெல்லாம் செய்தல் வேண்டும் என்பதாம். அற்றம் - சோர்வு குறைவு முதலியவற்றைக் குறிக்கும் ஒரு சொல் . மற்று - அசைநிலை.

## சாமந்தன் திருப்பணி செய்த கதை

மதுரைமா நகரில் குலபூடண பாண்டியன் அரசாட்சி செய்து கொண்டிருக்கும் நாளையில் சாமந்தன் என்பவன் பாண்டியனுடைய படைத் தலைவனாக விருந்தான். அவன் சிவ பெருமானிடத்தில் அன்புள்ளவன். அடியார்களைச் சிவமாக எண்ணி வழிபடும் பண்புடையவன். அந்நாளில் வேடர்கட்குத் தலைவனாகவிருந்த சேதிராயன் என்பவன் படைப் பெருக்கும் ஆற்றலும் உடையவனாக விளங்கினான். அவன் பாண்டிய நாட்டின்மேற் படை யெடுத்துச் சென்று அதனைக் கைப்பற்ற வேண்டுமென்னும் எண்ணமுடையவனாய் அதற்குத் தக்க ஏற்பாடுகளைச் செய்தான். இச்செய்தியை உணர்ந்த பாண்டியன் சாமந்தனை யழைத்து, "வேண்டிய பொருளைக் கொண்டு போய் நம்முடைய படையையும் பெருக்குவாயாக" என்று கட்டளையிட்டான். சாமந்தன் ஏராளமான பொருளை யெடுத்துக் கொண்டுபோய்ச் சோமசுந்தரப் பெருமானுக்குப் பல வகையான திருப்பணிகளைச் செய்தான்.

பொருளைக் கொண்டு திருப்பணிகளைச் செய்ததை யுணர்ந்த பாண்டியன் சாமந்தனை யழைத்துப், "படைகள் எவ்வளவு சேர்ந்துள்ளன ? எப்பொழுது வருகின்றன ? உடனே படைகள் வருதல் வேண்டும்" என்று கடுமையான கட்டளையிட்டான். சாமந்தன்

கடவுளிடம் முறையிட்டுக் கொண்டான். கடவுள் தம்முடைய பூதப் படையை மனிதப் படையாக்கிக் கொண்டு வந்து சேர்ந்தார். சாமந்தன் பாண்டியனுக்குப் படை வந்துள்ள செய்தியைக் கூறினன். பாண்டியன் படையைப் பார்த்து மகிழ்ந்தான். படைத் தலைவராக வந்த பரமனுக்கு நன்கொடை கள் வழங்கினன். சேதிராயன் வேட்டைக்குச் சென்றவிடத்தில் புலியால் கொல்லப்பட்டதாகச் செய்தி வந்தது. கடவுள் தம் 10



முடைய படையோடு மறைந்தருளினர். பாண்டியன் உண்மை யுணர்ந்து சாமந்தனைப் போற்றிப் பாராட்டினன்.

## இல்வாழ்க்கை

5\. மெய்த்தமிழ்வே தத்தலகுய் வித்துயர்ந்தார் வளளுவனா
முத்தவில்வாழ் வுற்ற முருகேசா—உத்தமமாம் ஆற்றி
ஞெழுக்கி யறனிழுக்கா வில்வாழ்க்கை நோற்பாரி
ஞேன்மை யுடைத்து.

(இ - ள்.) முருகேசா-முருகப் பெருமானே !, வள்ளுவ ஞர் - திருவள்ளுவர், முத்த இல்வாழ்வு

உற்று - முதிர்ந்து சிறந்த முறையிலே இல்வாழ்க்கையை நடத்தி, மெய்த்தமிழ் வேதத்து - மெய்ம்மை பொருந்திய தமிழ் மறையாகிய திருக்குறளினாலே, உலகு உய்வித்து - உலகத்தினர் கடைத் தேறுமாறு செய்து, உயர்ந்தார் - தாமுஞ் சிறந்த பெருமையை அடைந்து திகழ்ந்தார் : ஆகவே, உத்தமமாம்சிறந்ததாகிய, ஆற்றின் - வழியிலே, ஒழுக்கி - பிறரும் நடக்குமாறு செய்து, அறன் இழுக்கா இல்வாழ்க்கை - தானும் அறநெறியிலே வழுவாத இல்லற வாழ்க்கையை மேற் கொண்டிருத்தல், நோற்பாரில் - தவஞ் செய்வாரை விட, நோன்மை உடைத்து - வல்லமையை உடையதாகும்.

(வி - ம்.) திருவள்ளுவநாயனார் தாம் இல்வாழ்க்கையை நடத்த வேண்டிய முறைப்படி நடத்திக் காட்டியதன்றித் தமிழ் மறையாகிய திருக்குறளைச் செய்து உலகத்தையும் வாழ்வித் தருளினார்; இல்வாழ்க்கையை முறைப்படி நடத்துவோர் தவஞ் செய்வோரைப் பார்க்கினுஞ் சிறந்தவர்களாவர் என்பதாம். மூத்தம் என்பதற்கு விருப்பு எனவும் உரை கூறுவர்; அவ் அறத்துப் பால்

*11*

வுரைக்கு விருப்பத்தோடு இல்வாழ்க்கை என்று

பொருள் கொள்க.

## திருவள்ளுவர் கதை

தெய்வப் புலமைத் திருவள்ளுவநாயனர் பகவன் என்பவருக்கும் ஆதியென்பவளுக்கும் மகனாகத் தோன்றினார். வாசுகி என்னுங் கற்பிற் சிறந்த மாதை மணந்து இல்லறத்தை நல்லறமாக இனிது நடத்தினார். திருவள்ளுவ தேவருடைய இல்லறம் எல்லோரும் போற்றத் தக்கதாக விருந்தது. தேவர்கட்குண்டாகும் ஐயத்தைக் கூட அகற்றத்தக்க சீரிய நிலையில் திருவள்ளுவருடைய தெய்வத்தன்மை சிறந்து விளங்கியது. ஆயிரத்து முந்நூற்று முப்பதருங் குறளடங்கிய தமிழ் மறையைச் செய்து உலகிற் களித்தார். அம்மறை நான்மறையைப் போன்றே சிறப்புடையதாய் நானிலத்தில் விளங்கிப் பெருமையுறுவ தாயிற்று. அம்மறையை நாட்டினர் பரிந்து கற்றுப் பலன் பெற்று உய்யலாயினர்.

## வாழ்க்கைத்துணை நலம்

6. கோதில் சுதரிசனன் சோற்றிறம்பாக்
கோதையோடு மூதளர்தீர்ந் துய்ந்தான்
முருகேசா—பேதமிலாப் பெண்ணிற் பெருந்தக்க
யாவுள கற்பென்னுந் திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, கோது இல் சுதரிசனன் - குற்றமற்ற சுதரிசனன் என்

கின்ற பெயரை யுடையவன், சொல் திறம்பாக் கோதையொடு - தன்னுடைய சொல்லுக்கு மாறுபடாத மனைவியோடு இல்வாழ்க்கை நடத்தி, மூது அஞர் தீர்ந்து உய்ந்தான் - மிகுந்த துன்பத்தைப் போக்கி நல்ல கதியை அடைந்தான்; ஆகவே; கற்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் - கற்பு என்று கூறப் பெறுகின்ற திட்பமானது அமையப் பெற்ற மனைவியை ஒருவன் வாழ்க்கைத்துணையாகப் பெற்றால், பெண்ணில்.12

முருகேசர் முதுநெறி வெண்பா

மனைவியைப் பார்க்கினும், பெருந்தக்க யாஉள - பெருமை அடைதற்கு வேறு என்ன இருக்கின்றன?

(கி - ம்.) குற்றமற்ற சுதரிசனன் என்பவன் கற்பிற் சிறந்த தன்னுடைய மனைவியோடு துன்பந் தீர்ந்து நல்ல கதியை அடைந்தான்; கற்பென்று சொல்லப்பெறுந் திட்பமானது அமையப் பெற்றால் ஒருவன் அடையத் தக்க சிறந்த பேறுகளுள் பெண்ணைத்தவிரச் சிறந்தன வேறு யாவையுள்ளன என்பதாம். மூது அஞர் ; முதுமை அஞர் - அஃது துன்பங்களுள் எல்லாம் கொடிய துன்பம்.

## சுதரிசனன் கதை

முன்னாளிலே சுதரிசனன் என் னும் பெயருடைய அந்தணன் ஒருவன் இருந்தான். அவன்

சிவபெருமானிடத்திலும் சிவ · னடியார்களிடத்திலும் பேரன்புடையவன். அம்மறையவ னுடைய மனைவியின் பெயர் யோகவதி. அந்தணன் தன் னுடைய மனைவியைப் பார்த்துப், "பெண்ணே! நீ சிவனடியார் கட்கு வேண்டுவன புரிந்து அவர்களைப் போற்றுவாயாக!

அவர்கள் நின்பாற் கலவியை விரும்பினும் மறுதளிப்பாயாக" என்று கட்டளையிட்டான். இயமன் யோகவதியின் கற்புத் திண்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணினான். சிவனடியார் கோலம் பூண்டு யோகவதியிடம் வந்தான். யோகவதி அவனுக்கு வேண்டும் பணிகளைப் புரிந்தாள். அவன் தன்பாற் காதல் கொண்டிருத்தலைக் குறிப்பாலுணர்ந்து அதற்கு . மிசைந்தாள். உடனே நமன் தன்னுடைய இயற்கைவடிவத்தோடு வெளிப்பட்டு நின்றான். அவளைப் பார்த்து, "நான் வந்தது உன் னுடைய கற்பை ஆராய்ந்தறிதற்கே யல்லது கலத்தற்கன்று கணவன் மொழிக்கு மாறுபடாத நின்னுடைய கற்புடைமை கண்டு மகிழ்ந்தேன்; உங்களிருவருடைய இயமவேதனையையும் நீக்கினேன்" என்று கூறி மறைந்தான்.

சுதரிசனனும் அவனுடைய மனைவியும் இயமவேதனை யற்றவர்களாய் நல்ல கதியை அடைந்தார்கள். கற்புடைய மனைவியைத் தவிரச் சிறந்த பொருள் வேறொன்றுமில்லை யென்பது யோகவதியினால் நன்கு பெறப்பட்டது.



## புதல்வரைப் பெறுதல்

7. துற்றுநர குற்றோர் சசிவன்னன் சூழ்நெறியான்
முற்றினர்சோர்க் காதி முருகேசா—உற்றுப்
பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த மக்கட்பே
றல்ல பிற.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, சசிவன் னன் சூழ்நெறியால் - சசிவன்னன் என்பவன் தான் மேற் கொண்ட நடக்கையினாலே, துற்று நரகு உற்றோர் - பொருந் திய நிரயத்தையடைந்தவர்கள், சொர்க்காதி முற்றினர் - பிறகு அவன் நன் னெறியி லொழுகியபடியினால் விண் ணுலகம் முதலிய நற்கதியை அடைந்தனர்; ஆகவே, பெறுமவற்றுள் - பெறத்தகுந்த பேறுகளில், அறிவு அறிந்த - அறிய

வேண்டியவைகளையெல்லாம் நன்கு கற்றறிந்த, மக்கட்பேறு அல்ல பிற - மக்கட்பேறு அல்லாத பிற பேறுகளை, யாம் அறிவது இல்லை-நாம் ஒருபொருளாக மதிப்பதில்லை.

(வி - ம்.) சசிவன்னன் செய்த தீவினையால் நிரயமடைந்த வர்கள் பிறகு அவன் நல்வினை புரிந்த படியினால் நல்ல கதியை அடைந்தார்கள் ; அறிய வேண்டியவைகளையெல்லாம் அறிந்த அறிவுடைய மக்கட் பேற்றைத் தவிர மற்றைப்பேறுகள் சிறப் புடையன அல்ல என்பதாம். துன்று எனற்பாலது துற்று என வலித்தல் விகாரம் பெற்றது. துன்றுதல் - பொருந்துதல்.

## சசிவன்னன் கதை

முன்னாளிலே பாகவெக்கியன் என்னும் பெயரையுடைய அந்தணன் ஒருவனுக்குச் சசிவன்னன் என்னும் பெயருடைய மைந்தன் ஒருவன் தோன்றினான். அவன் கட்குடித்தல், காமத்தில் ஈடுபடல், ஊனுண்டல் முதலிய கொடிய தீமைகளையெல்லாஞ் செய்தான். அவன் செய்த தீவினையினால் அவனுடைய குலத்தினர் நிரயத்தில் வீழ்ந்து மிகுந்த துன்பத்தையடைந்து வருந்தி



னார்கள். பாகவெக்கியன் தன்னுடைய மகனுடைய செய்கைகளைப் பார்த்து உள்ளம் வருந்தினான். மாநந்திபராயணர் என்னும் மெய்யறிவாளர்

ஒருவரிடஞ் சசிவன்னனைக் கொண்டு போய் விட்டு அவன் செய்துள்ள தீமைகளையெல்லாங் கூறினன். மாநந்திபராயணர் சசிவன்னனிடத்தில் அன்பு கொண்டார். தம்முடைய அருட்பார்வையை அவன் மீது செலுத்தினர். மெய்யறிவு பிறக்குமாறு அறிவு நூலின் முடிந்த பொருளை அவனுக்குப் போதித்தார். இதனால் சசிவன்னன் மெய்யறிவு பெற்றுத் தீவினையிலிருந்து நீங்கி வீடுபெற்றான். நிரயத்தில் வீழ்ந்து வருந்திய அவனுடைய குலத்தினரும் நற்கதியை அடைந்து மகிழ்ந்தார்கள்.

## அன்புடைமை

8. கின்னரரோ டேமேதா கேதரைமீட் டார்வசவர்
முன்னரன்பாற் சென்று முருகேசா—மன்னுலகில்
அன்போ டியைந்த வழக்கென்ப வாருயிர்க்
கென்போ டியைந்த தொடர்பு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, வசவர் முன் அரன்பால் சென்று - வசவதேவர் முன்னாளிலே சிவபெருமானிடம் போய், கின்னரரோடு மேதாகேதரை - கின்னரையர் மேதாகேதையர் என்னும் சிவசரணர்கள் இருவரையும், மீட்டார் - மீட்டுக் கொண்டு வந்தார்; ஆகவே, மன் உலகில் - நிலைபெற்ற இந்த

உலகத்திலே, ஆர் உயிர்க்கு - அருமையான உயிருக்கு, என்போடு இயைந்த தொடர்பு - உடலோடு பொருந்தியிருக்கின்ற தொடர்பானது, அன்போடு இயைந்த வழக்கு என்ப - அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர்.

(வி - ரை.) வசவதேவர் முன்னாளிலே சிவபெருமானிடம் போய்க் கின்னரர், மேதாகேதர் என்பவர்களை மீட்டுக் கொண்டு வந்தார்; உயிருக்கு உடலோடு பொருந்தியிருக்கிற தொடர்



பானது அன்போடு பொருந்திவாழும் வாழ்க்கையின் பயன் என்று கூறுவர் என்பதாம். என்பு உடலையுணர்த்துதலால் ஆகு பெயர்.

## வசவதேவர் கதை

முன்னாளிலே கலியாணபுரியிலே வசவதேவர் என்னும் வீரசைவர் வாழ்ந்திருந்தார். அவர் சிவனடியாரிடத்திலே மிகுந்த அன்புடையவராக விளங்கினார். அவ்வசவதேவருடைய அன்புடைமையைச் சிவபெருமான் உலகத்தார்கட்கு உணர்த்த எண்ணினார். அவ்வசவதேவர் மிகுந்த அன்புவைத்திருந்த கின்னரையர் மேதாகேதையர் என்பவர்களைத் தம்முடைய பதவியாகிய திருக்கைலையிலே

*சேர்த்தருளினார். வசவதேவர் அவர்களிடத்திற் கொண்டிருந்த மிகுந்த அன்புடைமையினால் அவர்களுடைய பிரிவுக்கு வருந்தினார். எப்படியும் அவர்களை மீளவுங் கொண்டு வந்து தம்மோடு வைத்துக்கொள்ள வேண்டு மென்று எண்ணினார். திருக்கைலைக்குச் சென்று இருவரையும் மீட்டுக்கொண்டு வந்தார். இச்செய்கையைக் கண்டோர் வசவதேவர் அவ்விருவர் மீதுங்கொண்டிருந்த அன்பினைப் பெரிதும் பாராட்டலாயினர்.*

விருந்தோம்பல்

9. துன்னுவனத் துந்தருமன் சூழ்முனிவர்ப் பேணுதலான்
முன்னுவளம் பெற்றான் முருகேசா—உன்னின்
வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று.

(இ - ள்.) *முருகேசா - முருகப் பெருமானே!, தருமன் - பாண்டவர்களில் முதல்வராகிய தருமர், துன்னும் வனத்தும் - தாம் அடைந்திருந்த காட்டிலும், சூழ் முனிவர் பேணுதலால் - தம்மைச் சூழ்ந்திருந்த முனிவர்களாகிய விருந்ினரைப் போற்றி*

யுணவிட்டபடியினால், முன்னு வளம்
பெற்றான்-எண்ணிய செல்வத்தை இனிது அடைந்



தான்; ஆகவே, வரு விருந்து - தன்னை நோக்கி வந்த விருந்தினரை, வைகலும் - நாள்தோறும், ஓம்புவான் வாழ்க்கை-உணவு முதலியனவளித்துப் போற்றுபவனுடைய வாழ்க்கைச் சிறப்பானது, பருவந்து-குற்றத்தை யடைந்து, பாழ் படுதல் இன்று - கெட்டுப் போவது இல்லை.

(வி - ம்.) தருமர் தாம் தங்கியிருந்த காட்டிலுந் தம்மைச் சூழ்ந்திருந்த முனிவர்கட்கு விருந்திட்டுப்போற்றிய பண்பினாலே தாம் எண்ணிய செல்வத்தைப் பெற்றார்; தன்னிடம் வருகிற விருந்தை நாள்தோறும் போற்றுபவன் வாழ்க்கையானது குற்றத்தையடைந்து கெட்டுப்போதல் இல்லை யென்பதாம். முன்னுவளம் - தான் எண்ணிய அரசாட்சிச் சிறப்பு.

## தருமர் விருந்திட்ட கதை

நாடு நகரங்களை யெல்லாம் துரியோதனன்பாலிழந்த தருமர் தம்முடன் பிறந்தார்களோடு காட்டையடைந்து தங்கியிருந்தார். தமக்குக் கிடைத்த தெய்வத் தன்மை பொருந்திய கலத்தின் உதவியைக் கொண்டு தம்மை

யெக்காலத்திலுஞ் சூழ்ந்திருந்த பல முனிவர்கட்கும் பிறருக்கும் விருந்தளித்தலாகிய பணியை நாளுங் குறைவின்றிச் செய்து கொண்டிருந்தார். இந்த நல்வினையினாலே அவர் பன்னிரண்டு ஆண்டுகளுங் கழிந்த பிறகு தாம் எண்ணியவாறு தம்முடைய நாடு நகரங்கள் முதலியவைகளைப் பெற்று மகிழ்ந்தார். விருந்தினரைப் போற்றுபவருடைய வாழ்க்கை கெட்டொழிந்து போகாதென்பது தருமரிடம் நன்கு விளங்கியது.

### இனியவை கூறல்

10. அண்டமுதல் வற்பழித்தே
யைந்தலையு
ளொன்றிழந்தான்
முண்டகன்செம் மாந்து முருகேசா—மண்டிப்
பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற.

அறத்துப் பால் 17

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! முண்டகன் செம்மாந்து - தாமரையிலுள்ளவனாகிய நான்முகன் இறுமாப்பையடைந்து, அண்டம் முதல்வன் பழித்து உலகங்கட்கெல்லாம் முதல்வனாகிய சிவபெருமானை இகழ்ந்து கூறி, ஐந்து

தலையுள் ஒன்று இழந்தான் - ஐந்து தலைகளில் ஒன்றைப் போக்கிக் கொண்டான்; ஆகவே, பணிவுடையன் - வணக்கமுடையவனாகவும், இன் சொல்லன் - இனிமையாகப் பேசுபவனாகவும், ஆதல்-இருத்தல், ஒருவற்கு அணி-ஒருவனுக்கு அழகாகும், பிற அல்ல-இவ்வணிகளன்றிப் புறத்தே யணியும் பொன்னணிகள் அழகு தருவன ஆகா.

(வி - ம்.) நான்முகன் இறுமாப்பையடைந்து சிவபெருமானை இகழ்ந்த படியினால் ஐந்து தலைகளுள் ஒரு தலையைப் போக்கிக் கொண்டான்; வணக்கமுடையவனாகவும் இனிய மொழிகளைப் பேசுபவனாகவும் இருத்தலே ஒருவனுக்குச் சிறந்த அணிகலமாம்; பொன்னணி முதலியன சிறந்த அணி அல்ல என்பதாம். அண்டமுதல்வன் - எல்லா உலகங்களுக்குந் தலைவன்; ஐந்தலை-பிரமனுக்கும் முன்னாளில் சிவபிரானுக்குள்ளதைப் போல் ஐந்து தலைகள் இருந்தன. ஆணவங் கொண்டு இறுமாந்தபொழுது ஒரு தலையை இழந்தபடியால் பிறகு நான் முகன் ஆனான். முண்டகம் - தாமரை; தாமரையிலிருப்பவன் முண்டகன்.

## பிரமன் தலையிழந்த கதை

ஒருகாலத்தில் சனகர் முதலிய முனிவர்கள் நான்முகனிடஞ் சென்று, "உலகத்திற்குத் தலைவர் யாவர்?" என்று உசாவினர்.

ஆணவங் கொண்ட பிரமன், "நானே உலகத்திற்குத்

தலைவன்'' என்று செருக்கோடு கூறித் தருக்கினான். இதனை யுணர்ந்த திருமால் பிரமனுக்குமுன் தோன்றி, "உலகத்திற்கு நானே தலைவன்'' என்றார். அவர்களிருவருக்கும் போர் மூண்டது. இவர்களுடைய செய்கையை உணர்ந்த சிவபெருமான் இவர்கட்கு முன்னே தோன்றினார். பிரமன் சிவபிரானைப் போற்றி வழிபடாமல் ஆணவங் கொண்டு பலவாறு இகழ்ந்





தான். அப்பொழுது வைரவக் கடவுள் தோன்றிப் பிரமனுடைய ஐந்து தலைகளுள் ஒன்றைத் தம்முடைய நகத்தாற் கிள்ளி யெறிந்தார். அந்நாள் முதல் பிரமன் நான்முகனானான்.

### செய்ந்நன்றியறிதல்

11. மெய்த்தரும தெய்வநன்றி வீட்டிமதி
மம்மருற்றான்
முத்தவற்ச நாபன் முருகேசா—இத்தரையில்
எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா
முய்வில்லை. செய்ந்நன்றி கொன்ற மகற்கு.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, மெய்த் தரும தெய்வம் நன்றி - மெய்ம்மைத்*

தன்மை பொருந்திய அறக் கடவுள் செய்த நன்றியை, வீட்டி - அழித்து, முத்த வற்சநாபன் - வீடுபேறு நெறியை நாடிநின்ற வசற்நாபர் என்னும் முனிவர், மதிமம்மர் உற்றார் - அறிவு மயக்கத்தை யடைந்தவரானார். இத்தரையில் - இந்நில வுலகில், எந்நன்றி கொன்றார்க்கும் உய்வு உண்டாம் - எத் தகைய நன்மையை அழித்தவர்கட்கும் வாழ்தல் உளதாம், செய்ந்நன்றி கொன்ற மகற்கு உயவு இல்லை - பிறர்செய்த நன்மையை மறந்தவர்கட்குச் சிறப்புறுதல் இல்லையாகும்.

(வி - ம்.) வற்சநாபமுனிவர் அறக்கடவுள் செய்த நன்மையை மறந்து அறிவு மயக்கத்தை யடைந்தார். எந்த நன்மையை மறந்தவர்கட்கும் உய்வுண்டு. பிறர் செய்த நன்மையை மறந்தவர்கட்கு உய்வில்லை என்பதாம், தரும தெய்வம், - அறக் கடவுள். வீட்டுதல் - அழித்தல். முத்தவற்சநாபன் - நல்வினைகளில் முதிர்ச்சி பெற்று நின்ற வற்சநாப முனிவர்.

### வற்சநாப முனிவர் கதை

வற்சநாப முனிவர் என்பவர் தம்முடல் புற்றினால் மூடுமாறு நெடுநாள் தவஞ் செய்து கொண்டிருந்தார். இவருடைய தவ நிலையை இந்திரன் ஆராய்ந்து பார்க்க எண்ணினான். முகில்களைக் அறத்துப் பால்

கொண்டு பெருமழை பொழியச் செய்து புற்றழியச் செய்தான். அந்நாளில் அறக்கடவுள் எருமைக் கடாவுருவொடு வந்து புற்றைத் தன்னுடலால் மறைத்து முனிவருக்கு எத்தகைய இடையூறும் வராமற் செய்தது. முனிவர் தவநிலை நீங்கிப் பார்த்தார். காத்து நின்ற கடாவை அறக்கடவுள் என்றுணர்ந்து கொள்ளவில்லை. பொதுவான கடாவே என்று எண்ணி அதற்கு நீண்ட வாழ்வுண்டாகுமாறு வாழ்த்துரை வழங்கி மீண்டும் தவநிலையில் அமர்ந்தார். அறக்கடவுளைப் போற்றி வழிபடாது நன்றி மறந்த தன்மையினால் முனிவருடைய உள்ளம் ஒருமை நிலைமையை அடையவில்லை. பிறகு உண்மையை உணர்ந்து கொண்ட முனிவர் இதற்குக் கழுவாய் உயிர்விடுதலே என்று முடிவு செய்து மலைமுடியிலேறி உயிர்விடத் தொடங்கினார். உடனே அறக்கடவுள் வெளிப்பட்டு, "விநைக உயிரை விடாதே சேதுவிலே சங்கத் தீர்த்தம் என்னும் புனித நீரிலே நீராடினால் இத்தீவினை நீங்குமென்று இயம்பியது. முனிவர் அவ்வாறே மூழ்கித் தூய்மை பெற்றார்.

நடுவுநிலைமை

12. நீதியிற்பாஞ் சாலிகடா விற்குவிடை
நேர்விகன்னன் மூதவையிற் சொற்றான்
முருகேசா—காதலினால் சொற்கோட்ட மில்லது
செப்ப மொருதலையா வுட்கோட்ட மின்மை பெறின்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, நீதியில் பாஞ்சாலி கடாவிறகு - நேர்மையோடு பாஞ்சாலியானவள் கேட்ட கேள்விக்கு, விடை - மறுமொழியை, நேர்விகர்னன்- நேர்மை பொருந்திய விகர்னன் என்பவன், மூதவையில் சொற்ருன் - முதுமை தங்கிய பெரியோர்கள் கூடியிருந்த அவையிலே கூறினன். காதலினல் - ஒருவரிடத்திலே கொண்ட அன்பினல், ஒருதலையா உள்கோட்டம் இன்மை பெறின் - உறுதியாக உள்ளத்தில் மாறுபட்டுப் பேசாத தன்மையைப் பெற்றிருந்தால், சொல் கோட்டம் இல்லது 20 முருகேசர்

முதுநெறி வெண்பா

செப்பம் - சொல்லுகிற சொல்லும் கோணுது செம்மையாக அமையும்.

(வி - ம்.) பெரியோர்கள் கூடியிருந்த பேரவையில் பாஞ் சாலி கேட்ட கேள்விக்கு விகர்னன் தகுந்தவாறு மறுமொழி கூறினன், ஒருவர் நேர்மையான உள்ளம் படைத்தவர்களாக இருப்பார்களானுல் அவர்கள் கூறுஞ் சொல்லும் செம்மையான தாக அமைந்திருக்கு மென்பதாம். கடா - வினு. மூதவை - முதுமை தங்கிய பெரியவர்களாகிய வீடுமர், திருதராட்டிரன் துரோணர் முதலிய பெரியவர்கள் கூடியிருந்த அவை.

சொற் றுன் - சொன்னுன் என்பது வலித்தல் விகாரம் பெற்றது.

## விகர்ணன் கதை

துரியோதனன் பாண்டவர் களைத் தன்னுடைய அவைக்கு வரவழைத்து வஞ்சகமாகச் சூதாடி, நாடு நகரம் முதலியவை களைப் பற்றிக்கொண்டு பல தீமைகளைச் செய்தான். திரௌபதி யையும் அவைக்குக் கொண்டு வரச் செய்தான். அரசர்கள் கூடி யிருந்த அவைக்கு வந்த திரௌபதி அங்குக் கூடியிருந்த பெரியோர்களைப் பார்த்துச் சில கேள்விகளைக் கேட்டாள், அப் பெரியோர்கள் அரவக் கொடியோனுகிய துரியோதனனுக்கு அஞ்சி யாதும் மறுமொழி கூருது ஊமைபோலிருந்தார்கள். துரியோதனனுக்குத் தம்பியாகிய விகர்ணன் துரியோதனனுக்குச் சிறிதும் அஞ்சாது நேர்மையான மொழிகளை அவையிலே எடுத்துப் பேசினுன். அனைவரும் விகர்ணன் பேசியதைப் பாராட்டிப் புகழ்ந்து பேசினுர்கள்.

## அடக்கமுடைமை

13. ஓங்குதருக் கம்வாத வூரருழைச் செய்தபுத்தர்
மூங்கையராய்ச் சோர்ந்தார்
முருகேசா—வாங்கதனுல் யாகாவா ராயினு நாகாக்க
காவாக்காற் சோகாப்பர் சொல்லிழுக்குப்
பட்டு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, வாதவூரர் உழை - திருவாதவூரடிகளிடத்தே,

ஓங்கு தருக்கம் அறத்துப் பால் 21

செய்த புத்தர் - பொய்மை மிகுந்த சொற்போரைச் செய்த புத்தர்கள், மூங்கையராய்ச் சோர்ந்தார் - ஊமையர்களாகித் தளர்ச்சியை அடைந்தார்கள் : அதனால் - ஆகையால், யா காவாராயினும் - ஒருவர் காக்க வேண்டியவற்றுள் எதனைக் காக்காமற்போனாலும், நாகாக்க - நாவானது உண்மைக்கு மாறான சொற்களைப் பேசாமல் அதனைப் பாதுகாத்தல் வேண்டும், காவாக்கால் - அவ்வாறு காவாவிடின், சொல் இழுக்குப்பட்டு - சொற்குற்றத்தின் கண்ணே அகப்பட்டுக் கொண்டு, சோகாப்பர் - துன்பத்தை யடைவார்கள்.

(வி - ம்.) திருவாதவூரடிகளிடம் சொற்போரிட்ட புத்தர்கள் ஊமைகளாகித் துன்புற்றார்கள். ஒருவர் காக்க வேண்டியவற்றுள் எதனைக் காவாதொழியினும் நா ஒன்றினையேனும் பேச வேண்டிய வரம்பைக் கடந்து பேசாது காத்தல் வேண்டும் என்பதாம். ஓங்கு தருக்கம் - சொற்போர் முறையைக் கடந்து நெறியல்லாமற் செய்த சொற்போர்.

மூங்கை - ஊமை. சோகத் தால்-துன்புறுதல். ஆங்கு : அசைநிலை.

## புத்தர் கதை

திருவாதவூரடிகள் என்னும் மாணிக்கவாசகர் காலத்தில் ஈழ நாட்டில் புத்தர்கள் மிகுதியானார்கள். அவர்கள் எல்லா விடங்கட்குஞ் சென்று தங்களுடைய புத்தசமயத்தைப் பரப்ப எண்ணினார்கள். சிதம்பரம் என இந்நாளில் வழங்குந் திருத்தில்லையில் தங்களுடைய சமயத்தைப் பரப்ப வேண்டும் என்று எண்ணினார்கள். தங்கள் நாட்டு அரசனோடு புறப்பட்டுத் திருத்தில்லைக்கு வந்தார்கள். தில்லைவாழந்தணர்களைக் கண்டு, "சொற்போர் செய்யுங்கள் அல்லது புத்தர்களாகுங்கள்" என்று கூறினார்கள். தில்லைவாழந்தணர்கள் கூத்தப்பிரானுடைய குறிப்பின்படி மாணிக்கவாசகரைப் புத்தர்களோடு சொற்போர் செய்யச் செய்தார்கள். மாணிக்கவாசகர் ஈழநாட்டரசனுடைய ஊமைப் பெண்ணைக் கொண்டே புத்த குருக்களின் கேள்விகட் கெல்லாம் மறுமொழி கூறச் செய்தார். ஆயினும் புத்தர்கட்கு நல்லறிவு உண்டாகவில்லை. அவர்கள் நெறி கடந்து குதர்க்க



வாதத்தில் (நேர்மையற்ற சொற்போரில்) இறங்கினார்கள். மாணிககவாசகர் அவர்களனை வரும் ஊமைகளாகும்படி செய்தார். இதனால் புத்தர்கள்

மிகுந்த துன்பத்தை யடைந்து வருந்திஞர்கள்.

14 வேதநெறி பேணுத் துராசாரன் மிக்கயர்ந்தான்
மோதலகை பற்ற முருகேசா—தீதில்
ஒழுக்கத்தி ஞெல்கார் ருரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே! 'வேத நெறி பேணுத்' துராசாரன்-மறையொழுக்க நெறிகளைப் போற்ருதவஞகிய துராசாரன் என்னும் பெயரினையுடைய அந்தணன், மோது அலகை பற்ற மிக்கு அயர்ந்தான் - வருத்துதலைச் செய்கிற பேயானது பிடிக்க மிகுந்த தளர்ச்சியை அடைந்தான்; தீது இல் - குற்றமற்ற, உரவோர் - அறிவாளர்கள், இழுக்கத்தின் - நல்லொழுக்கநெறியில் தவறுதலால், ஏதம் படுபாக்கு அறிந்து - குற்றமுண்டாதலை உணர்ந்து, ஒழுக்கத்தின் ஒல்கார் - நல்லொழுக்கத்திலே சிறிதுங் குறைவு படமாட்டார்கள்.

(வி - ம்.) துராசாரன் என்பவன் மறைநெறிப்படி ஒழுகாத படியிஞல் பேயிஞல் பிடிக்கப்பட்டு வருந்திஞன். குற்றமற்ற அறிவுடையோர் நல்லொழுக்க நெறியில் தவறுதலால் குற்ற முண்டாதலை யுணர்ந்து நல்லொழுக்கத்தில் சிறிதுந் தவறமாட் டார்கள் என்பதாம். மோது அலகை - தாக்குதலைச் செய்கின்ற பேய். படுபாக்கு - உண்டாதல்; பாக்கு - தொழிற்பெயர்

விகுதி.

## துராசாரன் கதை

கௌதமி யாற்றுக் கரையில் ஓர் அந்தணன் இருந்தான். இவன் நல்லொழுக்கத்தைவிட்டுத் தீயொழுக்கத்தை மேற்கொண்டபடியினால் துராசாரன் என்னும் பெயரையடைந்தான். இவன் எல்லாவகையான தீவினைகளையுஞ் செய்துகொண்டு



திரிந்தபடியினால் இவனைப் பேய்பற்றி வருத்தத் தொடங்கியது. அதனால் இவன் மிகுந்த வருத்தமடைந்து தளர்ந்தான். அந்தணனாகப் பிறந்தும் இவன் மறையோர்க்குரிய ஒழுக்கத்தைப் பாதுகாவாது இவ்வாறு துன்புறலானனே என்று பலரும் வருந்தினர். பிறகு இவன் சேதுவுக்குச் சென்று புனித நீராடித் தனக்கு நேர்ந்த அல்லலைப் போக்கிக் கொண்டான்.

## பிறனில் விழையாமை

15. பார்க்கவனார் பன்னியத்தம் பற்றியலி யாயினன்முன்
மூர்க்கனுந் தண்டன் முருகேசா—வேர்க்கும்
பகைபாவ மச்சம் பழியென நான்கு
மிகவாவா மில்லிறப்பான் கண்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, முன்-முன்னாளிலே, மூர்க்கனும தண்டன்-மூர்க்கத் தன்மையுடையவனாகிய தண்டன்

என்னும அரசன், பார்க்கவனார் பன்னி அத்தம்பற்றி-பார்க்கவமுனிவருடைய மனைவியின் கையைப் பற்றியிழுத்து, அலி ஆயினன் - ஆணும் பெண்ணுமல்லாத தன்மையை அடைந்தான்: வேர்க்கும் - வருத்தத்தையுண் டாக்குகிற, பகை பாவம் அச்சம் பழி என நான்கும் - பகை பாவம் அச்சம் பழி என்று சொல்லப் பெறுகிற நான்கும் இல் இறப்பான்கண் - பிறன் மனைவியிடத்திலே நெறி கடந்து நடப்பவனிடத்தில், இகவாவாம் - அவனை விட்டு நீங்கமாட்டாவாம்.

(வி - ம்.) முன்னாளில் தண்டன் என்னும் அரசன் பார்க்கவ முனிவருடைய மனைவி கையைப் பிடித்து இழுத்து அம்முனிவ ருடைய தீமொழியினாலே ஆணும் பெண்ணு மல்லாத அலித் தன்மையினை அடைந்தனன்: பகை பாவம் அச்சம் பழி என்னும் நான்கும் பிறன் மனைவியிடத்திலே தீமை புரிவோனை விட்டு நீங்காமாட்டா என்பதாம். பன்னி - மனைவி. அத்தம் - கை. இறத்தல் - நெறிகடந்து நடத்தல்.



## தண்டன் கதை

முன்னாளிலே தொண்டை நாட்டைத் தண்டன் என்னும் அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான், அவன் வேட்டை யாடுதற்கு ஒருநாள் காட்டிற்குச் சென்றான். நீர்வேட்கையால் மெலிந்து பார்க்கவ முனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றான்.

முனிவருடைய மனைவி அரசனுடைய நீர் வேட்கையை யுணர்ந்து தண்ணீர் கொடுத்து அவனுடைய துன்பத்தைப் போக்கினாள். தண்டன் அவளுடைய அழகைப் பார்த்துக் காமவேட்கை கொண்டான். அவளுடைய கையை வலிந்து பற்றினான். இச் செய்தியை உணர்ந்த பார்க்கவ முனிவர் தண்டன் அலியாகுமாறு தீமொழி புகன்றார். அதனால் தண்டன் ஆணும் பெண்ணுமல்லாத அலித் தன்மையை அடைந்து மிகுந்த வருத்தத்திற் குள்ளானான். தண்டனிடத்தில் பகை பாவம் அச்சம் பழி என்னும் நான்கும் என்றும் நீங்காதனவாய் நிலைபெறலாயின.

## பொறையுடைமை

16. மன்னவனாற் றன்னையொறுப் பித்தருவாவசு தன் முன்னவனைக் காத்தான் முருகேசா—வுன்னும் நிறையுடைமை நீங்காமை வேண்டிற்

பொறையுடைமை

போற்றி யொழுகப் படும்.

(இ - ள்.)

முருகேசா-முருகப்பெருமானே!, அருவாவசு அருவாவசு என்பவன், மன்னவனால் தன்னை ஒறுப்பித்து- அரசனால் தனக்கு ஒறுத்தலை உண்டாக்கிக்கொண்டு, தன் முன்னவனைக்

காத்தான் - தன்னுடைய தமையனைத் துன்பத் திலிருந்து விடுபடச்செய்தான்; உன்னும் - எண்ணுகின்ற, நிறைஉடைமை - நிறை உடையவனாக இருக்குந் தன்மை, நீங்காமை வேண்டின் - தன்னைவிட்டு நீங்காமலிருத்தலை விரும்பினால், பொறை உடைமை - பொறுமையை, போற்றி ஒழுகபபடும் - பாதுகாத்து நடக்க வேண்டும்.



(வி - ம்.) அருவாவசு என்பவன் அரசனால் தனக்கு ஒறுத்தலை உண்டாக்கிக் கொண்டு தன்னுடைய தமையனைப் பாதுகாத்தான்; ஒருவன் நிறைந்த நன்மையுடையவனாக இருத்தலை விரும்பினால் பொறுமையை மேற்கொண்டு நடக்கவேண்டும் என்பதாம்.

## அருவாவசு கதை

பிருகத்துய்மன் என்னும் அரசன் இரயிப்பிய முனிவருடைய மக்களாகிய பராவசு அருவாவசு என்னும் இருவரைக் கொண்டு வேள்வி யொன்றைச் செய்தான். அவர்கள் இருவரும் அவ் வேள்வியை முறைப்படி செய்து கொண்டிருந்தார்கள். ஒருநாள் மாலையில் மூத்தவனாகிய பராவசு என்பவன் தன் தந்தையி னுடைய

இருப்பிடத்திற்குச் சென்றான். அப்பொழுது இரயிப் பிய முனிவராகிய தந்தை குளிரின் பொருட்டுப் புலித்தோலைப் போர்த்துக் கொண்டு ஒரு மூலையிலிருந்தார். புலி வந்து பதுங்கி யிருக்கிறதென்று மாறுபட எண்ணித் தடியை ஓங்கித் தலைமே லடித்தான். அவ் வடிக்கு ஆற்றாத முனிவர் விழுந்து மாண்டார். பராவசு மாண்டது தன்னுடைய தந்தை யென்று உணர்ந்தான். செய்யவேண்டிய இறுதிக் கடன்களைச் செய்து முடித்தான். பிறகு தன்னுடைய தம்பியிடஞ் சென்று நிகழ்ந்ததைக் கூறினான். தந்தையைக் கொன்றதற்குக் கழுவாய் செய்தல் வேண்டும்; ஒப்புக்கொண்டிருக்கிறபடியால் அரசனுடைய வேள்வியையும் முடித்தல்வேண்டும்; என்னுடைய பழியை ஏற்றுக் கொண்டு கழுவாய் தேடினால் யான்மட்டும் தனியே வேள்வியைச் செய்துமுடித்து விடுகிறேன் என்று சொன்னான். அருவாவசு தன் தமையன் கூறியதற்கு உடன்பட்டான். கழுவாயின் பொருட்டுக் காட்டிற்குச் சென்று பன்னிராண்டுகள் தவஞ் செய்து பின்னர் வேள்விச்சாலையை அடைந்தான். பராவசு தன் தம்பியாகிய அருவாவசுவை வஞ்சிக்க எண்ணினான். அரசனைப் பார்த்துத், "தந்தையைக் கொன்ற இவன் இங்கிருந்தால் வேள்வி பலிக்காது" என்று சொன்னான். அரசன் கொலைபுரிந்தவன் எவன் என்று தெளியாமல் அருவாவசுவை நீக்கினான். அருவாவசு வேறு காட்டை யடைந்து கதிரவனை வழிபட்டுத் தந்தையுயிர் பெற்றெழச் செய்தான்.

நீராடச் செய்து தூய்மைப்படுத்தி உடன் வாழ்ந்தான். அருவா வசு பழியேற்ற தன்மை தமையன் செய்த குற்றத்தைப் பொறுத்தமை முதலியவற்றைப் பலரும் பெரிதும் பாராட்டினார்கள்.

## அழுக்காறுமை

17. ஆர்த்தபொரு மைச்சிசுபா லன்கண்ண
ணாழியினன் மூர்த்தமறப் புண்டான்
முருகேசா—கூர்த்த அழுக்காற்றி னல்லவை செய்யா
ரிழுக்காற்றி னேதம் படுபாக் கறிந்து.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, ஆர்த்த பொருமை சிசுபாலன் - பேராரவாரஞ் செய்த பொருமை யினையுடைய சிசுபாலன், கண்ணன் ஆழியினல்-கண்ணபிரா னுடைய உருளைப்படையினாலே; மூர்த்தம் அறப்புண்டான்- தலையறுபட்டு மாண்டான்; கூர்த்த-நுட்பமாகப் பொருந்திய, அழுக்காற்றில்-பொருமையினால், ஏதம் படுபாக்கு அறிந்து- குற்றம் உண்டாதலை உணர்ந்து, இழுக்காற்றில்-தீநெறிக்கட் சென்று, அல்லவை செய்யார்-அறமல்லா தவைகளைச் செய்ய மாட்டார்கள்.

(வி - ம்.) பொறாமையினால் சிசுபாலன் தலையறுப்புண்டு மாண்டானாகையால் பொறாமை காரணமாக எவரும் அறமல்லாத காரியங்களைச் செய்யார் என்பதாம். மூர்த்தம் - உறுப்பு, தலை. அழுக்காறு - பிறருடைய மேன்மையைக் கண்டு உள்ளம் புழுங்குதல். இதனில் எழுவாய் மறைந்து நின்றது.

## சிசுபாலன் கதை

தருமர் குதிரை வேள்வியை (அசுவமேத யாகத்தை) மிகுந்த சிறப்போடு செய்து முடித்தார், வேள்வியின் இறுதியில் முதல் வழிபாடு யாருக்குச் செய்வதென்னும் ஐயம் தருமருக்குண்டாகியது. அங்கிருந்தபெரியோர்களை அதுகுறித்து உசாவினார்.



பிரானே முதல் வழிப்பாட்டிற்குரியவர் என்று வியாச முனிவர் விளம்பினார். தருமர் கண்ணபிரானுக்கு முதல்வழிபாடு செய்யத் தொடங்கினார். இதனைக் கண்ட சிசுபாலன் கண்ணபிரானிடத் திற் பொறாமை கொண்டான். கண்ணபிரான்மீது பல குற்றங் களைக் கூறிப் பலவாறு இகழ்ந்தான். இதனைக் கண்டு கண்ண பிரான் மிகுந்த சினங்கொண்டார். தம்முடைய ஆழிப்படை யைச் சிசு பாலன் மீது செ லுத்தினார். அவ்வாழிப்படை சிசுபால னுடைய தலையை அறுத்து அவனைக் கொன்றது.

## வெஃகாமை

**18.** மாண்டுநக ரோடளறு வாய்ந்தான்
பராந்தகக்கோன் மூண்டரன்பூ வெஃகி
முருகேசா—வேண்டும் நடுவின்றி நன்பொருள்
வெஃகிற் குடிபொன்றிக் குற்றமு மாங்கே தரும்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, பராந்தகக் கோன் - பராந்தகன் என்னுஞ் சோழமன் னன், அரன் பூ மூண்டு வெஃகி - சிவபெருமானுக்குரிய செவ்வந்திமலர் களை மிகுதியாக விரும்பி, அதனால்; நகரோடு மாண்டு அளறு வாய்ந்தான் - நகரிலுள்ளவர்களோடு இறந்து நிரயத்தை யடைந்தான்;* *வேண்டும்-விரும்பப்படுவதாகிய, நடுவுஇன்றி- நடுவுநிலைமை இல்லாமல், நன்பொருள் வெஃகில் - பிறருக் குரிய நல்ல பொருளை விரும்பினால், குடிபொன்றி-குடியானது கெட்டு, குற்றமும ஆங்கே தரும் - குற்றத்தையும அப் பொழுதே கொடுக்கும்.*

(வி - ம்.) *சிவபிரானுக்குரிய மலரை விரும் பியபடி யினால் பராந்த கச் சோழன் தன்னுடைய நகரத்தார்களோடு மாண்டு நிரயத்தை யடைந்தான். நடுவு நிலைமையில்லாமல் பிறருக் குரிய பொருளை விரும்பினால் விரும்பியோ ருடை ய குடிகெடுவதல்லாது அப்பொழுதே குற்றமும் உண்டாகும் என்பதாம்.*

வெஃகுதல் - விரும்புதல்.



## பராந்தகச் சோழன் கதை

சாரமா முனிவர் என்பவர் சிவபிரானைத் திரிசிரமலையிலே போற்றி வழிபட்டுக் கொண்டிருந்தார். ஒரு காலத்தில் பாதலத்தில் இருந்து நாககன்னிகைகள் செவ்வந்தி மலரைக் கொண்டு வந்து அம்மலரால் இறைவனை வழிபட்டார்கள். அம்மலரின் நறுமணம் முதலிய சிறப்புணர்ந்த முனிவர் தாமும் அப்பெண்களோடு பாதலஞ் சென்று செவ்வந்திச் செடியை வாங்கிவந்து பயிரிட்டு அதன் மலரைக் கொண்டு இறைவனைப் பூசித்து வழிபட்டார். அக்காலத்தில் உறையூரில் அரசு புரிந்திருந்த சோழன் செவ்வந்தி மலர்களின் சிறப்பை யுணர்ந்து அவைகளைக் களவு செய்துகொண்டுவரச் செய்து தான் அணிந்து மகிழ்ந்தான். இதனை யுணர்ந்த சாரமாமுனிவர் மண்மாரி பெய்து உறையூர் அழியுமாறு செய்தார். நகரழிந்தொழிந்ததும் அரசனும் இறந்து தொலைந்து இறைவனுக்குரிய மலரை விரும்பிய தீவினையால் நிரயத்தை யடைந்தான்.

## புறங்கூறுமை

19. துஞ்சுமனத் தோடுவனைஞ் சூரன்முத
லோர்த்தூற்றி முஞ்சலுற்ற தந்தோ

முருகேசா—விஞ்சலுறக் கண்ணின்று கண்ணறச்
சொல்லினுஞ் சொல்லற்க முன்னின்று
பின்னோக்காச் சொல்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, துஞ்சுமனத் தோடு - தளர்ந்த உள்ளத்துடனே, உவணம் - கருடன், சூரன்முதலோர்த் தூற்றி-சூரன் முதலியவர்களை இகழ்ந்து, அந்தோ-வீணே, முஞ்சலுற்றது - மாண்டொழிந்தது, விஞ்சல் உற - மிகுதியாக, கண்ணின்று - கண்ணுக் கெதிரே நின்று, கண் அறச் சொல்லினும் - அருள் இல்லாமற் பேசினாலும், முன் இன்று - முன்னேயில்லாமல், பின் நோக் காச் சொல் - பின்னுண்டாகும பயனைப் பாராத சொற்களை சொல்லற்க - சொல்லாதொழிக.



(வி - ம்.) கருடன் சூரன் முதலியவர்களை இகழ்ந்து வீணே மாண்டொழிந்தது; அருளில்லாத சொற்களைச் சொன்னாலும், பின் தீமையுண்டாகக் கூடிய சொற்களைக் கானாவிடத்தே கூறுதொழிக என்பதாம். துஞ்சுமனம் - தளர்ந்த மனம். முஞ்சல் - இறத்தல்.

## கருடன் கதை

சாகரத் திவின் அரசனாகிய பிரபாகரனுடைய மக்கள் நால்வருள் சூரன் பதுமன் என்னும் இருவரும் அகத்திய முனிவரால்
முருகக் கடவுளுடைய ஊர்தியுங் கொடியுமாகிய மயில் சேவல் களின்பெருமைகளையும்; சிங்கன் தாரகன் என்னும் இருவரும் திரணவிந்து முனிவரால் வீரமாகாளி, ஐயனார் இவர்களுடைய ஊர்திகளாகிய அரிமா வெள்ளையானையென்பவைகளின் பெருமை களை உணர்ந்து அப்பதவிகளை அடைய விரும்பிச் சீசைலத்தில் தவம் புரிந்திருந்தனர். அதனை உணர்ந்த அன்னமும் கருடனும் திருக்கைலையிலே மயிலுஞ் சேவலும் சிங்கமும் வெள்ளையானையு மாகிய நான்கும் இருக்குமிடத்தை யடைந்து அவைகளைப் பார்த்து, "உங்களுடைய பதவியை அடைய விரும்பி நால்வர் தவஞ் செய்கின்றனர்" என்று தூண்டிவிட அவைகள் சினந்து சென்று அந் நால்வரையும் பூதகணங்களாகுமாறு வசவுரை வழங்கின. அந் நால்வரும் அவ்வாறே நெடுநாளிருந்து சமயம் வாய்த்த ஒருநாள் மயிலும் சேவலும் இருக்கும் திருக்கைலை மலைச் சாரலை யடைந்து அவைகளைப் பார்த்து, "உங்களை வணங்காது இக் கருடனும் அன்னமும் இறுமாந்திருத்தலைப் பார்த்திர்களோ" என்று தூண்டிவிட அவ்விரண்டுஞ் சினந்தெழுந்து தாக்குதலால் அக்கருடனும் அன்னமும் அடிபட்டு இறந்தன.

20. கற்றும் பயனிலசொல் கன்னனுரைத்
தெஞ்ஞான்று
முற்றுபழி பூண்டான் முருகேசா—வுற்றுணரிற்
பல்லார் முனியப் பயனில சொல்லுவான்
எல்லாரு மெள்ளப் படும்.



(இ - ள்) *முருகேசா -முருகப்பெருமானே !,* கன்னன்கன்னனுவன், *கற்றும் - பலநுல்களைக் கற்றுணர்ந்திருந்தும் பயன் இல சொல் உரைத்து - பயனில்லாத சொற்களை ப் பேசி,* எஞ்ஞான்றும்-*எப்பொழுதும், முற்றுபழி பூண்டானநிறைந்த பழியையே மேற்கொண்டவனுனன்; உற்று உணரில் - ஆராய்ந்து பார்த்தால்,* பல்லார் *முனிய-பலருஞ் சினங்கொள்ளுமாறு, பயன் இல சொல்லுவான் - பயனற்ற சொற்களைப் பேசுகிறவன்,* எல்லாரும் *எள்ளப்படும்எல்லோரானும இகழ்ந்து பேசப்பெறுவான்.*

(வி - ம்.) *கன்னன் பல நூல்களை*

ஓதியுணர்ந்தவனாக இருந் தும் பயனற்ற சொற்களை எப்பொழுதும் பேசிக் கொண்டிருந்த படியினாலே நிறைந்த பழியையே மேற்கொண்டவனானான்; எல்லாருஞ் சினமடையுமாறு பயனில்லாத சொற்களைப் பேசிக் கொண்டிருப்பவன் எல்லோராலும் இகழப் பெறுவான் என்பதாம். முற்றுபழி - நிறைந்து நின்ற பழி.

## கன்னன் கதை

கன்னன் நூல்களைக் கற்றுணர்ந்து அறிவுடையவனாகச் சிறந்து திகழ்ந்தான். தானமளிப்பதிலும் சிறந்த புகழ்பெற்ற வனாய்க் "கொடைக்குக் கன்னன்" என்று கூறுமாறு உயர்ந்து நின்றான். ஆயினும் துரியோதனனோடு கூடிக்கொண்டு பாண்டவர்கட்குத் தீமை புரியுமாறு பயனில்லாத சொற்களை அடிக்கடி கூறிக்கொண்டிருந்தான். நல்லவனாக விளங்கும் இவனிடத்தில் இப்புல்லிய குணமும் பொருந்தியிருக்கிறதே என்று எல்லோரும் உள்ளம் இரங்கினர். அவனுடைய கொடைப் புகழ் முதலிய வெல்லாம் பயனில கூறிய இழிந்த செய்கை யொன்றினாலேயே அழிந்தொழிந்தன.

**21.** பாவ மெனாதரன்செய் பற்றலின்வேந்
தோடயர்ந்தார் மூவர் மறையோர் முருகேசா—மேவ
எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை வீயாது
பின்சென் றடும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே,! மூவர் மறையோர்-மூன்று அந்தணர்கள், பாவம் எனாது-தீவினை யென்று எண்ணாமல், அரன் செய் பற்றலின் - சிவபிரானுக் குரிய நிலத்தைப் பற்றியபடியினால், வேந்தோடு அயர்ந்தார்- அரசனோடு மாண்டார்கள், மேவ - பொருந்த, எனைப்பகை உற்றாரும் உய்வர் - எவ்வளவு கொடியபகையை அடைந்தவர் களும உயிர்பிழைப்பர், ஆனால்; வினைப்பகை - தீவினையாகிய பகை, வீயாது-நீங்காமல், பின்சென்று அடும்-பின்னாலேயே போய் வருத்தும்.

(வி - ம்.) மூன்று மறையவர்கள் சிவபிரானுக்குரிய பொருளைக் கைப்பற்றுதல் தீவினையை உண்டாக்கும் என்று எண்ணாமல் அரசனோடு மாண்டொழிந்தார்கள்; எவ்வளவு கொடிய பகையை அடைந்தவர்களும் உயிர் பிழைப்பர். ஆனால் தீவினைப் பகையோ நீங்காமற் பின்னாகவே சென்று வருத்துதலைச் செய்யும் என்பதாம்.

மூவர் மறையோர் கதை

முன்னாளிலே சிங்கள நாட்டிலே பூச்சக்கர நகரத்திலே தன்மியன் என்னும் பெயருடைய ஓர் அந்தணன் இருந்தான். அவன் தன்னுடைய பாக நிலத்தையும் பொருளையும் அரிச்சரம் என்னுந் திருக் கோயிலுக்குத் தானஞ் செய்துவிட்டுத்தான் தவஞ் செய்யச் சென்றான். பிறகு அவனுடைய தந்தையாகிய சவிதா என்பவன் அந்நிலம் தனக்குரியதென்று வழக்கிட்டான். அரசனால் தன்னுடைய பக்கத்திற்கு ஏற்பத் தீர்ப்புப் பெறமுடியவில்லை. சிலநாட் சென்ற பிறகு வேறு அரசனிடத்திலும் அந்நிலத்தைப் 32



பற்றி வழக்கிட்டான். அவ்வரசனாலும் இவனுக்குத் தக்க தீர்ப் புக் கிடைக்கவில்லை. ஊரார்கள் சவிதாவையும் அவனுடைய மக்கள் இருவரையும் சிவத் துரோகிகளென்று இழித்துரைத்த தோடு நாட்டை விட்டுத் துரத்திவிட்டார்கள். சவிதா தன் னுடைய மக்களோடு மகத நாட்டிற்குபோய் அந் நாட்டரசனால் பாதுகாக்கப்பட்டிருந்தான். அவ்வரசனுடைய வேள்வி யாசா னாகிய விசாந்தகன் என்பவன் அரசனிடம், "இவர்கள் சிவத் துரோகிகள் இவர்களைக் காப்பாற்றினால் உனக்கும் சிவத் துரோகம் உண்டாகும். ஆகவே இவர்களை நீக்கிவிடுக" என்று கூறினான். அரசன் இதற்கு உடன்பட்டு அவர்களை நீக்கவில்லை. அதனால் அவ்வரசனும் சிவத் துரோகியானான். சிவத் துரோகி களாகிய நால்வருங்

கொலை செய்யப்பட்டு மாண்டொழிந்தனர்.

## ஒப்புரவறிதல்

22\. தோண்டருக்கேற் றந்தரும சீலரமு
துத்தோகுத்தார்
முண்டகன்மால் போற்றும்
முருகேசா—மிண்டும்
இடனில் பருவத்து மொப்புரவிற் கோல்கார்
கடனறி காட்சி யவர்.

(இ - ள்.) *முண்டகன் மால் போற்றும் முருகேசா - நான்முகனாலும் திருமாலாலும் போற்றப் பெறும் முருகப் பெருமானே!, தருமசீலர் - தருமசீலர் என்பவர், தொண் டருக்கு-தம்மை யடைந்த அடியார்க்கு, ஏற்றும்-இரந்தும, அமுது தொகுத்தார்-அமுதூட்டிப் போற்றினர், மிண்டும- மிகுதியாக வருத்தும், இடன் இல் பருவத்தும் - உணவிடு தலாகிய பணியைச் செய்வதற்குத் தகுதி யில்லாத காலத்திலும், கடன் அறி காட்சி அவர் - தாஞ்செய்ய வேண்டிய கடமையை உணர்ந்த அறிவையுடையவர்கள், ஒப்புரவிற்கு ஒல்கார்-உதவிசெய்வதற்குத் தளரமாட் டார்கள்.*

(வி - ம்.) தருமசீலர் என்பவர் தாம் வறுமை யடைந்த காலத்திலும் ஐயமேற்று உணவிடும் பணியைச் செய்தார். தாம் செய்ய வேண்டிய கடமையை உணர்ந்த பெரியோர்கள் செய்வதற்குத் தகுதியில்லாத காலத்திலுங் கூடப் பிறருக்கு உதவி செய்வதற்குத் தளரமாட்டார்கள் என்பதாம்.

## தருமசீலர் கதை

திருக்கூவம் என்னும் பதியிலே தருமசீலர் என்னும் பெயருடைய அந்தணர் ஒருவர் இருந்தார். அவர் நாள்தோறுஞ் சிவ பெருமானைப் போற்றி வழிபட்டுக் கொண்டிருந்ததோடு தம்மிடம் வந்த அடியவர்கட்கெல்லாம் உணவிடும் பணியையுஞ் செய்து கொண்டிருந்தார். ஒருகாலத்தில் மழையில்லாமல் வற்கடம் உண்டாகியது. தம்மிடமிருந்த செல்வங்களை யெல்லாஞ் செலவிட்டார். பிறகு தம்முடைய மனைவியின் தாலி முதலியவைகளையும் விற்றுத் தாம் மேற்கொண்டிருந்த பணியை நடத்தினார். பிறகு ஐயமேற்று நடத்தினார். ஒரு சமயத்தில் எட்டு நாள் பலியேற்றும் இடுவாரின்றி வாடினார். ஒருநாள் அடியவர் ஒருவர் பசித்தடைய, அவரை இல்லத்தில் இருத்தி விட்டு நகர் முழுவதுஞ் சென்று பலியேற்றார். அகப்பட்ட இரு நாழி நெல்லைக் கொண்டு சமைத்து உணவருத்தினார். வந்தவரை அனுப்பிவிட்டுத் தாம்

உண்ணச் சென்றார். அச் சமயத்தில் இறைவன் முதியவராக வந்து உணவு வேண்டினார். தருமசீலர் தம்முடைய பசியைப் பொருட்படுத்தாமல் அவரை வணங்கி எஞ்சியிருந்த உணவைப் படைத்தார். கடவுள் திருவுளம் மகிழ்ந்து காலும் ஒரு குடம் செந்நெல் அளித்தார். அதனால் எண்ணிறந்த அடியார்கட்கு அமுதளித்து எஞ்சியதை யுண்டு சிவனடி சேர்ந்தார்.

௨௩

23. பொன்னகர்க்கோ னேற்பத் ததீசி புறவெலும்பை
முன்னலின்றித் தந்தான் முருகேசா—மன்னி
இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்
குலனுடையான் கண்ணே யுள.





(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, பொன் நகர் கோன் ஏற்ப - பொன்னுலகத்திற்கிறைவனாகிய இந்திரன் இரந்து வேண்ட, ததீசி - ததீசிமுனிவர், புற எலும்பை - முதுகெலும்பை, முன்னல் இன்றி தந்தான் - சிறிதும் எண்ணிப் பாராமலே கொடுத்தார், மன்னி

- நிலைபெற்று, இலன் என்னும் எவ்வம் உரையாமை ஈதல்-நான் வறியவன் என்னுந்துன்பச்சொல்லை ஒருவன் கூறுவதற்கு முன்னரே கொடுத்தல், குலன் உடையான் கண்ணே உள - நல்ல குடி யிற் பிறந்தவனிடத்தில்தான் இருக்கிறது.

(வி -ம் .) இந்திரனவன் இரந்து வேண்டத் ததீசி முனிவர் தம்முடைய முதுகெலும்பைத் தமக்கு இறுதி யேற் படுதலையும் எண்ணிப் பாராமல் கொடுத்தார். தன்னுடைய வறுமை நிலையை இரப்போன் இயம்புதற்கு முன்னரே வழங்கு தல் நற்குடியில் பிறந்தவனிடத்தில்தான் உண்டு என்பதாம். மூன்னல் - எண்ணுதல்.

## ததீசி முனிவர் கதை

ததீசி என்பவர் புகழ்பெற்ற முனிவர்களில் ஒருவர். இவர் இறைவனை நோக்கித் தவஞ் செய்தலை மேற்கொண்டிருந்தார். இந்திரன் ஒரு காரணத்தை முன்னிட்டு விருத்திராசுரன் என்பவனோடு போர்புரியத் தொடங்கினான். இந்திரனுடைய வச்சிரப் படை பழையதாகையால் கெட்டுப்போயிற்று. புதிய வச்சிரப் படையை எவ்வாறு செய்யலாம் என்று திருமாலிடம் அறிவுரை கேட்டான். அம் மாயவன், "ததீசி முனிவனுடைய முதுகெலும் பைக் கொண்டு அப்படையைச் செய்துகொள். பல படைக்கலங் களின்

திரட்சியே முதுகுத் தண்டாக விளங்குகிற" தென்று சொன்னார். இந்திரன் ததீசி முனிவரிடஞ் சென்று உற்றதை யுரைத்து அவ்வெலும்பினை யிரந்தான். முனிவர் அவ்வெலும் பைக் கொடுப்பதால் தமக்கு இறுதியேற்படும் என்பதையும் எண்ணிப் பாராமல் அதனை அவனுக்கு வழங்கி வீடுபேற்றை யடைந்தார்.



புகழ்

24. எத்தனையோ வாசவர்கா

ளின்பமிந்திரத்

துய்ம்மனுற்றே

மொய்த்தபுகழ் பூண்டான்

முருகேசா—உய்த்துணரின்

ஒன்று வுலகத் துயர்ந்த புகழல்லாற்

பொன்றுது நிற்பதொன் றில்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, இந்திரத துய்ம்மன் - இந்திரத்துய்ம்மன் என்னும் அரசன், எத்தனையோ வாசவர்காள் - எண்ணிறந்த இந்திரர்காலம், இன்பம் உற்று-இன்பத்தை

யடைந்து, மொய்த்த புகழ் பூண்டான் - மிகுந்த புகழைப் பெற்றான், உய்த்து உணரின் - நன்றாக ஆராய்ந்து பார்க்குமிடத்தில், உலகத்து-இவ்வுலகத்திலே, உயர்ந்த புகழ் அல்லால் - சிறந்த புகழையல்லாமல், ஒன்றுஒருபொருளாக, பொன்றுது - அழியாது, நிற்பது - நிற்கக் கூடியது, ஒன்று இல் - வேறொன்றுமில்லை.

(வி . ம.) இந்திரத்துய்ம்மன் என்பவன் எண்ணிறந்த இந்திரர் காலம் வரையிலும் இன்பத்தையடைந்து மிகுந்த புகழைப்பூண்டான்; இவ்வுலகத்திலே உயர்ந்த புகழையல்லாமல் வேறு எதுவும் நிலைபெற்று நிற்கக்கூடியது அன்று என்பதாம். மொய்த்த புகழ் - மிகுந்த புகழ்.

இந்திரத்துய்ம்மன் கதை

இந்திரத்துய்ம்மன் என்னும் அரசன் பல அறங்களையுஞ் செய்து தேவருலகத்தை யடைந்தான். எண்ணிறந்த இந்திரர் காலம் இன்பம் நுகர்ந்து வாழ்ந்தான். தேவர்கள் இவனுடைய புகழை விளக்க விரும்பினார்கள். இவனைப் பார்த்து, "உன்னுடைய பெயர் நிலவுலகத்திலே நிலைபெறுமையால் அங்கே செல்வாயாக" என்று கூறினார்கள். அவன் மார்க்கண்டேய முனிவரை யடைந்து, "எனது காலமும் யானியற்றிய அறமுந் தோன்றாதபடியினால் தேவர்கள் என்னை நிலவுலகத்திற்குச் 36 முருகேசர்

செலுத்தினார்கள். என்னுடைய நிலையைத் தாங்கள் கூற வேண்டும்" என்று சொல்லி வேண்டிக் கொண்டான். அதற்கு அவர் "நீ எனக்கு முந்தியவனாகையால் நான் அறியேன்" என்றார். மேலும் அவனைப் பார்த்து, "எனக்கு மூத்ததாகிய ஒரு கூகை யிருக்கிறது, அதனைக் கேட்க வேண்டும்" என்றார். அரசன் அவ ரோடு அக்கூகையை அடைந்து :கேட்டான். அது, "எனக்கு மூத்ததாக ஒரு கொக்கு இருக்கிறது, அதனிடங் கேட்க வேண் டும்" என்றது. அரசன் அதனையும் அழைத்துக் கொண்டு கொக்கி னிடஞ் சென்றான். அது, "எனக்கு மூத்ததாக ஓர் ஆமையிருக்கி றது, அதனைக் கேட்டால் விளங்கும்" என்று கூறியது. கொக்கை யும் அழைத்துக்கொண்டு ஆமையிடஞ் சென்றான். அஃது அரச னியற்றிய அறம் முதலியவைகளை எல்லோரும் அறியும்படியாகக் கூறியது. தேவர்கள் உடனே விமானத்தோடு வந்து அரசனை விண்ணுலகிற் கழைத்தனர். அரசன் எல்லோரையும் அவ ரவரிடத்திற் சேர்த்து விட்டு விண்ணுலகஞ் சென்றான். [கூகை, கொக்கு, ஆமை முதலிய வடிவங்களைப் பெற்றிருந்தவர்கள் சிறந்த முனிவர்கள்.]

## அருளுடைமை

25. வாழ்கணங்க ளாக்கினன்ச தாநந்தன்

வன்னரகின்

மூழ்குகோடி யோரை முருகேசா—தாழ்கிலா
நல்லாற்று ணுடி யருளாள்க பல்லாற்றுற்
றேரினு மஃதே துணை.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, சதானந்தன்_ சதானந்தர் என்னும் முனிவர், வல்நரகில் மூழ்கு கொடி யோரை - கொடிய நிரயத்திலே அமிழ்ந்து கிடந்த பொல்லா தவர்களை, வாழ் கணங்கள் ஆக்கினன் - சிவலோகத்தில் வாழுகின்ற சிவகணங்களாகச் செய்தார், தாழ்கிலா-இகழ்ச்சி யில்லாத, நல் ஆற்றால் நாடி-நல்வழியை ஆராய்ந்து, அருள் ஆள்க - அருளைச் செலுத்துக, பல் ஆற்றால் தேரினும்-

அறத்துப் பால் 37

பலவழிகளால் ஆராய்ந்து பார்த்தாலும், அஃதே துணை- அந்த அருளே சிறந்த துணையாக உயிர்கட்கு விளங்கும்.

(வி - ம்.) சதானந்தமுனிவர் நிரயத்தில் கிடந்து வருந்திய உயிர்த்தொகைகளை யெல்லாம் சிவகணங்களாகச் செய்து திருக்கைலைக்கு அனுப்பினார். நல்ல நெறியை நாடி அருளை எல்லா

உயிர்களிடத்திலுஞ் செலுத்தவேண்டும். பலவழிகளில் ஆராய்ந்து பார்த்தாலும் அவ்வருளே உயிர்களுக்குச் சிறந்த துணையாக விளங்கு மென்பதாம்.

## சதாநந்தர் கதை

சதாநந்தர் என்பவர் பதரிகாச்சிரமத்திலிருந்த பூரணவித்து என்னும் முனிவருடைய புதல்வர். இவருடைய தாய்பெயர் பத்திரதத்தை. சில முனிவர்கள்கூடிப் புராணம் படித்தார்கள். அப்போது, உயிர்த்தொகைகள் நிரயத்தை யடைந்து வருந்துகிற செய்திகளை யெல்லாம் விளக்கமாகக் கூறினார்கள். இதனைக் கேட்ட சதாநந்தர் அவ்வுயிர்களிடத்திலே மிகுந்த இரக்கங் கொண்டார். தம்முடைய தவச்சிறப்பினால் ஒருவிமானத்திலேறி எமலோகத்திற்குச் சென்றார். எமன் முனிவரை வரவேற்றுப் போற்றினான். நிரயங்கட்கு அழைத்துக் கொண்டு போய்க் காட்டினான். நிரயத் துன்பத்தைப் பார்த்து உள்ளம் பதைத்தார். சிவபிரானுடைய திருப் பெயரைக் கூறி அவ்வுயிர்த்தொகைகளை யெல்லாம் விடுவித்தார். சிவகணங்களாக்கித் திருக் கைலைக்கு அனுப்பிவிட்டார். முனிவருடைய அருளுடைமை யைக் கண்டு அனைவரும் மனம் மகிழ்ந்தார்கள்.

## புலான்மறுத்தல்

26. காமுறுமுன் றுய்த்தலின்மா யிகனுமார்க்

கண்டனுன்

மோழலுருப் பெற்றான் முருகேசா—வீழும்
படைகொண்டார் நெஞ்சம்போ னன்றூக்கா
தோன்றன்
உடல்சுவை யுண்டார் மனம்.

38. முருகேசர் முதுநெறி வெண்பா

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, காழ்உறும்
ஊன் துய்த்தலின் - குற்றம் பொருந்திய ஊனை உண்டபடியினால், மாயிகன் - மாயிகன் என்பவனும், மார்க்கண்டனால்- மார்க்கண்டேய முனிவரால், மோழல் உரு பெற்றான் - பன்றியின் வடிவத்தை யடைந்தான்; வீழும் - விரும்பும், படைகொண்டார் நெஞ்சம் போன்று - கொலைசெய்யும் படைக்கலங்களைக் கைக்கொண்டவர்களுடைய மனத்தைப் போல், ஒன்றன் உடல் சுவை உண்டார் மனம்-ஓர் உயிரின் உடலைச் சுவையுண்டாகுமாறு செய்து சாப்பிட்டவர்களுடைய மனமானது, நன்று ஊக்காது - நல்வழியிலே சென்று அருளைச் செய்யமாட்டாது. மோழல் - பன்றி.

(வி - ம்.) குற்றம் பொருந்திய
ஊனையுண்டபடியினாலே மாயிகன் என்பவன்

மார்க்கண்டேய முனிவரால் பன்றியானுன். ஒன்றன் உடலைத் தின்றவர்களுடைய உள்ளமானது படைக்கலங் களைக் கையிலே கொண்டவர்களுடைய உள்ளத்தைப் போல அருள் வழியிலே செல்லமாட்டாது என்பதாம்.

## மாயிகன் கதை

மாயிகன் என்பவன் ஓர் அரக்கன். நினைத்த வடிவத்தை அப்பொழுதே எடுக்கத் தக்க ஆற்றலுடையவன். இவன் தான் பார்க்கும் விலங்குகளைப் போலவே வடிவமெடுத்துக் கொண்டு அவைகளை நெருங்கிக் கொன்று தின்று திரிந்தான். ஒருநாள் மார்க்கண்டேய முனிவருடைய இருப்பிடத்திலேயிருந்த ஒரு பெரிய பன்றியைக் கண்டான். கண்டதும் அதனைக் கொன்று தின்ன வேண்டுமென்று பழக்க வாசனையினுல் எண்ணினுன். அப்பன்றியைப் போலவே வடிவமெடுத்துக் கொண்டு அதன் பக்கத்திற் சென்ருன். அவனுடைய நோக்கத்தை யுணர்ந்த மார்க்கண்டேயர் அவன் பன்றியாகவே திரிந்துழலுமாறு வசவுரை வழங்கினுர். அரக்கன் பன்றியாகவே அலைந்து திரிந்தான்.



## தவம்

27. பற்றிலனாந் தன்புற் பதத்தஞேடா னந்தடை

முற்றவத்தாற் கண்டான் முருகேசா—வற்றமற
வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்
செய்தவம்
ஈண்டு முயலப் படும்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, பற்று இல் அனந்தன் - பற்றற்றவனாகிய ஆதிசேடன், புல்பதத்த னொடு - வியாக்கிரபாத முனிவரோடு, ஆனந்த நடம்- அம்பலவா ணனுடைய இன்பத்திருக்கூத்தை, முன்தவத் தால் கண்டான்-முன்னே செய்த தவத்தினாலே பார்த்தான்; அற்றம் அற-குறைவில்லாமல், வேண்டிய-வேண்டியவைகளை யெல்லாம், வேண்டியாங்கு எய்தலால் - விரும்பியபடியே அடை யச் செய்வதால், செய்தவம் - செய்யவேண்டிய தவத்தை, ஈண்டு முயலப்படும் - இப்பொழுதே செய்யத் தொடங்குதல் வேண்டும்.

(வி - ம்.) ஆதிசேடன் வியாக்கிரபாத முனிவனோடு அம்பலவாணனுடைய இன்பத் திருக்கூத்தை முற்றவத்தால் கண்டு மகிழ்ந்தான். வேண்டியவைகளை யெல்லாம் வேண்டியவாறே அடையச் செய்வித்தலால் செய்ய வேண்டிய தவத்தை இப் பொழுதே செய்யத் தொடங்க வேண்டுமென்பதாம். புல்-புலி; புல்பதத்தன்

• வியாக்கிரபாதன்.

## பதஞ்சலி முனிவர் கதை

சிவபெருமான் தேவதாரு வனத்தில் நாற்பத்தெண்ணாயிரம் முனிவர்கட்காக இன்பக் கூத்தாடியதைச் சிவயோகத்தினால் உணர்ந்தார். வியாக் கிரபாத முனிவர் அக் கூத்தைக் காட்டியருளுமாறு திருத்தில்லையிலே சிவபெருமானை வழிபட் டிருந்தார். அக் கூத்தை அறிதுயிலாலே கண்டு இன்புற்றெழுந்த திருமாலால் ஆதிசேடனும் உணர்ந்தான். அக் 40. முருகேசர் முதுநெறி வெண்பா

கூத்தைத் தானுங் காண விரும்பினான். கைலைமலைச் சாரலிலே கடுந்தவம் புரிந்தான். சிவபிரானருளியவாறே பதஞ்சலி முனிவர் என்னும் பெயரோடு திருத்தில்லையை அடைந்து சிவபெருமானை வழிபட்டிருந்தான். தைப்பூசமும் குருவாரமுங்கூடிய நன்னாளிலே முன் கூறியிருந்தபடியே அப் பெருமானுடைய திருக்கூத்தைக் காணப்பெற்று மகிழ்ந்தான். தவத்தினாலே எதனையும் பெறலா மென்பது பதஞ்சலி முனிவன் தவஞ் செய்து திருக்கூத்தைக் காணப்பெற்றபடியினாலே நன்குணரப்பட்டது.

## கூடாவொழுக்கம்

28. சந்நியா சம்புனைந்தே சானகியைத்

தான் கவர்ந்தான்

முன்னிலங்கை வேந்தன்

முருகேசா—துன்னும்

தவமறைந் தல்லவை செய்தல் புதன்மறைந்து

வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, முன்முனநாளிலே, இலங்கை வேந்தன்-இலங்கைக்கு அரசனாகிய இராவணன், சந்நியாசம் புனைந்தே - பொய்யான துறவுக் கோலத்தை மேற்கொண்டு, சானகியைக் கவர்ந்தான்சீதா பிராட்டியைப் பற்றிக் கொண்டு சென்றான், துன்னும்பொருந்தும், தவம் மறைந்து - தவக்கோலத்திலே ஒளிந்து நின்று, அல்லவை செய்தல் - பொல்லாத காரியங்களைப் புரிதல், புதல்மறைந்து - புதரிலே மறைந்து நின்று, வேட்டுவன்—வேடனானவன், புள்சிமிழ்த்தற்று-பறவைகளைப் பிடித்தலைப் போன்றதாம். தான் : அசை.*

(வி - ம்.) *இலங்கை வேந்தனாகிய இராவணன், துறவுக் கோலம் பூண்டு சீதாபிராட்டியைக் கவர்ந்து கொண்டு சென்றான்; ஒருவன் தவக் கோலத்திலே மறைந்து நின்றுகொண்டு அக்கோலத்திற்கு ஏலாத காரியங்களைச் செய்தல் வேடனானவன் புதரிலே*

மறைந்து கின்று பறவைகளைப் பிடிப்பது போன்றது என்பதாம்.

அறத்துப் பால். 41.

## இராவணன் கதை

இலங்கை வேந்தனாகிய இராவணன் சீதாபிராட்டியினுடைய அழகு முதலியவைகளை அறிந்தான். நேரே சென்று இராம பிரானை வென்று சீதையைக் கவர்ந்து கொள்ளக் கூடிய ஆற்றல் அவனுக்கில்லை. மாரீசனை மாயமானாகச் செய்து முன்னர் அனுப்பிவிட்டுத் தான் பிறகு இலட்சுமணனும் இல்லாத சமயத்திலே பொய்க் கோலத் துறவியாகச் சென்று சீதையைக் கவர்ந்து கொண்டு சென்றான். இராவணனுடைய இக்களவு வேலையைப் பிறகு பலரும் இகழ்ந்தனர்.

## கள்ளாமை

29. நாகவசுக் கள்வசிட்ட னற்சுரபி யைப்பற்ற
மோகமல்கிக் கெட்டார் முருகேசா—போகுங்
களவின்கட் கன்றிய காதல் விளைவின்கண் வீயா
விழுமந் தரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, நாக வசுக்கள் - தேவருலகிலுள்ள அட்டவசுக்கள் என்பார், நல் சுரபியைப் பற்றும் - வசிட்டருடைய

இருப்பிடத்திலிருந்த நல்ல காமதேனுவைக் கைப்பற்றிக் கொள்ளும், மோகம்- இச்சையானது, மல்கிக் கெட்டார்-மிகுதிப்பட்டபடியினாலே கெட்டொழிந்தார்கள், போகும் - செய்யும், களவின் கண் கன்றிய காதல் - களவினிடத்திலே மிகுந்த விருப்பத்தைக் கொள்ளுதல், விளைவின்கண் - அதன் பயனை நுகர நேருங்காலத்தில், வீயா விழுமம் தரும் - கெடாத துன்பத்தைக் கொடுப்பதாகும்.

(வி - ம்.) தேவர்களாகிய வசுக்கள் எண்மரும் வசிட்டருடைய காமதேனுவைக் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமென்னும் விருப்பம் மேலிட்டபடியினாலே கெட்டொழிந்தார்கள்; களவின் கண் மிகுந்த விருப்பத்தைக் கொள்ளுதல் அதன் பயனை.



நுகர வேண்டிய சமயத்தில் கெடாத துன்பத்தை அடைய வேண்டியதாக முடியுமென்பதாம்.

வசுக்கள் கதை

அனலன் முதலியோர் அட்டவசுக்கள் என்று ஒரே தொகை யாகக் குறிக்கப் பெறுவர். இவர்களில் ஒருவனுடைய மனைவி காமதேனுவை விரும்பித்

தன்னுடைய கணவனிடஞ் சென்ருள். அவன் தன்னுடைய அண்ணன்மார்களை யுந் துணைக் குச் சேர்த்துக் கொண்டு வசிட்டருடைய இருப்பிடத் திற்குப் போய் அங்கிருந்த காமதேனுவைக் களவு செய்து கொண்டு சென்ருன். இச்செய்தியை வசிட்டர் உணர் ந்தார் அவர்களனைவரும் மனிதர்களாகப் பிறக்குமா று தி மொழி புகன்ருர். அவர்கள் அவ்வாறே பிறந்து துன்பத்தையடைந் தார்கள். கள வின் பயன் பெருந்துன்பமாக முடிந்து விட்டது.

வாய்மை

30. மாழ்கித் தருமனெரு போய்யுரைத்தே வன் துயருண்

மூழ்கிமிகச் சோர்ந்தான்
முருகேசா—தாழ்கலின்றிப்

போய்யாமை போய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, தருமன்- பாண்டவர்களில் முதல்வராகிய தருமர், ஒரு பொய் உரைத்து - ஒரு பொய்யைக் கூறிவிட்டு, மாழ்கி - பிறகு வருத்தத்தை யடைந்து, வன் துயருள் மூழ்கிமிகச் சோர்ந் தான் - வலிய துன்பத்துள் அமிழ்ந்து மிகத்தளர்ச்சியை யடைந்தான், தாழ்கல் இன்றி - தாழ்த்துதல் இல்லாமல், பொய்யாமை பொய்யாமை ஆற்றின் -

பொய்யாமையாகிய அறத்தை உண்மையாகவே செய்தால், பிற அறம் - பிற அறங்களை, செய்யாமை செய்யாமை நன்று - செய்யா திருத்தலும் நன்மை யேயாம்.



(வி - கு.) தருமர் ஒரு பொய்யைக் கூறிவிட்டுப் பிறகு மனம் வருந்தி மிகுந்த துன்பத்தையடைந்து சோர்ந்தார். ஒருவன் பொய் புகலாமை யாகிய அறத்தை மேற் கொண்டொழுகுவானா யின் அவன் வேறு அறங்களைச் செய்யாதிருந்தாலுங்கூட அவனுக்கு நன்மையே உண்டாகுமென்பதாம்.

### தருமர் பொய்யுரைத்த கதை

பாரதப் போரில் துரோணரை வெற்றி கொள்வது மிகக் கடினமாக இருந்தது. அவர் மிகக் கொடுமையாகப் போர் புரிந்தார். அசுவத்தாமா இறந்து விட்டான் என்றால் துரோணர் தளர்ந்து விடுவார். அச்சமயத்தில் அவரைக் கொன்று விடலாமென்று கண்ணன் முதலியோர் முடிவு செய்தனர். ஒரு நாள் அசுவத்தாமா என்னும் யானையொன்று இறந்து போய் விட்டது. இச்சமயத்தில் கண்ணன் முதலியோர் தருமரிடம் வந்து அசுவத்தாமா (யானை) மாண்டு போன செய்தியைத் துரோணருடைய

காதிலே விழுமாறு கூறவேண்டுமென்று வற்புறுத்தினர். தருமனாகிய மெய்யன் இதனால் தீமையுண்டாகுமென்று முதலில் மறுத்தானாயினும் பிறகு கூறினான். அதனால் துரோணர் இறந்தார். போர் முடிந்து அரசுரிமை பெறத் தொடங்குஞ் சமயத்தில், "பொய் கூறிய தீவினையை அகற்றாமல் அரசாளுதற்குரியவனாக மாட்டாய்" என்று விண்ணொலி விளம்பியது. தருமன் மனங் கலங்கினான். வியாசர் விளம்பியவாறே சேதுவுக்குப் போய் நீராடி அத்தீவினையைப் போக்கிக் கொண்டான்.

## வெகுளாமை

31. சித்தரா மன்வெகுளி மூண்டிழந்தான்
றீக்கண்ணை முத்தனல்ல மன்பால்
முருகேசா—நித்தம் மறத்தல் வெகுளியை
யார்மாட்டும் தீய பிறத்த லதனான் வரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, முத்தன் அல்லமன் பால் - வீடுபேற்றிற்குரியவராகிய அல்லம தேவ



ரிடத்திலே, சித்த ராமன் வெகுளி மூண்டு -

சித்தராமன் என்பவர் மிகுந்த சினங் கொண்டு, தீக்கண்ணை இழந்தான்- தீக் கண்ணைப் போக்கடித்துக் கொண்டான்; நித்தம் நாள் தோறும், யார்மாட்டும் வெகுளியை மறத்தல் - எவரிடத்தி லும் சினத்தை மறந்து விடுதல் வேண்டும், இன்றேல்; தீய பிறத்தல் - தீமையானவைக ளுண்டாதல், அதனால் வரும் - அந்தச் சினத்தினலே உண்டாகும்.

(வி - ம்.) அல்லம தேவரிடத்திலே சித்தராமர் சின ங் கொண்டு அதனால் த ம்முடைய தீக் கண்ணை யிழந்தார். எவரிடத்திலும் சினங் கொள்ளாமல் சினத்தை மறந்து விடுதல் வேண்டும்; தீமையெல்லாம் உண்டாதல் அந்தச் சினத்தினல் தான் என்பதாம்.

சித்தராமர் கதை

சித்தராமர் என்பவர் சொன்னலாபுரம் என்னும் ஊரில் வாழ்ந்திருந்தார். குளம் வெட்டல் முதலிய அறங்களை அவர் செய்து கொண்டிருந்தார். சித்தராமரை அத்தொழில்களிலே யிருந்து விலக்கி வீடு பேற்று வழியிலே செலுத்த வேண்டு மென்று அல்லமதேவர் எண்ணினர். சித்தராமரிடஞ் சென்று அறிவுரைகள் பலவற்றைக் கூறினர். அல்லம தேவர் கூறிய உரைகளைக் கேட்டுச் சித்தராமர் மிகுந்த சினங் கொண்டார். தம்முடைய நெற்றிக் கண்ணால் அல்லம தேவரை எரித்துவிட எண்ணினர். அக்கண்ணைத் திறந்து அல்லமதேவரைப் பார்த்தார். அக்கண் அல்லம

தேவரை யாதுஞ் செய்ய முடியாமல் ஒளி மழுங்கிப் போய் விட்டது. இதனைக் கண்ட சித்தராமர் ஆணவம் அடங்கியவராய் அல்லம தேவருக்கு அடிமையாய் நல்லவரானார்.

இன்னாசெய்யாமை

32. தன்னைவதை முத்திநா தன்றனையு மெய்ப்பொருளார்

முன்னைநனி காத்தார் முருகேசா—மன்னுலகில்

இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண

நன்னயஞ் செய்து விடல்.

அறத்துப் பால் 45

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, மெய்ப் பொருளார்-மெய்ப் பொருள் நாயனார், தன்னை வதை முத்தி நாதன் தனையும் - தன்னைக் கொலைபுரியுமாறு வெட்டிய முத்திநாதன் என்பவனையும், முன்னை - முன்னாளிலே, நனி காத்தார் - நன்கு பாதுகாத்தார், மன்னுலகில் - நிலை பெற்ற வுலகத்தில், இன்னா செய்தாரை ஒறுத்தல் - தனக்குத் துன்பஞ் செய்தவர்களை வருத்துதல், அவர் நாண - அவர்கள் நாணத்தை யடையுமாறு, நன்னயம் செய்து விடல் -

அவர்கட்கு நன்மை செய்தலே யாம்.

(வி - ம்.) மெய்ப்பொருள் நாயனர் தம்மைக்கொலை செய்த முத்தி நாதன் என்பவனை ஏவலர்கள் கொன்று விடாமல் பாது காத்தார். தனக்குத் துன்பஞ் செய்தவர்களைத் தான் ஒறுத்தல் எவ்வாறெனின் அவர்கட்கு நன்மை செய்து அவர்கள் நாணுமாறு செய்தலே என்பதாம்.

## மெய்ப்பொருள் நாயனர் கதை

முன்னுளிலே மெய்ப் பொருள் நாயனர் என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கும் முத்திநாதன் என்பவனுக்கும் பகை மூண்டது. அவன் மெய்ப் பொருளுயனரைப் பன்முறை எதிர்த்துத் தோற்ருேடினன், பிறகு வஞ்சகமாகக் கொல்லத் துணிந்து சிவக்கோலம் பூண்டு வந்தான். அவருக்கு வழங்கப் போவதாகக் கூறித் தனியே யிருக்கச்

அருளுரை
செய்தான்.
நூற் சுவடியை அவிழ்ப்பான் போன்று மறைத்து வைத்திருந்த உடைவாளையெடுத்து மெய்ப்பொருள் நாயனரைக் குத்தினன். அவன் அவ்வாறு செய்தும் அவனுக்கு எத்தகைய தீங்கும்

அணுகாமல் வெளியே அனுப்பி வருமாறு தத்தன் என்பவனை அனுப்பினார். _அவன் வந்து கூறுமளவும் உயிர் தாங்கியிருந்து பின்னர் இறந்தார். தன்னைக் கொலை புரிந்தவனிடத்திலும் மெய்ப்பொருளார் காட்டிய அருள் எல்லோருக்கும் மிகுந்த வியப்பை யளிப்பதாயிற்று.



## கொல்லாமை

38. தத்திநடந் தெவ்வுயிரும் தாங்குதயை யாற்பரதர்

முத்தரின்மேம் பட்டார் முருகேசா—மெத்து
நிலையஞ்சி நீத்தாரு ளெல்லாங் கொலையஞ்சிக்
கொல்லாமை சூழ்வான் தலை.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே !, பரதர் பரதர் என்பவர், எவ்வுயிரும் தாங்கு தயையால்-எவ்வுயிரை யும் பாதுகாக்க வேண்டும் என்னும் அருளினால், தத்தி நடந்து - தாண்டித் தாண்டி நடந்து, முத்தரின் மேம் பட்டார் - முத்தர்களைப் பார்க்கினுஞ் சிறந்தவரானார்; மெத்து - மெதுவான, நிலை அஞ்சி - வாழ்க்கை நிலைக்கு அச்சமுற்று, நீத்தாருள் எல்லாம் - துறவை மேற்கொண்டவர்களி லெல்லாம், கொலை

அஞ்சி- பிறவுயிரைக் கொலை செய்தற்கு அஞ்சி, கொல்லாமை சூழ்வான் - கொல்லா நோன்பை மேற்கொண்டு நடப்பவன், தலை - தலை சிறந்தவனாவான்.

(வி - ம் .) பரதமுனிவர் என்பவர் பிற உயிர்களிடத்திலே கொண்ட அருளினால் தாண்டித் தாண்டி நடந்து, முத்தர்களினுஞ் சிறந்து விளங்கினார்; உலகநிலையாமைக்கு அஞ்சித் துறவை மேற்கொண்டவர்களெல்லாரினும் கொலைத்தன்மைக்கு அஞ்சிக் கொல்லாமையை மேற்கொண்டொழுகுபவர்களே சிறந்தவர்கள் என்பதாம்.

## பரத முனிவர் கதை

பரதமுனிவர் என்பவர் நீராடும்பொருட்டுக் கண்டகி யாற்றுக்குச் சென்றார். அங்கு நீர்ப் பெருக்கிலே மான் கன்று ஒன்று மிதந்து வந்தது. அதனை எடுத்துச் சென்று அதனிடம் அன்பு பாராட்டினார். இறுதிக் காலத்திலும் அதன்மீது எண்ணங்கொண்டவராய் உடலை விட்டார்.



மெய்யறிவுடையவராய்த் திகழ்ந்தார். நிலத்தில்

அடிபரவுமாறு நடந்தால் உயிர்த்தொகைகள் மடியுமே என்று அஞ்சித் தாண்டித் தாண்டி நடந்து கொண்டிருந்தார். ஒருநாள் இரகுகணன் என்னும் அரசன் கபிலமுனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றான். அவன் சென்ற சிவிகையைத் தாங்கிச் சென்றோர் வழியில் நின்ற இவரையும் பிடித்துச் சிவிகையைத் தாங்குமாறு செய்தனர். முனிவர் தாண்டித்தாண்டிச் சென்றமையால் சிவிகையாடியது. அரசன் சிவிகையாடியதனால் பரத முனிவருடைய செய்தியை அறிந்து அவரைப் போற்றிப் பாராட்டி அருள் பெற்றான்.

## நிலையாமை

34. தக்கன்மதர்த் தேச்சமொன்று தான்செய்தயச்
சென்னிபெற்றான்
முக்கணனை யெள்ளி முருகேசா—வுக்கமின்போல்
நில்லாத வற்றை நிலையின வென்றுணரும் புல்லறி
வாண்மை கடை

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, தக்கன் தக்கன் என்பவன், மதர்த்து - ஆணவங் கொண்டு, முக் கணனை எள்ளி-சிவபிரானை யிகழ்ந்து, தான் எச்சம் ஒன்று செய்து-தான் வேள் வி யொன்றைப் புரிந்து, அயம் சென்னி பெற்றான் - ஆட்டின் தலையை அடைந்தான்; உக்க மின் போல் -

ஒதறுகின்ற மின்னலைப் போல்; நில்லாதவற்றை - நிலையில்லாத பொருள்களை, நிலையின என்று உணரும்என்றும் நிலைபெறத் தக்கவை என்று அறியும், புல்லறிவு ஆண்மை கடை - அற்ப அறிவுடையவராக இருக்கும் தன்மை இழிந்ததாகும்.

(வி - ம்.) தக்கனானவன் ஆணவங்கொண்டு சிவபெருமானை இகழ்ந்து ஒருவேள்வியைச் செய்து அதனால் ஆட்டுத்தலையைப் 48 முருகேசர் முதுநெறி வெண்பா

பெற்றான். மின்னலைப் போல் விரைந்தழியும் பொருள்களை நிலையுடையன என்று எண்ணும் அறிவானது இழிந்த தாகும் என்பதாம்.

தக்கன் கதை

தக்கன் என்பவன் சிவபிரானைக் குறித்துத் தவஞ் செய்து பல சிறப்புக்களையுமடைந்ததன்றி இறைவி தனக்கு மகளாகத் தோன்றும் பேற்றையும் பெற்றான். ஒருநாள் திருக்கைலைக்குச் சென்றுள்ளபோது மருகனாகிய சிவபிரான் தன்னை வணங்கிப் போற்றவில்லை யென்று சினங்கொண்டான். நிலைபேறில்லாத தன்னுடைய செல்வம் என்றும் நிலைத்து நிற்கக் கூடிய தென்று மாறுபாடாக எண்ணிச் சிவபிரானையிகழ்ந்து வேள்வியொன்றைச் செய்தான்.

சிவபிரானுடைய சினத்தில் தோன்றிய வீரபத்திரக் கடவுள் தக்கனுடைய தலையை அறுத்து வீழ்த்தினர். பிறகு அத் தலைக்குப்பதிலாக ஆட்டுத்தலையொன்று தக்கனுக்குண்டாகியது, தக்கன் ஆட்டுத்தலையோடு விளங்குதலைக் கண்டவர்கள் எள்ளி நகையாடினார்கள்.

துறவு

35. மேக்குவணை யின்பும் வெறுத்துச் சிவிமகவான்
மோக்கநிலை சார்ந்தான் முருகேசா—வூக்கித்
தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றை யவர்.

(இ - ள்.) *முருகேசா - முருகப் பெருமானே !, சிவிமக வான-சிவிகைகளையுடைய இந்திரன், மேக்கு உவணை இன்பும் வெறுத்து - மேலாகிய விண்ணுலக இன்பத்தையும் வெறுத்து, மோக்க நிலை சார்ந்தான் - வீடுபேற்று நிலையை அடைந்தான்; ஊக்கி - ஊக்கத்தைச் செலுத்தி, தீரத் துறந்தார்-முற்றும் துறந்தவர்கள், தலைப்பட்டார்-உயர்ந்த நிலையினராவர், மற்றையவர் - துறவாத மற்றவர்களோ,*

மயங்கி வலைப்பட்டார் - அறியாமை யாகிய வலையிலே அகப்பட்டவர்களாவர்.



(வி - ம்.) தேவேந்திரனனவன் விண்ணுலக இன்பத்தையும் வெறுத்து வீடு பேற்று நிலையை அடைந்தான். இவ்வுலகத்தில் எல்லாவற்றையும் முற்றுந் துறந்தவர்களே உயர்ந்த நிலையின ராவர்; துறவாதவர்களோ அறியாமையாகிய வலையிலே அகப்பட்டவர்களாவர் என்பதாம்.

## இந்திரன் கதை

எவ்வளவு சிறப்புடையவர்களும் நூறுவேள்விகளைச் செய்தால் அல்லாமல் அடைதற்கரிய மேலாகிய விண்ணுலக இன்பங்களை இந்திரன் நுகருங் காலத்திலே அவைகளையெல்லாம் நிலையற்றன வென்று வெறுத்து விட்டு வியாழபகவான் விளம்பிய வாறே காஞ்சியில் சிவபெருமானை வழிபட்டு வீடு பேற்று நிலையை அடைந்தான்.

## மெய்யுணர்தல்

36 செம்மைப் பொருளென்னத் தேர்ந்துநினைக் கும்பமுனி
மும்மலமற் றுய்ந்தான்

முருகேசா—இம்மைதனில்
கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார்
தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி.

((இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே !, நினைதேவரீரை, கும்பமுனி-அகத்தியர், செம்மைப் பொருளென் னத் தேர்ந்து - முழுமுதற் பொருள் என்று உணர்ந்து, மும்மலம் அற்று உய்ந்தான் - ஆணவம் காமியம் மாயை என்னும் மும்மலத்தையும் போக்கி வீடுபேற்றையடைந்தான்; இம்மைதனில்-இப்பிறப்பில், கற்று - கற்க வேண்டிய அறிவு நூல்களைக் கற்று, ஈண்டு மெய்ப்பொருள் கண்டார் - இங்கு மெய்ம்மைப் பொருளை உணர்ந்தவர்கள், ஈண்டு வாரா நெறிமீண்டும் இவ்வுலகில் பிறவாத வழியை, தலைப்படுவர் - அடைவார்கள்.





(வி - ம்.) அகத்திய முனிவர் தேவரீரே உண்மையான மெய்ப்பொருளென் றுணர்ந்து மும்மலங்களையும் போக்கி வீடு பேற்றை யடைந்தார். கற்கவேண்டிய அறிவு நூல்களைக் கற்று இவ்வுலகில்

மெய்ம்மைப் பொருளை யுணர்ந்தவர்களே மீண்டும் உலகில் தோன்றாத வீடுபேற்று நெறியை அடைவர் என்பதாம்.

### அகத்தியர் கதை

*அகத்திய முனிவர் பொதியமலையிலே தவஞ் செய்து கொண் டிருந்தார். நாம் எக்கடவுளைப் போற்றினால் தமிழறிவையும் மெய்யறிவையும் பெறலாம் என்று எண்ணமிட்டார். முருகக் கடவுளைப் போற்றி வழி பட்டால் இவ்விரண்டையும் ஒருங்கே பெறலாம் என்னுந் துணிவு அவருக்குண்டாயிற்று. திருத்தணிகையை அடைந்து போற்றி வழிபட்டுத் தமிழறிவையும் மெய்யறிவையும் ஒருங்கே பெற்றார். அதனால் அவருக்கு வீடு பேற்று நெறி எளிதில் கைகூடுவதாயிற்று.*

### அவாவறுத்தல்

37 பற்றறுத்து வாமதே வன்பிறவாப்
பானமைபெற்றான் முற்றியரன் பூசை
முருகேசா—கற்றுணர்ந்தோர் வேண்டுங்கால்
வேண்டும் பிறவாமை மற்றது வேண்டாமை
வேண்ட வரும்.

(இ - ள்.)
*முருகேசா-முருகப்பெருமானே!, வாமதேவன்* -

வாமதேவ முனிவர், பற்று அறுத்து-எல்லாப் பற்றுக்களை யும் விட்டு அரன் பூசை முற்றி - சிவபெருமானைப் பூசித்து, பிறவாப் பான்மை பெற்றான் - பிறவாத நெறியை அடைந் தார்; கற்று உணர்ந்தோர் - அறிவு நூல்களை ஓதி உணர்ந்தவர்கள், வேண்டுங்கால்-ஒன்றை விரும்புமிடத்து, பிறவாமை வேண்டும் - பிறவாநிலையை விரும்புதல் வேண்டும், மற்றது-அந்நிலை, வேண்டாமை வேண்டவரும் - அவா வற்ற நிலையை விரும்பினால் உண்டாகும்.



(வி - ம். ) வாமதேவ முனிவர் என்பவர் பற்றுக்களை யெல்லாம் விட்டுச் சிவபெருமானை வழிபட்டுப் பிறவாநிலையை அடைந்தார்; ஒன்றை விரும்பினால் பிறவாமையையே விரும்புதல் வேண்டும். அந்நிலையானது அவாவற்ற நிலையை விரும்பினால் உண்டாகும் என்பதாம்.

### வாமதேவர் கதை

வாமதேவ முனிவர் என்பவர் தாயினுடைய கருப்பத்தி லிருக்கும் போதே பிறவிக்கு அஞ்சிச் சிவ பெருமானை மனத்தாலே வழிபட்டுப் போற்றினார். அப்பெருமான் தோன்றி அருள் செய்தார்.

அதன்பிறகு உலகத்திற் பிறந்து எல்லாப் பற்றுக்களையும் ஒழித்துச் சிவபூசை செய்து பிறவாநிலையை அடைந்தார்.

ஊழ்

38 விஞ்சுகங்கைத் தம்பநுனி மேவுபரிக்
கித்தரவால் முஞ்சினனாய்ந் தோர்முன்
முருகேசா—எஞ்சலிலா ஊழிற் பெருவலி யாவுள
மற்றொன்று சூழினுந் தான்முந் துறும்.

(இ-ள்.) முருகேசா-முருகப் பெருமானே!, விஞ்சு-மிகுதி யான, கங்கை-கங்கை யாற்றிலே, தம்பம்நுனி-தூணின் முடி யில், மேவு பரிக்கித்து-சென்றிருந்த பரிட்சித்து மன்னன், ஆய்ந்தோர் முன்-முனிவர்கட்கு முன்னே, முஞ்சினன்-மாண் டான்; எஞ்சலிலா - குறைதலில்லாத, ஊழில் - ஊழ்வினை யைப் பார்க்கினும், பெருவலி யாவுள - மிகுந்த ஆற்றல் படைத்தது வேறே யாதிருக்கின்றது, மற்றொன்று சூழினும்- வேறொரு முயற்சியைச் செய்தாலும், தான் முந்துறும்-தானே முற்பட்டு நிற்பதாகும்.

(வி - ம்.) பரிட்சித்து மன்னனானவன் கங்கையாற்றுத் தம்பத்திலே சென்றிருந்தும் பாம்பினால் கடியுண்டிறந்தான்.

ஊழ்வினையைக் காட்டிலும் மிகுந்த ஆற்றலுள்ளது வேறே யாதிருக்கின்றது? வேறொரு முயற்சியைச் செய்தாலும் அவ் வூழே எல்லாவற்றிற்கும் முற்பட்டு நிற்குமென்பதாம்.

## பரிட்சித்து மன்னன் கதை

பரிட்சித்து என்னும் பெயரையுடைய அரசன் வேட்டை யாடுவதற்குக் காட்டிற்குச் சென்றான். வேட்டையாடுகையில் ஒருமான் அம்புபட்டு ஓடிமறைந்தது. அரசன் அதனைத் தேடிக் கொண்டு சென்றான். ஓரிடத்தில் சமீக முனிவர் என்பவர் தவத்திலிருந்தார். அரசன் அவரைப் பார்த்துத் தான் எய்த மான் அப்பக்கம் வந்ததா என்று உசாவினான். முனிவர் தவத்திலிருந்தபடியால் யாதும் மறுமொழி கூறவில்லை. அவர் தன்னை இழிவுபடுத்தியதாக அரசன் எண்ணினான். செத்துக் கிடந்த பாம்பு ஒன்றை எடுத்து அம்முனிவருடைய கழுத்தில் மாலையாகப் போட்டு விட்டுச் சென்றான். அம்முனிவருடைய மக னாகிய சிரிங்கி என்பவர் அங்கு வந்தார். தந்தையின் கழுத்தைப் பார்த்து மிகுந்த சினமடைந்தார். இவ்வாறு செய்தவன் ஒரு கிழமைக்குள் தட்சகன் என்னும் பாம்பால் கடியுண்டிறக்கக் கடவன் என்று வசவுரை கூறினார். அரசன் முனிவருடைய வசவுரையை அறிந்தான். பாம்பினால் கடிபடாமலிருப்பதற்காகக் கங்கையின்

நடுவில் ஒரு தூணை நாட்டி அதன்முடியில் ஒரு மண்டபத்தை அமைத்து அதில் பலமுனிவர்கள் சூழ அமர்ந் திருந்தான். எட்டாம் நாளில் சில பாம்புகள் தட்சகன் கூறியபடி தவக்கோலம் பூண்டு முனிவர்களைப் போல் அரசனிடஞ் சென்று சில கனிகளைக் கொடுத்தன. அரசன் கனிகளை எடுத்து முனிவர் களிடங் கொடுத்தான். ஒரு கனியைத் தான் தின்பதற்குக் கையி லெடுத்தான். அதில் ஒரு சிறு புழு இருந்தது. அஃது அப் பொழுதே பெரும் பாம்பாகி அரசனைக் கடித்தது. அதனால் அரசன் இறந்தான்.

---

## உ. பொருட்பால்

### இறைமாட்சி

39 உற்றபுற வும்புரப்பா னோங்குசிபி தன்னுடலம்
முற்றுமரிந் தீந்தான் முருகேசா—பற்றும் முறைசெய்து
காப்பாற்று மன்னவன் மக்கட் கிறையென்று
வைக்கப் படும்.

(இ - ள்.) முருகேசா-முருகப் பெருமானே!, ஓங்கு சிபிபுகழால் ஓங்கி விளங்கிய சிபிச் சக்கரவர்த்தி, உற்ற - தன் பால் அடைக்கலம் புகுந்த, புறவும் புரப்பான் - புறாவையும் காப்பாற்றும்

பொருட்டு, தன் உடலம் முற்றும் அரிந்து ஈந்தான் - தன்னுடைய உடல் முழுவதையும் அரிந்து கொடுத்தான் ; பற்றும் - பொருந்தும், முறை செய்து காப்பாற்றும் மன்னவன் - செங்கோல் முறையைச் செய்து உயிர்த் தொகைகளைக் காப்பாற்றுகின்ற அரசன், மக்கட்கு - அவன் கீழ் வாழும் மக்களுக்கு, இறை என்று வைக்கப்படும் - அரசன் என்று சொல்லப் பெறுவான்.

(வி - ம்.) சிபிச் சக்கரவர்த்தி தன்னிடம் அடைக்கலம் புகுந்த புறுவைக் காப்பாற்ற வேண்டித் தன்னுடைய உடல் முழு வதையும் அரிந்து கொடுத்தான்; அரசாட்சியைச் செய்ய வேண் டிய முறைப்படி செய்து தன் குடிமக்களைப் பாதுகாக்கும் அரசனே அம்மக்கட்கு அரசன் என்று சொல்லப்படுவான் என்பதாம்.

## சிபிச்சக்கரவர்த்தி கதை

முன்னாளில் சிபிச்சக்கரவர்த்தி என்னும் அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் சீகாழியை அடைந்து ஒரு வேள்வி செய்யத் தொடங்கினான். அப்போது சிவபிரான் இந்திரனையுந் தீக்கடவுளையும் அழைத்து, "நீங்களிருவருஞ் 54

சிபியினது நெறிமுறையை உலகில் வெளிப்படுத்துவீர்களாக'' என்று கட்டளையிட்டருளினர். தீக்கடவுள் புருவடிவங் கொண்டார் . இந்திரன் கழுகுவடிவங்கொண்டு அப்புருவைத் துரத்தினன். புரு சிபிச்சக்கரவர்த்தியிடம் போய் அடைக்கலம் புகுந்தது. கழுகு சென்று, "இப்புரு என்னுடைய உணவாகும் . என்னுடைய உணவை விட்டுவிடுக'' என்று கூறிற்று. அரசன், "நான் இப்புருவினை விடேன். இதற்குப் பதிலாக என்னுடைய உடல் தசையையே தருவேன். அதனைப் பெற்றுக்கொள்ளுவாயாக'' என்று கூறினன். அக்கழுகின் விருப்பப்படியே அரசன் வேள்விச் சாலையில் ஒரு நிறைகோலை நாட்டிப் புருவை ஒரு தட்டிலே விட்டு மற்றொரு தட்டிலே தன்னுடைய உடல்தசையை அரிந்து வைத்தான். கழுத்தளவு அரிந்தும் புருவின் நிறைக்கு நேராக வரவில்லை. தானே அத்தட்டிலேறித் தட்டைச் சமமாக்கினன். அதனைக் கண்ட இந்திரன் அஞ்சித் தன்னுருவத்தோடு தோன்றினன். ஆராய்ந்து பார்க்க வந்தமையைக் கூறினன். அரசனுடைய அறுபட்ட உடல் வளர்ந்து நிரம்பியது. சிவபிரான் காட்சி கொடுத்து அரசனைத் தம்முடைய திருவடி நீழலிலே சேர்த்தருளினர்.

40 மன்னியின்பந் துய்த்தசங்க வாணர்நக்கீ
ரர்பிரிவை முன்னி முன்னிச் சோர்ந்தார்
முருகேசா—நன்னர் உவப்பத் தலைக்கூடி யுள்ளப்
பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே !, மன்னி- ஒன்றாகப் பொருந்தி, இன்பம் துய்த்த சங்கவாணர் இன்பத்தோடு கல்வியில் அளவளாவியிருந்த சங்கப் புலவர்கள், நக்கீரர் பிரிவை முன்னி முன்னி - நக்கீரர் தங்களைவிட்டுப் பிரிந்ததை எண்ணி எண்ணி, சோர்ந்தார்- தளர்ச்சியடைந்தார்கள்; நன்னர் - நன்றாக, உவப்ப - மகிழு மாறு, தலைக்கூடி-கூடிப்பழகி, உள்ளப் பிரிதல்* - இனிமேல் பொருட்பால் 55

*இவரை எப்பொழுது காணப் பெறுவேம் என்று எண்ணு மாறு பிரிதல், அனைத்தே புலவர் தொழில் - அந்தத் தன்மையினதேயாம் புலவர் தொழில்.*

(வி - ம்.) *ஒன்றாகச் சேர்ந்து அளவளாவியிருந்த சங்கப் புலவர்கள் நக்கீரருடைய பிரிவை எண்ணி எண்ணிச் சோர் வடைந்தார்கள்; மகிழுமாறு ஒன்றாகப்*

பொருந்தியிருந்து பிரியுங் காலத்திலே இனிமேல் நாம் எப்பொழுது இவரைக் காணப்பெறுவேம் என்று எண்ணுமாறு பிரியும் அத் தன்மையினையுடைய தாம் புலவர்களுடைய நட்புத்தொழில் என்பதாம்.

நக்கீரர் கதை

நக்கீரர் சங்கப் புலவர்கள் நாற்பத்தொன்பதின்மரில் ஒருவராயமர்ந்து அப்புலவர்கட் கெல்லாம் தலைமைத் தன்மையைப் பெற்று இனிது அளவளாவிக் கலந்திருந்தார். பிறகு கால வேறுபாட்டினாலே சிவபெருமானுடைய பாடலுக்குக் குற்றங் கூறி அப்பரமனோடு சொற்போரிட்டார். இதனால் வெகுண்ட பரமன் நக்கீரரைப் பொற்றாமரையில் வீழ்த்திய தோடு பொதிய வரைக்குச் சென்று அகத்தியரிடம் இலக்கணங் கற்குமாறும் தம்மை யெதிர்த்த குற்றம் நீங்குமாறு திருக்கைலையைப் போற்றி வழிபடுமாறுங் கட்டளையிட் டருளினார். இதனால் சங்கப் புலவர்கள் நக்கீரரை விட்டுப் பிரியுமாறு நேர்ந்தது. அப்பொழுது அவர்கள் நாம் இனிமேல் எப்பொழுது இவரைக் கண்டு உரையாடி மகிழப் போகின்றேமோ என்று உள்ளம் வாடி வருந்தினார்கள்.

கல்லாமை

41 ஈண்டிவச வேசர்முன்னோர்க் கீடழிந்தார் வீண்வாத

மூண்ட மறையோர் முருகேசா—வேண்டுவன
கல்லா வொருவன் தகைமை தலைப்பெய்து
சொல்லாடச் சோர்வு படும்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே !, வீண்வாத மூண்ட மறையோர் - வீணை சொற்போரைச் செய்யத் 56 முருகேசர் முதுநெறி வெண்பா

தொடங்கிய அந்தணர்கள், ஈண்டி - நெருங்கி, வசவேசர்
முன்னோர்க்கு ஈடு அழிந்தார் - வசவேசர் முதலியோரிடந் தோற்றுப்போனார்கள; வேண்டுவன - கற்க வேண்டியவை களை யெல்லாம, கல்லா ஒருவன் - கற்றுணராத ஒருவன் , தகைமை-மதிப்பானது, தலைப்பெய்து-கற்றோரை யடைந்து, சொல்லாட - பேசத் தொடங்கினால், சோர்வுபடும்-பெருமை கெட்டொழிவதாகும.

(வி - ம்.) வசவேசர் முதலியோரிடத்திலே வீணாகச் சொற் போர் செய்யத் தொடங்கிய அந்தணர்கள் தோற்றுப் போனார் கள்; கற்க வேண்டிய நூல்களை யெல்லாம் நன்கு கல்லாத ஒருவ னுடைய மதிப்பானது கற்றவர்களிடத்திலே உரையாடத் தொடங்கினால் கெட்டொழிந்து போகு மென்பதாம்.

### மறையோர்கள் கதை

கலியாணபுரி என்னும் ஊ ரிலே வசவதேவர்,

சென்ன வசவ தேவர், மடிவாலமாச்சையர், சிவநாகமையர் முதலிய பல பேர் வேதாகம ஆராய்ச்சியிலே வல்லவர்களாக விளங்கியிருந்தார்கள். இவர்களிடத்திலே பொருமைகொண்ட சில அந்தணர்கள் விச்சல ராசனுடைய அவையில் அவ்வடியவர்களுடைய கொள்கையை மறுத்துத் தமது வைதீகக் கொள்கையை நிலைநிறுத்த எண்ணி வீணுகச் சொற்போரிட்டார்கள். அவர்களுடைய கேள்விக்கு இவ்வந்தணர்களால் மறுமொழி கூற முடியவில்லை. அதனுல் தோல்வியடைந்து பெருமை யிழந்தார்கள்.

### கேள்வி

42 அத்தனையீ மப்பலியா லர்ச்சித்து வேந்துரையின்

முத்திபெற்முன் சண்டன் முருகேசா—நத்தி
எனைத்தானு நல்லவை கேட்க வனைத்தானு
மான்ற பெருமை தரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே! சண்டன் - சண்டன் என்பவன், அத்தனை - சிவபெருமானை, ஈமப் பொருட்பால்



பலியால் அர்ச்சித்து - இடுகாட்டுச் சாம்பலாலே வழிபட்டு, வேந்துரையின் - அரசன் உரைப்படியே, முத்தி பெற்முன் - வீடுபேற்றை யடைந்தான் .

நத்தி - விரும்பி, எனைத்தானும்எவ்வளவு சிறியதாயினும, நல்லவை கேட்க - நல்லவைகளைக் கேட்டறிதல் வேண்டும், அனைத்தானும் - அந்த அளவிற்கு, ஆன்ற பெருமை தரும்-நிறைந்த பெருமையைக் கொடுக்கும்.

(வி - ம்.) சண்டன் என்பவன் அரசன் கூறியபடியே சிவ பிரானைச் சுடலைச் சாம்பரால் வழிபட்டு வீடுபேற்றை யடைந் தான்; எவ்வளவு சிறிதாயினும் நல்லவைகளைக் கேட்டல் வேண்டும் ; அவ்வாறு கேட்பின் அதுகேட்ட அளவுக்காவது பெருமையைக் கொடுக்கும் என்பதாம்.

## சண்டன் கதை

சண்டன் என்னும் ஒரு வேடன் சிங்ககேது என்னும் அரசனோடு வேட்டைக்குச் சென்றான். ஒரு கோயிலில் விழுந்து கிடந்த சிவலிங்கவுரு ஒன்றைக் கண்டான். அதனை விருப்பத்தோடு எடுத்துக் கொண்டு போய் அரசன் முன்பு வைத்தான். "இதனை வழிபடுவதற்குரிய முறைமைகளை அடியேனுக்குரைத்தருள வேண்டும்" என்று அரசனைப் பார்த்து வேண்டிக் கொண்டான். அரசன், " ஓ சண்டனே! நீ பூசைக்குரிய' பொருள்களோடு சுடலைச் சாம்பலையும் கொண்டு இச் சிவலிங்கத்தை வழிபடுவாயாக" என்று வேடிக்கையாகக் கூறினான். வேடன்

அரசன் கூறியதை உண்மையென்று நம்பினுன். நாளுஞ் சுடலைச் சாம்பலைக் கொண்டு வழிபட்டுக் கொண்டிருந்தான். ஒரு நாள் சுடலைச் சாம்பல் அகப்படவில்லை. அதனுல் மனந் தளர்ந்தான். இறத்தற்கு உடன்பட்ட மனைவியைக் கொன்று நீருக்கி அச் சாம்பரைக் கொண்டு பூசையை முடித்தான். பூசை முடிவில் அவள் உயிர்பெற்று எந்நாளும் போலவே வந்து பூசைப் பொருள்களை யேற்று நின்ருள். அவ்வாறு நின்ற மனைவியைக் கண்டு சண்டன் மகிழ்ச்சியடைந்தான். இறுதியில் அவளோடு வீடுபேற்றைப் பெற்ருன்.



அறிவுடைமை

43 தீதையுன்னி நீங்கினன்சு சீலன் புயபலன்பின்
மூதஞர்கோட் பட்டான் முருகேசா—ஓதில்
அறிவுடையா ராவ தறிவா ரறிவிலார் அஃதறி கல்லா
தவர்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, சுசீலன் தீதை உன்னி நீங்கினன் - சுசீலன் என்பவன் தீமை என்று நினைத்து நீங்கிவிட்டான், புயபலன் - புயபலன் என்பவன், மூது அஞர் கோட்பட்டான் - மிகுந்த துன்பத்திஞலே பிடிக்கப்பட்டான், ஓதில் -

சொன்னால், அறிவுடையாராவது அறிவுடையவர்கள் ஆவது, அறிவார் - பின்னாலே நிகழப் போவதனை முன்னே அறிய வல்லவராவார், அறிவிலார் - அறிவற்றவர்கள், அஃது அறி கல்லாதவர் - அதனை அறிய முடியாதவராவர்.

(வி · ர.) சுசிலன் என்பவன் பிறகு தீமை விளையுமென்று நீங்கிவிட்டான், புயபலனே பிறகு மிகுந்த துன்பத்துக் குள்ளானன், பின்னாலே நிமுகப் போவதனை முன்னாலே அறிந்து கொள்பவர்தாம் அறிவுடையவர் , அறிவற்றவர் களோ பின்னாலே நிகழப் போவதனை முன்னே அறிந்து கொள்ளமாட்டார்கள் என்பதாம்.

## புயபலன் கதை

வங்க நாட்டிலே முன்னாளில் புயபலன் என்னும் பெய ருடைய அரசன் அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அவன் ஒரு நன்னாளிலே பலருக்குத் தானமளிக்க எண்ணினான். விதர்ப்ப நாட்டிலேயிருந்து சுசிலன் என்னும் அந்தணன் இதனை யுணர்ந்து தானம் பெறுதற்குச் சென்றான். சுசிலன் மிகுந்த பெருமை யுடையவன் என்பதைப் பிறரால் உணர்ந்த அரசன் அவனை மிகுதியாகப் பாராட்டித் தானமளிக்கத் தொடங்கினன். சுசிலன் தானம் பெறச் சென்றபோது புயபலனுடைய நெற்றியைப் பொருட்பால்

பார்த்தான். திருநீறில்லா திருத்தலைப் பார்த்து வெறுத்து, "நீர் திருநீறணிந்து கொண்டு தானமளிப்பீராக. இன்றேல் இதனை நான் ஏற்றுக்கொள்ள மாட்டேன்" என்று கூறினான். இதனைக் கேட்ட புயபலன், "திருநீறணிவதால் யாது பயன்? அதனை நான் அணியமாட்டேன். விருப்பமானால் வாங்கிக் கொண்டு போம், இன்றேல் சும்மா போம்" என்று கூறிவிட்டான். சுசிலன் பின்னால் நேரப்போவதை யுணர்ந்து, "நீ சிவபிரானுக் குக் குற்றஞ் செய்தவனாகையால் நான் இத்தானத்தை வாங்க மாட்டேன்" என்று கூறிவிட்டு அவ்விடத்தைவிட்டுப் புறப் பட்டான். அப்பொழுது அரசனுடைய மனைவி மூக்கிலே துரும்பைவிட்டுத் தும்மித் தடுத்தாள். அவ்வாறு தடுத்துஞ் சுசீலன் தானத்தை வாங்காமலே சென்றுவிட்டான். அரசன் திருநீற்றை யிகழ்ந்த குற்றத்தினால் பெரும் பிணியுடையவனானான். அவனுடைய நாட்டைப் பகைவர்கள் கவர்ந்து கொண் டார்கள். பிறகு அரசன் தன்னுடைய மனைவியோடு காட்டை யடைந்து தங்கியிருந்தான். அப்பொழுது ஒரு வேடன் அரச னுடைய மனைவியைக் கவர்ந்து சென்றான். அவனை ஒரு புலி தாக்கிக் கொன்றது. அவள் உயிர் பிழைத்து விதர்ப்ப நாட்டை யடைந்தாள். ஐயமேற்றுத் திரிந்தாள். ஒரு வீட்டிற் களவு செய்த பொழுது காவலரால் மூக்கும் தனமும் அறுபட்டு வருந்தி யலைந்தா ள்.

அரசனும் அந்நாட்டை யடைந்து ஐயமேற்று வருந்தித் திரிந்தான். ஒருநாள் களவு செய்ய முயன்ற பொழுது காலுங் கையும் வெட்டப்பட்டு முடவனாக வருந்தி யுழன்றான். அப்பொழுது முன்பு தன்னில்லத்தில் தானமேற்க வந்த சுசீலனுடைய இல்லத்தை யடைந்து உணவு வேண்டினான். சுசீலன் அரசனைப் பார்த்து ஐயுற்று வினவினான். அரசன் யாதும் மறுமொழி கூறாமலிருக்கவே, "நீ முன்பு திருநீற்றை யிகழ்ந்த புயபலனல்லனோ?" என்று உசாவினான். அரசனும் சுசீலனை உணர்ந்து கொண்டான். தான் செய்த குற்றத்தைப் பொறுத்துத் திருநீறு வழங்கித் தன்னை யாட்கொண்டருள வேண்டு மென்று வேண்டிக் கொண்டான். சுசீலன் கொடுத்த திருநீற்றை யணிந்து சிறிது உட்கொண்டவுடன் வெட்டுண்ட கையுங்காலும்





வளர்ந்தன. அச்சமயத்தில் அவ்வழியே வந்த அரசனுடைய மனைவியும் அரசனைக் கண்டு வணங்கினாள். பிறகு அவளும் சுசீலனிடம் திருநீறு பெற்றணிந்து குறைக்கப்பட்ட உறுப்புக்கள் வளரப்பெற்றாள். அந்நாட்டரசன் இவர்களுடைய செய்தியை யறிந்து சுசீலரிடம் வந்து வணங்கினான். அங்கிருக்கும் அரசனும் அரசியும் தன்னுடைய மாமனும் மாமியும் என்றறிந்து அவர்களைத் தன்னுடைய அ

ரண்மனைக்கு அழைத்துச் சென்ருன். சில நாள் சென்ற பிறகு புயபலன் படைகளோடு சென்று தன்னுடைய நாட்டை யடைந்து அதனைக் கைப்பற்றி அரசாட்சி செய்தான்.

## குற்றங்கடிதல்

44 தெய்வநிதி யாதிகவர் தீமையின்ம
ஞேசவன்கான் மோய்வளந்தோற் றேய்ந்தான்
முருகேசா—வுய்யச் செயற்பால செய்யா திவறியான்
செல்வ முயற்பால தன்றிக் கெடும்.

(இ - ள்.)

முருகேசா - முருகப்பெருமானே!, மஞேசவன் - மஞேசவன் என்பவன், தெய்வநிதி ஆதி கவர் தீமையில்தெய்வத்திற்குரிய பொருள் முதலியவைகளைக் கவர்ந்த தீமையினுல், மொய்வளந் தோற்று - மிகுந்த தன்னுடைய செல்வ நலத்தை யிழந்து, கான் தேய்ந்தான் - காட்டிற்குச் சென்ருன், உய்ய - பிழைக்குமாறு, செயல்பால செய்யாதுசெய்ய வேண்டிய அறங்களைச் செய்யாமல், இவறியான் செல்வம் - இவறன்மையை மேற்கொண் டிருப்பவனுடைய செல்வமானது, உயற்பாலது அன்றிக் கெடும் - உய்யுந் தன்மையில்லாது அழிந்து போகும்.

(வி - ம்.) தெய்வத்திற் குரிய பொருளைக் கவர்ந்த மனுே சவன் என்பவன் தன்னுடைய பெருஞ் செல்வத்தை யிழந்து விட்டுக் காட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்; செய்ய வேண்டிய அறங்களைச் செய்யாமல் பொருட்பற்றுக் கொண்டு அதனைப்



பற்றி யிருப்பவனுடைய செல்வமானது உய்யுந்தன்மை யில்லாமல் அழிந்து போகும் என்பதாம்.

## மனுேசவன் கதை

முன்னுளில் மனுேசவன் என்னும் பெயரையுடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் சிவபிரான் முதலிய கடவுளரைப் போற்றி வழிபட்டுப் பகைவரை வென்று செங்கோல் முறைப்படி அரசாட்சியைச் செய்து கொண்டிருந்தான். செல்வக்களிப்பினுல் அவ்வரசனுக்கு ஆணவம் உண்டாயிற்று. திருக்கோயில்கட்குரிய பொருள் முதலியவைகளைக் கவர்ந்தான். அந்தணர் முதலியோருடைய நிலங்களுக்கும் இறைப்பொருள் வாங்கினுன். இத்தீவினையினுல் ஊணநாட்டரசனுகிய கோலபன் என்பவன் மனுேசவனை எதிர்த்துப் போரிட்டு நாடு நகரங்களைக் கவர்ந்து கொண்டான். மனுேசவன் மனைவி மக்களோடு காட்டை யடைந்து திரிந்தான். ஒருநாள் சந்திரகாந்தன் என்னும் மகன்

பசியினால் தளர்ந்து உணவு வேண்டுமென்றான். அரசன் தன்னுடைய மனைவியிடம் தான் முன்னே செய்த கொடுமைகளை யெல்லாம் கூறி மூர்ச்சையடைந்தான். பிறகு பழைய நல்வினையினால் பராசரமுனிவருடைய அருளைப் பெற்றுப் பழைய நிலைமையை அடைந்தான்.

## பெரியாரைத் துணைக்கோடல் 45

நாரதனாற் சம்வரத நற்றவற்சேர்ந் தேமருத்து
சூரியின்மேம் பட்டான் முருகேசா—பாரதனில்
உற்றநோய் நீக்கி உறுஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, மருத்துமருத்து என்னுமரசன், நாரதனால் - நாரதமுனிவர் சொற்படி, சம்வரத நற்றவன் சேர்ந்து - சம்வரதன் என்னும் பெயரை யுடைய முனிவரையடைந்து, சூரியின்மேம்பட்டான்-பெருமையிற் சிறந்து விளங்கினான்; பாரதனில் - இவ்வுலகத்தில், உற்ற 

நோய் நீக்கி - அடைந்த துன்பத்தைப் போக்கி, உறுமை முன் காக்கும் - துன்பம் வாராதபடி முன்னதாகவே காக்க வல்ல, பெற்றியார் பேணிக்

கொளல் - தனமையுடையவர் களைப் போற்றி நட்புக் கொளளுதல் வேண்டும்.

(வி - ம்.) மருத்து என்னும் அரசன் நாரதமுனிவருடைய உரையினால் சம்வரதரென்னும் முனிவரையடைந்து பெருமையிற் சிறந்து விளங்கினான்; உண்டான துன்பத்தைப் போக்கி மேலும் துன்பம் வராமற் காக்கவல்ல தன்மையுடையவர்களையே நட்புக் கொள்ளுதல் வேண்டும் என்பதாம்.

## மருத்து என்னும் அரசன் கதை

முன்னாளில் மருத்து என்னும் பெயருடைய மன்னவன் ஒருவன் இருந்தான். அவனுடைய தந்தை ஆங்கிரசர் என்னும் முனிவரைக் கொண்டு வேள்வியொன்று செய்து கொண்டிருந் தான். மருத்து தான் ஒரு வேள்வி செய்ய எண்ணினான். அவ்வேள்வியை நடத்துமாறு வியாழபகவானை வேண்டிக் கொண்டான். தேவேந்திரனுடைய உடன்பாடில்லாமையினால் அவர், "யான் தேவகுருவாக இருக்கிறபடியால் என்னால் நடத்துதல் இயலாது" என்று கூறினார். அரசன் யாது செய்வ தென்று கவலையுற்றிருந்தான். இச்சமயத்தில் நாரதர் அரச னிடம் வந்தார். அரசனுடைய கருத்தை யறிந்தார். அவர் வியாழபகவானோடு பகை கொண்டிருந்தாராதலின் அரசனை நோக்கி, "சம்வரதமுனிவர் என்பவர் உன்மத்தர் போல

நடித்துக்கொண்டு ஆடையற்றவராய்க் காசியிலே யிருக்கின்றார். அவரைக் கொண்டு வேள்வி நடத்துக" என்று கூறியதோடு அவரைப் பார்க்கத்தக்க வழியையுங் கூறிவிட்டுச் சென்றார். அரசன் சம்வரத முனிவரை யடுத்த தன்னுடைய எண்ணத்தைக் கூறினான். அவர் உள்ளமிரங்கினார். அரசனைப் பார்த்து, "வியாழ பகவானுக்கு என்பாலுள்ள பகைமையால் இந்திரன் முதலியோர் உன்னைக் கலைப்பர். அதனால் மாறுபடா திருப்பை யாகில் மிகுந்த சிறப்படைவாய்" என்று வற்புறுத்திக் கூறினார். அரசன் அம்முனிவரை யழைத்துக் கொண்டு போய் முஞ்ச பொருட்பால்

63

வந்தமலையை அடைந்து சிவபிரானைப் பணிந்து அக்கடவுளுடைய

அருளால் அளவற்ற பொருட் குவியல்களை ஒட்டகம் யானை

முதலியவைகளில் ஏற்றிவந்து மேருமலையைப் போலக் குவித்துக்

கொண்டு வேள்வி செய்யத் தொடங்கினான். வேள்வி நடை பெற்றுக் கொணடிருந்தது. இதனை யறிந்து வியாழ பகவான் கவலை கொண்டார். இந்திரன் வியாழ பகவானுடைய கவலையை அறிந்தான். வியாழபகவானையே வேள்வியாசிரியராகக் கொண்டு வேள்வியைச் செய்யுமாறு இக்கடவுளைக்

கொண்டு அரசனுக்குத் தெரியப்படுத்தினன். அரசன் இதற்கு உடன்படவில்லை. இந்திரன் பகைகொண்டு வச்சிரப் படையை எறிந்தான். அரசன் சம்வரத முனிவர்பால் அடைக்கலம் புகுந்தான். அவர் ஒரு மறையினல் வச்சிரப் படையைத் தடுத்தது மல்லாமல், அரசன் விரும்பியவாறே மற்ருெரு மந்திரத்தினல் தேவர் பகையையும் போக்கினர். தேவர்கள் அவியருந்துமாறு வேள்வியை முடித்தார். அரசன் வேண்டிய மட்டும் அந்தணர் முதலியோர்க்குப் பலவகையான தானங்களைச் செய்தான். எவ்வளவோ தானங்களைச் செய்தும் செல்வம் குறைவு படாமல் மிஞ்சிக் கிடந்தது. அம்முனிவரால் எல்லாப் பெருமைகளையும் அடைந்து இன்புற்ருன்.

## சிற்றினஞ் சேராமை

46 வாக்கரசர் சாவகரான் மாழ்கித் தமக்கையான்
மோக்கநிலை பெற்ருர் முருகேசா—பார்க்குங்கால்
நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி னல்லற்
படுப்பதூஉ மில்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, வாக்கரசர் - திருநாவுக்கரசர், சாவகரால் மாழ்கி - சமணர்களால் வருத்தமடைந்து, தமக்கையால் - தம்முடைய உடன் பிறந்தாளாகிய அக்காளால், மோக்கநிலை பெற்ருர் - பிறகு வீடுபேற்று நிலையை

அடைந்தார், பார்க்குங்கால் - நோக்கு மிடத்தில், நல்லினத்தின் - நல்ல இனத்தைவிட, ஊங்கும 64 முருகேசர் முதுநெறி வெண்பா

துணையில்லை - சிறந்ததாகிய துணையும் உலகத்தில் இல்லை, தீயினத்தின் - தீய இனத்தை விட, அல்லல் படுப்பதூஉம் இல் - துன்பப்படுத்தும் பகையும் இல்லை.

(வி - ம்.) திருநாவுக்கரசர் சமணரால் வருத்தமடைந்து பிறகு தம்முடைய தமக்கையாரால் வீடுபேற்று நிலையைப் பெற்றார். இவ்வுலகத்திலே நல்ல இனத்தார்களுடைய நட்பை விடச் சிறந்த துணையும் இல்லை, தீய இனத்தார்களுடைய கூட்டுறவைப் பார்க்கினும் துன்பப் படுத்துவதும் இல்லை என்பதாம்.

திருநாவுக்கரசர் கதை

திருநாவுக்கரசர் முதலில் சமணர்களோடு நட்புக்கொண்டு அவர்களுடைய சமய நூல்களை ஆராய்ந்து கொண்டும் அச்சமயத்தாராகியும் விளங்கினார். அதனாலே அவருக்குப் பல வகையான தொல்லைகள் உண்டாயின. அச்சமணர்கள், நஞ் சருத்தியும் நீற்றறையிலிட்டும் யானைக்காலில் இடறியுங் கடலில் தள்ளியும் திருநாவுக்கரசரைக் கொலை புரிய

முயன்றுர்கள். பிறகு நாவுக்கரசர் தம்முடைய தமக்கையாரிடஞ் சேர்ந்த பிறகு சிவபெருமானுடைய அருளைப் பெற்று வீடுபேறடைவதற்குத் தக்கவரானுர்.

## தெரிந்துசெயல்வகை

47 பாண்டவர்செல் வங்கவர்வான் பண்டுதுரி
யோதனன்றன்
மூண்டிழிந்தான் மாய்ந்தும்
முருகேசா—
வேண்டுங்கால்
எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந்
தம்மோடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, பண்டு துரியோதனன் - முன்னுளிலே துரியோதனன், பாண்டவர் பொருட்பால் 65

செல்வங் கவர்வான் — பாண்டவர்களுடைய செல்வத்தைக் கைப்பற்றிக் கொள்ளும் பொருட்டு, மூண்டு இழிந்தான்மிகுந்த இழிசெயலில் இறங்கினன் (அதனுல்), மாய்ந்தும்இறந்தும் போனன் ;

வேண்டுங்கால் - விரும்புமிடத்தில், உலகு - உலகத்தார்கள், எள்ளாத - இகழத்தகாத செயல்களை, எண்ணிச் செயல் வேண்டும் - ஆராய்ந்து செய்தல் வேண்டும், தம்மொடு கொள்ளாத கொள்ளாது - தமக்குப் பொருந்தாதவைகளை உலகினர் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்.

(வி - ம்.) முன்னாளில் துரியோதனன் பாண்டவர்களுடைய செல்வத்தைக் கவர்ந்து கொள்ளும் பொருட்டு மிகுந்த முயற்சி செய்து அதனால் இறந்தொழிந்தான்; உலகத்தார்கள் இகழாத காரியங்களை ஆராய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும். உலகத் தார்கள் தங்களுக்குப் பிடிக்காதவைகளை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள் என்பதாம்.

## துரியோதனன் கதை

துரியோதனனுக்குச் செல்வம் மிகுதியாக இருந்தது. ஆயி னும் அவன் அதனோடு அமைதி பெறாமல் சகுனி முதலியோ ருடைய பேச்சைக் கேட்டுப் பாண்டவர்களுடைய செல்வத்தை யுங் கவர்ந்து கொள்ள எண்ணி அறத்தொடு பொருந்தாத பல முயற்சிகளைச் செய்து பிறகு பாண்டவர்களோடு போரிலே ஈடு பட்டுத் தன்னுடைய சுற்றத்தார்களோடு மாண்டொழிந்தான். துரியோதனனுடைய செயல் நேர்மையற்றதாக

விருந்தபடியால் உலகத்தார் இன்றுவரையில் அவனைப் பொல்லாதவனென்று இகழலானார்கள்.

வலியறிதல்

48. வாரிசுதை வவ்வுமுவ ணத்தையெதிர் வான வர்கள்

மூரியிழந் தெய்த்தார் முருகேசா—தேரின்
உடைத்தம் வலியறியா ரூக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

மு. மு. வெ.—5



(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, வாரிசுதை வவ்வும உவணத்தை - கடலில் தோன்றும் அமுதத்தைக் கவர்ந்த கருடனை, எதிர் வானவர்கள -எதிர்த்த தேவர்கள், மூரி இழந்து - வலிமை கெட்டு, எய்த்தார் - இளைத்தார்கள், தேரின - ஆராய்ந்து பார்க்குமிடத்து, உடை தம் வலி அறியார் - தமக்குள்ள ஆற்றலை அறிந்து கொள்ளாமல், ஊக்கத்தின் ஊக்கி - ஊக்கத்தால் முயற்சிசெய்து, இடைக் கண் முரிந்தா பலர் - அதனை முடிக்க முடியாமல் இடையிலே அழிந்தவர்கள் பலர்.

(வி - ர்.) கடலில் தோன்றிய அமுதத்தைக்

கவர்ந்த கருடனை எதிர்த்த தேவர்கள் தங்கள் ஆற்றல் கெட்டொழிந் தார்கள் . தம்முடைய ஆற்றலின் அளவை அறியாமல் காரியத்தை முடிக்க முயற்சி செய்து இடையிலே கெட்டொழிந்தவர் கள் பலர் என்பதாம்.

## தேவர்கள் கதை

காசிபமுனிவருடைய மனைவியருள்ளே கத்துரு என்பவள் ஒருநாள் இந்திரனுடைய உச்சைசச்சிரவம் என்னுங் குதிரையைப் பார்த்தவுடன் விநதை என்பவளை நோக்கி, "இதன் வால் வெண்மையோ கருமையோ ?" என்று கேட்டாள். அவள் வெண்மை யென்று சொன்னாள்; இவள் கருமை யென்று சொன்னாள் . அப்பொழுது தோற்றவள் மற்றவளைச் சுமப்பதாக இருவரும் முடிவு செய்து கொண்டனர். கத்துரு தன்னுடைய மகன் கார்க்கோடகனால் அதன் வாலைக் கருமையாக்குவித்து விந தைக்குக் காட்டினாள். தன்னைச் சுமக்கும்படி அவளை அடிமை யாக்கிக்கொண்டாள். பெருவிரலளவுள்ளவர்களாகிய வாலகில்லி யர்கள் காசிபமுனிவர் செய்யும் வேள்விக்குரிய பொருளைக் கொண்டு வரும்பொழுது, பசுவின் குளம்பழுந்திய குழியிலுள்ள நீரில் உடம்பு முழுவதும் அமிழ்ந்தக்கண்டு இந்திரன் நகைத்தான். முனிவர்கள் சினந்து இந்த வேள்வியிலே இந்திரனுக்குப் பகைவனாக ஒருவன் தோன்ற வேண்டுமென்று அவி சொரிந்தனர். பொருட்பால்

அதனால் கருடன் பிறந்தான். அவ்வாறுதித்த கருடன் தன் தாயாகிய விநதையைச் சிறையினின்றும் விடுவித்தற்குப் பாம்புகள் கேட்டபடியே விண்ணுலகடைந்து காவலைக் கெடுத்து அமுதத்தைக் கவர்ந்து மீளுங்கால், இந்திரன் முதலியோர் கருடனுடைய பகையை வியாழ பகவானு லறிந்திருந்தும் வீணாக எதிர்த்துப் போரிட்டுத் தம்முடைய ஆற்றலிழந்து இளைத்தனர்.

காலமறிதல்

49. சிந்துபதி யைத்தந்தை யோடிறுத்தான்
செவ்வியுற முந்திவிச யன்றான்
முருகேசா—நந்தலின்றி எய்தற் கரிய தியைந்தக்கா
லந்நிலையே செய்தற் கரிய செயல்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, முந்தி விசயன் - முன்னாளில் அருச்சுனன், செவ்வியுற - சமயம் நன்றாகப்பொருந்த, சிந்துபதியை தந்தையோடு இறுத்தான் - சயத்திரதனை அவனுடைய தந்தையோடு கொன்றொழித்தான், நந்தல் இன்றி - கெடுதல் இல்லாமல், எய்தற்கரியது இயைந்தக்கால் - கிடைத்தற்கரிய காலம வந்து வாய்க்குமானால், அந்நிலையே-அதனைப் பயன் படுத்திக் கொண்டு

அப்போதே, செய்தற்கரிய செயல் - செய்தற்கு அருமையான காரியங்களைச் செய்து முடித்தல் வேண்டும்.

(வி-ம்.) அருச்சுனன் காலம் நன்கு அமைந்த பொழுது சயத் திரதனையும் அவனுடைய தந்தையையுங் கொன்றான். கிடைத் தற்கரிய காலம் வாய்க்குமானால் அப்பொழுதே செய்தற்கரிய காரியங்களைச் செய் து முடிக்க வேண் டும் என்பதாம்.

சிந்துபதியையும் அவன் தந்தையையுங் கொன்ற கதை

அருச்சுனன் தன் மகன் அபிமன்னுவைக் கொன்ற சயத்திர தனை மறுநாள் மாலைக்குள் கொன்று முடித்துவிடுவதாகச் சூளுரை புகன்றான். மறுநாள் சயத்திரதனைப் பகைவர்கள் நன்கு 68
முருகேசர் முதுநெறி வெண்பா

காப்பாற்றியபடியால் அவனை எளிதாகக் கொல்ல முடிய வில்லை. கொல்வதற்கு அருச்சுனன் சமயத்தை எதிர் நோக்கி யிருந்தான். கண்ணனுடைய மாயையால் அருச்சுனன் தீக்குளிப் பதற்கு ஏற்பாடு செய்தான். அதனைப் பார்க்கச் சயத்திரதனும் வந்தான். கண்ணன் கதிரவனைக் காட்டிச் சயத்திரதனை உடனே கொல்வாயாக என்று கூறினார். அப்பொழுதே அருச் சுனன் சயத்திரதனைக் கொன்று அவன் தந்தையையும் வீழ்த்தித் தன்னுடைய பகையை முடித்தான் .

அச்சமயத்தை அருச்சுனன் நழுவவிட் டிருப்பின் பிறகு உயிரிழக்குமாறு நேர்ந்திருக்கும். ஆகவே எதனையுஞ் சரியான காலம் வாய்த்த பொழுதே விரைந்து செய்து முடித்தல் வேண்டும்.

## இடனறிதல்

50. சென்னியனீ கத்தைமோ திச்சிதைத்த
தோர்கோழி முன்னுறையூர்க் கானின்
முருகேசா—மன்னுலகில் அஞ்சாமை யல்லாற்
றுணைவேண்டா வெஞ்சாமை யெண்ணி யிடத்தாற்
செயின்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே! முன்முன்னாளிலே, உறையூர் கானில் - உறையூர்க் காட்டிலே, ஓர் கோழி - ஒரு கோழியானது, சென்னி - சோழனது அனீகத்தை - படையை, மோதி சிதைத்தது - அடித்துக் கெடுத்தது; மன் உலகில் - நிலைபெற்ற உலகத்தில், எஞ்சாமை எண்ணி - குறைவில்லாமல் எண்ணிப் பார்த்து, இடத்தால் செயின் - இடமறிந்து செய்தால், அஞ்சாமை அல்லால் துணை வேண்டா-அஞ்சாமையை அல்லாமல் வேறு துணை வேண்டியது இல்லை.

(வி - ம்.) முன்னாளிலே உறையூர்க் காட்டில் ஒரு

கோழி யானது சோழனுடைய படையை மோதியடித்துக் கெடுத்தது. இவ்வுலகில் சிறிதுங் குறைவில்லாமல் நன்றாக எண்ணமிட்டு 

இடத்தையும் நோக்கிக் காரியத்தைச் செய்தால் அஞ்சாமை யல்லாமல் வேறு துணை வேண்டியது இல்லை என்பதாம்.

## உறையூர்க் கோழியின் கதை

முன்னாளிலே சனநாத வளவனுடைய மகனாகிய அரச சூளாமணி என்பவன் நாட்டு வளங்களைக் காணவெண்ணிப் புறப்பட்டான். பல இடங்களையும் பார்த்துக் கொண்டு திரிசிரா மலைக்கு மேல்பாலுள்ள உறையூர்க் காட்டை யடைந்தான். அப் போது அங்கு ஒரு கோழியானது அந்த இடத்தின் வலிமையால் சோழனுடைய பெரிய படையிற் பாய்ந்து பட்டத்து யானை முதலியவைகளையும் மோதிக் கலங்குமாறு செய்தது. அதனைக் கண்ட அரசன் ; இஃது இவ்வாறு செய்வதற்கு ஏது இந்த இடத்தின் வலிமையே என்று முடிவு செய்து அங்கு ஒரு நகரத்தை உண்டாக்கி அதனைத் தலைநகராகக் கொண்டான்.

## தெரிந்து தெளிதல்

51. தீதேனுமி ராக்கதனைத் தேர்மித் திரசகன்றன்
மூதரக்க னானன் முருகேசா—ஆதலினால்

தேரான் பிறனைத் தேளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, மித்திர சகன் - மித்திரசகன் என்னும் அரசன், தீது எணும் இராக்கதனை - தீமை செய்தற் கெண்ணிய அரக்கனை, தேர்- சமையல் வேலைக்குத் தெரிந்தெடுத்துவைத்த படியினால், முது அரக்கன் ஆனான் - பெரிய அரக்கனாகித் திரிந்தான் ; பிறனை - மற்றவனை, தேரான - ஆராயாமல், தெளிந்தான் வழி முறை - தெரிந்தெடுத்தவனுக்கும் அவனுடைய வழி முறைக்கும், தீரா இடும்பை தரும் - தீராத துன்பத்தைக் கொடுக்கும்.

(வி - ம்.) மித்திரசகன் என்னும் அரசன் தீமை செய்யக் கருதிய அரக்கனை மடைத் தொழிலாளியாக ஆராயாது 70 முருகேசர் முதுநெறி வெண்பா

ஏற்படுத்திய குற்றத்தால் அரக்கனாகித் திரிந்தான். பிறனை ஆராய்ந்து பார்க்காமல் தெளிந்து கொண்டவனுடைய வழி முறையானது தீராத துன்பத்தையடையும் என்பதாம்.

மித்திரசகன் கதை

முன்னாளில் மித்திரசகன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் வேட்டையாடும்

பொருட்டுக் காட் டிற்குச் சென்றான். அப்பொழுது அங்கு எதிர்ப்பட்ட ஓர் அரக் கனைக் கொன்றான். அவனுடைய உடன் பிறந்தானாகிய அரக்கன் இவ்வரசனுக்கு வஞ்சனையினால் கெடுதியைச் செய்ய வேண்டுமென்று எண்ணியவனாய் மடைத்தொழிலாளி போல் கோலம் பூண்டு அரசன் அரண்மனைக்குச் சென்று தான் அட்டில் தொழிலில் வல்லவன் என்றும் தனக்கு வேலை வேண்டுமென்றுங் கேட்டான். அரசன் அவனுடைய வரலாற்றை உசாவாமல் சமையல் வேலையில் நிறுத்தினான். அவன் ஒருநாள் முனிவர் சிலருக்கு மனித ஊனைச் சமைத்துப் படைத்து முனிவர்களுக்குச் சினமுண்டாக்கி அரசனுக்கு அரக்கனாகுமாறு வசவுரை ஏற்படச் செய்து விட்டான். அரசன் அவனைத் தேராது வேலையில் விட்டமையின் இத்தகைய தொல்லைக்குள்ளாகி வருந்தினான்.

### தெரிந்து வினையாடல்

52. காண்டலின்றிச் சச்சந்தன் கட்டியங்கா ரற்கரசை
    மூண்டளித்து மாண்டான் முருகேசா—வேண்டி
    எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
    வேறாகு மாந்தர் பலர்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, சச்சந்தன - சச்சந்தன் என்பவன், காண்டலின்றி - நன்கு ஆராய்ந்து கொள்ளாமல், கட்டியங்காரற்கு - கட்டியங்காரன் என்பவனுக்கு, அரசை - தன்னுடைய அரசாட்சியை, மூண்டு அளித்து - அதிகமான அன்பு கொண்டு கொடுத்து, மாண்டான் - இறுதியில் இறந்தொழிந்தான், வேண்டிபொருட்பால் 71

விரும்பி, எணே வகையால் தேறியக் கண்ணும - எவவகை யால் ஆராய்ந்து தெளிந்த பிறகும, வினை வகையால் - காரியத்தை மேற் கொண்டு செய்யும்பொழுது, வேருகும் மாந்தர் பலர் - வேறுபட்டுத் திரிந்து போகும மக்கள் பலர் உலகத்திலே யிருக்கிறார்கள்.

(வி - ம்.) சச்சந்தன் கட்டியங்காரனுடைய உண்மை நிலையை உணர்ந்து கொள்ளாமல் அரசை அவனிடம் கொடுத்து இறுதியில் மாண்டொழிந்தான்; எவ்வகையால் ஆராய்ந்து தெளிந்தாலும் பிறகு காரியத்தை மேற்கொண்டு செய்யுங்கால் மனம்வேறுபட்டுத் திரிந்து போகின்ற மனிதர்கள் பலர் இருக்கிறார்கள் என்பதாம்.

சச்சந்தன் கதை

ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரத்திலே சச்சந்தன் என்னும் அரசன் ஒருவன் இருந்தான். அவன்

விதைய நாட்டரசனுகிய சிதத்தன் மகள் விசயை என்பவளை மணந்து வாழ்க்கை நடத்தினன். எப்பொழுதும் விசயையினுடைய இன்பத்திலே திளைக்கவேண்டுமென்னும் அவா அவற்கு மட்டிலாதெழுந் தமையின் தன்னுடைய அரசாட்சியைக் கட்டியங்காரன் என்னும் பொல்லாத அமைச்சனிடத்திலே ஒப்புவித்தான். அவனுடைய குணநலன்களை அரசன் ஆராய்ந்தறிந்து கொள்ளவும் இல்லை. அவ்வாறு ஒப்புவித்தால் ஏதமுண்டாமெனப் பிற அமைச்சர் கூறிய அறிவுரைகளையும் அரசன் ஏற்கவில்லை. மனைவியோடு மன்னன் இன்புற்றிருக்குங்கால் அக்கட்டியங் காரனுல் எதிர்க்கப்பட்டு அவனை வெல்லுமாற்றலில்லாமல் மடிந் தொழிந்தனன்.

சுற்றந்தழால்

53. எய்த்து மகத்திறந்துஞ் சூர னிளையோரான்
மொய்த்தவளம் பெற்றுன் முருகேசா—மெய்த்த
விருப்பருச் சுற்ற மியையி னருப்பரு வாக்கம் பலவுந்
தரும்.



(இ - ள்.) முருகேசா - முருகபெருமானே! சூரன் - சூரபதுமனனவன், எய்த்து மகத்து இறந்தும் - வருந்தி வேள்வியிலே மாண்டும்,

இளையோரால் - தன்னுடைய தம்பி மார்களால், மொய்த்த வளம் பெற்றான் - மிகுந்த செல்வ நலத்தை அடையப் பெற்றான்; மெய்த்த - உண்மையாகப் பொருந்திய, விருப்பு அறாச் சுற்றம இயையின் - அன்பு நீங்கப் பெறாத உறவினர்களைப் பெற்றால், அருப்பு அறா - வளர்ச்சி குறையாத, ஆக்கம் பலவும் தரும்செல்வம் பலவற்றையும அவனுக்குக் கொடுக்கும்.

(வி-ம்.) சூரபத்மனவன் வேள்வியிலே வருந்தியிறந்தும் தன்னுடைய தம்பிமார்களால் மிகுந்த செல்வ வளத்தைப் பெற்றான்; ஒருவனுக்கு அன்புநீங்காத சுற்றத்தார்கள் அமைவார்களானால் அவனுக்கு வளர்ச்சி குறையாத செல்வம் பலவும் உண்டாகுமென்பதாம்.

## சூரபத்மன் கதை

சூரபத்மன் மிகவும் முயன்று அரிய வேள்வியைச் செய்தான். அவ்வாறு செய்தும் சிவபிரான் எழுந்தருளவில்லை. அதனால் வருந்தி வேள்வித் தீயில் விழுந்து இறந்தான். பிறகு அவனிடத்திலே அன்புள்ள, சிங்கமுகன், தாரகன் என்னும் தம்பி மார்கள் அவ்வேள்வியை முடித்தார்கள். அதனால் சிவபிரான் எழுந்தருளி இறந்துபோன சூரபத்மன்

உயிர்பெற்றெழச் செய்தார். ஆயிரத்தெட்டு அண்டங்களின் அரசுரிமையையும் பிறவற்றையும் வழங்கினார். அதனால் சூரபத்மன் தன் உடன் பிறந்தார்களோடு மேன்மையுடன் வாழ்ந்தான். அன்புடைய உறவினர்களைப் பெற்றால் அவர்களால் நலமெலாம் உண்டா மென்பது சூரபத்மனிடம் நன்கு விளங்கியது.

பொருட்பால் 73

## பொச்சாவாமை

54. கோடியர்தன் போற்றோன்றக் குன்றிமதர்க்
கும்பமுனி மூடுவெண்ணோ யுற்றான்
முருகேசா—நாடுங்கால் முன்னுறக் காவா
திழுக்கியான் றன்பிழை பின்னு றிரங்கி விடும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, மதர்க் கும்பமுனி-களிப்பினையுடைய அகத்திய முனிவர், கோடியர் தன் போல் தோன்ற குன்றி-கோடி அகத்தியர்கள் தம் போற் காணப்பட அதனால் மனஞ் சோர்ந்து, மூடு வெண்ணோய் உற்றான் - உடலெல்லாம் மூடுவதாகிய வெண்குட்ட நோயைப் பெற்றார் ; நாடுங்கால் - ஆராயுமிடத்திலே, முன் உறக் காவாது - காக்கபபட வேண்டிய துன்பகளையெல்லாம் அவை வருவதற்கு

முன்னரே காத்துக் கொள்ளாது, இழுக் கியான் - மறந்து சோர்ந்திருந்தவன், பின் தன் பிழை ஊறு இரங்கிவிடும் - பிறகு தன் தவற்றினுலே இடையூறு உண் டாகியதை எண்ணி வருந்துவான்.

(வி - ம்.) ஆணவக்களிப்புக் கொண்டிருந்த அகத்திய முனிவர் தம்போல் கோடிக் கணக்கான அகத்தியர் தோன்றக் கண்டு அதனுல் உள்ளங்குன்றி வெண்ணேய் அடைந்தார். காக்க வேண்டிய இடையூறுகளையெல்லாம் முன்னரே காத்துக் கொள்ளாமல் மறந்திருந்தவன் பிறகு தன் பிழையால் இடையூறு ஏற்பட்டதைக் கண்டு உள்ளம் இரங்குவான் என்பதாம்.

## அகத்தியர் கதை

அகத்திய முனிவர் பல சிவப்பதிகளையும் வணங்கித் திருக் கோடிகா என்னும் பதியை அடைந்தார். மனத்தூய்மையோடு நாளும் சிவபெருமானைப் பூசித்துக் கொண்டிருந்தார். அப் பொழுது அங்குள்ள பெரியோர்களைத் தாம் பணியாமல் அவர்களை ஏவல் கொண்டார் கற்பிற்சிறந்த மனைவி வாய்க்கப்பெற்ற நம் 74 முருகேசர் முதுநெறி வெண்பா

போ ற் சிறந்தவரில்லை யென்னும் செருக்கையும் உள்ளத்திலே கொண் டார். ஒருநாள் சிவபெருமானைப் பூசிக்கும் போது சிவபெருமான் அகத்தியருடைய

செருக்கை அடக்க எண்ணினர். சிவலிங்கத்திலே கோடி அகத்திய முனிவர் மனைவியரோடு விரைவாகத் தோன்றி அதைப் பூசித்து அதிலே மறையும்படி ஒரு புதுமையைக் காட்டியருளினர். அதனை நோக்கிய அகத்திய முனிவர் நாணங்கொண்டார். அதனல் உடல் முழுவதும் விளர்த்தது. தம்முடைய தீய எண்ணத்தைப் பலவாருக இகழ்ந்து கொண்டார். உருவிலி (அசரீரி) வாக்குப்படி திருவாவடு துறையை அடைந்து சிவபெருமானை வழிபட்டு அந்நோய் நீங்கப்பெற்ருர்.

## செங்கோன்மை

55. "மைந்தனுய்ந்தான் வற்சமமைச் சோடுமநு
நீதிகண்டோன்
முந்தைமுறை தன்னுன் முருகேசா—வுந்தும்
இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கு முட்டாச் செயின்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, மநு நீதி கண்டோன் - மனு நீதி கண்ட சோழ மன்னன், முந்தைமுறை தன்னில், முறை தன்னல் - மநு நீதி முறைப்படி அரசாட்சி செய்த படியினல், வற்சம் அமைச்சோடு, பசுங் கன்றுடனும அமைச்சனுடனும், மைந்தன் உய்ந் தான -

அரசனுடைய மகனும பிழைத்தான், உந்தும - செலுத்தும ; வையகம எல்லாம இறைகாக்கும - உலகத்தையெல்லாம் அரசன காப்பாற்றுவான். முட்டாச் செயின் - அரசன அரசாட்சியைத் தவறில்லாமற் செய்வானாயின், அவனைஅவ்வரசனை, முறை காக்கும் - அந்த ஆட்சி முறையே காப்பாற்றும்.

பொருட்பால் 75

(வி - ம்.) மநு நீதி கண்ட சோழனானவன் முன்னாளிலே முறைப்படி அரசாட்சி செய்தபடியினால் பசுங்கன்றோடும் அமைச்சனோடும் அவ்வரசனுடைய மகனும் உயிர்பெற்றுப் பிழைத்தான். உலகத்தை யெல்லாம் அரசன் தன்னுடைய ஆட்சி முறையினால் காப்பாற்றுவான் ; அவன் தன்னுடைய ஆட்சி முறையைக் குற்றமில்லாமற் செய்வானாயின் அவ்வாட்சி முறையே அவனைக் காக்கும் என்பதாம். வற்சம் - பசுவின் கன்று.

## மநு நீதி கண்ட சோழன் கதை

மநுநீதி மன்னன் என்னும் சோழனுடைய நல்வினையினால் வீதிவிடங்கன் என்னும் மகன் பிறந்தான். அவன் ஒரு நாள், தேரில் ஏறித் தெருவிலே சென்றான். அப்பொழுது பசுவின் கன்று ஒன்று

துள்ளிவந்து தேர்க்காலிலே அகப்பட்டு இறந்து போய் விட்டது. கன்றையிழந்த பசுவானது வருந்தி அரண்மனைக்குச் சென்றது. அரண்மனை வாயிலிற் கட்டியிருந்த ஆராய்ச்சி மணியைத் தன்னுடைய கொம்பினால் அடித்தது. அதனைக் கேட்ட சோழமன்னன் வெளியே வந்து பசுவைப் பார்த்தான். நிகழ்ந்த செய்தியை உணர்ந்தான். அதனாற் பெருங்கவலை யடைந்தான். இதற்கு யாது செய்யலாம் என்று அமைச்சர்களோடு ஆராய்ந்தான். அவர்கள் சில கழுவாயைக் கூறினார்கள். அவைகள் அரசனுக்குப் பொருத்தமின்மையாகத் தோன்றியபடியால் அவைகளை மறுத்துவிட்டு, இப்பசுவைப் போல் யானும் என்னுடைய ஒரே மகனையிழந்து வருந்தினால் அல்லாமல் இக் குற்றம் நீங்காது என்று முடிவு செய்தான். முதல் அமைச்சனைப் பார்த்து வீதிவிடங்கனுடைய மார்பிலே தேரைச் செலுத்துவா யாக என்று கட்டளையிட்டான். அவ்வமைச்சன் அவ்வாறு செய்யாது தன்னுடைய உயிரைப் போக்கிக் கொண்டான். அரசன் அம்மகனுடைய மார்பின்மீது தானே தேரைச் செலுத்தி னான். அவ்வளவில் சிவபெருமான் தோன்றித் திருவருள் செய்தார். அமைச்சனும் வீதிவிடங்கனும் உயிர் பெற்றெழப் பசுவின் கன்றும் உயிர் பெற்றெழுந்தது.



## கொடுங்கோன்மை

56. வேர்த்திடுக்கண் செய்து விளிந்தான்
கருநாடன் மூர்த்திபான் மேனுண்
முருகேசா—கூர்த்துணரில் மன்னர்க்கு மன்னுதல்
செங்கோன்மை யஃதின்றேன் மன்னுவா மன்னர்க்
கோளி.

(இ - ள்.) *முருகேசா - முருகப் பெருமானே!, கருநாடன் - கருநாட நாட்டு அரசன், மேனுள் - முன்னுளில், மூர்த்திபால் - மூர்த்திநாயனுரிடத்திலே, வேர்த்து இடுக் கண் செய்து - சினங் கொண்டு துன்பத்தைச் செய்து, விளிந்தான் - மாண்டொழிந்தான், கூர்த்து உணரில்ஆராய்ந்து பார்த்தால், மன்னர்க்கு மன்னுதல் - அரசர்க்குப் புகழ்கள் நிலைபெறு தல், செங்கோன்மை - செங்கோன்மையி னுலேயாம், அஃது இன்றேல் - செங்கோன் முறையில்லாவிடின், மன்னர்க்கு ஒளி - அரசருக்குப் புகழானது, மன்னுவாம் - நிலைபெறமாட்டாவாம்.*

(வி - ம்.) *கருநாட நாட்டு அரசன் மூர்த்தி நாயனுர்க்கு முன்னுளில் இடையூறுகள் செய்து அழிந்தொழிந்தான்; அரசருக்குப் புகழ் நிலைபெறுதல் செங்கோன்மையினுலேயாம்; செங்கோன்மையில்லா தொழியின், அரசர்கட்குப் புகழ் நிலை பெறமாட்டா மன்பதாம்.*

## மூர்த்தி நாயனர் கதை

முன்னாளிலே மதுரைமா நகரிலே மூர்த்தி-நாயனார் என்பவர் சந்தனம் அரைத்துச் சோமசுந்தரப் பெருமானுக்குக் கொடுத்துக் கொண்டிருந்தார். அந்நாளில் கருநாட நாட்டு அரசன் பாண்டியனை வென்று மதுரை மாநகர்க் கரசனானன். அவன் ஆருகதசமயத்தவனா யிருந்தபடியால் மூர்த்தி நாயனாரையும் அச்சமயத்திலே சேர்க்க எண்ணினன். அவருக்கு யாருஞ் சந்தனக் கட்டை கொடுக்காமல் தடுத்தான். அவர் ஒரு நாள் முழுதும் முயன்றும் சந்தனக்கட்டை அகப்படவில்லை. பொருட்பால்



அதனால் திருக்கோயிலுக்கு வந்து தம்முடைய விரதங் கெடாத வாறு தம்முடைய கையைச் சந்தனக் கல்லிலே சின்ன பின்னமாகுமாறு தேய்த்தார். அப்பொழுதுண்டாகிய உருவிலி வாக்குப்படி அவ்விரவிலே அவ்வரசன் இறந்தான். மூர்த்தி நாயனார் அரசாட்சி செய்து சிவதருமங்களை மிகுதியாகச் செய்து அதனால் வீடுபேற்றை யடைந்தார்.

## வெருவந்த செய்யாமை

57. காத்தகபி லற்கிடும்பை செய்து கணனழிந்தான்
மூத்தோன் மழுவான் முருகேசா—வேத்தும்
இறைகடிய னென்றுரைக்க மின்னாச்சொல் வேந்த

ஹுறைகடுகி யோல்லைக் கெடும்.

(இ - ள்) முருகேசா - முருகப்பெருமானே !, கணன்கணன் என்னும் அரசன, காத்த கபிலற்கு இடும்பை செய்துமெலிவைப் போக்கிப் பாதுகாத்த கபிலமுனிவருக்குத் துன்பஞ் செய்து, மூத்தோன் மழுவான் அழிந்தான்கினக்கு மூத்தவனுகிய ஆனைமுகக்கடவுளுடைய மழுப் படையினுலே இறந்தொழிந்தான். ஏத்தும் - போற்றப் பெறுகிற, இறைகடியன் என்று உரைக்கும் - நம்முடைய அரசன் மிகவுங் கொடியவன் என்று குடிகளால் கூறப் படுகின்ற, இன்னுச் சொல் - துன்பச் சொல்லைப் பெறுகிற, வேந்தன் உறைகடுகி - அரசன் தன்னுயுள் குறைந்து, ஒல்லை கெடும் - விரைவில் அழிவான்.

(வி - ம்.) மெலிவைப் போக்கிக் காத்த கபிலருக்குத் துன் பஞ்செய்து கணன் என்பவன் ஆனைமுகக் கடவுளுடைய மழுப் படையினுல் இறந்தொழிந்தான் ; நம்முடைய அரசன் மிகவுங் கொடியவனென்று குடிமக்களால் கூறப்படுகின்ற துன்பச் சொல்லைப் பெறுகிற அரசன் தன்னுயுள் விரைவில் குறைந்து அழிவான் என்பதாம்.

## கணன் கதை

முன்னாளில் கணன் என்னும் பெயருடைய ஓர் அரசன் இருந்தான். அவன் வேட்டைக்குச் சென்ற பொழுது பசியாலுந் தாகத்தாலும் மெலிந்து கபிலமுனிவருடைய இருப்பிடத்திற்குச் சென்றான். அரசனுடைய நிலையைக் கண்டு அவர் இரங்கினார். தாம் இந்திரன்பாற் பெற்ற சிந்தாமணியைக் கொண்டு ஒரு நகரத்தையும் பல புதுமைமிக்க உணவையும் உண்டாக்கிக் கணனையும் அவனுடைய படையினரையும் உணவு கொள்ளச் செய்தார். பிறகு அரசன் பெருஞ்சிறப்புக்குக் காரணமாகவுள்ள சிந்தாமணியைத் தனக்குக் கொடுக்குமாறு கேட்டான். அவர் உடன்படவில்லை. வலுக்கட்டாயமாகப் பறித்துக் கொண்டு தன்னுடைய நகரத்திற்குச் சென்றான். தான் கவர்ந்து வந்த மணியைத் தந்தைக்குக் காட்டினான். தந்தை மனம் நடுங்கினான். "முனிவர்கட்குக் கேடு செய்தால் தீமையுண்டாவது திண்ணம். இதை மீண்டும் அவர்பால் கொடுத்து விடுவாயாக" என்று வற்புறுத்தினான். கணன் அம்மொழியை மறுத்து விட்டுச் சிந்தாமணியைக் கொடுக்காமலிருந்தான். பிறகு முனிவருடைய வழிபடு கடவுளாகிய ஆனைமுகக் கடவுள் கணனைக் கொன்றார். பொல்லாத மன்னன் விரைவில் கெடுவான் என்பது இவனிடம் உண்மையாகியது.

58. ஒவிலுழ வன்வேண்ட வுக்கிரனு ரிந்திரன்
கோண்

மூவைவிடு வித்தார் முருகேசா—தாவலிலா
கண்ணோட்டத் துள்ள துலகிய லஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே ! ஒவில் உழவன் வேண்ட - ஒழிதலில்லாத வேளாளன் வேண்டிக் கொள்ள, உக்கிரனார் - உக்கிரபாண்டியன், இந்திரன் கொண்மூவை விடுவித்தார் - இந்திரனுடைய முகில்களைச்*

*பொருட்பால்* 79

*சிறையிலிருந்து விடுவித்தார்; தாவல்இலா - அழிதல் இல்லாத, உலகியல் - உலகநடையானது, கண்ணோட்டத் துள்ளது - அருளினிடத்திலே உள்ளதாம், அஃதிலார் - கண்ணோட்டமாகிய அருளில்லாதவர்கள், உண்மை - நிலவுலகிலிருத்தல், நிலக்குப் பொறை - நிலத்திற்குச் சுமையாகும.*

(வி - ம்.) *வேளாளன் வேண்டிக் கொள்ள*

உக்கிர பாண்டியன் இந்திரனுடைய முகில்களைச் சிறையிலிருந்து விடுதலை செய்தான்; உலகநடையானது அருளுடைமையோடு விளங்குதலில் தான் உள்ளது. அருளில்லாதவர்கள் உலகத்திலே யிருப்பது நிலத்துக்குச் சுமையாகும் என்பதாம்.

## உக்கிரபாண்டியன் கதை

ஒரு காலத்திலே சேர சோழ பாண்டியர் என்னும் மூவேந்தர் களுடைய நாட்டிலே மழையில்லாமற் போய்விட்டது. அகத்திய ருடைய அறிவுரைப்படி மூவரும் இந்திரனுடைய அவைக்குச் சென்றார்கள். சேரனுஞ் சோழனும் இந்திரன் காட்டிய இருக்கைகளிலே இருந்தார்கள். உக்கிரபாண்டியன் மட்டும் இந்திர னுடைய இருக்கையிலே ஏறி இந்திரனோடு ஒன்றாக விருந்தான். இதனைப் பார்த்த இந்திரனுக்குச் சினமுண்டாகியது. சேர சோழர்களுடைய செய்தியை வினவி அவர்களுடையநாடுகளிலே மட்டும் மழை பெய்யச் செய்தான். இருவரையும் அனுப்பிய பிறகு உக்கிரபாண்டியனுடைய செருக்கை யடக்க வேண்டு மென்று எண்ணினான். இந்திரன் பாண்டியனுக்குச் சிறப்புச் செய்வான் போலத் தூக்க முடியாத மாலை ஒன்றைக் கொண்டு

வரச் செய்து அதனைப் பாண்டியனுடைய கழுத்திலே போட்டான். பாண்டியன் அம்மாலையை மலர் மாலை போலத் தாங்கிக் கொண்டு இந்திரனை மதியாமலிருந்தான். பிறகு தன்னுடைய நாட்டை யடைந்தான். ஒருநாள் இந்திரனுடைய புட்கலா வருத்த முதலிய நான்கு முகில்கள் பொதிய மலைச் சாரலில் மேயக்கண்டு அவைகளைச் சிறையிலிட்டான். இதனை உணர்ந்து இந்திரன் உக்கிரபாண்டியனை யெதிர்த்துப் போரிடத்



தொடங்கினான். போரில் பாண்டியனை வெல்ல முடியவில்லை. அதனால் தோற்றோடினான். பிறகு "உன்னுடைய நாட்டிலேயும் மழை பெய்யச் செய்கிறேன், அன்பு கூர்ந்து முகில்களைச் சிறை விடுக" என்று செய்தியனுப்பினான். அச்சமயத்தில் வேளாளன் ஒருவன் இந்திரன் பொருட்டுப் பிணை நின்று வேண்டிக் கொண்டான். உக்கிரபாண்டியனும் அருள் கொண்டு முகில்களைச் சிறையிலிருந்து விட்டுவிட்டான்.

ஒற்றுடல்

59. பின்னைகரம் வீடியபின் பேதுற்றான்
சூரனேற்றை முன்னினிதா ளாமல்
முருகேசா—வன்ன தனால் ஒற்றினா லோற்றிப்
பொருடேரியா மன்னவன் கோற்றங் கோளக்கிடந்த
தில்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே !, சூரன்சூரபதுமனுனவன், ஒற்றை - ஒற்றுடலே, முன் இனிது ஆளாமல் - முன்னரே நன்ருகச் செய்து கொள்ளாதபடியினுல், பின்னே காம் வீடிய பின்-தங்கையாகிய அசமுகியின் கை வெட்டுண்ட பிறகு, பேதுற்ருன்-உள்ளம் வருந்திஞன், அன்னதனுல் - ஆகையால், ஒற்றினுல் ஒற்றிப் பொருள தெரியா மன்னவன் - ஒற்றர்களால் நாட்டு நிகழ்ச்சிகளே யறிந்து அவற்றின் பயனே அறிந்து கொள்ளாத அரசன், கொற்றம் கொள கிடந்தது இல் - வெற்றி பெறத்தக்க வழி வேறு இல்லே.

(வி - ம்.) சூரபத்மனுனவன் ஒற்றரைக் கொண்டு செய்தி யறிந்து கொள்ளுதலே முன்னரே மேற்கொள்ளாத படியினுல் தங்கையினுடைய கை வெட்டுண்ட பிறகு வருத்தத்தை யடைந் த ான். ஒற்றர்களால் நாட்டு நிகழ்ச்சிகளே அறிந்து அவற்றின் பயனேத் தெரிந்து கொள்ளாத அரசன் வெற்றி யடைதற்கு வழி யொன்றுமில்லே யென்பதாம்.



## சூரபதுமன் கதை

சூரபதுமனுக்கு அஞ்சி இந்திரன் இந்திராணியோடு சில வுலகத்தையடைந்து தங்கிஞன்.

இந்திராணியை ஐயனார் பால் ஒப்புவித்துவிட்டுத் தான் திருக்கைலைக்குச் சென்றான். ஐயனார் கட்டளைப்படி வீரமாகாளர் இந்திராணியைக் காவல் செய்திருந் தார். இந்திராணியைச் சூரபதுமனுடைய தங்கையாகிய அசமுகி ஒருநாள் கண் டாள். அவளைத் தன்னுடைய தமையனுக்கு மனைவி யாக்க வேண்டுமென்று எண்ணினாள். இந்திராணியினுடைய கையைப் பற்றி இழுத்தாள். அவ்வளவில்வீரமாகாளர் அசமுகியி னுடைய கைகளை வெட்டினார். அவள் புலம்பிக் கொண்டு போய்ச் சூரபதுமனிடம் முறையிட்டாள். அவன் முன்னரே ஒற்றர்களை ஏற்படுத்தி வைத்திருந்தும் பகைவனாகிய இந்திர னிருக்குமிடத்தையும் அவன் செய்யுங் காரியங்களையும் ஒற்றர் கள் உணர்ந்து சென்று சூரனிடம் உரைக்கவில்லை. அதனாலேயே இவ்வாறு ஏற்பட்டது என்று வருந்தி அவ்வொற்றர்களைப் பல வாறு கடிந்துரைத்து இகழ்ந்தான். ஒற்றர்களால் நன்கு செய்தி உணர்ந்து கொள்ளாத படியால் சூரபதுமனுக்குப் பல தொல்லைகள் உண்டாயின.

ஊக்கமுடைமை

60. நாள்களோடு கோளியக்கு நற்பதவி

யைததுருவன
மூள் கருத்தாற் பெற்ருன்
முருகேசா—நீள்பெருக்கின்
வெள்ளத் தனைய மலர்நீட்ட மாந்தர் தம்
உள்ளத் தனைய துயர்வு.

(இ - ள்.) *முருகேசா*-முருகப பெருமானே!, *துருவன்* - துருவனுனவன், *நாள்களொடு கோள் இயக்கும் நற்பதவியை*விண்மீன்களொடு ஒன்பது கோள்களை இயக்கும் நல்ல பதவியை, *மூள கருத்தால் பெறறுன்* - தனக்குண்டாகிய உயர்ந்த கருத்திஞலே அடையப் பெற்ருன்; *நீள் பெருக்கின்*நீண்ட பெருக்கினையுடையதாகிய, *வெள்ளத்து அனையது மலர்நீட்டம்*-நீரின் அளவாவுள்ளது நீர்ப்பூக்களின் உயர்ச்சி;




அதைப்போல; *மாந்தர் தம்* - மனிதர்களுடைய, *உள்ளத்து அனையது உயர்வு*-ஊக்கத்தின் அளவாகும் பெருமையும்.

(வி - ம்.) துருவன் தான் கொண்டிருந்த உயர்ந்த கருத்திஞலே நாள்களையும் கோள்களையும் இயக்கும் உயர்ந்தபதவியைப் பெற்ருன். மலர்களின் உயர்ச்சி

நீரினளவினதாக இருக்கும் மனிதர்களுடைய பெருமை அவர்களுடைய முயற்சியி னளவின தாக இருக்கும் என்பதாம்.

## துருவன் கதை

உத்தானபாதன் என்னும் அரசனுக்குச் சுருதி சுநீதி என்னும் இரண்டு மனைவியர் இருந்தனர். மூத்தாள் சுருதி; இளையாள் சுநீதி. இருவருக்கும் உத்தமன் துருவன் என்னும் இரண்டு மக்களிருந்தனர். மூத்தாள்மகனாகிய உத்தமன் தந்தையின் மடியில் இருக்கும்போது இளையாள் மகனாகிய துருவனுந் தந்தையின் மடியில் ஏறச்சென்றான். அதனைச் சுருதியாகிய மூத்தவள் தடுத்தாள். துருவன் சிறுவனாக இருந்தும் அதனைப் பொறுமல் தாயினிடத்திலே கூறி உடன்பாடு பெற்றுக்கொண்டு எழு முனிவர்களிடம் போய் அவர்களுடைய அருளுரைப்படியே தவம் புரிந்தான். இந்திரனால் ஏவப்பட்ட பூதம் முதலியவை கட்குச் சிறிதும் அஞ்சாது நின்று நாள் களையுங் கோள்களையும் பிணித்த உருளையைச் சுழற்றி விளங்கும் பெரும் பதவியைத் திருமாலால் பெற்றான். அதனால் தன்னுடைய தாயோடு மிகுந்த சிறப்பை யடைந்தான். துருவன் மிகச்சிறியவனாக இருந்தும் தன்னுடைய உள்ளத்தின் ஊக்கத்தினாலேதான் இத்தகைய சிறந்த பேற்றைப் பெற்றான்.

## மடியின்மை

61. அம்புவிமுற் றும்புரந்தா ணுண்மைரகு
மாற்றலரை
மோய்ம்பதனல் வென்றே முருகேசா—இம்பர்
மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.



(இ - ள்.) முருகேசா-முருகப் பெருமானே!, ஆண்மை ரகு - பேராண்மையுடைய இரகு என்னும் அரசன், மாற்றலரை மொய்ம்பு அதனல் வென்று - பகைவர்களைத் தன்னுடைய ஆண்மையினுலே வெற்றி கொண்டு, அம்புவி முற்றும் புரந்தான் - அழகிய நிலவுலகம் முழுவதையும் அரசாட்சி செய்தான், இம்பர் - இவ்வுலகத்திலே, அடி அளந்தான் தாயது எல்லாம் ஒருங்கு-அடியால் உலகத்தை அளந்த கடவுள் தாவிய பரப்பு எல்லாவற்றையும் ஒன்ருக, மடிஇலா மன்னவன் எய்தும் - சோம்பலில்லாத அரசன் அடைவான்.

(வி - ம்.) ஆண்மை மிகுந்த இரகு என்னும் அரசன் பகைவர்களை யெல்லாம் தன்னுடைய ஆண்மையினுல் வெற்றி கொண்டு உலகம் முழுவதையும் அரசாண்டான்; திருமாலால் தாவியளக்கப்பட்ட இவ்வுலகங்கள் எல்லாவற்றையும் சோம்ப லில்லாத

அரசன் ஒருசேர அடைவான் என்பதாம். அடியளந்தான் - திருமால். இம்பர் - இவ்வுலகு.

## இரகுவின் கதை

திலீபன் என்னும் அரசன் காமதேனுவை வழிபட்டு இரகு என்னும் மைந்தனைப் பெற்றான். அந்த இரகு தன்னுடைய
தந்தை இயற்றிய வேள்வியின் பொருட்டுத் திக்குகள் தோறுஞ் சென்றுவரும்போது இந்திரன் வேள்விக் குதிரையைக் கவர்ந்தான். இரகு அதனைக் குறித்துச் சிறிதும் தளர்ச்சி யடையாமல் அவனை யும் வென்று- வேள்விப்பலன் கைகூடும் பலத்தை அவனாற் பெற்றான். சில காலஞ் சென்ற பிறகு தன் தந்தை தவஞ் செய்யும் பொருட்டுக் காட்டை யடைந்ததும் தான் அரசுரிமையை மேற் கொண்டான். திக்குகள் தோறுஞ் சென்று பெற்று எண்ணிறந்த பொருட் குவியலைக் கொண்டு விசுவசித்து என்னும் வேள்வியைச் செய்தான். அந்தணர்கட்குப் பொருள்களை யெல்லாம் தானஞ் செய்தான். அதனால் வறுமையுடையவனானன். இச்சமயத்தில் கௌற்ச முனிவர் என்பவர்
குருகாணிக்கை கொடுத்தலுக்காகப் 84
முருகேசர் முதுநெறி வெண்பா

பதினான்கு கோடிப் பொன்னை விரும்பி இரகுவினிடம் வந்தார். அவன் அவரை வணங்கி இருக்கச் செய்தான். தன்னிடம் பொரு ளின்மையால் குபேரனை வென்று

*வேண்டிய பொருளை யடைய வேண்டு மென்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தான். இதனைக் குபேரன் அறிந்து அஞ்சினன். அன்று இரவே அவ்வரசனுடைய பொருளறையில் பொன்மழை பொழியச் செய்தான். கௌற்ச முனிவர் விரும்பி வந்த பொருளைக் கொடுத்தான். அம் முனிவர் வழங்கிய வாழ்த்துரையின்படி அயன் என்னும் மகனைப் பெற்றுச் சிறந்த வாழ்வை யடைந்தான்.*

## ஆள்வினையுடைமை

62. ஆள்வினையால் மிக்கதவ மாற்றிச்
சுவேதமன்னன்
மூள்வினையற் றுய்ந்தான்
முருகேசா—கோள்வினையாம்
ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(இ - ள்.) *முருகேசா - முருகப் பெருமானே !, சுவேத மன்னன் — சுவேதராசன் என்பவன், ஆள்வினையால்மிகுந்த முயற்சியால், மிக்க தவம் ஆற்றி - மிகுந்த தவத்தைச் செய்து, மூள்வினை அற்று உய்ந்தான் - நெருங்கிய தீவினையை வென்று நல்வாழ்க்கை பெற்றான்; கோள்வினையாம் - கோள்களால் உண்டாகும்*

தீவினையாகிய, ஊழையும் - ஊழ்வினையையும், உலைவு இன்றி தாழாது உஞற்றுபவர் - சோர்வு இல்லாமல் முயற்சியைச் செய்கின்றவர்கள், உபபக்கம் காண்பர் - தோல்வியடையச் செய்வார்கள்.

(வி - ம்.) சுவேதன் என்னும் அரசன் மிகுந்த முயற்சியோடு தவஞ் செய்து சூழ்வினையை நீக்கி நல்வாழ்வு பெற்றான்; சிறிதுந் தளர்ச்சியில்லாமல் இடைவிடாது முயற்சி செய்பவர் ஊழ்வினையையும் வெல்வர் என்பதாம்.



## சுவேத மன்னன் கதை

சுவேத மன்னன் என்பவன் தன்னுடைய அரசாட்சியை மகனிடம் ஒப்புவித்துவிட்டு மனைவியோடு காட்டையடைந்து முனிவனாகித் தவஞ் செய்து கொண்டிருந்தான. அப்போது அவனுடைய மனைவிக்குச் சாவுத் துன்பம் உண்டாகியது. அதனைக் கண்டு அந்தோ இத்தகைய துன்பம் என்னையும் வருத்துமே யென்று அஞ்சினான். சுக்கிராச்சாரியாரை யடைந்து வழிபட்டுச் சாவுத் துன்பம் நீங்கும்படி மிருத்தியுஞ்சய மந்திரோபதேசம் பெற்று, அவர் கூறியவாறே பல சிவப்பதிகளையும் வழிபட்டுத் திருநெல்

வேலியை அடைந்து சிவவழிபாடு செய்து அகத்திய முனிவரால் அவ்வூரின் பெருமையை அறிந்து கடவுளை வழிபட்டுத் தங்கி யிருந்தான். அங்கே சாங்காலம் நெருங்கியபடியினால் நமன் அச்சுறுத்திப் பாசக்கயிற்றை யெறிந்து பற்றினான். அரசன் சிறிதும் அஞ்சாது சிவபெருமானுடைய திருப்பெயர்களைக் கூறிக் கொண்டிருந்தான். சிவபிரான் எழுந்தருளி இயமனை உதைத்து அரசனைக் காப்பாற்றி யருளினார். அரசன் தன்னுடைய விடாமுயற்சியினால் சாவுத் துன்பத்தி லிருந்து விடு பட்டான்.

## இடுக்கணழியாமை

63. செற்றச் சுயோதனன்செய் தீங்கையின்பிற் றேர்தருமன்
முற்றுமின்பங் துய்த்தான் முருகேசா—பற்றிவரும்
இன்னாமை யின்ப மெனக் கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, செற்று- வருத்தி, சுயோதனன் செய் தீங்கை - துரியோதனன் செய்த தீமையை, இன்பில் தேர் தருமன் - இன்பமாகவே கொண்ட தருமபுத்திரன், முற்றும் இன்பம் துய்த்தான் தான் அடைந்த எல்லாவற்றையும் இன்பமாகவே கொண்டு நுகர்ந்தான்; பற்றிவரும் - தொடர்ந்து

வருவதாகிய இன்னுமை - துன்பத்தை, இன்பம் எனக் கொளின் - 86 முருகேசர் முதுநெறி வெண்பா

இன்பம் என்று ஒருவன் கொண்டால், தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் - தன் பகைவரும் விருபத்தக்க சிறப்பை அடைவான.

(வி - ம்.) தருமரானவர் துரியோதனன் பகைகொண்டு செய்த தீமைகளையெல்லாம் இன்பமாகவே கொண்டு நுகர்ந்தார். துன்பத்தையே இன்பமாகக் கொண்டால் பகைவரும் விரும்பும் படியான சிறப்பு உண்டாகும் என்பதாம்.

## தருமர் கதை

துரியோதனன் பாண்டவர்களிடத்திலே பகை கொண்டான். அவர்களுக்கு எப்பொழுதுந் தீமையையே செய்து கொண் டிருந்தான். வீமனைக் கொன்று தொலைத்து விடுவதற்குப் பலவாறு முயன்றான். ஐவருக்கும் அரக்கு மாளிகை கட்டி அதில் தீயிடச் செய்தான். தன் மாமனாகிய சகுனியைக் கொண்டு தருமரோடு சூதாடச் செய்து நாடு நகரங்களையெல்லாம் கைப்பற்றினான். திரௌபதியை அவைக்குக் கொண்டுவரச் செய்து துகிலுரிந்தான். காட்டிலேயிருந்தபொழுதும் ஐவருக்கும் பலவாறு தீமை செய்ய முயன்றான். தருமர் துரியோதனன் செய்த தீமைகளெவற்றையும் பாராட்டவில்லை. அவைகளை

யெல்லாம் நன்மையாகவே கொண்டு மகிழ்ந்திருந்தா ர். இதனால் துரியோதனனையும் வென்று சிறப்படைந்தார்.

## அமைச்சு

64 சேக்கிழார் சென்னிக்குத் தொண்டர் சிறப்புணர்த்தி
மோக்கநெறி தந்தார் முருகேசா—ஊக்கி
அறிகோன் றறியா னெனினு முறுதி
உழையிருந்தான் கூறல் கடன்.

(இ-ள்.) முருகேசா—முருகப்பெருமானே!, சேக்கிழார்பெரியபுராணம் பாடிய சேக்கிழார், சென்னிக்கு - சோழ மன்னனுக்கு, தொண்டர் சிறப்பு உணர்த்தி - சிவத் பொருட்பால்



தொண்டர்களுடைய சிறப்புக்களையெல்லாம் எடுத்துக் கூறி, மோக்க நெறி தந்தார் - வீடு பேற்று நெறியைக் கொடுத் தருளினார்; ஊக்கி - முயன்று, அறிகொன்று - அறி வுடையார் சொல்லையும் பிழைத்து, அறியான் எனினும் - தானும் அறியாதவனாக இருந்தாலும், உறுதி - உறுதியா னவைகளை, உழை இருந்தான் - பக்கத்திலே இருப்பவன், கூறல் கடன் -

கூறவேண்டியது கடமையாகும்.

(வி - ம்.) சேக்கிழார் சோழமன்னனுக்குத் திருத்தொண்டர் பெருமைகளையெல்லாஞ் சொல்லி வீடுபேற்று நெறியைக் கொடுத்தார். ஒருவன் அறிவுடையார் சொல்லையுங் கேளாது தானும் அறியாதவனாக இருந்தாலும் பக்கத்திலே யிருப்பவன் அவனுக்கு நன்மை யானவைகளைக் கூற வேண்டியது கடைமை யாகும்.

### சேக்கிழார் கதை

சேக்கிழார் அநபாய மன்னனுடைய அமைச்சராக அமர்ந்திருந்தார். அவ்வரசன் சைவசமய நூல்களை ஆராயாமல் சமண நூல்களை ஆராய்ந்து மகிழ்ந்து கொண்டிருந்தான். சேக்கிழார் அவ்வரசனுக்கு இவ்வாறு புறச்சமய நூல்களை யாராய்தல் தக்கது அன்று என்று அறிவுரை கூறித் திருத் தொண்டர் புராணத்தை இயற்றிக் கொடுத்து அதனை ஆராயச் செய்தார். இவ்வாறு சைவ சமய நூல்களை அரசன் ஆராயத் தொடங்கியபடியால் வீட்டு நெறிக் குரியவனாகிச் சிறப்படைந் தான். சேக்கிழார் தம்முடைய கடமையைச் செய்தபடியால் தாமுஞ் சிறப்படைந்தார்.

### சொல்வன்மை

65. வாதவூ ராளிசெண்டால் வாங்கலின்னோர்

வண்மையெனு
மோதமிறைக் கீந்தார் முருகேசா—தீதிலதாச்
சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ
லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.



(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, வாத ஊராளி - திருவாதவூரர், செண்டால் வாங்கல் - கைச் செண்டினால் பெற்றுக் கொள்ளுதல், இன்னோர் வண்மை எனு - இவர்களுடைய வழக்கம் என்று கூறி, இறைக்கு மோதம் ஈந்தார் - பாண்டிய மன்னனுக்குக் களிப்பையுண் டாக்கினர், தீது இலது ஆ-தீமையில்லாததாக, பிறிது ஓர்சொல் அச் சொல்லை - வேறொரு சொல்லானது அந்தச் சொல்லை, வெல்லும் சொல் இன்மை அறிந்து - வெல்லுஞ் சொல்லாக இல்லாததை உணர்ந்துகொண்டு, சொல்லை சொல்லுக - கூறுகிற சொற்களைக் கூறுக.

(வி - ம்.) திருவாதவூரார் செண்டாலே வாங்குதல் இவர் களுக்கு வழக்கமென்று கூறிப் பாண்டியனுக்கு மகிழ்ச்சியை உண்டாக்கினர். தான்

சொல்லுஞ் சொல்லை வேறொரு சொல் லானது வெல்லமாட்டாது என்பதனை உணர்ந்து கொண்டு சொற்களைச் சொல்லவேண்டும் என்பதாம். வாதவூராளி - திருவாதவூரர். மோதம் - மகிழ்ச்சி.

## திருவாதவூரர் கதை

திருவாதவூரர் அரிமர்த்தன பாண்டியனுடைய அமைச்சராக இருக்கும் பொழுது அரசனுடைய பொருள்களில் நாற்பத்தொன்பது கோடிப் பொன்னைத் திருப்பணி செய்து விட்டார். இப்பொருள் அரசனால் குதிரை வாங்கும் பொருட்டுக் கொடுக்கப் பட்டது. திருவாதவூரர் பொருட்டுச் சிவபெருமான் காட்டிலே திரிந்த நரி களையெல்லாம் பரிகளாகச் செய்து கொண்டு அரசனிடம் வந்தார். நரிக்குதிரைகளின் சிறப்பை அரசனுக்குக் காட்டினார். அரசன் கொடுத்த ஆடையைத் தம்முடைய தடியால் வாங்கித் தலையிலணிந்து கொண்டார். இதனைக் கண்ட அரசன் சினங் கொண்டான். திருவாதவூரர் சமயத்திற்குத் தக்கவாறு பேசக் கூடிய அறிவாளியாகையால், இவ்வாறு தண்டால் பெற்றுக் கொள்வது இவர்களுடைய நாட்டு வழக்கம் என்று அரசனுக்கு ஒப்புரை கூறினார். இதனைக் கேட்ட அரசன் வேறு



யாதுங் கூறாமல் உண்மைதான் போலும் என்று எண்ணிக் களிப் படைந்தான்.

66\. வேள்வியிற்கோ வூனுகர்ந்தும் வேடரிற்றாழ்ந்
தேழ்மறையோர்
மூள்விதன முற்றார் முருகேசா—நீள்வின் இடுக்கட்
படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சியவர்.

(இ – ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, ஏழ்மறையோர் - ஏழு அந்தணர்கள், வேள்வியில் - வேள்வியினிடத் திலே, கோ ஊன் நுகர்ந்தும் - பசுவின் ஊனைத்தின்றும், வேடரில் தாழ்ந்து - வேடர்களினுமிழிவை யடைந்து, மூள் விதனம் உற்றார் - மிகுந்த வருத்தத்தை யடைந்தார்கள், நீள்வில் - அதிகமாக, இடுக்கண் படினும் - துன்பத்தை யடைந்தாலும, நடுக்கற்ற காட்சியவர்-அசைவற்ற தெளிந்த அறிவையுடையவர்கள், இளிவந்த செய்யார் - இழிவான காரியங்களைச் செய்யமாட்டார்கள்.*

.

(வி - ர்.) *ஏழு அந்தணர்கள் வேள்வியிற் பசுவின் ஊனை நுகர்ந்தும் வேடரைப் பார்க்கினுந் தாழ்வடைந்து மிகுந்த வருத்தமுற்றார்கள். அசையாத*

தெளிந்த அறிவை யுடையவர்கள் துன்பத்தையடைந்தாலும் இழிவான காரியத்தைச் செய்ய மாட்டார்கள் என்பதாம். கோ - பசு. சூன் விதனம் - பிகுந்த வருத்தம்.

## ஏழு அந்தணர்கள் கதை

கௌசிகன் என்னும் பெயருடைய அந்தணனுக்கு மக்கள் எழுவர் இருந்தனர். அவர்களுடைய பெயர் அசூயன், குரோதனன், வரக்குருஷ்டன், அபீஞ்சிரன், கவிபிசினன், பிதிர்வர்த்தி என்பதாம். இவர்கள் எழுவரும் கர்க்க 90



முனிவருடைய மாணவர்களாகி அவருடைய ஆவையுங் கன்றையும் மேய்த்துக் கொண்டிருந்தார்கள். அந்நாளிற் பெரும் பஞ்சம் வந்தது. அகப்பட்ட பலவற்றைத் தின்றும் அவர்களால் பசியை அடக்கமுடியவில்லை. பசியானது மிகுதிப் பட்டது. ஆகவே தாங்கள் மேய்த்துக்கொண்டிருந்த பசுவைக் கொன்று தின்பதற்கு முடிவு செய்தனர். பிதிர்வர்த்தி என்பவன் மற்றவர்களைப் பார்த்து, "இதனைத் தென்புலத்தார்கட்கு ஊட்டியுண்டால் நற்கதி பெறலாம்" என்று மற்றவர்கட்குக் கூறினன். இருவரைத் தேவர்களாகவும் மூவரைத் தென் புலத்தார்களாகவும் ஒருவனை அதிதியாகவும் ஏற்படுத்தித் தான் தலைவனாக இருந்து கொண்டு அதனைப் பாகஞ்செய்து முறைப்படி வேள்வி செய்து முடித்தான்.

பிறகு கர்க்கமுனிவரிடம் போய், "ஆவைப் புலி கொன்றுவிட்டது" என்று சொன்னான். சிலநாட் சென்ற பிறகு எழுவரும் இறந்தார்கள். அடுத்த இரு பிறவிகளில் முறையே வேடர்களாகவும் விலங்குகளாகவும் பிறந்தார்கள். பிறகு மானச சரசிலே சக்கரவாகப் பறவைகளாகி முன்னாளிலே செய்த கொடிய வேலையை வேள்வியாகச் செய்த நல்வினையினால் யோகாப்பியாசம் பழகிக் கொண்டிருந்தார்கள். அப்போது பாஞ்சாலநாட்டு விப்பிராசனும் அமைச்சர் பலரும் அங்குள்ள பொழிலிலே உலாவினார்கள். அவர்களுடைய செல்வத்தை விரும்பிய மூவருள் இருவர் அமைச்சர் மக்களாகப் பிறந்தார்கள். பிரவர்த்தி என்பவன் அரசனாகப் பிறந்தான். இவன் பிரமதத்தன் என்னும் பெயரோடு வளருங்கால், முன்பு வேள்வியிற் கொல்லப்பட்ட பசு அந்நல்வினையினால் சந்நிதி என்னும் பெயரோடு வேறோர் அரசன் மகளாகப் பிறந்திருந்தது. பிரமதத்தன் அவளை மணந்தான். திருமாலின் வழிபாட்டால் எறும்பு முதலிய எல்லாவற்றின் மொழிகளையுமுணர்ந்து காம்பிலிநாட்டை அரசாட்சி செய்து கொண்டிருந்தான். அந்நாளில் சக்கரவாகப் பறவைகளாக இருந்த மற்றை நால்வரும் அந்நகரத்தில் சுதரித்திரன் என்னும் அந்தணனுக்குப் பிள்ளைகளாகப் பிறந்து ஒரு நூலியற்றி அதனைத் தந்தைபாற் கொடுத்து, "இதனை அரசனிடங் கொடுத்து வேண்டியபொருள்

பெற்று வாழ்க" என்று கூறித் தவத்தின்மேற் சென்றார்கள். அவ்வாறு பொருட்பால்



இடைக்கப் பெற்ற நூலால் அரசன் தன்னுடைய முன்னைய நிலை முதலியவைகளை உணர்ந்து அவ்வந்தணனுக்கு வேண்டியன
கொடுத்து அனுப்பிவிட்டு, அமைச்சரிருவரும் மனைவியும் உடன் வர அந்நாவல்வரையு மடைந்தனன். எண்மரும் அரிய தவங்களைச் செய்து திருமாலுடைய உலகத்தை யடைந்தார்கள்.

வினைத்திட்பம்

67. சீவகன்சீ ருதிருந்தே தெவ்வையழித்
தான்முடிவின் மூவுலகும் போற்று
முருகேசா—யாவும்
கடைக் கோட்கச் செய்தக்க தாண்மை யிடைக்
கோட்கி
னெற்று விழுமந் தரும்.

(இ - ள்.) மூவுலகும போற்றும் முருகேசா - மூவுலகத்தாராலும் வணங்கப்படுகிற முருகப்பெருமானே !, சீவகன்- சீவகன் என்பவன், சீறுது இருந்தே -

சினம்தெழாமல்
அமைதியாக விருந்தே, முடிவில் - இறுதியில், தெவ்வை
அழித்தான் - பகைவர்களை அழித்தொழித்தான், யாவும்எல்லாவற்றையும், கடை கொட்க செய்தக்கது ஆண்மை- இறுதியிலே வெளிப்படும்படியாகச் செய்வது ஆண்மை யாகும்; இடை கொட்கின் - இடையிலே வெளிப்படுமானல், எற்ரு விழுமம் தரும் - நீங்காத துன்பத்தைக் கொடுக்கும்.

(வி - ம்.) சீவகன் சிறியெழாமல் அடக்கமாக இருந்தே இறுதியில் பகைவரை யழித்தொழித்தான். செய்யுங் காரியங்கள் இறுதியில் வெளிப்படும்படியாகச் செய்தலே ஆண்மையாகும். அக்காரியம் இடையிலே வெளிப்படுமானுல் நீங்காத
துன்பத்தைக் கொடுக்கும் என்பதாம்.

## சீவகன் கதை

சீவகன் அச்சணந்தி என்னும் ஆசிரியனிடத்திலே கல்வி கற்று எல்லாக் கலைகளிலுந் தேர்ச்சியடைந்தபிறகு, தன் தந்தை· 92
முருகேசர் முதுநெறி வெண்பா

.யாகிய சச்சந்தன் என்னும் அரசன் கட்டியங்காரனுல் கொல்லப்பட்டமை முதலியவைகளை அவ்வாசிரியர் மூலமாக அறிந்தான். கேட்ட அளவிலே

சினம் மூண்டது. அவருடைய கட்டளைப்படி அச்சினத்தை அடக்கிக் கொண்டிருந்தான். கட்டியங்கார னிடத்திலிருந்த பட்டத்துயானை குணமாலை யென்பவளைக் கொல்லவருவதைப் பார்த்து அதனது மதத்தை அடக்கினான். அதுகாரணமாகப் பகை மூண்டது. கட்டியங்காரன் சீவகனைக் கொல்லத் துணிந்தான். சீவகன் சுதஞ் சணன் என்னும் தேவனுதவியால் மறைந்திருந்தான். காலமுடிவில் பதுமுகன் என்னுந் தோழன் முதலியவர்களோடு வெளிப்பட்டுக் கட்டியங்காரனைக் கொன்றான்.

## வினைசெயல்வகை

68. யாண்டுளனா ராயணனேன் றேற்றிரணி
யன்மகன்பான்
மூண்டுசின மாண்டான்
முருகேசா—வேண்டின்
முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, இரணியன - இரணியன் என்பவன், யாண்டுளன் நாராயணன் என்று ஏற்று - எவ்விடத்திலே யிருக்கிறான் நாராயணன் என்று எதிர்த்து, மகன்பால் சினம் மூண்டு மாண்டான் -

மகனிடத்திலே சினம மிகுந்து இறங்தொழிந்தான், வேண்டின் - விரும்பினல், முடிவும் - செயலை முடிக்கும் வகையும், இடையூறும் - நேரக்கூடிய இடையூறும், முற்றியாங்கு எய்தும் படுபயனும - முடிந்தபோது கிடைக்கும் பெரும்பயனும், பார்த்து செயல் - ஆராய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும்.

(வி - ம்.) இரணியன் நாராயணன் எவ்விடத்திலே இருக்கிறன் என்று தன்மகனை எதிர்த்துச் சினம் மூண்டு இறங்பொருட்பால் 93:

தொழிந்தான். ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கினல் அதனை முடிக்கும்வகை, இடையிலே நேரக்கூடிய இடையூறு, காரியம் முடிந்தபின் உண்டாகும் பயன் ஆகியவைகளை ஆராய்ந்து பார்த்துச் செய்தல் வேண்டும் என்பதாம்.

## இரணியன் கதை

இரணியாட்சன் என்பவன் நிலத்தைப் பாயாகச் சுருட்டிக் கொண்டு பாதலத்திற்குச் சென்றான். திருமால் பன்றியுருவம் எடுத்துக்கொண்டு அவனைக் கொன்றார். இரணிய கசிபு என்னும் மூத்தவன்

திருமாலிடத்திலே பகை கொண்டு நான்முகனைக் குறித்துத் தவஞ்செய்தான். உலகங்களை ஆக்கல் காத்தல் அழித்தல் முதலிய காரியங்களைத் தானே செய்தல் முதலிய பல வரங்களையும், மும்மூர்த்திகள் தமக்குரிய உருவத் தோடு படைக்கலமுடையவராயெதிர்த்தாலும், பகல் இரவு என்னுங் காலங்களினும், மண் விண் உள் புறம் என்னும் இடங்களினும் அழியாமையும் பிறவும் பெற்று எல்லோருந் தன்னையே வழிபடுமாறு செய்தான். இந்திரன் முதலானவர் கட்குத் துன்பம் விளைவித்தான். இவ்வாறு கொடுங்கோலனாக அரசியற்றிக் கொண்டிருக்கும் காலத்தில் அவனுடைய புதல்வர் நால்வருக்கும் சுக்கிராச்சாரியர்புதல்வராகிய சண்டன், மர்க்கன் இருவருக்கும் கல்விகற்பித்துக் கொண்டிருந்தார். அந்நால்வருள் மூத்தவனாகிய பிரகலாதன் திருமாலையே பரம்பொருளாகக் கொண்டமையை அறிந்து சினந்தான். அவனைக் கொல்லும் பொருட்டுப் பல துன்பங்களைச் செய்தான். எதற்கும் பிரகலாதன் இறவாமையைக் கண்டு மனம் புழுங்கினன். ஒரு நாள் மாலையில் மகனையழைத்து நீ கூறியபடி திருமால் எங்கும் உள்ளவனாயிருப்பின் இத்தூணிற் காட்டுவாயாக எனக் கூறி ஒரு தூணைப் புடைத்தான். அதிலிருந்து தோன்றிய நரசிங்க மூர்த்தியோ டெதிர்த்து அவரால் மாண்டான்.

தூது

69. சூரனெதிர் தக்கவுரை சொற்றிறுமாந்
துற்றகன்றன் ஞூரிமிகும் வாகு முருகேசா—ஓரின்
விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே ! 'ஞூரிமிகும் வாகு - தேவ ரீரால் தூதாக அனுப்பப்பட்ட வீரவாகு தேவர், சூரன்எதிர் - சூரபதுமனுக்குமுன், தக்க உரை சொற்று - தகுந்த உரைகளைக் கூறி, இறுமாந்து உற்று அகன்றன் - இறுமாப்போடிருந்து திரும்பினர், ஓரின் - ஆராயுமிடத்து, வடு மாற்றம் - குற்றமான சொற்களை, வாய் சோரா வன்கணவன் - வாய் சோர்ந்தும் சொல்லாத உறுதி யுடையவனே, விடுமாற்றம் - அரசன் சொல்லியனுப்பிய சொற்களை, வேந்தர்க்கு உரைப்பான் - மற்ற வேந்தர்கட்கு உரைக்குந் தகுதியுடையவன்.*

(வி-ம்.) *தேவரீரால் சூரபன்மனிடத்திலே தூதாக அனுப்பப் பட்ட வீரவாகுதேவர் சூரனுக்கு முன்னே சொல்ல வேண்டிய சொற்களைக் கூறி மிகுந்த*

இறுமாப்போடு இருந்து திரும்பினர். குற்றமான சொற்களை வாய் சோர்ந்தும் சொல்லாத உறுதியுடையவனே அரசன் சொல்லியனுப்பிய தூதுச் சொற்களை மற்றைய வேந்தர்கட்கு உரைக்குந் தகுதியுடையவன் என்பதாம்.

### வீரவாகுதேவர் கதை

முருகக் கடவுள் சூரபன்மனிடத்திற்கு வீரவாகு தேவரைத் தூதாக அனுப்பிவைத்தார். சூரபன்மன் வீரவாகு தேவரைச் சிறிதும் மதிக்கவில்லை. தகுந்த இருக்கையும் கொடுக்கவில்லை. வீரவாகுதேவர் முருகக் கடவுளை எண்ணினர். உயர்ந்த இருக்கையொன்று வந்தது. அவ்விருக்கையில் களிப்போடு ஏறி யமர்ந்தார். சூரபன்மனைப் பார்த்து, "சயந்தன் முதலியவர்களைச்



சிறைவிடப் போகிருயா? அல்லது போருக்கு வரப் போகிருயா ? உன்னுடைய கருத்து யாது ?" என்று கேட்டார். அவன் கேட்ட கேள்விகளுக்குத் தக்க விடைகளையுங் கூறினர். அவன் போர் செய்யுங் கருத்துடையவனுக விருத்தலை யறிந்து கொண்டு திரும்பினர்.

### மன்னரைச் சேர்ந்தொழுகல் 70.

மன்னனயி ராதுமெல்ல மல்குவித்தார் சைவநெறி
முன்னுவச வேசர் முருகேசா—இன்னதனுல்

போற்றி னரியவை போற்றல் கடுத்தபின் தேற்றுதல்
யார்க்கு மரிது.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, மூன்னு வசவேசர்-எண்ணப்படுகிற வசவதேவர், மன்னன் அயிராது அரசன் ஐயங்கொள்ளாமல், மெல்ல - மெதுவாக, சைவ நெறி - சைவசமயத்தை, மல்குவித்தார் - சிறந்தோங்குமாறு செய்தார், இன்னதனுல் - இதனுல், போற்றின் - தம்மைக் காத்துக் கொள்ள விரும்பினுல், அரியவை போற்றல் - அரிய தவறுகள் நேராமல், பார்த்துக்கொள்ள வேண்டும், கடுத்தபின் - ஐயுற்ற பிறகு, தேற்றுதல் யார்க்கும் அரிது - அவர்களைத் தெளிவித்தல் எவர்க்கும் இயலாததாகும்.

(வி - ம்) வசவதேவர் விச்சலராசன் ஐயப்படாமல் சைவ நெறியைப் பரப்பினுர். தம்மைக் காத்துக் கொள்ள விரும்பினுல் அரிய தவறுகள் நேராமல் பார்த்துக் கொள்ளுதல் வேண்டும். அரசர்கள் ஐயங் கொண்ட பிறகு அவர்களைத் தெளிவித்தல் எவர்க்கும் முடியாது என்பதாம்.

## வசவதேவர் கதை

இங்குளா புரியில் தோன்றிய வசவதேவர் கலியாணபுரியி லிருந்த சமண சமயத்தவனுகிய

படியே அவனை நல்வழிப்படுத்தி உலகத்தில் சைவ சமயத்தைப் பரப்புதற் பொருட்டு அமைச்சுத் தொழில் பூண்டார். சிவ சரணர்களை மிகுதியாக வழிபட்டு வந்தார். பொறாமை மிகுதிப் பட்ட சமணர்கள் அரசனுக்குத் துர்ப்போதனை செய்து கொண்டிருந்தார்கள். அதனைக் கேட்டு அரசன் ஐயப்படாமல், சைவ சமயமே மெய்ச் சமயம் எனத் துணியுமாறு, கள்ளக் கோலம் பூண்ட சமணர்களை மெய்யடியாராக்கல், மண் முதலியவைகளால் இயற்றப்பட்ட வஞ்சனை வடிவங்களை மாதவர்களாக்கல் முதலிய அளவிறந்த பல புதுமைகளைச் செய்து அரசனைத் தம் வழிப் படுத்தினார்.

குறிப்பறிதல்

71. இந்தனக்கே லாமரமேன் றுன் தருமன் வீமனேண்ணம்
முந்தவையிற் றேர்ந்தே முருகேசா—மைந்தருள்ளும்
ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே; வீமன்

எண்ணம் - வீமனுடைய உள்ளக்குறிப்பை, முந்து அவையில் தேர்ந்தே -முன்னே அவையில் அறிந்தே, தருமன் - தருமர் இந்தனக்கு - விறகிற்கு, எலா மரம் என்றான் - ஆகாத, மரமாகும் இது வென்று கூறினார், மைந்தருள்ளும்-மனிதர் கட்குள்ளேயும், அகத்தது - மனத்தில் உள்ளதை, ஐயப்படாது உணர்வானை -சிறிதும் ஐயமில்லாமல் தெரிந்து கொள்ளுகின்றவனை, தெய்வத்தோடு ஒப்பக் கொளல்கடவுளுக்கு நிகராகக் கொள்ளுதல் வேண்டும்.

(வி - ம்.) எல்லாருங் கூடியிருந்த அவையில் வீமனுடைய எண்ணத்தைத் தருமர் தெரிந்து கொண்டு இம்மரம் விறகிற்குப் பயன்படமாட்டாது இதனைப் பிடுங்காதே என்று கூறினார். ஒருவருடைய உள்ளத்துணர்ச்சியைச் சிறிதும் ஐயமில்லாதவாறு



உணர்ந்து கொள்ளுகின்றவனைக் கடவுளுக்கு ஒப்பாகவே எண்ணிக் கொள்ளுதல் வேண்டும் என்பதாம். இந்தனத்துக்கு என்று முடிய வேண்டியது அத்துச் சாரியை தொக்கு நின்றது. இந்தனம் - விறகு.

### வீமன் கதை

பாண்டவர் ஐவரும் விராட நகரத்தில்

மறைந்திருக்கும் போது திரௌபதைமேற் காதல் கொண்ட கீசகன் அவளைத் துரத்திக் கொண்டு வந்தான். திரௌபதை விராடனுடைய அவைக்கு ஓடிவந்து அடைக்கலம் புகுந்தாள். கீசகனும் அங்கு வந்தான். கீழ்ந்ததையுணர்ந்து அவ்விடம் வந்த வீமன் அளவிலாச் சினங்கொண்டான். கீசகனை அடித்துக் கொல்வதற் காகப் பிடுங்கும் நோக்கதோடு அரசவைக்குப் பக்கத்திலே யிருந்த பெரிய மரம் ஒன்றின் மீது பார்வையைச் செலுத்தினன். அவனுடைய குறிப்பையுணர்ந்த தருமர், "அம்மரம் விறகாக அடுப்பெரிப்பதற்குத் தகுதியானதாக மாட்டாது, அதனைப் பிடுங்காதே" என்று கூறி வீமனைத் தடுத்து விட்டார். அவ்வாறு தடுத்து நிறுத்தியிராவிட்டால் ஐவரும் வெளிப்பட்டு மீண்டும் காட்டிற்குச் செல்லுமாறு நேர்ந்திருக்கும்.

அவையறிதல்

72 சொற்றவிடைக் காடர்கவி தோற்றதுதென்
னன்சபையின்
முற்றுசுவை யுற்றும் முருகேசா—வுற்றணுகா
அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(இ - ள். ) முருகேசா - முருகப்பெருமானே!, தென்னன் சபையில் - பாண்டியனுடைய

அவையின்கண், சொற்ற இடைக்காடர் கவி-பாடிய இடைக்காடருடைய பாடலானது, முற்றுசுவையுற்றும் - நிறைந்த சுவையைப் பெற்றிருந்தும், தோற்றது - இழிவடைந்து விட்டது. உற்று அணுகா -

மு. மு. வெ. —7



பொருந்திச் சேராத, தம் கணத்தர் அல்லார் முன் தம் இனத்தவர் அல்லாதவர்கட்கு முன்னே, கோட்டி கொளல் - ஒரு பொருள் பற்றிப் பேசுதல், அங்கணத்துள் உக்க அமிழ்து அற்று - தூய்மையற்ற இடத்திலே சிந்திய அமிழ்தத்துக்கு ஒப்பானதாகும்.

(வி - ரை.) பாண்டியனுடைய பேரவையில் இடைக்காடருடைய செய்யுளானது நிறைந்த சுவையோடிருந்தும் இழிவடைந்து விட்டது. தமக்கு நிகரான அறிவில்லாதவர்களுடைய கூட்டத்தின்கண் ஒன்றைப் பேசுதல் சாக்கடைக்குள் கொட்டிய அமுதத்திற்கு ஒப்பானதாகும் என்பதாம்.

இடைக்காடர் கதை

குலேசபாண்டியன் என்பவன்

கல்வியறிவுடையவனாக விருந்தான். இடைக்காடர் அவனைக் காணும் பொருட்டுச் சுவையுள்ள செய்யுட்கள் சிலவற்றை இயற்றிக் கொண்டு சென்றார். அரசனுடைய அவையிலே கூறினார். அச் செய்யுள் களிலுள்ள சுவையைப் பாண்டியன் அறிந்தான். ஆயினும் பொறாமையினால் இடைக்காடருக்கு எத்தகைய சிறப்புஞ் செய்யாமலிருந்தான். ஆகவே அவருடைய பாட்டுப் பயனற்றதாக முடிந்தது.

அவையஞ்சாமை

73. தாதையைவெல்

வந்திமுனி தன்னையட்ட மூதுணர்வால் வக்கிரன்றான்
வென்றான் முருகேசா—கேதமிலா ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(இ-ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, அட்டவக்கிரன் - அட்டவக்கிர முனிவர் என்பவர், தாதையைவெல் வந்திமுனி தன்னை - தந்தையைச் சொற்போரிலே

வந்திமுனிவரை, மூதுணர்வால் வென்றான் - தம்முடைய முதிர்ந்த பேரறிவினாலே வெற்றிகொண்டார், கேதம் இலா குற்றம் இல்லாத, அவை அஞ்சாமாற்றம் கொடுத்தல் பொருட்டு - அவையிலே அச்சமில்லாமல் மறுமொழிகூறும் பொருட்டு, ஆற்றின் அளவு அறிந்து கற்க - கற்கும் நெறியின் அளவைத் தெரிந்து நூல்களைக் கற்கவேண்டும்.

(வி - ம்.) அட்டவக்கிர முனிவர் என்பவர் தம்முடைய தந்தையைச் சொற்போரிலே வென்ற வந்திமுனிவர் என்பவரைத் தம்முடைய பேரறிவால் வென்றார். அறிஞர்களுடைய அவை யிலே அஞ்சாமல் மறுமொழி கூறும்பொருட்டுக் கற்கவேண்டிய முறைப்படி கல்வியைக் கற்க வேண்டும் என்பதாம்.

அட்டவங்கிரர் கதை

அநேகபதர் என்னும் முனிவர் தம்முடைய மாணவர்கட்கு இரவும் பகலும் ஓய்வில்லாமல் மறைகளைக் கற்பித்துக்கொண் டிருந்தார், அவருடைய மனைவியாகிய சுசாதையினுடைய கருப்பத்திலிருந்து நெடுநாளாக வெளிப்படாமலிந்த

அவ
ருடைய புதல்வர், "இவ்வாறு ஓயாமல் கற்பித்துக் கொண்டிருந்
தால் மாணாக்கர்கள் என் செய்வ ார்கள் ? உறக்கத்திலே சந்தம்
தவறுகின்றது" என்றனர் . இதனைக்கேட்ட தந்தை, "நீ
மறைப்பொருளைக் கற்பதற்கு இடையூறாகிய மொழிகளைக் கூறியபடியால் எட்டுக் கோணமுடைய உடலோடு பிறப்பாயாக" என்று வசவுரை கூறினார். மனைவி விரும்பிய சில பொருள்களின் பொருட்டு மிதிலையிலே சனக மன்னன் நடத்திய வேள்விக்குச் சென்றார். அங்கு வந்தி முனிவர் என்பவர் இவரை எதிர்த்துச் சொற்போர் செய்தார். அச்
சொற்போரிலே இவர் தோற்றுப்
போனார். நாணத்தினால் தம்முடைய ஊருக்குச் செல்லாமல் கடற்கரையை அடைந்து அங்குத் தங்கி யிருந்தார். அந்நாளில் இவருக்குப் புதல்வர் தோன்றினார். அவர் தந்தையினுடைய வசவுரைப்படி எட்டுக் கோணலாகப் பிறந்தமையால் அட்ட கோண முனிவர் என்னும் பெயரை யடைந்தார். உதானர் என்னும் முனிவரிடத்திலே மறை முதலியவைகளைப் பயின்று 100
முருகேசர் முதுநெறி வெண்பா

தேர்ச்சியடைந்தார். தந்தையினுடைய நிலைமையைக் கேள்வி யுற்றுச் சனகராசனுடைய அவையை அடைந்தார். வந்தி முனிவரோடு சொற்போரிட்டு

அவரை வென்றார். அரசனால் போற்றப் பெற்றார். பிறகு தந்தையை அடைந்து நிகழ்ந்த மையைக் கூறினார். அவரை யழைத்துக் கொண்டு தம்முடைய இருப்பிடத்தை யடைந்தார்.

## நாடு

74 எச்சிறப்பேய்ந் தென்னிலங்கை வீந்ததர சீனத்தால்

முச்சகமு மேத்து முருகேசா—மேச்சவே
ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.

(இ - ள்.) முச்சகமும் எத்தும் முருகேசா - மூவுலகத்தி னும் உள்ளவர்களால் போற்றப்படுகின்ற முருகப்பெருமானே, எச்சிறப்பு ஏய்ந்து என் - எத்தகைய சிறப்பைப் பெற்றிருந்தும் என்னபயன்? அரசு ஈனத்தால் - அரச னுடைய இழிந்த செய்கையால், இலங்கை வீந்தது-இலங்கை அழிந் தொழிந்தது, மெச்ச - வியக்குமாறு, வேந்து அமைவு இல்லாத நாடு - நல்ல அரசன் அமையப் பெற்றிராத நாடு, ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்று - முற் கூறியபடி

நன்மைகளெல்லாம் அமையப்பெற்றிருந்தாலும் பயனற்றதாகும்.

(வி - ம்.) எத்தகைய சிறப்பைப் பெற்றிருந்துதான் என்ன பயன்? இலங்கையானது அரசனுடைய இழிந்த செய்கையால் அழிந்தொழிந்தது; நல்ல அரசனைப் பெற்றிராத நாடு அமைய வேண்டியவைக ளெல்லாம் முறைப்படி அமையப் பெற்றிருந்தா லும் அதனால் பயனடைய மாட்டாது என்பதாம்.



## இலங்கையின் கதை

இலங்கையானது எல்லா வளங்களும் நன்கமையப் பெற்ற தாய்ச் சிறந்து விளங்கியது. ஆயினும் அதனுடைய அரசனாக விளங்கிய இராவணன் பிறர்மனை நயத்தல் முதலிய பொல்லாத செயல்களில் ஈடுபட்டபடியால் அனுமானால் எரியூட்டப் பெற்றும் வேறு பலவகையாகவும் அழிந்தொழிந்தது.

## அரண்

75 நம்மரனுர் செய்புன் னகையில்வேந்த
வேயசுரர்

மும்மதிலு மேனுண் முருகேசா— அம்ம
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, நம அரனார் செய் புன் நகையில் - நம்முடைய சிவபெருமான் செய்த புன்னகையினுல், அசுரர் மும்மதிலும் மேல்நாள் வெந்த - அரக்கர்களுடைய மூன்று மதில்களும முற்காலத்திலே எரிந்தழிந்தன; அம்ம-வியக்கத்தக்கவாறு, எனைமாட்சித்து ஆகியக் கண்ணும்-எவ்வளவு பெருமையுடையதாக விளங்கியவிடத்தும், வினைமாட்சி இல்லார்கண் - நற்செய்கை இல்லாதவர்களிடத்திலே, அரண் இல்லது - அரண் பயனற்றதாக முடியும்.

(வி - ம்.) சிவபெருமான் செய்த புன்னகையினுல் அரக்கர்களுடைய மூன்று மதில்களும் முற்காலத்திலே வெந்தழிந்தன; எவ்வளவு சிறப்புடையதாக விளங்கியவிடத்தும் நற்செய்கை இல்லாதவர்களிடத்திலே அரண் பயனற்றதாக முடியும் என்பதாம். ஏ: அசைநிலை.

# முப்புர அசுரர்கள் கதை

சூரபன்மனுடைய தம்பியாகிய தாரகனுக்குப் பிறந்த தாரகாக்கன், கமலாக்கன், வித்துன்மாலி என்னும் மூவரும் கோடியாண்டுகள் தவம்புரிந்து நான்முகனால் பொன் வெள்ளி இரும்புகளாலாகிய மூன்றரண்கள் முறையே விண்ணுலகம் நடுவிடம் நிலம் என்னும் மூன்றிடங்களினும் நிலைபெற்றிருந்து வேண்டுமிடங்கட்கு உடன் வரவும் அவை ஆயிரம் ஆண்டுகட்கு ஒருமுறை மூன்றே முக்கால் நாழிகை நேரம் ஒருங்கு சேரவும், அக்காலத்தில் ஒருகணை விடுத்து அழித்தாலல்லாமல் வேறு எவ்வகையாலும் அழியாதிருக்கவும் திருமால் முதலிய தேவர்கள் எதிர்த்தால் தமக்குத் தோற்றோடவும் வரம் பெற்று, மயனால் வகுக்கப்பட்ட மாளிகைகளோடு கூடிய அவ்வரண்களில் இருந்து கொண்டு திருநீறு சிவகண்மணி முதலியன அணிந்தவராய்த் திருவைந்தெழுத்தை முறைப்படி உருவேற்றுவோராய்ச் சிவபெருமானை வழிபட்டு வந்தனர். இவர்கள் அரக்கர் குலத்தில் தோன்றியபடியால் தேவர்களுக்குத் தீமை செய்து கொண்டு திரிந்தார்கள். திருமால் புத்த குருவாகப் போய் நாரதரைக் கொண்டு அவ்வசுரர் மனைவியருடைய கற்பையழித்ததுமல்லாமல், தாம் சிவபூசை முதலியவைகளால்

பயனில்லையென்று
போதித்து அசுரர்களைச் சிவ வழிபாட்டிலிருந்து நழுவச்
செய்தார்.
பிறகு திருக்கைலையை அடைந்து சிவபெருமான் கட்டளைப்
படியே நிலம் முதலிய தெய்வீகம் உள்ள பொருள்களையெல்லாம்
தேர் முதலிய உறுப்புக்களாக்கித் தாம் கணையாகினார். சிவ
பெருமான் நான்முகனால் செலுத்தப்பட்ட அத்தேரில் எழுந்
தருளினார். முப்புர அசுரர்களுடைய நிலைமையை நோக்கி
நகைத்தார். அவ்வளவில் முப்புர அரண்களும் தீயால் எரிந்து
ஒழிந்தன.

பொருள்செயல்வகை

76 மன்னுகிழி பெற்றகுல பூடணனுன் மல்கினவே
முன்னுமற மெல்லாம் முருகேசா—துன்னியதோர்
குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்தோன்
றுண்டாகச் செய்வான் வினை.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே ! மன்னு கிழி பெற்ற குலபூடணனால் - நிலைபெற்ற உலவாக் கிழியைப் பெற்ற குலபூடணபாண்டியனால், முன்னும் அறம் எல்லாம் மல்கின - எண்ணுகின்ற அறங்களெல்லாம் மிகுதிப்பட்டன• தன கைத்து ஒன்று உண்டாகச் செய்வான் வினை - தன் கையிலே பொருளானது இருக்க ஒரு காரியத்தைச் செய்பவனுடைய செயல், துன்னியது ஓர் குன்று ஏறி - பொருந்திய தாகிய ஒப்பற்ற சிறுமலையின் மீது ஏறி நின்று, யானைப்போர் கண்டற்று - யானைப் போரைப் பார்த்தாற் போன்றதாம்.

(வி - ம்.) உலவாக் கிழி பெற்ற குலபூடண பாண்டியனால் அறங்ளெல்லாம் மிகுதிப்பட்டு விளங்கின. தன் கையிலே பொருளிருக்க ஒருவன் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்குதல் மலை மீது ஏறி யானைப் போரைக் கண்டதனுக்கு நிகராகும் என்பதாம். மலை மீதிருப்பவனுக்கு யானைப் போரால் துன்பம் உண்டாகாமை போன்று கையிலே பொருளுடையானைக் காரியஞ் செய்வானுக்குத் தொல்லையுண்டாகாது என்க.

## குலபூடண பாண்டியன் கதை

*குலபூடண பாண்டியன் சிவதருமங்களை விடாது செய்கிறோம் என்று செருக்கடைந்தான். அந்தணரை மதியாது நடந்து கொண்டான். அவர்கள் மனம் வருந்தி வேள்வி முதலியவைகளைச் செய்யாமல் நிறுத்திவிட்டார்கள். அதனால் மழை குன்றி விளைவுகள் குறைந்தன. ஆகவே குடிகள் பிறநாடு சென்று பிழைக்கத் தொடங்கினார்கள். இதனை உணர்ந்த பாண்டியன் மதுரைக்கடவுளைப் போற்றி உலவாக்கிழி பெற்றான். அப் பொருளைக் கொண்டு குடிகளைக் காத்ததோடு அறங்களையுஞ் செய்தான். அதனால் நாடு செழித்து அறம் வளர்ந்தோங்கியது. **104***

*முருகேசர் முதுநெறி வெண்பா*

படைமாட்சி

77 பற்றுநிரை மீட்டெதிர்த்த பார்த்தனாற்
புண்பட்டார் முற்றினவர் யாரும் முருகேசா—சுற்றி
ஒலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை நாக
முயிர்ப்பக் கெடும்

(இ - ள்.) *முருகேசா* - *முருகப்பெருமானே !, முற்றினவர் யாரும்* - வந்து எதிர்த்துப் போர்செய்யத் *தொடங்கியவர்களனைவரும், பற்றுநிரை மீட்டு - பகைவர்கள கைப்பற்றிய*

ஆகிரையை மீட்டு, எதிர்த்த பார்த்தனுல் புண் பட்டார் - எதிர்த்துப் போரிட்ட அருச்சுனனுல் புண்பட்டு வருந்தினர்கள். சுற்றி - சூழ்ந்து, எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னும் - எலியாகிய் பகைகள் கூடிக்கடல் போல ஒலித்தாலும் யர்து திங்கு ஏற்படும், நாகம் உயிர்ப்பக் கெடும் - பாம்பு மூச்சுவிட்ட அளவிலே அவைகள் கெட்டொழியும்.

(வி - ம்.) விராட நகரத்திலே ஆகிரையைக் கவர வந்த துரியோதனன் கூட்டத்தினர் எதிர்த்துப் போரிட்ட அருச்சுனனுற் புண்ணடைந்தார்கள். எலியாகிய பகைகள் கடல் போலக் கூடி ஆரவாரஞ் செய்தாலும் அதனுல் யாது பயன்? அப்பகை பாம்பு மூச்சுவிட்ட அளவிலே கெட்டொழியும் என்பதாம்.

## பசுநிரை கவர்ந்த கதை

பாண்டவர்கள் விராட நகரத்தில் இருந்தால் அவர்களைக் கண்டுபிடித்து மீண்டும் காட்டிற்கே விரட்டி விடலாம் என்று எண்ணிய துரியோதனன் தன்னுடைய படையை அனுப்பி விராட மன்னனுடைய ஆகிரையைக் கைபற்றச் செய்தான். அப்பொழுது அருச்சுனன் அப்படையோடெர்த்திதுப்

ஆநிரையை மீட்டான். பின்னர்த் தனியனாக எதிர்த்த ஆண்மை மிக்க அருச்சுனனோடு போரிட்ட துரோணர் முதலிய பலரும் அருச்சுனனால் நன்கு அடிக்கப்பட்டுத் தோற்றோடினார்கள்.

## படைச்செருக்கு

7:8 மாலுறுத்தி வீடுமன்பான் மாண்டசிவே
தற்கயர்ந்தார் மோலிபுனை மன்னர்
முருகேசா—சாலப் புரந்தார்கண் ணீர்மல்கச்
சாகிற்பிற் சாக்கா டிரந்துகோட் டக்க துடைத்து.

(இ - ள்) முருகேசா - முருகப்பெருமானே!, வீடுமன் பால் மால் உறுத்தி - வீடுமனிடத்திலே கலக்கத்தை யுண்டாக்கி, மாண்ட சிவேதற்கு - இறந்து போன சிவேதன் பொருட்டு, மோலிபுனை மன்னர் அயர்ந்தார் - முடியை அணிந்த அரசர்கள் தளர்ந்து வருந்தினார்கள், சால - மிகவும், புரந்தார் கண் நீர் மல்க - தம்மைக் காத்தவர்களுடைய கண்களிலே நீர் பெருகுமாறு, சாகின் - சாகப் பெற்றால், சாக்காடு இரந்துகோள் தக்க துடைத்துசாவும் இரந்தாவது பெற்றுக் கொள்ளக் கூடிய சிறப்புடைய தாகும்.

(வி - ம்.) வீடுமன் முதலியோருக்குக் கலக்கத்தை உண்டாக்கி மாண்டு போன சிவேதன் பொருட்டு அரசர்கள் தளர்ந்து வருந்தினார்கள், தம்மைக் காத்தவர்களுடைய கண்களிலே நீர்மல்குமாறு ஒருவர் சாகப் பெற்றால் அத்தகைய சாக்காடானது இரந்தாவது பெற்றுக் கொள்ளக் கூடிய சிறப்புடையதாகும் என்பதாம்.

## சிவேதன் கதை

சிவேதன் என்பவன் விராட மன்னனுடைய புதல்வன். இவன் பாரதப் போரில் பாண்டவர்களுடைய படைக்குத் 106



தலைவனாக ஏற்படுத்தப் பெற்றான். முதல் நாள் போரில் எண்ணிறந்த படைகளை யழித்துத் தன்னுடைய ஆண்மையைக் காட்டினான். இவனுடைய பேராண்மையைக் கண்டு வீடுமரும் அஞ்சிக்கலங்கினார். பிறகு வீடுமருடைய வஞ்சனையால் அவன் மடிந்தான். சிவேதனுடைய வீரத்தைப் பாராட்டித் தருமன் முதலிய அரசர்கள் உள்ளம் வருந்தினார்கள்.

## நட்பு

79 மேவ விதூமனொடு விண்ணிழிந்திம்
மண்ணடைந்தார் மூவரகல் வஞ்சி

முருகேசா—தாவில்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! மூவர் அகல்வு அஞ்சி - விதூரமனைப் பிரியாத நட்புப் பூண்ட மாலியவான், புட்பதந்தன், பலோற்கடன் என்னும் மூவரும் விதூரமனைப் பிரிந்திருப்பதற்கு அஞ்சி, விதூரமனொடு - அவ்விதூரமனுடனே, விண் இழிந்து - விண்ணுலகத்திலிருந்தும் இறங்கி, இம்மண்மேவ அடைந்தார் - இம மண்ணுலகத்தைப் பொருந்துமாறு அடைந்தார்கள் : தாவில்-குற்றமற்ற, அழிவின் அவை நீக்கி-அழிவைத்தரும தீமைகளிலிருந்து விலக்கி, ஆறுஉய்த்து - நல்ல வழியில் நடக்கச்செய்து, அழிவின்கண் - அழிவு வந்தவிடத்து, அல்லல் உழப்பதாம் நட்பு - துன்பப்படுவதே நட்பாகும்.

(வி - ம்.) விதூரமனைப் பிரிவதற்கு அவனுடைய நண்பர்கள் மூவரும் அஞ்சி அவனோடு மண்ணுலகத்தை அடைந்தார்கள். அழிவைத் தரும் தீமைகளில் இருந்து விலக்கி நல்வழியில் நடக்கச் செய்து அழிவு வந்தவிடத்துத் தாமும்

துன்பப்படுவதே நட்பாகும் என்பதாம்.



## மூவர் கதை

வசுக்களில் ஒருவனாகிய விதூமன் என்பவன் நான்முகனுடைய அவையிலே நடித்து நின்ற அலம்புசையின் ஆடை காற்றால் விலகுங்கால் அவளைக் காதலொடு பார்த்த குற்றங் காரணமாக நிலவுலகிலே அவளைச் சேருமாறு நான்முகன் வசவுரை புகன்றவாறே சதாநீகன் என்னும் அரசன்பால் சகத்திராணீகன் என்னும் பெயரோடு பிறக்கத்துணிந்த பொழுது அவனோடு பிரியாத நட்புப் பூண்ட மாலியவான், புட்பதந்தன் பலோற்கடன் என்னும் மூவரும் பிரிவையஞ்சித் தாமும் விண்ணுலகத்தை யிழந்து அவனோடு மண்ணுலகத்திற் பிறந்து பழகியிருந்து முடிவில் அவனோடு விண்ணுலகத்தை யடைந்தார்கள்.

## நட்பாராய்தல்

80 வஞ்சகவா னந்தனட்பாற் சூரியசன் மாவாளா
முஞ்சுமிடர் பெற்றான்
முருகேசா—நெஞ்சதனில்
ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை

கடைமுறை
தான்சாந் துயரந் தரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, சூரிய சன்மா-சூரியசன்மா என்பவன், வஞ்சக ஆனந்தன் நட்பால்- வஞ்சகத் தன்மை பொருந்திய ஆநந்தன என்பவனுடை ய நட்பினல், வாளா - வீணாக, முஞ்சும் இடர் பெற்றான்இறத்தலுக் கேதுவாகிய துன்பம் உண்டாகப் பெற்றான்; நெஞ்சதனில் - உள்ளத்தில், ஆய்ந்து ஆய்ந்து கொள்ளா தான் கேண்மை - நன்றாக ஆராய்ந்து நட்புக் கொள்ளாதவ னுடைய நட்பு, கடை முறை - இறுதியில், தான் சாம் துயரம் தரும்-தான் சாவதற்குக் காரணமாகிய துன்பத்தை உண்டாக்கி விடும். முஞ்சுதல் - இறத்தல்.



(வி - ம்.) வஞ்சகம் பொருந்திய ஆனந்தன் என்பவனுடைய நட்பினல் சூரியசன்மா என்பவன் சாதற் கொத்த துன்பத்தை யடைந்தான். நன்றாக ஆராய்ந்து பார்த்து அதன் பிறகு மேற் கொள்ளாத நட்பு இறுதியில் தான் இறக்கக்கூடிய துன்பத்தினை உண்டாக்கும் என்பதாம்.

# சூரியசன்மா கதை

கௌசிக நாட்டிலே விக்கிரம நகரத்திலே சூரியசன்மன் என்னும் பெயருடைய அந்தணன் ஒருவன் இருந்தான். ஒரு நாள் அவனுடைய பகைவனாகிய ஆனந்தன் என்பவன் சூரியசன்மாவை வஞ்சிக்கக் கருதி வந்து வணங்கி நின்றான். சூரியசன்மா ஆனந்தனுடைய வஞ்சகத்தினை உணர்ந்து கொள்ளாமல் அவனோடு நட்புக்கொண்டான். அவன் ஓர் இரவில் சூரியசன்மாவைப் பார்த்து, "நம்முடைய ஊர் மலைக்கு அண்மையிலிருத்தலின் தெருவில் வேங்கைகள் சுற்றித் திரிகின்றன. நான் அவைகள் வருதலைப் பார்த்துக் கூறுகிறேன். நீ அவைகளைக் கொல்வாயாக" என்று கூறிச்சென்றான். பிறகு ஒரு பசுவைப் புலித்தோல் போர்த்துத் தெருவிலே கொண்டு வந்து நிறுத்திவிட்டு சூரியசன்மாவை அழைத்துவந்து காட்டினான். சூரியசன்மா அது புலியெனத் துணிந்து அம்பு எய்து கொன்றான். பிறகு ஆனந்தன், "நீ இங்கே புலியைப் பார்த்துக் கொண்டிரு, நான் உன் வீட்டிற்குச் சென்று கள்ளர்கள் வராதபடி பார்த்துக் கொண்டு வருகிறேன்" என்று கூறி விட்டுச் சூரியசன்மாவினுடைய வீட்டிற்குச் சென்றான். சூரியசன்மனுடைய மனைவியைப் பார்த்து, "இங்கே கள்ளர்கள் வருவார்கள் வெளியே வருக" என்று அவளை அழைத்துக் கொண்டுபோய் அவனுடைய மகன்

வீட்டில் இருக்கச் செய்துவிட்டு, மகனை மனைவியோடு
சூரியசன்மனுடைய வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்து இருக்கச் செய்துவிட்டு அவனைப் பார்த்துத், "தம்பீ! கள்வர்கள் இங்கே வந்து உன்னுடைய தந்தையைப் போலக் கூப்பிடுவார்கள். நீ கதவைத் திறவாதே" என்று வற்புறுத்திக் கூறிவிட்டுச் சூரியசன்மனிடம் போய், "உன்னுடைய மனைவி வேறுஆடவனை ச் சேர்ந்திருக்கிறுள்" என்று சொன்னுன். அதனைக் கேட்ட பொருட்பால்



சூரியசன்மா சினத்தோடு தன்னுடைய வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினுன். கதவு திவாமற் போகவே சுவரேறிக் குதித்தான். படுத்திருந்த இருவரையும் மகனென்றும் மருமகளென்றும் உணர்ந்து கொள்ளாமல் வெட்டினுன். பிறகு மகனும் மருமகளும் என்று உணர்ந்து வருந்தினுன்.

இத்தகைய வஞ்சனைகளைச் செய்த ஆனந்தன் ஊரார்கட்குச் செய்தி தெரியப் படுத்தினுன். நகரத்து அந்தணர்கள் ஒருங்கேதிரண்டு வந்து சூரியசன்மாவைப் பார்த்து, "ஏன் இத்தகைய கொடுமையைச் செய்தாய்?" என்று உசாவினுர்கள். சூரியசன்மா இஃது ஆனந்தனுடைய வஞ்சனையால் நிகழ்ந்தது என்று கூறினுன். அவர்கள் தன் மீது கொண்ட ஐயம் நீங்குமாறு திருவைந் தெழுத்தின் வலிமையால் கேதார நாதர் திருமுன்புள்ள காளையே யன்றி மதில்களிலுள்ள

காளைகளும் புல்லருந்தச் செய்தான். பசுவும் மருவியும் நீங்ஞன்.
மகனும் பிழைக்கப் பெற்றுக் குற்றத்திலிருந்து

பழமை

81 நம்பனமர்க் கேன்றவா ணற்புரந்தான்
றேன்மை

யுன்னி

மொய்ம்புதொலே யாமன் முருகேசா—அம்புவியில்
பேதைமை யொன்றே பெருங்கிழமை
யென்றுணர்க நோதக்க நட்டார் செயின்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, நம்பன் - சிவபெருமான், தொன்மை யுன்னி - பழமையை நினைத்து, மொய்ம்பு தொலேயாமல் - வலிமை கெடாமல், அமர்க்கு ஏன்ற வாணன் புரந்தான் - போர் செய்ய வேண்டுமென்று எதிர்த்த வாணுசுரனைக் காப்பாற்றி யருளினர்; அம்புவியில்- அழகிய நிலவுலகத்தில், நோதக்க - வருந்தத் தக்க செயல் களே, நட்டார் செயின் - நண்பர்கள் செய்வார்களாஞல் பேதைமை ஒன்றே-அறியாமை என்ருவது, பெருங்கிழமை பொருட்பால்*

சூரியசன்மா சினத்தோடு தன்னுடைய வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினான். கதவு திவாமற் போகவே சுவரேறிக் குதித்தான். படுத்திருந்த இருவரையும் மகனென்றும் மருமகளென்றும் உணர்ந்து கொள்ளாமல் வெட்டினான். பிறகு மகனும் மருமகளும் என்று உணர்ந்து வருந்தினான்.

இத்தகைய வஞ்சனைகளைச் செய்த ஆனந்தன் ஊரார்கட்குச் செய்தி தெரியப் படுத்தினான். நகரத்து அந்தணர்கள் ஒருங்கே திரண்டு வந்து சூரியசன்மாவைப் பார்த்து, "ஏன் இத்தகைய கொடுமையைச் செய்தாய்?" என்று உசாவினார்கள். சூரியசன்மா இஃது ஆனந்தனுடைய வஞ்சனையால் நிகழ்ந்தது என்று கூறினான். அவர்கள் தன் மீது கொண்ட ஐயம் நீங்குமாறு திருவைந்தெழுத்தின் வலிமையால் கேதார நாதர் திருமுன்புள்ள காளையே யன்றி மதில்களிலுள்ள காளைகளும் புல்லருந்தச் செய்தான். பசுவும் மருகியும் மகனும் பிழைக்கப் பெற்றுக் குற்றத்திலிருந்து நீங்கினான்.

பழமை

81 நம்பனமர்க் கேன்றவா ணற்புரந்தான்
றேன்மை

யுன்னி

மோய்ம்புதோலே யாமன் முருகேசா—அம்புவியில்
பேதைமை யோன்றே பெருங்கிழமை

யென்றுணர்க நோதக்க நட்டார் செயின்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, நம்பன்சிவபெருமான், தொன்மை யுன்னி - பழமையை நினைத்து, மொய்ம்பு தொலையாமல் - வலிமை கெடாமல், அமர்க்கு ஏன்ற வாணன் புரந்தான் - போர் செய்ய வேண்டுமென்று எதிர்த்த வாணாசுரனைக் காப்பாற்றி யருளினார்; அம்புவியில் - அழகிய நிலவுலகத்தில், நோதக்க - வருந்தத் தக்க செயல்களை, நட்டார் செயின் - நண்பர்கள் செய்வார்களானால் பேதைமை ஒன்றோ - அறியாமை என்றுவது, பெருங்கிழமை பொருட்பால்

111

கனவிலணைந்து புலம்பியதால், அவனைத் தூங்கும் போது சித்திர லேகை என்னும் தோழி கவர்ந்து வந்து கூட்டுவித்தமையை வாணாசுரன் உணர்ந்து அநிருத்தனைச் சிறையிலிட்டான். கண்ணபிரான் போருக்கு வந்தபோது வாணாசுரனுடைய கைகளில் நான்கைத் தவிர மற்றவைகளையெல்லாம் அறுத்து வீழ்த்தினார். பிறகு சிவபிரான் வாணாசுரனைப் பார்த்துத் "தோளின் தினவு நீங்கியதா?" என்று உசாவினார். முன் போலவே கைகளைக் கொடுத்துத் திருக்கைலைக்குச் சென்றார். இங்கு வாணாசுரன் தம்மை எதிர்க்க விரும்பியதை இறைவன் அறியாமையென்றோ உரிமையென்றோ கொண்டார்.

82 இன்னலே பல்குநம்பா லென்று
விபீடணன்றன்
முன்னவனை நீத்தான் முருகேசா—துன்னிப்
பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(இ-ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, விபீடணன்-விபீடணனென்பவன், இன்னலே பல்கும் நம்பால் என்று- நாம் இராவணனையே பற்றிக் கொண்டிருந்தால் நமக்குத் துன்பமே மிகுதிப்படும் என்று, தன் முன்னவனை நீத்தான்-தன் தமையனாகிய இராவணனை விட்டுப் பிரிந்தான்; துன்னி - பொருந்தி, பருகுவார் போலினும் - அன்பு மிகுதியால் பருகுவார் போலத் தோன்றினாலும், பண்பு இலார் கேண்மை - நல்லியல்பு இல்லாதவர் களுடைய நட்பு, பெருகலில் குன்றல் இனிது - மிகுதிப்படுவதைவிடக் குறைதலே நல்லதாகும்.

(வி - ம்.) நாம் இராவணனைப் பற்றிக் கொண்டிருந்தால் துன்பமே மிகுதிப்படுமென்று விபீடணன் தன்னுடைய தமையனை விட்டுப் பிரிந்தான்;

பட்டாலும் நல்லியல்பு அற்றவர்களுடைய நட்பானது மிகுதிப் படுவதைப் பார்க்கிலும் குறைதலே நல்லது என்பதாம்.

விபீடணன் கதை

விபீடணன் இராவணனுக்கு உறுதி மொழிகளைப் பன்முறை யுரைத்தும் இராவணன் உடன்படாதபடியினால், நாம் இவனோடு கலந்து நிற்போமாயின் நமக்குத் துன்பமே விளையும் என்று முடிவுசெய்து இராவணனை விட்டுப் பிரிந்து இராமபிரானிடம் அடைக்கலம் புகுந்தனன். அவ்வாறு விபீடணன் இராவணனை விட்டுப் பிரிந்தபடியினால் நலம் பெற்றான்.

கூடாநட்பு

83. நேசன்போற் காடுவெட்டி நேரியன்றென்
னற்றழுவி மோசமே செய்தான் முருகேசா—மாசின்
மனத்தி னமையா தவரை யெனைத்தோன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, காடு வெட்டி நேரியன் - காடு வெட்டிய சோழன், நேசன் போல் தென்னன் தழுவி -

நட்புடையவனைப்போல அரசபுரந்தர பாண்டியனிடத்திலே பொருந்தியிருந்து, மோசமே செய்தான் - பிறகு ஏமாற்றிவிட்டான், மாசின்-குற்றத்தினலே, மனத்தின் அமையாதவரை - மனத்தோடு பொருந்தாதவர்களை, சொல்லினல் - அவர்கள் சொல்லும் சொற்களைக் கொண்டு, எனைத்து ஒன்றும் - எத்தகைய ஒரு செயலினு லும், தேறல் பாற்று அன்று - நம்பித் தெளியக் கூடாது.

(வி - ரை.) காடுவெட்டி சோழன் நண்பனைப் போல நடித்து அரசபுரந்தர பாண்டியனை மோசஞ் செய்தான்; மனத்தொடு பொருந்தாமல் பழகுகின்றவர்களை அவர்கள் கூறுஞ் சொற்களைக் கொண்டு எத்தகைய ஒரு செயலினும் நம்பித் தெளியக் கூடாது என்பதாம்.



## காடு வெட்டிய சோழன் கதை

அரசபுரந்தர பாண்டியனிடத்திலே பகை கொண்ட காடு வெட்டிய சோழன் அன்புடையவனைப்போலப் பாண்டியனிடத் திலே புறத்தே உறவாடி, "என் மகளை உனக்குத் தருவேன் என்று உறுதிமொழி கூறினன். பிறகு அவன் தம்பியாகிய அரச சிங்க பாண்டியனைத் தன்

வழிப்படுத்திக் கொண்டு தன் மகளை அவனுக்குத் திருமணஞ் செய்து கொடுத்து வஞ்சகமாக அவனுக் கும் அரச புரந்தர பாண்டியனுக்கும் பகையை உண்டாக்கி வர லாயினன். மனத்தொடு பொருந்தாமற் பேசுகின்றவர்களுடைய பேச்சை நம்புதல்கூடாது என்பது இவன் செயலால் விளங்கியது.

## பேதைமை

84. வேதசன்மா பல்கலையின் மிக்குமுனி வர்ப்பழிப்பான்
மூதரக்க ஞனன் முருகேசா—காதலினல்
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, வேத சன்மா - வேதசன்மா என்னும் அந்தணன், பல்கலையின் மிக்கும்-பல கலைகளை நன்கு கற்றுணர்ந்திருந்தும், முனிவர்ப் பழிப்பான் - முனிவர்களைப் பழித்துக் கொண்டிருந்தபடியி னலே, மூதரக்கன் ஆனன் - அவர்கள் வைத வசவால் பெரிய அரக்கனக மாறிவிட்டான்; காதலினல் விருப்பத் தோடு, ஓதி உணர்ந்தும் - நூல்களைக் கற்றுணர்ந்தும் , பிறர்க்கு உரைத்தும் - மற்றவர்கட்குப் போதித்தும், தான் அடங்காப்

பேதையில் - தான்மட்டும் அவ்வழியில் அடங்கி நடவாத அறிவற்றவனைப் போல, பேதையார் இல்-அறிவற் றவர்கள இல்லை.

(வி - ம்.) வேதசன்மா என்பவன் பல கலைகளையும் நன்கு ஓதியுணர்ந்திருந்தும் முனிவர்களைப் பழித்தபடியினாலே பெரிய அரக்கனானான்; விருப்பத்தோடு நூல்களை ஓதியுணர்ந்தும்





பிறர்க்குப் போதித்தும் தான்மட்டும் அவ்வழியில் அடங்கி நடவாதவனைப் போல அறிவற்றவன் இல்லை யென்பதாம்.

### வேதசன்மாவின் கதை

கௌசிகன் வழிமுறையிற் பிறந்த வேதசன்மா என்னும் அந்தணன் மனமொழி மெய்கள் அடங்குவதற்குரிய அறிவு நூல்களைக் கற்றிருந்தான். பிறர்க்குப் போதிப்பதிலும் வல்லவனாக இருந்தான். ஆயினும் அவனுடைய உள்ளம் அடங்கி நிற்கவில்லை. பேதைமையால் கற்றோர் பலரையும் இழித்துரைத்துக் கொண்டு திரிந்தான். ஒருநாள் அரச அவையில் சில முனிவர்களோடு வீணே சொற்போரிட்டான். அதனால் அவர்கள் சினங்கொண்டு வசவுரை வழங்கினார்கள். அவ்வசவுரையினால் வேதசன்மா அரக்கனானான்.

85. ஓகையினல் வேதா வுரையையுமேள்
ளிச்சுதன்மன் மூகையனுய்ச் சோர்ந்தான்
முருகேசா—வாகை அருமறை சோரு மறிவிலான்
செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, சுதன் மன் - சுதன்மன் என்பவன், ஓகையினல் - மகிழ்ச்சிப் பெருக்கினல், வேதா உரையையும் எள்ளி-நான்முகனுடைய உரையையும் இகழ்ந்து, மூகையனுய் சோர்ந்தான் - ஊமையனுகித் தளர்வடைந்தான ; வாகை - வெற்றி பொருந்திய, அருமறை சோரும் அறிவு இலான்-அரிய மறைப் பொருளை உள்ளத்திலே வைத்துக் காக்காமல் சோர்ந்து -வெளிப் படுத்தும் அறிவில்லாதவன் , தனக்குத்தானே பெருமிறை செய்யும் - தனக்கு தானே பெருந்தீங்கு செய்து கொள்வான்.*

(வி - ம்.) *சுதன்மன் என்னும் அந்தணன் மகிழ்ச்சிப் பெருக்கினல் நான்முகனுடைய உரையையும் இகழ்ந்து பொருட்பால்*

ஊமையாகித் தளர்ச்சியடைந்தான்; அரிய மறைப்பொருளை உள்ளத்திலே வைத்துக் கொள்ளாமல் சோர்ந்து வெளிப் படுத்தும் அறிவில்லாதவன் தனக்குத் தானே பெருந் தீங்கைச் செய்து கொள்வான் என்பதாம்.

## சுதன்மன் கதை

காசுமீர நாட்டையாண்ட வச்சிரதேய மன்னனுடைய வேள்வியாசானாகிய சுதன்மன் திருமாலை வழிபட்டு அரிய கல்வியைக் கற்றிருந்தான். ஆயினும் அடக்கமாக நடந்து கொள்ளவில்லை. கற்றுணர்ந்த பெரியோர்கள் பலரையும் இழித்துரைத்து வந்தான். இதனையுணர்ந்த நான்முகன் இரக்கங் கொண்டான். அந்தண வடிவத்தோடு வந்து நல்லறிவுச் சுடர் கொளுத்தினான். நான்முகனுடைய மொழியையுங் கேளாது இகழ்ந்தான். நான்முகன் வசவுரை வழங்கவே வாய் பேச முடியாமல் ஊமையானான்.

## இகல்

86. ஆதியையும் வெல்வான் சலந்தரன்சென் றுழியேஃக
மோதமுடி வுற்றான் முருகேசா—ஓதில்
இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, ஆதியை யும் வெல்வான் - சிவபிரானையும் வெல்லும் பொருட்டு, சலந்தரன் சென்று - சலந்தரன் போய், ஆழிஎஃகம் மோத முடிவுற்றான் - உருளைப்படை யானது மோதுதலால் இறந் தொழிந்தான், ஒதில் - கூறுமிடத்து, இகலின் - பகை கொள்ளுதலில், மிக்கல் -மிகுதிப்படுதல், இனிது என்பவன் வாழ்க்கை-இனிமையானது என்று பகைகொள்பவனுடைய வாழ்க்கை, தவலும்-தவறிப் போதலும், கெடலும்-அழிந்து போதலும், நணித்து - விரைவிலே உண்டாவனவாம்.



(வி - ம்.) சலந்தரன் சிவபெருமானையும் வெ ல் லு ம் பொருட்டுச் சென்று ஆழிப்படையானது தாக்க அதனால் இறந் தொழிந்தான், சொல்லுமிடத்துப் பகை கொள்ளுதலில் மிகுதிப் படுதல் இனிமையானது என்று பகை கொள்பவனுடைய வாழ்க்கை தவறிப் போதலும் அழிந்து போதலும் விரைவிலே நிகழக் கூடியன என்பதாம்.

## சலந்தரன் கதை

சலந்தராசுரன் நான்முகன் திருமால் முதலியவர்களை வென்ற செருக்கினால் சிவபெருமானையும் வெல்லத் துணிந்து புறப்பட்டான். அப்பொழுது அவனுடைய மனைவியாகிய பிருந்தை போருக்குப் புறப்பட வேண்டாம் என்று தடுத்தாள். அவன் அவளைத் தடுத்து விட்டுத் திருக்கைலை மலைச் சாரலையடைந்தான். சிவபெருமான் அந்தணராக எழுந்தருளிவந்தார். அவனைப் பார்த்து, "நீ சிவபெருமானை வெல்லுதல் அரிது; மீண்டு போய் விட்டால் பிழைப்பாய்" என்று கூறினார். அவன் அதற்கு உடன் படவில்லை. "உனக்குச் சிவபெருமானை வெல்லு மாற்றலுண்டாயின் யாம் நிலத்திலே கீறும் இவ்வுருளைப் படையை எடுப்பாயாக" என்று கூறி நிலத்திலே பெருவிரலால் ஓர் உருளைப் படையைக் கீறினார். சலந்தராசுரன் அதனை வலிந்தெடுத்துத் தலைமீது தாங்கினான். அஃது அவனுடைய தலையைப்பிளந்தது; அதனால் அவன் மாண்டான்.

## பகைமாட்சி

87. நந்தியெதிர் செம்மாந்தே நாகாரி யெஞ்சலிலா
முந்தைவலி தோற்றான் முருகேசா—உந்தும்
வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே !,*

நாகாரி - கருடன், நந்தி எதிர்செம்மாந்து - நந்தி தேவருக்கு முன்னால் இறுமாப்போடிருந்து, ஈனுசல் இலா - குறைதலில்லாத, பொருட்பால்

117

முந்தை வலி தோற்றான்-முன்னர் இருந்த பெருவலியை இழந்தான், உந்தும்-மேற்செல்லும், வலியார்க்கு-தம்மினும் வலியவரோடு, மாறு ஏறல் ஓம்புக-மாறுபட்டு எதிர்த்தலை விடுக, மெலியார் மேல் பகை - மெலியவர் மேல் பகை கொள் வதை, ஓமபா மேக - விடாமல் விரும்பி மேற் கொள்ளுதல் வேண் டும.

(வி - ம்.) நந்திதேவருக்கு முன்னே கருடன் இறுமாப்புக் கொண்டு தன்னுடைய பேராற்றலை யிழந்தான்; தம்மினும் வலியவர்களிடம் பகை கொள்ளுதலை விடுக. மெலியவர்களிடமோ பகை கொள்ளுதலை விரும்பி மேற் கொள்ளுக என்பதாம்.

கருடன் கதை

சிவபிரானைப் போற்றி வழிபடும் பொருட்டுத் திருமால் திருக்கைலைக்குச் சென்றார். திருமால் உள்ளே சென்ற பொழுது அவருடைய ஊர்தியாகிய கருடன் வாயிலில் இருந்த நந்தி தேவரை வணங்காது பகைத்து இறுமாந்து நின்ற படியினால் அவர் விடுத்த சிறுமூச்சிற் பிறந்த பெருங்காற்றால் மோதுண்டு சிறகு

முறிபட்டு முன்பு இந்திரன் முதலியோரை வென்ற ஆற்றலையிழந்து வருந்தினன். வலியவருடைய பகையை மேற்கொண்டபடியால் கருடனுக்கு இத்தகைய தொல்லை யேற்பட்டது.

## பகைத் திறந்தெரிதல்

88. ஆர்த்தோரன்பர் புத்தநந்தி யைச்செகுத்தார் சம்பந்த
மூர்த்திதிரு வாக்கான் முருகேசா— சீர்த்திமிகு
வில்லே ருழவர் பகைகோளினுங் கோள்ளற்க
சோல்லே ருழவர் பகை.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, சம்பந்த மூர்த்தி திருவாக்கால் - திருஞானசம்பந்தருடைய திரு 118



வாக்கைக் கொண்டு, ஆர்த்து - ஆரவாரஞ் செய்து, ஓர் அன்பர் புத்த நந்தியை செகுத்தார் - ஓர் அடியவர் புத்த நந்தியைக் கொன்றார்; சீர்த்திமிகு - சிறப்புமிகுந்த, வில்ஏர் உழவர் பகைகொளினும் - வில்லை யேராக வுடைய உழவ ராகிய வீரர்களோடு பகையைக் கொண்ட

போதினும், சொல் ஏர் உழவர் பகை-சொல்லை ஏராகக் கொண்ட உழவ ராகிய அறிஞருட ன் பகையை, கொள்ளற்க - கொள்ளா தொழிக.

(வி - ம்.) திருஞானசம்பந்தருடைய திருவாக்கைக் கொண்டு ஓர் அன்பர் ஆரவாரஞ் செய்து புத்த நந்தியின் தலையில் இடிவிழச் செய்தார். சிறப்பு மிகுந்த வில்லை யேராகவுடைய உழவராகிய வீரர்களோடு பகையைக் கொண்ட போதினும் சொல்லை யேராகக் கொண்ட உழவராகிய அறிஞருடன் பகையைக் கொள்ளா தொழிக என்பதாம்.

## புத்த நந்தி கதை

திருஞான சம்பந்தர் எழுந்தருளுங்கால், பரசமய, "கோளரி வந்தார்" என்று முழங்கிய திருச்சின்ன வொலியைப் புத்த ந ந்தியென் பவன் கேட்டுப் பொறாமை கொண்டான். "நீவிர் இவ்வா று ஊதுதல் கூடாது" என்று மறுத்தான். சம்பந்தருடைய அடியவர்களில் ஒருவருக்குச் சின முண்டாகியது. சம்பந்தர் திருவாக்காகிய, "புத்தர் சமண் கழுக்கையர்" என்னுந் தேவாரத்தைப் பாடி அவன் தலையிலே இடிவிழச் செய்தார். அதனால் அவன் இறந்தான்.

## உட்பகை

89. சத்திமுத னூற்றுவர்மாய்ந் தார்விசுவா
மித்திரனுண் மொய்த்தபகை யாலே
முருகேசா—வைத்த அரம்பொருத பொன்போலத்
தேயு முரம்பொரு துட்பகை யுற்ற குடி.



(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, விசுவா மித்திரன் உண் மொய்த்த பகையால் - விசுவாமித்திரருக்கு உள்ளத்திலே மூண்ட பகையினால், சத்திமுதல் நூற்றுவர் மாய்ந்தார் - சத்திமுனிவர் முதலிய நூறு பேர் இறந்தொழிந்தார்கள், வைத்த - வைக்கப்பட்ட, உட்பகை உற்ற குடி - உட்பகை கொண்ட குடியானது, அரம் பொருத பொன் போல - அரத்தினால் தேய்க்கப்பட்ட இரும்பைப் போல, உரம் பொருது தேயும - வலிமை குறைக்கப்பட்டுத் தேய்ந்து போகும்.

(வி - ம்.) விசுவாமித்திர முனிவர் மிகுந்த உட்பகை கொண்டபடியினால் சத்தி முனிவர் முதலிய நூறு பேர் இறந்தொழிந்தார்கள்; உட்பகை கொண்ட குடியானது அரத்தினாலே தேய்க்கப்பட்ட இரும்பைப் போல் வலிமை குறைக்கப்பட்டுத் தேய்ந்து போகும் என்பதாம்.

விசுவாமித்திரர் கதை

கௌசிகன் என்னும் அரசன் ஒருநாள் வேட்டைக்குச் சென்று களைப்படைந்தான். பிறகு படைகளோடு வசிட்ட முனிவருடைய இருப்பிடத்தை யடைந்தான். வசிட்ட முனிவருடைய கட்டளைப்படி காமதேனு பல மாதர் உருக்கொண்டு அரசனுக்கும் படைகட்கும் விருந்து செய்தது. அதனைக் கண்ட அரசன் மிகுந்த வியப்படைந்தான். காமதேனுவைத் தனக்குக் கொடுக்க வேண்டுமென்று வசிட்ட முனிவரைக் கேட்டான். அவர், "இக் காமதேனு தேவருலகைச்சேர்ந்தது; யான் கொடுப்ப தற்கு உரிமையுடையவனல்லேன்" என்று உரைத்தார். அரசன் அதனை வலிந்து பற்றிக் கொண்டு செல்லத்தொடங்கினன். அது படைகளை அழித்துவிட்டு விண்ணுலகத்தை யடைந்தது. அரசனுடைய மக்கள் நூறுபேரும் வசிட்டமுனிவரை யெதிர்த்துக் கணைகளைப் பொழிந்தார்கள். வசிட்டருடைய பார்வையால் அனைவரும் இறந்தார்கள். அரசன் மிகுந்த சின மடைந்தான், சிவபெருமானிடம் பெற்ற அரிய கணைகளைச்



செலுத்தினன். அவை யாவும் முனிவர் நாட்டிய தடியில் ஒளித்தன. அரசன் தவத்தின் பெருமையை உணர்ந்து வியந்தான். அரசுரிமையைத் துறந்து தவஞ் செய்தான். விசுவாமித்திரர் என்னும் பெயருடைய

முனிவனுனன். ஆகியும் முன்னே தம் புதல்வரைக் கொன்றமை காரணமாக வசிட்டமுனிவர்பால் உட்பகை கொண்டான். அவ்வசிட்டமுனிவர்பால் வைத்த உட்பகையால் ஓர் அரக்கனை யேவினுன். அவ்வரக்கனுல் அம் முனிவருடைய புதல்வராகிய சத்திமுனிவர் முதலிய நூறு பேர் மடிந்தனர்.

## பெரியாரைப் பிழையாமை 90.

தெற்றியுதங் கற்கமிழ்தீ யாதுவஞ்சித் திந்திரன்சீர்
முற்றுமிழந் தெய்த்தான் முருகேசா—உற்றுணரின்
ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து வேந்தனும்
வேந்து கெடும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, இந்திரன்- இந்திரனைவன், தெற்றி உதங்கற்கு-தெளிந்த அறிவினை யுடைய உதங்க முனிவருக்கு, அமிழ்து ஈயாது வஞ்சித்துஅமுதங் கொடுக்காமல் வஞ்சனை செய்து, சீர் முற்றும் இழந்து எய்த்தான் - சிறப்பு முழுவதையும் இழந்து வருந்தினுன், உற்று உணரின் - ஆராய்ந்து பார்த்தால், ஏந்திய கொள்கையார் சீறின் - உயர்ந்த கொள்கையினை யுடைய பெரியோர்கள் சீறினுல், வேந்தனும் - அரசனும், இடைமுரிந்து - நடுவே கெட்டு, வேந்து கெடும்

- அரசு இழந்து கெடுவான்.

(வி - ம்.) 'தெற்றிய' என்னும் பெயரெச்சத்து ஈறு தொக்கது. இந்திரன் உதங்கருக்கு அமுதத்தைக் கொடுக்காமல் வஞ்சித்தபடியால் எல்லாவற்றையும் இழந்து வருந்தினன். உயர்ந்த கொள்கையினையுடைய பெரியவர்கள் சினங்கொண் டால் அரசனும் இடையே கெட்டு அரச பதவி யிழப்பான்.

பொருட்பால் **121**

## உதங்க முனிவர் கதை

உதங்கமுனிவர் அமுதத்தை விரும்பி அருந்தவம் புரிந்தார் சிவபிரான் அதனையளிக்குமாறு இந்திரனுக்குக் கட்டளை யிட்டருளினர். இந்திரன் முனிவரை வஞ்சிக்க எண்ணினன். அமுதத்தைத் தோலிற் பொதிந்து கையிலெடுத்துக்கொண்டு இழிந்த கோலத்தோடு போய் முனிவர் முன்பு வைத்தான். "இவ்வமுதத்தை எடுத்துக் கொள்க" என்று சொன்னன். அவர், "நீசனே தூரச் செல்க" என்று துரத்தினர். பிறகு உண்மையை உணர்ந்தார். "இவ்வாறு செய்தவன் முனிவர் வசவுரையால் செல்வமும் வன்மையும் இழக்கக் கடவன்" என்று வசவுரை வழங்கினர். இஃதிவ்வாறாகப் பிருகுமுனிவருடைய புதல்வராகிய சிவனர் என்பவர் உடல் முழுதும் புற்றுமூடத் தவஞ்செய்து கொண்டிருந்தார். அப்பொழுது சையாதி

வேந்தனுடைய மகள் சுகன்னி யென்பவள் மலர் கொய்யச்சென்றாள். புற்றிலேயுள்ள தொளையில் கண் விளங்குவதைப் பார்த்தாள்; பொன்வண்டு என்று எண்ணினாள். துரும்பிட்டுக் கண்ணைக் கிண்டினாள். அவர் கண்ணை மூடியமையால் படை முழுமையும் கண்ணொளி மழுங்கியது. அதனை அரசன் கண்டு இஃது எதனால் நேர்ந்தது என்று உசாவினான். நிகழ்ந்ததை உணர்ந்தான். அச்சங் கொண்டு முனிவரையடைந்து வணங்கினான். குற்றத்தைப் பொறுக்குமாறு வேண்டிக் கொண்டு தன்னுடைய மகளை அம் முனிவருக்குத் திருமணஞ் செய்து கொடுத்துவிட்டுத் தன்னக ரடைந்தான். அம்முனிவர் அவளோடு வாழ்கின்ற காலத்தில் தமக்கு இளமையளித்த அச்சுவினி தேவர்கட்கு வேள்வியிலே தேவருணவு ஏற்படுத்த எண்ணினார். தாமியற்றிய வேள்வியிற் பாகம் வகுத்தார். இந்திரன் அவர்க்குக் கொடாவண்ணந் தடுத்தான். அவர் உடன்படாமையாற் சீறினான். தன்னுடைய வச்சிரப்படை யைச் செலுத்தித் தோல்வி யடைந்தான். அவருடைய வசவுரையால் செல்வமிழந்து துன்பமடை ந்தான். இவற்றிற்குக் காரணம் உதங்கரை வஞ்சித்தமையே எனத் துணிந்து அவரை வழிபட்டு அமிழ்திந்து பழையநிலையை அடைந்தான்.



## பெண்வழிச் சேறல்

**91.** தாசரதி யுஞ்சீதை தன்வழிப்பட் டோர்மானுன்
மோசம்போய்ச் சோர்ந்தான்
முருகேசா--பேசுங்கால் எண்சேர்ந்த நெஞ்சத்
திடனுடையார்க்

கென்ஞான்றும்

பெண்சேர்ந்தாம் பேதைமை யில்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, தாசரதி யும் - இராமனும, சீதை தன் வழிப்பட்டு - சீதையின் சொல்லைக் கேட்டு, ஓர் மானல்-வஞ்சிப்பதில் ஒப்பற்ற மாரீச னென்னும பொன்மானல், மோசம் போய் சோர்ந்தான் - ஏமாந்து தளர்ச்சி யடைந்தான; பேசுங்கால் - கூறுமிடத்து, எண் சேர்ந்த நெஞசத்து இடன் உடையார்க்கு - நன்ருக எண்ணுதல் பொருந்திய நெஞ்சத்தோடு தக்க நிலையும் உடையவர்கட்கு, எஞ்ஞான்றும் - எப்பொழுதும், பெண் சேர்ந்து ஆம் பேதைமை இல் - மனைவியின் சொல்லைக் கேட்டு இணங்கும அறியாமை யில்லை.*

(வி - ம்.) *இராமபிரானுஞ் சீதாபிராட்டியின் சொல்லைக் கேட்டு ஒருமானின் பின்னே போய் ஏமாந்து தளர்ச்சி யடைந்தான். சொல்லுமிடத்தில் நன்ருக ஆராய்ந்து பார்க்கும் நெஞ்சத்தோடு*

தகுந்தவிலையும் உடையவர்கட்கு எக் காலத்திலும் மனைவியின் சொல்லைக்கேட்டு இணங்கி நடக்கும் அறியாமை யில்லையென்பதாம்

இராமன் கதை

மாரீசன் இராவணனுடைய கட்டளைப்படி இளமையும் பொன்னிறமும் வாய்ந்த மான் வடிவு கொண்டு தண்டகாரணியத்தை யடைந்தான். அதனைப் பிடித்துத் தருமாறு சீதா பிராட்டி இராமபிரானை வேண்டினாள். அப்பொழுது இலட்சுமணன் இஃது அரக்கருடைய வஞ்சகத்தினால் வந்த பொருட்பால் 123

மாயமான் என்று கூறியும் இராமபிரான் அம்மொழியைக் கேட்கவில்லை. அதனைப் பிடிக்கச் சென்று சீதையையும் இழந்து சிந்தை கலங்கினான். பிறகு ஏற்பட்ட தொல்லைகள் பல.

வரைவின்மகளிர்

92. மாழ்கிவரை வின்மகளிர் வஞ்சனையில்
பாட்களன்றான்
மூழ்கியல்லாப் புற்றான் முருகேசா—வீழ்கும்
பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு
ளாயு மறிவி னவர்.

(இ - ள்.) முருகேசா - முருகபெருமானே !,

பாட் களன் - பாட்களன் என்பவன், வரைவு இல்மகளிர் வஞ்சனை யில் மாழ்கி - விலைமகளிர்களுடைய வஞ்சனையிலே மயங்கி, மூழ்கி - அதில் நன்கு அமிழ்ந்து, அல்லாப்பு உற்றான் - வருத்தத்தை யடைந்தான ; வீழ்கும் - விரும்பும, பொருள் பொருளார் - பொருள் ஒன்றையே பொருளாகக் கொண்ட பொதுமகளிருடைய, புனலம - இழிந்த இன்பத்தை, அருள் பொருள் ஆயும அறிவினவர் தோயார் - அருளாகிய சிறந்த பொருளை ஆராயும் அறிவுடையோர் பொருந்த மாட்டார்.

(வி - ம்.) பாட்களன் என்பவன் விலைமாதர்களுடைய வஞ்சனையிலே மூழ்கி மிகுந்த துன்பத்தை யடைந்தான். பொருளையே பொருளாகக் கொண்ட விலைமாதர்களுடைய இழிந்த இன்பத்தை அருளாகிய பொருளையே தேடுகின்ற பெரியோர்கள் பொருந்த மாட்டார்கள் என்பதாம்.

## பாட்களன் கதை

முன்னாளில் அளகை நகரத்திலிருந்த பாட்களன் என்னும் பெயருடைய ஓர் அந்தணன் தான் தேடிய மிகுந்த பொருட் ;124 முருகேசர் முதுநெறி வெண்பா

குவியல்களையெல்லாம் விலைமாதர்கட்கு வழங்கினான்.

பிறகு கொடுப்பதற்குப் பொருளில்லாதபடியால் களவு செய்து அப் பொருளைக் கொடுத்துக் கொண்டிருந்தான்., ஒரு நாள் அந்தணர்களுடைய வேள்விக்குரிய ஆவைக் களவு செய்தான். அப்பொழுது காவலராற் பிடிக்கப் பட்டுக் கால் வெட்டுண்டான். ஆதரிப் பாரின்றி அலைந்து வருந்திப் பல தொல்லைகட்கு உள்ளானன்.

கள்ளுண்ணுமை

:93. ஞயபல பத்திரன்றன் சூதனைமாய்த்
தல்லலுற்றன் மூயமது மாலான்
முருகேசா—ஆயுங்கால் துஞ்சினர் செத்தாரின் வே
றல்ல ரெஞ்ஞான்றும் நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(இ - ள்.) தூய பலபத்திரன் - தூய்மையுடையவராக இருந்த பலராமர், மூய் மதுமாலால் - மிகுந்த கள்ளினை யுண்ட மயக்கத்தினுல், சூதனை மாய்த்து - சூதமுனிவரைக் கொன்று, அல்லல் உற்றன் - துன்பத்தை யடைந்தான்;
ஆயுங்கால் - ஆராய்ந்து பார்க்குமிடத்து, துஞ்சினர்
செத்தாரின் வேறு அல்லர் - உறங்கினவர் இறந்தவரைவிட

வேறு பட்டவர் அல்லர், என்ஞான்றும் - எப்பொழுதும்,
கள்உண்பவர் - மதுவைக் குடிப்பவர்,
நஞ்சுஉண்பார் - நஞ்சுண்பவரேயாவர்.

(வி - ம்.) பலராமர் மதுமயக்கத்திலே மூழ்கிச் சூத முனிவரைக் கொன்று துன்புற்றார்; உறங்கினவர் இறந்தவரை விட வேறுபட்டவர் அல்லர், அவ்வாறே கள்ளுண்பவரும் அறிவு மயங்குதலால் நஞ்சுண்பவரே யாவர் என்பதாம்.

### பலராமர் கதை

ஒருநாள் பலராமர் மதுபானஞ் செய்தார்: அதனால் அவருக்கு மிகுந்த மயக்கம் உண்டாகியது. தம்மனைவியாகிய



ரேவதியோடு பலமாதர்கள் புடை சூழத் தளர்நடையுடன் இரைவதமலையை அடைந்தார். வனச் சிறப்புக்களையெல்லாம் பார்த்துக் கொண்டே சூத முனிவர் புராணச் சொற்பொழிவு செய்து கொண்டிருக்குமிடத்திற்குச் சென்றார். பலராமரைக் கண்ட முனிவர்கள் இவர் மதுபானத்தால் மயங்கியிருக்கிறார்; வழிபாடு செய்து அனுப்பி விடுதலே தக்கதெனத் துணிந்து ஒருங்கெழுந்து போற்றி வழிபட்டனர். சூத முனிவர் மட்டும் எழாதிருந்தார்.

பலராமர் மிகுந்த சினங் கொண்டார். மது மயக்கத்தால் அவரைக் கொன்றார். பிறகு தெளிவடைந்து, "நான் இப்பெரிய தீவினையைச் செய்தமையால் என்னைப் பெருங் குற்றங் தொடரும், மதுபானஞ் செய்வது மிகப் பொல்லாதது ' என்று தம்மைத்தாமே வெறுத்துக் கொண்டு சூதமுனிவரைப் பிழைப்பித்தார் . பிறகு புனித நீர்ப்பயணஞ் சென்று அக் குற்றத்தைப் போக்கிக் கொண்டார்.

௲

94. வெஞ்சூதாற் றந்தை வெறுக்கக் குணநிதிதான்
முஞ்சினனூண் வவ்வி முருகேசா—துஞ்சும் அகடாரா
ரல்ல லுழப்பர்சூ தென்னும் முகடியான் மூடப்பட்
டார்.

(இ - ள்.) குணநிதிதான் - குணநிதி என்பவன், வெம் சூதால் தந்தை வெறுக்க - கொடிய சூதாடித்திரிந்த படியினலே தந்தை வெறுத்தொதுக்க, ஊண் வவ்வி முஞ்சினன் - சிவபெருமானுக்குப் படைத்த உணவைக் கவர்ந்து இறந்தான்; சூது என்னும் முகடியால் மூடப் பட்டார் - சூது என்று சொல்லப்படுகிற மூதேவியினலே விழுங்கப்பட்டவர், அகடு ஆரார் - வயிறு நிறைய உண்ணுதற்கு

உணவும் அற்றவராய், துஞ்சும் அல்லல் உழப்பர் - இறக்கத்தக்க துன்பத்தையும் அடைவார்கள்.



(வி - ம்.) குணநிதி என்பவன் கொடிய சூதாட்டத்தில் படிந்த குற்றத்தினால் தந்தையும் வெறுத்தொதுக்கச் சிவபிரானுடைய உணவைக் கவர்ந்து இறந்தான். சூது என்று சொல்லப்படுகிற மூதேவியினாலே விழுங்கப் பட்டவர்கள் வயிற்றுக்குப் போதிய உணவும் பெறாதவர்களாய் மிகுந்த துன்பத்தை அடைவார்கள் என்பதாம்.

## குணநிதி கதை

காம்பிலிநாட்டிலே வேள்விதத்தன் என்னும் பெயருடைய அந்தணன் ஒருவன் இருந்தான். அவனுக்குக் குணநிதி என்னும் பெயருடைய மைந்தன் ஒருவன் இருந்தான். அவன் தன்னுடைய தந்தை தேடி வைத்த பொருள்களைக் கவர்ந்து கொண்டு போய்ச் சூதிலே தோற்றுக் கொண்டிருந்தான். அவனுடைய தாய் அவனுக்குப் பலவகையாக அறிவுரைகள் கூறியும் அவன் அவ்வறிவுரைகளைச் சிறிதுங் கேட்கவில்லை. அவளோ தன்னுடைய கணவன், "மகன் எங்கே? " என்று கேட்கும் பொழுதெல்லாம், "மறையோதச் சென்றிருக்கிறான்" என்று கூறிக் கொண்டிருந்தாள். ஒருநாள் அச் சூதாடி தந்தையினுடைய கைம்மோதிரத்தையுங் கவர்ந்து கொண்டுபோய்ச் சூதிலே

தோற்றான். அவன் தந்தை அதை யணிந்து கொண்டிருந்த ஒருவனால் தன் மகனுடைய செய்கையை அறிந்து கொண்டான். மகனுடைய செய்கையை மறைத்துக் கூறிய மனைவியையும் மகனையும் நீக்கி விட்டுவேறு மணஞ் செய்து கொண்டான். குணநிதி ஒரு நாள் கோயிலிலே சிவனிரவில் சிவபெருமானுக்குப் படைத்த உணவைக் கவர்ந்து காவலரால் வெட்டுண்டிறந்தான்.

## மருந்து

95. சீலமிலாப் பேய்ச்சமணர் சிந்தைநொந்தார்
பாண்டியனைய்
மூலமறி யாது முருகேசா—ஏலவே
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும் வாய்நாடி
வாய்ப்பச் செயல்.

பொருட்பால் 127

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, பாண்டியன் நோய் மூலம் அறியாது - பாண்டிய மன்னனுடைய நோயின் மூலகாரணத்தை உணர்ந்து கொள்ளாமல், சீலம் இலாப் பேய்ச் சமணர் - நல்லொழுக்கமில்லாத

பேய்த்
தன்மைபொருந்திய சமணர்கள், சிந்தை நொந்தார் -
மனம்
வருந்ினர்கள, ஏல - பொருந்துமாறு, நோய் நாடி -
நோய் இன்னதென்று ஆராய்ந்து, நோய் முதல்
நாடி - நோயின்
மூல காரணத்தையாராய்ந்து, அது தணிக்கும
வாய்நாடிஅதனைத் தணிக்கும் வழியையும் ஆராய்ந்து,
வாய்ப்பசெயல்- பொருந்தும்படியாகச் செயதல்
வேண்டும்.

(வி - ம்.) பாண்டிய மனனனுடைய நோயின்
மூல காரணத்தை யுணர்ந்து கொள்ளாமல் பேய்த்தன்மை
பொருந்திய சமணர்கள் உள்ளம் வருந்ினர்கள். நோய்
இன்னது என்று ஆராய்ந்து அது உண்டாகிய
காரணத்தையும் ஆராய்ந்து அதனைப் போக்கும்
வழியையும் தெரிந்து பொருந்துமாறு செய்தல்
வேண்டும் என்பதாம்.

### சமணர்கள் கதை

சமணர்கள் திருஞானசம்பந்தர் தங்கியிருந்த
திருமடத்திலே தீயை வைத்த படியினால்
பாண்டியற்குக் காய்ச்சல் நோய் உண்டாகியது. ச
மணர்கள் அஃதுண்டாகிய காரணத்தையும் அதனைப்
போக்கத் தக்க வழியையும் உணர்ந்து கொள்ளவில்லை.
வீண் முயற்சி செய்து கலங்கினர்கள்.
திருஞானசம்பந்தரோ நோய் உண்டாகிய காரணத்தை
எளிதில் உணர்ந்து கொண்டு திருநீற்றினால்

அந்நோயைப் போக்கியருளினர்.

குடிமை

96. நித்திரையோர்க் கொன்றவசு வத்தாம
னீக்கமுற்றான் முத்தமுனி வோரான்
முருகேசா—மெய்த்த குடிப்பிறந்தார் கண்விளங்குங்
குற்றம் விசும்பின் மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.



(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! நித்திரை யோர் கொன்ற அசுவத்தாமன் - உறங்கிக் கொண்டிருந்தவர்களைக் கொலைபுரிந்த அசுவத்தாமன், முத்த முனிவோரால் - முற்றத்துறந்த முனிவர்களால், நீக்க முற்றான் - கொடியவனென்று விலக்கப்பட்டான்; மெய்த்த - உண்மையாகிய சிறந்த, குடி பிறந்தார் கண் விளங்கும் குற்றம் - குடியிலே பிறந்தவர்களிடத்தில் உண்டாகிய குற்றம், விசும்பின் - விண்ணில் உள்ள, மதிக்கண்-திங்களினிடத்ததாகிய, மறுப்போல் - மறுவைப்போல், உயர்ந்து விளங்கும் - மேலோங்கி விளங்குவதாகும்.

(வி - ம்.) உறங்கிக் கொண்டிருந்தவர்களைக் கொலை புரிந்த அசுவத்தாமன் மிகப் பொல்லாதவனென்று முனிவர்களனைவராலும் விலக்கப்பட்டான். உயர்ந்த குடியில் பிறந்தவர்களிடத்தி லுண்டாகிய குற்றமானது விண்ணின்கண்ணுள்ள திங்களினது மறுவைப் போல் மேலோங்கி விளங்கும் என்பதாம்.

## அசுவத்தாமன் கதை

திட்டத்துய்மன் முதலியோர் பதினெட்டாம் நாட் பகலிற் செய்த போரினால் மெலிவடைந்து அன்றிரவு பாசறையிலே அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அப்போது அசுவத் தாமன், சிவபிரானிடம் பெற்ற வாட் படையினால் அவர்களைக் கொலை புரிந்தான். பிறகு அவன் சென்றவிடங்களிலெல்லாம் இருந்த முனிவர்களால் மிகப்பொல்லாதவன் என்று விலக்கப் பெற்றான். அதனால்
சேதுவுக்குப் போய்ப்

மிகத் தளர்ச்சியடைந்த அவன் பிறகு
புனித நீராடி அப்பழியைப் போக்கிக்

கொண்டான். அசுவத்தாமன் புகழ் பெற்று விளங்கியவனாகையால் அவன் செய்த குற்றம் எல்லோராலும் மிகப்பெரிதாகக் கொள்ளப் பட்டது.

குலம்

97. தேசுருவா னின்னிலைமை தேர்ந்துமா
னத்திறந்தான் பூசுபுகழ்ச் சூரன்
முருகேசா—நேசமிகுஞ் சீரினுஞ் சீரல்ல செய்யாரே
சீரோடு
பேராண்மை வேண்டு பவர்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! தேசு உரு வால் - பேரொளி தங்கிய நின்னுடைய உருவச் சிறப்பினால், பூசுபுகழ் சூரன் - உலகெங்கும் பரவி புகழையுடைய சூரபதுமனானவன், நின நிலைமை தேர்ந்தும் - தேவரீரே முழுமுதற் கடவுள் என்னும் உண்மையை உணர்ந்தும், மானத்து இறந் தான்-தன்னுடைய பெருமையைக்காப்பாற்றிக்கொள்ள வேண்டும் என்னும எண்ணத்தோடு இறந்தொழிந்தான்; நேசம் மிகும் - நட்பானது மிகுதிப்படுகிற, சீரினும்-சிறப்படைத் தேடுகிற காலத்தினும், சீரொடு பேராண்மை வேண்டு பவர் - புகழையும் ஆண்மையையும் விரும்புகிறவர்கள், சீர் அல்ல செய்யார் - குடிப்பெருமைக்கு ஒவ்வாத காரியங்களைச்

செய்யமாட்டார்கள்.

(வி - ம்.) சூரபதுமனானவன் தேவரீருடைய முழுமுதற் றன்மையை ஒளிவடிவத்திற் கண்டுணர்ந்தும் தன்னுடைய பெருமையைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்னும் எண்ணத்தோடு இறந்தொழிந்தான்; சிறப்பைத் தேடுகிற காலத்திலும் புகழையும் ஆண்மையையும் விரும்புகிறவர்கள் குடிப் பெருமைக்கு ஏற்காத காரியத்தைச் செய்யமாட்டார்களென்பதாம்.

### சூரன் கதை

சூரபன்மன் முருகக் கடவுளோடு போர் புரிந்தான். ஒரு நாள் முருகக் கடவுள் தம்முடைய ஒளி தங்கிய பேருருவத்தைச் சூரபதுமனுக்குக் காட்டியருளினார். அதனால் சூரபதுமன் முருகக்





கடவுளே முழுமுதற் கடவுளென்றுணர்ந்து உள்ளத்திலே போற்றினான். ஆயினும் பகைவனாகவிருக்கும் இந்நிலையில் இக்கடவுளை வணங்கித் தாழ்ந்து போவது நம்முடைய பெருமைக்கு ஏற்றதல்லவென்று முடிவு செய்து மேலும் போரிட்டு மாண்டொழிந்தான்.

### பெருமை

98. கும்பமுனி யானகுடன் சர்ப்பவென்றே
குண்டலியாய் மொய்ம்பிழந்து வீழ்ந்தான்
முருகேசா—உம்பரினும் மேலிருந்து மேலல்லார்
மேலல்லர் கீழிருந்துங் கீழல்லார் கீழல் லவர்.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, நகுடன் சர்ப்ப என்று - நகுடன் ஆனவன் சர்ப்ப என்று கூறி, கும்ப முனியால் - அகத்திய முனிவரால், குண்டலியாய் மொய்ம்பு இழந்து வீழ்ந்தான் - பாம்பாகி வலிமை கெட்டு நிலத்தில் வீழ்ந்தான், உமபரினும் தேவர்களைப் பார்க்கினும்- மேல் இருந்தும-மேல் நிலையில் இருந்தாலும், மேல் அல்லார் மேல் அல்லர்-மேன் மைத் தன்மையில்லாதவர்கள் மேலான வர்களல்லர்: கீழ் இருந்தும - கீழான நிலையில் இருந்தாலும் கீழ் அல்லார் கீழ் அல்லவர் - இழி குணமில்லாதவர்கள் கீழ் மக்களாக மாட்டார்கள்.*

*(வி- ம்.) நகுடனனவன் சர்ப்ப என்று கூறி அகத்திய முனிவரால் பாம்பாகி வலிமை கெட்டு நிலத்திலே வீழ்ந்தான் ; மேல் நிலையில் இருந்தாலும் மேன்மைத் தன்மையில்லாதவர்கள் மேலானவர்களல்லர், கீழான நிலையில் இருந்தாலும் இழி குணமில்லாதவர்கள் கீழ் மக்களாகமாட்டார்கள் என்பதாம்.*

நகுடன் கதை

நகுடன் என்பவன் நூறு பரி
தேவேந்திரனுனன். விண்ணுலகம்

வேள்விகள் செய்தபடியால்
புக்க அவன் விரைந்து பொருட்பால்

131

இந்திராணியிடஞ் செல்ல எண்ணினுன். அவ்வாறு செல்ல வேண்டுமாயின் பெருமையிற் சிறந்த எழு முனிவர்கள் சிவிகை தாங்கச் சிவிகையிலேறிச் செல்லுதல் வேண்டும். நகுடன் செய்த வேள்விச் சிறப்பால் முனிவர்கள் சுமக்கும் சிவிகை நகுடனுக்கு வந்தது. நகுடன் அச்சிவிகையிலேறிக் கொண்டு இந்திராணியிடஞ் சென்றுன். அவ்வாறு செல்லுபவனிடம் புன்மைக் குணந்தான் மிகுந்தது. விரைவாக இந்திராணியிடம் போக எண்ணினுன். சிவிகை தாங்கும் முனிவர்களுடைய பெருமையைச் சிறிதும் எண்ணிப் பாராமல், "விரைவாகச் செல்லுங்கள்" என்று சொல்வதற்காகச் "சர்ப்ப சர்ப்ப" என்றுன். இதனைக் கேட்டதும் அகத்திய முனிவருக்குச் சின முண்டாகியது. அவர், "நீ சர்ப்பமாகுக" என்று வசவுரை வழங்கினர். அவ்வளவில் நகுடன் பாம்பாகி நிலத்திலே விழுந்து புரண்டான். இவ்வாறு நகுடன் இந்திர பதவியை அடைந்தும் மேன்மையில்லாதவனு கிக்

கீழ்நிலையை அடைந்து விட்டான்.

சான்றாண்மை

99. தொக்கிடும்பை கௌசிகனாற் சூழ்ந்துமரிச் சந்திரன்சொன்
முக்கியமாக் காத்தான் முருகேசா—அக்கணமே ஊழி
பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக் காழி
யெனப்படு வார்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, அரிச் சந்திரன் - அரிச்சந்திரனானவன், கௌசிகனால் - விசுவாமித்திர முனிவனால், இடும்பை தொக்கு சூழ்ந்தும்- துன்பங்களானவை கூட்டமாகச் சூழ்ந்து வந்தும், சொல் முக்கியமாகக் காத்தான் - அவன் தன்னுடைய வாய்ச் சொல்லை முதன்மையானதாகக் காப்பாற்றினான், அக் கணமே - அப்பொழுதே, ஊழி பெயரினும் - ஊழிக் காலமுண்டாகி உலகம் அழிவதாக இருந்தாலும், சான்றாண் 132 முருகேசர் முதுநெறி வெண்பா

ண்மைக்கு ஆழி எனப்படுவார் - பெருந்தன்மைக்குக்

கடல் என்று கூறப் பெறுபவர், தாம் பெயரார் - தாம் சிறிதும் மாறுபட மாட்டார்கள்.

((வி - ரை.) அரிச்சந்திரனானவன் விசுவாமித்திர முனிவனால் பல துன்பங்கள் மேலும் மேலும் தொடர்ந்து வரப் பெற்ற பொழுதும் தன்னுடைய வாய்ச் சொல் பொய்யாகாதவாறு அதனைக் காப்பாற்றினான்; பெருந்தன்மையில் கடலைப் போல விளங்குபவர் ஊழியே வருவதாயினும் தாம் தம்முடைய இயற்கையிலிருந்தும் பிறழமாட்டார்கள் என்பதாம்.

அரிச்சந்திரன் கதை

தேவர்களுடைய அவையிலே வசிட்ட முனிவர் இவ் வுலகத்தில் அரிசந்திரன் ஒருவனே மெய்ம்மையாளன் என்று கூறினார். விசுவாமித்திரரோ அவன் பொய் பேசுபவன்தான் என்றார். பிறகு தம்முடைய வாக்கை மெய்ப்பிப்பதற்காக அரிச்சந்திரனுடைய அரசுரிமை முதலியவைகளை வஞ்சனையினால் கவர்ந்தார். அவனுடைய மனைவியையும் புதல்வனையும் அந்தணனுக்கு அடிமையாக்கினார். அரசனை நீசனுக்கு அடிமையாக்கினார். புதல்வன் இறத்தல் முதலிய துன்பங்களை விளைத்தும் அரிச் சந்திரனைப் பொய்யனாக்க முடியவில்லை. அவன் தன்னுடைய மெய்ம்மைப் பண்பிலிருந்து சிறிதுந் தவறுதலாக விளங்கினான். சான்றாண்மைக்கு ஆழியெனப் படுவார் ஊழி பெயரினுந் தாம் பெயரார் என்பது அரிச்சந்திரனிடத்தில் நன்கு விளங்கியது.

100. ஓவாச் சிவசமய மோங்கியதே நால்வரால்
மூவா முதலே முருகேசா—தாவாத பண்புடையார்ப்
பட்டுண் டுலக மதுவின்றேல் மண்புக்கு மாய்வது
மன்.

*(இ - ள்.) மூவா முதலே முருகேசா - என்றும் மூப்பினையடையாத முழுமுதற்பொருளாக விளங்குகின்ற பொருட்பால் 133 முருகப் பெருமானே!' நால்வரால் - சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்னும் சமயாச்சாரியர்கள் நால்வரால், ஓவா சிவசமயம் ஓங்கியது - என்றுமழியாத சைவசமயமானது மேலோங்கியது, தாவாத - கெடாத, உலகம் - இவ்வுலகமானது, பண்பு உடையார்ப் பட்டு உண்டு - பண்புடையவரிடத்திலே பொருந்தியிருப்பதால் உள்ளதாக விளங்குகின்றது, அது இன்றேல் - அஃதில்லையானால், மண்புக்கு மாய்வது - மண்ணிலே புகுந்து அழிந்து போவதாகும்.*

*(வி - ம்.) என்று மழியாத சைவ சமயமானது சமயாசாரியர்கள் நால்வரால் சிறந்து*

விளங்கியது. இவ்வுலகம் பண்புடையவர்களிடத்திலே பொருந்தியிருப்பதால் சிறந்து விளங்குகின்றது. பண்புடையாரைப் பெற்றிராமலிருக்குமாயின் மண்ணிலே புகுந்து அழிந்து போயிருக்கும் என்பதாம். மன்: அசைநிலை.

### நால்வர் கதை

சமணர் பௌத்தர் முதலிய புறச் சமயிகள் அடிக்கடி தோன்றித் தம் சமயத்தை வளர்க்கத் தொடங்கியதால் சைவசமய வளர்ச்சி குன்றிய பொழுது சமயாசாரியர்கள் நால்வருந் தோன்றிச் சிவபெருமானுடைய திருவருளைக் கொண்டு புறச் சமயங்களை களைந்து சைவசமயத்தை வளர்த்தார்கள். அதனால் சைவ சமயந் தழைத்தோங்கியது.

### நன்றியில் செல்வம்

101. மாழ்கிநிதி நல்கானால் வாணிகர்மாண் டார்கடலுண்
மூழ்கிநிதி யோடு முருகேசா—வாழ்வுமிக
ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! நிதி நல்கா நால் வாணிகர் - கோயில் திருப்பணிக்கும் பொருளைக் கொடாத நான்கு வணிகர்களும், கடலுள நிதியோடு மூழ்கி மாழ்கி மாண்டார் - கடலுள் செல்வத்தோடு மூழ்கி வருந்தி இறந்தார்கள், வாழ்வு மிக - வாழ்வு மிகுதிப்படுமாறு, ஈட்டம் இவறி - சேர்த்துவைப்பதையே விரும்பிப் பற்றுள்ளங் கொண்டு, இசை வேண்டா ஆடவர் தோற்றம- புகழை விரும்பாத மக்கள் பிறந்து வாழ்தல், நிலக்கு பொறை - நிலத்திற்குச் சுமையாகும்.

(வி - ம்.) கோயில் திருப்பணிககும பொருளைக் கொடாத நான்கு வணிகர்களும் தம்முடைய பொருளோடு கடலிலே மூழ்கி வருந்தி மாண் டார்கள்; செல்வம் சேர்த்தலையே விரும்பிப் பற்றுள்ளங் கொண்டு புகழை விரும்பாத மனிதர்களுடைய பிறப்பானது நிலத்திற்குச் சுமையாகும் என்பதாம்.

## நான்கு வணிகர்கள் கதை

யவன நாட்டிலே ஆதித்த புரத்திலே விச்சுவவசு என்னும் பெயருடைய வணிகன் ஒருவன் இருந்தான். அவனுக்கு நான்கு மக்களிருந்தார்கள். அவர்கள்

பொருளைப் பெருக்கிச் சிறப்புடன் வாழ்ந்திருந்தார்கள். ஆதித்தேசுரர் கோயில் திருப்பணியின் பொருட்டு ஓர் அந்தணன் அவர்களிடம் பொருள் வேண்டினான். பொருளுதவி செய்வதாகக் கூறி அலையச் செய்தார்களே யன்றிக் கொடுக்கவில்லை. கொடுக்காத தீவினை யினால் அவர்கள் கடலிற் சென்றபொழுது பெருங்காற்றால் கப்பல் கவிழ்ந்தது. செல்வத்தோடு மூழ்கியிறந்தார்கள். அவர்கள் நிலவுலகிலே வாழ்ந்திருந்தது நிலத்திற்குச் சுமையாக முடிந்தது.



### நாணுடைமை

102. அந்தணற்கீந் தில்லினைநா ணத்தனன்மூழ்
கத்துணிந்தான்
முந்துபத்தி ராயு முருகேசா—நந்தலிலா
நாண்வேலி கொள்ளாது மன்னோ
வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, முந்து - முன்னாளிலே, பத்திராயு - பத்திராயு என்னும் அரசன், இல்லினை அந்தணற்கு ஈந்து - மனைவியை அந்தணனுக்குக் கொடுத்து, நாணத்து - நாணத்தினால், அனல் மூழ்கத் துணிந்தான் - தான் தீயிலே மூழ்குவதற்கு

முடிவுசெய்தான் ; மேலாயவர் - சிறந்தவர்கள், நந்தல் இலா - கெடுதலில்லாத, நாண்வேலி கொள்ளாது-நாணமாகிய வேலியைத் தமக்குக் காவலாகச் செய்து கொள்ளாமல், வியன் ஞாலம்-பரந்த உலகில் வாழும் வாழ்க்கையை, பேணலர் - விரும்பி மேற்கொள்ள மாட்டார்கள் ; மன, ஓ: அசை நிலைகள்.

(வி - ம்.) பத்திராயு என்னுமரசன் மனைவியை அந்தணனுக்குக் கொடுத்துத் தான் தீயில் மூழ்கி உயிர்விடத் துணிந்தான்; மேலானவர்கள் நாணமாகிய வேலியைத் தமக்குக் காவலாகச் செய்து கொள்ளாமல் பரந்த உலகில் வாழும் வாழ்க்கையை விரும்பி மேற்கொள்ள மாட்டார்கள் என்பதாம்.

## பத்திராயு கதை

பத்திராயு என்னும் அரசன் விடயர் என்னுஞ் சிவயோகியினுடைய அருளால் மகதநாட்டரசனை வென்று அரசுரிமை பெற்று வாழ்ந்தான். ஒருநாள் தன்னுடைய மனைவி கீர்த்திமாலினி என்பவளோடு ஒரு சோலையை அடைந்து தங்கியிருந்தான். சிவபிரான் அவனுடைய அறநெறியை அனைவருக்கும் புலப்படுத்த எண்ணினார். உமாதேவி பார்ப்பனியாகிப் பின்வர



அந்தணவுருக் கொண்டு வந்தார். சிவபிரான் மாயையால் ஒரு புலி அவர்களைத் துரத்தியது.

சிவபிரான் அரசனைப் பார்த்து, ' 'எங்களை இப்புலியினின்றுங் காப்பாற்றுவாயாக'' என்று கூறினர். உடனே அரசன் கணை செலுத்தினன். தொடர்ந்து வந்த மாயப்புலி கணையைப் பொருட்படுத்தாமல் பார்ப்பனியைக் கொன்று தூக்கிச் சென்றது. மாய அந்தணன் அரசனைப் பார்த்து, ''இதனைக் காவாத உன்னுடைய செங்கோல் எத்தன்மையது? நீ பிழைக்க வேண்டுமானால் உன்னுடைய மனைவியை எனக்குக் கொடுப்பாயாக, இன்றேல் நீ கொடிய நிரயத்தினையடையுமாறு வசவுரை வழங்குவேன்'' என்றனர். அரசன் தன்னுடைய மனைவியை அவர்க்குக் கொடுத்து அந்நாணத்தால் இவ்வுலக வாழ்வை வெறுத்துத் தீயில் விழத் துணியும்போது சிவபிரான் தோன்றி அருள்புரிய மனைவியோடு சிவலோகமடைந்தான்.

குடிசெயல்வகை

103. சத்துருவை மாய்த்தான் பராசரன்றன்
சந்ததியை முத்திபதத் துய்த்தே
முருகேசா—மேத்தில் கருமஞ் செயவோருவன்
கைதுவே னென்னும் பெருமையிற் பீடுடைய தில்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! பராசரன் - பராசர முனிவர், சந்ததியை முத்தி பதத்து உய்த்து - தம்முடைய வழி முறையை

வீடு பேற்றிலே செலுத்தி, சத்துருவை மாய்த்தான் - தம்முடைய பகைவரையுங் கொன்றார் ; மெத்தில் - மென்மையாக, கருமம் செய - குடிப் பெருமைக்கு உரிய கடமையைச் செய்வதற்கு, வக தூவேன் என்னும் பெருமையில் - சோர்வடைய மாட்டேன் என்று முயலும் பெருமையைப் போல, பீடு உடையது இல் - மேம் பாடானது வேறு ஒன்றும் இல்லை.

(வி - ம்.) பராசரமுனிவர் தம்முடைய வழிமுறையினரை வீட்டு நெறியிற் செலுத்தியதோடு தம்முடைய பகைவரையுங்



கொன்றொழித்தார்; குடிப்பெருமையை உயர்த்துவதற்குரிய கடமையைச் செய்வதற்குச் சோர்வடைய மாட்டேன் என்று ஒருவன் முயலும் பெருமையைப் போலச் சிறப்புடையது வேறு ஒன்றும் இல்லையென்பதாம்.

## பராசரமுனிவர் கதை

பராசரமுனிவர் தம்முடைய தந்தையாகிய சத்திமுனிவர் முதலிய நூற்றுவரையும் உதிரன் என்னும் அரக்கன் விசுவாமித்திரமுனிவருடைய தூண்டுதலால் கொன்றமையைத் தம்முடைய தாயாகிய அதிர்சந்தியால் உணர்ந்தார். கலக்கமுற்றுச் சிவபெருமானைக்

குறித்துத் தவஞ் செய்தார். சிவபெருமான் எழுந்தருளிப் பகைவனையழிக்கும் ஆற்றலைத் தந்தருளினார். முனிவர் சிவபிரானோடு வந்த தந்தை முதலியோரை வழிபட்டுத் தம்முடைய தவத்தால் அவர்கள் பிதிர் உலகத்திலிருந்து சிவலோகமடைவதை உணர்ந்து மகிழ்ந்தார். பகைவனாகிய அரக்கனையும் அவன் வழிமுறையோடு வேள்வியில் கொன்றார். தாம் பிறந்த குடியை இவ்வாறு முயற்சி செய்து உயர்த்தினார்.

### உழவு

104 இன்னலோற்கத் தம்முழவை யேற்றலினீ
சற்கமுது முன்னமைத்தார் மாறர் முருகேசா—
உன்னில் இரவா ரிரப்பார்க்கோன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே! மாறர்,இளையான் குடிமாற நாயனார், இன்னல் ஒற்கத்தும்துன்பம் பொருந்திய வறுமைக் காலத்திலும், உழவை ஏற்றலின் - உழவுத்தொழிலை விடாது அதனை மேற் கொண்டிருந்த படியினால், முன்னம - முன்னாளில், ஈசற்கு அமுது அமைத்தார் - சிவபெருமானுக்கு உணவு சமைத்துப்

படைத்தார், உன்னில் - எண்ணுமிடத்தில், கரவாது - வஞ்சகமில்லாமல், கை செய்து ஊண் மாலையவர் - 138 முருகேசர் முதுநெறி வெண்பா

கையால் தொழில் செய்து உணவு தேடி உண்ணும் இயல்புடைய தொழிலாளர், இரவார் - பிறரிடஞ் சென்று இரக்கமாட்டார்கள், இரப்பார்க்கு ஒன்று ஈவா - தம்மிடம் இரந்தவர்க்கு ஒளிக்காமல் ஒரு பொருள் ஈவர்.

(வி - ம்.) இளையான்குடிமாற நாயனார் துன்பம் பொருந்திய வறுமை வந்த காலத்திலும் உழவுத் தொழிலை மேற் கொண் டிருந்தபடியினால் சிவபெருமானுக்கு அமுது சமைத்துப் படைத்தார். வஞ்சகமில்லாமல் தொழில் செய்துண்ணுந் தன்மையுடையவர்கள் தாம் பிறரிடஞ் சென்று இரவார்; இரப் பார்க்குத் தம்மால் இயன்றதைக் கொடுப்பார் என்பதாம்.

## இளையான்குடிமாறர் கதை

இளையான்குடிமாறநாயனார் சிவனடியார்களைப் போற்றுபவ ராக விளங்கினார். தம்முடைய செல்வங் குன்றிய வறுமைக் காலத்திலும் உழவுத் தொழிலை விடாது தமக்குக் கிடைத்த நெல்லை வயலில் விதைத்து விட்டுப் பசியால் வருந்தியிருந்தார். அவ்வாறிருந்த சமயத்திலே சிவபிரான் அவரை ஆராய்ந்து

பார்ப்பதற்காக ஓரடியவராக வந்து உணவு வேண்டினார். மழை பெய்து கொண்டிருந்த இராப் போதில் இருள் மிகுதியாக விருத்தலையும் பொருட் படுத்தாது தம்முடைய வயலுக்குச் சென்று, அதிலே மழையால் மிதக்கும் நென்முளைகளை வாரிக் கொண்டு வந்து திருவமுது செய்வித்து அதனால் ஏற்பட்ட நல் வினையால் சிவபதமடைந்தார்.

## நல்குரவு

105. ஆலவா யண்ணறொழும் பைத்தருமி
நீங்கவோற்க மூலமாத் தேர்ந்தான்
முருகேசா—ஞாலமிசை இன்மை யெனவொரு பாவி
மறுமையும் • இம்மையு மின்றி வரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, ஆலவாய் அண்ணல் தொழும்பை - திருவாலவாயிலெழுந்தருளிய சிவ பொருட்பால்



பெருமானுடைய திருத்தொண்டை, தருமி - தருமி என்னும் அந்தணன், ஒற்கம் மூலமா நீங்க தேர்ந்தான்வறுமையின் காரணமாக விட்டுவிடுவதற்கு முடிவு செய் தான், ஞாலமிசை - உலகத்திலே, இன்மை என ஒரு பாவி - வறுமை யென்று சொல்லப்படுகிற ஒரு தீவினை

யாளன், மறுமையும்-மறுமையின்பமும், இம்மையும்—இம்மை யின்பமும், இன்றி வரும்-இல்லாமற் போகுமாறு வருவான்.

(வி - ம்.) தருமியென்னும் அந்தணன் திருவாலவாய்ச் சிவ பெருமானுடைய திருத்தொண்டையும் வறுமை காரணமாக விட்டுவிடுவதற்கு முடிவு செய்தான். வறுமையென்று சொல்லப்படுகிற ஒரு தீவினையாளன் மறுமையின்பமும் இம்மையின்பமும் இல்லாமற் செய்து கொண்டு வருவான் என்பதாம்.

## தருமி கதை

திருவாலவாயிலே தருமி யென்னும் அந்தணன் சோம சுந்தரக் கடவுளைப் பூசித்து வழிபட்டு அரிய திருத்தொண்டுகள் செய்து கொண்டிருந்தான். நெடு நாள் மழை பெய்யாதபடியினாலே நாட்டில் பஞ்சமுண்டாகியது. அதனால் தருமி மிகுந்த துன்பத்திற்குள்ளானான். திருத்தொண்டை விட்டு விடுவதற்கு முடிவு செய்தான். கடவுள் திருமுன்னர்ச் சென்று, "இங்கிருப் பின் உணவில்லாமல் மாண்டு போவேன். ஆகவே வேறு நாடடைந்து உயிர் வாழ்ந்து இந்நாடு செழித்தபின் இங்கு வருகின்றேன்"

என்று முறையிட்டான். சோமசுந்தரப் பெருமான் திருவருள் கூர்ந்து "கொங்குதேர் வாழ்க்கை" என்னுஞ் . செய்யுளைப் பாடிக் கொடுத்தார் . தருமி அதனைப் பாண்டியனிடங் கொடுத்துப் பொற்கிழி பெற்று வாழ்க்கையை நடத்தினன்.



## இரவு

:106. ஒக்கலைவிட் டிக்களத்தை யோகையினி
யறபகையாா
முக்கணனுக் கீந்தார் முருகேசா—மிக்குவரும் இன்ப
மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறுஅ வரின்.

(இ — ள்.) முருகேசா-முருகப் பெருமானே!, இயற்பகை -நாயனர், ஓகையின்-உவகையோடு, களத்தை - மனைவியை, . ஒக்கலை வீட்டி - உறவினர்களைக் கொன்று, முக்கணனுக்கு ஈந்தார் - சிவபெருமானுக்குக் கொடுத்தார், இரந் . தவை துன்பம் உறுவரின் - இரக்கப்பட்ட பொருள் துன்பமில்லாமற் கிடைக்குமாயின், ஒருவற்கு - ஒருவனுக்கு,

இரத்தல் - இரத்தலாலும், மிக்கு வரும் இன்பம் - மிகுதியாக இன்பம உண்டாகும்.

((வி - ரை.) இயற்பகைநாயனார் தம்முடைய உறவினர்களைக் கொலைபுரிந்து தம்முடைய மனைவியை மிகுந்த மகிழ்ச்சியோடு சிவபெருமானுக்குக் கொடுத்தார். இரக்கப்பட்ட பொருள் துன்பமில்லாமல் ஒருவனுக்குக் கிடைக்குமாயின் இரத்தலும் இன்பமே என்பதாம்.

### இயற்பகைநாயனார் கதை

சிவபெருமான் இயற்பகை நாயனாருடைய அன்பை உலகினருக்கு விளக்க எண்ணினார். காமுகன் போல் கோலம் பூண்டு இயற்பகையாரிடஞ் சென்றார். "உன்னுடைய மனைவியை எனக்குக் கொடுத்தல் வேண்டும்" என்று இரந்தார். இயற்பகையார் அவர் விரும்பிய வாறே மனைவியைக் கொடுத்தார். பிறரால் இவருக்கு இடையூறு உண்டாகாதபடி உடன் சென்று வழிவிட்டார். அது பொறுது எதிர்த்த உறவினர்களையெல்லாந் தாமே கொன்றார். இயற்பகையாருடைய இச்செயல் இறைவனுக்கு மகிழ்ச்சியை அளித்ததால் இயற்பகையாருக்கு வீடு



பேற்றைக் கொடுத்தருளினார். இறைவன் விரும்பியவாறு இயற்பகையாருடைய மனைவியைப் பெற்றதால் அஃது அவருக்கு மிகுந்த மகிழ்ச்சியை உண்டு செய்தது.

**107.** துன்பகல்வோ மென்று துருபதன்பா
லேற்றயர்ந்தான்
முன்பு துரோணன் முருகேசா—இன்பமிக இன்மை
யிடும்பை யிரந்துதீர் வாமேன்னும் வன்மையின்
வன்பாட்ட தில்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, முன்பு- முன்னாளிலே, துரோணன் - துரோணாச்சாரியர், துன்பு அகல்வோம் என்று - இரந்து நமமுடைய துன்பத்தைப் போக்குவோமென்று, துருபதன்பால் ஏற்று அயர்ந்தான் துருபதனிடத்திலே இரந்து தளர்ச்சியடைந்தார்; இன்மை இடும்பை - வறுமைத்துன்பத்தை, இன்பம்மிக - மகிழ்ச்சி மிகுமாறு, இரந்து தீர்வாம் என்னும் - இரந்து போக்கிக் கொள்வோம் என்னும், வன்மையின் - வன்னெஞ்சத்தைப் போல, வன்பாட்டது இல் - வன்மையானது வேறு இல்லை.

(வி - ம்.) முன்னாளிலே துரோணாச்சாரியார் துருபதனிடத்திலே இரந்து நம்முடைய வறுமையைப் போக்கிக் கொள்வோ மென்று போய் இரந்து தளர்ச்சியடைந்தார். வறுமைத் துன்பத்தை இரந்து

போக்கிக் கொள்வோமென்று எண்ணுகிற கொடிய தன்மையைப் போல் வன்மையானது வேறு இல்லை என்பதாம்.

துரோணர் கதை

முன் காலத்திலே துரோணச்சாரியார் தம்முடைய குழந்தையருந்துவதற்குப் பாலின்மையை எண்ணி உள்ளம் 142 முருகேசர் முதுநெறி வெண்பா

வருந்தினர். நம்மோடு முன்பு அக்கினி கோத்திர முனிவரிடம் வில் வித்தை கற்ற துருபதனால் இத்துன்பத்தைப் போக்கிக் கொள்வோமென்று முடிவு செய்தார். அவனிடஞ் சென்று, "எனக்குக் கற்று ஒன்று தரவேண்டும், நீ முன்பு என்னோடு வில் வித்தை கற்றுயல்லையோ? " என்று சொன்னார். அத்துருபதனோ உம்மை நான் இதற்கு முன்பு பார்த்ததில்லை, உமக்கு எதுவும் தரமுடியாது உடனே இவ்விடம் விட்டுச் செல்லுவீராக' என்று வன்சொல் வழங்கினான். துரோணர் தம்முடைய அவாக்கெட்டு மீண்டார்.

கயமை

108. வஞ்சகலன் வாமதே வற்குதவான்
வாசியைச் சேய் முஞ்சியபின் னீந்தான்
முருகேசா—எஞ்சலின்றிச் சொல்லப் பயன்படுவர்
சான்றோர் கரும்புபோல் கொல்லப் பயன்படுங் கீழ்.

(இ- ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, வஞ்சநலன்- வஞ்சகத்தன்மை பொருந்திய நலன் என்பவன், வாசியைகுதிரையை, வாமதேவற்கு உதவான் - வாமதேவ முனிவருக்குக் கொடாதவனாகவிருந்தான, சேய் முஞ்சியபின ஈந்தான் - குழந்தை இறந்தபிறகு கொடுத்தான், சான்றோர் - பெரியோர்கள், எஞ்சல் இன்றி - குறைவில்லாமல், சொல்லப் பயன்படுவர் — தம்முடைய குறையைச் சொல்லக் கேட்ட அளவிலேயே ஆகவேண்டியதைச் செய்வார்கள், கீழ் - கீழ்மக்களோ, கரும்புபோல் — கருமபைப் போல், கொல்லப் பயன்படுவர் - வருத்திக் கசக்கிய பின்னரே,பயனைச் செய்வார்கள்.

(வி - ம்.) நலன் என்பவன் குதிரையை வாமதேவ முனிவர்
கேட்டபொழுது கொடாமல் மறுத்துப் பேசினன். பிறகு குழந்தையிறந்த பிறகு கொடுத்து விட்டான்; பெரியோர்கள்



மற்றவர்கள் கூறியதைக் கேட்ட அளவிலேயே நல்ல பயனைச் செய்வார்கள்; கீழ்மக்களோ கரும்பைக்

கசக்கிப் பிழிவதைப் போல் நெருக்கி வருத்தினுல்தான் பயனைச் செய்வார்கள் என்பதாம்.

## நலன் கதை

நலன் என்னும் ஓர் அரசன் காட்டிற்குச் சென்று வேட்டை யாடினன். தப்பியோடிய ஒரு மானைத் துரத்த முடியாமல் அவனுடைய குதிரைகள் இளைத்திருந்தன. அக்காட்டிலிருந்த வாமதேவ முனிவருடைய சிறந்த இரண்டு குதிரைகளை உடனே கொடுத்து விடுவதாகக் கூறிப் பெற்றுக்கொண்டு சென்ருன். சில நாட்களாகியுங் கூறியபடி கொடுக்கவில்லை. குதிரையைப் பெறுவதற்குத் தூதனுப்பினர். அப்பொழுதுங் கொடுக்க வில்லை. பிறகு முனிவரே நேரிற்சென்று கேட்டார், அப்பொழுது நலன், "உம்முடைய குதிரைகளைக் கொடுக்க முடியாது என் குதிரை களைத் தருகிறேன்'' என்று சொன்னுன். முனிவர் அந்தணர் பொருளைப் பறிப்பது நேர்மையன்று ; தீமையுண்டாவதற்கு முன்னர்த் தந்துவிடுக என்று வற்புறுத்தினர். அரசன் சினங் கொண்டான். அவரைக் கொல்லும் பொருட்டு ஒரு வீரனை விடுத்தான். முனிவர் அசுரரை மனத்தாற் படைத்து அரசனையும் வீரனையுங் கொன்ருர். அரசுரிமையை அவனுடைய தம்பியாகிய நலன் என்பவன் மேற்கொண்டான். முனிவர் நலனிடமுஞ் சென்று குதிரையைக் கேட்டார். வஞ்சகம் மிகுந்த அவன் முனிவருடைய பெருமையை உணர்ந்திருந்தும்

முனிவரைக் கொல்லுதற்குத் துணிந்தான். கணையைக் கையிலே எடுத்தான். அவனுடைய கை அசைவற்று நின்றது. அவர் வசவுரைப்படி நலனுடைய மகனும் இறந்தான். இதன் பிறகு நலன்பணிந்து குதிரைகளைக் கொடுத்து விட்டான் முனிவர் மொழிப்படி கை இயங்கியது. மகனும் உயிர் பெற்றெழுந்தான்.

---

## ௬. காமத்துப்பால்

### தலைவி நலங்கூறுதல்

109. ஓகையினு ருக்குமணி யொண்மைகண்டு
சூர்கொலெனு
மோகமிக்கான் கண்ணன் முருகேசா—வாகின்
அணங்குகோ லாய்மயில் கொல்லோ கனங்குழை
மாதர்கொன் மாலுமென் னெஞ்சு.

( இ- ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, கண்ணன்- கண்ணபிரானனவர், ஓகையின் - உவகையோடு, உருக்கு மணி ஒண்மை கண்டு - உருக்குமணியினுடைய அழகைப் பார்த்து, சூர் கொல் எனு - இவள் தெய்வப் பெண்ணோ என்று, மோகம் மிக்கான் - காமம மிகுந்தவரானார்; வாகின் - அழகினையுடைய, அணங்கு கொல் -

தெய்வப்பெண்ணோ?, ஆய்மயில்கொல் - அழகிய மயிலோ?, கனங்குழை மாதர் கொல் - கனமான குழையணிந்த மனிதப்பெண்ணோ?, என் நெஞ்சம் மாலும் - என்னுடைய உளம் மயங்குகின்றது.

(வி -ம்.) கண்ணபிரான் மிகுந்த மகிழ்ச்சியோடு உருக்குமணியினுடைய அழகைப் பார்த்து இவள் தெய்வப் பெண்ணோ என்று கூறி மயங்கினர்; தெய்வப்பெண்ணோ அழகிய மயிலோ? கனமான குழையணிந்த மானிடப் பெண்ணோ என்று என்னுடைய நெஞ்சம் மயங்குகின்றது என்பதாம்.

### கண்ணபிரான் கதை

உருக்குமணி என்பவள் விதர்ப்ப நாட்டு அரசனுடைய மகள். இவள் கண்ணபிரானுடைய சீர்த்தியை உணர்ந்து அப் பண்ணவனைத் திருமணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று எண்ணியிருந்தாள். திருக்கோயிலை அடைந்து அம்பிகையை நாளும் வேண்டினாள்; ஒருநாள் ஒரு பொழிலில் இருந்தாள்.



அவளைக் குறித்தே துவாரகையினின்றும் புறப்பட்ட கண்ண பிரான் அச் சோலையை அடைந்து உருக்குமணியைக் கண்டார். அவள் உருக்குமணியென அறியாது இவள் தெய்வப் பெண்ணோ மானிடப் பெண்ணோ என்று எண்ணி மயங்கினர். பிறகு அவள் தான் தாம் நாடி வந்த உருக்குமணி என்று உணர்ந்தார்;

அவளைத் திருமணம் புரிந்து மகிழ்ந்தார்.

குறிப்பறிதல்

**110.** உற்றபிணி யும்மருந்துங் காசிபனோர்ந்
தான்மாயை முற்றுழிக்கண் ணோக்கின்
முருகேசா—பற்றும் இருநோக் கிவளுண்க ணுள்ள
தொருநோக்கு நோய்நோக்கொன் றந்நோய் மருந்து.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!. மாயை - மாயையினுடைய, முற்றுஉழிகண் நோக்கில் - முற்றிய கண் பார்வையிடத்திலே, உற்ற பிணி - நோய உண்டாதலையும, மருந்தும - அந் நோய்க்கு அவளே மருந்தாதலையும, காசிபன் ஓர்ந்தான் - காசிபமுனிவர் உணர்ந்தார், பற்றும் - பொருந் தும, இவள உண்கண்-இவளுடைய மையுண்ட கண்ணனது இரு நோக்கு உள்ளது - இருவகைப் பார்வைகளை உடையதாக விருக்கிறது, ஒரு நோக்கு நோய நோக்கு-ஒரு பார்வை யானது நோயை உண்டாக்கும பார்வை, ஒனறு அந்நோய் மருந்து - ஒரு பார்வை அந்நோய்க்கு மருந்தாக விளங்குவது.

(வி - ம்.) காசிப முனிவர் மாயையினுடைய கண் பார்வை யிடத்திலே நோயையும் அதற்கு மருந்தையுங் கண்டார்; இவளுடைய மையுண்ட கண்களானவை இருவகையான பார்வையை

உடையதாக விருக்கின்றன. ஒரு பார்வை நோயை உண்டு செய்வது, ஒரு பார்வை அந்நோய்க்கு மருந்தாக அமைந்தது என்பதாம்.





## காசிபர் கதை

அவுணராசன் பெற்ற சுரசையென்பவள் சுக்கிராசாரியரிடத்திலே மாய வித்தைகளைக் கற்றுத் தேறினாள். அவரால் மாயை என்று பெயர் பெற்றாள். அவர் கூறியவாறே காசிப முனிவர்பாற் சென்று அவரைத் தன்னுடைய கண்களால் மயக்கினாள். அவர் அவளுடைய பார்வையால் தமக்குத் துன்பமும் இன்பமும் விளைதலை உணர்ந்தார்; அவளோடு கலந்து மகிழ்ந்தார்.

## புணர்ச்சி மகிழ்தல்

111. பூரிளமை யேற்றவுருப் போகநனி
துய்த்துவந்தான்
சூரி யயாதி முருகேசா—ஓரின்
அறிதோ றறியாமை கண்டற்றாற் காமஞ் செறிதோறுஞ்
சேயிழை மாட்டு.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே !, சூரி யயாதி - பெருமை பொருந்திய யயாதி

மன்னன், பூரு இளமை ஏற்று - பூரு என்பவனுடைய இளமைப் பருவத்தைத் தான பெற்று, வெரூப் போகம நனி துய்த்து வந்தான் - வெறுக்காத போகத்தை நன்றாக நுகர்ந்து வந்தான், ஓரின் - ஆராயுமிடத்து, சேய் இழை மாட்டுசெங்கிற அணிகலன்களை அணிந்த இவளிடத்திலே, காமம் செறிதோறும - காமவின்பத்தைப் பொருந்தி நுகரும் பொழுதெல்லாம, அறி தோறு அறியாமை கண்டற்றுநூற்பொருள்களை அறிய அறிய அறியாமையைக் கண்டாற் போன்றதாம். ஆல் - அசைநிலை.

(வி - ம்.) யயாதி மன்னன் பூருவின்இளமையைப் பெற்றுப் போக இன்பங்களை மிகுதியாக நுகர்ந்து மகிழ்ந்தான் ; செங்கிற அணிகலன்களை அணிந்த இவளிடத்திலே காமவின்பத்தைப்



பொருந்தி நுகரும் பொழுதெல்லாம் நூற் பொருளை அறிய அறிய இன்பமுண்டாதலைப் போல மகிழ்ச்சியானது மிகுதியாக உண்டாகின்றது என்பதாம்.

## யயாதி கதை

விடபருவா என்னும் அசுரராசன் மகளாகிய

சன்மிட்டை யென்பவளும் சுக்கிராச்சாரியார் மகளாகிய தேவயானை என்பவளும் ஒருநாள் நீராடிய பிறகு தவறுக ஒருவர் உடையை ஒருவர் அணிந்து கொண்டனர். அப்பொழுது தேவயானை சன்மிட்டையைப் பார்த்துப், "புனிதையல்லாத நீ என்னுடைய ஆடையை அணியலாமோ ?" என்று கேட்டாள். அதற்குச் சன்மிட்டை யானவள், "என்னுடைய தந்தையால் உன்னுடைய தந்தை உயிர் வாழ்தலை அறியாயோ ?" என்று கேட்டதுடன் தேவயானையை ஒரு பாழ்ங்கிணற்றிலே தள்ளிவிட்டுச் சென்றாள். தேவயானை அங்கு வந்த யயாதிராசனாற் கரையேறிச் சென்று தன்னுடைய தந்தைக்குச் செய்தியைக் கூறினாள். விட பருவா அங்கு வந்து சுக்கிராச்சாரியாருடைய சினந்தணியுமாறு தன் மகள் சன்மிட்டையைத் தேவயானைக்கு அடிமையாக்கினான். அவள் ஆயிரந் தோழிகளோடு ஏவல் புரிந்து கொண்டிருந்தாள்.

வியாழ பகவான் மகனாகிய கசன் சுக்கிராசாரியாருடைய மகளை அந்தணர்க்குரிமையாகாதவாறு வசவுரை வழங்கியிருத்தலின் அவர் யயாதி மன்னனுக்குச் 'சன்மிட்டையை விரும்பற்க' என்று கூறித் தம் மகளைத் திருமணஞ் செய்து கொடுத்தார். அவன் அவளோடுகூடி, யது, துருவசு என்னும் இரண்டு மக்களைப் பெற்றான். ஒருநாள் யயாதி மன்னன் சோலையை அடைந்த பொழுது அங்கு வந்த சன்மிட்டை யயாதி மன்னனிடம் மக்கட்

பேறு வேண்டினுன். அவன் அவளோடு சேர்ந்து
திருகு,
அனு, பூரு, என்னும் மூன்று மக்களைப் பெற்ருன்.
இதனைச்
சுக்கிராச்சாரியார் அறிந்தார். "நீஎன் மொழியைக்
கடந்தாயாத
லின் மூப்புப் பருவம் அடைவாயாக" என்று யயாதி
மன்னனுக்கு
வசவுரை வழங்கினுர். "வேறு எவரேனும்
மூப்பினையேற்ருல்
இளமை பெறுவாய்" என்று வசவுரை நீக்கமுங் கூறினுர்.
யயாதி
தன் மக்களையழைத்து, "என் மூப்பையேற்று
இளமைதந்த



வனுக்குப் பிறகு அரசாட்சியைத் தருவேன்" என்று
கூறினுன். பூரு தன்னுடைய இளமையைக் கொடுத்து
விட்டுத் தந்தையி னுடைய மூப்பையேற்றுக்
கொண்டான். யயாதி தன்னுடைய மனைவியர்பால்
எல்லையற்ற இன்பங்களைப் புதிது புதிதாக நுகர்ந்து
மகிழ்ந்தான்.

## நலம்புனைந் துரைத்தல்

112. சந்தமிகு வாலைநலத் தைத்தவவா

லன்வியந்து

முந்திமண நேர்ந்தான் முருகேசா—சந்த
முறிமேனி முத்த முறுவல் வெறிநாற்றம்
வேலுண்கண் வேய்த்தோ ளவட்கு.

(இ - ள்.) *முருகேசா-முருகப்பெருமானே!, தவவாலன்- தவஞ் செய்திருந்த வாலமுனிவர் என்பவர், சந்தம்மிகு - அழகு மிகுந்த, வாலை நலத்தை வியந்து - வாலை என்பவளுடைய அழகு முதலியவைகளைப் புகழ்ந்து, முந்தி மணம் நேர்ந்தான் - முன் காலத்திலே மணஞ் செய்து கொண்டார். வேய்த்தோள் அவட்கு - மூங்கில் போன்ற தோளையுடைய இவளுக்கு, முறுவல் முத்தம் - பற்களானவை முத்துப் போன்றவை, சந்தம - மணம் பொருந்திய, வெறிநாற்றம் - இயற்கை மணமே மணம், உண்கண் வேல் - மையுண்ட கண்கள், வேலைப் போன்றவை.*

(வி - ம்.) *வாலமுனிவர் என்பவர் அழகிய வாலை என்பவளுடைய அழகு முதலியவைகளை வியந்து முன்னாளிலே திருமணஞ் செய்து கொண்டார்: மூங்கில் போலுந் தோளை யுடைய இவளுக்குத் தளிரே மேனி; முத்தே பல்; இயற்கை மணமே மணம்;*

மையுண்ட கண்கள் வேற்கனைப் போன்றன என்பதாம்.



## வாலமுனிவர் கதை

முற்காலத்திலே எக்காலத்தும் மாருத இளமையும் அழகும் ஒழுக்கமும் ஒருங்கமைந்த வாலமுனிவர் என்பவர் நருமதை யாற்றுக்கரையிலே சிவபூசை செய்துகொண்டிருந்தார். அப் பொழுது நான்முகன் அம்முனிவரிடஞ் சென்று, "நீ சித்திரகேது என்னும் அரசனும் அவனுடைய மனைவியாகிய சந்திரவதனியுஞ் செய்த அருந்தவத்தாற் பிறந்த வாலை என்பவளைத் திருமணஞ் செய்து கொள்" என்று கூறினன். முனிவர் நான்முகன் உரையை மறுத்தார். பிறகு அந்த வாலையை நேரே கண்டார். அப்பொழுது அவருக்கு வியப்புந் திகைப்பும் உண்டாகிவிட்டது. அவளுடைய உறுப்புக்களைத் தனித்தனியே வியந்து புகழ்ந்தார். மணஞ் செய்து கொள்வதற்கு உடன்பட்டு மணஞ்செய்து கொண்டார். நூற்றெட்டுப் பிள்ளைகளைப் பெற்று அவளோடு இனிது வாழ்ந்திருந்தார்.

## காதற்சிறப் புரைத்தல்

113. தேர்ச்சியய ணிக்குமதிச் சேர்ந்துழிவாழ்ந்
தேமடிவில் மூர்ச்சித்து மாய்ந்தான்
முருகேசா—நேர்ச்சிமிக வாழ்த லுயிர்க்கன்ன
ளாயிழை சாத

லதற்கன்ன ணீங்கு மிடத்து.

(இ - ள்) முருகேசா - முருகப பெருமானே!, தேர்ச்சி அயன் - எல்லாவற்றினும் தேர்ச்சி பெற்றவனாகிய அயன் என்னும் அரசன், இந்துமதி சேர்ந்துழி வாழ்ந்து - இந்துமதி யென்பவள் தன்னையடைந்தவிடத்து வாழ்ந்து கொண்டிருந்து, மடிவில் மூர்ச்சித்து மாய்ந்தான் - அவள் இறந்தொழிந்தபோது தான் மூர்ச்சித்துப் பிறகு மாய்ந்தான், நேர்ச்சி மிக - அழகு மிகுமாறு, ஆராய்ந்து செய்யப்பட்ட அணிகலன்களை

ஆய் இழை -
அணிந்தவள்,
வாழ்தல் உயிர்க்கு அன்னள் - கூடும்போது



உயிர்க்கு வாழ்வைப் போன்றவள், நீங்கும் இடத்து — பிரியுமிடத்திலெ, சாதல் அதற்கு அன்னள்-உயிருக்குச் சாவைப்போனறவள்.

(வி - ம்.) அயன் என்னும் அரசன் இந்துமதி யென்பவள் தன்னைச் சேர்ந்திருந்த போது இனிது

வாழ்ந்திருந்தான். அவள் இறந்த போதோ மூர்ச்சித்துப் பிறகு தானும் இறந்தான். ஆராய்ந்த அணிகலன்களையுடைய இவள் கூடும் போது உயிருக்கு வாழ்வைப் போன்றவள்; பிரியும் போது உயிர்க்குச் சாவைப் போன்றவள் என்பதாம்.

அயன் கதை

திரணவிந்து முனிவர் என்பவர் தவஞ் செய்து கொண்டிருந்தார். இந்திரன் அவருடைய தவத்தை யழிக்குமாறு அரிணி என்னும் அரம்பையை அனுப்பினான். அவள் அவருடைய தீமொழியால் விதர்ப்ப நாட்டரசன் மகளாய் இந்துமதி என்னும் பெயரோடு பிறந்தாள். அவளை அயன் என்னும் அரசன் திருமணஞ் செய்து கொண்டான். அவளோடு பிரிவின்றி இன்பம் நுகர்ந்து கொண்டிருக்கும் போது விண்ணிற் சென்ற நாரதமுனிவருடைய யாழிலிருந்து வீழ்ந்த மலர்மாலையால் அவள் இறந்தாள். அரசன் மூர்ச்சித்துத் தெளிந்தான். அவளுடைய பிரிவாற்றுமையால் எட்டு ஆண்டுகள் வருந்தி யிருந்தான். பிறகு இறந்து விண்ணுலகடைந்து அங்கே அவளுடன் இன்பம் நுகர்ந்தான்.

நாணுத்துற வுரைத்தல்

114. கோளோடுநா ணீத்தகலி கைக்கயர்ந்தாள்
கோமகவான்
மூளுறுகா மத்தான் முருகேசா—ஆளுறுமக்

காமக் கடும்புன லுய்க்குமே நாணொடு
நல்லாண்மை யென்னும் புணை.

(இ - ள்.) *முருகேசா - முருகப் பெருமானே!, கோமக வான் - தலைமைத் தன்மை பொருந்திய இந்திரன், மூள் உறு காமத்துப்பால்*

*151*

*காமத்தால் - உண்டாகிய காமத்தினால், கோளொடு நாள் நீத்து - கோலையும நாளையும் விலக்கி, அகலிகைக்கு அயர்ந் தான் - அகலிகையின் பொருட்டுத் தளர்ச்சியடைந்தான், ஆளுறும்அ - ஆள்ப்படுகிற அந்த, நாண் ஒடு நல் ஆண்மை என்னும் புணை - நாணமும் நல்ல ஆண்மையுமாகிய தோணி களை, காமம் கடும்புனல் உய்க்கும் - காமம் என் கிற கடுமை யான வெள் ள மான து என்னிடமிருந்து அடித்துக் கொண்டு போய் விடு கின் றது.*

(வி - ம்.) *த லைமைத்தன் மை பொருந்திய இந்திரனவன் காமத்தினால் கோலையும் நாளையும் நீத்து அகலிகையின் பொருட்டுத் தளர்ச்சியடைந்தான்: நாணமும் நல்ல ஆண்மையு மாகிய தோணிகளைக் காமம் என்கிற கடுமையான வெள்ள மான து என்னிட மிருந்து அடித்துக்கொண்டு போய் விடுகின் றது என்பதாம்.*

## இந்திரன் கதை

இந்திரன் கௌதம முனிவருடைய மனைவியாகிய அகலிகையின் பேரழகை நாரதமுனிவரால் அறிந்தான். அவள் மீது அதிக மோகங்கொண்டான். ஒருநாள் அம்முனிவர் காலைக்கடன் கழிக்கச் சென்ற சமயத்தில் அம்முனிவருடைய வடிவத்தையெடுத்துக் கொண்டு அவளிடஞ் சென்றான். "பெண்ணே! வழியில் ஒரு தடாகத்தில் ஆடையில்லாமல் நீராடிய ஒரு பெண்ணைக் கண்டு காமம் அதிகரித்து மீண்டேன்" என்று கூறி அவளைக் கூடினான். இருப்பிடத்தில் நிகழ்வதை முனிவர் உணர்ந்தார். விரைந்து இருப்பிடத்திற்கு வந்தார். அகலிகையைப் பார்த்து, 'நீ ஆராயாது இவனுடன் சேர்ந்தமையால் கல்லாகுக'வெனத் தீ மொழி புகன்றார். இந்திரனை 'உன்னுடைய உடல் முழுவதும் பெண்குறிகளையடைக' வென்று சொன்னார். இந்திரன் அவ்வாறே ஆகி நாணத்தையும் ஆற்றலையும் இழந்து வருந்தினான்.



### அலரறிவுறுத்தல்

115. மேயருக்கு மாங்கதனை வெஃகியொரு
நாண்முகுந்தை
மூயபழி பூண்டாள் முருகேசா—நேயமிகக் கண்டது
மன்னு மொருநா ளலர்மன்னுந் திங்களைப்

பாம்புகோண் டற்று.

(இ - ள்.) முருகேசா—முருகப்பெருமானே !, முகுந்தை- முகுந்தை யென் பவள் , மேய ருக்குமாங்கதனை ஒருநாள் வெஃகி - தானிருக்கு மிடத்திற்கு வந்த ருக்குமாங்கதனை ஒருநாள் விரும்பி, மூய பழி பூண்டாள் - மிகுந்த பழியை அடைந்தாள்; நேயமமிக - அன்புமிகுமாறு, கண்டது ஒருநாள் - காதலரைக் கண்டது ஒருநாள்தான், அலர் - அதனால் உண்டாகியபழிச் சொல்லோ, மன்னும் திங்களைப் பாம்பு கொண்ட அற்று - நிலைபெற்ற திங்களைப் பாம்பு கொண்ட செய்தியைப்போல் எங்கும் பரவிவிட்டது. மன்னும் உம்மையும் அசைநிலை.

(வி - ம் . ) முகுந்தை யென்பவள் ருக்குமாங்கதன் என்பவனை ஒருநாள் விரும்பி அதனால் என்றும் நிலைத்திருப்ப தாகிய பெரும்பழியினைப் பூண்டாள்; காதலரைக் கண்டது ஒரு நாள் தான், அதனால் உண்டாகிய அலரோ திங்களைப் பாம்பு கொண்டாற் போல எங்கும் பரவி விட்டது என்பதாம்.

## முகுந்தை கதை

கவிமுனிவருடைய மனைவியாகிய முகுந்தை யென்பவள் தன்னுடைய இருப்பிடத்திற்குத் தண்ணீர் வேண்டி வந்த உருக்குமாங்கதன் என்னும் அழகன்

மீது பெருங்காதல் கொண்டாள். அவனோ அவளுடைய காதலை மறுத்தான். அவனுக்குக் குட்ட நோயுண்டாகுமாறு தீ மொழிபுகன்ருள் .



உடனே அவ்வுருக் கொண்டுவந்த இந்திரனைக் கூடி இன்பம் நுகர்ந்தாள். அதனுல் என்றும் நீங்காத பெரும்பழியைப் பூண்டாள். அப்பழி என்றும் உலகத்திலே நிலைபெற்று நிற்பதாயிற்று.

### பிரிவாற்ருமை

**116.** அற்றதுணி யோடுதம யந்திபுன
லார்ந்துநளன் முற்றுழியுஞ் சோர்ந்தாண்
முருகேசா—பற்றி அளித்தஞ்ச லென்றவர் நீப்பிற்
றெளித்தசோற் றேறியார்க் குண்டோ தவறு.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே !, தமயந்தி-தமயந்தியானவள், அற்ற துணியோடு - பாதி கிழிபட்ட ஆடையோடு, புனல் ஆர்ந்து - நீரையே பருகி, நளன் முற்றுழியும் சோர்ந்தாள்-நளன் தன்னையடையும்வரையிலும் தளர்ந்திருந்தாள், பற்றி - தொடர்ந்து, அளித்து - அருள் செய்து, அஞ்சல் என்றவர் நீப்பில் -

அஞ்சவேண்டாமென் று முன்னே கூறியவர் பிரிந்து செல்வாரானல், தெளித்தசொல்- அவர் கூறிய உறுதிமொழியை, தேறியார்க்கு தவறு உண்டோ - தெளிந்தவர்களிடத்தில் குற்றம் உளதோ?

(வி - ம்.) தமயந்தியானவள் பாதி கிழிபட்ட ஆடையோடு தண்ணீரையே உண்டு அவனையடையும் வரையும் தளர்ந் திருந்தாள்; 'உன்னைவிட்டுப்பிரியேன் அஞ்சற்க' என்று கூறியவர் பிரிந்து செல்வாரானல் அவர்கூறிய உறுதிமொழியை நம்பியவரிடத்திலே தவறுண்டாகுமோ ? பிரிந்து செல்பவரிடத்திலேதான் தவறுண்டாகும் என்பதாம்.

நளன் கதை

நளனனவன் தமயந்தியை மணந்து இன்புற்று வாழுங் காலத் தில், "நான் உன்னை என்றும் பிரியேன்"னென்றுரைத்து இனிது 154

முருகேசர் முதுநெறி வெண்பா

வாழ்ந்திருந்தான். பிறகு புட்கர நாட்டரசனிடஞ் சூதாடி நாடு நகரம் யாவுமிழந்து காட்டையடைந்தான். தமயந்தி விருப்பப் படி ஓர் அன்னத்தைப் பிடிப்பதற்கு ஆடையை வீசியபோது அன்னம் அவ் ஆடையைப்பற்றிச் சென்றது. பிறகு நளனும் தமயந்தியும் ஓர் ஆடையை அணிந்தவர்களாய் அன்றிரவு உறங்கும்போது நளன் ஆடையிற் பாதியைக் கிழித்துக்கொண்டு அவளைவிட் டுப் பிரிந்து சென்றான்.

தமயந்தி பிரிவாற்ருமையால் வருந்தி எங்குந் தேடினுள். பிறகு தாய் வீட்டை யடைந்தாள். தாய் தேற்றவுந் தேருதவளாய், முன்பு கிழிக்கப்பட்ட அவ் வாடையை அன்றி வேறு ஆடையையும் அணியாதவளாய் நீரையே பருகித் தளர்ந்திருந்தாள். பிறகு நளனை யடைந்த பிறகுதான் அவளுடைய துன்பங்கள் ஒழிந்தன.

படர்மெலிந் திரங்கல்

117. ஆகமெலிந் தாள்சீதை வான்மீகி
யாதரித்தும் மோகமோடு நாணல்
முருகேசா—வேகமிகும் காமமு நாணு முயிர்காவாத்
தூங்குமென் ஞேனு வுடம்பி னகத்து.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, சீதை - சீதாபிராட்டியானவள, வான்மீகி ஆதரித்தும் - வான்மீகி முனிவரால் பாதுகாக்கப்பட்டிருந்தும, மோக மொடு நாணல் ஆகம் மெலிந்தாள் - மோகத்திஞலும் நாணத்திஞலும் உடல் மெலியப்பெற்ருள், வேகம மிகும் - விரைவுமிகுந்த காமமும் நாணும் - காம மும் வெட் கமும், என்னோனு உடம் பின் அகத்து - துன்பத்தைப் பொறுக்காமல் வருந்துகின்ற என் உடமபிண்டத்திலே, உயிர்காவா - உயிரேகாவடித் தண்டாக, தூங்கும் - தொங்கிக் கொண்டிருக்கும்

(வி - ம்.) வான்மீகி முனிவரால் ஆதரிக்கப் பெற்றிருந்தும் சீதையானவள் காமமும் நாணமும் வருத்த உடல் மெலிந்தாள்; துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் வருந்துகின்ற என்னுடைய



உடம்பினிடத்திலே உயிரே காவடித் தண்டாகக் காமமும் நாணும் பக்கத்திற்கு ஒன்றாகத் தொங்கும் என்பதாம்.

## சீதை கதை

இராமபிரான் இராவணனை வென்று அயோத்தியை அடைந்த பிறகு முடிசூட்டிக்கொண்டு அரசாட்சி செய்திருந்தார். ஒற்றர்களைப் பார்த்து, "உலகத்தார் நம்முடைய அரசாட்சியைக் குறித்து என்ன சொல்லுகிறார்கள்?" என்று உசாவினார். அதற்கு ஒற்றர்கள், "பகைவனுடைய ஊரில் சிறையிருந்த சீதையோடு வாழ்தலைத்தவிர மற்றவைகளெல்லாம் சரிதான்" என்றுகூறுகிறார்கள் என்று உரைத்தனர். இதனைக்கேட்ட இராமபிரான் அப்பழிச் சொல்லை மாற்றிக்கொள்ள எண்ணினார். சீதா பிராட்டியைக் காட்டிலே கொண்டுபோய் விடுமாறு செய்தார். சீதாபிராட்டியை வான்மீக முனிவர் தம்முடைய இருப்பிடத் திற்கு அழைத்துக் கொண்டு போய்ப் பாதுகாத்தார்.

ஆயினும் சீதாபிராட்டி இராமபிரானை எண்ணுந்தோறும் விரகமும் காட்டில் வசிக்கநேரிட்டதைக் குறித்து நாணமுங்கொண்டு மிகவும் வருந்தியிருந்தாள்.

### கண்விதுப்பழிதல்

118. ஒல்லையிற்கண் ணன்வருங்கோ லென்றயர்ந்தா ருத்

[தவன்பால்

முல்லை மடமாதர் முருகேசா—புல்லலுறப் பேணாது பெட்டா ருளர்மன்னோ மற்றவர்க் காணா தமைவில கண்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, முல்லை மடமாதர்-முல்லைநிலத்தவராகிய கோவியர்; உத்தவன்பால்உத்தவனிடத்திலே, கண்ணன ஒல்லையில் வரும கொல் என்று அயர்ந்தார் - கண்ணபிரான் விரைவிலே வநது சேருவாரோ என்று கேட்டுக் கலங்கினார்கள், புல்லல் உற - 156 முருகேசர் முதுநெறி வெண்பா

தழுவுதல் பொருந்த, பேணாது பெட்டார் உளர் - உள்ளத் தால் விரும்பாமலே சொல்லளவில் விரும்பிப் பழகியவர் ஒருவர் இருக்கிறார், அவர்

காணுது - அவரைக் காணுமல், கண் அமைவு இல - கண்கள் அமைந்திருக்கமாட்டேம் என்கின்றன. (அஃதாவது கலங்குகின்றன.)

(வி - ம்.) முல்லை நிலப் பெண்களாகிய கோவியர் தம்மைத் தெளிவிக்க வந்த உத்தவனிடத்திலே கண்ணபிரான் விரைவிலே வந்தருளுவாரோ என்று கேட்டுக் கலங்கினுர்கள்; உள்ளத்தால் விரும்பாமலே சொல்லளவில் பழகியவர் ஒருவர் இருக்கின்றனர்; அவரைப் பார்க்காமல் என்னுடைய கண்கள் கலங்குகின்றன என்பதாம். மன், ஓ: அசைநிலை. மற்று: பிரி நிலைப் பொருளில் வந்தது.

## கோவியர் கதை

கண்ணபிரான் கோகுலத்தில் உள்ள பதினுறுயிரங் கோவியப் பெண்களோடுங்கூடி இன்ப நுகர்ந்திருந்த நாளில் அவரைப் பிரிந்து சென்று கஞ்சனை வதைத்தார்; பிறகு மதுரையை அடைந்தார்; கோவியர்களைத் தேற்றுமாறு அவர்களிடம் உத்தவன் என்னும் நண்பரை அனுப்பினுர். கோவியர்கள் உத்தவனைக் கண்ட அளவிலே, "கண்ணபிரான் விரைவிலே எங்களிடம் வந்து சேருவாரோ?" என்று கேட்டு உள்ளங் கலங்கினுர்கள்.

## பசப்புறு பருவரல்

**119.** சீவகனீங் கப்பசந்து

சேடிழந்தெய்த் தாள்பதுமை மூவலிலா தோங்கும்
முருகேசா—ஒவலிலாச் சாயலு நாணு
மவர்கொண்டார் கைம்மாறு நோயும் பசலையுந் தந்து.

(இ - ள்.) *மூவல் இலாது ஓங்கும் முருகேசா - என்றும் அழிதலற்ற பரம் பொருளாக உயர்ந்து விளங்குகின்ற* **காமத்துப்பால்** **157**

*முருகப் பெருமானே!, பதுமை-பதுமையென்பவள், சீவகன் **நீங்க** - சீவகன் தன்னைவிட்டுப் பிரிய, பசந்து சேடு இழந்து எய்த்தாள் - பசலை யடைந்து அழகுகெட்டு மெலிந்தாள, **நோயும் பசலையும் தந்து** - காமநோயையும் பசலையையும எனக்குக் **கொடுத்து, கைம்மாறு** - கைம்மாற்றுதலாக, சாயலும் நாணும் அவர் கொண்டார் - என்னுடைய அழகையும் நாணத்தையும் அவர் என்னிடமிருந்து பெற்றுக் கொண்டார், சேடு - அழகு, மூவல் - அழிதல்.*

(வி - ம்.) *பதுமையானவள் சீவகன் தன்னை விட்டு நீங்கப் பசலை யடைந்து அழகிழந்து வருந்தினாள்; காம நோயையும் பசலையையும் எனக்குக் கொடுத்து விட்டு என்னிடத்திலேயிருந்து **கைம்மாறாக** என்னுடைய அழகையும் நாணத்தையும் அவர் கவர்ந்து கொண்டார் என்பதாம்.*

## பதுமாபதி கதை

பதுமாபதி என்பவள் பல்லவதேய மன்னனுகிய உலோகமா பாலன் என்பவனுடைய மகள். இவள் சீவகனை மணந்து இன்பம் நுகர்ந்து வாழும் நாளில் சீவகன் நாட்டுவளங்களைக் காணுதற்குப் பிரிந்து சென்ருன். பதுமை அவனுடைய பிரிவைப் பொருதவளாய்க் கலங்கிப் புலம்பினுள். சீவகனைக் காணுமளவும் அழகையிழந்து உடல்முழுவதும் பசலையடைந்து மெலிந்திருந்தாள்.

## தனிப்படர்மிகுதி

120. பற்றி னுருப்பசியைப் பார்த்தன்வெஃகான் •
சிற்சபையின் முற்றம்ப மேவு முருகேசா—உற்ற
ஒருதலையா னின்னது காமங்காப் போல இருதலை
யானு மினிது.



(இ - ள்.) சிற்சபையின் முன்தம்பம் மேவும் முருகேசா இல்லைப் பொன்னம்பலத்திற்கு முன்னிடத்திலுள்ள தூணிலே பொருந்திய முருகப்பெருமானே! பற்றின் - காமப் பற்றுக்கொண்ட, உருப்பசியை - ஊர்வசியை, பார்த்தன் வெஃகான் - அருச்சுனன்

விரும்பாதவனானன் ; உற்றபொருந்திய, காமம் - காமமானது, ஒருதலையான் இன்னாதுஒருபக்கமாக விருத்தல் துன்பமானது, காப்போல - காவடியின்பாரத்தைபபோல, இருதலையானும் இனிது - இருபக்க மாகவும் ஒத்திருப்பது இன்பமானது.

(வி - ம்.) காமப்பற்றுக் கொண்ட ஊர்வசியை அருச்சுனன் விரும்பாதவனானன் ; காமமானது ஒருதலைப்பக்கமாக உண்டானால் அது துன்பத்தைக் கொடுக்கும் ; காவடித்தண்டைப் போல இருபக்கமாகவும் ஒத்திருப்பது இனிமையைத்தரும் என்பதாம்.

## ஊர்வசி கதை

அருச்சுனன் விண்ணுலகத்திற்குச் சென்றான். தேவேந்திரனால் போற்றப் பெற்று அங்கே தங்கி யிருந்தான். அருச்சுனன் தங்கி யிருந்த விடத்திற்கு ஊர்வசி வந்து தன்னுடைய காமத்தைச் சொல்லித் தன்னைத் தழுவவேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். அருச்சுனனுக்கு அவளிடம் காமப்பற்று உண்டாக வில்லை. சிலதகுதி மொழிகளைக்கூறி அவளுடைய காதலை ஏற்க மறுத்தான் . சினங் கொண்ட ஊர்வசி அவன் அலியாகுமாறு தீமொழி

கூறிவிட்டு நீங்கினள். ° அதனல் அருச்சுனனுக்குத் துன்பம் உண்டாகியது. பிறகு இத்தீமொழிப் பலன் விரும்பியபோது மட்டும் உண்டாகுமாறு இந்திரன் வேண்டுகோட்படி ஊர்வசியால் மாற்றப்பட்டது; ஒரு பக்கத்தில் மட்டுங் காமம் உண்டாகு மாஞல் அது தீமையை உண்டாக்கு மென்பது இவ் விடத்தில் விளங்கியது.



## நினைந்தவர் புலம்பல்

121. சித்தமுள வல்லமன்சிந் திப்பனே

வென்றுலைந்தாள்

முத்தநகை மாயை முருகேசா—மத்தமுறும் யாமு

முளேங்கோ லவர்நேஞ்சத் தெங்நேஞ்சத் தோஒ

வுளரே யவர்.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே !, முத்த நகை மாயை - முத்துப்போன்ற பற்களையுடைய மாயை யானவள், சித்தம் உள அல்லமன் - நன்மனம் உள்ளவராகிய அல்லமதேவர், சிந்திபபனே என்று - நம்மைக்குறித்து உள்ளத்தில் நினைப்பாரோ என்று, உலைந்தாள் - உள்ளம் வருந்தினுள்; மத்தம் உறும்-காமக்களிபபுப் பொருந்திய. எம் நெஞ்சத்து - எமமுடை ய உள்ளத்திலே, ஓஒ உளரே அவர் -

காதலராகிய அவர் இருக்கின்றாரே, அவர் நெஞ்சத்து - அவருடைய உளளத்திலே, யாமும் உளேம் கொல்- நாமும் நீங்காமல் இருக்கின்றேமா?

(வி - ம்.) முத்துப் போன்ற பற்களையுடைய மாயை யானவள் அல்லமதேவர் நம்மைப் பற்றி அவருடைய உள்ளத் திலே நினைப்பாரோ என்று எண்ணி வருந்தினாள்; களிப்புப் பொருந்திய எம்முடைய உள்ளத்தில் காதலர் இருக்கின்றார் ; அவருடைய உள்ளத்திலே நாமும் இருப்பேமோ? என்பதாம்.

## மாயையின் கதை

மாயை என்பவள் அல்லம தேவரிடத்திலே அளவு கடந்த காதல் கொண்டாள். எப்பொழுதும் அவரைப் பற்றிய நினைவுடையவ ளாகவே இருந்தாள். அல்லம தேவரிடத்திற்கு மதமானி என்பவளைத் தூதனுப்பினாள். நாம் அவரைப்பற்றியே எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருக்கிறோமே அவர் நம்மைப் பற்றி நினைப்பாரோ என்று எண்ணமிட்டு ஏங்கினாள்.

அல்லம 160 முருகேசர் முதுநெறி வெண்பா

தேவரும் தன்னை நினைக்கிறார் என்று செய்தி யறிந்து உள்ளங் களித்தாள்.

## கனவுநிலை யுரைத்தல்

122. காதலனை நாளுங் கனவணைந்தே

சாரதைதான்

மூதுவகை யுற்றாள் முருகேசா—தீதின்
நனவென வொன்றில்லை யாயிற் கனவினால்
காதலர் நீங்கலர் மன்.

(இ ள்.) முருகேசா - முருகப பெருமானே !, சாரதைசாரதை என்பவள, காதலனை - தன்னுடைய அன்பனை, நாளும் கனவு அணைந்து - நாள்தோறுங் கனவிலே சேர்ந்து, மூது உவகை உற்றாள் - மிகுந்த மகிழச்சி அடைந்தாள், தீதின்-தீமையினையுடைய, நனவு என ஒனறு இல்லை ஆயின்நனவு எனறு கூறபபடு ம் ஒன்று இல்லை யென்றால், காதலர் அன்பரானவர், கனவினால் நீங்கலர் - கனவினாலே நீங்க மாட்டார். மன் : அசை.

(வி - ம் .) சாரதை என்பவள் தன்னுடைய காதலனை நாள் தோறுங் கனவிலே கூடி மிகுந்த மகிழ்ச்சி யடைந்தாள் ; நனவு இல்லையானால், கனவிலே வருங் காதலர் பிரியமாட்டார் என்பதாம். கனவுக்கு இடையூறாக நனவு நேர்தலின் இவ்வாறு கூறப்பட்டது.

சாரதையின் கதை

ஆனந்த தேசாதிபதியின் நண்பனா கிய பதுமநாபன் என் னும் அந்தணன் மூப்ப டை ந்தான் ;

மூப்படைந்தும் வேதவிரதன் என்னும் அந்தணனுடைய மகளாகிய சாரதை என்பவளை மணஞ் செய்தான். மணமுடித்த வன்றே பாம்பு கடித்த படியினால் இறந்து போனான். அவள் தன்னுடைய தந்தையின் வீட்டிலிருந்தாள். ஒருநாள் முனிவர் ஒருவர் அவளுடைய



வந்தார். சாரதை அம்முனிவரை வணங்கினாள். அம்முனிவர் சாரதையின் கைம்மை நிலையை உணர்ந்து கொள்ளாமல், "பெண்ணே நீ நெடுங்காலம் உன் கணவனோடு இன்பம் நுகர்ந்து மக்களைப் பெற்று வாழ்வாயாக" என்று வாழ்த்துரை வழங்கினார். பிறகு அவள் கைம்மை என்பதை உணர்ந்தார். தாம் வாழ்த்திய வாழ்த்துரை பொய்யாகாத வாறு அவளைக் கொண்டு ஓராண்டு உமாமகேசுர நோன்பு செய்யச் செய்தார். நோன்பின் முடிவிலே உமாதேவி காட்சி கொடுத்தாள். முனிவரைப் பார்த்து, "இறந்தவன் இவளுக்குரிய கணவனல்லன்; முற்பிறப்பிலுள்ள கணவன் பாண்டிநாட்டிலே அந்தணர் குலத்திற் பிறந்து ஒரு பெண்ணை மணஞ் செய்து வாழ்கின்றான். அவனிடம் இவள் நனவில் நுகரும் இன்பத்தினும் மிகுந்த இன்பத்தைக் கனவில் நுகர்ந்து புதல்வனைப் பெற்று அவனோடு நம்முடைய பதவியை அடைக" என்று அருள் செய்து மறைந் தாள். அவ்வாறே கனவில் அவனோடு மிகுந்த இன்பம் நுகர்ந்து புதல்வனைப்

பெற்றுள். கோகர்ணத்தில் சிவராத்திரி நாளில் கணவனை நனவிலுங் கண்டாள். தன் நோன்புப் பலனில் பாதியை அவனுக்குக் கொடுத்தாள். அவனது நகரத்தை யடைந்து அங்குங் கனவின்பமே நுகர்ந்து வாழ்ந்தாள்.

## பொழுதுகண்டிரங்கல்

123. அந்திப் பொழுதின்மணிச் சூடனினை
வாலயர்ந்தாள்
முந்துமணி வல்லி
முருகேசா—சிந்தைசெயில்
காதல ரில்வழி மாலை கோலைக்களைத்
தேதிலர் போல வரும்.

(இ - ள்.) முருகேசா - முருகப் பெருமானே!, முந்து - முன்னாளிலே, மணிவல்லி - இரத்தினவல்லி யென்பவள்' அந்திப்பொழுதில்-மாலைநேரத்தில், மணிச்சூடன் நினைவால்இரத்தின சூடன் எண்ணத்தால், அயர்ந்தாள்-வருந்திறாள்; சிந்தை செயில் - எண்ணிப் பார்க்குமிடத்தில், காதலர்

மு. மு. வெ.—11

இல்வழி - காதலர் இல்லாத பொழுது, மாலை - மாலைப் பொழுதானது, கொலைக் களத்து - கொலைக் களத்திலே, ஏதிலர் போல வரும் - பகைவர்களைப்போல் உயிரைக் கவர வரும்.

(வி - ம்.) முன்னாளிலே இரத்தினவல்லியானவள், மாலைப் பொழுதில் இரத்தினசூடனுடைய எண்ணத்தால் தளர்ந்து வருந்தினாள்; காதலர் இல்லாத போது மாலை நேரமானது கொலைக் களத்திலே பகைவர்கள் உயிரைக் கவர வருவது போல வரும் என்பதாம்.

## இரத்தினவல்லி கதை

வசுபூதி என்னும் காந்தருவ மன்னனுடைய மகளாகிய இரத்தினவல்லி என்பவள், சந்திரலேகை, அநங்கலேகை, சித்திரலேகை என்னுந் தோழிமாரோடு யாழ்முதலிய பயின்று முன்பிறப்பு வாசனையால் காசியில் இரத்தினேசுவரரை வழி பட்டுக் கொண்டிருந்தாள். அக்கடவுள் திருவுளமகிழ்ந்து அவளைப்பார்த்து, "நீ இம் உலகில் உள்ள சங்கசூடன் மகனாகிய இரத்தினசூடனைக் கணவனாகப் பெறுவாயாக" என்று திருவருள் செய்தார். அதனைக் கேட்டதுமுதல் இரத்தினவல்லி இரத்தினசூடனையே எண்ணிக் கொண்டிருந்தாள். மாலைக் காலத்தில் காமநோய் மிகுதிப்பட்டு

வருந்தினுள். அந்தோ இம் மாலைப்பொழுது என்னைக் கொலை செய்யும் கொலைஞனுக விருக்கிறதே என்று சொல்லி ஏங்கினுள். பிறகு அவனை மணந்து மகிழ்ந்தாள்.

## உறுப்புநலனழிதல்

124. துன்பமுற்ருர் தாருவனத்
தோகையரெம்
மானைவெஃகி
முன்புவளை தோற்றே முருகேசா—வன்பிற்
பணைநீங்கிப் பைந்தொடி சோருந்
துணைநீங்கித்
தோல்கவின் வாடிய தோள்.
காமத்துப்பால் 163

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே!, தாருவனத் தோகையர் - தாருகாவனத்திலே யிருந்த முனிவர்களின் மனைவிமார், எம்மானை வெஃகி - பிட்சாடன மூர்த்தியாக வந்த சிவபெருமானை விரும்பி, முன்பு - முன்னுளிலே, வளை தோற்று துன்பம் உற்ருர் - வளையல்களை இழந்து துன்பமடைந்தார்கள், வன்பில் - வலிமையுடைய, துணை நீங்கி- துணைவர் விட்டுப்

பிரிந்தமையால், தொல்கவின் வாடிய தோள் - பழைய அழகு கெட்டு வாடிய தோள்கள், பணை நீங்கி பைந்தொடி சோரும் - பருத்த தன்மை கெட்டு மெலிந்ததனால் பசிய வளையல்களும் கழலுகின்றன.

(வி - ம்.) தாருகாவன முனிவர்களின் மனைவிமார் சிவபெருமானை விரும்பி வளையலை யிழந்து துன்பமுற்றார்கள்; துணைவர் நீங்கியபடியால் பழமையான அழகு கெட்டு வாடிய தோள்கள் பருமை நீங்கி மெலிந்ததனால் பசிய வளையல்களும் கழலுகின்றன என்பதாம்.

## முனிவர் மனைவியர் கதை

முன் காலத்திலே தாருகாவனத்து முனிவர்கள் கடவுள் ஒருவரில்லையென்னுங் கொள்கையுடையவர்களாய்த் தருக்கி யிருந்தார்கள். இம்முனிவர்களுடைய மனைவிமார்கள் கற்பில் வழுவா திருந்தபடியினால் அம்முனிவர்களை எவராலும் வெல்ல முடியவில்லை. சிவபெருமான் உலகினரை நல்வழிப்படுத்த எண்ணினார். மோகினியுருவெடுத்துப்போய் அம் முனிவர்களை மயக்குமாறு திருமாலுக்குக் கட்டளையிட்டார். தாம் பேரழகு வாய்ந்த பிட்சாடனக் கோலத்தோடு சென்று முனிவர்களின் மனைவிமார்களிடத்தே ஐயமேற்றார். அப்பெண்கள் பெருமானைக் கண்டவுடன்

கட்டுக்கடங்காத காமம் கொண்டார்கள். அவர்களது இடையிலே இருந்த உடையும் கையிலேயிருந்த வளையல்களுஞ் சோர்ந்தன. அவர்கள் காமக் காழ்ப்பேறப் பெற்றபடியினால் மிகுந்த துன்பத்தையடைந்து வருந்தினார்கள். 164

முருகேசர் முதுநெறி வெண்பா

நெஞ்சொடுகிளத்தல்

125. மெய்த்தவ வீடுமனை வேண்டியலைந்
தேவெறுத்தாள் மொய்த்தகுழல் அம்பை
முருகேசா—உய்த்துணரில் காத லவரில ராகநீ
போவது
பேதைமை வாழியென் னெஞ்சு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, மொய்த்த குழல் அம்பை - நெருங்கிய கூந்தலையுடைய அம்பை என்பவள், மெய் தவ வீடுமனை - உண்மையான தவம் பொருந்திய வீடுமனை, வேண்டி அலைந்து வெறுத்தாள் - மணஞ்செய்து கொள்ளுமாறு கேட்டு அலைந்து பிறகு வெறுத்தாள; உய்த்துணரில் - ஆராய்ந்து பார்க்கு மிடத்தில், என் நெஞ்சு வாழி - என்னுடைய மனமே நீ வாழ்வாயாக, காதல் அவர்

இலர் ஆக - தலைவர் நம்மிடம் காதல் இல்லாதவராக இருக்க, நீ நோவது பேதைமை. நீமட்டும் அவரை நினைத்து வருந்துவது அறியாமையாகும்.

(வி - ம்.) நெருங்கிய கூந்தலையுடைய அம்பையானவள் வீடுமனைத் திருமணஞ் செய்துகொள்ள விரும்பி வேண்டி அலைந்து பின் அவனை வெறுத்தாள்; என்னுடைய மனமே நீ வாழ்வாயாக! தலைவர் நம்மிடத்திலே அன்பில்லாதவராக இருக்கும் போது நீமட்டும் அவரை எண்ணி வருந்துவது அறியாமையாகும் என்பதாம்.

அம்பை கதை

அம்பை என்பவள் காசிராசனுடைய மகள். இவள் வீடுமரைத் திருமணஞ் செய்து கொள்ள விரும்பினாள். அதன் பொருட்டுப் பரசுராமர் முதலியோரைக் கொண்டும் முயற்சி செய்தாள். மிகமுயன்றும் அவளுடைய முயற்சி பலனளிக்க வில்லை. காதலற்றவராக இருந்த வீடுமரை யாதுஞ் செய்ய முடியாது வெறுத்துச் சென்றாள்.



நிறையழிதல்

126.

போகமுவர்த் தேதவன்விண் போதல்கண்டுங்
கௌசிகிபின்
மோகமிகச் சென்ருள் முருகேசா—ஆகையினல்
செற்ருர்பின் செல்லாப் பெருந்தகைமை காமநோய்
உற்ரு ரறிவதோன் றன்று.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!, போகம் உவர்த்து - இன்பத்தை வெறுத்து, தவன் விண்போதல் கண்டும் - இரிசிகர் விண்ணகம நோக்கிச் செல்லுதலைப் பார்த்தும், கௌசிகி - கௌசிகி யானவள், பின், முனிவருக்குபின்னே, மோகம மிக சென்ருள் - காமம் மிகுதலால் போனுள், ஆகையினல் - ஆனபடியினல், செற்ருர் பின் செல்லாப் பெருந்தகைமை - தம்மை வெறுத்து நீங்கியவரின் பின்செல்லாமல் மானத்தோடு நிற்கும் பெருந்தகைமை, காமநோய் உற்ருர் அறிவது ஒன்று அன்று - காமநோய்கொண்டார் அறிந்து கொள்ளக் கூடிய ஒன்று அன்று.

(வி - ம்.) இரிசிகமுனிவர் உலக போகத்தை வெறுத்து விட்டு விண்போதலைப் பார்த்தும் கௌசிகியானவள் அம் முனிவருக்குப் பின்னே காமமிகுதியினல் சென்ருள்; தம்மை வெறுத்து நீங்கியவரின் பின் செல்லாமல் மானத்தோடிருக்கும்

பெருந்தகைமையானது காம நோய் கொண்டவர்களால் அறிந்து கொள்ளக் கூடிய ஒன்று அல்லவென்பதாம்.

## கௌசிகி கதை

காதிமன்னனுடைய மகளாகிய கௌசிகி யென்பவள் பிருகு முனிவருடைய மகனாகிய இரிசிகர் என்பவரை மணந்து இன்பம் நுகர்ந்து கொண்டிருந்தாள். முனிவர் உலகவின்பங்களை வெறுத்து வீடுபேற்றையடைய வெண்ணி விண்ணகத்தை



நோக்கிச் சென்றார். அவர் அவ்வாறு செல்லுதலைக் கௌசிகி யுணர்ந்தும் மோகத்தினால் அவரைப் பின் தொடர்ந்தாள். அவர் தீமொழி கூறியபடியே கௌசிகி ஆறானாள்.

## அவர்வயின் விதும்பல்

127. காதலனேந் நாள்வருங்கோ லென்றுதத்தை
கவ்வைமிக்காள்
மூதுணர்வாற் றேர்ந்தும் முருகேசா—தீதின் ஒருநா
ளேழுநாள்போற் செல்லுஞ்சேட் சென்றார்
வருநாள்வைத் தேங்கு பவர்க்கு.

(இ - ள்.) முருகேசா - முருகப்பெருமானே!,

தத்தை - காந்தருவ தத்தையானவள், மூது உணர்வால் தேர்ந்தும் - மெய்யுணர்வினல் உணர்ந்தும், காதலன் எந்நாள் வரும் என்று - நம்முடைய காதலர் எபபொழுது வருவார் என்று, கவ்வைமிக்காள-துன்பத்தை யடைந்திருந்தாள், தீதுஇல்தீதற்ற, சேண் சென்றூர் - தொலைவிலே சென்றவர், வருநாள் வைத்து ஏங்குபவர்க்கு - திரும்பிவரும் நாளை நினைத்து ஏங்கும் பெண்கட்கு, ஒருநாள் எழுநாள் போல் செல்லும் - ஒருநாள் ஏழுநாள் போல நெடிதாகக் கழியும்; கொல்: அசைநிலை.

(வி - ம்.) காந்தருவதத்தையானவள் நம்முடைய காதலன் எப்போது வருவாரோ என்று துன்பமடைந் திருந்தாள்தொலைவில் உள்ள நாட்டிற்குச் சென்ற காதலர் திரும்பிவரும் நாளைநினைத்து ஏங்கியிருக்கும் பெண்கட் கு ஒருநாள் ஏழு நாட்களைப் போல நெடிதாகச் செல்லும் என்பதாம்.

காந்தருவதத்தை கதை

வித்தியாதர மன்னனாகிய கலுழவேகன் தன் மகளாகிய காந்தருவதத்தைக்கு இராசமாபுரத்திலே திருமணம் நிகழும் காமத்துபபால்

என்பதைக் காலக்கணிதரால் தெரிந்தான். அந்நகரத்து வணிகனாகிய சீதத்தன் என்பவன் ஒரு தீவுக்குப் போய்ப் பெரும் பொருளீட்டிக் கப்பலேறி வருவதை அறிந்தான். "இசையில் வென்றோனுக்கு என்னுடைய மகளைத் திருமணஞ் செய்து கொடுப்பாயாக" என்று கூறிப் பெரும் பொருளோடு மகளை அனுப்பினான்.

சீதத்தன் தன்னுடைய நகரத்தையடைந்து கட்டியங்காரனுடைய உடன்பாடு பெற்றுப் பல மன்னரை அழைப்பித்தான். அவர்களெல்லாருங் காந்தருவத்தைக்குத் தோற்றார்கள். சீவகன் காந்தருவத்தையை இசையில் வென்றான். தன்னோடெதிர்த்த பல அரசர்களையும் வென்றான். மணம் முடித்து வாழும் நாளில் பிரிவு ஏற்பட்டது. ஏமமாபுரத்தையடைந்து தடமித்தன் என்னும் அரசனுடைய மகளாகிய கனகமாலையை மணந்திருந்தான். காந்தருவதத்தை சீவகனிருக்குமிடமும் வருங்காலமும் பிறவும் அறிவாலறிந்திருந்தும் காதல் மிகுதியால் காணவிரைந்தாள். என்று வருவாரோ என்று நாளை எண்ணி எண்ணி நைந்தாள்.

## குறிப்பறிவுறுத்தல்

128. தந்தைக் குணர்த்தித் தவன்குறிப்பைக்
காந்திமதி முந்தியுடன் சென்றாண்
முருகேசா—அந்தில் பெரிதாற்றிப் பெட்பக் கலத்த

லரிதாற்றி யன்பின்மை சூழ்வ துடைத்து.

(இ . ள்.)முருகேசா - முருகப்பெருமானே!, தவன் குறிப்பை - சோழமன்னனுடைய குறிப்பை, காந்திமதி - காந்திமதியானவள், தந்தைக்கு உணர்த்தி - தன்னுடைய் தகப்பனுக்குத் தெரியப்படுத்தி, முந்தி உடன் சென்றாள் - முன்னுளிலே கூடச் சென்றாள்; பெரிது ஆற்றி பெட்ப கலத்தல் - பெரிதும் அன்புசெய்து விரும்புமாறு கூடுதல், அரிது ஆற்றி அன்பு இன்மை சூழ்வது உடைத்து - 168
முருகேசர் முதுநெறி வெண்பா

அரிதாகிய பிரிவைச் செய்து பிறகு அன்பில்லாமல் கைவிட எண்ணுகிற குறிப்பை உடையதாகும்.

(வி - ம்.) காந்திமதியானவள் சோழனுடைய குறிப்பைத் தன்னுடைய தந்தைக்குத்தெரியப்படுத்தி முன்னுளில் அவனோடு சென்றாள்; மிகுதியான அன்பைச்செய்து கூ டுதல் பிறகு அரிய பிரிவை உண்டாக்கி அன்பில்லாமல் கைவிட எண்ணுகிற நோக்கத்தை தக்கொண்டது என்பதாம்.

காந்திமதி கதை

சூரவாதித்த சோழன் என்பவன் திரிசிராமலையிலே சிவ தீர்த்தத்திலே நாககன்னிகைகள் எழுவர் நீராடும் போது கண்டான்; கரையிலிருந்த ஆடைகளைக் கவர்ந்தான். அரசன் மடியுமாறு அப்பெண்கள் தீமொழி புகன்றார்கள். பாம்புகளால் கடிக்கபட்ட அவன் நஞ்சின் விரைவைக் கருடமறையினாலே தடுத்துக்கொண்டான். அவர்களுடைய ஆடைகளை அவர்களிடங் கொடுத்தான். அவர்களைப்பார்த்து, ''உங்களிலே ஒருவரைக் கூடுதற் பொருட்டே இவ்வாறு செய்தேன்'' என்று சொன்னான். அவர்கள் தாய்தந்தையர்களுடைய உடன்பாடு வேண்டுமென்று கூறிவிட்டுச் சிவபெருமானை வழிபட்டுச்சென்றார்கள். சோழனும் அவர்களோடு சென்றான். ஆதிசேடனைக்கண்டு வணங்கினான். அவனால் போற்றிப் பாராட்டப் பெற்றான். அவனுடைய மகளாகிய காந்திமதியைத் திருமணஞ்செய்து இனிது வாழ்ந்தான். ஒருநாள் தன்னுடைய மனைவியைப் பார்த்து, ''என் மாலையில் உள்ள இவ்வண்டு முன்னிருந்த பூம்பொழிலை அடையுமோ?'' என்று உசாவினான். அம்மொழியால் அவள் அவனுடைய பிரிவுக்குறிப்பை உணர்ந்துகொண்டாள். அதனால் மனஞ்சோர்ந்தாள். தன்னுடைய தந்தைக்குச் செய்தியைக் கூறினாள். தந்தையினுடைய உடன்பாடு பெற்றுச் சோழனோடு உறையூரை யடைந்து வாழ்ந்திருந்தாள்.

## புணர்ச்சி விதும்பல்

129. செற்ற மிகுபரவை வன்றொண்டர்
சென்றவழி முற்றவற்றைக் காணாள்
முருகேசா—உற்றவரைக் காணுங்காற் காணேன்
தவறாய காணாக்கால் காணேன் தவறல் லவை.

(இ - ள்.) *முருகேசா - முருகப்பெருமானே!, செற்றம் மிகுபரவை - சினங்கொண்டிருந்த பரவையானவள், வன் தொண்டர் சென்றவழி - சுந்தரர் சென்றபொழுது, முன் தவற்றைக் காணாள் - முன்பு அவரிடத்திலே கண்ட குற்றத்தை அப்பொழுது காணாதவளானாள். உற்ற வரை - பொருந்தியவரை, காணுங்கால் - பார்க்கும்பொழுது- தவறாகிய காணேன் - குற்றமானவைகளைக் காணாதவ ளாகிறேன், காணாக்கால் - அத்தலைவரைப் பார்க்காம லிருக்கும் பொழுதோ, தவறு அல்லவை காணேன்- குற்றமல்லாதவைகளைப் பார்க்க முடியாதவளாகிறேன்.*

(வி - ம்.) *சினங்கொண்டிருந்த பரவையார் சுந்தரர் சென்ற பொழுது அவருடைய முந்திய தவறுகளையெல்லாம் காணாத வரானார்;*

தலைவரைக்காணும்போது அவர் செய்த குற்றங்களைப் பார்க்கமுடியவில்லை; அவரைப் பார்க்காத பொழுதோ அவர் செய்கின்ற வெல்லாம் குற்றமாகத் தோன்றுகின்றன என்பதாம்.

## பரவையார் கதை

சுந்தரர் திருவொற்றியூரிலே சங்கிலியாரைத் திருமணஞ் செய்துகொண்ட செய்தியைத் திருவாரூரில் இருந்த பரவையார் உணர்ந்து அவர் மீது மிகுந்த சினங்கொண்டிருந்தார். சிவ பிரான் பரவையாரிடந் தூது போய்ச், "சுந்தரன் நின்பால் வருதற்கு நீ இணங்கவேண்டு" மென்று கூறிப் பரவையாரைத் தெளிவித்தார். அதன் பிறகு சுந்தரர்பரவையாரிடஞ் சென்றார்.



பரவையார் சுந்தரரிடம் எத்தகைய குற்றத்தையுங் காணாதவராய் மகிழ்ந்திருந்தார்.

## நெஞ்சொடு புலத்தல்

130. மேவாக் கணவனைமுன் வெஃகி
நளாயனிதான்
மூவாத்தன் புற்றாள் முருகேசா —ஓவாமல்
கேட்டார்க்கு நட்டாரில் லென்பதோ

பெட்டாங் கவர்பின் செலல்.

(இ - ள்.) முருகேசா-முருகப்பெருமானே !, நளாயனிநளாயனி என்பவள், மேவா கணவனை முன் வெஃகி - தன்னொடு மனங் கலந்து பொருந்தாத கணவனை முன்விரும்பி, மூவா துன்பு உற்றுள் - என்றுங் கெடாத துன்பத்தை யடைந்தாள்; ஓவாமல் - ஒழியாமல், நெஞ்சே - மனமே !, நீ, பெட்டாங்கு - உன் விருப்பத்தின்படியே, அவர்பின் செலல்தலைவருடைய பிறகே செல்வதற்குக் காரணம், கெட்டார்க்கு நட்டார் இல் என்பதோ - துன்பத்தால் அழிந்தவர்க்கு நண்பர் இல்லை என்னும வழக்கோ ?

(வி - ம்.) நளாயனியானவள் மனத்தொடு பொருந்தாத கணவனை விரும்பி மிகுந்த துன்பத்தையடைந்தாள்; நீ உன்னுடைய விருப்பப்படியே தலைவர் பின் செல்வதற்குக் காரணம் துன்பத்தால் வருந்தியவர்கட்கு நண்பர்களில்லையென்னும் கொள்கையோ என்பதாம். தான் : அசை

நளாயனி கதை

மௌற் கல்லிய முனிவர் என்பவர் நளாயனியை மணந்து அவளுடைய கற்பையும் அன்பையும் ஆராய்ந்து பார்த்தற்கு எண்ணினர். யாவரும் வெ

றுக்கும் படியான கோயோடு மூப் புடைய வரைப் போல நடித்தார். அவள் யாதும் மனந்திரியாமல் தொண்டு செய்திருத்தலை நோக்கி மகிழ்ந்தார். அவளுடைய



விருப்படியே பல வடிவங்களையெடுத்துக் கொண்டு அவளுக்கு இன்பமளித்தார். பிறகு தாம் தவத்திற்குச் செல்லத் தொடங் கினர். அப்பொழுது அவள் பிரிவாற்ருமல் பலவாறு எண்ணி எண்ணி வருந்தினள்.

## புலவி

131. நீளையின்பாற் செல்கெனமா னெஞ்சயர
மாலூடி மூளஞர்கோட் பட்டான்
முருகேசா—கோளகலும் உப்பமைந் தற்ருற் புலவி
யதுசிறிது
மிக்கற்ரு னீள விடல்.

(இ . ள் ) முருகேசா - முருகப்பெருமானே !, மா - திரு மகளானவள், மால் நெஞ்சு அயர - திருமாலுடைய மனம் வருந்துமாறு, நீளையின்பால் செல்க என ஊடி - நீளாதேவி யினிடத்திலே செல்க என்று சொல்லிப் பிணங்கி, மூள் அஞர் கோள்

பட்டாள் - மிகுந்த துன்பத்திற்குள்ளானாள்; கோள் அகலும் - குற்றம் நீங்கும், புலவி - ஊடலானது, உப்பு அமைந்த அற்று - உப்பு உணவில் அளவோடு அமைந்திருத்தலைப் போன்றது, அது சிறிது நீள விடல்அப்புலவியானது சிறிது நீடிக்குமாறு செய்தல், அது சிறிது மிக்க அற்று - அந்த உப்புச் சிறிதளவு மிகுதியாகப் போனதைப் போன்றது.

(வி - ம்.) திருமகளானவள் திருமாலுடைய நெஞ்சம் வருந்துமாறு பிணங்கி மிகுந்த துன்பத்திற்குள்ளானாள்; புலவி யானது உணவிலே உப்பு அளவோடு அமைந்திருத்தலைப் போன்றது. அப் புலவியைச் சிறிது நீட்டித்தால் உணவிலே உப்புச் சிறிதளவு மிகுதியாகப் போனதைப் போன்றது ஆகும் என்பதாம்.



திருமகள் கதை

திருமால் தமக்குரிய சீதேவி, பூதேவி, நீளாதேவி என்னும் மூன்று மனைவியர்கட்குள்ளே நீளாதேவியினிடத்திலே அதிகக் காதலையுடையவராக விருத்தலை மற்றிருவருங் கண்டு பொறாமை கொண்டிருந்தார்கள். ஒருநாள் திருமால் காமநோய் மிகுந்து திருமகளைத் தழுவத் தொடங்கினார். அவள்

"இதனை நீளி காண்பாளாயின் நீளப்பிணங்குவாள்" என்று கூறினள். திருமால் மேலும் ஊடலைத் தணித்தும் திருமகள் தணியவில்லை. அதனால் சினங் கொண்ட திருமால், "நீ மானிடப் பெண்ணாகுக" என்று தீ மொழி புகன்றார். திருமகள் அவ்வாறே பிருகு முனிவருடைய மகளாகப் பிறந்து பிறகு திருமாலை மணந்து மகிழ்ந்தனள். ஊடலைச் சிறிது நீட்டித்த படியால் திருமகளுக்குத் தொல்லை உண்டாகியது.

## புலவிநுணுக்கம்

**132.** இன்பி னெழுமையுநீங் கேனென்னக் காந்திமதி

முன்பு புலந்தாள் முருகேசா—அன்பதனல்
இம்மைப் பிறப்பிற் பிரியல மேன்றேனைக்
கண்ணிறை நீர்கோண் டனள்.

(இ ·ள்.) முருகேசா - முருகப்பெருமானே! காந்திமதிகாந்திமதியானவள், இன்பின் எழுமையும் நீங்கேன் என்ன - சூரவாதித்தசோழன் மிகுந்த இன்பத்தோடு உனனை எழு பிறப்பினும் நீங்க மாட்டேன் என்று கூற, முன்பு புலந்தாள் - முன்னளிலே ஊடினாள், அன்பு அதனால் - அன்பால், இம்மைப்பிறப்பில் - இப்பிறப்பில்,

பிரியலம் என்றேனு - யாம் பிரிய மாட்டே மென்று காதலியிடம் கூறி னேமாக, கண்ணிறை நீர் கொண்டனள் - இதனைக்கேட்ட அவள் கண்கள் நிறையுமாறு நீரைக் கொண்டாள்.



(வி - ம் . ) காந்திமதியானவள் சூரவாதித்த சோழன் ஏழு பிறப்பினும் உன்னை விட்டுப் பிரியே னென்று கூறப் புலந்து ஊடினுள் ; இப்பிறப்பிற் பிரிய மாட்டேன் என்றேனுக இதனைக் கேட்டவள் இனிவரும் பிறப்பிற் பிரிவாய் போலும் என்று கூறிக் கண்ணீர் ததும்பக் கலங்கினுள் என்பதாம்.

## சூரவாதித்தன் கதை

சூரவாதித்த சோழன் என்பவன் நாகலோக நங்கை யாகிய காந்திமதி யென்பவளை மணந்து எல்லா இன்பங்களையும் இனிது துய்த்துக்கொண்டிருந்தான். ஒருநாள் அவன் அவளைப்பார்த்து "உன்னை ஏழுபிறப் பினும் பிரியமாட்டேன்" என்று கூறினுன். இதனைக்கேட்ட அவள் "ஏழு பிறப்பிற்கும் பிற்பட்ட பிறப்பில் பிரிவாய் போலும்" என்று கூறி ஊடினுள். இதனைக் கண்ட சோழன் வியந்து திகைத்தான்.

ஊடலுவகை

133. காதல்துண மாலேபிணக் கைத்தவிர்த்துச்
சீவகன்றுன்

மோதமிக்கான் கூடி முருகேசா—ஆதலினால் ஊடுதல்
காமத்திற் கின்ப மதற்கின்பங் கூடி முயங்கப் பெறின்.

(இ - ள்) *முருகேசா - முருகப்பெருமானே !, சீவகன் - சீவகன், காதல் குணமாலை பிணக்கை தவிர்த்து - காதல் பொருந்திய குணமாலையினுடைய ஊடலைப் போக்கி, கூடி மோதம் மிக்கான் - அவளைச் சேர்ந்து மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தான், ஆதலினால் - ஆகையால், காமத்திற்கு இன்பம் ஊடுதல் - காமத்திற்கு இன்பமாவது பிணங்குதலாம், கூடி முயங்கப்பெறின் - கூடித்தழுவப் பெற்றால். அதற்கு இன்பம் - அந்த ஊடலுக்கு இன்பமாகும்.*



(வி - ம்.) *குணமாலையினுடைய ஊடலைப் போக்கிக் கூடிச் சீவகன் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தான். காமத்திற்கு இன்பம் ஊடுதலாகும், கூடித்தழுவப்பெறுதலே அந்த ஊடலுக்கு இன்பமாகும் என்பதாம்.*

**சீவகன் கதை**

*சீவகன் ஒரு பொழிலில் இருக்கும் போது தன் நகரிலுள்ள குணமாலையும் சுரமஞ்சரியும் தம்முள் மாறுபட்டனுப்பிய பொன் சுண்ணத்திலே குணமாலை*

சுண்ணமே சிறந்ததென்று உண்மை கூறினன். சீவகன் குணமாலையைக் காதலித்துக் கூறியதாகச் சுரமஞ்சரி எண்ணி, அவனைக் காதலித்தது போலவே தன்னையுங் காதலிக்க வேண்டுமென்று தவஞ் செய்யச் சென்றாள். அச் சமயத்தில் சீவகன் தன்பால் காதல் கொண்ட குணமாலையை மணந்து இன்புற்றான். அவன் அவளைப் பார்த்து, "பெண்ணே! சுரமஞ்சரி என்பால் பகை கொண்டு சென்றது நின்னை மணத்தற்குக் காரணமாயிற்று" என்றான். குணமாலை அச் சமயத்தில் அவனை எண்ணியமையைக் குறித்து ஊடினாள். சீவகன் பல இனிய மொழிகளால் அவளுடைய ஊடலைத் தணித்துச் சேர்ந்து மிகுந்த இன்பத்தை யடைந்தான்.

முருகேசர் முதுநெறி வெண்பா முற்றுப் பெற்றது.

———:0:———

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : செய்யுள் எண்]

| | |
|---|---|
| அண்டமுதல் வற்பழி | 10 |
| அத்தனையீ மப்ப | 42 |
| அந்தணற்கீந் | 102 |
| அந்திப் பொழுதின் | 123 |
| அம்புவிமுற் றும்பு | 61 |
| அற்றதுணி யோடு | 116 |
| அற்றமின்றிச் சாம | 4 |
| அன்பரிடர் கண்ட | 2 |
| ஆகமெலிந் தாள்சீ | 117 |

| | |
|---|---|
| ஆதியையும் வெல் | 86 |
| ஆர்த்தபொரு மைச்சி | 17 |
| ஆர்த்தொரன்பர் | 88 |
| ஆலவா யண்ண | 105 |
| ஆள்வினையால் மிக்க | 62 |
| இந்தனக்கே லாம | 71 |
| இன்பி னெழுமை | 132 |
| இன்னலே பல்கு | 82 |
| இன்னலொற்கத் | 104 |
| ஈண்டிவச வேசர் | 41 |
| ஈண்டுதச தோற்ற | 3 |
| உற்றபிணி யும்ம | 110 |
| உற்றபுற வம்புர | 39 |
| ஏச்சிறப்பேய்ந் தென் | 74 |
| எத்தனையோ வாசவ | 24 |
| எய்த்து மக | 53 |

ஒக்கலைவிட் டிக்க 106
ஓல்லையிற்கண் ணன் 118
ஒகையினல் வேதா 85
ஓகையினு ருக்கு 109
ஓங்குதருக் கம்வாத 13
ஓவாச் சிவ 100
ஓவி லுழ வன் 58
கதிநெறியர் நெஞ்சிற் (காப்பு)
கற்றும் பயனில 20
காண்டலின்றிச் சச்ச 52

காதலனெந் நாள் 127
காதலனை நாளுங் 122
காதல்குண மாலை 133
காத்தகபி லற்கி 57
காமுறுமூன் றுய்த்த 26
கின்னரரோ டேமேதா 8
கும்பமுனி யான 98
கோடியர்தன் போற் 54
கோதில் சுதரிசனன் 6
கோளொடுநா ணீத்த 114
சத்திமுத ஞாற்று 89
சத்துருவை மாய் 103
சந்தமிகு வாலை 112
சங்கியா சம்புணைந்தே 28
சித்தமுள வல்ல 121
சித்நரா மன்வெகுளி 31

சிந்துபதி யைத்த 49
சீலமிலாப் பேய் 95
சீவகனீங் கப்ப 119
சீவகன்சீ ருதி 67
சூரனெதிர் தக்க 69
செம்மைப் பொரு 36
செற்ற மிகு 129
செற்றுச் சுயோத 63
சென்னியணி கத்தை 50
சேக்கிழார் சென்னி 64
சொற்றவிடைக் காட 72
தக்கன்மதர்த் தெச்ச 34
தத்திகடங் தெவ்வு 33

| | |
|---|---|
| தந்தைக் குணர் | 128 |
| தன்னை வதை முத்தி | 32 |
| தாசரதி யுஞ்சீதை | 91 |
| தாதையைவில் வந்தி | 73 |
| தீதெனுமி ராக்க | 51 |
| தீதையுன்றி நீங்கி | 48 |

துஞ்சுமனத் தோடு 19
துற்றுநர குற்றேர் 7
துன்பகல் வோ 107
துன்பமுற்றூர் தாரு 124
துன்னுவனத் துந்தரு 9
தூயபல பத்தி 93
தெய்வாநிதி யாதி 44
தெற்றியதங் கற்க 80
தேசமலி தெய்வ (காப்பு)

| | |
|---|---|
| தேசுருவா னின்னி | 97 |
| தேர்ச்சியய னிந்து | 113 |
| தேவரையுஞ் சூரனையுங் | 1 |
| தொக்கிடும்பை | 99 |
| தொண்டருக்கேற் | 22 |
| நந்தியெதிர் செம்மா | 87 |
| நம்பனமர்க் கென்ற | 81 |
| நம்மரனூர் செய் | 75 |
| நாகவசுக் கள்வசி | 29 |
| நாரதனூற் சம் | 45 |
| நாள்களொடு கோளி | 60 |
| நித்திரை யோர்க் | 96 |
| நீதியிற்பாஞ் சாலிகடா | 12 |
| நீனையின்பாற் செல் | 131 |
| நேசன்போற் காடு | 83 |
| நூற்றறுத்து வாம | 37 |

| | |
|---|---|
| பற்றிலனாந் தன்பும் | 27 |
| பற்றி னுருப்பசி | 120 |
| பற்றுவிரை மீட்டெ | 77 |
| பாண்டவர் செல் | 47 |
| பார்க்கவனார் பண்ணிய | 15 |
| பாவ மெனுதரன் | 21 |
| பின்னைகரம் விடிய | 59 |
| பூரிளமை யியற்று | 111 |
| | |
| பொன்னகர்க் கோ | 23 |
| போகமிவர்த் தேத | 126 |
| மன்னவனாற் றன்னை | 16 |
| மன்னனயி ராது | 70 |
| மன்னியின்பந் துய்த்த | 40 |

மன்னுகிழி பெற்ற 76
மாண்டுநக ரோடளறு 18
மாலுறுத்தி வீடு 78
மாழ்கித் தருமனொரு 30
மாழ்கிவிதி நல்கா 101
மாழ்கிவரை வின் 92
மெய்த்தமிழ்வே தத்து 5
மெய்த்தவ வீடு 120
மெய்த்தரும தெய்வ 11
மேக்குவணை யின்பும் 35
மேயருக்கு மாங்க 115
மேவ விதுரம 79
மேவாக் கணவ 130
மைந்தனுயர்த்தான் 55
யாண்டுளனாரா 68
வெஞ்சசவா ணந்த 80
வஞ்சநலன் வாம 108

| | |
|---|---|
| வாக்கரசர் சாவ | 46 |
| வாதவூ ராளி | 65 |
| வாரிசுதை வவ்வு | 48 |
| வாழ்கணங்க ளாக்கி | 25 |
| விஞ்சுகங்கைத் தம்ப | 38 |
| வெஞ்சூதாற் றத்தை | 94 |
| வேதசன்மா பல்கலை | 84 |
| வேதநெறி பெணைத் | 14 |
| வேர்த்திடுக்கண் | 56 |
| வேள்வியிற் கோ | 66 |




கழக வெளியீடு : ௧௨௫௨

பிறைசைச் சாந்தக்கவிராயர் இயற்றிய

இரங்கேச வெண்பா என்னும்

# நீதி சூடாமணி

# மூலமும் உரையும்

* *

*உரையாசிரியர் :*

கருப்பக்கிளர் சு அ இராமசாமிப் புலவர்

* *

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.

*1966*



Ed 1 February 1966

# NEETHI SOODAMANI
## (Moolamum Vuraium)

Paari Achakam, Madras-1.

## பதிப்புரை

*அமிழ்தினுமினிய தமிழ்மொழியதனுள் நீதியை விளக்குதற்கு எழுந்த நூல்கள் மிகப்பல. அத்துணை நூல்களுள்ளும், ஏன் - உலகில் உள்ள நூல்கள் எல்லாவற்றினுமே தலைசிறந்து விளங்குவது பொய்யா மொழி யெனப் புவியோர் போற்றும் திருக்குறளே என்பது மிகை யாகாது.*

*அதில் உள்ள நீதிகளையும், சொற்றொடர்களையும் பொன்னேபோல் போற்றிப் புலவர் பலரும் தத்தம் நூல்களுள் அமைத்துக் கொண்டதே அதன் பெருமையை நன்கு விளக்கும்.*

*சிலர் சில குறள்களை எடுத்துக் கொண்டு*

அவற்றுள் ஒவ்வொன்றுக்கும் விளக்கமாக அமைந்துள்ள வரலாறுகளை எடுத்துக் காட்டும் வகையில் தாம் இரண்டு இரண்டு அடிகள் பாடி அவற்றொடு சேர்த்துத் தனித்தனி நூல்களாகவும் இயற்றியுள்ளார்கள். அவ்வாறு இயற்றப்பட்டவைகளே சோமேசர் முதுமொழி வெண்பா, முருகேசர் முதுநெறி வெண்பா, இரங்கேச வெண்பா முதலியன ஆகும்.

திருக்குறளிலிருந்து அதிகாரத்திற்கு ஒன்றாக நூற்று முப்பத்துமூன்று குறள் வெண்பாக்களை எடுத்து அவற்றை அடிப்படையாகக் கொண்டு அவைகளிலுள்ள கருத்துக்களை நன்கு விளக்கும் வரலாற்றுக் குறிப்புக்களை அமைத்துப் பிறைசைச் சாந்தக் கவிராயரென்னும் புலவர் பெருமான் இரங்கேச வெண்பா என்னும் நீதிசூடாமணியை இயற்றியுள்ளார்.

அவர் எடுத்துக்கொண்ட குறள்களும், அவற்றை விளக்கும் வரலாறுகளும் மிகமிக அருமை வாய்ந்தன ; பலருங் கற்றுத் தெளிதற்குரியன.



இந்நூலுக்குத்
விளக்கமும் திரு.

தக்கதொரு பதவுரையும், வரலாற்று
கருப்பக்கிளர் சு. அ. இராமசாமிப்

புலவரவர்கள் தெளிவாக எழுதி உதவியுள்ளார்கள். அவர்களுக்கு எங்கள் நன்றி என்றும் உரியதாகும்.

இந்நூலும், உரையும் தமிழக மக்களுக்குப் பயன்பட வேண்டுமென்னும் விருப்பத்தால் இதனை வெளியிட லானோம். அன்பர்களனைவரும் இதனை வாங்கிப் பயின்று இன்புறுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்

உ

## இரங்கேச வெண்பா என்னும்

# நீதிசூடாமணி

## மூலமும் உரையும்

---

### கடவுள் வணக்கம்

சீர்கொண்ட காவிரிசூழ் தென்னரங்கத் தெம்பிரான்
பார்கொண்ட தாளைப் பரவியே - ஏர்கொண்டே
யோங்குபுகழ் வள்ளுவனா ரோதுகுறண்
மூதுரையாப் பாங்குபெறச் சொல்வேன் பரிந்து.

(இ-ள்.) சீர்கொண்ட காவிரிசூழ் - சிறப்புப் பொருந்திய காவிரியாற்றினாலே சூழப்பெற்ற, தென் அரங்கத்து எம்பிரான் - அழகிய திருவரங்கத்திருக் கோயிலிலே எழுந்தருளியுள்ள எந்தலைவராகிய அரங்கநாதப் பெருமானுடைய, பார்கொண்ட தாளைப் பரவி - உலகளந்த திருவடிகளைப் போற்றி, ஏர்கொண்டு - அழகைத் தன்னிடத்திலே கொண்டு, ஓங்கு புகழ் வள்ளுவனார்-மிகுதிப்படுகின்ற புகழையுடைய திருவள்ளுவர், ஓது குறள் - இயற்றிய திருக்குறள், மூதுரையாப் பாங்குபெற - பழமையான வரலாற்றுக் கதைகளோடு பொருந்தி அழகைப் பெறுமாறு, பரிந்து சொல்வேன் - விரும்பிக் கூறுகிறேன்.

(விளக்கம்.) திருவரங்கநாதனுடைய திருவடிகளைப் போற்றி நான் திருவள்ளுவருடைய திருக்குறளை அமைத்து இந்நூலை விருப்பத்தோடு கூறுகிறேன் என்பதாம். திருவரங்கத்தின் ½
நீதி சூடாமணி

இருபக்கங்களினும் காவிரி சூழ்ந்து செல்லுதலின் காவிரி சூழ் என்றார். தென் அரங்கம் ஸ்ரீரங்கபட்டணம் முதலிய பிற வரங்கங்களு

முண்மையின் இதனைத் தெற்குத் திக்கிலுள்ள அரங்கமெனக் குறிப்பிட்டார் எனினுமாம். மாபலியிடத்துப் பூதானங் கேட்டுச் சென்றகாலை நிலத்தை ஓரடியில் அளந்தமை கருதிப் பார் கொண்ட தாள் என்றார். ஏர்கொள்ளுதல் - அழகு சிறப்பு முதலிய நலன்களைப் பெறுதல். திருவள்ளுவ நாயனாருடைய புகழ் தமிழ்கூறு நல்லுலகத்தன்றிப் பிற நாடுகளி லும் ஓங்கியிருத்தலை யெண்ணி ஓங்கு புகழ் என்றார். வள்ளுவனார் என்பதில் ஆர் உயர்வுப் பொருளில் வந்தது; சிவனார் தேவனார் என்பவைகளிற்போல. முதுமை + உரை : மூதுரை யென்றாகியது. இவ்வாறாதற்கு விதி, "ஈறுபோத லிடையுகர மிய்யாதல்" என்னும் நன்னூற் சூத்திரத்தில் காண்க. (௯)

## நூலின் பெயர்

சொற்ற வதிகாரந் தோறு மொருகுறளில் உற்ற
பொருளுக் குதாரணமா - முற்றுகதை யானீல
வண்ண னடியரவ லாலிந்நூல் மாநீதி சூடா மணி.

(இ - ள்.) சொற்ற-திருவள்ளுவர் எடுத்துச்சொல்லிய, அதிகாரம் தோறும் — ஒவ்வோர் அதிகாரத்திலும் உள்ள, ஒரு குறளில் - ஒரு குறட்பாவில், உற்ற பொருளுக்கு - பொருந்தியுள்ள அறநெறிப் பொருளுக்கு,

உதாரணமா- எடுத்துக் காட்டாக, முற்றுகதையால் - முடிகின்ற கதையி னுல், நீலவண்ணன் அடி பரவலால் - கருமுகில்வண்ணனுகிய திருவரங்கநாதனுடைய திருவடிகளைப் போற்றுதலால், இந் நூல்- இந்நூலானது, மாநீதி சூடாமணி - சிறந்த நீதி சூடாமணி என்னும் பெயரைப் பெறும்.

(வி - ம்.) அதிகாரத்திற்கு ஒரு குறளை எடுத்துக் கதை யின் மூலமாகப் பொருள்

விளக்கித் திருமாலினுடைய மூலமும் உரையும்

3

திருவடிகளையும் போற்றுகிறபடியினுல் இந்நூல் நீதிசூடாமணி என்னும் பெயரினைப் பெறும் என்பதாம்.

சொற்ற - சொன்ன என்பதின் வலித்தல் விகாரம். திரு வள்ளுவர் ஒரு பொருளையே பத்துமுறை பத்துவகையாக எடுத்துகூறிக் கேட்பார் மனமும் கற்பார் மனமும் அப் பொருளினை அழுத்தமாகப் பற்றுமாறு செய்திருத்தலின் ஓர் அதிகாரத்திற்கு ஒரு குறளாக எடுத்து எடுத்துக்காட்டு மூலமாக விளக்குவதே போதியதாமாகலின், "அதிகாரந்தோறு மொருகுறளில் உற்ற பொருளுக்கு" என்ருர். ஒவ்வொரு பாட்டினும், "இரங்கேசா" "இரங்கேசா"

என்று விளித்து அரங்கமாலைப் போற்றுதலால், "நீலவண்ணன் அடிபரவலால்" என்றார். ஒவ்வொரு செய்யுளினும், "இரங்கேசா" என்று விளித் திருத்தலின் இரங்கேச வெண்பா என்பதே இந்நூலுக்குப் பெய ராக அமைதல் பொருத்தம்; அவ்வாறுதான் வழக்கினுமுள்ளது. ஆயினும், மற்றொரு பெயரும் இட்டு வழங்க விரும்பிய ஆசிரியர் நீதி நூற் பொருளைக் கூறலின், "நீதி சூடாமணி" என்று வேறொரு பெயரும் கூறினார். (உ)

ஆசிரியர் பெயரும் அவையடக்கமும்

பிறைசைவரு சாந்தப் பெயரவன்சோல் வெண்பா
குறையுளது நீக்கிக் குறையா - நிறைமொழியாச்
சோற்றமிழோர் கோள்வர் சுடரோனல் வேண்
பிறைதான்
உற்றமதி யாவதனை யோர்ந்து.

(இ - ள்.) வெண்பிறை - வெள்ளிய மூன்றாம்பிறைத் திங்கள், சுடரோனல் - கதிரவனால், உற்ற மதி ஆவதனை ஓர்ந்து - நிறைவுபெற்ற முழுத்திங்களாதலை ஆராய்ந்தறிந்து பிறைசைவரு சாந்தப் பெயரவன் - பிறைசை என்னும் ஊரில் தோன்றிய சாந்தக் கவிராயனாகிய நான், சொல் வெண்பா - பாடிய இரங்கேச வெண்பாவிலே, உளது குறை

நீக்கி - குற்றமாக உள்ளதனைத் தள்ளிவிட்டு, குறையா நிறைமொழியா - குறையில்லாத நிறைவுபெற்ற நூலாக, சொல் தமிழோர் கொள்வர் - புகழ்ப்பெறுகின்ற தமிழறி ஞர்கள் ஏற்றுக்கொள்ளுவார்கள்.

(வி - ம்.) பிறைசையில் தோன்றிய சாந்தக் கவிராயராகிய யான் பாடிய நூலிலுள்ள குற்றங்களை நீக்கிக் குற்றமில்லாத நல்ல நூலாகத் தமிழறிஞர்கள் ஏற்றுக் கொள்வார்க ளென்பதாம்.

பிறைசை என்பது பிறையாறு என்னுஞ் சொல்லின் மரூஉப் பெயர். பிறையாறு என்னும் ஊர் தஞ்சை மாவட் டத்தில் காரைக்காலுக்கு அண்மையில் உள்ளது. பிறைசைவரு என்றமையின் இந்நூலாசிரியர் இவ்வூரிலே பிறந்தவர் என்பது பெற்றும். வேறு ஊரில் இருந்து வந்தவரென்று கொள்ளாமோ வெனின் அவ்வாறு கொள்ளுதல் பொருத்தமன்று. சாந்தப் பெயரவன் சாந்தப்பன், அல்லது சாந்தலிங்கன் அல்லது சாந்த மூர்த்தி என இன்னோரன்ன பெயராகக் கொள்க. திங்களின் ஒளிக்கற்றைகளைக் கதிரவன் முழுத்திங்களுளிலிருந்து கவர்ந்தும் ஒன்றுபட்ட நாளிலிருந்து வழங்கியும் குறைவையும் நிறைவை யும் உண்டாக்குதலின் "சுடரோனல் வெண்பிறைதான் உற்ற மதியாவதனை ஓர்ந்து" என்றார். நூல் குறைத்திங்களுக்கும் சொற்றமிழோர் சுடரவனுக்கும்

உவமையாதல் காண்க. வெண்மை + பிறை = வெண்பிறை, நிலைமொழியின் ஈறு போயது. (௯)

---

# ௧. அறத்துப்பால்

## கடவுள் வாழ்த்து

1. சொன்னகம்பத் தேமடங்கல் தோன்றுதலா லன்பருளத்
தின்னமுத மாகும் இரங்கேசா !—மன்னும் அகர
முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

(இ - ள்.) *அன்பர் உளத்து இன் அமுதம் ஆகும் இரங்கேசா* - அடியார்களுடைய உள்ளத்தின் கண்ணே இனிய அமுதத்தைப்போல் இனிமையைச் செய்யும் அரங்கநாதக் கடவுளே!, *சொன்ன கம்பத்தே* - சொல்லப் பட்ட தூணினிடத்திலே, *மடங்கல் தோன்றுதலால்* மானிடமடங்கலாக நீ தோன்றியபடியினாலே, *மன்னும்* - நிலை பெற்ற,

எழுத்து எல்லாம் - உலகில் நிலைபெற்ற எழுத்துக்களெல்லாம், அகர முதல - அகரத்தை முதலாகக்கொண்டன; (அதனைப்போல) உலகு ஆதிபகவன் முதற்று - இவ்வுலக மானது ஆதிபகவனாகிய கடவுளை முதலாகக் கொண்டுள்ளது.

(வி - ம்.) அரங்கநாதனே ! சொல்லப்பட்ட தூணினிடத் திலே கூட நீ தோன்றியபடியினால் இவ்வுலகமானது கடவுளையே முதலாகக்கொண்டிருக்கின்றது என்பதாம். சொன்ன-சொல்லப் பட்ட. கம்பம் - தூண்.

## இரணியன் கதை

இரணியன் என்பவன் ஓர் அவுணன்; இவனுக்குப் பிரகலா தன் என்பவன் மகனாகத் தோன்றினான். இரணியன் தன் னுடைய ஆட்சியின் கீழ் வாழ்வார் அனைவருந் தன்னையே கடவு ளா கக் கொண்டு போற்றி வழிபடவேண்டுமெனவும், "இரணி 6
நீதி சூடாமணி

யாயகம :" என்பதையே அருமறையாகக் கொண்டு போற்ற வேண்டுமென்றும் சட்ட திட்டங்கள் செய்தான். அனைவரும் அவ்வாறே செய்து வந்தனர். ஆனால் பிரகலாதன் முற்பிறப்பின் நல்வினைப் பயனால் திருமாலையே கடவுளாகக் கொண்டு போற்றி

வழிபட்டான். இதனையறிந்த இரணியன் கடுஞ்சினங் கொண் டான். எவ்வளவோ வற்புறுத்திக் கூறியும் பிரகலாதன் இரணி யாய நம : என்று சொல்வதற்கு இணங்கவில்லை. இரணியன் பிரகலாதனைக் கொன்றுவிடுமாறு கட்டளையிட்டான். திருமால் காத்தபடியினால் பிரகலாதனைக் கொல்வதும் இயலாததாயிற்று. இதனால் வெகுண்ட இரணியன் பிரகலாதனைத் தன் முன் கொண்டுவரச் செய்தான். "நீ சொல்லுகிற திருமால் எங்கே யிருக்கிறான் ?" என்று உசாவினான். பிரகலாதன், "அவர் திருமால் இத் தூணிலும் இருப்பார் துரும்பிலும் இருப்பார். அவர் இல்லாத இடமே இல்லை" என்றான். சினங் கொண்ட இரணியன் தன்னெதிரே நின்ற தூணைச் சுட்டிக் காட்டி, "நீ சொல்லுகிற தூணிலுமிருக்கிறானா ?" என்றான். பிரகலாதன்
'இருக்கிறார்'' என்றான். அவ்வளவில் இரணியன் அத்தூணை எட்டி உதைத்தான். தூண் இரண்டாகப் பிளந்தது. அதி லிருந்து திருமால் மனித உடலும் அரிமாவின் தலையுமுடைய மானிட மடங்கலாகத் தோன்றினார். இரணியனுடைய வயிற்றைக் கிழித்து அவனைக் கொன்றார்.

## வான்சிறப்பு

2. கோண்டலுறை யூர்கச்சிக் கோநகரின்
செய்குணத்தால்

எண்டிசையும் போற்ற மிரங்கேசா
-மண்டிக்
கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற்
றாங்கே
எடுப்பதூஉ மெல்லா மழை.

(இ - ள்.) எண் திசையும் போற்றும இரங்கேசாஎட் டுத்திக்கிலுமுள்ளவர்களால் போற்றப் பெறுகின்ற அரங்கநாதக்கடவுளே!,



நகரில் - முகிழ்தவழும் உறையூரினும் சிறந்த காஞ்சிபுரத் தினும், செய்குணத்தால் - சிவபிரானுடைய செய்கையி னாலே, (மண்மாரிபெய்த தீமையும் பொன் மாரி பெய்த நன்மையும் உண்டாயின; ஆகையால்) மண்டி - நெருங்கி , கெடுப்பதும் - உலகத்துயிர்களைக் கெடுத்தொழிப்பதும், கெட்டார்க்குச் சார்வாய் - அவ்வாறு கெட்டவர்கட்குத் துணையாக, எடுப்பதும் - அளவாகப் பெய்து அவர்களைக் காப்பாற்றிவிடுவதும, எல்லாம் மழை - இவைகளையெல்லாஞ் செய்யவல்லது மழையேயாகும்.

(வி - ம்.) உலகத்துயிர்கட்குத் தீமையை உண்டாக்கக் கூடியதும் நன்மையை உண்டாக்கக் கூடியதும் மழையே என்பதாம். பெருந்திக்குகள் நான்கினோடு கோணத்திக்குகள் நான்கையுங் கூட்டி எண்டிசையு மென்றார். கெடுப்பதும் என்பதற்குப் பெய்யாமல் கெடுப்பதும் என்பதே உரையாசிரியர்கள் பலருடைய முடிவும் ஆகும். இந்நூலாசிரியர் கெடுப்பதும் என்பதற்கு மிகுதியாகப் பெய்து அழிவினை யுண்டாக்குவது மெனப் பொருள் கொண்டு இச் செய்யுளைப் பாடியுள்ளார்.

## மண்மாரிபெய்த கதை (க)

முனிவர் ஒருவர் தாயுமானவர் பொருட்டுப் பூம்பொழி லொன்று அமைத்து அதில் அரிய மலர்ச் செடிகளைப் பயிரிட்டு அம் மலர்களைக் கொண்டு இறைவனைப் போற்றிவந்தார். அம் மலரின்மீது அவாக் கொண்ட உறையூர் வேந்தன் மலரினைக் களவு செய்துவரச்செய்து அதனைத் தான் அணிந்து மகிழ்ந்தான்.

இதனை யுணர்ந்த முனிவர் உறையூர்மீது மண்மாரி பெய்து அழிக்குமாறு வசவுரை வழங்கினர். அவவாறே ஒருசாம நேரம் வரையில் உறையூரில் மண்மாரி பெய்ததால் அவ்வூர் அழிந்தது. இப்பொழுதுள்ள உறையூர் அப்பெயரோடு பிற்காலத்தில் உண்டாகியது.

## பொன்மாரி பெய்த கதை (உ)

*காஞ்சிமாநகரில் ஒருகாலத்தில் கொடிய வற்கட முண்டாகியது. அதனால் மக்கள் துன்புற்று வருந்தினர். அந்நகரில் இருந்த சிறு குழந்தையொன்று அவ்வற்கடத்தைப் போக்கியருள வேண்டுமென்று இறைவனை அன்போடு போற்றிவந்தது. அக் குழந்தையின் அன்புக் கிரங்கிய இறைவன் ஒரு முகூர்த்த காலம் வரை காஞ்சி மாநகரிற் பொன்மாரி பெய்யச் செய்தார். இதனால் எல்லோரும் வற்கடக் கொடுமையிலிருந்து விடுபட்டு நலமடைந்தனர்.*

## நீத்தார் பெருமை

3. மன்னன்மக முங்காதி மைந்தன் தனையடைந்
தோன்
இன்னுயிருங் காத்தான் இரங்கேசா!—சொன்னால்
உரனென்னுந் தோட்டியால் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்புக்கோர் வித்து.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதக் கடவுளே!, காதி மைந்தன் - விசுவாமித்திரமுனிவர், மன்னன் மகமும - அம்பரீடமன்னனுடைய மணிதவேள்வியையும், தனை அடைந்தோன் இன் உயிரும் - தன்னிடம் அடைக்கலம் புகுந்த*

தன்னுடைய தமக்கை மகனாகிய சுனசியன் என்பவனுடைய இனிய உயிரையும், காத்தான் - முன் னாளிலே அழியாமல் காப்பாற்றினார், ஆகையால், சொன்னால் - உரைக்குமிடத்து, உரன் என்னும் தோட்டி யால் - அறிவு என்னும் அங்குசத்தினாலே, ஓர் ஐந்தும் காப்பான் - ஒப்பற்ற ஐம்பொறிகளாகிய யானைகளைந்தையும் காத்துக் கொள்பவன், வரன் என்னும் வைப்புக்கு ஓர் வித்து- மேன்மையானது என்று கூறும் வீட்டுநிலத்திற்கு ஒப்பற்ற விதையைப் போன்றவனாவன்.



(வி - ம்.) ஐம்பொறிகளையும் அடக்கிய விசுவாமித்திர முனிவர் அரசனுடைய வேள்வியையும் தன்னையடைந்த சிறுவ னுடைய உயிரையுங் காப்பாற்றினார். ஆகவே திண்ணிய அறிவினையுடையவன் வீடுபேறு என்னும் நிலத்திற்கு ஒரு விதையைப் போன்றவனாவான் என்பதாம்.

மன்னன்மகம் - அம்பரீடனுடைய மனித வேள்வி.

## சிறுவனைக் காத்த கதை

அம்பரீடன் என்னும் பெயரினையுடைய அரசன் ஒருவன் முன்னாளிலிருந்தான். அவன் ஒரு பயனை

விரும்பி மனிதவேள்வி யொன்றைச் செய்யத் தொடங்கினன். மனிதவேள்வி எனின் அதற்கு மனிதர்களைப் பலிகொடுத்துச் செய்தல் வேண்டும். அம்பரீடன் வேண்டிய பொருளைக் கொடுத்து வேள்விக்குத் தக்க சிறுவனை விலைக்கு வாங்கி வருமாறு ஏற்பாடு செய்தான். விலைக்கு வாங்கச் சென்றவர்கள் பலவிடங்களினுந் தேடி முடிவில் விசுவாமித்திரருடைய தமக்கை கௌசிகி என்பவளிடத்திற்குச் சென்றார்கள். கௌசிகியின் கணவர் பெயர் இரிசித முனிவர். "இவர்களிடம் இருந்த மூன்று பிள்ளைகளில் ஒன்றை வேள்விக்குக் கொடுத்தால் வேண்டிய அளவு பொருள் கொடுக்கிறோம்" என்று சொன்னார்கள். பிள்ளைகளினுடைய தாய் கடைசிப் பிள்ளையினிடத்தில்தான் அதிக அன்பு வைத்திருந்தபடியினால் கடைசிப் பிள்ளையைக் கொடுக்க முடியாது என்றாள். தந்தையாகிய இரிசித முனிவர் மூத்த பிள்ளையினிடத்தில் எனக்கு அன்பு அதிகமாகையால் நான் அதனைக் கொடுக்க மாட்டேன் என்று கூறினார். பிறகு இருவரும் முடிவு செய்து நடுப்பிள்ளையை விற்று விடுவதாகச் சொன்னார்கள். பொருளை வாங்கிக் கொண்டு அப்பிள்ளையைக் கொடுத்து விட்டார்கள். பையனை வேள்விக்கு அழைத்துச் சென்றபொழுது ஓரிடத்தில் விசுவாமித்திர முனிவர் தம்முடைய தமக்கையின் மகனைக் கண்டார். நிகழ்ந்த செய்திகளை உசாவினார். அருமறை ஒன்றை அச்சிறுவனுக்குரைத்தார். "நீ சிறிதும் அஞ்சாமல் இம்மறையை

உருவேற்றிக் கொண்டிருப்பாயானல் உன்னுடைய உயிருக்கு எத்தகைய துன்பமும் ஏற்படாது" என்று கூறினர். சிறுவனும் 10 நீதி
சூடாமணி

அவ்வாறே உருவேற்றினன். அதனல் அவனுடைய உயிர் தப்பியது. மனிதவேள்வியும் இனிது நிறைவேறி அரசன் விரும்பிய பலனைக் கொடுத்தது.

அறன்வலியுரைத்தல்

4. கானக் குரங்கெழலால் கங்கை சுதன்முதலோா
ஈனப் படலால் இரங்கேசா - ஆன
அறத்தினூஉங் காக்கமு மில்லை யதனை மறத்தலி
னூஉங்கில்லை கேடு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, கானம் குரங்கு எழலால் - காட்டில்வாழுங் குரங்குகள் வெற்றிபெற்று விளங்கிய காரணத்தினலும், கங்கை சுதன்முதலோர் - கங்காதேவியின் மகனகிய வீடுமர் முதலானபேர்கள், ஈனபடலால் - போரில் வெற்றி குன்றி இழிவடைந்த காரணத்தினலும், ஆன - எல்லோருக்கு ம் பொருந்தியதான, அறத்தின் ஊங்கு - அறத்தைப் பார்க்கினும்,

ஆக்கமும் இல்லை - செல்வமுங் கிடையாது, அதனை மறத்தலின் - அவ்வறத்தினை மறந்துவிடுவதைப பார்க்கினும, கேடு இல்லை - தீமைபயக்கக்கூடியதும் இல்லை.

(வி - ம்.) குரங்குகள் வெற்றி பெற்று விளங்கிய படியினாலும் வீடுமர் முதலானோர் இழிவடைந்த படியினாலும், ஒருவனுடைய வாழ்க்கைக்கு அறத்தைவிட நன்மையானதும் இல்லை ; அவ்வறத்தை மறப்பதைவிடக் கெடுதியானதும் இல்லை என்பதாம். கானக்குரங்கு - காட்டிலே திரியுங் குரங்குகள். எழல் - வெற்றிபெற்றுச் சிறப்படைந்து விளங்குதல். ஈனப் படுதல் - இறந்தொழிதல்.



## இராவணன் கதை (க)

இராவணன் அறத்தை மறந்து மறத்தையே மிகுதியாகச் செய்துகொண்டு திரிந்தான். பிறன் மனைவியைக் கவர்தல் கேடு பயப்பதாம் என்பதையும் எண்ணுதவனாய் இராமபிரானுடைய வாழ்க்கைத்துணைவியையுங் கவர்ந்துகொண்டு சென்றான். காட்டிலே திரிந்த இராமபிரானுக்குப் படை, படைக்கலங்கள் முதலியன இல்லாதொழியினும் அவருக்கு அறமே துணையாக நின்றது. அவர் காடுகளில் திரிந்து கொண்டிருந்த குரங்குகளைத் திரட்டிக்கொண்டு

போருக்குச் சென்று இராவணனைக் கொன்றொழித்தார். இராவணனுக்குப் படைக்கலங்களும் துணைப் படைகளும் அளவற்றனவாக இருந்தும் குரங்குப் படைகளை வெல்ல முடியவில்லை. குரங்குப் படையே அறக்கட வுளான திருமாலைச் சார்ந்து நின்றமையின்
லாயின.
வெற்றி பெற்றுப் புகழுடைய

## துரியோதனன் கதை (உ)

துரியோ தனன் அறநெறியை மறந்துவிட்டு மறநெறியி லேயே தன்னுடைய கருத்தைச் செலுத்திக் கொண்டு திரிந்தான். பிறர்க்குக் கேடு புரிதல் பிறன்மனையைக் கவர்தல் முதலிய தீச் செயல்களே அவனுடைய குறிக்கோளாக இருந்தன. இதனல் அனைவரும் துரியோதனனைப் பொல்லாதவனென்று தூற்றியிகழ்ந்து நின்றனர். சூதாடுதல் பிறர் மனை கவர்தல் முதலியவைகளை மேற் கொண்ட இவனைக் கொன்றொழிக்க வேண்டியது கட்டாயமாயிற்று. தருமன் அறமே வடிவமானவன். மறந்தும் தீயநெறியில் செல்லாதவன். இருவருக்கும் போர் நேரிட்டபொழுது குலப்பெரியோர்களாகிய வீடுமர் முதலியோர் அறத்தின் பக்கமாக நில்லாமல் அறத்தை மறந்த தீயோனுகிய துரியோதனன் பக்கத்தில் துணையாக நின்றமையின் இறுதியில் மாண்டு இழிவடையலாயினர்.

## இல்லறவியல்

5. பத்துடனுன் கில்லம் பரகதிகோண் டேகினுன்
இத்தலமே லாள்வான் இரங்கேசா - நித்தம்
இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளேல்லாந் தலை.

(இ - ள்.) *இரங்கேசா-அரங்கநாதப் பெருமாளே !, இ தலம் மேல் ஆள்வான் - இந்நிலவுலகத்திலே கஞ்சனூர் ஆழ்வார் என்பவர், பத்துடன் நான்கு இல்லம - தன் வீட்டிற்கு இருபுறங்களினுமுள்ள பதினுன்கு வீட்டில் உள்ளவர்களையும், பரகதி கொண்டு ஏகினுன் - பரம பதத்திற்கு அழைத்துக்கொண்டு சென்ருர்; ஆகவே, நித்தம் - நாள்தோறும் இயல்பினுல் - இல்வாழ்வுக் கேற்ற முறைப்படி, இல்வாழ்க்கை வாழ்பவன் என்பான் - இல் வாழ்க்கையை மேற்கொண்டொழுகுவபன் என்று சொல்லப் பெறுவோன், முயல்வாருள் எல்லாம் தலை - வீடுபேற்றின்*

பொருட்டு முயற்சி செய்கின்ற எல்லோருள்ளுந் தலைசிறந்தவனாவான்.

(வி - ம்.) கஞ்சனூர் ஆழ்வார் என்பவர் தாம் சீரிய முறை யில் இல்வாழ்க்கையை மேற்கொண்டிருந்தபடியினால் பக்கத்தி லிருந்த பதினான்கு இல்லத்தினரையும் பரமபதத்திற்கழைத்துச் சென்றார். ஆதலின் முறைப்படி இல்வாழ்க்கையை நடத்து இறைவன் வீடுபேற்றின் பொருட்டுத் தவஞ் செய்வார் அனைவரினுந் தலைசிறந்தவனாவான்.

## கஞ்சனூர் ஆழ்வார் கதை

கஞ்சனூர் ஆழ்வார் என்பவர் கஞ்சனூரிலே விளங்கி யிருந்தார். இவர் திருமாலடிக்கே பெருமால் கொண்டவராய்க் மூலமும் உரையும்



கருமுகில் வண்ணனை நாளும் போற்றினார். தம்மைப் பரமபதத்திற்கழைத்துக் கொள்ள வேண்டுமென்று நாளும் வேண்டினார். திருமாலன்பிற் சிறந்து விளங்கிய இவர் இல்லந் துறந்து காடு கட்குச் சென்று தவஞ் செய்யவில்லை. இல்லறத்தை முறைப்படி

*இனிது நடத்திக்கொண்டு இல்லறத்திலிருந்தவாறே தமது சொல்லறத்தை நாளும் நல்லறமாகப் புரிந்து கொண்டிருந்தார்.*
*இவருடைய சீரிய பண்பாட்டினைக் கண்ட நெடுமால் இவர் முன்*
*தோன்றி "அன்பனே! உன் அன்புக்கு மகிழ்ந்தாம். வருக பரம பதத்திற்கு" என்று அழைத்தார். இவருக்குப் பக்கத்தில் வாழ்ந் திருந்த இல்லத்தினர் இவர்மீது அன்புடையவர்களாக இருந் தனர். ஆகவே இவர் தம்மோடு அவர்களையும் பரமபதத்திற்கு அழைத்துக்கொண்டு செல்ல விரும்பினார். தம்முடைய விருப் பத்தைத் திருமாலிடம் அறிவித்தார். மாலவனும் "அவ்வாறே யாகுக" என்று கூறி அருள் புரிந்து அவர்களையும் பரமபதத் திற்கு அழைத்துச் சென்றார்.*

## வாழ்க்கைத்துணை நலம்

**6. மாண்டவியர் சாபத்தை வல்லிருளால் மாற்றினாள்**

> ஈண்டோர் மடந்தை இரங்கேசா - நீண்டபுகழ்ப்
> பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
> திண்மையுண் டாகப் பெறின்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, ஈண்டு - இவ்வுலகில், ஓர் மடந்தை -*

ஒரு பெண்ணாகிய நளாயனி, மாண்டவியர் சாபத்தை - மாண்டவிய முனிவருடைய தீமொழியை, வல் இருளால் மாற்றினள் - கொடிய இருளினாலே போக்கிக் கொண்டாள்; ஆதலின், கற்பு என்னும் - கற்பு என்று சொல்லப் பெறுகிற, திண்மை உண்டாகப் பெறின்-சிறப்பானது அமைந்திருக்கப் பெற்றால், நீண்டபுகழ் - மிகுந்த புகழினையுடைய, பெண்ணின் - 14 நீதி

சூடாமணி

பெண்ணைப் பார்க்கினும், பெருந் தக்க-பெரிய தகுதியை உடையன, யா உள - எவையிருக்கின்றன ?

(கருத்து.) நளாயனி என்பவள் மாண்டவிய முனிவருடைய தீமொழியைத் தன்னுடைய சொல்லால் போக்கிவிட்டாள். ஆகவே கற்புநலமமைந்த பெண்ணைப் பார்க்கினும் இவ்வுலகிலே அடையத் தக்க சிறந்த பொருட்கள் எவையுள்ளன என்பதாம்.

மாண்டவியர் - இவர் ஆணி மாண்டவியர் என்னும் பெயரை யுடையவர். வல்லிருளால் - கதிரவன் தோன்றாதிருக்குமாறு செய்து எங்கும் இருளே நிறைந்திருக்கும்படி செய்த தன்மையினால்.

# நளாயனி கதை

நளாயனி என்பவள் நளாயணன் என்பவனுடைய மகள். இவளை மௌத்கல்யர் என்னும் முனிவர் திருமணஞ் செய்து கொண்டார். அம்முனிவர் இம்மாதின் கற்பின் திண்மையை ஆராய்ந்து பார்க்க எண்ணினார். தொழுநோய் கொண்டவராய்த் தம்முடைய உடலை வெறுக்கத் தக்க விதத்தில் நளாயனிக்குக் காட்டினார். தாம் புனித நீராட வேண்டுமென்று இவளிடங் கூறினார். இவள் அவரை ஒரு கூடையில் வைத்துத் தூக்கிக் கொண்டு பலவிடங்கட்குஞ் சென்றாள். ஒருநாள் ஒரு தாசியைத் தழுவவேண்டுமென்று கூறினார். இவள் ஒருதாசிக்கு வேண்டிய பணி செய்து அவளை உடன்படுத்தி இவரைத் தூக்கிக் கொண்டு இருளில் ஒரு சோலை வழியாகச் சென்றாள். சென்ற வழியில் மாண்டவிய முனிவர் என்னும் பெயருடைய முனிவர் ஒருவர் பழவினையின் பலனாகக் கழுவிலேற்றப்பட்டிருந்தார். இவள் இருளில் தன்னுடைய கணவனைக் கூடையில் வைத்துத் தூக்கிக்கொண்டு சென்றமையின் அம்முனிவர் கழுவேற்றப்பட்டிருந்தலை யுணராளாய்த் தன் தலைமீது இருந்த கூடை அவர்மீது இடிக்குமாறு சென்றாள். இதனால் அம்முனிவருடைய துன்பம் அதிகமாயிற்று. சினங்கொண்ட அவர் இவள் ஒரு பெண் என்பதை உணர்ந்துகொண்டு,நீ பொழுது விடிந்தவுடன் மங்கல

விழக்கக் கடவாய்" என்று வசவுரை கூறினர். இதனைக் கேட்ட நளாயனி, "அவ்வாறாயின் பொழுது விடியாதொழியக் கடவது" என்று தானுமொரு தீமொழி பகர்ந்தாள். இவளுடைய கற்புத் திண்மையால் மறுநாள் கதிரவன் புறப்படவில்லை. உலகத்துயிர்கள் நிலை கலங்கின. தேவர்கள் இவளிடம் வந்து பொழுது விடியச் செய்யவேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். இவள் மாண்டவியருடைய வசவுரையைக் கூறிப் பொழுது விடிந்தால் தான் மாங்கலியமிழக்குமாறு நேரிடுமென்றாள். பிறகு தேவர்கள் வேண்டுகோட்படி மாண்டவியர் வசவுரையை மாற்ற இவளுந் தன்னுடைய வசவுரையை மாற்றிப் பொழுது விடியுமாறு செய்தாள்.

## புதல்வரைப்பெறுதல்

7. வேதம் புகழ்நதியை மேதினியிற் றந்துகுலத்
தேதங் கெடுத்தா னிரங்கேசா - ஓதும் எழுபிறப்புந்
தீயவை தீண்டா பழிபிறங்காப் பண்புடை மக்கட்
பேறின்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே! வேதம் புகழ் நதியை - மறைகள்

புகழ்ந்து கூறும் விண்ணகக் கங்கையை, மேதினியில் தந்து - நில வுலகத்திற்குக் கொண்டுவந்து, குலத்து ஏதம் கெடுத்தான்- தன்னுடைய முன்னோர்கட்கு உண்டாகிய நிரயத் துன்பத்தைப் பகிரதன் தீர்த்தான்; பழி பிறங்கா - தீச் சொல் அடையப்பெறாத, பண்பு உடை மக்கள் பெறின்- நல்ல தன்மை பொருந்திய பிள்ளைகளைப் பெற்றால், ஓதும்- சொல்லபபெறும், எழுபிறப்பும் - எழுபிறப்புக்களிலேயும், தீயவை தீண்டா - தீவினைகள் நெருங்கமாட்டா.

(வி - ம்.) பகீரதன் என்பவன் விண்ணகக் கங்கையாற்றை மண்ணுலகிற்குக் கொண்டுவந்து தன் குலத்தவர்களுடைய 16 நீதி சூடாமணி

குற்றங்களையெல்லாம் போக்கினான். பழியில்லாத நன் மக்களைப் பெற்றால் அவ்வாறு பெற்றவர்கட்கு மேல்வருகின்ற எழு பிறப்புக்களினும் தீவினைகள் அணுகமாட்டா என்பதாம். கங்கையினுடைய புகழ் மறைகளினுங் கூறப்பட்டிருத்தல் பற்றி, "வேதம் புகழ் நதி" என்றார்.

## பகீரதன் கதை

கதிரவன் குலத்தில் தோன்றிய சகரமன்னன் குதிரை
வேள்வியொன்று செய் யத் தொடங்கினன். வேள்விக்
குதிரையை உலக வலஞ்செய்தற்கு அனுப்பினன். சகரனுடைய
மக்கள் அறுபதினுயிரவர் குதிரையைப் பின் தொடர்ந்து அதற்குக் காவலாகச் சென்றனர். இந்திரன் இந்த வேள்விக்கு இடையூறு செய்து இதனை இடையே கெடுத்துவிடவேண்டும் என்று எண்ணினன். குதிரையைக் கொண்டு போய்ப் பாதாள உலகில் தவஞ்செய்து கொண்டிருந்த கபில முனிவருடைய இருப் பிடத்திற் கட்டிவிட்டுப் போய்விட்டான். குதிரையைப் பல விடங்களினும் தேடிக்கொண்டு சென்ற சகரர்கள் பாதாள உலகையடைந்து குதிரையைக் கண்டனர். அம்முனிவரே குதிரையைக் கொண் டுவந்து கட்டிவைத்திருக்கிருர் என்று மாறுபாடாக எண்ணிக் கபிலரை வம்புக் கிழுத்தனர். கபிலர் வெகுண்டு கண்ணைத் திறந்து பார்த்தார். சகரர் அறுபதினு யிரருங் கபிலருடைய சினத்தீயால் அழிந்தொழிந்தனர். இவர்கள் குதிரையைத் தேடிக்கொண்டு பாதலஞ் சென்றபொழுது தோன்றியதுதான் - கடல் (சாகரம்) என்பர். (சகரரால் தோண்டப்பட்டது சாகரம்.) பிறகு வெகு காலத்திற்குப்பின் இந்தச் சகரர்களுடைய குலத்திலே பகீரதன் என்பவன் தோன் றினன். அவன் தன்னுடைய முன்னோர்களைப்பற்றிய செய்திகளை

யெல்லாம் உசாவியறிந்தான். தன்னுடைய முன்னோர்களை நற் கதியிற் சேர்க்க வேண்டுமென்று எண்ணிய பகீரதன் சிவபெருமானை நோக்கி நெடுங்காலந் தவஞ் செய்து கங்கையை இவ்வுலகத்திற்குக் கொண்டு வந்து தன்னுடைய முன்னோர்களின் எலும்பிலே விழுமாறு செய்து அவர்களனைவரும் நற்கதியை அடையுமாறு செய்தான். பழியற்ற மக்களைப் பெற்றால்



இமைகளனைத்தும் அழிந்தொழியு மென்பது பகீரதனிடத்தில் நன்கு விளங்கியது.

அன்புடைமை

8. வெற்பின் சிறகரிய வெங்கேன் பளித்துமுனி
இப்புவியைக் காத்தான் இரங்கேசா - நற்புகழாம்
அன்பிலா ரெல்லாம் தமக்குரிய ரன்புடையார்
என்பு முரியர் பிறர்க்கு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, வெற்பின் சிறகு அரிய - இந்திரன் மலைகளினுடைய சிறகுகளை அரியுமாறு, முனி - ததிசிமுனிவர், வெங் என்பு அளித்து - தம்முடைய முதுகெலும்பைக் கொடுத்து, இ புவியை காத்தான - இவ்வுலகத்தைக் காப்பாற்றினன்;

நல் புகழ் ஆம் - நல்ல சீர்த்தியைத் தரத்தக்கதாகிய, அன்பு இலார் - அன்பில்லாதவர்கள், எல்லாம் தமக்கு உரியர் - எல்லாப் பொருள்களையுந் தங்களுக்கே உரிமை வுடையதாக எண்ணுவார்கள்; அன்பு உடையார் அன்பாகிய சீரிய பண்பினையுடையவர்களோ, என்பும் பிறர்க்கு உரியர் - மற்றவர்கட்குத் தங்களுடைய என்பையும் உரிமையுடையதாகச் செய்வார்கள்.

(வி - ம்.) மலைகளின் சிறகையரிவதற்குத் ததீசி முனிவர் தம்முடைய முதுகெலும்பையு மீந்து இவ்வுலகைக் காத்தார்.

மற்றவர்களிடத்திலே அன்பற்றவர்கள் எல்லாப் பொருள்களும்

தங்களுக்கே உரிமையானவை என்று எண்ணுவார்கள்,

அன்புடையவர்களோ தம்முடைய எலும்பும் பிறருக்கு உரிமை

யாகத்தக்கது என்று எண்ணுவார்கள் என்பதாம்.

## ததீசி முனிவர் கதை

முன் ஒரு காலத்திலே அரக்கர்கள் பறந்து செல்லக்கூடிய

மலைவடிவங்களை யெடுத்துக்கொண்டு பெரிய பெரிய நகரங்

களின் மீது பறந்து சென்று அவைளின் மீது விழுந்து அவைகளை யெல்லாம் பாழாக்கித் திரிந்தனர். இதனுற் பல நகரங்கள் அழிந்து தொலைந்தன. இந்திரன் இம் மலைகளின் சிறகையரிந்து அவைகளை வீழ்த்தினன். இடையே அவனுடைய வச்சிரப் படை முறிந்தொழிந்தது. மீண்டும் அப்படையினைச் செப்பனிடுதற்கு ஏற்ற வலிமையான பொருள் அகப்படவில்லை. பாற்கடல் கடையச் சென்ற காலத்தில் தேவர்களும் அரக்கர்களும் பிறருந் தங்களுடைய படைக்கலங்களைத் ததீசி முனிவ ரிடம் வைத்துவிட்டுச் சென்றனர். நெடுங்காலமாகியும் அவர்கள் மீளவுஞ் சென்று தம்முடைய படைக் கலங்களைத் திரும்பப் பெருத படி யினுலே அம்முனிவர் அப் படைக்கலங்களையெல்லாம் விழுங்கிஞர். அவைகள் ஒன்ருகத்திரண்டு அம்முனிவருடைய முதுகெலும்பாக அமைந்து நின்றது. வச்சிரப்படையை மீண்டும் புதுப்பித்தற்கு இவ்வெலும்பே ஏற்றதென்று பலருங் கூறினமை யின் இந்திரன் அம்முனிவர்பாற் சென்று அவருடைய முது கெ லும்பை இரந்தான். அம்முனிவரும் அதனை மருது வழங்கி ஞர். இந்திரன் அதனைக்கொண்டு தன்னுடைய வச்சிரப்படையைப் புதுக்கி மலைகளை யெல்லாம் வென்று வீழ்த்தினன். மற்றவர்களிடத்திலே அன்புடையவர்கள் தம்மு

டைய எலும்பையும் பிறருக்கு வழங்குவார்களென்பது ததீசி முனிவர் செயலால் நன்கு விளங்கியது.

### விருந்தோம்பல்

9. தேசுபெறு மாறன் தெளித்த முளையமுதிட்
டீசனுடன் போந்தா னிரங்கேசா — பேசுங்கால்
செல்விருந் தோம்பி வருவிருந்து
பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, தேசு பெறு மாறன் - புகழ் பெற்ற இளையான்குடி மாற நாயனார், தெளித்த முளை அமுது இட்டு - விதைத்த நென் முளையை உணவாக்கிப் படைத்து, ஈசனுடன் போந்தான - சிவபெருமானோடு சிவலோகஞ் சென்று



வாழ்ந்தார், பேசுங்கால் - கூறுமிடத்து, செல்விருந்து ஓம்பி - அடைந்த விருந்தினர்கட்கு உணவிட்டு அவர்களைப் போற்றி, வரு விருந்து பார்த்திருப்பான் - மேலும் வருகிற விருந்தினரை

எதிர்பார்த்துக் கொண்டிருப்பவன், வானத்தவர்க்குவிண்ணுலகத்தில் இருப்பவர்கட்கு, நல்விருந்து - நல்ல விருந்தினனாவான்.

(வி - ம்.) இளையான்குடி மாறநாயனார் விதைத்த நெல் முளையை உணவாக்கி இறைவனுக்குப் படைத்து அவரோடு சிவலோகத்திற்குச் சென்றார்; சென்ற விருந்தினர்கட்கு உண வளித்துப் போற்றி மேலும் தன்னிடம் வரும் விருந்தினர்களை எதிர்நோக்கியிருப்பவன விண்ணுலகத்திலுள்ளார்கட்கு நல்ல விருந்தினனாவனென்பதாம். இளையான்குடி மாறரின் புகழ் பிற்றை நாளில் யாண்டும் பரவி விளங்கியபடியால் தேசுபெறு மாறன் என்றார். முளை அமுது - முளைக்கும் நிலையிலிருந்த நெல்லாற் சமைக்கப்பட்ட உணவு.

## இளையான்குடிமாறர் கதை

இளையான்குடி மாறநாயனார் என்பவர் பாண்டி வளநாட்டில் இளையான்குடி என்னும் ஊரில் கற்பிற் சிறந்த காரிகை நல்லாளொடு இல்லறத்தை இனிது நடத்திக்கொண்டிருந்தார். அடியவர்கட்கு உணவிடும் பணியே இவரிடந் தலைசிறந்த பணியாக விளங்கியது. இவரை யாட்கொள்ள விரும்பிய பரமன் இவருக்கு வறுமையை வழங்கினார். மிகுதியான வறுமையில் வருந்தியிருக் கும் நாளில் தாமொரு

சிவனடியாராகத் திருக்கோலம் பூண்டு மழை பெய்யும் நாள் இரவிலே மாறர் மனையை அடைந்தார். "பசியுடையேம், உணவிடுக" என்றார். மாறர் அடியவர் நிலைகண்டு மனங் கலங்கினார். உணவுக்கு யாது மில்லையே என்று உள்ளம் வருந்தினார். பிறகு காரிகையின் கட்டுரைப்படி காரிருளில் கழனியை நோக்கிச் சென்றார். அன்று பகலில் விதைத்த நெல் மழையின் மிகுதியால் தண்ணீர்மீது



மிதந்து கொண்டிருந்ததனைக் கூடையில் வாரிவந்து இல்லக் கிழத்தியிடம் ஈந்தார். அவர் வறுத்துப் பதமாக்கி யரிசியாக்கிச் சோறாக்கிக் கீரைக்கறியோடு பரமனுக்குப் படைத்தார். இவ் வகையிலேனும் இவ்வடியார்க் குணவிடும் பேறுகிட்டியதே என்று உளம் மகிழ்ந்தார். பரமன் தமது திருக்கோலத்தை மாறர்க்கும் மனைவிக்கும் காட்டினார். இருவரையும் உடன் கொண்டு சென்றார். இவ்வுலகில் விருந்தினரைப் போற்றி இவ் வாறு உணவிடும்பணியைப் புரிந்த மாறர் சிவலோகத்துக்கே விருந்தாளியானார்.

### இனியவை கூறல்

**10.** வன்சமர்நட் பால்வென் று மாநிலமா
ளத்தருமன்
இன்சொல்லாற் பெற்றான் இரங்கேசா - பொன்செய்
நயனின்று நன்றி பயக்கும் பயனின்று

பண்பிற் றலைப்பிரியாச் சொல்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே ! தருமன் - தருமராசன், வன்சமர் - கொடிய பாரதப்போரை, நட்பால் வென்று - மற்ற அரசர்களிடஞ் செய்திருந்த நட்பின் உதவியினால் வெற்றி கொண்டு, இன் சொல்லால் அவர்களோடு பேசிய இனிய மொழிகளால், மாநிலம் ஆள பெற்றான் - நிலவுலக அரசாட்சியைப் பெறறான்; பயன் ஈன்று - பிறர்க்குப் பயனைக் கொடுத்து, பண்பில் தலை பிரியாசொல் - நற்பயனாகிய குணத்திலிருந்து வேறுபடாத மொழி, பொன்செய் - செல்வத்தைக் கொடுக்கின்ற, நயன் ஈன்று - இன்பத்தைத் தந்து, நன்றிபயக்கும் - பிற நன்மைகளையும் உண்டாக்கும்.

(வி - ம்.) தருமராசன் இனிய மொழிகளைப் பேசிப் பிற அரசர்களோடு செய்திருந்த நட்பின் உதவியினால் நிலவுலக அரசாட்சியைப் பெற்றான். நல்ல பயனைக் கொடுக்கிற இனிய சொற்கள் இன்பத்தைக் கொடுத்துப் பிற நன்மைகளையும் உண்



டாக்கும் என்பதாம். வன்சமர் - கொடிய போர் ; துரியோதனன் தன்னுடைய செல்வாக்கைக் கொண்டு

படைகளை மிகுதியாகச் சேர்த்துக் கொடிய போர் செய்தானுகையால் வன்சமர் என்ருர். நட்புக்கு இன்சொல் இன்றியமையாததாகலின்; "நட்பால்; இன் சொல்லால்" என்ருர்.

## தருமர் கதை

பாண்டவர்கள் ஐவரில் தருமர் முதல்வர்; இவர் இளம் பருவம் முதற்கொண்டே நட்பினர் பகைவர் என்னும் எல்லோரிடத்திலும் இனிமையாகப் பேசுதலைக் கடைப்பிடித் திருந்தார். இவர் எவரிடத்தும் வன்மையாகப் பேசியதே இல்லை. தீய குணங்கட்கெல்லாம் இருப்பிடமாக விளங்கிய துரியோதனன் சூதாட்டத்திற்கழைத்து நாடு நகரம் முதலியவைகளைக் கவர்ந்துகொண்டு திரௌபதையின் ஆடையை உரிந்த பொழுதும் கூட வன்மொழி வழங்க அறியாராய்த் தம்முடைய தம்பிமாரையும் இன்சொல்லால் அடக்கிப் பொறுமையை மேற் கொண்டிருந்தார். இவரைக் காட்டிற்கு விரட்டிய துரியோதனன் இவர் இனி நாட்டிற்கு வராதபடி செய்து விடலாம் என்று எண்ணியிருந்த எண்ணம் பயன்படவில்லை. பாரதப் போர் மூண்டகாலத்தில் தருமருடைய இனிய மொழியில் முன்னரே பற்றுக் கொண்டிருந்த அரசர்கள் பலரும் இவருக்குத் துணையாக வந்து கூடினார்கள். இதனுல் தருமர் எளிதாகப் போரை வென்று நிலவுலக ஆட்சியைப் பெற்ருர். இன்சொல்லால்

எல்லா நன்மைகளையும் எளிதிற் பெறலாம் என்பதை அனைவரும் இவரிடம் நன்கு உணர்ந்து கொண்டனர்.

## செய்ந்நன்றியறிதல்

11. நாடிச் சிறைக்கருடன் நாகக்
கொடுங்கணையை
ஈடழித்தா னன்றோ இரங்கேசா - நாடுங்கால்
செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்
வானகமு மாற்ற லரிது.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !,
சிறைக்கருடன் - சிறகுகளையுடைய கருடன், நாடி - இராம
பிரான் தன்னை எண்ணியதை உணர்ந்து, நாகக் கொடுங்
கணையை-நாகபாசமகிய கொடியகணையை, ஈடு அழித்தான்-
பெருமை கெடுமாறு செய்தான் அன்றோ ? ; நாடுங்கால் -
ஆராயுமிடத்து, செய்யாமல் செய்த உதவிக்கு - முன்னே

ஓர் உதவியுஞ் செய்யாமலிருக்க ஒருவன் தகுந்த சமயத்திலே செய்த உதவிக்கு, வையகமும் வானகமும் ஆற்றல் அரிது - இந்நிலவுலகத்தையும் தெய்வவுலகத்தையும் கொடுப்பினும் ஈடாதல் அரிதாம்.

(வி - ம்.) கருடன் இராமபிரான் தன்னை எண்ணியதை யுணர்ந்து நாகபாசத்தினுடைய கொடுமையை நீக்கினன். எண்ணிப் பார்க்குமிடத்து முன்னே ஓர் உதவியுஞ் செய்யாம லிருக்க ஒருவன் கைம்மாறு கருதாது செய்த உதவிக்கு ஈடாக நிலவுலகத்தையும் விண்ணுலகத்தையும் ஈடாகக் கொடுப்பினும் ஒப்பாகமாட்டா என்பதாம். நாகக் கொடுங்கணை - இந்திரசித்து விட்ட நாகபாசம். ஈடு அழித்தல் - பெருமை கெடுமாறு செய்தல்.

கருடன் கதை

இராமபிரானுக்கும் இராவணனுக்கும் போர்மூண்டது. இராவணன் மகனாகிய இந்திரசித்து நாகபாசக்கணையைச் செலுத்தி இலட்சுமணரையும் பிறரையும் மூர்ச்சையடையச் செய்தான். எல்லோரும் மூர்ச்சையடைந்ததைக் கண்ட இராம பிரான் கருடனை நினைத்தார். கருடன் உடனே போர்க்களத்திற்கு வந்து விண்ணிற் பறந்து திரிந்தான். அவனுடைய சிறைக் காற்றால் நாகபாசத்தின் ஆற்றல்

அழிந்தொழிந்தது. இலட்சுமணன் முதலியோர் உறங்கி விழித்தவர்களைப் போல் மூர்ச்சை தெளிந்து எழுந்தார்கள். இராமபிரான் கருடனுக்கு முன்னால் எத்தகைய உதவியுஞ் செய்யாதிருக்கவும் எண்ணிய அளவில் கருடன் விரைந்து வந்து செய்த உதவி செய்யாமற் செய்த உதவியாயிற்று.



## நடுவுநிலைமை

12. வேதவிதி வீமா விலங்கிற் குடற்பாதி ஈதலழ
கென்ருன் இரங்கேசா - ஓதுங்கால் நன்றே தரினு
நடுவிகந்தா மாக்கத்தை அன்றே ஒழிய விடல்.

(இ - ள்.) இரங்கேசா-அரங்கநாதப்பெருமாளே!, வீமா- வீமனே !, விலங்கிற்கு - புருடா மிருகத்திற்கு, உடல்பாதி-உன்னுடைய உடலில் பாதிப்பகுதியை, ஈதல் - கொடுத்தல், வேதவிதி அழகு என்ருன் - மறைமுறைக்கு ஏற்ற அழகான செயலாகுமென்று கூறினன் தருமன்; ஓதுங்கால் - கூறுமிடத்து, நன்றே தரினும் - நன்மையையே கொடுத்தாலும, நடுவு இகந்து ஆம் ஆக்கத்தை - நடுவுநிலைமையில் நீங்கிய படியால் உண்டான செல்வத்தை, அன்றே ஒழியவிடல்-அப்பொழுதே நீங்குமாறு விட்டுவிடுக.

(வி - ம்.) தருமர் தம்முடைய தம்பியாகிய வீமனைப் பார்த்து, "வீமனே! உன்னுடைய உடலில் பாதியைப் புருடா மிருகத்திற்குக் கொடுப்பது அறநெறிக்கேற்ற முறையாகுமென்று முடிவு கூறினர். நன்மையையே கொடுப்பினும் நடுவு நிலைமையில் நீங்கியபடியால் உண்டாகுஞ் செல்வத்தை அப்பொழுதே ஒழியுமாறு விட்டிடுக என்பதாம். புருடாமிருகம் - விலங்குருப்பும் மக்களுருப்புங்கொண்ட ஒருவகைப் புதுமை யான மிருகம்.

## தருமர் கதை

இராசசூய வேள்வி செய்யத் தொடங்கிய தருமர் வேள்விச் சாலையைத் தூய்மைப் படுத்தற்பொருட்டு அந்நாளில் வாழ்ந்திருந்த புருடாமிருகத்தை அழைத்து வருமாறு வீமனை அனுப் பினர். அவன் சென்று அதனைக் கூப்பிட்டான். அவ் விலங்கு வீமனைப் பார்த்து, "நான் உன் பின் வருவேன். உனக்கும் 24



எனக்கும் இடையில் நாற்காத தொலை இருக்கவேண்டும். இத் தொலை குறைந்தால் நான் உன்னைப் பிடித்துக் கொன்று தின்று விடுவேன். இஃது உனக்கு உடன்பாடா ?" என்று கேட்டது. வீமன் அதற்கு இணங்கினன். வீமன் நான்கு காத தொலை சென்ற பிறகு புருடாமிருகம் தன்னிருப்பிடத்தை விட்டுப் புறப்பட்டது. அவ் விலங்கு திருக்கோயில் கண்ட

இடங்களி லெல்லாம் சிவபூசை செய்து செல்லும் வழக்கமுடையது. முன்னால் சென்ற வீமன் திரும்பிப் பார்த்தான். விரைந்த நடையினையுடைய புருடாமிருகந் தன்னை நெருங்கிவிட்டதைப் பார்த்தான். ஒரு கல் எடுத்துப் போட்டுத் தன்னுடைய ஆற்றலால் திருக்கோயில் ஒன்றை ஏற்படுத்திவிட்டுச் சென்றான். விரைந்து வந்த புருடாமிருகம் திருக்கோயிலைக் கண்டு இறைவழிபாடு முதலியவைகளைச் செய்து கொண்டு புறப்பட்டது. அதற்குள் வீமன் நெடுந் தொலை சென்றுவிட்டான். சிறிது நேரத்தில் புருடாமிருகம் வீமனை நெருங்கிவிட்டது. வீமன் முன்போற் செய்து சென்றான். புருடாமிருகமும் பூசை முதலியன முடித்துச் சென்றது. இவ்வாறே இருவருஞ் செய்துகொண்டு சென்றனர். இறுதியில் புருடாமிருகம் வீமன் தன்னுடைய எல்லையில் ஒரு காலும் அவனுடைய எல்லையில் ஒருகாலுமாக இருக்கும்போது வீமனைப் பிடித்துக் கொண்டு, "பிடித்துவிட்டேன்" என்றது. வீமனோ, "என்னுடைய எல்லையில் அடிவைத்து வென்று விட்டேன் " என்றான். இருவருக்குஞ் சொற்போர் மூண்டது. பிறகு தருமன் சொற்படி செய்வதென முடிவு செய்து அவனிடம் போய்ச் செய்தியைக் கூறினர். தருமன் நன்றாக ஆராய்ந்து பார்த்தான். "ஒருகால் புருடா மிருகத்தின் எல்லையில் இருக்கும் போது அஃதுன்னைப் பிடித்துவிட்டபடியால் உடலின் பாதிப் பாகத்தை அதற்குக் கூறுக்கிக்கொடுத்துவிடுதல் வேண்டும். அதுதான் மறைமுறைக் கொத்த நெறிமுறை என்று ' முடிவு

கூறினன். அன்று தருமன் நடுவுநிலை தவறாமல் உரைத்ததைக் கேட்டு அனைவருந் தருமனைப் பாராட்டினர்.



### அடக்கமுடைமை

13\. ஆன்ற சபையி லடங்காச் சிசுபாலன்
ஏன்றிறந்தா னன்றோ இரங்கேசா - சான்றோர்கள்
காக்க பொருளா அடக்கத்தை ஆக்கம்
அதனினூஉங் கில்லை யுயிர்க்கு.

(இ - ள்) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே! ஆன்ற சபையில் - பெரியோர்களுடைய அவையிலே, அடங்கா சிசுபாலன் - அடக்கமில்லாமற் பேசிய சிசுபலான் என்பவன், ஏன்று இறந்தான் அன்றோ - அதற்கேற்ற தண்டனையை அடைந்து செத்தொழிந்தானன்றோ? ; சான்றோர்கள் - பெரியோர்கள், அடக்கத்தை பொருளா காக்க - நாவடக்கம் முதலியவைகளைப பொருளாக மதித்துப் போற்றக்கடவர், உயிர்க்கு - மக்களுயிர்க்கு, ஆக்கம்- செல்வம், அதனின் ஊங்கு இல்லை - அதனைப்பார்க்கினுஞ் சிறந்தது இவ்வுலகத்திலே

இல்லை.

(வி - ம்.) பெரியோர்கள் கூடியிருந்த அவையிலே அடக்க மற்றுப் பேசிய சிசுபாலன் அதற்கேற்ற தண்டனையைப் பெற்று மாண்டொழிந்தான் ; அடக்கத்தைச் சிறந்த பொருளாக ஒவ்வொருவரும் காத்தல் வேண்டும். மக்களுக்கு அடக்கத்தைப் பார்க்கினும் சிறந்த செல்வம் வேறு ஒன்றும் இல்லை என்பதாம். ஆன்ற சபை - அறிவு நிறைந்த பெரியோர்கள் கூடிய பேரவை. ஏ ன்று - ஏற்று. இறந்தான் - செத்தான்.

## சிசுபாலன் கதை

தருமர் இராச சூய வேள்வியை நிறைவேற்றியபிறகு முதல் வழிபாடு யாருக்குச் செய்வது என்று அங்கு வந்திருந்த பெரியோர்களைக் கலந்து எண்ணினர். வியாச முனிவர் கண்ண பிரானுக்குச் செய்யுமாறு கூறினர். மற்றவர்களும் அவ்வாறே உ ரைத்தனர். இஃது அங்கிருந்த சிசுபாலனுக்கு மிகுந்த 26 நீதி சூடாமணி

பொறாமையை உண்டாக்கியது . அவன் தன்னுடைய நாவினைச் சிறிதுங்காவாமலும் அடக்கமில்லாமலும் கண்ணபிரானைப் பல வாறு இழித்துரைத்தான். கண்ணபிரான் சிசுபாலன்மீது சினங்கொண்டு தங்கையிலிருந்த உருளைப்படையை அவன் மீது

செலுத்தினர். அப்படை அவனைக் கொன்று வீழ்த்தியது. சிசுபாலன் அடக்கமில்லாதவனாய் இவ்வாறு மாண்டொழிந் தானே என்று பலரும் வருந்தினர்.

## ஒழுக்கமுடைமை

14. வேடவான் மீகர்பின்பு வேதியரின் மேலானார் ஏடவிழ்தார் சூடும் இரங்கேசா - நாடில்

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

(இ - ள்.) ஏடு அவிழ தார் சூடும இரங்கேசா- இதழ்விரிந்த மலர்மாலையை அணிந்த அரங்கநாதப பெருமாளே!, வேட வான்மீகர் - வேடர்குலத்தில் தோன்றிய வான்மீகர், பின்பு வேதியரின மேல் ஆனார் - பிற்காலத்தில் அந்தணர்களினுஞ் சிறந்தவராகத் திகழ்ந்தார், நாடில்- ஆராயுமிடத்து, ஒழுக்கம் உடைமை குடிமை - நல்லொழுக்கம உடையவராகவிருத்தல் நற்குடிப் பிறப்பாகும், இழுக்கம்ஒழுக்கத்தில் தவறுதல், இழிந்த பிறப்பு ஆய்விடும்உயர்ந்த குலமாக விருப்பினும் தாழ்ந்த குலத்தில் சேர்த்து விடும.

(வி - ம்.) வேடர் குலத்தில் தோன்றிய வான்மீகர் பிற் காலத்தில் அந்தணர்களை விடச் சிறந்தவராகத் திகழ்ந்தார்: ஒருவர் நல்லொழுக்கமுடையராக விருத்தல் உயர்குடிப் பிறப்பாகும் ; ஒழுக்கத்தில் தவறுதலோ தாழ்ந்த குலத்திற் சேர்த்துவிடும் என்பதாம்.



## வான்மீகர் கதை

வான்மீக முனிவர் என்பவர் அந்தணர் குலத்தில் தோன்றினர். ஆயினும் குலவொழுக்கத்தைவிட்டு, வேடுவர் குல ஒழுக் கத்தை மேற்கொண்டார். கண்டோர் இவர் வேடுவரே என்று கூறுமாறு தீய ஒழுக்கத்தை மேற்கொண்டிருந்தார். ஒருநாள் வழியிலே சென்ற ஏழு முனிவர்களை வழிமறித்துக் கொள்ளையடிக்கத் தொடங்கினர். அம் முனிவர்கள் இவருடைய குடிப்பிறப்பு முதலியவைகளை மெய்யறிவுப் பார்வையினாலே உணர்ந்து இவரை நற்கதியிற் செலுத்த வேண்டுமென்று எண்ணினர்கள். இராமபிரானுடைய அருமறையை உரைத்து அதனை உருவேற்றுமாறு கூறினர்கள். வான்மீகர் அவ்வாறே உருவேற்றிச் சிறப்படைந்து பிறகு வான்மீகி ராமாயணம் என வழங்கும் பெருநூலையும் இயற்றத்தக்க பெற்றியுடையவராய் விளங்கலானர். ஒழுக்கத்தில் தவறுதலும் தவறுதிருத் தலுமே இழிந்த உயர்ந்த

குலத்திற் சேர்க்கிறது என்பதை அனைவரும் இவர்பாற் கண்டுணர்ந்தனர்.

### பிறனில் விழையாமை

15. அம்பிகையை நோக்கி யளகேசன்
கண்ணிழந்தான் இம்பர் பரவும் இரங்கேசா - நம்பிப்
பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்
கறனொன்றோ வான்ற வொழுக்கு.

(இ - ள்.) இம்பர்பரவும இரங்கேசா - இவ்வுலகோர் போற்றும் அரங்கநாதப்பெருமாளே!, அம்பிகையை நோக்கி- உமாதேவியை உற்றுப் பார்த்தபடியினாலே, அளகேசன் கண் இழந்தான் - குபேரன் குருடனானான்; நம்பி - துணிந்து, பிறன்மனை நோக்காத பேராண்மை-பிறருடைய மனைவியைப் பாராத பெருவலியானது, சான்றோர்க்கு - பெரியோர்க்கு, அறன் ஒன்றோ - அறனொன்றுதானோ?, ஆன்ற ஒழுக்குமிகுந்த நல்லொழுக்கமும் ஆகும.



(வி - ம்.) குபேரன் அம்பிகையை உற்றுப் பார்த்துக் கண் குருடானான்; பிறன்மனைவியைக் கண்ணெடுத்துப் பாராத

பேராண்மையானது பெரியோர்கட்கு அறத்தை மட்டுமன்று,
நல்லொழுக்கத்தையுந் தரும் என்பதாம். இம்பர் - இவ்வுலகம்.

## குபேரன் கதை

இறைவழிபாட்டின்பொருட்டுத் திருக்கைலமலக்குச்
செ சன்ற குபேரன் உமாதேவி பேரழகோடு விளங்குதலைப் பார்த்து
இத்தகைய அழகும் உண்டோ என்று எண்ணி, அன்பு நெறியை
மறந்தான். அதனால் அவன் குருடனாகுமாறு வசவுரை உண்டாகி
யது. அவ்வுரைப்பயனால் குபேரன் குருடனாகித் துன்புற்றான்.

பாட பேதம் :- இப்பாடலின் முதல் இரண்டடிகட்கு,
அந்தகன் தேவிதனை அக்கினி தானணைந்தே
இந்திவிழி வுற்றான் இரங்கேசா
என்று பாட பேதம் உள்ளது.

## பொறையுடைமை

16. முந்து மரந்தறித்த மூர்க்கன்சொற்
கேட்டுமவன் எந்தைபிரான் என்றான் இரங்கேசா -
கொந்தி அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்தல் தலை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, முந்தும் - தன்னெதிரில் உள்ள, மரம தறித்த - மரத்தை வெட்டிய, மூர்க்கன் சொல்கேட்டும் - மூர்க்கனுடைய மொழி களைக் கேட்ட பிறகும், அவன் எந்தை பிரான் என்றான் அவன் என்னுடைய தந்தையைப்போற் சிறந்தவன் என்றான் ; கொந்தி - கொத்தி, அகழ்வாரை - தோண்டுகி றவர்களை, தாங்கும் நிலம்போல-தாங்குகிற நிலத்தைப் போல், தம்மை இகழ்வார் பொறுத்தல் தலை - தம்மை



யிகழ்ந்துரைப்பவர்களின் இகழ்வுரைகளைப் பொறுத்துக்கொள்ளுதல் தலையாய அறமாம.

(வி - ம்) மரத்தை வெட்டிய மூர்க்கனுடைய சொற்களைக் கேட்டபிறகும் அவன் என்னுடைய தந்தையைப் போல் சிறந்தவன் என்று சேரமாண்டார் செப்பினர்: தோண்டுகின்றவர் களைத் தாங்குகிற நிலத்தைப் போலத் தம்மையிகழ்ந்துரைப்பவர் களைப் பொறுத்துக் கொள்ளுதல் தலைசிறந்த அறம் என்பதாம்.

## சேரமாண்டார் கதை

சேரநாட்டில் முன்னாளில் ஆட்சிசெய்திருந்த

சேரமாண்டார் என்பவர் சிறந்த பொறுமையுடையவர் என்று பெரும்புகழ் பெற்றிருந்தார். சோழ மன்னனிடஞ் சென்ற ஒருவன் நான சேரனுக்குச் சினம் உண்டாக்குகிறேன் என்று சூளுரை புகன்று சேர நாட்டிற்குச் சென்றான். சேரனுடைய முற்றத்தில் வளர்ந்
திருந்த நல்ல மாமரத்தை மூர்க்கத்தனமாக வெட்டினான் . சேர மாண்டாருடைய தாய் மரத்தை வெட்டுபவனைப் பார்த்து, "நீ யார் ?" என்று உசாவினாள். அதற்கு அவன், "நான்தான் உன்
னுடைய கணவன்" என்று மறுமொழி கூறினான். இதனைக் கேட்ட பிறகுஞ் சேரமாண்டார் சினமடையாமல், "அவன்
கூறிய சொல்லால் மரத்துக்குடையவன் அவனே என்பதற் கையமில்லை" என்று சொன்னார். இதனைக் கேட்ட அம்மனிதன்
அவருடைய பொறுமையைக் கண்டு மிகுந்த வியப்படைந்தான்.
தான் செய்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டு அவ்விடத்தைவிட்டு நீங்கினான்.

அழுக்காறுமை

17. வெள்ளி கோடுத்தல் விலக்கிவிழி
தோற்றுலகில்

எள்ள லுற்ற னன்றே இரங்கேசா - உள்ளத்
தழுக்கா றுடையார்க் கதுசாலும் ஒன்னார்
வழுக்கியுங் கேடீன் பது.

30 நீதி சூடாமணி

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, வெள்ளி - சுக்கிரனானவன், கொடுத்தல் விலக்கி - கொடுப்பதைத் தடுத்து, விழி தோற்று - கண் இழந்து, எள்ளல் உற்றான் அன்றே - இகழ்ச்சியடைந்தான் அல்லவோ ? ; உள்ளத்து - உள்ளத்தின்கண், அழுக்காறு உடையார்க்குபொறாமையுடையவர்களுக்கு, ஒன்னார் - பகைவர்கள் , வழுக்கியும் - கேடுசெய்யத்தவறினாலும், கேடு ஈன்பது கேட்டைத் தருவதாகிய, அதுசாலும்-அபபொறாமையாகிய பகையே போதுமானதாகும்.

(வி - ம்.) சுக்கிரனானவன் மாபலிச் சக்கிரவர்த்தி தானங் கொடுத்தலைத் தடுத்தபடியினால் விழியை இழந்து இவ்வுலகிலே மிகுந்த இகழ்ச்சியை அடைந்தான்; உள்ளத்திலே அழுக்கா றுடையவர்களுக்குத் திமை செய்ய வேறு எவரும் வேண்டாம். அப்பொறாமை

யொன்றே போதுமானதாகும் என்பதாம்.

## சுக்கிரன் கதை

மாபலிபுரத்தில் முன்னாளில் மாபலிச் சக்கிரவர்த்தி அரசு புரிந்திருந்தான். அவன் மூவுலகங்களையும் தன்னுடைய ஆளுகையில் வைத்திருந்தான். ஒரு காலத்தில் அவன் சிறந்த வேள்வியொன்றைச் செய்து முடித்துத் தானங்கள் செய்தான். அவன் கொடுங்கோலனாக விருந்தபடியால் அவனை அழித் தொழிப்பதற்குக் காலங்கருதியிருந்த தேவர்கள் இதுவே தகுந்த காலம் என்று முடிவு செய்து திருமாலிடம் போய் மாபலியை அழித்தொழிக்க வேண்டுமென்று வேண் டிக்கொண்டார்கள். திருமால் தானம் பெறும் வழியினாலேயே மாபலியை அழித் தொழிக்க வேண்டுமென்று முடிவு செய்தார். குள்ள அந்தணனாக வடிவமெடுத்துக் கொண்டு மெள்ள மாபலியிடம் வந்தார்.

தம்முடைய சிறிய அடியால் மூன்றடி மண் தமக்குத் தானம் வேண்டுமென்று கேட்டார். மாபலி 'கொடுக்கிறேன்' என்றான். மாயவனின் வஞ்சனையை உணர்ந்துகொண்டான் மாபலியின் குரு மூலமும் உரையும்

வாகிய சுக்கிரன். 'தானங் கொடாதே' என்று கூறித் தடுத்தான். மாபலியோ,

"எடுத்தொருவ ருக்கொருவர் ஈவதனின் முன்னே
தடுப்பது நினக்கழகி தோதகவில் வெள்ளி
கொடுப்பது விலக்குகொடி யோயுனது சுற்றம்
உடுப்பதுவும் உண்பதுவும் இன்றிவிடு கின்றாய்"

என்று கூறிவிட்டுத் தானஞ் செய்யத் தொடங்கினான். சுக்கிரன் வண்டின் வடிவம் எடுத்துக்கொண்டு நீர் ஏனத்தின் நீர்வரும் வழியை அடைத்து நின்றான். தானநீர் இறங்காமையைக் கண்ட மாயவன் தரும்பொன்றினையெடுத்து நீர்வரும் வழியைக் குத்தினான். அதனால் சுக்கிரனுடைய கண் குருடாகியது. தேவர்களும் பிறரும் சுக்கிரனை குருடனென்று இகழலாயினர்.

வெஃகாமை

18. முன்னோனைப் போரின் முடுக்கி விமானத்தை
என்னோகைக் கொண்டான் இரங்கேசா - அன்னோ
நடுவின்றி நன்பொருள் வெஃகிற் குடிபொன்றிக்
குற்றமு மாங்கே தரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, முன்னோனை - தனக்கு மூத்தவனாகிய குபேரனை, போரில் முடுக்கி - போரிலே வென்று, விமானத்தை - புட்பக விமானத்தை, என்னோ

கைக்கொண்டான் - யாது காரணத்தி ஞலோ இராவணன் கைப்பற்றிக் கொண்டானை; அன்றே - அந்தோ, நடுவு இன்றி நன்பொருள் வெஃகில் - நடுவு நிலைமையில்லாமல் நல்ல பொருளை ஒருவன் விரும்புவானாகில், குடி பொன்றி - குடியானது அழிதலுற்று, குற்றமும்குற்றத்தையும், ஆங்கே தரும - அப்பொழுதே கொடுக்கும்.

(வி - ம்.) இராவணனானவன் குபேரனைப் போரில் வென்று அவனுடைய புட்பக விமானத்தைக் கைப்பற்றிக் கொண்டான். 32 நீதி சூடாமணி

அவ்வாறு கைப்பற்றிக் கொண்டது அவனுடைய அழிவுக்கு ஏது வாயிற்று. ஒருவன் நடுவுநிலைமையில்லாமல் பிறர் பொருளை விரும்புவானாயின் அது குடியைக் கெடுத்துக் குற்றத்தையும் உண்டாக்கும் என்பதாம்.

## இராவணன் கதை

இராவணன் பல தீமைகளைச் செய்துகொண்டு இலங்கையிலே வாழ்ந்திருந்தான். அளகாபுரிக்கிறைவனாகிய குபேரன் என்பவன் ஒரு முறையில் இராவணனுக்கு அண்ணனாவான். அக் குபேரனிடத்தில் அழகிய புட்பக விமானம் ஒன்று இருந்தது. அது நினைத்த அளவில் நினைத்த விடத்திற்குச் செல்லும் சிறப்புப் பொருந்தியது.

அவ் விமானத்தின்மீது அவாக் கொண்ட இராவணன் குபேரனிடமிருந்து வலுக்கட்டாயமாக அவ்விமானத்தைப் பறித்துக்கொண்டான். தான் அதன்மீது ஏறி எங்குஞ் சுற்றிக்கொண்டு திரிந்தான். பிறன் பொருளை வெஃகிய இராவணனுடைய வாழ்வு நீடித்து நிற்கவில்லை. பிறகு பிறன் மனைவிரும்பிச் சீதையைக் கவர்ந்தபொழுது அழிந்தொழிந்தது.

புறங்கூறுமை

19. தக்கதுரி யோதனன்பால் சார்ந்த
சகுனியைப்போல் இக்குவல யத்தில் இரங்கேசா
-மிக்குப் பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர்
நகச்சொல்லி நட்பாடல் தேற்று தவர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, இக் குவலயத்தில்-இந்த வுலகத்தில், தக்க துரியோதனன் பால் - மேலான நிலையிலிருந்த துரியோதனனிடத்தில், சார்ந்த சகுனியைப்போல்-சேர்ந்திருந்த சகுனியைப்போல், மிக்கு - மிகுதியாக, நக சொல்லி - மகிழும்படியான மொழிகளைப் பேசி, நட்பாடல் தேற்றுதவர் - நட்புக் கொள்ளுதலைத் தெரிந்துணராதவர்கள், பக சொல்லி- மூலமும்

பிரிவுண்டாகும்படியான மொழிகளைப் பேசி, கேளிர்ப் பிரிப்பர் - உறவினர்களைப் பிரித்து விடுவார்கள்.

(வி - ம்.) துரியோதனனிடத்திலே அவனுடைய மாமனாகிய சகுனி சேர்ந்திருந்து பாண்டவர்களோடு துரியோதனன் முதலியோர் கூடியுறவு கொள்ளாதவாறு பகைமொழிகளையே பேசிப் பிரித்து வைத்ததைப்போல், நன்மொழிகளைப் பேசி நட்புக் கொள்ளுதலையுணராதவர்கள் பகையுண்டாகத்தக்க மொழிகளையே பேசி உறவினர்களைப் பிரித்து விடுவார்கள் என்பதாம்.

## சகுனி கதை

சகுனி என்பவன் காந்தாரியோடு பிறந்தவனாகையால் துரி யோதனனுக்கு மாமன்முறையாவன். இவன் தன்னுடைய நாட் டிலே யிராமல் எப்பொழுதுந் துரியோதனனோடு உடனிருந்து கொண்டு அவனுக்கு நன்மை செய்பவனைப்போல நாளுந் தீ மொழிகள் பலவற்றைக் கூறிப் பாண்டவர்களோடு துரியோதனன் நட்புக் கொள்ளாதவாறு செய்து அவர்களைப் பிறவிப் பகைவர்களாகவே கருதுமாறு செய்துவிட்டான். இவனுடைய வஞ்சக வேலையையும் நட்புப் பிரித்த தீய செயல் களையும் நன்குணர்ந்த

உலகினர் இன்றும் இவனைப் பொல்லாதவ னென்றே சொல்லி வருகின்றனர்.

## பயனிலசொல்லாமை

**20.** வேந்தை வதிட்டன் வியத்தல்பழு
தென்றமுனி
ஏந்துதவந் தோற்றான் இரங்கேசா -
ஆய்ந்தக்கால்
சீர்மை சிறப்போடு நீங்கும் பயனில
நீர்மை யுடையார் சொலின்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப பெருமானே!, வேந்தை - அரிச்சந்திரனை, வதிட்டர் வியத்தல் பழுது என்ற முனி - வசிட்டர் புகழ்ந்து பேசுதல் தவறு என்று சொன்ன*





*விசுவாமித்திர முனிவர், ஏந்து தவம் தோற்றான் - தம்முடைய மிகுந்த தவத்தை யிழந்தார், ஆய்ந்தக்கால் - ஆராய்ந்து பார்க்குமிடத்தில், பயன் இல - பயனில்லாத மொழிகளை, நீர்மை உடையார் சொலின் - பெருந்தன்மையுடையவர்கள்*

பேசுவார்களானால், சீர்மை சிறப்பொடு நீங்கும் - அவர்க ளுடைய பெருந்தன்மை புகழொடு நீங்கிப் போகும்.

(வி. ம்.) அரிச்சந்திரனை வசிட்டமுனிவர் புகழ்ந்து
பேசுதல் தவறு என்று கூறிய விசுவாமித்திர முனிவர் தம் முடைய மிகுந்த தவத்தை இழந்தார்; பயனில்லாத மொழிகளைப் பெரியோர்கள் பேசுவார்களானால் அவர்களுடைய பெருமையும் புகழும் அழிந்து போகும் என்பதாம்.

## விசுவாமித்திர முனிவர் கதை

ஒருகாலத்தில் அரிச்சந்திரனுடைய மெய்ம்மையைக் குறித்து வசிட்டருக்கும் விசுவாமித்திரருக்கும் சொற்போர் மூண்டது. உலகில் அரிச்சந்திரன் ஒருவன்தான் உண்மை பேசுவதிற் சிறந்தவன் என்றார் வசிட்டர். வசிட்டரோடு மாறுபட்ட விசுவாமித் திரரோ, "அரிச்சந்திரன் அப்படியொன்றும் புகழ்பெற்ற உண்மையாளன் அல்லன். அவன் சமயம் நேர்ந்தால் பொய்யும் பேசுவான்" என்று சொன்னார். அரிசந்திரன் பொய் பேசுமாறு செய்யாவிட்டால் தம்முடைய தவத்தை யிழந்து விடுவதாகவும் விசுவாமித்திரர் கூறினார். பிறகு அரிசந்திரனுக்குப் பல தீமைகளை யுண்டாக்கிப் பொய்யனாக்குதற்குப் பெருமுயற்சி செய்தார். யாது செய்தும் அரிசந்திரனைப் பொய்யனாக்க முடியாமற் போயிற்று. இதனால் தோல்வி யடைந்த விசுவாமித்திர முனிவர் தம்முடைய தவத்தை யிழந்தார்.

21. காளமுனி பாண்டவர்மே லேவுங் கடிவிழுங்க
எளித மானான் இரங்கேசா - நாளுந்தான்
தீயவை தீய பயத்தலால் தீயவை
தீயினு மஞ்சப் படும்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, காளமுனி - காளமுனி என்பவன், பாண்டவர்மேல் ஏவும்பாண்டவர்கள்மீது செலுத்திய, கடிவிழுங்க - பூதமானது தன்னையே எடுத்து விழுங்கிவிட, (அதனால் அம்முனிவன்), எளிதம் ஆனான் - இகழ்ச்சியடையப்பெற்றான், நாளும்எப்பொழுதும், தீயவை - தீமையான காரியங்கள், தீய பயத்தலால் - தீமையைக் கொடுக்கிறபடியால், தீயவை - தீமையான காரியங்கள், தீயினும் அஞ்சப்படும் - தீயைப் பார்க்கினும் கொடிதாக அஞ்சி விலக்கப்பெறுதல் வேண்டும்.

(வி - ம்.) காள முனிவன் காட்டிலே பாண்டவர்களைக் கொல்லுமாறு செலுத்திய பூதம் திரும்பிவந்து அம்முனிவனையே கொன்றொழிக்க

அதனால் அம்முனிவன் பலராலும் இகழப்பெற்றான். தீமையான காரியங்கள் தீமையையே உண்டாக்குகிறபடியினால் தீய காரியங்களைத் தீயினுங் கொடிதென அஞ்சி விலக்க வேண்டும் என்பதாம்.

## காளமுனிவன் கதை

பாண்டவர்கள் துரியோதனனுடைய வஞ்சகத்தினால் நாடுநகரங்களை யிழந்து காட்டிலே தங்கியிருந்தார்கள். துரியோதனன் பாண்டவர்கள் மீண்டிடாதபடி அவர்களைக் காட்டிலேயே கொன்றொழிக்கவேண்டுமென்று திட்டமிட்டான். காளமுனி என்னுங் கொடிய முனிவன் ஒருவனை அழைத்து நீ எவ்வகையிலேனும் பாண்டவர்களைக் கொன்றொழிக்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அம்முனிவன் கொடிய வேள்வியொன்றைச் செய்தான். அதிலிருந்து தீய பூதமொன்று புறப்பட்டது. முனிவன் அப் பூதத்தைப் பார்த்து, ''நீ பாண்டவர்களைக் கொன்று வருவாயாக'' என்று கூறியனுப்பினான். அறக்கடவுளின் மாயையால் ஐவரும் ஓரிடத்தில் பொய்யாக மாண்டுகிடந்தனர். அவர்களைப் பார்த்த பூதம் மிகுந்த சினங்கொண்டு காளமுனிவரிடஞ் சென்று, ''மாண்டவர், பின்னும் பின்னும் மாள்வரோ மதியிலாதாய்'' என்று கூறி



வனையே கொன்று சென்றது. அதனால் அம்முனிவன்

பழிப்புக் கும் கொலக்கும் ஆளானன்.

## ஒப்புரவறிதல்

22. அந்தணர் மேன்மை அறியாமற்
சர்ப்பவென்றே இந்திரன்பாம் பானன் இரங்கேசா -
முந்தவே ஒப்புரவி னல்வருங் கேடனி
னஃதொருவன் விற்றுக்கோட் டக்க துடைத்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, அந்தணர் மேன்மை அறியாமல் - எழுமுனிவர்களுடைய பெருமையை உணர்ந்து கொள்ள ாமல், சர்ப்பஎன்று - சர்ப்ப எனனும மொழியைக்கூறி, இந்திரன் - இந்திரபதவிக்கு வந்த நகுடன, பாம்பு ஆனன் - பாம்பாக முடிந்து போனன், முந்த - முன்னதாக, ஒப்புரவினல் வரும் கேடு எனின் -உலக நடையை அறிந்து செய்யுங்காரியத்தினல் கெடுதி வருமானலும், அஃது - அக்கேடானது, ஒருவன் விற்றுக் கோள் தக்கது உடைத்து - ஒருவன் தன்னை விற்றயினும் அக்கேடு கொள்ளுந் தகுதியை உடையதாகும.

(வி - ம்.) முனிவர்களுடைய பெருமையை உணர்ந்து கொள்ளாமல் இந்திர பதவிபெற்ற நகுடன் பாம்பாகிவிட்டான். உலக நடையை அறிந்து

ஒழுகுதலால் கேடுண்டாகுமாயினும் அக் கேட்டை ஒருவன் தன்னை விற்றாயினுங் கொள்க என்பதாம்

## நகுடன் கதை

நகுடன் என்னும் அரசன் ஆயிரம் வேள்விகளைச் செய்து முடித்தபடியினால் இந்திர பதவியைப் பெற்றான். இந்திராணி யிடத்திலே அவனுக்கு மிகுந்த வேட்கையுண்டாகியது. அவ ளிடம் செ ல்லத் தொடங்கினான். செல்லவேண்டிய முறைக்குத் தக்கவாறு ஏழு முனிவர் சிவிகையைத்



சென்றார்கள். விரைவாகச் செல்லவேண்டும் என்னும் எண்ணத் தினால் "சர்ப்ப சர்ப்ப" என்று சொன்னான். இதன் பொருள் "விரைவாக விரைவாக" என்பதாகும். இவ்வாறு இவன் கூறியது அகத்திய முனிவருக்கு மிகுந்த சினத்தை யுண்டாகியது. உடனே அவர், "நீ சர்ப்பமாகக் கடவாய்" என்று வசவுரை வழங்கினார். அவ்வளவில் அவன் பெரிய மலைப்பாம்பாகிப் புரண்டு நிலத்தில் வீழ்ந்தான். உலக நடையை உணர்ந்து முனி வர்களிடம் நடந்துகொள்ள வேண்டிய முறைமைப்படி நடந்து கொள்ளாமையினாலே நகுடன் இவ்வாறு கேடடைந் தான்.

23 அங்கியுங் குண்டலமு மாகண்
டலற்களித்தான்

இங்கிதமாக் கன்னன் இரங்கேசா - மங்கியே
சாதலி னின்னாத தில்லை யினிதனூஉம்
ஈத லியையாக் கடை

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, கன்னன் - கன்னனுனவன், அங்கியும் குண்டலமும்- மேலாடையையுங் குண்டலங்களையும, ஆகண்டலற்கு - தேவேந்திரனுக்கு, இங்கிதமா அளித்தான் - அவை களைக் கொடுத்தால் தான் இறந்தொழியுமாறு நேரிடு மென்பதையுணர்ந்தும் இனிமையோடு கொடுத்தான், மங்கி உடலொடுங்கி, சாதலின் - இறப்பதைப் பார்க்கினும், இன்னாதது இல்லை - துன்பத்தை யளிக்கக் கூடியது வேறொன்றும் இல்லை, ஈதல் இயையாக்கடை - இரந்தவர் கட்கு அவர்களிரந்ததனைக் கொடுக்கமுடியாத விடத்தே, அதூஉம் இனிது - அதுவும் இனிமையானதேயாகும்.

(வி - ம்.) கன்னன் தன்னிடம் வந்து இரத்தல் செய்த

தேவர் கோனுக்குத் தன்னுடைய அங்கியையும் குண்டலங்களையும் 38 நீதி சூடாமணி

நன்கொடையாக வழங்கினன். சாதலைப்போல் துன்பத்தைக் கொடுக்கக்கூடியது வேறொன்றும் இல்லை. இரந்தவர்கட்குப் பொருளினைக் கொடுக்க முடியாதவிடத்தே இறத்தலும் இனிமை யானதே என்பதாம்.

## கன்னன் கதை

பாரதப்போர் நிகழ்ந்தது. கன்னனுடைய அறம் அவனுக்குத் துணையாக நின்று அவனுடைய உயிரைக் காத்தது. அவனோடு பிறந்த கவச குண்டலங்களும் அவனைக் காத்து நின்றன. தன் மகனுக்கு வெற்றியுண்டாக்க எண்ணிய தேவர்கோன் கன்னனிடம் வந்து அவனுடைய கவசகுண்டலங்களை இரந்தான். தன் மகன் மாளுதலைக் காணப்பெறாத கதிரவன், "அவைகளைக் கொடாதே. உன்னிடம் மறையவன்போல் வந்து இரப்பவன் உண்மையான மறையவன் அல்லன் தேவேந்திரனாவான்" என்று சொன்னான். கன்னன் தன்னுடைய தந்தையின் இம்மொழிகளைக் கேட்டும் அவைகளை ஒரு பொருட்படுத்தாது கொடுத்தலே சிறந்த அறமாம் என்னும் ஒன்றனையே உளங் கொண்டவனாய் அவைகளை இந்திரனுக்குக் கொடுத்து தான் மாண்டொழிந்

தான்.

## புகழ்

24. மும்மை யுலகு முசுகுந் தனைத்துதிக்கும்
எம்மையாட் கொண்ட
இரங்கேசா - செம்மையாத்
தோன்றிற் புகழோடு தோன்றுக வஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று.

(இ - ள்.) எம்மை ஆட்கொண்ட இரங்கேசா - எங்களை ஆட்கொண்டருளிய அரங்கநாதப் பெருமானே!, மும்மை உலகும் - மேல் நடு கீழ் என்னும் மூன்று உலகங்களும், முசுகுந்தனைத் துதிக்கும் - முசுகுந்தச் சக்கரவர்த்தியைப் புகழ்ந்து பேசும்; செம்மையா - நன்றாக, தோன்றில் -



இவ்வுலகத்திலே பிறந்தால், புகழொடு தோன்றுக - புகழோடு தோன்றக்கடவர், அஃது இலார் - அக்குணம் இல்லாதவர், தோன்றலில் - பிறத்தலினும், தோன்றாமை நன்று - பிறவாமலிருப்பதே நல்லதாம.

(வி - ம்.) மூன்றுலகங்களும் முசுகுந்தனைப் போற்றிப் பாராட்டின. இவ்வுலகிலே ஒருவர் பிறந்தால் புகழோடு விளங்குதல் வேண்டும். அவ்வாறு விளங்க முடியாதவர்கள் பிறத்தலினும் பிறவாமலிருப்பதே நன்மையானது என்பதாம்.

## முசுகுந்தன் கதை

முசுகுந்தச் சக்கரவர்த்தி என்பவன் மிகுந்த புகழோடு அரசாட்சி செய்துகொண்டிருந்தான். அப்பொழுது பன்னிரண்டு ஆண்டுகள் மழையில்லாமற் பஞ்சமுண்டாகியது. குடிகள் வருந்தாவண்ணம் ஊற்றுநீரை உண்டாக்கி அந்நீராற் பயிரை வளர்த்து வற்கடத்தைப் போக்கிப் புகழ்பெற்றான். தேவேந்திரனை வருத்திக் கட்டிக்கொண்டுசென்ற அரக்கனைக் கொன்று அவனை விடுவித்தான். அவ்வுதவிக்கு மகிழ்ந்த இந்திரன் தான் வழிபட்ட தியாகராசர் திருவுருவை முசுகுந்தனுக்கு வழங்கினான். முசுகுந்தன் அவ்வுருவை நிலவுலகிற்குக் கொண்டு வந்து வழிபட்டான், பலருக்கும் உதவி செய்திருந்த படியினால் முசுந்தனுடைய புகழ் யாண்டும் பரவிநின்றது. ஆகவே இவ்வுலகிற் பிறப்போர் புகழுண்டாதற்கேற்ற நல்ல காரியங்களைச் செய்து சிறப்படைய வேண்டியது இன்றியமையாததாகும்.

## துறவறவியல்

25. வஞ்சப் புறவினுடன் வான்றுலையி லேறினன்
இன்சொற் சிவிமுன் இரங்கேசா - எஞ்சாமல்
மன்னுயி ரோம்பி யருளாள்வாற் கில்லேன்ப
தன்னுயி ரஞ்சும் வினை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்காதப் பெருமாளே!, முன் - முன்காலத்தில், இன்சொல்சிவி - இனிமையாகப் பேசுதலையுடைய சிவி யென்னுமரசன, வஞ்சம் புறவினுடன்வஞ்சகமாக வடிவெடுத்துக்கொண்டு வந்த இயமனாகிய புறுவினுடன், வான் துலையில் ஏறினன் - பெரிய தராசுத் தட்டிலே ஏறிநின்றான், எஞ்சாமல் - சிறிதும் பின்னடையாமல், மன் உயிர் ஓம்பி - நிலைபெற்ற உயிர்களைப் பாதுகாத்து, அருள் ஆள்வாற்கு - அவைகளிடத்திலே அருள் கொண்டிருப்பவனுக்கு, தன் உயிர் அஞ்சும் வினை - தான் அஞ்சுதற்கு ஏதுவாகிய தீவினையானது, இல் என்ப-இல்லை யென்று பெரியோர்கள் கூறுவார்கள்

## சிபிச்சக்கரவர்த்தி கதை

சிபிச்சக்கரவர்த்தி என்னும் அரசன் கதிரவனுடைய வழி முறையிலே தோன்றினன். இவன்

மிகுந்த இரக்கமுடையவன். பிற உயிர்களைத் தன்னுடைய உயிர்போல் எண்ணிப் போற்றும் பேரறிவாளன். இவனுடைய அருளுடைமையை எல்லோருக்கும் உணர்த்தும் பொருட்டு இறைவன் ஒரு வேடனாகவும் இயமன் ஒரு புறாவாகவும் வடிவமெடுத்துக் கொண்டு புறப்பட்டனர்கள். வேடன் புறாவை விடாமல் துரத்திக்கொண்டு வந்தான். புறா அஞ்சியோடிச் சிபிச்சக்கரவர்த்தியினிடத்திலே அடைக்கல



புகுந்தது. அரசன் அதனுடைய அச்சத்தைப் போக்கிப் பாதுகாத்தான். வேடன் அம்மன்னன் எதிரிலே தோன்றிப் புறாவைத் தான் விரட்டி வந்தபடியினால் அதனைத் தன்னிடமே தந்துவிட வேண்டுமென்று சொற்போரிட்டான். மன்னன் புறாவை விட்டுவிடாமல் அதனுடைய நிறைக்குரிய அளவு தன்னுடைய உடலில் அரிந்து கொடுக்கத் தொடங்கினான். இவ்வாறு பேரருள் படைத்தவனாக விருந்தபடியால் அம்மன்னனுக்கு வீடு பேறு கிட்டியது.

## புலான் மறுத்தல்

26. அந்தணனைக் கன்மாட பாத னருந்தினன்
இந்த வுலகத் திரங்கேசா -வந்த
பொருளாட்சி போற்றுதார்க் கில்லை யருளாட்சி
ஆங்கில்லை யூன்றின் பவர்க்கு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, இந்த உலகத்து - இந்நிலவுலகத்தில், அந்தணனை - மறையவனை, கன்மாட பாதன்- கன்மாட பாதன்என்னும் அரசன் அருந்தினன் - விழுங்கினன், வந்த - உண்டாகிய, பொருள் ஆட்சி - பொருளை ஆளுந்தன்மை, போற்றாதார்க்கு இல்லை- அப்பொருளைப் போற்றிப் பாதுகாவாதவர்கட்கு உண்டாக மாட்டாது, அருள் ஆட்சி-அருளை ஆளுந் தன்மை, ஆங்குஅதைப்போல, ஊன் தின்பவர்க்கு இல்லை - ஊனினை உண்பவர்கட்கு உண்டாகமாட்டாது.

(வி - ம்.) கன்மாடபாதன் என்னும் அரசன் அரக்கனாக இருந்தபோது அந்தணனை விழுங்கினன்; இவ்வுலகத்தில் பொருளாலடைய வேண்டிய பயன் அதனைப் போற்றிப் பாதுகாவாதவர் கட்கு உண்டாகமாட்டாது. அதைப்போல் அருளால் உண்டாகத் தக்க பேறு ஊன்தின்பவர்கட்கு உண்டாக மாட்டாது என்பதாம்.



## கன்மாடபாதன் கதை

முன்னாளில் கன்மாடபாதன் என்னும் பெயருடைய அரசன் ஒருவன் இருந்தான். அவன் வேட்டையாடும்

பொருட்டுக் காட்டிற்குச் சென்றான். அப்போது ஓர் அரக்கன் கன்மாடபாதனை எதிர்த்தான். கன்மாடபாதன் அவ்வரக்கனைக் கொன்றான். அவ்வரக்கனுடைய தம்பி அரசனைக் கொன்று பழிவாங்க எண்ணினான். ஆனால் அரசனை நேரே எதிர்த்துக் கொல்ல முடியவில்லை. வஞ்சகமாகவே கொன்றொழிக்க வேண்டுமென்று நெஞ்சகத்தில் மாறுபாடு கொண்டான். மனிதவுருவத்தோடு கன்மாடபாதனுடைய அரண்மனைக்குச் சென்றான். தான் அட்டில் தொழிலில் மட்டில்லாத ஆற்றல்படைத்தவனெனவும் தனக்கு மடைப் பள்ளியில் வேலை கொடுக்க வேண்டுமென்றும் அரசனை வேண்டிக்கொண்டான். அரசன் அரக்கனுடைய வஞ்சகத்தையோராது தன்னுடைய மடைப்பள்ளியிலே மடைத் தொழிலாளர்களில் ஒருவனாக இருக்கச் செய்தான். அவ்வாறே தங்கியிருந்த அரக்கன் அரசனுக்குத் தீமைசெய்தற்கு அற்றம் நோக்கியிருந்தான். ஒருநாள் அரசனுடைய அரண்மனையில் தென்புலத்தார் கடனோம்பு நாள் வந்தது. அன்று முனிவர் சிலர் அரண்மனைக்கு உணவுகொள்ள வந்தனர். பழிதீர்க்கக் காலம் பார்த்திருந்த வஞ்சகமடையன் மனிதவூனைக் கறியாக்கிப் படைத்தனன். அதனையுண்ட முனிவர்கள் சினங்கொண்டனர். அரக்கனாகுமாறு அரசனுக்கு வசவுரை வழங்கினர். அரக்கனாகிய மடையனையும் எரித்துச் சாம்பராக்கிவிட்டுச் சென்றார்கள். அரசன் பன்னிரண்டு ஆண்டுகள் அரக்கனாகக் காட்டிலே திரிந்தான். ஒருநாள் மறையவன் ஒருவன் தன்னுடைய

மனைவியோடு காட்டுவழியே சென்றான். கன்மாடபாதனாகிய அரக்கன் அம் மறையவனைப் பிடித்து உண்ணத்தொடங்கினான். அவனுடைய மனைவி தன் கணவனைக் கொல்லாது மாங்கலியப் பிச்சை தருமாறு எவ்வளவோ வேண்டியுங் கேளாமல் அவள் கண்ணெதிரிலேயே அவனைக் கொன்று தின்றான். அவள் வருந்தி, "நீ வசவுரைப்பலன் தீர்ந்து நாட்டையடைந்து மனைவியைத் தொட்டால் இறக்கக் கடவை" என்று தீமொழி செப்பிச் சென்றாள். பிறகு அரசன் பன்னீராண்டுகள் கழிந்து அரக்



கவுடனீங்கி நகரஞ் சென்றபோது மனைவியைத் தீண்ட முடியாமல் மக்கட் பேறற்று வருந்தியிருந்தான். பிறகு வேள்வியினால் அதனையடைந்தான். ஊன் தின்பவர்கள் அருளுடையவர்களாக இருக்கமாட்டார்கள் என்பது கன்மாடபாதனிடத்தில் நன்கு விளங்கியது.

## தவம்

27. வேந்தந் தணர்குலத்து மேலா
கியதகைமை

ஏந்துதவத் தேய்ந்தா னிரங்கேசா!—
மாந்தர்க்கு,

வேண்டிய வேண்டியாங் கெய்தலாற்

செய்தவம்

ஈண்டு முயலப் படும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே!, வேந்து - அரசனாகிய விசுவாமித்திரன, அந்தணர்குலத்து மேல் ஆகிய தகைமை - அந்தணர் குலத்தினும் சிறந்த தன்மையை, ஏந்து தவத்தால் எய்ந்தான - மிகுந்த தவத்தினாலே அடைந்தான், மாந்தர்க்கு மனிதர்களுக்கு, வேண்டிய - வேண்டிய பொருள்களை, வேண்டியாங்கு எய்தலால் - வேண்டியவாறே அடையச் செய்கிறபடியினால், செய்தவம் - செய்யப்பட வேண்டிய தவமானது, ஈண்டு முயலப்படும் - இந்நிலவுலகில் தவறாமற் செய்யப்பட வேண்டியதாகும்.

(வி - ம்.) அரசனாக விருந்த விசுவாமித்திர முனிவர் அந்தணர் குலத்தினுஞ் சிறந்த தன்மையைத் தவஞ் செய்த படியினாலே அடைந்தார் ; வேண்டியவைகளையெல்லாம் வேண்டியவாறே அடையுமாறு செய்வித்தலால் எல்லோரும் செய்யவேண்டிய தவத்தை முயற்சியோடு செய்து முடிக்க வேண்டுமென்பதாம்.

## விசுவாமித்திரர் கதை

விசுவாமித்திர முனிவர் முதலில் ஓர் அரசனாக விளங்கியிருந்தார். தவஞ் செய்து சிறப்படைதலால் எல்லாப்பயன்களையும் நன்கு பெறலாம் என்பதை உணர்ந்த அவர் விடா முயற்சியோடு தவத்தைச் செய்யத் தொடங்கினார். அதனால் புகழ்பெற்ற முனிவர்கள் எழுவரில் தாமும் ஒருவரானார். இராம பிரானுக்குப் படைக்கலங்கள் முதலியவைகளை உதவியதோடு அப்பண்ணவனுக்குச் சீதாப்பிராட்டியைத் திருமணமுஞ் செய்து வைத்தார். வசிட்டரைப் போல் பொதுவான முனிவராக வில்லாமல் நான்முகனைப் போலவே படைத்தல் தொழில் முதலியவைகளையுஞ் செய்தார். அடைய வேண்டிய பேறுகளை யெல்லாந் தவத்தினால் அடையலாம் என்பது இவரிடத்தில் நன்கு விளங்கியது.

## கூடாவொழுக்கம்

28. சந்யாசி யாய்விசயன் றூர்குழலைக்
கொண்டகன்றான்,
இந்நா னிலம்போற் றிரங்கேசா!— சொன்னால்
வலியி னிலைமையான் வல்லுருவம் பெற்றம்
புலியின்றோல் போர்த்துமேய்ந் தற்று

(இ - ள்.) இந் நானிலம் போற்று இரங்கேசா-இந் நில வுகத்தாரால் போற்றப்படுகிற அரங்கநாதப் பெருமாளே!, விசயன் - அருச்சுனன், சந்யாசியாய் - துறவுக்கோலமுடைய வனாய், தார் குழலை கொண்டு அகன்றான - மலர்மாலை யணிந்த கூந்தலையுடைய சுபத்திரையைக் காந்தருவமணஞ் செய்துகொண்டு சென்றான ; சொனனால்- கூறுமிடத்து, வலி இல் நிலைமையான் - ஆற்றலி ல்லாத தன்மையை யுடையவன், வல் உருவம - பலம்பொருந்திய கோலமானது, பெற்றம் - ஆன், புலியின் தோல் போர்த்து மேய்ந்தற்று - மூலமும்

உரையும் 45

புலியின்தோலை மேலே போர்த்துக்கொண்டு (நிலத்துக்- குடையாருக்கு அச்சமுண்டாக்கி) மேய்ந்தாற் போனறதாம

(வி - ம்:) அருச்சுனன் துறவுக் கோலம் பூண்டு சுபத்திரை யைக் களவு செய்து கொண்டு போனான்; வலிமையற்றவன் கொண்டிருக்கிற வலிய கோலமானது பசு புலித்தோலைப் போர்த்துக் கொண்டு வயல்களிலே மேய்ந்ததற்கு ஒப்பாகும் என்பதாம்.

அருச்சுனன் கதை

அருச்சுனன் சுபத்திரையைத் திருமணஞ் செய்து கொள்ள வேண்டுமென்று வெகுகாலமாகவே எண்ணியிருந்தான். ஆயினுங் காரியம் எளிதாக நிறைவேறவில்லை. துறவுக் கோலம் பூண்டு துவாரகைக்குச் சென்றான். அங்குத் தங்கி நோன்பு நோற்பவனைப் போல நடித்தான். பலராமர் முதலியோர் அவன் உண்மையான துறவியென்றே எண்ணி ஆக வேண்டிய உதவிகளைச் செய்தனர். பலராமர் தம்முடைய தங்கையாகிய சுபத்திரையை அவனுக்குப் பணி செய்யவும் ஏற்பாடு செய்தார். கண்ணன் உண்மையை உணர்ந்திருந்தார். ஆயினும் அருச்சுனனுடைய நோக்கத்திற்கு உடன்பட்டிருந்தார். அருச்சுனன் சமயம் பார்த்துச் சுபத்திரையை உடன்கொண்டு சென்றான். பிறகு பலராமர் முதலியோர் உண்மையுணர்ந்து இருவருக்கும் திருமணத்தைச் செய்து முடித்தார்கள்.

## கள்ளாமை

29. உத்தங்க ஞேலை யொளித்தநா கக்குலங்கள்
இற்ற புகையால் இரங்கேசா—மற்றுலகில்
உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தாற் கள்வே மெனல்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, உத்தங்கன் ஓலை - உத்தங்கன்

என்னும் மறையவனுடைய 46 கீதி
சூடாமணி

காதோலையை, ஒளித்த-களவு செய்து மறைத்துக்கொண்ட' நாகக் குலங்கள் - தட்சகன் முதலிய பாம்பின் கூட்டங்கள், புகையால் இற்ற - புகைசூழ்ந்து கொண்ட படியினுல் மடிந் தொழிந்தன, உலகில் - இவ்வுலகத்தில், பிறன் பொருளைமற்றவர்களுடைய பொருளை, கள்ளத்தால் -களவினுல், கள்வேம் எனல் - கைப்பற்றிக் கொள்வோம் என்பதை, உளளத்தால்-மனத்தினுல், உள்ளலும் தீதே-நினைத்தலும் கெடுதியேயாகும்.

(வி - ம்.) உத்தங்கன் என்பவனுடைய காதோலையைக் களவு செய்து கொண்டு சென்ற பாம்புக்கூட்டங்கள் புகையினுல் மாண்டொழிந்தன; மற்றவர்களுடைய பொருளைக் களவினுல் கைப்பற்றிக் கொள்வோம் என்று மனத்தால் நினைத்தலும் தீமையை உண்டாக்கும் என்பதாம்.

## உத்தங்கன் கதை

உத்தங்கன் என்பவன் மறையவர் குலத்தில் தோன்றியவன் இவன் தன்னுடைய ஆசிரியனிடத்திலே

மறைகளை முறைப்படி ஓதியுணர்ந்தான். பிறகு குருவுக்கு ஓதிவைத்த கூலி கொடுக்க வேண்டுமென்று எண்ணினான். யாது வேண்டுமென்று ஆசிரியனைக் கேட்டான். ஆசிரியன் தன்னுடைய மனைவி விரும்பியவாறு நாகரத்தினம் இழைத்த காதோலையைக் கேட்டான். அஃதிருக்குமிடத்தை ஆசிரியனுடைய மனைவியினால் உணர்ந்துகொண்ட உத்தங்கன் அங்குப் போய் அரிய முயற்சி செய்து அதனைப் பெற்றுக் கொண்டு திரும்பினான். வழியிலே நாட்கடன் கழித்தற் பொருட்டு ஓரிடத்திலே தங்கினான். ஓலையை ஓரிடத்தில் வைத்துவிட்டு நாட்கடன் களைச் செய்து கொண்டிருந்தான். அச்சமயத்தில் நாகலோகத்திலிருந்த பாம்பரசனாகிய தட்சகன் வந்து அவ்வோலையைக் களவு செய்து கொண்டு நாகலோகம் போனான். பிறகு ஓலையைக் காணாத உத்தங்கன் கள்ளனுடைய காலடிச் சுவட்டைப் பற்றிக்கொண்டு நாக லோகஞ் சென்றான்.

பாம்பரசனைக்கண்டு தன்னுடைய ஓலையைக்



கேட்டான். தட்சகன் முதலியோர், ''நாங்களதனை அறியோம்'' என்று பொய்யுரை புகன்றார்கள். உத்தங்கன் இந்திரனை நோக்கிக் கடுந்தவம் புரிந்தான். இந்திரன் உத்தங்கனுக்குக் காட்சி கொடுத்தான். தான் ஏறிவந்த உச்சைச்சிரவம் என்னும் குதிரைக்காது வழியாகப் புகையை வருவித்து அதனை

நாகலோகத்திற் செலுத்தினன். புகை நாகலோகம் முழுவதையுஞ் சூழ்ந்து கொள்ளவே பாம்புகள் மாண்டன. தட்சகன் முதலிய பெரியபாம்புகளுக்கு அறிவு வந்தது. அவைகள் ஓலையைக் கொண்டுவந்து உத்தங்கனிடத்திலே கொடுத்துவிட்டுச் சென்றன. அதனை அவன் கொண்டுபோய்த் தன்னுடைய ஆசிரியன் மனைவியிடத்திலே கொடுத்து அவளை வணங்கினன்.

## வாய்மை

30 மூவரிச் சந்திரற்கு முன்னின்ற காட்சிபோல்
ஏவர்பெற்றார் மேனு ளிரங்கேசா!— பூவில்
மனத்தோடு வாய்மை மொழியிற் றவத்தோடு
தானஞ்செய் வாரிற் றலை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, மேனாள் - முன்னாளில், மூவர் - மும்மூர்த்திகளும், அரிச் சந்திரற்கு - அரிச்சந்திரனுக்கு, முன நின்ற காட்சி போல் - முன்னே தோன்றிக் காட்சி கொடுத்தருளப் பெற்றதைப் போல, ஏவர்பெற்றார்-வேறு யார் அடைந்தார்கள்?, பூவில் - இந்நிலவுலகில், மனத்தொடு - மனத்தினோடு வாக்குப் பொருந்துமாறு, வாய்மை மொழியில் -

உண்மையைப் பேசுவாஞகில், தவத்தொடு - தவஞ் செய்தலோடு, தானம் செய்வாரில் தலை-தானஞ் செய்பவரைக் காட்டிலும் சிறந்தவனுவான்.

(வி-ம்.) முத்தேவர்களுடைய காட்சியையும் அரிச்சந்திரன் பெற்றதைப்போல வேறு யார் பெற்ருர்கள்? ஒருவருமே பெற 48
நீதி சூடாமணி

வில்லை; மனத்தொடு பொருந்துமாறு ஒருவர் உண்மையைப் பேசுவாராயின் அவர் த வஞ் செய்வாரினுந் தானஞ் செய்வா ரினுஞ் சிறந்து விளங்குவார் என்பதாம்.

## அரிச்சந்திரன் காட்சி பெற்ற கதை

அரிச்சந்திரன் உண்மை பேசுவதில் ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவனுகச் சிறந்து விளங்கிஞன். இவனுடைய மனத் திட்பத்தைக் கெடுப்பதற்கு விசுவாமித்திரர் எவ்வளவோ முயன்றும் பயனில்லாமற் போய்விட்டது. மனைவி மக்களை விற்றும் புலையனுக்கு அடி மையாகியும் உண்மை பேசுவதில் நிலை குலையாமல் நின்ருன். ஆகவே முத்தேவர்களும் அரிச் சந்திரனுக்குக் காட்சி கொடுத்தார்கள். தவஞ் செய்பவர்களும் அடைதற்கரிய சிறந்த பேற்றை அரிச்சந்திரன் உண்மை பேசியது ஒன்றிஞலேயே பெற்ருன்.

31. தாக்கி நிமிவதிட்டர் சாபத்தாற் றம்முடல்விட்
டேக்கமுற்ரு ரன்ரோ
இரங்கேசா—நோக்கினல்
செல்லா விடத்துச் சினந்தீது செல்லிடத்தும்
இல்லதனிற் றீய பிற.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, நிமிவதிட்டர் - நிமிச்சக்கரவர்த்தியும் வசிட்டரும, தாக்கி ஒருவரையொருவர் சினந்தெதிர்த்து, சாபத்தால்-ஒருவருக் கொருவர் வசவுரை வழங்கிக் கொண்டபடியினல், தம் உடல் விட்டு - தம்முடைய உடல்களை நீக்கி, ஏக்கம உற்ருர் அன்ரோ - வருந்திஞர்கள ல்லரோ?, நோக்கினல்-ஆராய்ந்து பார்த்தால், செல்லா இடத்து சினம தீது - செல்லத்தகாத மேலான இடத்திலே சினமானது தீமையை உண்டு செய்யும், செல்இடத்தும் - செல்லத்தக்க தாழ்வான இடத்திலும்,



அதனின் - அந்தச்சினத்தைப்பார்க்கினும், தீய பிற

இல்லெடுதி செய்யத் தக்கவை வேறு இல்லை.

(வி - ம்.) நிமிச்சக்கரவர்த்தியும் வசிட்டரும் ஒருவரை யொருவர் தாக்கி வசவுரை வழங்கிக்கொண்டபடியினால் தம்முடைய உடல்களை யிழந்து வருந்தினார்கள். சினமானது செல்லுகிற இடத்திலும் செல்லாத இடத்திலும் தீமையையே உண்டுபண்ணும். ஆகவே அதனை நீக்கிவிடுதல் வேண்டும் என்பதாம்.

## நிமி, வசிட்டர் கதை

நிமிச்சக்கரவர்த்தி உடலோடு விண்ணகஞ் சேர்வதற்கு வேள்வி செய்ய வசிட்டரிடத்திலே உடன்பாடு பெற்றுக்கொண்டு செய்யத் தொடங்கினான். அப்போது வசிட்டர் யாதோ ஒரு வேலையாகத் தேவலோகம் போய்த் தங்கியிருந்தார். இங்கு வேள்வி நடந்துகொண்டிருந்தது. வசிட்டர் திரும்பிவந்து வேள்வி நடைபெறுதலைக் கண்டார். வேள்வியைத் தொடர்ந்து நடத்துமாறு தாம் இசைவு வழங்கியதை மறந்து விட்டு நிமியைப் பார்த்து, "ஏ நிமி! நீ என்னுடைய கட்டளை யில்லாமல் வேள்வி செய்வதால் உன்னுடைய உடலை விட்டு நீங்கக் கடவை" என்று வசவுரை வழங்கினார். நிமியுஞ் சினமடைந்து, "நீர் இசைவு வழங்கியதை மறந்து வசவுரை கூறியபடியால் நீரும் என்னைப் போலவே உடலை விடக்கடவீர்"

என்று தானும் வசவுரை வழங்கினன். இருவரும் உடலில்லாமல் அந்தரத்திலே திரிந்தார்கள். இருவர்க்கும் இதனுல் ஏற்பட்ட தொல்லைகள் பல. சினமானது செல்லிடம் செல்லாவிடம் இரண்டிடங்களிலும் அல்லலை உண்டாக்குமென்பது இவர்களிடம் நன்கு விளங்கியது.

## இன்னுசெய்யாமை

32. பாந்தண் முனிமேற் படுத்தபரிச் சித்தன்றான்
 ஏந்துதுன்ப முற்ருன் இரங்கேசா!— மாந்தர்
 பிறர்க்கின்ன முற்பகல் செய்யின் றமக்கின்ன
 பிற்பகல் தாமே வரும்.




(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, பாந்தள் - பாம்பை, முனிமேல் படுத்த - முனிவர்மீது எடுத்துப்போட்ட, பரிச்சித்தன்-பரிச்சித்துமன்னன், தான் ஏந்து துன்பம் உற்ருன் - தான மிகுந்த துன்பத்தையடைந்தான், மாந்தர் - மனிதர்கள், இன்ன - துன்பத்தை, பிறர்க்கு - மற்றவர்கட்கு, முன்பகல் செய்யின் - காலைப் போதிலே செய்தால்,

தமக்கு - அவர்களுக்கு, இன்னா - துன்பம், பிற்பகல் - மாலைப் போதில், தாமே வரும் - பிறர் செய்யாமல் தாமே உண்டாகும்.

(வி - ம்.) பாம்பை முனிவர்மீது எடுத்துப் போட்ட பரிச்சித்துமன்னன் பிறகு மிகுந்த துன்பத்தையடைந்தான். மனிதர்கள் மறறவர்களுக்குத் துன்பத்தினைக் காலைப் போதில் செய்வார்களாயின் மாலைப் போதில் அவர்களுக்குத் துன்பம் தானே உண்டாகி விடும் என்பதாம்.

## பரிச்சித்து மன்னன் கதை

பரிச்சித்து மன்னன் என்பவன் காட்டிலே வேட்டையாடச் சென்றான். ஓரிடத்திலே ஒரு முனிவர் தம்மை மறந்து தவ நிலையில் ஈடுபட்டிருந்தார். அரசன் அவரோடு பேசத்தொடங்கிச் சில கேள்விகள் கேட்டான். அவர் தவநிலையில் இருந்தபடியால் யாதும் மறுமொழி கூறாமலிருந்தார். அதனால் அரசனுக்குச் சினமுண்டாகியது. ஓரிடத்திற் கிடந்த செத்தபாம்பு ஒன்றைத் தடியினால் தூக்கி அம்முனிவருடைய கழுத்திலே மாலையாகப் போட்டுவிட்டுச் சென்றான் . பிறகு அம்முனிவருடைய மகன் வந்து தந்தையைப் பார்த்தான். செத்த பாம்பு மாலையாகத் திகழ்தலைக் கண்டதும் மிகுந்த சினங்கொண்டான். "இவ்வாறு செய்தவன் இன்றைக்கு ஏழாவது நாள் தட்சகன் என்னும் பெரும்பாம்பால் கடிபட்டு மாளக்கடவன்"

என்று கொடிய வசவுரை வழங்கினன். அவ்வாறே அவனுக்குச் சாக்காடு உண்டாகியது. பிறர்க்குத் துன்பஞ் செய்வோர் விரைவில் அதன்பயனை அடைவர்.



## கொல்லாமை

33. சொல்லார் முனிக்கிறுதி சூழ்கார்த்த வீரன் குலம்

எல்லா மிறந்த திரங்கேசா—கொல்லவே
தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி
தின்னுயிர் நீக்கும் வினை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, சொல்ஆர் - புகழோடு கூடிய, முனிக்கு - சமதக்கினி முனிவர்க்கு, இறுதிசூழ் - இறப்பையுண்டாக்கிய, கார்த்த வீரியன்குலம் - கார்த்த வீரியார்ச்சுனனுடைய வழிமுறை, எல்லாம் இறந்தது-முழுவதும் அழிந்தொழிந்தது, கொல்ல- பிறர் கொலை செய்ய, தன் உயிர் நீப்பினும் - தன்னுயிர் போவதாக இருந்தாலும், தான் பிறிதின் உயிர் நீக்கும் வினை - ஒருவன்

மற்றொன்றின் உயிரைப் போக்குங் காரியத்தை, செய்யற்க - செய்யாதொழிக.

(வி - ம்.) சமதக்கினி முனிவரைக் கொலை புரிந்த கார்த்த வீரியார்ச்சுனனுடைய வழிமுறை முழுவதும் அழிந்தொழிந்தது; ஒருவன் தன்னுயிர் போவதாக விருந்தாலும் தான் மற்றொன்றின் உயிரைப் போக்கும் வினையைச் செய்யா தொழிக என்பதாம்.

## கார்த்த வீரியார்ச்சுனன் கதை

கா ர்த்த வீரியார்ச்சுனன் என்பவன் வேட்டையாடும் பொருட்டுக் காட்டிற்குச் சென்றான். பரசுராமருடைய தந்தையாகிய சமதக்கினி முனிவருடைய இருப்பிடத்திற்கு வந்து அம்முனிவரைக் கண்டு வணங்கினான். அவர் அவனுக்கும் அவனுடைய படைக்கும் காமதேனுவைக் கொண்டு நல்விருந்து செய்வித்தார். காமதேனுவின் சிறப்பினையுணர்ந்த கார்த்த வீரியார்ச்சுனன் அதனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு போவதற்கு முயன்றான். அது தன்னுடைய மயிர்க்கால்கடோறும் படை வீரர்களை உண்டாக்கி அவனுடைய படைகளையழித்தது. 52 நீதி சூடாமணி

அதனைக் கண்ட கார்த்த வீரியார் ச்சுனன் கடுஞ் சின ங்கொண் டு தன்னுடைய கைவாளால் சமதக்கினி

முனிவரைக் கொன்றான். முனிவருடைய மனைவி இரேணுகை இருபத்தொருமுறை தன்னுடைய மார்பிலே அறைந்து கொண்டு அழுதாள். அதனைக் கண்ட பரசுராமர் மனம் பொறாமல் கார்த்த வீரியன் குலமாகிய க்ஷத்திரிய குலத்தை இருபத்தொரு தலைமுறை கருவறுத்துக் கொன்றார்.

நிலையாமை

34. அட்டகோ ணத்தனுட லத்திரமேன்
றான்றிசைகள் எட்டும் பரவும் இ
ரங்கேசா—மட்டினால் நில்லாத வற்றை நிலையின
வென்றுணரும் புல்லறி வாண்மை கடை.

(இ - ள்.) திசைகள எட்டும் பரவும இரங்கேசா - எட்டுத் திக்குகளினும் உள்ளவர்களாற போற்றப் பெறுகிற அரங்கநாதப் பெருமானே!, அட்டகோணத்தன் - அட்ட கோணமுனிவர், தன் உடல் அத்திரம் என்றான்-தம்முடைய உடல்நிலையற்றது என்று சொன்னார், மட்டினால்-ஓர் அளவினால், நில்லாதவற்றை - நிலையில்லாதவைகளை, நிலையின என்றுஉணரும் - நிலையுடையன என்று மாறுபாடாக அறிகின்ற, புல்லறிவு ஆண்மை கடை - சிற்றறிவினைப் பெற்றிருக்கும் ஆற்றலானது இழிவுபட்டதாகும்.

(வி - ம்.) அட்ட கோண முனிவர் நீண்ட

ஆயுளைப் பெற்றிருந்தும் தம்முடைய உடல் நிலையற்றது என்று கூறினார்நிலையில்லாத பொருள்களை நிலை யுடையன என்று மாறுபாடாக உணருகின்ற சிற்றறிவுடைமையானது இழிந்ததாகும் என்பதாம்.

மூலமும் உரையும்

53

## அட்டகோணமுனிவர் கதை

ஒருகாலத்தில் நான்முகனுக்குத் தன்னுடைய வாணாளின்
மிகுதியைப்பற்றி ஆணவம் உண்டாகியது. மானிட ஆண்டுகள் பதினேழு லட்சத்து இருபத்தெட்டா யிரங் கொண்டது
கிரேதாயுகம். பன்னிரண்டு லட்சத்து தொண் ணூற்றாறுயிரங் கொண்டது திரேதாயுகம். எட்டுலட்சத்து அறுபத்துநாலாயிரங் கொண்டது துவாபரயுகம். நான்குலட்சத்து முப்பத்திரண் டாயிரங் கொண்டது கலியுகம். இந்நான்கு யுகங்களும்
அடங்கியது ஒரு சதுர்யுகம் என்று கூறப்பெறும். இந்தச் சதுர் யுகம் நான்முகனுக்கு ஒரு நாள். இந்நாள் முப்பது கொண்டது ஒரு திங்கள் ; இத்திங்கள் பன்னிரண்டு கொண்டது ஓர் ஆண்டு ; இத்தகைய நூறு ஆண்டுகள் நான்முகனுக்கு ஆயுள் அளவாகும்;

நான்முகனுடைய ஆணவத்தை அடக்கவேண்டும் என்று திருமால் எண்ணினார். நான்முகனை அழைத்துக்கொண்டு உரோமமுனிவரிடத்திற்குச் சென்றார். முனிவரைப் பார்த்து, "ஓ முனிவரே! உமக்குரிய வாழ்நாளின் அளவு என்ன?" என்று கேட்டார். அதற்கும் முனிவர் நான்முகன் ஒருவன் ஆயுள் முடிந்து இறந்தால் என் உடலில் ஒரு மயிர் உதிரும். இவ்வாறு மூன்றரைக் கோடி நான்முகர் கள் இறந்தால் என் உடலிலுள்ள மூன்றரைக் கோடி மயிரும் உதிர்ந்து எனக்குச் சாவுண்டாகும்" என்று சொன்னார். இதனைக்கேட்ட நான்முகனுக்குச் சிறிது ஆணவம் அடங்கியது. பிறகு திருமால் நான்முகனை அழைத்துக் கொண்டு அட்ட கோண முனிவரின் இருப்பிடத்திற்குச் சென்றார். அவரைப் பார்த்து, "உமக்கு வாழ்நாள் அளவு என்ன ?" என்று கேட்டார். அதற்கவர் இப்பொழுது நீங்கள் பார்த்து விட்டு வந்த உரோம முனிவர் ஒருவர் இறந்தால் எனக்கு ஒரு கோணல் நிமிரும். அவ்வாறு எட்டு முனிவர்கள் இறந்தால் எனக்குக் கோணல்கள் எட்டும் நிமிர்ந்து சாவு உண்டாகும்" என்று சொன்னார். இதனைக்கேட்ட திருமால், "இவ்வாறு நீண்ட வாழ்நாள் பெற்றுள்ள நீர் பெரிய மாளிகை கட்டிக் கொண்டு அதனில் வாழாமல் இவ்வாறு சிறு குடிசை கட்டிக்கொண்டு வாழ்கிறீரே ! காரணம் யாது?" என்று கேட்டார். அதற்கவர், "உடல் விரைவாக அழிந்தொழி தலைப்பார்த்தும் நிலையான 64

நீதி சூடாமணி

வாழ்க்கையாக எண்ணிக்கொண்டு வாழ்தல் அறிவுடைமை யாகுமா ?'' என்று கேட்டார். இதனைக் கேட்டவுடன் நான்முக னுடைய ஆணவமடங்கியது. உடல் விரைவில் அழிந்தொழியக் கூடியது. இதனைப் பெரிதாக எண்ணிப் பாராட்டிக் கொண் டிருக்கக் கூடாது என்று மெய்யறிவு பெற்றான்.

## துறவு

35. பீடுபெறு பட்டினத்துப் பிள்ளையைப்போ
லேதுறவார்க்
கீடு தருமோ இரங்கேசா—நீடுலகில்
யானெனு தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க்
குயர்ந்த வுலகம் புகும்.

(இ - ட.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே ! பீடுபெறு - பெருமைபெற்ற, பட்டினத்துப் பிள்ளையைப் போலே - பட்டினத்தடிகள் என்னும் திருவெண்காடரைப் போல், துறவார்க்கு - துறவறத்தினை மேற்கொள்ளாதவர்கட்கு, ஈடுதருமோ - இம்மானிடப்பிறவியானது நல்ல பலனைக் கொடுக்குமோ ?, நீடு உலகில் - நீண்ட உலகத்தில், யான் எனது என்னும் செருக்கு அறுப்பான்-நான்

என்னும் அகப்பற்றையும் எனது என்னும் புறப்பற்றையும் கெடுத்தொழிப்பவன், வானோர்க்கு உயர்ந்த உலகம் புகும் - தேவர்கட்குங் கிடைத்தற்கரிய வீட்டுலகத்தை யடைவான்.

(வி - ம்.) பட்டினத்துப் பிள்ளையாரைப் போலப் பற்று முழுவதையும் ஒழித்துத் துறவறத்தை மேற்கொள்ளாதவர்கட்கு இம்மனிதப்பிறவி பலனைக்கொடுக்குமா ; யான் எனது என்றுண் டாகும் பற்றினை முற்றத்துறப்பவர்கடாம் தேவர்கட்கும் கிடைத்தற்கரிய வீடுபேற்றினை யடைவார்கள் என்பதாம்.



## பட்டினத்தடிகள் கதை

பட்டினத்தடிகள் என்னும் திருவெண்காடர் காவிரிப் பூம்பட்டினத்திலே மிகுந்த சிறப்போடு வாழ்ந்திருந்தார். வாணிகத்திறற் பெரும்பொருள் திரட்டிக் குபேரனைப்போல் வாழ்ந் திருந்தார். இவருடைய பொருட் செல்வம் அரச செல்வத்தினுஞ் சிறந்து விளங்கியது. நல்வினைப் பயனால் இவருக்குத் திடீரென்று மெய்யறி வுண்டாகியது. "பாரனைத்தும் பொய் யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல் ஆருந் துறப்பதரிதரிது" என்று பெரியோரும் போற்று மாறு எல்லாப் பொருள்களையும் முற்றத் துறந்து

சென்றார். அதனால் இவருடைய மெய்யறிவு நாளும் வளர்ந் தோங்கியது. பெருமையிற் சிறந்த மெய்யறி வாளராகத் திகழ்ந்து பிறகு வீடுபேற்றை யடைந்தார். மெய்த் துறவு கொள்வோர் வீடுபேற்றையடைவரென்பது இவரிடம் நன்கு விளங்கியது

## மெய்யுணர்தல்

36. கர்ப்பத்தி லேசுகனார் கேடில்பொரு
ளைக்குறித்தார் இப்புதுமைக் கன்பா
மிரங்கேசா—உற்பத்தி ஐயுணர் வெய்தியக் கண்ணும்
பயமின்றே மெய்யுணர் வில்லா தவர்க்கு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, கர்ப்பத்திலே சுகனார் - கிளியுருவங்கொண்ட திலோத் தமையின் கருப்பத்தில் இருக்கும் பொழுதே சுகமுனிவர், கேடு இல் பொருளை குறித்தார் - அழியாப் பொருளாகிய மெய்ப்பொருளை உணர்ந்துகொண்டார், இப் புதுமைக்குவியக்கத்தக்க இந்நிகழ்ச்சிக்கு, அன்பு ஆம - இறைவன்பால் அன்புமிகுதிப் பட்டிருந்ததே காரணமாகும், உற்பத்திதோன்றுகிற, மெய் உணர்வு இல்லாதவர்க்கு - உண்மை யறிவற்றவர்கட்கு, ஐ

உணர்வு எய்தியக் கண்ணும் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும ஐமபுலன்களினும் 56 நீதி சூடாமணி

செல்லும் ஐந்தறிவும் ஒருவழிப்பட்ட விடத்தும், பயம் இன்று - யாதும் பயனில்லையாம்.

(வி - ம்.) சுகமுனிவர் திலோத்தமையின் கருப்பத்திலிருந்த பொழுதே மெய்ப் பொருளை உள்ள வாறுணர்ந்து கொண்டார். மெய்ம்மைப் பொருளை உணர்ந்து கொள்ளாதவர்கள் ஐயறிவை யும் ஒருவழிப்படுத்திய விட த்தும் அவர்கள் அதனுல் யாதும் பயனைப் பெறுர்கள் என்பதாம்.

சுகர் கதை

சுகர் கிளியுருவம்பெற்றிருந்த திலோத்தமையின் வயிற்றிலே இருக்கும் பொழுதே மெய்யறிவு பெற்றிருந்தார். இவருடைய தந்தை வியாசர், சுகருக்கு உலகத்தில் பிறந்து மாயையிலே உழல விருப்ப மில்லை. ஆகவே அவர் தாய் வயிற்றை விட்டு வெளிவராமலே காலங் கழித்தார். இந்திரன் முதலிய தேவர்கள் எவ்வளவோ வேண்டியழைத்தும் வெளிப்படவில்லை. அவர் கட்கு யாதோ காரணங் கூறிக்கொண்டிருந்தார். இவ்வாறு பன்னிரண்டு ஆண்டுகள் திலோத்ததமையின் வயிற்றில் கழித் தார். பிறகு திருமால் வந்து சுகரை வெளிப்படுத்திஞர். வெளியே வந்த சுகர் மாயையின் வழிப்படாமல்

என்றும் மெய் யறிவுடனேயே திகழ்ந்தார் . மெய்யுணர்வில்லாமல் எத்தகைய பயனும் உண்டாக மாட்டாது என்பது சுகரிடத்தில் நன்கு விளங்கியது.

அவாவறுத்தல

## 37. தேசஞ்சோல்

பத்ரகிரி சிந்தையின்மூ ஈசன் பரவும்
வாசைவிட்டான்
இரங்கேசா—பாச
அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை தான்வேண்டு
மாற்றுன் வரும்.

(இ - ள்.) ஈசன் பரவும இரங்கேசா - உருத்திர மூர்த்தியாலும போற்றப்படுகிற



தேசம்சொல் பத்ரகிரி - பலநாட்டாராலும் புகழப்படுகிற பத்திரகிரியரசன், சிந்தையில் மூ ஆசைவிட்டான் - தன் மனத்திலே மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூன்று ஆசைகளையும் ஒழித்தான், பாச - தொடர்புள்ள, அவாவினை - ஆசையை, ஆற்ற அறுப்பின் - முழுவதும் ஒழித்தால், தவாவினை - கெடாத

நல்வினை

யானது, தான்வேண்டும் ஆற்றான் வரும் - தான் விரும்புகிறபடியே உண்டாகும்.

(வி - ம்.) எல்லோராலும் போற்றப் படுகிற பத்திரகிரியார் தம்முடைய உள்ளத்திலே மூவாசைகளையும் அடியோடு போக்கினார்; ஒருவர் ஆசைகளனைத்தையுங் கெடுத்தால் கெடாத நல்வினையானது அவர்கள் விரும்பியபடியே உண்டாகும் என்பதாம்.

பத்திரகிரியார் கதை

பத்திரகிரியார் என்பவர் பட்டினத்துப் பிள்ளையார் காலத்திலே வாழ்ந்திருந்த ஓர் அரசர். அவர் முந்நூறு பெண்களைத் திருமணஞ் செய்து கொண்டு மிகுந்த சிறப்போடு வாழ்ந்திருந்தார். பிறகு பட்டினத்தடிகளின் துறவைப் பார்த்த பிறகு இவருடைய உள்ளமும் மாறியது, பட்டினத்தடிகளையே தம்முடைய ஆசிரியராகக் கொண்டு அறிவுரை பெற்றார். தாமும் தம்முடைய ஆசிரியரைப்போல் பெருந்துறவை மேற்கொண்டு விளங்கினார். இதனால் இவருடைய பெருமையும் எங்கும் பரவிப் புகழடைந்தது.

௩௮

38. •சிந்துபதி தந்தையொடு தேர்விசய னிறந்தான்

இந்துதவ ழிஞ்சி யிரங்கேசா— முந்திவரும்
ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்.

(இ - ள்.) இந்து தவழ இஞ்சி இரங்கேசா - திங்கள் தவழும மதில் சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளிய 58 நீதி சூடாமணி

அரங்கநாதப்பெருமாளே !, சிந்துபதி - சயிந்தவன், தந்தை யொடு - தன்னுடைய தந்தையோடு, தேர் விசயனால் இறந்தான் - தேரையுடைய அருச்சுனனால மாண் டொழிந்தான், முந்திவரும் - ஒருவனுடைய அறிவிற்கு முன்னே வந்து தோன்றும, ஊழின் - ஊழைப்பார்க்கினும், பெருவலி- மிகுந்த ஆற்றலுள்ளவை, யா உள-வேறு எவை யிருக்கின்றன, மற்று ஒன்று சூழினும் - வேறொரு சூழ்ச்சி யைச் செய்தாலும், தான முந்துறும் - தானே எல்லாவற்றிற்கும் முற்பட்டு நிற்கும்.

(வி - ம்.) சயிந்தனைவன் தன்னுடைய தந்தையோடு அருச்சுனனால் மாண்டொழிந்தான். ஊழைப்பார்க்கினும் மிகுந்த பேராற்றல் பொருந்தியது வேறொன்றுமில்லை; வேறொரு சூழ்ச்சியைச் செய்தாலும் ஊழானது தானே எல்லாவற்றிற்கும் முற்பட்டு நிற்கும் என்பதாம்.

### சயிந்தவன் கதை

பாரதப்போரில் சயிந்தவன் அபிமன்னனைக்

கொன்று விட்டான். பதினன்காம் நாட்காலையில் அருச்சுனன் போருக்குப் புறப்படுகையில் தன் மகன் இறந்ததைக் குறித்து மிகுந்த வருத்த மடைந்தான். 'என் மகனைக் கொன்றவன் எவனே அவன் தலையை இன்று கதிரவன் மறைவதற்குள் அறுத்து நிலத்தின் மீது தள்ளாமற் போவேனாயின் தீயில் மூழ்கி உயிரைவிடக் கடவேன்'' என்று உறுதி மொழி கூறிக்கொண்டு புறப் பட்டான். இதனையுணர்ந்த துரியோதனன் இன்றுமாலைவரையில் சயிந்தவனை எவ்வாறேனும் காப்பாற்றிவிட வேண்டுமென்று முடிவு செய்து சயிந்தவனுக்குப் பலமான பாதுகாப்பளித்தான்.

சயிந்தவனுடைய தந்தையோ என் மைந்தனுடைய தலையை எவன் நிலத்தில் வீழ்த்துகிறானே அவன் தலை நூறு துண்டாக வெடித்து விழவேண்டும்'' என்று தவஞ் செய்து கொண்டிருந்தான். போர் நடந்து கொண்டிருந்தது. பொழுதுபோகச் சில நாழிகைகளே இருந்தன. சயிந்தவன் இருக்குமிடத்தைக் கூட அருச்சுனனால் கண்டுபிடிக்க முடியவில்லை. அருச்சுனனுக்குத்



ணிய மாயவன் தம்முடைய கையிலிருந்த ஆழிப்படையைக் கதிரவன்மீது செலுத்தினர். அப்படை கதிரவனை மறைத்து விட்டது.

எல்லோருங் கதிரவன் கடலில் மூழ்கிவிட்டான் என்று எண்ணினூர்கள். அருச்சுனன் தீயில் மூழ்குவதற்காகத் தீ வளர்க்கச் செய்தான். துரியோதனன் பக்கத்தார் இனிமேல் அருச்சுனன் மாண்டொழிவான். வெற்றி நம்முடையதேயாகும் என்று மகிழ்ச்சிக் கடலில் திளைத்தார்கள். அருச்சுனன் தீப் பாய்ந்து மாளுதலை வேடிக்கை பார்ப்பதற்காக அவன் தீ வளர்த்துக் கொண்டிருந்த இடத்தில் வந்து கூடினூர்கள். சயிந்தவனும் அங்கே வந்தான். கண்ணபிரான் அருச்சுனனைப் பார்த்து "அதோ சயிந்தவன் இருக்கிறுன். அவனைக் கொன்று வீழ்த்துவாயாக" என்று கூறினூர். அருச்சுனன், "கதிரவன் மறைந்து விட்டபடியால் இனிமேற் கொல்லமாட்டேன்" என்றுன். கண்ணபிரான், "கதிரவன் இன்னும் மறையவில்லை. கதிரவனைப் பார்ப்பாயாக;" என்று கூறித் தம்முடைய ஆழிப்படையை மீட்டுக்கொண்டார். அவ்வளவில் கதிரவன் விளங்கினுன். கதிரவனைக் கண்ட அருச்சுனன் களிப்படைந்து சயிந்தவனுடைய தலையை அறுத்தான். கண்ணபிரான், சயிந்தவன் தலையைக் கீழே வீழ்த்தாது தவஞ் செய்யும் சைந்தவனுடைய தந்தையின் கையிலே கொண்டு போய் வீழ்த்துவாயாக என்று அருச்சுனனுக்குரைத்தார்.

அருச்சுனன் கண்ணன் கட்டளைப்படியே சயிந்தவன் தலையைத் தவத்திலிருந்த அவனுடைய தந்தையின் மடித்தலத்தில் போய் விழச் செய்தான்.

தன்னுடைய மடியில் யாதோ வந்து வீழ்ந்ததைக் கண்ட அவன் திடுக்கிட்டு அத்தலையை எடுத்து நிலத்திலே போட்டான். தன் மகன் தலையை நிலத்தில் வீழ்த்துவோன் தலை நூறு துண்டுகளாக வெடிக்க வேண்டுமென்பது அவனுடைய தவமாகையால் அதன் படி அவனுடைய தலையே நூறு துண்டாக வெடிக்க அவன் மாண்டொழிந்தான். அருச்சுனன் தீப்பாய்வதால் நன்மைகளெல்லாந் தங்கட்கே உண்டாகப் போகிறதென்று எண்ணிய துரியோதனன் முதலியோருடைய எண்ணமும் சயிந்தவனுடைய எண்ணமும் அழிந்தொழியுமாறு இவ்வாறு ஊழே எல்லாவற்றிற்கும் முற்பட்டு நின்றது.

# உ. பொருட்பால்

## அரசியல்

### இறை மாட்சி

39. ஒன்றி மறித்தான் உரோணிசக டைச்சேரி
என்றும் புகாமல் இரங்கேசா - நன்று முறைசெய்து
காப்பாற்று மன்னவன் மக்கட் கிறையென்று
வைக்கப் படும்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப*

பெருமானே !, செளரி - சனிபகவான, உரோணி சகடை - உரோகணி சகடையில், என்றும் புகாமல் - என்றும நுழையாமல், ஒன்றி - தசரதன் சனிமண்டலத்தையடைந்து . மறித்தான் தடுத்தான், நன்று - நன்றாக, முறை செய்து காப்பாற்றும, மன்னவன் - செங்கோல் ஓச்சிக் குடிகளைப் பாதுகாக்கும் அரசன், மக்கட்கு - குடிக ளுக்கு, இறை என்று வைக்கப் படும் - தலைவன் என்று கூறப்பெறுவான்.

(வி - ம்.) சனிபகவான் உரோகணி சகடையில் என்றும் நுழையாமல் தசரதன் தடுத்தான்; நன்றாகச் செங்கோல் ஓச்சிக் குடிகளைப் பாதுகாக்கும் அரசன் குடிகளுக்கு நல்ல தலைவன் என்று கூறப்படுவான் என்பதாம்.

### தசரதன் கதை

சனிபகவான் உரோகணி சகடையிற் புகுந்தால் உலகில் பன்னிரண்டு ஆண்டுகட்கு மழை பெய்யமாட்டாது என்னுஞ் செய்தியை உணர்ந்திருந்த தசரத மன்னன் சனிபகவான் உரோகணி சகடையிற் புகத்தொடங்கிய காலத்தில் தன்னுடைய மூலமும்



தேரிலேறிச் சனிமண்டலத்தை யடைந்து சனிபகவான் உரோகணி சகடையில் புகாமல் மறித்துப்

போரிட்டுத் தடுத்து விட்டான். மேலும் எக்காலத்திலும் உரோகணி சகடையில் புகுவதில்லை யென்னும் வாக்குறுதியையும் சனிபகவானிடம் பெற்றுக்கொண்டு திரும்பினன். அதனல் உலகில் பஞ்சம் நேராமல் ஒழிந்தது. குடிபெயர்ந்துகொண்டிருந்த மக்களுங் குடிபெயர்வதை நிறுத்திவிட்டார்கள். அறுபதினயிரம் ஆண்டுகள் தசரதன் முறைப்படி அரசாட்சி செய்து பலராலும் நல்ல அரசன் என்று பாராட்டப்பெற்ருன்.

## கல்வி

40. மல்லல் வியாகரண மாருதிகற் கக்கருதி
எல்லவன்பின் போந்தான் இரங்கேசா - நல்ல
ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற கெழுமையு
மேமாப் புடைத்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, மாருதி - அனுமான், மல்லல் வியாகரணம - பெரிய இலக்கணத்தை, கற்க கருதி - படிப்பதற்கு எண்ணி, எல்லவன்பின் போந்தான்-கதிரவனுக்குப் பின்னே வந்தான், நல்ல-நன்மை பொருந்திய, ஒருமைக்கண் - ஒருபிறபபில், தான் கற்ற கல்வி - தான படித்த படிபபானது, ஒருவறகு-ஒருவனுக்கு, எழுமையும் - ஏழு பிறவிகளினும், ஏமாப்பு உடைத்து -

உதவுதலை உடையதாகும்.

(வி.- ம்.) மாருதியானவன் கதிரவனிடத்திலே இலக்கணங் கற்க எண்ணி அவன் பின்னே அலைந்து திரிந்தான், ஒரு பிறப்பின் கண் ஒருவன் கற்ற கல்வியானது அவனுக்கு எழு பிறப்புக் களினும் உதவுதலைச் செய்யும் என்பதாம்.

அனுமான் கதை

அனுமான் கல்வியறிவுடையவனாக விளங்கினான். இலக்கணத்- தைக் கதிரவனிடங் கற்றுணர வேண்டுமென்று எண்ணினான்; ·62

நீதி சூடாமணி

தன் எண்ணத்தைக் கதிரவனிடங் கூறினான். கதிரவனோ "நான் ஓரிடத்திலும் நிலைபெறாதவனாய்க் கணத்துக்கு ஆயிரக்கணக்கான யோசனை தொலை விரைந்து செல்லுஞ் செலவையுடைய வனாக விருக்கின்றேனே; என்னுடைய விரைவுக்குத் தக்கவாறு நீ என்னைப் பின் தொடர்ந்துவந்து கற்றுக்கொள்ளவல்லையோ?" என்று உசாவினான். அனுமானும் அதற்கு இணங்கியவனாய்க் கதிரவனுடைய விரைவுக்குத் தக்கவாறு தானும் கதிரவனைத் தொடர்ந்து விரைந்தோடி இலக்கணத்தை நன்கு கற்றுக் கொண்டான், பெருமுயற்சியோடு அனுமான் கல்வியை இவ்வாறு கற்றுக்கொண்டது அக்கல்வி எழு பிறப்பினுந் தொடர்ந்து வந்து உதவுதலைச் செய்யும் என்னும் எண்ணத்தினாலேயாம்.

41. ஞானசம் பந்தருட னன்றுய்ச் சமணரேதிர்த்
தீனமுற்று ரன்ரே இரங்கேசா - ஆன அரங்கின்றி
வட்டாடி யற்றே நிரம்பிய நூலின்றிக் கோட்டி
கோளல்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, ஞானசம்பந்தருடன் - திருஞான சம்பந்த ரோடு, சமணர் - சமணர்கள், நன்றாய் எதிர்த்து - பலமாக எதிர்த்துப் போரிட்டு, ஈனம் உற்றார் அன்றோ - இழிவடைந்தார்கள் அல்லரோ ?, நிரம்பிய நூல் இன்றி கோட்டி கொளல் — நிறைந்த நூலுணர்ச்சி யில்லாமல் சபையிற் பேசுதல், ஆன அரங்கு இன்றி - தகுதியான வகுப்பிட மில்லாமல், வட்டு ஆடி அற்று - சூதாடு கருவியை உருட்டினாற் போன்றதாம்.*

(வி - ம்.) *திருஞான சம்பந்தரோடு சமணர்கள் எதிர்த்துச் சொற் போரிட்டு இழிவடைந்தார்கள் ; நிரம்பிய நூலுணர்ச்சி யில்லாமல் அவையிலே ஒன்றைப் பேசத் தொடங்குதல் மூலமும் உரையும்*



வகுக்கப்பட்ட இடங்களில்லாமல் பாய்ச்சிகையை உ

ருட்டின தைப் போன்றது என்பதாம்.

## திருஞானசம்பந்தர் கதை

மதுரை மாநகரிலே சமண சமயம் பரவுகின்ற தென்பதை உணர்ந்த திருஞானசம்பந்தர் அதனைத் தடுத்துச் சைவசமயத்தைப் பரப்புதற் பொருட்டு மதுரைக்குச் சென்றார். சமணர்கள் சம்பந்தரை எதிர்த்துச் சொற்போரிடுவதற்கு நிரம்பிய நூலுணர்ச்சியும் நல்லறிவும் இல்லாதபடியினால், காய்ச்சலை நீக்குதல், அனல் வாதம் புனல் வாதம் ஆகியவைகளில் திருஞான சம்பந்தரை வெல்ல முயன்றார்கள். மூன்றிடங்களினுஞ் சமணர் கட்குத் தோல்வியே உண்டாயிற்று. அவர்கள் கழுவிலே ஏறி மடிந்து மிகுந்த இழிவையடைந்தார்கள்.

## கேள்வி

42. பாகவதங் கேட்டுப் பரிச்சித்தன் முத்திபெற்றான்

ஏக வுருவா மிரங்கேசா - சோக
இழுக்க வுடையுழி யூற்றுக்கோ லற்றே
ஒழுக்க முடையார் வாய்ச்சொல்.

(இ - ள்.) ஏக உருவாம் இரங்கேசா - எல்லாம் ஒரே வடிவாக விளங்கும் அரங்கநாதப்

பெருமானே!, பரிச் சித்தன் - பரிச்சித்து ராசன், பாகவதம் கேட்டு முத்தி பெற்றான் - சுகரிடத்திலே பாகவத புராணத்தைக் கேட்டு வீடு பேற்றை யடைந்தான் , ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல் - நல்லொழுக்கம் உடையவர்களுடைய வாயிலே பிறக் குஞ் சொல், சோகம் இழுக்கல் உடைஉழி - சோர்ந்து வழுக்குதலையுடைய சேற்று நிலத்தில் , ஊன்று கோல் அற்று - ஊன் றுகோல்போல் உதவுந் தன்மையை உடையது.



(வி - ம்.) பரிச்சித்து மன்னன் பாகவதத்தைக் கேட்டு வீடு பேற்றை யடைந்தான். நல்லொழுக்கம் உடையவர்களுடைய வாயிலே பிறக்குஞ் சொல்லானது சோர்ந்து வழுக்குதலை யுடைய சேற்று நிலத்திலே ஊன்று கோலைப் போல உதவுந் தன்மையோடு கூடியது என்பதாம்.

## பரிச்சித்துமன்னன் கதை

பரிச்சித்துமன்னன் சுகமுனிவரையடுத்துப் பாராட்டி அவரைப் பெருமைப் படுத்தினான். அவருடைய வாய்மொழியை விரும்பிக் கேட்டான். அவர் கல்வியும் ஒழுக்கமும் நிரம்பப் பெற்ற பெரியவராகையால் அம்மன்னனுக்குப் பாகவத புராணத்தை

உரைத்தருளினர். அவர் கூறிய நல்லுரையினல் பரிச்சித்துமன்னன், தனக்கு நேரக்கூடியதாக விருந்த சாவுக்குத் தப்பி உயிர் பிழைத்ததோடு தீவினையைப் போக்கினன். இறுதியிலே விடுபேற்றையும் அடைந்தான். நல்லொழுக்கம் உடையவர்களுடைய வாய்ச்சொல் வழுக்கு நிலத்திலே ஊன்று கோலைப் போலப் பயன்படும் என்பது பரிச்சித்து மன்னனிடம் நன்கு விளங்கியது.

அறிவுடைமை

43. சீதரனைப் பார்த்தனன்று சேர்ந்தா
னரவுயர்த்தோன் யாதவரைச் சேர்ந்தா னிரங்கேசா -
ஓதில் . அறிவுடையா ராவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லாத வர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, அன்று - பாரதப் போருக்கு முன்னல், சீதரனை பார்த்தன சேர்ந்தான் - திருமகள் மணளனுகிய கண்ணபிரானை அருச்சுனன் சேர்ந்துகொண்டான, அரவு உயர்த்தோன் - பாம்புக் கொடியை உடையனுகிய துரியோதனன், யாத வரை சேர்ந்தான் - யாதவர்களைப படைத்துணைவராக்கி அவர்களோடு சேர்ந்து கொண்டான், ஓதில் - உரைத்தால், மூலமும உரையும்

ஆவது அறிவார் அறிவு உடையார் - மேல் நிகழுங் காரியத்தை அறியவல்லவர் அறிவுடையாராவர், அஃது அறிகல்லாதவர் அறிவு இல்லார் - அதை அறிய மாட்டாதவர் அறிவில்லாதவராவர்.

(வி - ம்.) அருச்சுனன் கண்ணபிரானைப் படைத்துணையாக்கி அவரோடு சேர்ந்துகொண்டான். துரியோதனனோ யாதவர்களைப் படைத்துணையாக்கி அவர்களோடு சேர்ந்து கொண்டான்; மேல் நிகழக் கூடிய காரியத்தை அறிய வல்லவர் அறிவுடையாராவர்; அதனை அறியமாட்டாதவர் அறிவில்லாதவராவர் என்பதாம்.

## படைத்துணை சேர்த்த கதை

பாரதப் போர் நிகழ்வதற்கு முன் அருச்சுனனுந் துரியோதனனும் கண்ணபிரானைத் தத்தம் பக்கத்தில் படைத்துணையாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்னும் நோக்கத்தோடு கண்ணபிரானிடஞ் சென்றார்கள். இருவரும் ஒரே சமயத்தில் கண்ணபிரானைக் கண்டு போரில் தத்தம் பக்கத்தில் இருந்து உதவி செய்யவேண்டும் என்று வேண்டிக் கொண்டார்கள். கண்ணபிரான் அவர்களைப் பார்த்துப், "போ

ரில் நான் படைக்கலம் எடுக்கமாட்டேன். நான் ஒரு பக்கத்தில் இருந்தால் என்னுடைய படைகள் படைக்கலத்தோடு எதிர்ப்பக்கத்தில் இருக்கும்'' என்று கூறினார். அருச்சுனன் கண்ணபிரானைப் பார்த்துப், ''படைக்கலம் எடுக்காவிட்டாலும் தேவரீர் என்பக்கத்தில் இருக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டான். துரியோதனனோ ''படைக்கலமற்ற நீ வேண்டியதில்லை. உன்னுடைய படைகளை அனுப்பினாற் போதும்'' என்று சொன்னான். யாதவப் படையை அழைத்துக்கொண்டு சென்றான். பின் நிகழப் போவதனை அறிவுடையார்தாம் முன்னர் உணர்வர் ; அறிவற்றவர்கள் அதனை முன்னால் உணரமாட்டார்கள் என்பது இவர்கள் இருவரிடத்திலும் நன்கு விளங்கியது.





குற்றங்கடிதல்

44. கையரிந்தான் மாறன் கதவிடித்த குற்றத்தால்
எய்யுஞ் சிலைக்கை இரங்கேசா — பையத்
தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்.

(இ - ள்.) எய்யும் சிலை கை இரங்கேசா - அம்புவைத் தெய்யும் வில்லைக் கையிலுடைய அரங்கநாதப் பெருமானே!, கதவு இடித்த

குற்றத்தால் - ஓர் அந்தணன் வீட்டுக் கதவைத்தட்டிய குற்றத்திற்காக , மாறன் கை அரிந்தான் - பாண்டியன் தன்னுடைய கையை வெட்டிக்கொண்டான, பழிநாணுவார் - பழிக்கு அஞ்சும் பெரியவர்கள் , பையமெதுவாக, தினை துணை ஆம் குற்றம் வரினும் - தினையள வினதாகிய குற்றம் ஏற்பட்டாலும் , பனை துணை ஆ கொள்வர் - பனையளவு பெரிதாகக் கொள்ளுவார்கள்.

(வி - ம்.) பாண்டியனவன் கதவைத்தட் டிய குற்றத்திற் காகக் கையை வெட்டிக் கொண்டான்- பழிக்கு அஞ்சும் பெரிய வர்கள் தம்மிடத்திலே தினையளவின தாகிய குற்றம் ஏற்பட்டாலும் அதனைப் பனையளவாகக் கொண்டு வருந்துவார்கள் என்ப தாம்.

## பொற்கைப்பாண்டியன் கதை

மதுரை மாநகரில் முன் காலத்தில் வாழ்ந்திருந்த ஓர் அந்தணன் காசிக்குச் செல்ல எண்ணினான். தன்னுடைய எண்ணத்தை ஒரு நாளிரவு தன்னுடைய மனைவிக்குத் தெரியப் படுத்தினான் - அவளுக்கு வேறு துணை யில்லையாகையால் அவள் "எனக்கு யார் துணை ?" என்றாள். "உனக்கு அரசன் துணை" என்றான் கணவன். அப்பொழுது நல்விர வாகையால் நகர் சோதனைக்குச் சென்ற பாண்டியன்

அந்த உரையாடலைக் கேட்டான். தன்னிடத்தில் குடிகள் கொண்டிருக்கும் நம்பிக்கை மூலமும் உரையும்



அவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது. மறுநாள் முதல் அவ்வீட்டையும் மற்றைய வீடுகளையும் அரசன் கண்காணித்து வந்தான். அவ்வந்தண மாதுக் களித்தது போலவே அத்தெருவி லிருந்த மற்றைப் பெண்கட்கும் ஆடை யணிகலன்கள் உணவுப் பொருள்கள் முதலியன வழங்கினான். இவ்வாறு பதினெட்டுத் திங்கள் சென்றன. இறுதியில் ஒருநாள் அவ்வீட்டிடம் வந்த போது உள்ளே ஆண் பிள்ளையின் குரலைக் கேட்டான். ஐயந் தெளியக் கதவைத் தட்டினான். அந்தணன், ஐயத்தோடு "யாரடா கதவைத் தட்டுகிறவன்?" என்று அதட்டிக் கேட்டான். இதனால் அரசன் அவ் வீட்டுக்குரிய அந்தணன் வந்து விட் டனன் என்பதை அறிந்தான். அந்தணன் தன்மனைவிமீது ஐயம் கொள்ளுமாறு செய்து விட்டோமே என்று உள்ளம் வருந்தினான். சிறிதுந் தாழ்க்காமல் பிறவீட்டுக் கதவுகளையுந் தட்டிக் கொண்டே போய் விட்டான்.

மறுநாள் அத்தெரு வாழ்வார் அரசனிடஞ் சென்றார்கள். "யாரோ ஒரு பொல்லாதவன் எங்கள் தெருவினுள் நுழைந்து
இரவில் கதவைத்தட்டி எங்கட்கெல்லாம் அச்சத்தை உண் டாக்கினான். அவனைப் பிடித்து ஒறுத்தல்

வேண்டும்'' என்று உரைத்தார்கள். அரசன் அவர்களைப் பார்த்து "அவ்வாறு கதவைத் தட்டியவனை என்ன செய்யலாம்?" என்று கேட்டான். "கையைத் தறித்து விடுதல் வேண்டும்'' என்றார்கள் அந்தணர்கள். அரசன், "கதவைத்தட்டியவன் நான்தான்" என்று கூறிக்கொண்டே வாளால் தன்னுடைய கையைத் தறித்துக் கொண்டான். அதனைக்கண்ட அந்தணர்கள் அரசனால் உண்மையறிந்தார்கள். அவன் கையை இழந்தமைக்கு வருந்தினார்கள். அவனுடைய கை வளருமாறு வேள்வி செய்தார்கள். அதனால் • அவனுக்குப் பொன்னாலாகியகை உண்டாகியது. ஆகவே அவன் பொற்கைப்பாண்டியன் என்று பெயர் பெற்றான்.

[பொன்னாற் கை செய்து வைத்துக் கொண்டான் என்றுங் கூறுவர்.]



### பெரியாரைத் துணைக் கோடல் 45.

யோகமுனி ராகவனை யுற்றரக்கர் போர்களைந்தே
யாக முடித்தான் இரங்கேசா - ஆகையால்
தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப்

பொருமாளே

யோகமுனி - விசுவாமித்திரர், ராகவனே உற்று - இராம பிரானைத் துணையாகக் கொண்டு, அரக்கர் போர் களைந்துமாரீசன் சுவாகு முதலிய அரக்கர்களுடைய போரைப் போக்கி, யாகம் முடித்தான் - தம்முடைய வேள்வியைச் செய்து முடித்தார். ஆகையால் - ஆனபடியால், தக்கார் இனத்தன் ஆய் - தகுதியானவர்களுடைய கூட்டத்தை யுடையவனாய், தான் ஒழுக வல்லானை - தான் நடந்து கொள்ளக் கூடியவனை, செற்றார் செய்யக் கிடந்தது இல் - பகைவர்கள் செய்யக் கூடியதாகிய தீங்கு ஒன்றும் இல்லை.

(வி - ம்.) இராமபிரானைத் துணையாகக் கொண்டு விசுவாமித்திரர் அரக்கர்களுடைய போரை நீக்கி வேள்வியை முடித்தார் ; தகுந்தவர்களுடைய துணையை மேற்கொண்டு நடக்கக் கூடியவனை அவனுடைய பகைவர்கள் எத்தகைய தீங்காலும் ஒழிக்கமுடியாது என்பதாம்.

## விசுவாமித்திரர் கதை

விசுவாமித்திரர் வேள்வி செய்த காலத்தில் அரக்கர்கள் தொல்லை செய்து அவருடைய வேள்வியைக் கெடுக்கப் பார்த்தார்கள். இராமபிரானைத் தசரத மன்னரிடங் கூறி

விசுவாமித்திரர் அழைத்துக் கொண்டுபோய் அரக்கர்களைக் கொன்றழிக்கச் செய்தார். பிறகு எத்தகைய இடையூறும் இல்லாமல் தம்முடைய வேள்வியைச் செய்து முடித்தார். விசுவாமித்திரர் தகுந்தவர்களுடைய துணையைப் பெற்றபடியால்



அவருடைய பகைவர்களால் பிறகு வேள்விக்கு இடையூறு செய்து அதனை அழிக்க முடியவில்லை.

## சிற்றினஞ் சேராமை

46. துன்னு சகுனிகன்னன் சொற்கேட்
டரவுயர்த்தோன்
என்னபயன் பெற்றான் இரங்கேசா - மன்னிய
சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான் சுற்றமாச்
சூழ்ந்து விடும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, அரவு உயர்த்தோன் - பாம்புக் கொடியை உடையவனாகிய துரியோதனன், துன்னு சகுனிகன்னன்- தனக்கு நண்பினராகப் பொருந்திய மாமனாகிய சகுனி, கன்னன் ஆகியோருடைய, சொல் கேட்டு - சொல்லைக் கேட்டு, என்னபயன்

பெற்ருன்-யாது பயனை அடைந்தான, மன்னிய-நிலைபெற்ற பெருமை - பெரியோர்கள், சிறு இனம் அஞ்சும் - சிறியோர்களுடைய நட்பை அஞ்சி விலகுவார்கள், சிறுமை- சிறியோர்கள், சுற்றம் ஆ சூழ்ந்துவிடும - உறவாக எண்ணிச் சூழ்ந்து கொள்ளுவார்கள்.

(வி - ம்.) துரியோதனனுனவன் நண்பர்களாகத் தனக்கு அமைந்த சகுனி, கன்னன் ஆகியோருடைய சொல்லைக் கேட்டு என்ன பயனைப் பெற்ருன் ? பெரியோர்கள் சிறியோர்களுடைய நட்பை அஞ்சுவர்கள், சிறியவர்களோ தங்களுடைய உறுதிச் சுற்றமாக எண்ணிச் சிறியவர்களைச் சூழ்ந்துகொள்ளுவார்கள், என்பதாம்.

தான் - அசை.



## துரியோதனன் கதை

துரியோதனன் இளமைமுதற் கொண்டே சிறியவர்களை நட்பினர்களாகக் கொண்டிருந்தான். வீடுமர், துரோணர், விதுரன் முதலியவர்களுடைய சொல்லை அவன் கேட்பதில்லை. மற்றைப் பெரியோர் களோ துரியோதனன் சகுனியின் நட்பைக் கொண்டிருத்தலைப் பார்த்து அஞ்சினுர்கள். அவர்கள்

அஞ்சியது வீண்போகவில்லை. சிறியோர்களை நட்புக் கொண்டிருந்த துரியோதனன் நாளடைவில் அழிந்தொழிந்தான்.

## தெரிந்துசெயல்வகை

47\. வீடணன் வன்மம் விளம்ப இலங்கைநகர்
ஈடழிந்த தன்றோ இரங்கேசா - கூடத் தெரிந்த
இனத்தோடு தேர்ந்தெண்ணிச் செய்வார்க்
கரும்பொருள் யாதொன்று மில்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப பெருமானே!, **வீடணன்** வன்மம விளம்ப - விபீடணன் எதிரியின் பகைமை நிலையையும் பிறவற்றையும் இராமபிரானுக்குத் தெரிவித்த படியினால், இலங்கைநகர் - இலங்கையானது, ஈடு அழிந்தது அன்றோ - பெருமை கெட்ட தல்லவா? கூட - கூடியிருக்க, தெரிந்த இனத்தொடு -தேர்ந்தெடுக்கப் பெற்ற துணைவர்களோடு தேர்ந்து எண்ணி செய்வார்க்குநன்றாக ஆராய்ந்து எண்ணிய பிறகு காரியத்தைச் செய்பவர்கட்கு, அரும் பொருள் யாதொன்றும் இல் - அருமையான பொருள உலகில் ஒன்றும் இல்லை.*

(வி - ம்.) விபீடணன் இலங்கையின் உளவுச்

செய்திகளை யெல்லாம் உரைத்தபடியினால் இலங்கை நகர் பெருமை கெட்டு அழிந்தது. தேர்ந்தெடுக்கப்பெற்ற துணைவர்களோடு நன்றாக ஆராய்ந்து எண்ணியபிறகு காரியத்தைச் செய்பவர்கட்கு அருமையானபொருள் உலகிலே ஒன்றுமில்லையென்பதாம்.



## விபீடணன் கதை

விபீடணன் இராவணனோடு தங்கியிருப்பின் தனக்கும் அழிவேற்படுமென்பதை முன்னரே உணர்ந்து கொண்டு இராம பிரானிட ம் வந்தான். இராமபிரான் விபீடணனுடைய தன்மைகளை ஆராய்ந்தபிறகு அவனை நண்பனாக ஏற்றுக் கொண்டார். அவ்விபீடணனால் இலங்கையின் செய்திகளை யெல்லாம் உணர்ந்து கொண்டார். மேலுஞ் செய்ய வேண்டிய வைகளை விபீடணனைக் கலந்துகொண்டு செய்தார். அதனால் இராவணனை வெல்வது இராமபிரானுக்கு மிகவும் எளிதாயிற்று.

## வலியறிதல்

48. பைத லெனக்கருதிப் பார்க்கவரா
மன்சிலையோ டெய்துதவங் தோற்றான்
இரங்கேசா—வையத் துடைத்தம் வலியறியா
ருக்கத்தி னூக்கி . யிடைக்கண் முரிந்தார் பலர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, பார்க்கவராமன்-பரசுராமன், பைதல் எனக் கருதி-இராமன் சிறுபிள்ளை என்று நினைத்து, சிலையோடு - தான் கையிற் கொண்டு வந்த வில்லோடு, எய்து தவம் தோற்றான் - தன்னையடைந்திருந்த தவச்சிறப்பையும் இழந்துவிட்டான், வையத்து- உலகில், உடை தம் வலி அறியார் - தம்முடைய ஆற்றலின் அளவை உணர்ந்து கொள்ளாமல், ஊக்கத்தின் ஊக்கி - முயற்சியின மிகுதியால் காரியத்தைச் செய்யத் தொடங்கி, இடைக் கண் முரிந்தார் பலர் - வெற்றிபெற முடியாமல் நடுவிலே தோற்றுப்போனவர்கள் பலபேர்.

(வி - ம்.) பரசுராமர் தசரத ராமரைச் சிறுபிள்ளையென்று எண்ணித் தம்முடைய மிகுந்த ஊக்கத்தினாலே எதிர்த்துத் தம்முடைய வில்லையும் தவத்தையும் இழந்தார். தம் முடைய ஆற்றலின் அளவை உணர்ந்துகொள்ளாமல் முயற்சியின் 7½
நீதி சூடாமணி

மிகுதியினால் காரியத்தைச் செய்யத்தொடங்கி இடையிலே தோல்வியடைந்தவர்கள் பலர் என்பதாம்.

## பரசுராமர் கதை

*பரசுராமர் தம்முடைய ஆற்றலையே பெரிதாக எண்ணிக்*
*கொண்டிருந்தார். தசரதராமர் சீதாபிராட்டியைத் திருமணஞ்*
*செய்துகொண்டு மிதிலையிலிருந்து திரும்பி வரும்பொழுது தம்*
*முடைய ஆற்றலைப் பெரிதாக எண்ணிக்கொண்டு இராமரை*
*எதிர்த்தார். தம்முடைய கையிலிருந்த வில்லை இராமரிடம்*
*கொடுத்து வளைக்கச் சொன்னார். இராமபிரான் வில்லை எளிதாக*
*வாங்கி வளைத்து அதனிலே கணையைத் தொடுத்து அதற்கு*
*இலக்குக் கேட்டார் தம்முடைய தவத்தையே இலக்காகக்*
*கொடுத்துத் தவத்தை இழந்து போனார். இவ்வாறு பலபேர்*
*தம்முடைய ஆற்றலையே பெரிதாக எண்ணிப் பகைவர்களிடஞ்*
*சென்று தோற்றிருக்கிறார்கள்.*

காலமறிதல்

49. ஆண்டு பதின்மூன் றரவுயர்த்தோன் செய்தவெலாம்
ஈண்டுபோறுத் தாண்டான் இரங்கேசா -

வேண்டிய

காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்காதப் பெருமாளே' பதின்மூன்று ஆண்டு - பதின்மூன்று ஆண்டுகள், அரவு உயர்த்தோன் செய்த எல்லாம் - பாம்புக் கொடியோன் செய்த கொடுமைகளையெலலாம, ஈண்டு பொறுத்து - இவ் வுலகத்தில் தருமராசன் பொறுமையாக மேற்கொண் டிருந்து, ஆண்டான் - பிறகு அரசாட்சி செய்தான், கலங்காது- பகைவர்கள் செய்யும தீமைக்கு அஞ்சாமல், ஞாலம் கருதுபவர் - உலகத்தை அரசாள வேண்டு மென்று எண்ணுகிறவர்கள், வேண்டிய காலம் கருதி இருப்பர்



தகுதியான காலத்தை எதிர்பார்த்துக் கொண்

டிருப்பார்கள்.

(வி - ம்.) பாம்புக்கொடியை உடையவனுகிய துரியோ தனன் செய்த தீமைகளையெல்லாம் பதின்மூன்று ஆண்டுகள்
வரையும் பொறுத்துக் கொண்டிருந்து தருமன்

பிறகு அரசாட்சியைப் பெற்ருன். எதற்கும் அச்சமடையாமல் உலகத்தை அரசாள வேண்டுமென்று எண்ணுகிறவர்கள் அதற்குத்தகுதியான காலத்தை எதிர்நோக்கியிருப்பார்கள் .என்பதாம்.

## தருமன் கதை

துரியோதனன் பாண்டவர்களிடமிருந்து நாடு நகரங்களை யெல்லாம் கவர்ந்து கொண்டபிறகும் பாண்டவர்கட்கு ஓயாமல் ஒழியாமல் துன்பங் கொடுத்துக்கொண்டிருந்தான். தருமர் அத் துன்பங்களை யெல்லாம் பொறுத்துத் தகுதியான காலம் வருவதைப் பதின்மூன்று ஆண்டுகள் வரையும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு தக்க காலம் கிடைத்தவுடன் போரிட்டுத் துரியோதனன் முதலிய நூற்றுவரையும் அழித் தொழித்தார். பிறகு அரசாட்சி தருமருக் குரிமை யாயிற்று.

## இடனறிதல்

50. சார்ந்துபறை கீறிச் சராசந்தன் தன்னுடலை
ஈர்ந்தவென்ருன் வீமன் இரங்கேசா - தேர்ந்தக்கால்
எண்ணியா ரெண்ண மிழப்பர் இடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே

வீமன் - வீமனனவன், சார்ந்து - சராசந்தன் பட்டணத்திற் குச்சென்று, பறை கீறி-பேரிகையைக் கிழித்து, சராசந்தன் தன் உடலை ஈர்ந்து - சராசந்தனுடைய உடலை இருபிள வாக்கி, வென்றான் - வெற்றிபெற்றான்; இடன் அறிந்து74 நீதி சூடாமணி

காரியத்தை முடிப்பதற்குத் தகுதியான இடத்தைத் தெரிந்து, துன்னியார் - சேர்ந்தவர்கள், துன்னி செயின்பொருந்தியிருந்து அக்காரியத்தைச் செய்வாராயின், எண்ணியார் - முன்பு அவரை வெல்ல எண்ணியிருந்த பகைவர், எண்ணம் இழப்பர் - அவ்வெண்ணத்தை இழந்து தோற்பார்கள.

(வி - ம்.) வீமன் பறையைக் கிழித்துச் சராசந்தனுடைய உடலை இருபிளவாக்கி வென்றான். இடமறிந்து போருக்குச் சென்றவர்கள் பொருந்தியிருந்து அக்காரியத்தைச் செய்வார்க ளாயின் அவரை வெல்ல எண்ணியிருந்த பகைவர்கள் அவ்வெண்ணத்தை இழந்து தோல்வியை அடைவார்கள் என்பதாம்.

## சராசந்தன் கதை

சராசந்தன் என்பவன் இருதாய்மார் வயிற்றில் பாதிப்பாதி உடலாகப் பிறந்தான். அரசன் இவ்வாறு அரை அரைக் குழந்தை பிறந்ததைக் கண்டு இதனுல் எத்தகைய தொல்லை யேற்படுமோ என்று அஞ்சியவனாய் அந்த இரண்டு அரைக் குழந்தைகளையும் கோட்டைக்கு வெளியே எறியச் செய்தான். சரா என்னும் அரக்கி நள்ளிரவில் உணவு தேடிக் கொண்டு அவ்விடத்திற்கு வந்தாள். அரைக்குழந்தைகளை யெடுத்து ஒன்ருகச் சேர்த்தாள். இரண்டும் ஒரு குழந்தையாகி உயிர் பெற்றது. அக்குழந்தையை உண்பதற்கு அவளுக்கு மனம் வரவில்லை. வியப்போடு பார்த்துக் கொண்டிருந்தாள். பொழுது விடிந்துவிட்டது. அப் புதுமையை ஊரார்கள் கண்டு அரசனுக்குரைத்தார்கள். அரசன் சராவைப் பார்த்தான். அவளுக்கு உணவளித்து மகிழ்ச்சிப் படுத்தினுன். தான் ஒன்று படுத்திய படியால் அக் குழந்தைக்குச் சரா சந்தன் என்று பெயர் வைக்கவேண்டும் என்று கூறி அக் குழந்தையை அரசனிடங் கொடுத்துச் சென்ருள். அரசன் குழந்தைக்குச் சராசந்தன் என்று பெயரிட்டு வளர்த்தான். அவனுக்கு வரத்தினுல் தெய்வத்



ஒரு பேரிகை கிடைத்தது. அது பகைவர்களுடைய

வருகையை முன்னரே உணர்ந்து அறிவிக்கும் ஆற்றலுடையது. சராசந்தன் தகுந்த பருவத்தையடைந்ததும் அரசனாகி அரசாட்சி செய்துகொண்டிருந்தான்.

தருமர் வேள்வி செய்யத் தொடங்கினார். அவ்வேள்விக்குப் பொருள் மிகுதியாகத் தேவைப்பட்டது. பொருள் தேடுவதற் காகக் கண்ணபிரான் வீமனை யழைத்துக் கொண்டு சராசந்த னுடைய பட்டணத்திற்குச் சென்றார். கட்டியிருந்த பேரிகை அவர்களுடைய வரவைச் சராசந்தனுக்கு அறிவிக்கு முன்னரே கண்ணபிரான் வீமனைக் கொண்டு அப் பறையைக் கிழித்தெறியச் செய்தார். இருவரும் சராசந்தனுடைய அரண்மனைக்குள் திடீரென்று நுழைந்தார்கள். இவர்களைக் கண்ட சராசந்தன் கடுஞ்சினங்கொண்டான். போர் செய்வதற்கு எழுந்தான். கண்ண பிரான் செய்த அறி குறிப்படி வீமன் சராசந்தனோடு கடுமையான போரிட்டு அவனுடைய உடலை இரண்டாகக் கிழித்துத் தலைமாறி யெறிந்தான். அதனால் சராசந்தன் மாண்டான். கண்ணபிரான் சராசந்தனுடைய மகனுக்குப் பட்டங் கட்டினார். வேள்விக்கு வேண்டிய பொருளை அவன் கொடுக்கப் பெற்றுக்கொண்டு வந்து தருமராசனிடங் கொடுத்தார். கண்ணபிரான் நன்கு பொருந்துமாறு எண்ணமிட்டுக் காரியத்தைச் செய்தபடியால் சராசந்தனை எளிதில் வென்றார்.

## தெரிந்து தெளிதல்

51. கன்னற் றெளிந்தாசான் காதலனை
யையமுற்றான்

இன்னற் பொலிந்தா னிரங்கேசா—முன்னமே

தேரான் தெளிவுந் தெளிந்தான்கண்
ணையுறவும்

தீரா விடும்பை தரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, கன்னன் - கன்னனை, தெளிந்து - நம்பி, ஆசான் காதலனை ஆசிரியனாகிய துரோணாசாரியன் மகனாகிய அசுவத்தாமனை, ஐயம் உற்றான் - நம்பாதவனாகிய துரியோதனன், இன்னல் பொலிந்தான் - துன்பத்தையடைந்தான்; முன்னமே76 நீதி சூடாமணி

முன்னரே, தேரான் தெளிவும் - ஒருவனை ஆராயாதவனாகி நம்புதலும், தெளிந்தான் கண் ஐயுறவும் - நம்பின ஒருவனிடத்தில் ஐயப்படுதலும், தீரா இடும்பை தரும்-அவனுக்கு என்றும் அழியாத துன்பத்தைக் கொடுக்கும்.

(வி - ம்.) துரியோதனன் கன்னனை நம்பிப் படைத்த தலைவனாக்கினான். ஆசான் மகனிடத்திலே

ஐயங்கொண்டு அவனைப் படைத்தலைவனுக்காமல் ஒதுக்கினன். இதனுல் பிறகு துன்பத்தையடைந்தான். ஆராய்ந்து பாராதவனைத் தெளிதலும், தெளிந்த வனிடத்திலே ஐயங் கொள்ளுதலும் என்றுங் கெடாத துன்பத்தைக் கொடுக்கும், என்பதாம்.

## துரியோதனன் கதை

துரியோதனன் ஆசிரியன் மகனுகிய அசுவத்தாமனுடைய ஆற்றலையுந் தன்மையையும் நன்குணர்ந்திருந்தான். அவனையே படைத்தலைவனுக்க முடிவு செய்திருந்தான். ஆயினும் மாயவன் செய்த ஒரு சிறு வேலையால் அசுவத்தாமனிடத்திலே துரியோதனுக்கு ஐயமுண்டாகிவிட்டது. ஆகவே அவன் கன்னனைப் படைத்தலைவனுக்கினன். இதனுல் துரியோதனனுக்குத் தோல்வி யுண்டாகியது. அதனுல் அழிந்தொழிந்தான்.

## தெரிந்து வினையாடல்

52. சல்லியனைத் தேருக்குச் சாரதியாய்க்
கொண்டதனுல்
எல்லவன்சேய் தோற்றுன் இரங்கேசா - சொல்லில்
இதனை யிதனு லிவன்முடிக்கு மென்றுய்ந் ததனை
யவன்கண் விடல்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!,
சல்லியனை - சல்லிய மன்னவனை, எல்லவன் சேய் - கதிரவன் மகனுகிய கன்னன், சாரதியாய் கொண்டதனுல்



- தேரோட்டியாகப் பெற்ற படியினுல், தோற்ருன் - தோற்றழிந்து போனுன்; சொல்லில் - எடுத்துச் சொன்னுல், இதனை-இத் தொழிலை, இதனுல் - இக்கருவியினுல், இவன் முடிக்கும் என்று - இவன் செய்துமுடிப்பான் என்று, ஆய்ந்து - ஆராய்ந்து, அதனை - அத்தொழிலை, அவன்கண் விடல் - அவனிடத்திலே அரசன் விடக்கடவன்.

(வி - ம்.) கன்னன் சல்லியனைத் தேரோட்டியாகக் கொண்ட படியினுல் தோல்வியடைந்தான். இத்தொழிலை இக் கருவியினுல் இவன் செய்து முடிப்பான் என்று அத்தொழிலை அவனிடத்திலே அரசன் விடக்கடவன் என்பதாம்.

## கன்னன் தோற்ற கதை

அருச்சுனனுடைய தேருக்குக் கண்ணபிரான் தேரோட்டி யாக இருப்பதால் அவ்வருச்சுனனேடு போர் செய்யப்போகும் கன்னனுக்குத் தகுதியான

தேரோட்டி வேண்டுமென்று துரியோதனன் எண்ணமிட்டான் சல்லியன் பார்வைக்குக் கம்பீரமாக இருந்தான் . ஆயினும் தேரோட்டுவதில் அவ்வளவு கெட்டிக்காரனல்லன். துரியோதனன் அந்தச் சல்லியனையே கன்னனுக்குத் தேரோட்டியாக அமைத்தான். கண்ணபிரானுக்கு நிகராகச் சல்லியனால் தேரைச் செலுத்த முடியவில்லையாதலால் தாறு மாறாக ஓட்டினன். இதனால் கன்னனுக்குப் போரிலே தோல்வி யுண்டாகியது. இறுதியில் மாண்டொழிந்தான்.

சுற்றந் தழாஅல்

53. வில்லுக் கதிபன் விரகினா லைவரக் கில்லுற்று
முய்ந்தா ரிரங்கேசா - நல்ல விருப்பருஞ் சுற்ற
மியையி னருப்பரு ஆக்கம் பலவுந் தரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, வில்லுக்கு அதிபன் விரகினால் - வில்வித்தையில் ஒப்பாரும் 78
நீதி சூடாமணி

மிக்காரும் இல்லாதவனாகிய விதுரனுடைய நல்லறிவினால், ஐவர்-பாண்டவர்கள், அரக்கு இல் உற்றும-துரியோதனன் கட்டிய வஞ்சக அரக்கு

மாளிகைக்குள் ளிருந்தும, உய்ந்தார்- உயிர் பிழைத்தார்கள், நல்ல விருப்பு அரு சுற்றம் இயையின் - நல்ல அன்பு பொருந்திய உறவினர்கள் அமையப் பெற்ருல், அரும்பு அரு ஆக்கம் பலவும் தரும் - வளர்ந்து கொண்டேயிருக்கும் பலவகைச் செல்வங்களையுங் கொடுக்கும.

(வி - ம்.) விதுரனுடைய விவேகம் பொருந்திய நல்லறிவிப் பிஞல் வஞ்சகனுகிய துரியோதனன் கட்டிய அரக்கு மாளிகை யைப் பாண்டவர்கள் அடைந்தும் உயிர் பிழைத்தார்கள். அன்பு நீங்காத உறவினர்கள் அமையப் பெற்ருல் அது குறைத லில்லாத செல்வ நலத்தைக் கொடுக்குமென்பதாம்.

## விதுரன் கதை

பாண்டவர்கள் ஐவரும் வாரணுவதம் என்னும் இடத் திற்குப் போய் அங்கே தங்கியிருந்தார்கள். துரியோதனன் அச் சமயத்தில் ஐவரையுங் கொல்ல எண்ணினன். ஓர் அரக்கு மாளிகையைக் கட்டி அதிலே குடியிருக்குமாறு வேண்டிக் கொண்டான். கபட மற்றவர்களாகிய பாண்டவர் கள் யாதுமுணராராய் அம்மாளிகையில் சென்று தங்கினர். விதுரன் அரக்கிஞல் மாளிகை அமைக் கப்படும்பொழுதே இஃது ஐவரையு ங்

கொல்லுதற்குச் செய்யும் வஞ்சனை என்று உணர்ந்து கொண்டான். தன்னுடைய ஆள் ஒருவனையும் மாளிகை கட்டப்படும் பொழுது உடனிருத்தி அம் மாளிகையில் தீப்பிடிக்கும் பொழுது தப்பிச் செல்வதற்குத் தகுந்த வழியையும் அமைக்கச் செய்தான். விதுரன் நல்லெண்ணத்தோடு உறவினர்களாகிய பாண்டவர்களின் உயிரைக் காக்கவேண்டுமென்னும் நோக்கத்தோடு செய்த காரியம் பயனடைந்தது. அரக்கு மாளிகைக்குப் பகைவர்கள் தீயிடுவதற்கு முன்னரே வீமன் தீயிட்டுத் துணைவர்களோடும் தாயோடும் புறத்தே சென்று



உயிர் பிழைத்தான், உறவினனாகிய விதுரன் தக்க ஏற்பாடு செய்யாமல் இருந்திருப்பானாயின் பாண்டவர்கள் ஐவரும் அரக்கு மாளிகையில் மாண்டிருப்பர் என்பதற்குச் சிறிதும் ஐயமின்று.

## பொச்சாவாமை

54. தண்ணார் சடைமுடியைத் தக்கனிழந் தானரனை
எண்ணம லன்றோ இரங்கேசா—மண்ணோர்
இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, தக்கன் - தக்கனெனவன், அரனை எண்ணுமல் அன்றோ - சிவ பிரானை நினைக்காததால் அல்லவா, தண் ஆர் சலட முடியை இழந்தான் - குளிர்ச்சி பொருந்திய சடைத்தலையை இழந்தான்; தாம் தம் மகிழ்ச்சியில் மைந்துறும் போழ்து - ஒருவர் தம்முடைய செல்வச் செருக்கில் இறுமாந்திருக்கும் பொழுது, இகழ்ச்சியில் கெட்டாரை உள்ளுக - இகழ்ச்சி செய்ததனுல் கெட்டுப் போனவர்களை நினைக்கக் கடவர்.

(வி - ம்.) சிவபிரானை நினையாதபடியினு லல்லவா தக்கனெனவன் தலையை இழந்தான்; ஒருவர் செல்வச் செருக்கினுலே இறுமாந்திருக்கும் பொழுது இகழ்ச்சிப்பான்மையினுல் கேடடைந்தவர்களை நினைக்கக் கடவர் என்பதாம்.

## தக்கன் கதை

தக்கன் சிவபிரானுக்கு மாமன். அவன் தன்னுடைய செல்வச் செருக்கினுல் சிவபிரானை இகழ்ந்துவிட்டு ஒரு வேள்வியைச் செய்யத் தொடங்கினுன். சிவபிரானைத் தவிர மற்றைத் தேவர்களை யெல்லாம் அவிப்பாகம் கொடுப்பதற்கு வரவழைத்திருந்தான். அவர்களும் வந்திருந்தார்கள். சிவ பிரானுக்குச் சினம் மூண்டது. சினமே

உருவெடுத்தாற் போன்ற 80 கிரி சூடாமணி

வடிவத்தோடு வீரபத்திரர் தோன்றினர். சிவபிரான் வீர பத்திரக் கடவுளை அனுப்பி வேள்வியை அழிக்குமாறு கட்டளையிட்டார். வீரபத்திரர் வேள்வி நடந்த இடத்திற்குச் சென்றார். வேள்வியை அழித்ததுமல்லாமல் தக்கனுடைய தலையையும் அறுத்தெறிந்தார். அங்கு வந்திருந்த தேவர்களெல்லாம் தங்களுடைய உறுப்புக்களிற் சிலவற்றையிழந்து மூலைக் கொருவராக ஓடினர். மகிழ்ச்சியினால் இறுமாப் படைபவர்கள் கெட்டொழிவரென்பது திண்ணம்.

செங்கோன்மை

55. கண்கொண்டான் பொன்னிக் கரைகட்ட
வாராளை எண்கொண்ட சோழன் இரங்கேசா—
மண்கொண்ட
வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉங்
கோடா தெனின்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, பொன்னிக் கரை கட்டவாராளை - காவேரிக்கரையை அடைக்கவராத பிரதாபருத்திரன் என்னும் அரசனை, எண் கொண்ட

சோழன் - செங்கோல் அரசன் என்று எல்லோ ரானும் மதிக்கப்பட்டிருந்த சோழமன்னன், கண் கொண்டான் - அவனுடைய மூன்று கண்களில் ஒரு கண்ணைக் குத்திப் போக்கினான் ; வென்றி தருவது-வெற்றியைக் கொடுப்பது, மண் கொண்ட - நிலத்தைத் தன் ஆட்சியில்கொண்ட , மன்னவன் வேல் அன்று-அரசனுடைய வேற் படையன்று, கோல் - அவனுடைய செங்கோல் ஆகும், அதுவும - அக்கோலும், கோணாது எனின் - ஒருபக்கஞ் சாயாமல் செங்கோலாக இருக்குமாயின்.

(வி - ம்.) காவிரிக் கரையை அடைக்க வராத பிரதா பருத்திரன் என்னும் அரசனைச் சோழமன்னன் கண் ணைப் பறித்து மூலமும் உரையும் 81

விட்டான்; அரசனுக்கு வெற்றியைக் கொடுப்பது அவனுடைய வேற்படை அன்று, கோணாமலிருக்கும் அவனுடையசெங்கோலே என்பதாம்.

**கண்பறித்த கதை**

காவேரிக்கரை கண்ட சோழமன்னன் அரசாட்சி செய்து கொண்டிருக்குங் காலத்தில், அவ்வாற்றின் கரையைக் கட்டுவதற்கு ஐம்பத்தாறு தேசத்து மன்னர்களுக்கும் அளந்து விட்டிருந்தான். எல்லாருந் தத்தமக்கு அளந்து விடப்பட்டிருந்த கரையைக் கட்டி

முடித்தார்கள். ஒருவன் மட்டுந் தன்னுடைய பங்கை அடைக்காமற் போட்டிருந்தான். சோழன் கரை கட்டப்பட்டிருத்தலைப் பார்த்துக்கொண்டு வந்தான். கட்டி முடிக்கப்படாமல் இருந்த பகுதியைப் பார்த்து "இது யாருடைய பகுதி?" என்று உசாவினுன். உடனிருந்தவர்கள் "பிரதா பருத்திரனுடைய பங்கு" என்ருர்கள். அதனைக்கேட்டசோழன் அவனுடைய படத்தைக் கொண்டுவரச்செய்து அதனை உற்று நோக்கினுன். அவனுக்கு மூன்று கண்கள் இருந்தன. "இதனுல் தான் இவனுக்குச் செருக்கு அதிகமாக இருக்கிறது என்று சோழமன்னன் எண்ணினுன். அவ்வுருவத்திலிருந்த மூன்ருவது கண்ணைத் தன் கைவாளால் குத்திக் குருடாக்கினுன் . சோழன் செங்கோலுடையவனுகையால் அவன் படத்திற்குச் செய்த தண்டனை அவனுக்கும் பலித்து விட்டது. அம்மன்னன் ஒரு கண்ணிழந்து அவமானப்பட்டான். விரைவாக வந்து தன் பங்குக்குரிய கரையைக் கட்டி முடி த்தான். தன்னுடைய குற்றத்தைப் பொறுக்கவேண்டுமென்று சோழமன்னனை வேண்டிக்கொண்டான். எல்லாரும் சோழமன்னனுடைய செங் கோன்மையை வியந்து பாராட்டினுர்கள்.

## கொடுங்கோன்மை

56 துன்று புவிக்கிடும்பை சூழ்ந்து புரவேந்தர்
இன்றி யெரிந்தா ரிரங்கேசா—கன்றியே

அல்லற்பட் டாற்று தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.





(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே! புரவேந்தர் - முப்புர அசுரர்கள், துன்றுபுவிக்கு-பொருந்திய நிலவுலகத்திற்கு, இடும்பை சூழ்ந்து - துன்பஞ் செய்து, இன்றி எரிந்தார் - இல்லாமல் வெந்து சாமபராணர்கள்; செல்வத்தை - அரசனுடைய செல்வமாகிய மரத்தை, தேய்க்கும் படை - குறைக்கும் வாளாவது, கன்றி - மனம் நொந்து, அல்லல் பட்டு - குடிகள் துன்பத்தையடைந்து, ஆற்றாது - பொறுக்கமுடியாமல், அழுத கண்ணீர் - அழுது சிந்திய கண்ணீர் அன்றே - அல்லவோ, படை கண்ணீர் அல்லவோ ? என்று கூட்டுக.

(வி - ம்.) முப்புர அசுரர்கள் உலகத்திற்குத் துன்பஞ் செய்து எரிந்தொழிந்தார்கள். குடிகள் துன்பத்தை யடைந்து அழுத கண்ணீரே அரசனுடைய செல்வத்தைத் தேய்க்கும்படை என்பதாம்.

## முப்புர அசுரர்கள் கதை

முப்புர அசுரர்கள் செம்பொன்னாலும் வெண் பொன்னாலும் கரும் பொன்னாலும் இயன்ற மூன்று கோட்டைகளுக்குள்ளே வாழ்ந்து வந்தார்கள், அக் கோட்டைகள் பறக்கக்கூடிய தன்மையுடையன. அவர்கள் தம்முடைய தவ வலிமையால் பலவிடங்கட்கும் பறந்து சென்று, பட்டணங்களையும் கோட்டை களையும் பாழாக்கி உயிர்களுக்குத் துன்பஞ் செய்து கொண்டிருந் தார்கள். அவர்களுடைய துன்பத்தைப் பொறுக்கமுடியாமல் தேவர்களும் வருந்தினார்கள். சிவபெருமானிடம் தங்களுடைய துன்பத்தைப் போக்கியருள வேண்டுமென்று முறையிட்டுக் கொண்டார்கள். சிவபெருமான் நிலத்தையே தேராகவும் மேரு வையே வில்லாகவும், ஆதிசேடனையே நாணாகவும், திருமாலையே கணையாகவுங் கொண்டு அவ்வரக்கர்களோடு போருக்குப் புறப்பட்டார். முப்புரங்களையும் நகைப்பினாலேயே எரித் தழித்தார்.



## வெருவந்த செய்யாமை 57.

தாடகைதன் மைந்தர் தவமுனியை யச்சுறுத்தி
ஈடரக்க ரானா ரிரங்கேசா—நாடி
வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்
ஒருவந்த மொல்லைக் கெடும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, தாடகைதன் மைந்தர் - தாடகையின் பிள்ளைகளாகிய மாரீசன் சுவாகு எனபவர்கள் , தவ முனியை அச்சுறுத்தி- அகத்தியமுனிவருக்கு அச்சத்தை உண்டாக்கி, சடு அரக்கர் ஆனார் - அரக்கர்கட்கு ஒப்பானார்கள், நாடி - விரும்பி, வெருவந்த செய்து ஒழுகும் - அஞ்சத் தக்க காரியங்களைச் செய்து நடக்கின்ற, வெம் கோலன் ஆயின் - கொடுங் கோலனாக அரசன் இருப்பானாயின், ஒருவந்தம் - உறுதி யாகவே, ஒல்லை கெடும் - விரைவில் கெட்டுப் போவான.

(வி - ம்.) தாடகையின் மக்களாகிய மாரீசன் சுவாகு என்ப வர்கள் அகத்திய முனிவரை அச்சுறுத்தி அரக்கர்களானார்கள்; அரசனானவன் அஞ்சத்தக்க காரியங்களைச் செய்து நடக்கின்ற கொடுங்கோல் மன்னனாக இருப்பானாயின் அவன் விரைவில் கெட்டொழிவது உறுதி என்பதாம்.

### அரக்கர்களான கதை

சுகேன் என்னும் பெயருடைய ஓர் இயக்கனிருந்தான்- அவன் அகத்திய முனிவருடைய இருப்பிடத்தை யடைந்து அங்குப் பல வகையான குறும்புகளைச் செய்தான். அகத்திய முனிவர் தம் முடைய சினத் தீயினால் அவனை

எரித்துச் சாம்பராக்கிவிட்டார். அவன் மாண்டதையறிந்து அவனுடைய மனைவியும் மக்களுமாகிய தாடகையும், மாரீசன், சுவாகு என்பவர்களும் பொதியமலைக்கு வந்து பழிக்குப் பழி வாங்குவதாக அகத்தியரை அச்சுறுத்தினர் கள். அகத்தியர் அவர்களைப் பார்த்து "நீங்கள் அரக்கர்க 84 நீதி சூட

ரமணி

வாகுங்கள்" என்று கடுமையான வசவுரை வழங்கினர். அவர்கள் அவ்வாறே அரக்கர்களானர்கள். பாதலத்தை அடைந்து மாலிய வானுடைய ஆதரவில் தங்கியிருந்தார்கள். பிறகு இராமபிரானிடம் தங்களுடைய அரக்கத்தனத்தைக் காட்டி மாண்டொழிந் தார்கள்.

கண்ணேட்டம்

**58.** சொல்லுகவென் றங்கதனைத் தூதேவி மாதைவிடல்

இல்லையவ னென்றான் இரங்கேசா - மெல்ல

ஒறுத்தாற்றும் பண்பினர் கண்ணுங்கண் ணேடிப்

பொறுத்தாற்றும் பண்பே தலை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, அங்கதனை-வாலி மகனாகிய அங்கதன்

என்பவனே, சொல்லுக என்று - இராவணனிடம் போய்ச் சொல்லுவாயாக என்று தூது ஏவி - தூது அனுப்பியும், அவன் மாதை விடல் இல்லை என்றான் - அவன் சீதாபிராட்டியை விடுகிறது இல்லையென்று கூறினான் ; ஒறுத்து ஆறறும் பண்பினோர் கண்ணும் - ஒறுத்துக் காரியங்களைச் செய்ய வேண்டிய பகைவர்களிடத்திலும், மெல்ல கண்ணோடி - நிதானமாக அருள் செயது, பொறுத்து ஆற்றும் பண்பே தலை - பொறுத்துக் கொள ளுங்குணமே தலைசிறந்த நல்லியல் பாகும்.

(வி - ம்.) இராமபிரான் அங்கதனை இராவணனிடத்திற்குத் தூதனுப்பி அவனிடம் நல்லுரை கூறுகவென்றார். இராவணனோ சீதையை விடுதல் இல்லையென்று கூறினான். தண்டித்துக் காரியங் களைச் செய்யவேண்டிய பகைவர்களிடத்திலும் அருள் செய்து பொறுமையோடு காரியங்களைச் செய்தலே சிறந்தது என்பதாம்.



## தூதனுப்பிய கதை

இராவணன் சீதாபிராட்டியைக் களவாகக் கவர்ந்து போய்ச் சிறை வைத்துத் தொல்லை கொடுத்தான். இராமபிரான் எத் தகைய அறிவிப்புமின்றி அவனை ஒறுத்தடக்கிச் சீதாபிராட்டியை மீட்க வேண்டியதே கடமையாக இருக்கவும் அவ் வாறு செய்யாது அங்கதனை அவனிடந் தூதனுப்பிச் சீதாபி ராட்டியை விட்டு விட்டுப் பிழைக்குமாறு அறிவுரை கூறச் செய்தார். இராவணனே சீதையை விடமுடியாது என்று கூறிப் பிறகு இராமபிரானோடு போரிட்டு மாண்டான். கொடியவனாகிய இராவணனிடத்திலும் இராமபிரான் தூதனுப்பியது அவருடைய அருட்டன்மையை எல்லோருக்கும் நன்கு புலப்படுத்தியது.

ஒற்றுடல்

59. மேகநா தன்செய்த வேள்விதனை ஒற்றினால்
எகியழித் துய்ந்தார் இரங்கேசா-- சேகரித்த ஒற்றினா
லோற்றிப் பொருள்தேரியா மன்னவன் கோற்றங்
கோளக்கிடந்த தில்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, மேகநாதன் செய்த வேள்விதனை - இந்திர சித்துச் செய்த நிகும்பலை வேள்வியை, ஒற்றினால் எகி அழித்து உய்ந்தார் - ஒற்றர்களால் உணர்ந்து சென்று அழித்துச் சிறப்படைந்தார்கள், சேகரித்த - உணர்ந்த, ஒற்றினால் ஒற்றி பொருள

தெரியா மன்னவன்-ஒற்றர்களைக் கொண்டு பகைவரிடத்திலே நிகழ்பவைகளைத் தெரிந்துகொண்டு அவற்றின் பயனை ஆராய்ந்தறியாத மன்னவன், கொற்றம் கொள கிடந்தது இல் - வெற்றி பெறத் தக்க வேறு வழி இல்லை .

(வி - ம்.) இந்திரசித்துச் செய்த நிகும்பலை வேள்வியை இராமபிரான் ஒற்றினால் உணர்ந்து அழித்தார், ஒற்றர்களால் 86 சிந்தாமணி
சூடாமணி

செய்திகளை யுணர்ந்துகொண்டு அதற்கேற்பக் காரியங்களைச் செய்யாத அரசன் வெற்றி பெறுவதற்கு வேறு வழி இல்லை யென்பதாம்.

## இந்திரசித்து கதை

இராமாயணப் போர் நடந்து கொண்டிருக்குங் காலத்தில் இந்திரசித்து என்பவன் நிகும்பலை என்னுமிடத்தில் தன்னுடைய தந்தைக்கு வெற்றியேற்படவேண்டும் என்று வேள் வி ஒன்றைச் செய்யத் தொடங்கினன். போர்க்களத்தை விட்டு ஓடிப்போன இந்திரசித்து யாது செய்கிறான் என்று

இராமபிரான் முதலியவர் களுக்கு விளங்கவில்லை. விபீடணனை அனுப்பி அறிந்து வரு மாறுசெய்தார். நிகும்பலையில் வேள்வி நடக்குஞ் செய்தி தெரிந்தது. இலட்சுமணன் முதலியோரை இராமபிரான் அனுப்பி அந்த வேள்வியை அழிக்கச் செய்தார். அதன் பிறகு இராமபிரானுக்கு வெற்றியுண்டாகியது.

## ஊக்கமுடைமை

60. வீசு புகழ்விசயன் விற்றழும்பு
சென்னியின்மேல் ஈசன் றரித்தா னிரங்கேசா -
ஆசையால் ஆக்க மதர்வினைய்ச் செல்லு மசைவிலா
ஊக்க முடையா னுழை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, வீசு புகழ் விசயன் - எங்கும் பரவிய சீர்த்தியை உடைய அருச்சுனன், வில் தழும்பு - வில்லால் அடித்த தழும்பை, ஈசன் சென்னியின்மேல் தரித்தான் - சிவபெருமான் தம்முடைய தலையின்மேல் ஏற்றுக் கொண்டார், ஆசையால்- காரியசித்தி பெற வேண் டும் என்னும் விருப்பத்தினால், அசைவு இலா ஊக்கம் உடையான் உழை - அசைவில்லாத ஊக்கமுடையவனிடத்திலே, ஆக்கம் - செல்வமானது, அதர்வினைய் செல்லும் - வழி

கேட்டுக்கொண்டு போகும்.



(வி - ம்.) அருச்சுனனிடம் வில்லடிபட்டுச் சிவபெருமான் வில்தழும்பைத் தம்முடைய சென்னியிலே கொண்டார். காரியத்தை எவ்வகையேனுஞ் செய்து முடிக்க வேண்டும் என்னும் விருப்பத்தினால், அசைவில்லாத ஊக்க முடையவனிடத்திலே செல்வமானது வழி கேட்டுக்கொண்டு செல்லும் என்பதாம்.

வில்தழும்புகொண்ட கதை

அருச்சுனன் சிவபெருமானிடத்திலே பாசுபதக்கணையைப் பெறும் பொருட்டுத் திருக்கைலைக்குச் சென்று கடுமையான தவம் புரிந்தான். சிவபிரான் அருச்சுனன் மிகுந்த உறுதியோடு தவஞ் செய்தலுக்கு வியந்தார். உமாதேவியோடு வேடக் கோலந் தாங்கி வந்தார். அருச்சுனனைக் கொல்லும் பொருட்டுத் துரியோதனன் அனுப்பி யிருந்த மூகாசுரன் என்னும் பன்றியைத் துரத்தினார். அது சென்று அருச்சுனன் தவஞ் செய்யு மிடத்தை யடைந்தது. அருச்சுனன் அப்பன்றியின் மீது அம்பு விடுத்தான். சிவபிரானாகிய வேடன் அங்குச் சென்று தாம் துரத்தி வந்த பன்றியின்மீது ஏன் அம்பு விடுத்தாய் என்று கேட்டார். தன்னைத் தாக்க வந்ததால் அதன்மீது அம்பு விடுத்தேன் என்று அவன் கூறினான். அதனால் அருச்சுனனுக்குஞ் சிவபிரானுக்கும் போர் மூண்டது.

சிவபிரான் அருச்சுனனுடைய வில் நாணியை அறுத்து விட்டார். அதனால் வில் தண்டு நீண்டது. அதனைக் கண்ட அருச்சுனனுக்குச் சினம் உண்டாகியது. ஆகவே அவன் அத்தண்டத்தால் சிவபிரானுடைய தலையிலடித்தான். அதனைச் சிவபிரான் மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். அருச்சுனனுக்கு வேண்டிய பாசுபதக்கணை முதலியவைகளைக் கொடுத்தனுப்பினார். அருச்சுனனுடைய ஊக்கம் பொருந்திய தவத்தால் எல்லா நன்மைகளும் உண்டாயின.

மடியின்மை

61. துஞ்சுவிழிக் கும்பகன்னன் றுண்டஞ் செவியிழந்தும்
எஞ்சுதலை யுற்று னிரங்கேசா—விஞ்சும்
மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் ஞென்ஞர்க்
கடிமை புகுத்தி விடும்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, துஞ்சுவிழி கும்பகன்னன் - உறங்குங்கண்களையுடைய கும்பகர்ணன், துண்டம் செவி இழந்தும்-மூக்கையும் காதுகளையும் போக்கடித்துக் கொண்டும், எஞ்சுதலை உற்றான் - உயிர் பிழைத்திருத்தலைப் பெற்றான்; விஞ்சும் மடிமை — மிகுந்த சோம்பலானது, குடிமைக்கண்

தங்கின் - ஒரு குடியி னிடத்திலே பொருந்தியிருக்குமாஞல், தன் ஒன்னர்க்கு - தன்னுடைய பகைவர்களுக்கு, அடிமை புகுத்தி விடும் - அடிமையாகச் செய்து விடும்.

(வி - ம்.) கும்பகர்ணன் மூக்கு காது முதலானவைகளைப் போக்கடித்துக் கொண்டும் உயிர் பிழைத்திருத்தலைப் பெற்ருன் ; மிகுந்தசோம்பலானது ஒரு குடி யினிடத்திலே பொருந்தியிருக்கு மாஞல் அச்சோம்பல் தன்னையுடையானை அவனுடைய பகைவர் களுக்கு அடிமையாக்கி விடும் என்பதாம்.

## கும்பகன்னன் கதை

இராமாயணப் போரில் கும்பகன்னன் போருக்குச் சென்ருன். பல வானர வீரர்களைக் கொன்று வெற்றி பெற்ருன். பிறகு சுக்ரீவனைத் தூக்கிக் கொண்டு மிக விரைவாகச் சென்ருன். அப்

பொழுது அவனுக்கு வழக்கமாக வுள்ள சோம்பலால் உறக்கம் வந்துவிட்டது. அதஞல் சிறிது மயங்கி யிருந்தான். சுக்கிரீவன் இது தான் சரியானசமயம் என்று எண்ணிஞன். கும்பகர்ண னுடைய மூக்கையுங்
னுடையபடையோடு

காதுகளையுங் கடித்தெறிந்து விட்டுத் தன்
வந்து சேர்ந்துவிட்டான். பிறகு அவன்
மூக்கு முதலிய உறுப்புக்களை இழந்து பிழைத்திருக்கும் அவ மானத்தால் உள்ளம் வருந்திஞன். மேலும் உயிர் வாழ்ந்திருக்க எண்ணுமல் போரில் மாண்டுபோஞன்.

## ஆள்வினையுடைமை

62. செய்துசிவ பூசை சிரஞ்சீவி யாமபயம்
எய்தினன்மார்க் கண்ட னிரங்கேசா—நொய்தாக
ஊழையு முப்பக்கங் காண்ப ருலேவின்றித் தாழா
துஞற்று பவர்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே! சிவபூசை செய்து - சிவபிரானை வழிபட்டு, மார்க்கண்டன்மார்க்கண்டேயர், சிரஞ்சீவி ஆம் அபயம் எய்தினன்- என்றும் சாகாமல் உயிருடன் இருக்கும்படி அடைக்கலம் பெற்றான், உலேவு இன்றி தாழாது - ஊழின் விலக்குக்குப் பின்வாங்கித் தாழ்க்காமல், நொய்து ஆக - சிறிதாக மதித்து, உஞற்றுபவர் - முயற்சி செய்பவர்கள், ஊழையும்விதியையும், உப்பக்கம் காண்பர் - முதுகு காட்டித் தோற்குமாறு செய்வார்கள்.

(வி - ம்.) மார்க்கண்டேயர் சிவபூசை செய்து என்றும் வாழ்தற்குரிய வாணாளைப்பெற்றுச் சிரஞ்சீவியானார் ; ஊழின் விலக்குக்குப் பின்வாங்கித் தாழ்க்காமல் முயற்சி செய்கிறவர்கள் ஊழ்வினையையும் வெற்றி கொள்வார்கள் என்பதாம்.

## மார்க்கண்டேயர் கதை

மிருகண்டு முனிவர் என்பவர் மக்கட் பேறற்றவராக இருந் தார். சிவபிரானை நோக்கிப் பிள்ளையின் பொருட்டுத் தவஞ் செய் தார். சிவபிரான் தோன்றி, "அற்ப அகவையுடைய அறிவாளி யான பிள்ளை வேண்டுமா? அல்லது அதிக அகவையுடைய அறிவற்ற பிள்ளை வேண்டுமா?" என்று உசாவினுர். மிருகண்டு முனிவர் அறிவுடைய பிள்ளை யே வேண்டுமென்ருர். சிவபிரான் அகவை பதினுறுடைய ஒரு பிள்ளை பிறக்கும் என்று அருள் புரிந்தார். பிறகு மார்க்கண்டேயர் பிறந்து அகவை பதினுறடைந்ததும் மகன் இறந்து போவானே என்று தந்தை உள்ளங் கலங்கினுர். தந்தையின் கலக்கத்தையறிந்த மார்க் கண்டேயர் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்து என்றும் உலகில் வாழும்படியான தன்மையைப் பெற்ருர். சிறிதும் வருந்தாமலும் காலந்தாழ்க்காமலும் முயற்சி செய்பவர்கள் ஊழ்வலியையுந் தோற்கடிப்பார்கள் என்பது மார்க்கண்டேயரிடத்தில் நன்கு விளங்கியது.



### இடுக்கணழியாமை

63. விற்ற மனையாளை வெட்டுதலு முற்றதுயர்
இற்றது மன்னற் கிரங்கேசா—அற்றுலகில்

இன்னுமை யின்ப மெனக்கொளி னுற்றன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, மன்னற்கு - அரிச்சந்திரனுக்கு, விற்ற மனையாளை - தான் அந்தணனுக்கு விற்றுவிட்ட மனைவியாகிய சந்திரமதியை, வெட்டுதலும் - வெட்டியவுடனே, உற்ற துயர் - அது வரையில் வந்திருந்த துன்பங்களெல்லாம், இற்றது - நீங்கிற்று, உலகில் அற்று - உலகவின்பத்தில் அவாவற்று, இன்னுமை இன்பம் எனக்கொளின் - வருகிற துன்பத்தை இன்பம் என்று எண்ணிக்கொள்வானாயின், தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும் - தன்னுடைய பகைவர்களும் விரும்பும்படியான சிறப்புண்டாகும் என்பதாம்.

(வி - ம்.) அரிச்சந்திரன் அந்தணனிடம் விற்றுவிட்ட தன்னுடைய மனைவியை வெட்டிய அளவில் அரிச்சந்திரனுடைய துன்பங்களெல்லாம் நீங்கிப் போயின. ஒருவன் தனக்கு நேரிடுகிற துன்பங்களையே இன்பம் என்று கொள்வானாயின் அவனுடைய பகைவர்களும் அவனை விரும்பும்படியான சிறப்புண்டாகும் என்பதாம்.

## அரிச்சந்திரன் கதை

அரிச்சந்திரன் விசுவாமித்திர முனிவர் உண்டாக்கிய பல வகையான தொல்லைகளின் காரணமாகத்

தன் மனைவியையும் மகனையும் அந்தணனிடம் அடிமையாக விற்றான். தானும் ஒரு பறையனுக்கு அடிமையானான். பிறகு அரிச்சந்திரன் அப்பறையனுடைய கட்டளைப்படியே மனைவியாகிய சந்திரமதியை வெட்டினான். அவ்வளவில் அரிச்சந்திரனுக்கு உண்டாகியிருந்த துன்பங்கள் யாவும் ஒழிந்துபோயின. அவன் எல்லா வகையான இன்பங்களையும் அடைந்தான். பகைவராக விருந்த விசுவாமித்திரர் செய்த துன்பங்கள் எல்லாவற்றையும் அரிச்சந்திரன் இன்பமாகக் கொண்டபடியினாலேதான் அத்துன்பங்கள் யாவும் ஒழிந்தன.

## அமைச்சியல்

### அமைச்சு

**64.** மானவன்மால் தேவர் வனசரரா
மாதைவிடாய் ஈனமுறு மென்று
னிரங்கேசா—ஞானத் தறிகொன் றறியா னெனினு
முறுதி உழையிருந்தான் கூறல் கடன்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, மானவன் மால் - இராமனாகவுள்ள மனிதன் திருமாலே, வனசரர் தேவர் - குரங்குகளாக உள்ளவை தேவர்கள், மாதை விடாய் - நீ சீதாபிராட்டியை விட்டு விடுவாயாக, ஈனம் உறும் - விடாமலிருந்தால் இழிவுண்டாகும், என்றுன்னென்று விபீடணன் கூறினான், ஞானத்து - நல்லறிவால், அறிகொன்று - அறிந்து சொன்ன நன்மையையும் அழித்து, அறியான் எனினும் -

தானும் அறியமாட்டான் என்றாலும, உறுதி - அரசனுக்கு உறுதிபயபபதை, உழை இருந்தான் கூறல் கடன் - பக்கத்திலே இருப்பவன் கூறவேண்டியது கடமையாகும்.

(வி - ம்.) விபீடணன் தன்னுடைய முன்னவனாகிய இராவணனைப் பார்த்து, "நீ மனிதன் என்று எண்ணிக்கொண்டிருக்கும் அந்த இராமன் திருமால், நீ குரங்குகள் என்று எண்ணிக்கொண் டிருக்கும் அவனுடைய வானரப்படை தேவர்கள்; ஆகவே சீதையை விட்டுவிடு'' என்று அறிவுரை கூறினான். அறிந்துசொன்ன நல்ல சொற்களையும் அழித்துத் தானும் அறியமாட் டான் எனினும் அரசனுக்கு உறுதிபயப்பதைப் பக்கத்திலேயிருப் பவன் கூறவேண்டியது கடமையாகும் என்பதாம்.

அறிவுரை கூறிய கதை

அனுமான் இலங்கைக்குச் சென்று அதனைக் கொளுத்தி விட்டுத் திரும்பிய பிறகு இராவணன் தன்னுடைய அமைச்சர்கள் 92 நீதி சூடாமணி

படைத்தலைவர்கள் அறிவுரை கூறுபவர்கள் முதலிய எல்லோரையும் அழைத்து மேலே செய்ய வேண்டியதைக் குறித்து எண்ண மிட்டான். அப்பொழுது இராவணனுடைய தம்பியாகிய விபீடணன் தன்னுடைய அண்ணனைப் பார்த்துத், "திருமாலே மனிதனாக வந்திருக்கிறார். நாம் குரங்குகள் என்று எண்ணிக்

கொண்டிருப்பவை தேவர்கள். நாம் மிகுந்த பலத்தையும் மேன்மையையும் பெற்றிருக்கிறோமாயினும் மனிதர்களாலும் குரங்குகளாலும் சாவாதிருப்பதற்கு வரத்தைப்பெறவில்லை. நம்மை அழித்தொழிக்கும்பொருட்டே இவர்கள் வந்திருப்பதாக என்னுடைய அறிவிற்குத் தோன்றுகிறது. ஆகவே சீதா பிராட்டியை விட்டுவிடுவதுதான் நல்லது, இல்லையேல் அழிவேற் படுவது உண்மை'' என்று அறிவுரைகள் கூறினன். தன்னுடைய சொல்லை இராவணன் கேட்கமாட்டான் என்பதை விபீடணன் உணர்ந்துதான் இருந்தான். ஆயினும் உறுதியானவைகளைக் கூற வேண்டியதாக இருந்தது கடமையாதலால் தன்னுடைய கடமையைச் செய்தான்.

## சொல்வன்மை

65. சோழன் சிவாற்பரச்சொல் தோற்றமைதா
னிந்தவுல
 கேழு மறிந்த இரங்கேசா—தாழாமல்
 சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ
லச்சொல்லை
 வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, சோழன் - கிருமி கண்ட சோழ

மன்னனுடைய, சிவாற்பரம சொல் – சிவனே பரம் என்னுஞ் சொற்களை, தோற்றமைதோற்றுப் போன செய்தியை, இந்த உலகு எழும் அறிந்த- இந்த ஏழுலகங்களுந் தெரிந்து கொண்டன, சொல்லை - ஒருவன் தான் சொல்லக் கருதிய மொழியை, வெல்லும் சொல் பிறிது ஓர் சொல் இன்மை அறிந்து - வெல்லவல்ல சொல்லாகிய வேறொரு சொல் இல்லாமையைத் தெரிந்து



தாழாமல் அச்சொல்லை சொல்லுக -
காலந்தாழ்க்காமல் அம்மொழியைக் கூறக்கடவன்.

(வி - ம்.) சோழமன்னன் கூறிய சிவமே பரம் என்னும் சொல் தோற்றுப்போனமையை ஏழுலகங்களும் தெரிந்து கொண்டன. தான் சொல்லுஞ் சொல்லை வேறொரு சொல்லும் வெல்லாத வகை எண்ணமிட்டுக் கூறவேண்டியவைகளைக் கூற வேண்டுமென்பதாம்.

## கிருமி கண்ட சோழன் கதை

கிருமி கண்ட சோழன் என்பவன் ஒரு காலத்தில் திருமாலி னுடைய திருக்கோயில்களை அழித்து, அவ்வூரதிகாரிகளிடத்தில், "சிவனே பரம்" என்று கையெழுத்து வாங்கி வந்தான். அவன்

திருவரங்கத்திற்கு வந்தபொழுது அங்கே கூரத்தாழ்வார் இருந்தார். அவரிடத்திலும் அவன், "சிவனே பரம்" என்று கையெழுத்துக் கேட்டான். அவர் 'துரோண மஸ்தி தற்பரம்

என்று கையெழுத்திட்டார். சோழன், இதற்குப் பொருள் யாது? " என்று; உசாவினன். "சிவம் குறுணி உண்டான போதே துரோணம் பதக் குண்டு" என்று சொன்னார். இதனைக் கேட்டவுடனே சோழனுக்குச் சினம் உண்டாகியது. ஆழ்வா ருடைய கண்ணைப் பிடுங்கிவிட்டான். பிடுங்கிய கண் பெருமாள் அருளால் உடனே உண்டாகியது. அதுமுதல் சோழன் திருமால் கோயில்களை அழித்தொழிப்பதை விட்டொழித்தான். "துரோணமஸ்தி தற்பரம்" என்ற சொல்லை வெல்லுஞ் சொல் பிறிதோர் சொல் இன்மையறிந்து அச்சொல்லை ஆழ்வார் சொன்னபடியால் சோழனை வெற்றி கொண்டார்.

### வினைத்தூய்மை

66. தன்மகிணற் றேற்றுள் தரணிமுழு துங்கைகை
என்மகற்கு நல்கேன் றிரங்கேசா—நன்மை
கடிந்த கடிந்தோரார் செய்தார்க் கவைதாம்
முடிந்தாலும் பீழை தரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, கைகை - கைகேசியானவள், தரணி முழுதும் - உலக ஆட்சி முழுவதையும், என் மகற்கு நல்கு என்று - என்னுடைய பிள்ளையாகிய பரதனுக்குக் கொடு என்று கேட்டு, தன் மகிணன் தோற்றுள் - தன்னுடைய கணவனாகிய தசரதனை இழந்து கைம்பெண் ஆனாள் ; நன்மை கடிந்த -நன்மையைத் தள்ளிய தீய தொழில்களை, கடிந்தொரார் - தள்ளாதவர்களாகிச், செய்தார்க்கு - செய்தவர்களுக்கு, அவை தாம்-அத் தீய காரியங்கள் தாம், முடிந்தாலும் பீழைதரும் - பிறை வேறினும் துன்பந்தருவனவாம.

(வி - ு.) கைகேசியானவள் நாடுமுழுவதையும் என் னுடைய மகனுக்குக் கொடுக்க வேண்டுமென்று கேட்டு அதனால் தன் கணவனை இழந்து கைம்மையானாள்; நன்மையைத்தள்ளிய தீய தொழில்களைத் தள்ளாதவர்களாகிச் செய்தவர்களுக்கு அத் தீய காரியங்கள் முடிந்தாலும் துன்பத்தைக் கொடுக்கும் என்பதாம்.

## கைகேசி கதை

தசரதன் தனக்குத் தருவதாகச் சொல்லியிருந்த

இரண்டு வரங்களைக் கொண்டு இரண்டு பெரிய தீய காரியங்களைச் செய்யத் துணிந்தாள் கைகேசி: அவைகளில் ஒன்று இராமன் காடாள்வது, மற்றொன்று பரதன் நாடாள்வது. இவ்வாறு கைகேசி வரம் பெற்றுக்கொள்ளவே தசரதன், இராமன் காட்டிற்குச் செல்லுமாறு நேரிட்டதை எண்ணி வருந்தினன். இராமன் காட்டிற்குச் சென்று விட்டான் என்னுஞ் செய்தி தெரிந்தவுடன் மாண்டொழிந்தான். இதனால் கைகேசி கைம்மையாகுமாறு முடிந்தது.

அறிவற்றவர்கள் தங்கள் தீய தொழில்களை விடாமல் காரியங்களைச் செய்வார்களானால் அது அவர்கட்குத் துன்பத்தைக் கொடுக்குமென்பது கைகேசியிடம் உண்மையாகிவிட்டது.



வினைத்திட்பம்

67. ஆர்க்குங் கடனீ ரருந்த வொருகரத்தில் ஏற்க
வடங்கிற் றிரங்கேசா—பார்க்கும் உருவுகண்
டெள்ளாமை வேண்டு முருள்பெருந்தேர்க் கச்சாணி
யன்னா ருடைத்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, ஆர்க்கும் கடல் நீர் - ஒலிக்கின்ற கடல் நீரானது, அருந்த - பருகுமாறு, ஒரு கரத்தில் - அகத்திய முனிவருடைய ஒரு கையில், ஏற்க

அடங்கிற் று-கொள்ளும்படி அடங்கிவிட்டது, பார்க்கும் உருவு கண்டு - பர்க்கப் படுகிற உருவத்தைக் கண்டு, எள்ளாமை வேண்டும் - ஒருவரை இகழாதிருத்தல் வேண்டும், உருள்பெருந் தேர்க்கு-உருண்டோடுகின்ற பெரிய தேர்க்கு, அச்சாணி - அச்சாணியானது எவ்வாறு இன்றி யமையாததாக விளங்குகின்றதோ அதைபோல; அன்னார் உடைத்து - அவர்களை உலகம் சிறந்தவர்களாகப் பெற்றிருக்கிறது.

(வி - ம்.) ஆரவாரிக்கின்ற பெரிய கடல் நீரானது பருகி விடத்தக்கவாறு அகத்திய முனிவருடைய ஒரு கையிலே அடங்கி விட்டது. ஒருவருடைய உருவத்தைப் பார்த்து நாம் அவர்களை இகழ்தல் கூடாது. அவர்கள் உருள்கின்ற பெரிய தேர்க்கு அச்சாணியானது எங்ஙனம் சிறந்ததோ அங்ஙனம் பெருமை யினுல் பெரியவர்களாக இருப்பார்கள் என்பதாம்.

### அகத்தியர் கதை

ஒருகாலத்தில் அசுரன் ஒருவன் கடலிலே புகுந்து மறைந்து கொண்டான்.
அவனோடு போரிட்டு அவனைத் தொலைக்க முயன்ற இந்திரன் அகத்திய முனிவரிடஞ் சென்று முறையிட்டுக் கொண்டான். அகத்திய முனிவர் உருவிற்

சிறியவராயினும் பெருமை யில் மிகச் சிறந்தவர். அவர் கடல் நீரை ஒரு கையால் அள்ளிப் 96


பருகி விட்டார். அதனால் கடல் நீர் முழுவதும் ஒழிந்தது. இந்திரன் அங்கு மறைந்திருந்த அசுரனைக் கொன்றான்.

### வினைசெயல்வகை

68. தொட்ட தெரிப்போன் சுடர்முடிமே
லங்கைவைப்பித்
திட்டவனைச் செற்றா யிரங்கேசா—முட்ட வினையான்
வினையாக்கிக் கோடல் நனைகவுள் யானையால்
யானையாத் தற்று.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, தொட்டது எரிப்போன் - தான் யார் தலையில் கைவைத்தாலும் அவர்களை எரித்துவிட க்கூடிய வரம் பெற்றிருந்த பத்மாசுரனுடைய, சுடர் முடி மேல்-விளங்குகின்ற தலையின் மீது, அங்கை வைப்பித்திட்டு - அவனுடைய உள்ளங் கையை வைக்கச் செய்து, அவனை செற்றாய் - அவனை அழித் தாய்; வினையால் - ஒரு சூழ்ச்சித் தொழிலால், வினை ஆக்கிக்

கோடல் - வேறொரு பெருந் தொழிலை முடித்துக் கொள்ளுதல், நனைகவுள் - மதத்தால் நனைந்த கன்னத்தை யுடைய, யானையால் - பழகிய யானையால், யானையாத்தற்று- வேறொரு காட்டானையைக் கட்டினது போலாகும்.

(வி - ம்.) பத்மாசுரசனுடைய அங்கையை அவனுடைய தலையின் மீதேவைக்கச் செய்து அவனைக் கொன்றாய்; ஒரு காரியத்தால் மற்றொரு காரியத்தை முடித்துக் கொள்ளுதல் மதத்தால் நனைந்த கன்னத்தையுடைய பழகிய ஒரு யானையைக் கொண்டு பழகாத மற்றொரு யானையைப் பிடித்துக் கொள்ளுதல் போன்றது எனபதாம்.

பத்மாசுரன் கதை

பத்மாசுரன் என்பவன் தவஞ்செய்தான். அவனுடைய தவத்திற் கிரங்கிய சிவபிரான் காட்சி தந்து "வேண்டியது



யாது?" என்று உசாவினர். பத்மாசுரன் சிவபிரானைப் பார்த்து, "நான் யாருடைய தலையில் கையை வைத்தாலும் அவர்கள் எரிந்து போகுமாறு வரந்தர வேண்டுமென்று வேண்டிக்கொண் டான். சிவபிரான் அவ்வாறே வரங் கொடுத்தார். அவ்வளவில் பத்மாசுரன் அவ்வரம் பலிக்கிறதா என்பதை அவருடைய தலை யின்

மீதே கையை வைத்துப் பார்க்க எண்ணிச் சிவபிரானைப் பின் தொடர்ந்தார். சிவ பிரான் அஞ்சியவரைப்போல ஓடினார். அப்போது திருமால் மோகினியாக வடிவெடுத்து அசுரனுக்கு முன்னே தோன்றினார். அசுரன் அம்மோகினியைத் தழுவ விழைந்தான். எண்ணெய் தேய்த்து நீராடி வந்தால் தழுவலாம் என்றாள் மாயமோகினி. பத்மாசுரன் மோகினி மயலால் தான் பெற்றுள்ள வரத்தின் செய்தியை மறந்து போனான். எண்ணெயை எடுத்துத் தலையில் வைத்துத் தேய்க்கத் தொடங்கினான். அவ்வளவில் அவன் எரிந்தொழிந்தான். திருமால் இவ்வாறு ஒரு காரியத்தைக் கூறி அவ்வசுரனை அழிக்கும் பெருங் காரியத்தைச் செய்து முடித்தார்.

## தூது

69. அக்கன் முதலரக்க ராவிதனை வாங்கியூர்
எக்கியனுக் கீந்தா னிரங்கேசா—மிக்க
இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமானே! அக்கன் முதல் அரக்கர் ஆவிதனை வாங்கி-அட்சய குமாரன் முதலிய இராக்கதர்களுடைய உயிரைப்போக்கி, ஊர் எக்கியனுக்கு ஈந்தான் - இலங்கையை அனுமார் தீக்

கடவுளுக்கு உணவாக வழங்கினார், மிக்க இறுதி பயப்பினும் - கூறிய பொழுது மிகுந்த கெடுதியைத் தருவதாயினும, அஞ்சாதுசிறிதும் பின் வாங்கமல் காரியத்தைச் செய்து முடித்துக்கொண்டு வந்து, இறைவர்க்கு - தன்னுடைய அரசனுக்கு,

நீ. சூ.—7



உறுதி பயப்பது தூது ஆம் - நன்மையை உண்டாக்க வல்லவனே நல்ல தூதுவனும்.

(வி - ம்.) அனுமான் இலங்கைக்குத் தூது சென்று இராவணனிடம் அஞ்சாது பேசி அட்சய குமாரன் முதலிய அரக்கர்களுடைய உயிரை வாங்கி ஊரைக்கொளுத்தினான்; தன்னுயிர்க்கு இறுதி வருவதாயினும் சிறிதும் அஞ்சாமல் பேச வேண்டியவைகளைப் பேசித் தன்னுடைய அரசனுக்கு நன்மையை உண்டாக்குபவனே நல்ல தூதன் என்பதாம்.

## அனுமான் தூது சென்ற கதை

இராமபிரானுடைய கட்டளைப்படி அனுமான் இலங்கைக்குத் தூது சென்றான். இராவணனால் சிறை வைக்கப்பட்டிருந்த சீதா பிராட்டியைக் கண்டு பேசினான், இராவணனுக்குச் சிறிதும் அஞ்சாது

அவனுக்குச் சொல்ல வேண்டிய செய்திகளையுங் கூறினன். பிறகு இலங்கையை எரித்து விட்டுத் தன்னுடைய இருப்பிடத்திற்கு மீண்டான். அனுமான் பகைவனுகிய இராவண னுடைய ஊருக்குச் சென்று அங்குச் சிறிதும் அஞ்சாது செய்த காரியங்களைப் பலரும் பாராட்டினுர்கள்.

## மன்னரைச் சேர்ந்தொழுகல்

70. அட்ச னிதியோற் கபசாரஞ் செய்ததனல்
எட்சன் பிரிந்தான் இரங்கேசா—பட்சம் பழைய
மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங் கெழுதகைமை
கேடு தரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமானே !, அட்சன நிதியோற்கு - இயக்கனுகிய குபேரனுக்கு, அபசாரம் செய்ததனல் - குற்றஞ் செய்தபடியால், எட்சன்- இயக்கன், பிரிந்தான் - மனைவியைப் பிரிந்திருந்தான், பட்சம் பழையம் என கருதி-நாம் அரசனுக்குப் பழமையான



நட்புடையேம் என்று எண்ணி, பண்பு அல்ல செய்யும கெழு தகைமை - தமக்கு

இயல்பல்லா தவைகளைச் செய்கின்ற உரிமையானது, கேடுதரும்-பிறகு கெடுதியைக் கொடுக்கும்.

(வி - ம்.) இயக்கனாகிய குபேரனுக்குக் குற்றஞ் செய்த படியினால் ஓர் இயக்கன் தன்னுடைய மனைவியை ஓராண்டுக் காலம் பிரிந்திருந்தான்; நாம் அரசனுக்குப் பழமையான நட்புடையம் என்று எண்ணிச் செய்யத்தகாத செயல்களைச் செய்கின்ற உரிமையானது கெடுதியை விளைவிக்கும் என்பதாம்.

## இயக்கன் கதை

இயக்கனாகிய குபேரனுக்கு நாள் தோறும் முடிப்பெடுத்து வரும் பழைய அமைச்சனாகிய ஓர் இயக்கன் ஒருநாள் தன்னுடைய மனைவி மீது கொண்ட மோகத்தால் அம்முடிப்பை அவளிடத்தில் கொடுத்து விட்டுக் குபேரனிடத்திற்கு வராமலே இருந்து விட்டான். குபேரன் அவனைப் பழையன் என்று எண்ணாமல் அவன்மீது கடுஞ்சினங் கொண்டு அவனைப் பார்த்து "நீ பழையவன் ஆகையால் இவ்வளவு துணிவான காரியத்தைச் செய்திருக்கிறாய். நீ பெண் மயக்கத்தால் இவ்வாறு செய்தா யாகையால் ஓராண்டளவும் அவளைப் பிரிந்திருக்கக் கடவாய்" என்று தண்டனை விதித்தான். அதன்படி அவன் தன் மனைவியை ஓராண்டளவும் பிரிந்து மிகுந்த துன்பமடைந்தான். பழமை யானநட்பைக் கருதி அரசர்களிடம் தவறு செய்யின் தவறாது

தண்டனைக்குள்ளாக நேரும்.

குறிப்பறிதல்

71. பார்வைகண்டி ராமன் பரன்வில்
லொடித்தணங்கை ஏர்வையாக் கொண்டா
ஸிரங்கேசா

—நீர்மையோடும்

ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

*100* நீதி சூடாமணி

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, பார்வை கண்டு - விசுவாமித்திருடைய நோக்கத்தைக் கண்ட அளவில், பரன்வில் ஒடித்து - சிவபிரானுடைய வில்லை வளைத்து முறித்து, அணங்கை - தெய்வப் பெண்ணாகிய சீதாபிராட்டியை, ஏர்வையா கொண்டான் - தனக்கு உகந்த மனைவியாகக் கொண்டான்; அகத்தது - ஒருவன் மனத்தினிடத்தில் நிகழ்வதை, நீர்மையோடும் - நிரம்பிய அறிவோடும், ஐயப்படாது - ஐயங்கொள்ளாமல், உணர்வானை - அறிந்து கொள்பவனை, தெய்வத்தோடு ஒப்பக் கொளல் - தெய்வத்தோடு சமமாக மதிக்கக் கடவர்.*

(வி - ம்.) விசுவாமித்திர முனிவருடைய பார்வையைப் பார்த்த அளவில் இராமன் சிவபிரானுடையவில்லை முறித்துச் சீதையை மனைவியாகக் கொண்டான், ஒருசெய்தியினைச்சிறிதும் ஐயப்படாது உணர்ந்து கொள்ளுகின்றவனைத் தெய்வத்திற்கு ஒப்பாக எண்ணிக் கொள்ளுதல் வேண்டும் எனபதாம்.

## இராமன் வில்லொடித்த கதை

இராமலட்சுமணர்களோடு விசுவாமித்திரர் சனகமன்னனுடைய அவைக்குச் சென்றார். இராமலட்சுமணர்களைப் பற்றிய செய்தியைச் சனக மன்னனிடங் கூறினார். சனகன் தன்னிட மிருந்த வில்லைக் கொண்டு வந்து வைக்கச் செய்து அதனுடைய பெருமையைக் கூறிமுடித்தான். விசுவாமித்திரர் இராமபிரானைப் பார்த்தார். அப்பார்வையின் பொருளையுணர்ந்துகொண்ட இராமபிரான் விரைவாக எழுந்து அந்த வில்லை வளைத்து முறித் தெறிந்தார். அனைவரும் மிகுந்த வியப்படைந்தார்கள். சனகன் தன்னுடைய முடிவுப்படி சீதாபிராட்டியை இராமபிரானுக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார். விசு வா மித்திரருடைய பார் வையின் பொ ருளை இராமபிரான் ஐயப்படாமல் அறிந்து கொண்டது எல்லோராலும் பாராட்டப்பட்டது.

72. தேவர் குழாத்தினிடைத் தென்பா
லகத்தியனை ஏவி னிகரென்றான் இரங்கேசா—
பூவில் அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, தேவர் குழாத்தினிடை - தேவர்களுடைய அவைக்கு நடுவி லிருந்த விசுவகர்மன், தென்பால் அகத்தியனை ஏவின் - தெற்குத் திக்கில் அகத்திய முனிவரை அனுப்பி வைத்தால், நிகர் என்றான் - உலகம் சரியான நிலைமையில் இருக்கும் என்று சொன்னான்; பூவில் - நிலவுலகில், சொல்லின் தொகை அறிந்த தூய்மை யவர் - சொல்லின் பொருள் முழு வதையும் நன்குணர்ந்து பேசக்கூடிய அறிவாளர்கள், அவை அறிந்து ஆராய்ந்து சொல்லுக - தாம் அமர்ந்திருக்கும் அவையின் தன்மையைத் தெரிந்து கொண்டு எண்ணிப் பேசக்கடவர்.

(வி - ம்.) தேவர் கூட்டத்திடையே சிவபிரானுடைய திருமணக் காலத்தில் இருந்த விசுவகன்மன் உலகின் வடபால் தாழ்ந்து தென்பால் உயர்தலைக்கண்டு, இப்பொழுது அகத்திய முனிவரைத்

தெற்குப் பக்கத்திற்கு அனுப்பிவைத்தால் உலக ஏற்றத் தாழ்வுகள் சரியாகு மென்று கூறினன் ; சொல்லின் உண்மைப் பொருளை ஆராய்ந்துணர்ந்த அறிவுடையோர் தாம் கூறுவதனை அவையின் தன்மையைப் பார்த்து எண்ணிக் கூறுக என்பதாம்.

## உலகம் சரிநிகரான கதை

ஒருகாலத்தில் சிவபிரானுக்கும் உமையவளுக்கும் இமயமலையிலே திருமணம் நிகழ்ந்தது. தேவர்களும் முனிவர்களும் ஒருங்கே அவ்விடத்திற் கூடினார்கள். அதனால் உலகின் வட 102 நீதி



பக்கம் தாழத் தென் பக்கம் உயர்ந்தது. அந்நிலை கண்டோர் உலகு யாதாமோவென அஞ்சிக் கலங்கினர். அப்பொழுது அங்கிருந்த விசுவகன்மன் எழுந்து சிவபிரானைப் பார்த்து, அகத்திய முனிவரைச் சுட்டிக் காட்டி, "இப்பொழுது இவரைத் தெற்குத் திக்கிற்கு அனுப்பினுல் வட திக்கு உயர்ந்து உலகநிலை சரியாகும்" என்று சொன்னான். அவனுரைப்படியே சிவபிரான் அகத்திய முனிவரைத் தெற்குத் திக்கிற்கனுப்பினார். உலக நிலையுஞ் சரியாயிற்று. அன்று விசுவகன்மன் பேச வேண்டியதை ஆராய்ந்து பேசியது எல்லோருக்கும் மிகுந்த மகிழ்ச்சியை அளித்தது.

## அவையஞ்சாமை

73. ஆன்றசங்கர் போற்றவொன்றை யையிரண்டா
மாநிலத்தார்க்
கீன்றவரிற் சொன்ன ரிரங்கேசா—தோன்றவே
கற்ருருட் கற்ரு ரெனப்படுவர் கற்ரூர்முற் கற்ற
செலச்சொல்லு வார்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, ஆன்ற சங்கர் போற்ற-கல்விகேள்விகளிலே நிரம்பிய சங்கப் புலவர்கள் புகழ, ஒன்றை - ஒவ்வொன்றையும், ஐ இரண்டு ஆக - பப்பத்துக் குறள் வெண்பாவாக, மாநிலத்தார்க்குஇந்நிலவுலகினருக்கு, ஈன்றவரின் - பெற்ரோர்களைப் போல, சொன்னர் - திருவள்ளுவர் இயற்றி அரங்கேற்றினர்; கற்ருர்முன் - கல்வியறிவுடையவர்கள் அவையில், தோன்ற- சொற்பொருள் தோன்றுமாறு, கற்ற - தாம் கற்ற செய்திகளை, செல்ல சொல்லுவார் - பொருந்துமாறு சொல்ல வல்லவர், கற்ருருள் - கல்வியறிவுடையவர்கள் எல்லாரினும், கற்ருர் எனப்படுவார் - கல்வியறிவுடையவரென்று கூறப் பெறுவார்கள்.*



(வி - ம்.) *திருவள்ளுவர் சங்கப்புலவர்கள் புகழ்ந்து போற்றுமாறு ஒருபொருளைப் பத்துமுறை*

வற்புறுத்திப் பெற்றோர்களைப் போற் றிகூறித் திருக்குறளை யியற்றி யரங் கேற்றினார் . கற்றவர்கட்கு முன்னே தாம் கற்றவைகளைப் பொருந்துமாறு கூறுகிறவர்கள் கல்வியறிவுடையவரென்று பாராட்டப் படுவர் என்பதாம்.

## திருவள்ளுவர் கதை

திருவள்ளுவர் திருக்குறள் என்னுந் தெய்வத் திருநூலைப் பாடினார். அந்நூல் நூற்றுமுப்பது செய்திகளையே தன்னிடத்துக் கொண்டதெனினும் ஒவ்வொரு செய்தியையும் பத்துமுறை வற்புறுத்திக் கூறி மக்களுடைய உள்ளத்திலே அழுந்தப் பற்றுமாறு செய்தார். அக்குறளைமதுரைத் தமிழ்ச் சங்கத்திலே அரங்கேற்ற வேண்டுமென்று எண்ணிய திருவள்ளுவர் மதுரைச் சங்கத்திற்குக் கொண்டு போய்ச் சங்கப் புலவர்கட்கு முன்னே படித்து அரங்கேற்றினார் . சங்கப்புலவர்கள் திருக்குறளின் சிறப்பையுணர்ந்து பாராட்டினர். ஆளுக்கொரு செய்யுளாற் புகழ்ந்தும் போற்றினர். அதனால் திருவள்ளுவர் கற்றவர்க ள ை வரினுஞ் சிறந்தவர் என்று உல க த்தார் அனைவராலும் போற்றப்படுஞ் சிறப்பையடைந்தார்.

## அங்கவியல்

### நாடு

74. சீரிதா மெண்ணமுற்ற தேசத்திற்
றென்திருக்கா
வேரிசூழ் சோணு டிரங்கேசா—ஆரப்
• பெரும் பொருளாற் பெட்டக்க தாகி
யருங்கேட்டால்
ஆற்ற விளைவது நாடு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, எண்ணம் உற்ற தேசத்தில் - உலகத்தாருடைய மதிப்பைப் பொருந்திய நாடுகள் எல்லாவற்றினும், தென் திருக் காவேரி 104
8தி சூடாமணி

சூழ் சோணுடு சீரிது ஆம் - தெற்குத்திக்கிலுள்ள காவேரி யாற்ருற் சூழப் பெற்ற சோழநாடு சிறந்ததாகும், நாடு - நாடானது, பெரும் பொருளால் ஆர - மிகுந்த விளை பொருள்களும் பிற பொருள்களும் நிறைந்திருப்ப தனல், பெட்டக்கது ஆகி-விரும்பத்தகுந்ததாகி, அரும் கேட்டால்- அழிவில்லாமையினல், ஆற்ற விளைவது - மிக நன்ருக விளைவதேயாகும்.

(வி - ம்.) இவ்வுலகில் மதிக்கப் பெற்ற

நாடுகள் பல வற்றினுந் தென்னாட்டில் காவிரியால் சூழப் பெற்ற சோழனாடு சிறப்புப் பொருந்திய நாடு ஆகும்; சிறந்த நாடாவது அழி வற்றதாகியும் மிகுந்த விளைவுடையதாகியும் அரிய பொருள்க ளால் எல்லோரானும் விரும்புமாறும் அமைந்ததே என்பதாம்.

### சோழநாட்டின் கதை

சோழநாட்டிற்கு அரசனாகிய சோழன் நாட்டின் பலபகுதி களினும் காவிரி நீர்பாய்ந்து வளம் பெருகுமாறு செய்து அதனால் செந்நெல் வளத்தைப் பெருக்கினான். செந்நெல் வளம் பெருகவே அதனால் பிற பொருள்களின் வளமும் உயர்வதாயிற்று. பிற நாட்டு மக்கள் சோழ நாட்டை எல்லா நாடுகளினுஞ் சிறந்த தென்று புகழலானார்கள். "புனனாடு", "சோழவளநாடு சோறுடைத்து" என்னும் சிறப்பு மொழிகளும் இந்நாட்டிற்கு உண்டாவதாயின.

### அரண்

75. சிந்துவிடை யேழுமதில் சேர்ந்த இலங்கைநகர்

ஏந்தவகை போய திரங்கேசா—முந்தும்
எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
இல்லார்க ணில்ல தரண்.

( இ. ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, சிந்து இடை - கடல் நடுவில், ஏழு மதில் சேர்ந்த இலங்கை நகர் - ஏழு சுற்று மதில்கள் பொருந்திய இலங்காபுரி, எந்த வகை போயது - எவ்வாறு அழிந்து ஒழிந்தது, முந்தும் - முதன்மையாகிய, எனை மாட்சித்து ஆகிய கண்ணும் - எத் தகைய பெருமையையுடை யதாக இருந்தவிடத்தும், அரண்முதலிய காவல்களில் எதுவும், வினை மாட்சி இல்லார்கண் இல்லது - தொழில் செய்யும் அறிவின் பெருமை இல்லாத வர்களிடத்திலே நிலைபெறமாட்டாது.

(வி - ம்.) கடலின் நடுவிலே ஏழுசுற்று மதில்கள் பொருந்திய இலங்காபுரி எவ்வாறு அழிந்தொழிந்தது ? எத்தகைய பெருமையை உடையதாக இருந்தவிடத்தும் அரணின் சிறப்பானது நன்கு செயல் புரியும் பெருமையில்லாதவர்க ளிடத்திலே நிலைபெறாமல் அழிந்தொழியும் என்பதாம்.

## இலங்கையின் கதை

இலங்கா நகர் கடலிலே இருப்பது. நகரைச்சுற்றி ஏழு கோட்டைகள் (மதில்கள்) அமைந்திருந்தன. அக் கோட்டைகளைக்

காப்பதற்கு அரக்கப்படைகள் இரண்டாயிரம் வெள்ளம் இருந்தன. இந்தப் படைகளை மேற்பார்த்துக் கண்காணிப்பதற்கு இந்திரசித்து, கும்பகர்ணன், கும்பன், மகோதரன், மகாபாரிசன் முதலிய மாபெரும் வீரர்கள்பலர் இருந்தார்கள். இராவணனிடம் எல்லாம் இருந்தும் செய்ய வேண்டிய காரியத்தை நேர்மையான முறையில் திறம்பெறச் செய்யும் நல்லறிவில்லை. எக்காரியத்தையும் இராவணன் தன்னுடைய மனம் போனவாறு செய்வான். இதனால் இவன் இராமபிரானுடைய ஆற்றல் தன்மை முதலியவைகளை நன்கு உணர்ந்து செயல் புரியாமல் இராமபிரானோடு போரிட்டுத் தன்னுடைய நாடுநகர் அரண் முதலிய யாவற்றையும் அழித்தொழித்தான். சிறப்பாகக் காரியங்களைச் செய்யாதவர்களுடைய அரண்



எவ்வளவு பெருமையுடையதாயினும் பயனற்றதாகவே முடியும் என்பது இராவணனிடத்தில் நன்கு விளங்கியது.

## பொருள்செயல் வகை

76. நட்டுவனும் பற்குனன்றான் நாடாளக்
கண்டுதிசை எட்டும் பணிந்த
திரங்கேசா—கிட்டுபொருள் இல்லாரை யெல்லாரு
மெள்ளுவர் செல்வரை எல்லாருஞ் செய்வர் சிறப்பு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, நட்டுவனும பறகுனன் - விராட நகரத்தில் நட்டுவனுக இருந்த அருச்சுனன், நாடு ஆள கண்டு - பிறகு அத்தினு புரியில் அரசனுக இருந்து அரசாளப பார்த்து, எட்டு இசையும பணிந்தது - எட்டுத்திக்கிலுமுளள அரசர்களும் வந்து வணங்கினுர்கள், கிட்டு பொருள் இல்லாரை - வருவா யாகிய பொருள இல்லாத வறிஞர்களே, எல்லாரும எள்ளுவர் - அவர்கள் நல்லவர்களாக இருந்தாலும அவர்களே எல்லோரும இகழ்வார்கள, செல்வரை - செல்வமுடை யவர் களே, எல்லாரும் சிறபபு செய்வர்-அவர்கள் பொல்லாதவர்க ளாக இருந்தாலும் எல்லோரும் புகழவார்கள.

(வி - ம்.) விராட நகரத்தில் நட்டுவனுக இருந்த பற்குனன் பிறகு அரசாட்சி செய்யத் தொடங்கியபோது அவனே எல்லோரும் வணங்கினுர்கள்; பொருளற்றவர்களே எல்லோரும் இகழ்வார்கள்; பொருளுடையவர்களேயோ எல்லோரும் புகழ்ந்து பேசிச் சிறப்புச் செய்வார்கள் என்பதாம்.

## அருச்சுனன் கதை

பாண்டவர்கள் காட்டு வாழ்க்கையை முடித்த பிறகு ஓராண்டுக்காலம் யாருடைய கண்ணுக்கும்

அகப்படாமல் மறைந்திருக்க வேண்டியவர்களானுர்கள்.



இடம் விராடனுடைய நகரமே என்று எல்லோரும் முடிவு செய்து விராட நகரத்தில் மறைந்திருந்தார்கள். அப்பொழுது ஒவ்வொருவரும் தத்தமக்கேற்ற கோலம் பூண்டு அக் கோலத்தினுள் மறைந்திருந்தனர். அருச்சுனன் பெண்களுக்குக் கூத்துக் கற்பிக்கும் நட்டுவனுக அமர்ந்து கூத்துக் கற்பித்துக் கொண்டிருந்தான். அப்பொழுது நட்டுவன் பேடியாய இருந்தான். அவன் உண்மையான பேடி என்றே எல்லாரும் எண்ணி ஒதுங்கினுர்கள். அப்பொழுது அவனை யாரும் ஒரு பொருட்படுத்தவில்லை. பின்னுளில் ஐவரும் போரில் பகைவர்களை வென்று அரசாட்சி செய்யத் தொடங்கினுர்கள். அப்பொழுது அருச்சுனனைப் பலரும் வணங்கிப் போற்றினர். இவ்வுலகினர் செல்வர்களைத்தான் பாராட்டுவார்களேயல்லாமல் வறியவர்களை ஒரு பொருட் படுத்தமாட்டார்கள்.

படைமாட்சி

77. மொய்கோள் கடல்போலு மூல பலமடிய
எய்துவென்ற தோர்வில் இரங்கேசா—வையத்
தோலித்தக்கா லென்னு முவரி யெலிப்பகை நாக

முயிர்ப்பக் கெடும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, ஓர் வில்—உன்னுடைய ஒரே வில்லாகிய கோதண்டம், மொய் கொள் - நெருங்கிய, கடல் போலும் மூலபலம் மடிய-கடலைப் போன்ற மூலபலப் படையானது இறக்க, எய்து வென்றது_ அம்பெய்து வெற்றி கொண்டது, வையத்து-நிலவுலகத்தில், எலி பகை உவரி ஒலித்தக்கால் என் ஆம - எலிகளாகிய பகை திரண்டு கடல் போல் இரைந்தால் பாம்புக்கு என்ன துன்பம் உண்டாகும்?, நாகம் உயிர்பப கெடும்-அப் பாம்பு மூச்சுவிட்டால் எலிக்கூட்டம் தானே அழிந்தொழியும்.

(வி - ம்.) மூலபலப்படையானது மிகப் பெரிதாக விருந்தும் ஒரே வில் அதனை அழித்தொழித்தது. எலிகள் கடலைப் போலத் 108 நீதி சூட ாமணி

திரண்டு ஒலி செய்தாலும் அவைகளால் யாது செய்யமுடியும் பாம்பானது பெருமூச்சு விட்டால் அவ்வெலிப்பகை தானே கெட்டொழியும். அதைப்போல் சிறுபடையைப் பெரும்படை எளிதில் அழித்தொழிக்கும் என்பதாம்.

## மூலபலம் அழிந்த கதை

இராமாயணப் போர் நடந்த போது இராவணன் தன்னுடைய ஆட்சிக்கே காரணமாகத் தொகுத்து வைத்திருந்த பெரும் படையைக் கொண்டு வந்து போரிடச் செய்தான். அப் படை மூலபலப்படை எனப்பெறும். அதன் தொகை ஆயிரம் வெள்ளம் என்பர். இந்த ஆயிரம் வெள்ளம் படையையும் இராம பிரான் தம்முடைய ஒரே வில்லால் மூன்றே முக்கால் நாழிகைப் போதுக்குள் கொன்றொழித்தார்.

## படைச்செருக்கு

78. மார்பத் தழுந்துகணை வாங்கிவிடுத்
தான்கரங்கள் ஈர்பத்தன் மைந்தன்
இரங்கேசா—ஆர்வத்தால் கைவேல் களிற்றொடு
போக்கி வருபவன் மெய்வேல் பறியா நகும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, கரங்கள ஈர்பத்தன் மைந்தன - இருபது கைகளையுடைய இராவணன் மகனாகிய இந்திரசித்து, மார்பத்து அழுந்து கணை - தன்னுடைய மார்பிலே தைத்திருந்த அம்பை, வாங்கிவிடுத்தான்-பிடுங்கிப் பகைவர்மீது எய்தான்; ஆர்வத் தால் - மகிழ்ச்சியால்; கைவேல் - தன்

கையிலிருந்த வேற் படையை, களிற்றொடு போக்கி வருபவன் - எதிர்த்த யானையின் மீது செலுத்திவிட்டு வருபவன், மெய்வேல்-உடம்பில் தைத்துள்ள வேலைக் கண்டு, பறியா நகும - (இன்னும் வருகின்ற யானை மீது எறிவதற்கு) பிடுங்கி மகிழுவான்.



(வி - ம்.) இந்திரசித்து தன்னுடைய மார்பிலே இலட்சுமணனால் விடப்பட்டு அழுந்தியிருந்த கணையைப் பிடுங்கித் தன்னிடம் வேறு கணையில்லாதபடியால் அவன் மீதே செலுத்தினான்; கையிலிருந்த கணையை எதிர்த்த யானையின் மீது செலுத்திவிட்டு வருபவன் மேலும் எதிர்க்கும் யானை மீது எய்வதற்குத் தன்னுடைய உடம்பில் தைத்துள்ள கணையைப் பிடுங்கி மகிழ்வான் என்பதாம்.

## இந்திரசித்து கதை

இந்திரசித்து நிகும்பலை வேள்வியை இழந்து இலட்சுமணனோடு போர் புரிந்தான். அவன் இவனுடைய அம்பருத்தூணியை அறுத்துத் தள்ளிவிட்டான். ஆகவே இந்திரசித்திடம் வேறு அம்பு இல்லாமற் போய்விட்டது. இலட்சுமணன் தன்மீது எய்திருந்த அம்பைப் பிடுங்கி அவன் மீது எய்தான். இந்திரசித்துவின் ஆண்மையைக் கண்டவர்கள் வியந்து புகழ்ந்தார்கள்.

79. வாசவன் தட்சன் மகம்புகா வாறுற்றான்
ஈச னயன்போற் றிரங்கேசா—நேசன்
அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்கண்
அல்ல லுழப்பதா நட்பு.

(இ - ள்.) ஈசன அயன போற்று இரங்கேசா - உருத்திரனும நான்முகனும் புகழ்கிற அரங்கநாதப் பெருமானே !, வாசவன்-தேவேந்திரன், தட்சன் மகம் புகா ஆறு-தட்சன் என்னும் பாம்பாசன் வேளவியிலே விழுந்து சாகாதபடி, உற்றான் - அவனுக்குத் துணையாகப் பொருந்தி யிருந்தான், நட்பு-நட்பு என்பது, நேசன் அழிவின் அவை நீக்கிநே சனுடைய கெடுதியைத் தருகிற தீயவழிகளை விலக்கி, ஆறு உய்த்து-நல்வழியிலே அவனைச் செலுத்தி, அழிவின் கண் - அவனுக்குக் கேடுவந்தபோது, அல்லல் உழப்பது



ஆம்-அவனோடிருந்து அத் துன்பத்தைத் தானும் நுகர்வ

தாகும்.

(வி - ம்.) தேவேந்திரனானவன் சனமேசயன் செய்த பாம்பு வேள்வியில் தட்சன் விழுந்து சாகாதபடி அவனுக்குத் துணையாக விருந்தான்; நட்பாவது நண்பன் தீய வழியிலே சென்றால் அங்ஙனம் செல்லாதவாறு விலக்கி நல்வழியிற் செலுத்தலும் நண்பனுக்கு அல்லல் நேர்ந்த பொழுது அதனைத் தானும் நுகர்வதுமே என்பதாம்.

## தட்சனைக் காத்த கதை

சனமேசய மன்னன் உதங்க முனிவருடைய உதவியால் பாம்பு வேள்வி செய்து உலகத்திலுள்ள பாம்புகளையெல்லாம் அவ் வேள்வித் தீயில் விழுந்து மாளச் செய்தான். இதனைக் கண்டு தட்சன் என்னும் பாம்பரசன் அஞ்சினான். தன்னுடைய நண்பனாகிய தேவேந்திரனிடத்திற் சென்று அடைக்கலம் புகுந்தான். அவனுடைய அரியணையைச் சுற்றிக்கொண் டிருந்தான். வேள்வி நடந்து கொண்டிருந்தது. பாம்புகளெல்லாம் அதில் வீழ்ந்து மடிந்து கொண்டேயிருந்தன. இறுதியில் தட்சன் ஒருவன்தான் எஞ்சியிருந்தான். வேள்வி செய்த முனிவர் அதனை உணர்ந்தார். அவர் அரசனைப் பார்த்து "இப்போது தேவேந்திரன் தட்சனுக்கு அடைக்கலம் கொடுத் திருக்கிறான்; ஆகையால் நம்முடைய ஆகுதிப் பலங் கொண்டு இருவரையும் இழுத்துவந்து வேள்வித் தீயிலே தள்ளுதல்

வேண்டும்'' என்று கூறி இருவரையும் இழுத்து வந்து வேள்வித் தீயிலே தள்ளுவதற்கான மறையைக் கூறித் தேவ உணவையுங் கொடுத்தார். அது போய் இந்திரனையும் தட்சனையும் இழுத்துக்கொண்டு வந்தது. அதனைக் கண்ட அகத்தியர் சனமேசயனுடைய வேள்விச் சாலைக்கு வந்து அவனிடம் தட்சனுக்கு உயிர்ப்பிச்சை வேண்டினார். இருவரையும் விடுவித்தார். தேவேந்திரன் தன்னுடைய நண்பனாகிய தட்சன் பொருட்டு இவ்வாறு அல்லற்பட்டு உயிர் பிழைத்தான்.



## நட்பாராய்தல்

80 தேசுபெறு மார்த்தாண்டன் செல்வன்முடி சூடியிலங் கேசனை வென்றா னிரங்கேசா— மாசில் குடிப்பிறந்த தன்கட் பழிநாணு வானைக் கொடுத்துங் கோளல்வேண்டு நட்பு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, தேசு பெறும் மார்த்தண்டன் செல்வன் - ஒளி பொருந்திய கதிரவனுடைய மகனாகிய சுக்கிரீவன், முடிசூடி-கிட்கிந்தைக் கரசனாய் முடிகவித்து, இலங்கேசனை வென்றான் - பிறகு இராவணனைக் கொல்வதற்கு உதவியாக இருந்து வெற்றி பெற்றான், மாசு இல் - குற்றமற்ற, குடி-

பிறந்து - நல்ல குடியிலே தோன்றி, தன் கண் பழி நாணுவானை - தன்னிடத்திலே உண்டாகிற பழிக்கு அஞ்சுகிறவனை, கொடுத்தும் - பொருளைக் கொடுத்தாயினும், நட்பு கொளல் வேண்டும் - நண்பனாகச் செய்து கொள்ளுதல் வேண்டும்.

(வி - ம்.) சுக்கிரீவன் கிட்கிந்தைக்கு அரசனாக முடிசூடிப் பிறகு இராமபிரானுக்கு உதவியாக இருந்து இராவணனை வென்றான்; நல்ல குடியிலே பிறந்து தன்னிடத்திலே ஏற்படும் குற்றத்திற்கு அஞ்சுகிறவனைப் பொருள் கொடுத்தாயினும் நட்புக் கொள்ளுதல் வேண்டும் என்பதாம்.

## சுக்கிரீவன் கதை

சுக்கிரீவனும் வாலியும் உடன் பிறந்தவர்கள். வாலி தன்னுடைய தம்பியின் மீது மாறுபாடான எண்ணங் கொண்டு அவனைத் துன்புறுத்தி விரட்டிவிட்டான். சுக்கிரீவன் அனுமானுடைய உதவியால் இராமபிரானோடு நட்புக் கொண்டான். இராமபிரானுடைய உதவியால் தன்னுடைய பகைவனாகிய வாலியைக் கொன்று தான் கிட்கிந்தைக்கு அரசனானான். பிறகு சுக்கிரீவன் எழுபது வெள்ளம் வானரப் படையோடு இராம 112

பிரானுக்குத் துணையாகச்சென்று இராவணனை அழித்தொழிக்கச் செய்தான். பிறகு இராமபிரானோடு அயோத்திக்குத் திரும்பி வந்து அவருடைய முடிசூட்டு விழாவைக் கண்டான். பதினாயிரம் ஆண்டுகள் வாழ்ந்திருந்து பரமபதத்திற்குச் சென்றான். தன்கட் பழியஞ்சிய சுக்கிரீவனை நட்புக் கொண்டமையால் இராமபிரா னுக்கு ஏற்பட்ட நன்மைகள்பல.

பழமை

81. தானவர் வேந்தைச் சடாயு பொருதிறந்தான்
என வுருவா மிரங்கேசா—மாநிலத்தில் எல்லைக்க
ணின்றார் துறவார் தொலைவிடத்துந் தொல்லைக்க
ணின்றார் தொடர்பு.

(இ - ள்.) என உருவாம் இரங்கேசா - பன்றியாகப் பிறப்பெடுத்த அரங்கநாதப் பெருமானே!, தானவர் வேந்தை - அரக்கர்கட்கரசனாகிய இராவணனோடு, சடாயு பொருது இறந் தான் - சடாயு என்னுங் கழுகரசனானவன் போரிட்டு மாண் டான்; மாநிலத்தில் - நிலவுலகத்தில், எல்லைக்கண் நின்றார் - நட்பின் எல்லையிலே நின்றவர்கள், தொல்லைக்கண் நின்றார் தொடர்பு - பழமையில் வேறுபடாது நின்றவர்களுடைய நட்பை, தொலைவு இடத்தும

துறவார் - உயிரழிவு வந்த விடத்தும் விடமாட்டார்கள்.

(வி - ம்.) அரக்கர்க்கரசனாகிய இராவணனோடு சடாயு போர் செய்து மாண்டான்; நட்பின் எல்லையிலே நின்றவர்கள், பழமையிலே வேறுபடாது நின்றவர்களுடைய நட்பை உயிரழிவு வந்த பொழுதும் விடமாட்டார்கள் என்பதாம்.

சடாயு கதை

சடாயு என்னுங் கழுகரசனும் தசரதரும் பழைய நண்பர்கள். சடாயுவானவன் சீதாபிராட்டியையும் இராம இலட்சுமணர் மூலமும உரையும்



களையும் காட்டிலே கண்ட பொழுது தன்னுடைய நண்பரின் மக்களும் மருகியும் என்பதை உணர்ந்து அவர்களை அடிக்கடி பார்த்துக் கொண்டிருந்தான். இராம இலட்சுமணர்கள் இல்லாத சமயத்திலே சீதாபிராட்டியை இராவணன் களவு செய்து கொண்டு போதலைச் சடாயு உணர்ந்தான். விரைந்து வந்து இராவணனை எதிர்த்தான். இருவருக்கும் பெரும் போர்மூண்டது. சடாயு படைக்கலமற்றிருந்தாலும் இராவணனை எதிர்த்துப் போரிட்டான். இராவணன் தன்னுடைய கையில் வாட் படை வைத்திருந்தபடியினால் சடாயுவினுடைய சிறகை வெட்டி விட்டான்.

அதனால் சடாயு நிலத்தில் விழுந்து உயிர் துறந்தான். இவ்வாறு சடாயு உயிர் விட்டது தசரத மன்னன் தனக்கு கண்பனுக செய்த நன்றியை நினைத்து என்பது கருதியேயாம். பழைய நட்பில் வேறுபடாதவர்கள் தம்முடைய உயிர்க்கு இறுதி வந்த பொழுது கூட அந்நட்பினை விடமாட்டார்கள் என்பது சடாயு விடம் நன்கு விளங்கியது.

## தீ நட்பு

82. மாயமா ரீசன் மடிந்தான் கவுசிகன்றான்
ஏயதவ முற்றான் இரங்கேசா— ஆயதனால்
பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையார்
ஏதின்மை கோடி யுறும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, மாய மாரீசன் - மாயமானாகி வந்த மாரீசன் என்பவன், மடிந்தான் - இராமனுடைய கையம்பால் இறந்தான், கவுசிகன் - விசுவாமித்திரன், ஏய தவம் உற்றான் - வசிட்டரோடு பகைத்திருந்தும இசைந்து செய் தவப் பெருமையைப் பெற்றான், ஆயதனால் - ஆகையால், பேதை பெரும் கெழீஇ நட்பின் - அறிவில்லாதவனுடைய மிகவும் நெருங்கிய

நட்பைக் காட்டிலும, அறிவுடையார் எதின்மை - நல்லறி





வுடையவர்களது பகைமை, கோடி உறும் - கோடிப் பங்கு நன்மையை உண்டாக்கும்.

(வி - ம்.) இராவணனிடத்திலே நட்புக் கொண்டிருந்த மாரீசன் இறந்தொழிந்தான்; விசுவாமித்திரன் வசிட்டரோடு பகைத்திருந்தும் தவப் பெருமையைப் பெற்முன். அறிவற்றவர்க - ளுடைய நட்பைப் பார்க்கினும் அறிவுடையவர்களுடைய பகையே கோடிப் பங்கு நன்மையைச் செய்யும் என்பதாம்.

மாரீசன் கதை

அறிவற்றவஞகிய, இராவணனுக்கும் மாரீசனுக்கும் உறவும் நட்பும் பெருகியிருந்தன. பேதையாகிய இராவணனுடைய பேச்சைக் கேட்டு மாரீசன் மாயமானுகிச் சீதாபிராட்டி யிருக்கு மிடத்திற்குச் சென்றுன். அதனுல் இராமனுடைய அம்பால் மாண்டொழிந்தான். வசிட்ட முனிவருக்கும் விசுவாமித்திர முனிவருக்கும் பெரும்பகை நேரிட்டிருந்தது. இருந்தும் வசிட்டர் அறிவாளி யாகையால் அவரோடு பகை கொண்ட

விசுவாமித்திரருக்கு நன்மையே உண்டாகியது. பகைமையின் காரணமாகக் கடுந்தவம் புரிந்தார். அதனால் பெரிய முனிவ ரானார்.

கூடாநட்பு

83. சார்ந்துதிதி கர்ப்பஞ் சதகிருதேழ் கண்டமா
ஈர்ந்தன னன்றோ இரங்கேசா—சேர்ந்தார்போல்
சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க
வில்வணக்கந்
தீங்கு குறித்தமை யான்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, சதகிருது - தேவேந்திரன், சார்ந்து - வணங்கிச் சென்று நெருங்கியிருந்து, திதி கர்ப்பம் - திதியென்பவளுடைய



கருப்பத்திலிருந்த குழந்தையை, ஏழ் கண்டம் ஆக - ஏழு கூறுகளாக, ஈர்ந்தனன் அன்றோ - அறுத்தானல்லவா ? (ஆகவே) வில்வணக்கம்-வில்லினுடைய வளைவு, தீங்கு குறித் தமையால் - துன்பத்தைக் குறித்துக் காட்டியதைப் போல, சேர்ந்தார் போல் - நண்பர்கள் சொல்லும் வணக்கத்தை ஏற்றுக்கொள்வது போல்,

ஒன்ஞர்கண் - பகைவ ரிடத்திலும்,
சொல்வணக்கம் - சொல்லினது வணக்கத்தை,
கொள்ளற்க - ஏற்றுக் கொள்ளாதிருக்கக் கடவர்.

(வி - ம்.) தேவேந்திரன் வணங்கிச் சென்று நெருங்கியிருந்து திதியென்பவளுடைய கருப்பத்திலிருந்த குழந்தையை ஏழு கூறுகளாக்கினுன், வில்லினுடைய வளைவு தீங்கு செய்வதைக் குறித்து நிற்பதால் பகைவர்களுடைய சொல்வணக்கத்தை நன்மை பயக்குமென்று கொள்ளக் கூடாது என்பதாம்.

## திதி கதை

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அதிலிருந்தெழுந்த அமுதத்திற்காகப் பெரும் போர் உண்டாயிற்று. அவர்களுக்கிடையில் திருமால் மோகினியாகத் தோன்றி அமுதத்தைத் தேவர்கட்கு மட்டும் வழங்கினுர். அதனை உண்ட தேவர்கள் அஞ்சாமல் அசுரரைக் கொன்று தேவராய் வாழ்ந்தார்கள். திதிக்குத் தன் மக்களிறந்தபடியால் வருத்த முண்டாகியது. கணவ ரா கி ய காசிபரிடஞ் சென்று முறையிட்டாள். தேவர்களைக் கொல்லத் தனக்கொரு பிள்ளை வேண்டு மென்று கேட்டாள். அவற் கவர் "ஒழுக்கந் தவருமல் ஆயிரம் ஆண்டுகள் தவஞ்செய்தால் மகன் பிறப்பான்'' என்று கூறினுர். அவளும்

அவ்வாறே தவஞ் செய்தான். அவள் கருப்பத்திலுள்ள குழந்தையை அழித்துவிட எண்ணிய தேவேந்திரன் திதியிடஞ் சென்று அவளை வணங்கி அவளுடைய வேலையாளாக அமர்ந்தான். தவம் முற்றுப் பெறுவதற்குச் சில காலமிருக்கையில் திதி தலைவைக்குமிடத்தில், வேலையாளாக இருந்த இந்திரன் கால் வைத்துறங்கினான். அதனால் அவளுடைய 11ப
நீதி சூடாமணி

ஒழுக்கங்குன்றியது. அதுதான் சமயமென்று தேவேந்திரன் அவளுடைய கர்ப்பத்தில் முதிர்ந்திருந்த சிசுவைத் தன் வச்சிராயுதத்தால் ஏழு கூறுக்கினான். அதனால் அவளுடைய எண்ணம் நிறைவேருமற் போய் விட்டது. அந்த ஏழு கூறும் ஏழு மருத்துக்களாகப் பிறந்தன. பகைவர்களுடைய வணக்கந் தீமையை உண்டாக்குமென்பது இந்திரனல் நன்கு விளங்கியது.

## பேதைமை

84. மாதாபி தாவை மதியாம லேசிறையில்
ஏதாக வைத்தான் இரங்கேசா—மேதினியில்
ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, மாதா பிதாவை - கஞ்சனுனவன் தன்னுடைய தாய் தந்தை யரை, மதியாமல் - தாய் தந்தையர்கள் என்று சிறிதும் எண்ணுமல், சிறையில் - சிறைச்சாலையில், ஏது ஆக வைத் தான் - எதற்காகப் பூட்டி வைத்தான் ? மேதினியில் - இலவுலகில், பேதை - அறிவில்லாதவன், பெருஞ் செல்வம் உற்ற கடை - மிகுந்தசெல்வத்தை அடைந்த பொழுதில், ஏதிலார் ஆர-பிறர் அச்செல்வத்தை நுகர, தமர் பசிப்பர்-அப் பேதையினுடைய நெருங்கிய உறவினர்கள் பசித் திருப்பர்.

(வி - ம்.) கஞ்சனுனவன் தன்னுடைய தாய்தந்தையர்களைச் சிறையிலே வைத்துப் பூட்டி அவர்கள் பசியால் வாடுமாறு செய்தான். அறிவற்றவன் பெருஞ்செல்வத்தை அடைந்த விடத்தில் யாதுந்தொடர்பில்லாதவர்கள் அச்செல்வத்தை நுகர்ந்து களித்திருக்க அப்பேதையின் நெருங்கிய சுற்றத்தினர் பசியால் வாடியிருப்பர் என்பதாம்.



## கஞ்சன் கதை

உக்கிரசேனனுக்குக் கஞ்சன் பிறந்த பொழுது அவன்

தன்னுடைய தாய் தந்தையர்களை வருத்துவான் என்று காலக் கணிதர்கள் கூறியபடியால் அவனை அவர்கள் பெட்டியிலே வைத்து மூடி ஆற்றிலே மிதக்க விட்டார்கள். அப்பெட்டி ஓர் அரசன் கையிற் சிக்கியது. அதனால் குழந்தை பிழைத்து வளர்ந்தது; பிறகு அக்குழந்தை இளைஞனானபோது வசுதேவரிடத்தில் வில்வித்தை முதலியன கற்றுத் தேறினான். அப்படித் தேறியிருந்த இளைஞனாகிய கஞ்சன் சிங்க வாகனனை வென்று சராசந்தன் மகளைத் திருமணஞ் செய்து கொண்டான். தன்னுடைய பழைய வரலாறுகளையெல்லாம் உணர்ந்து வட மதுரையில் வந்து குடியேறி முடிசூடி அரசாளத் தொடங்கினான். தன்னுடைய தாய்தந்தையர்களை மறவாமல் சிறையில் அடைத்து வைத்தான். அதனால் அவர்கள் பசியால் வாடிச் சிறையில் துன்புற்றிருந்தார்கள். கஞ்சனுடைய உறவினரல்லாத பிறரோ கஞ்சனுடைய செல்வத்தை உண்டு களித்திருந்தார்கள்.

## புல்லறிவாண்மை

85. தாதை சிலையோடிப்பத் தான்மொழிந்தான்
தீதாக ஈதடையார் செய்யார் இரங்கேசா—ஓதில்
அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப்

பெருமாளே !, தாதை - விதுரனாகிய சிறிய தந்தை, சிலை ஒடிப்ப - தன் னுடைய வில்லை இருதுண்டாக முறித்தெறியுமாறு, தீது ஆக தான் மொழிந்தான் - அவனுக்கு மன வருத்தம் உண் டாகுமாறு துரியோதனன் பேசினான், ஈது-இந்தப் பிழை, அடையார் செய்யார் - அவனுக்கு அவனுடைய பகைவர் களும் செய்யமாட்டார்கள், ஓதில் - சொன்னால், அறிவு இலார் - அறிவற்றவர்கள், தாம் தம்மை பீழிக்கும் பீழை - 118 நீதி சூடாமணி

தாமே தங்களை வருத்திக் கொள்ளும வருத்தத்தை, செறு வார்க்கும் - வருத்துதற்குரிய பகைவர்கட்கும், செய்தல் அரிது - செய்தல் அரிதாகும.

(வி - ம் .) மாபெரும் வீரனாகிய விதுரன் தன்னுடைய வில்லை யொடித் தெறியுமாறு துரியோதனன் விதுரனிடத்திலே தவறான மொழிகளைப் பேசினான்; அறிவற்றவர்கள் தமக்குத் தாமே உண்டாக்கிக் கொள்ளும் வருத்தத்தை அவர்களுடைய பகைவர்கள் கூட அவர்கட்குச் செய்யமுடியா தென்பதாம்.

## விதுரன் வில்லொடித்த கதை

கண்ணபிரான் பாண்டவர் பொருட்டு அத்தினபுரத்திற்குத் தூது சென்றார். சென்றவர் விதுரனுடைய இல்லத்திற்குச் சென்று தங்கினார். விதுரனோ கண்ணபிரானைக் கண்டதும், "முன்னை மேதுயின் றருளிய முதுபயோ ததியோ, பன்ன காதிபப் பாயலோ பச்சையா லிலையோ, சொன்ன நால்வகைச் சுருதியோ கருதிநீ யெய்தற், கென்ன மாதவஞ் செய்தது செய்ததிச் சிறுகுடி லென்றான்" என்று கூறியாங்கு வரவேற்றுப் பாராட்டிப் போற்றி விருந்து செய்தான். கண்ண பிரானை வரவேற்றுப் போற்றியதற்காகத் துரியோதனன் தன்னுடைய சிற்றப்பனைப் பலவாறு இகழ்ந்து பேசியதோடு கண்ண பிரானையும் இகழ்ந்தான். துரியோதனனுடைய செய்கை விதுரனுக்குப் பெருஞ்சினத்தையும் வெறுப்பையும் உண்டாக்கியது. ஆகவே அவன் யாராலும் வெல்லுதற்கரிய தன்னுடைய வில்லை முறித்தெறிந்து விட்டுப் புனித நீராடப் போய் விட்டான். போர்க்களத்திற்கு விதுரன் சென்று வில்லெடுத்திருப்பானாயின் அவனை எவராலும் வெல்ல முடியாது. இவ்வாறு செய்தபடியினால் துரியோதனன் ஒருபெரும் துணையைப் போக்கடித்துத் தனக்குத்தானே பெருந்தீமையைச் செய்துகொண்டான். இத்தகைய தீமையை அவனுடைய பகைவர்கள் கூட அவனுக்குச் செய்யமுடியாது.



இகல்

86. சொன்ன நிறத்தான் சுதனே அரும்பகையாய்
இன்னுயிரைக் கொன்றான்
இரங்கேசா—மன்னும்
இகல்காண ணாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, சொன்ன நிறத்தான் சுதனே - இரணியனுடைய மகனாகிய பிரகலாதனே, அரும் பகையாய் - இரணியனுக்குப பெரும் பகையாகி, இன உயிரை கொன்றான் - இரணியனுடைய இனிய உயிரைப போக்கினான், ஆக்கம வருங்கால் - ஒருவனுக்குச் செல்வம வரும் பொழுது, மன்னும - பிறரிட த்திற் பொருந்திய, இகல்காணான் - பகைமையைக் காரணமிருந்தும் நினையான், கேடுதரற்கு - தனக்குத்தானே கேடு தருவித்துக் கொள்வதறகு, அதனை - அந்தப் பகைமையில், மிகல் காணும் - மிகுதலை நினைப்பான்

(வி - ம்.) இரணியனுக்கு அவனுடைய மகனாகிய பிரகலாதனே பெரிய பகையாகி இரணியனுடைய இனிய உயிரைப் போக்கினான்; ஒருவனுக்குச் செல்வம் வரும்பொழுது பிறரிடத்திற் பொருந்திய பகைமையைக் காரணமிருந்தும் நினையான், தனக்குக் கேடு

*தருவித்துக் கொள்ளும்பொழுது அதனை வெல்லக் கருதுவான் என்பதாம்.*

## இரணியன் கதை

*இரணியன் என்பவன் ஆக்கல், காத்தல் அழித்தல் என்னும் முத்தொழில்களையுந் தானே நடத்தினான்; மூன்று உலகங்களையும் தானே அரசாட்சி செய்தான். தன்னையன்றி வேறு தெய்வமில்லை யெனவும் எல்லோருந் தன்னைத்தான் போற்ற வேண்டு மென்றுங் கட்டளையிட்டான். அவனுக்கு அழிவு வந்த பொழுது*



*அவனுடைய பிள்ளையாகிய பிரகலாதனை பகையாகிய காரணத்தால் இறந்தொழிந்தான்.*

## பகைமாட்சி

87. சித்திரசே னன்கையில் சிக்கினான்
மன்னவர்மன்
இத்தரணி போற்று மிரங்கேசா—சுத்த
வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது.

(இ - ள்.) இத்தரணி போற்றும் இரங்கேசா - இவ் வுலகத்தினரால் போற்றப்படுகின்ற அரங்கநாதப் பெருமானே! மன்னவர்மன் - அரசர்க்கரசனுகிய துரியோதனன், சித்திர சேனன் கையில் சிக்கினை - தேவலோகத்தில் இருந்து வந்த சித்திர சேனனிடத்திலே அகப்பட்டுக் கொண்டான் ; சுத்த வழி நோக்கான் - நல்ல ஒழுக்கத்தை மேற் கொள்ளாதவனும், வாய்ப்பன செய்யான் - பொருந்தத் தக்க காரியங்களைச் செய்யாதவனும், பழிநோக்கான் - பழி பாவங்கட்கு அஞ்சாதவனும், பண்பு இலன் - நற்பண்பு இல்லாதவனும் (ஆகிய பொல்லாதவன்), பற்ருர்க்கு இனிது - பகைவர்களுக்கு இனிமையானவன் ஆவான்.

(வி - ம்.) அரசர்க்கரசனுகிய துரியோதனன் தேவலோகத்தி லிருந்து வந்த சித்திர சேனனிடத்திலே அகப்பட் டுக் கொண் டான்; நல்லொழுக்கத்தை மேற்கொள்ளாதவனும், பொருந்தத்தக்க காரியங்களைச் செய்யாதவனும், பழிபாவங்கட்கு அஞ்சாதவனும் நற்பண்பு இல்லாதவனுமாகிய பொல்லாதவன் பகைவர்கட்கு இனிமையானவன் என்பதாம்.

## சித்திரசேனனிடஞ் சிக்கிய கதை

பாண்டவர்கள் காட்டிலே தங்கியிருக்கும் பொழுது துரியோதனன் ஒரு சூழ்ச்சி செய்தான். தான் தேவேந்திரனுடைய ஆனிரையை மடக்கினால் அப்பொழுது அருச்சுனன் போருக்கு வருவான், அப்பொழுது அவனை எளிதில் வென்று விடலாம் என்று முடிவு செய்தான். தேவேந்திரனுடைய ஆனிரையைக் கவர்ந்தான். அருச்சுனன் போருக்குப் போகவில்லை நமக்கென்னவென்று பேசாமலிருந்து விட்டான். தேவலோகத்தில் இருந்து சித்திரசேனன் என்பவன் வந்தான். அவன் துரியோதனனோடு போர்புரிந்து படைகளைக் கொன்றொழித்தான். பிறகு துரியோதனனைப் பிடித்துக் குண்டுக்கட்டாகக் கட்டிக்கொண்டு சென்றான். அப்பொழுது, நம்மை மீட்கக் கூடியவர்கள் பாண்டவர்களே என்று முடிவு செய்து ஓலமிட்டான். அருச்சுனன் விரைந்து சென்று துரியோதனனைச் சித்திரசேனனிடமிருந்து மீட்டான். பொல்லாதவனாகிய துரியோதனன் சித்திரசேனனுக்கு இனியபகைவனானான்.

### பகைத்திறந்தெரிதல்

88. தெவ்வை யிளங்கையென்று செப்பியே
விக்கிரமன் எவ்வமிக வுற்றா னிரங்கேசா—வவ்வி

இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(இ - ள்) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, விக்கிரமன் - விக்கிரமார்க்கன், தெவ்வை - தன் பகைவனாகிய சாலிவாகனனை, இளந்தை என்று செப்பி - இளையவனாக இருக்கிறான் என்று சொல்லிப் பொறுத்திருந்து, எவ்வம் மிக உற்றான் - பிறகு அதிக துனபம் அடைந்தான், ஆகவே, முள் மரம் - களைய வேண்டியதாகிய முள் மரத்தை, இளைது ஆக - இளையதாகிய நிலையிலேயே, வவ்வி கொல்க - பிடித்து அழிக்கடவர், காழ்த்த இடத்து - அம்மரம் 122
நீதி சூடாமணி
முற்றிவிடுமானால், களையுநர் கை கொல்லும் - வெட்டுபவருடைய கைக்கு அது துன்பத்தைக் கொடுக்கும்.

(வி- ம்.) நம்முடைய பகைவனாகிய சாலிவாகனன் இளையவனாக விருக்கிறான் என்று பொறுத்திருந்து விக்கிரமார்க்கன் பிறகு மிகுந்த துன்பத்தை யடைந்தான். முள்ளோடு கூடிய மரத்தை அது முற்றாத நிலையிலேயே ஒழித்தல் வேண்டும். முற்றி விடுமானால் களைபவர்களுடைய கைக்கு அது தொல்லையைக் கொடுக்கும் என்பதாம்.

## விக்கிரமார்க்கன் கதை

சாலிவாகனன் என்பவன் விக்கிரமார்க்கனுக்குப் பகைவனாகத் தோன்றினன். சாலிவாகனனுடைய அறிவாற்றல் மிகு இளமையிலே சிறந்து திகழ்ந்தது. அதனால் அவனுக்கும் விக்கிரமார்க்கனுக்கும் பகையுண்டாகியது. விக்கிரமார்க்கன், இச் சிறுவன் நம்மை என்ன செய்து விடமுடியும் என்னும் எண்ணத்தினல் பேசாமலிருந்தான். சாலிவாகனன் ஒரு குயவன் வீட்டில் வளர்ந்து பிறகு விக்கிரமார்க்கனை வென்று தொலைத்துவிட்டான்.

## உட்பகை

89. இவ்வுலகை யாளா திராமனைக்கான் போக்கினுள்
எவ்வமனக் கூனி
இரங்கேசா—அவ்வியஞ்சேர்
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ள தாங் கேடு

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, எவ்வ மன கூனி - குற்றமுள்ள மனம் பொருந்திய கூனியாகிய மந்தரை என்பவள், இராமனை - இராமபிரானை, இ உலகை

ஆளாது இங்கிலவுலகையாள வொட்டாமல், கான் போக்கினை காட்டுக்கு அனுப்புவித்தாள்,



பொறுமையோடு கூடிய, உள் பகை - உள்ளே உள்ள பகை யானது 'எள் பகவு அன்ன சிறுமைத்து ஏ ஆயினும்எள்ளின் பிளவை யொத்த சிறுமையை உடையதே ஆனாலும், கேடு உள்ளது ஆம் - கேட்டையுடையதாகும்.

(வி - ம்.) குற்றம் பொருந்திய மனமுள்ள கூனியானவள் இராமபிரான் இங்கிலவுலகை யாளாமல் காட்டுக்குப் போகுமாறு அனுப்புவித்தாள். பொறுமையோடு கூடிய உட்பகையானது எள்ளின் பிளவையொத்த சிறுமையை உடையதே ஆனாலும் கேட்டைத்தரும் என்பதாகும்.

### கூனி கதை

இராமபிரான் சிறுபிள்ளையாக இருக்கும்போது உண்டைவில் வைத்து விளையாடினார். கூனியின் மீது சிறு மண் உண்டையை எய்து விளையாடினார். இராமபிரானுக்கு அது விளையாட்டாக இருந்த போதினும் குற்றம் பொருந்திய மனமுள்ளவளாகிய கூனிக்கு அது வினையாகவிருந்தது. அதன்பொருட்டு இராம பிரானிடத்திலே உட்பகை கொண்டிருந்தாள்.

தீமை செய் வதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தாள். இராமபிரானுக்கு முடிசூட்டு விழாநடைபெறுஞ் சமயம் வந்ததும் அவள் கைகேசியினுடைய மனத்தைக் கலைத்தாள். முன் தசரதன் தருவதாகக் கூறியிருந்த வரங்களை அப்பொழுது கேட்டு வாங்கச் செய்தாள். ஒரு வரத்தால் இராமபிரானைக் காட்டிற்கு அனுப்பச் செய்தாள். அவளுடைய உட்பகை பலித்து விட்டது. அதனால் இராமபிரான் காட்டிற்குச் சென்றார்.

## பெரியாரைப் பிழையாமை

90. சொல்வல் லகத்தியர்க்குச் சூழ்ச்சிசெய்த வா
தாவி இல்வலனு மாய்ந்தா ரிரங்கேசா—மல்வல்ல
கூற்றத்தைக் கையால் விளித்தற்று லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, சொல்வல் அகத்தியர்க்கு - தப்பாமற் பலிக்குஞ் சொல்லை யுடையவராகிய அகத்தியர்க்கு, சூழ்ச்சி செய்த - வஞ்சனை செய்த, வாதாவி இல்வலனும் - வில்வலன் வாதாவி என்னும் இரண்டு அரக்கர்களும், மாய்ந்தார் - இறந்தார்கள், ஆற்றுவார்க்கு - எதனையுந் தாங்கக் கூடிய

ஆற்றல் பொருந்தியவர்கட்கு, ஆற்றுதார் - ஆற்றலற்றவர்கள், இன்னா செயல் - தீமைசெய்வது, மல்வல்ல - உயிர்களை வருத்தவல்ல, கூற்றத்தை - நமனை, கையால் விளித்தற்று - கைகாட்டி அழைத்தது போலாகும்.

(வி - ம்.) வாதாவி இல்வலன் என்னும் இரண்டு அரக்கர்கள் அகத்தியரைக் கொலைசெய்வதற்குச் சூழ்ச்சி செய்து தாங்கள் மாண்டொழிந்தார்கள். எதனையும் பொறுக்கக் கூடிய ஆற்றலுள்ளவர்கட்கு ஆற்றலில்லாதவர்கள் தீமையைச் செய்தல் நமனைக் கைகாட்டி அழைத்ததைப் போன்றது என்பதாம்.

## வாதாவி இல்வலன் கதை

அகத்திய முனிவர் பொதியமலையை நோக்கிச் சென்று கொண்டிருந்தார். வழியிலே ஓர் ஊரில் வாதாவி இல்வலன் என்னும் பெயர்களையுடைய இரண்டு அரக்கர்கள் இருந்தார்கள். அவர்கள் இருவரும் உடன் பிறந்தவர்கள்; வஞ்சனையில் கை தேர்ந்தவர்கள். மற்றவர்களை வஞ்சித்துக் கொல்லுந் தங்களுடைய சூழ்ச்சியை அகத்தியரிடத்திலுஞ் செய்யத் தொடங்கினார்கள். வாதாவி ஆடானான்; இல்வலன் அவ்வாட்டையறுத்துக் கறி சமைத்துப் படைத்தான். அகத்தியர் உண்டார். உண்ட பிறகு இல்வலன் தன்னுடைய வழக்கம் போல் வாதாவியை அழைத்தான். வாதாவி எழுந்து உட்கார்ந்தான் .

வஞ்சனையை உணர்ந்த அகத்தியர், "வாதாவி சீரணவி" என்று கூறி வயிற் றைத்தடவினர். வாதாவி மாண்டொழிந்தான். இல்வலனையும அகத்தியர் தம்முடைய சினத் தீயினல் சுட்டெரித்தார். 125.

மூலமும் உரையும்

இவ்வாறு எதனையும் தாங்கக்
அகத்தியர்க்குத் தீமை செய்து

கூடிய ஆற்றல் படைத்த
இரண்டு அரக்கர்களும்
மாண்டொழிந்தார்கள்.

பெண்வழிச் சேறல்

91. சந்தனுவேந் தேழு தனைய ருயிரிழந்தான்
இந்துநுதற் கங்கை யிரங்கேசா—அந்தோ
மனைவிழைவார் மாண்பய னெய்தார்
வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்காதப் பெருமானே!, இந்துநுதல் கங்கை - பிறைத்திங்களைப் போன்ற நெற்றியினை யுடைய கங்காதேவியின் செயலால், சந்தனுவேந்து-சந்தனு மன்னன்,

ஏழு தனையர் உயிர் இழந்தான் - ஏழுபிள்ளைக ளுடைய உயிரைப். போக்கடித்தான், அந்தோ - ஐயோ, மனை விழைவார் - தன்மனையாளை விரும்பி அவளுடைய சொல்லின்படியே நடப்பவர்கள, மாண்பயன் எய்தார் - பெருமை பொருந்திய பயனை அடைய மாட்டார்கள், வினை விழைவார் - தொழிலை விரும்பி அதிலே முயல்பவர்கள, வேண்டாப் பொருளும அது - இகழும் பொருளும் அந்த இன் பமேயாகும்.

(வி - ம.) கங்காதேவியினுடைய இன்பத்தை விரும்பிய மன்னவன் அவளுடைய செய்கையைப் பொறுத்துக் கொண் டிருந்தபடியினால் ஏழு மக்களுயிரைப் போக்கடித்தான். தன்னுடைய மனையாளை விரும்பி அவளுடைய சொற்படி நடப்பவர்கள் பெருமை பொருந்திய பயனையடையமாட்டார்கள்; நற்செயலை விரும்புகிறவர்கள் வேண்டாப் பொருள் மனை விழைதலே என்பதாம்.



சந்தனு கதை

வசிட்டருடைய சிவபூசைக்குக் காமதேனு சென்று கொண்டிருந்தது. இடைவழியில் வசுக்கள் எண்மரும் அதனைப் பற்றித் தங்களுடைய இருப்பிடத்திற்குக் கொண்டு போக முயன்றார்கள். அப்பொழுது காமதேனு எண்மரையும் இழுத்துக்கொண்டு வசிட்டரிடம் போய் நடந்த செய்தியைக் கூறியது. வசிட்டர் சினங் கொண்டார். அந்த எண்மரையும் பார்த்து, "நீங்கள் எண்மரும் நிலவுலகிலே பிறக்கக் கடவீர்கள்" என்று தீ மொழி புகன்றார். இதனைக் கேட்டு அவர்கள் மிகுந்த அச்சத்தை அடைந்தார்கள். அவர்களில் ஏழு பேர் மிகவும் அஞ்சி வசிட்டரை வணங்கிப், "பெரியீர்! இது எங்கள் தலைவனால் நேரிட்ட குற்றமாகும். நாங்கள் ஏழு பேரும் அவனுடைய சொற்படி நடந்தோம்" என்றார்கள். வசிட்டர் மீளவும் அவர்களைப் பார்த்து, "நீங்கள் எழுவரும் நிலத்திற் பிறந்தவுடனே பிறப்பு நீங்கி வசுக்களாவீர்கள். இக்குற்றத்திற்குக் காரணமாக விருந்த உங்கள் தலைவன் மட்டும் நிலவுலகிற் பல்லாண்டு துறவியாக விருந்து பாரதப் போரில் அர்ச்சுனன் கையம்பால் இறந்து வசுவாக வரக்கடவன்" என்று கூறினார். அவ்வாறே எண்மரும் நிலத்தை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். இடை வழியில் கங்கையெதிர்ப்பட்டாள். அவர்களிடத்தில் வசுக்கள் தங்களுடைய செய்தியைக் கூறித் தாங்கள் அவளிடம் பிறப்பதாகவும் உடனுக்குடன் கொன்று

விடுமாறும் கடைசியானவனை மட்டும் கொல்லாமல் விட்டு விடும் படியாகவும் ஏற்பாடு செய்துகொண்டார்கள் கங்கை சந்தனுவுக்கு மனைவியானள். அரசன் அவள் மேல் மிகுந்த காதலுடையவனுக அவள் சொற்படியே நடந்து கொண் டிருந்தான். ஆகவே அவள் தன் வயிற்றிற் பிறந்த வசுக்கள் எழுவரையுங் கங்கையில் எறிந்து கொன்ருள். எட்டாவது பிள்ளை கருப்பத்திலிருந்தபோது சந்தனுவுக்குப் பெண் மயல் நீங்கிற்று. எட்டாவது பிள்ளை உயிர் பிழைத்து வீடுமர் என்னும் பெயரோடு விளங்கியது. சந்தனு மனைவியிடத்தில் கொண்ட பெருங் காதலால் குழந்தைகளைத் தண்ணீரில் எறிந்து



கொலை செய்யும் போது தடுக்காமலிருந்து பழியைத் தேடிக் கொண்டான்.

வரைவின்மகளிர்

92. தொண்ட ரடிப்பொடியைத் தோளிறுக
வீக்குதலால்
எண்டிசையும் போற்று மிரங்கேசா—கண்டிருந்தும்
தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள்.

(இ - ள்.) எண்திசையும் போற்றும் இரங்கேசா—எட்டுத் திக்குகளிலும் உள்ளவர்களால்

போற்றப்படுகிற அரங்கநாதப் பெருமானே !, தொண்ட ரடிப் பொடியைதொண்டரடிப் பொடியாழ்வாரை, தோள் இருக கட்டுதலால்- கோயிலில் களவு செய்தாரென்று சொல்லி இரு தோள்களும் அழுந்தக் கட்டினார்கள், கண்டு இருந்தும - அதனைப் பார்த் திருந்தும், தகை செருக்கி புன்னலம் பாரிப்பார் தோள்ஆடல் பாடல் அழகு முதலியவைகளால் இறுமார்ந்து தம் அற்பசுகத்தை விலை கொடுப்பவர்களுக்கெல்லாம .விற்கும் பெண்களுடைய தோளை, தங்கலம் பாரிப்பார் - தமது புகழை உலகிலே பரப்புவதற்குரிய பெரியோர், தோயார் - தீண்டார்.

(வி - ம்.) தொண்டரடிப் பொடியாழ்வார் விலைமகள் பொருட்டுக் கோயிலிலே களவு செய்து விட்டார் என்று பொய்யான குற்றத்தைச் சுமத்தி அவருடைய இரு தோள் களையும் அழுந்தக் கட்டியதைப் பார்த்திருந்தும் அழகு முதலியவைகளால் மிகுந்த இறுமாப்பையடைந்து தம்முடைய இழிந்த இன்பத்தை எல்லாரிடமும் விற்கும் பெண்களுடைய தோளை, தம்முடைய பெருமையை உலகிலே பரப்ப எண்ணியவர்கள் தோயமாட்டார்கள் என்பதாம்.

# தொண்டரடிப் பொடியாழ்வார் கதை

தொண்டரடிப் பொடியாழ்வார் என்பவர் திருவரங்கத்திலே திருநந்தவனத் திருப்பணி செய்து கொண்டிருந்தார். அவரை அவ்வூரிலிருந்த விலைமகளொருத்தி மயக்கி வைத்திருந்தாள். ஆழ்வாரும் அவளிடத்திலே உண்மைக் காதல் வைத்து ஒழுகினார். ஒருநாள் அவளுக்கு அவர் பொருள் கொடுத்திலராகையால் தன்னிடம் வரவேண்டாம் என்று ஒதுக்கினாள். அதனால் தனியே கிடந்து ஆழ்வார் வருந்தித்துன்புற்றார். அரங்கநாதர் ஓர் அந்தணச் சிறுவனாக வடிவெடுத்து நள்ளிரவில் திருக்கோயிலில் இருந்த ஒரு பொற் கிண்ணத்தைக் கொண்டு போய் அவ்விலைமகளுக்குக் காட்டித், "தொண்டர் அடிப்பொடி கொடுக்கச் சொன்னார்" என்று கூறிக் கொடுத்தார், "ஆழ்வாரிடத்திற் போய் உம்மை விலைமகள் வரச்சொன்னாள்" என்று கூறிவிட்டுப் போனார். ஆழ்வார் அன்றிரவு அவளோடிருந்து விட்டுக் காலையிற் புறப்பட்டுப் போய் விட்டார். கோயிலில் இருந்த கிண்ணத்தைக் காணாதபடியால் அரசன் கட்டளையால் காவல்காரர்கள் தேடிக்கொண்டு புறப்பட்டார்கள். ஆழ்வார் மீது ஐயுற்று அவரை ஆராய்ந்து பார்த்தற் பொருட்டு விலைமகள் வீட்டிற்குச் சென்று தேடினார்கள். கிண்ணம் அகப்பட்டது. விலைமகள், "தொண்டரடிப் பொடி ஓர் அந்தணச் சிறுவனிடத்திலே இதனைக் கொடுத்தனுப்பினார்" என்று கூறினாள். காவல்காரர்கள் தொண்டரடிப்பொடியாரைப் பிடித்துக் கட்டிக்கொண்டு சென்றார்கள். திருவரங்கநாதர் தோன்றி அவரை விடுவித்தார், விலைமகளிருடைய தோளைச் சேர்தலால் கேடுண்டாம் என்பது ஆழ்வாரிடத்தில் நன்கு விளங்கியது.

கள்ளுண்ணாமை

93. தக்ககுரு

மைந்தனென்பு சார்ந்தமது வுண்டசுங்கன் எக்கருமஞ்
செய்தான் இரங்கேசா—மிக்க களித்தறியே
னென்பது கைவிடுக நெஞ்சத் தொளித்ததூஉ மாங்கே
மிகும்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, தக்க குரு மைந்தன் என்பு சார்ந்த மது - பெருமையாய் மதிக்கத் தகுந்த வியாழ பகவனுடைய பிள்ளையின் எலும்பு ஊன் முதலியவைகளை அரைத்துக் கலக்கிய கள்ளை, உண்ட சுங்கன் - குடித்த சுக்கிர பகவான், எக்கருமம் செய்தான்யாது காரியத்தைச் செய்தான் ? தன்னுடைய உயிருக்கே தீங்குவரக் கூடிய காரியத்தைச் செய்து கொண்டான். ஆகவே ; மிக்க களித்து அறியேன் என்பது கைவிடுக - ஒருவன் தான் மிகுந்த கள்ளை மறைவிற் குடித்து வெளியில் வந்து நான் குடிக்கவில்லையென று பொய் பேசுதலை விடக் கடவன், நெஞ்சத்து ஒளித்ததும் ஆங்கே மிகும் - முன்பு நெஞ்சத்திலே மறைத்து வைத்த குற்றமும் மிகுதியாக வெளிபபடும்.

(வி - ம்.) சுக்கிரன் வியாழபகவானுடைய மகனின் எலும்பு ஊன் முதலியவைகளைக் கரைத்த கள்ளைக் குடித்து விட்டான் . கள்ளுண் பவன் யான் கள் குடிப்பதில்லை என்று பொய் பேசுவதை விட்டுவிடவேண் டும் நெஞ்சில் ஒளித்து வைத்திருக்குங் குற்றம் கள்ளுண்டபோதே வெளிப்படும் என்பதாம்.

## சுக்கிரன் கள்குடித்த கதை

வியாழபகவானுடைய மகன் சுக்கிரனுடைய இல்லத்திற்குச் சென்று கல்வி கற்றுக்கொண்டிருந்தான். சுக்கிரன் அசுரர் கட்குக் குரு. வியாழபகவான் தேவர்கட்குக்குரு. தேவகுருவின் மைந்தனுக்குத் தம் குரு கல்விகற்பிப்பது அசுரர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் பொருமை கொண்டு அப்பிள்ளையைப் பன்முறை கொன்று விட்டார்கள். ஒவ்வொரு முறையும் சுக்கிரன் சஞ்சீவி மந்திரத்தால் அவனைப் பிழைப்பித்துக் கொண்டேயிருந்தார். இதனைப் பார்த்த அசுரர்கள் அப் பிள்ளையை எப்படியேனும் ஓரேயடியாகத் தொலைத்துவிட வேண்டுமென்று எண்ணினார்கள். ஒருநாள் காட்டிலே நெடுந்

நீ. சூ—9

தொலை அழைத்துக் கொண்டு போய்க் கொன்றுர்கள். கல்லில் வைத்து அரைத்துக் கள்ளிற் கரைத்துக் குருவுக்குக் கொண்டு வந்து கொடுத்தார்கள். குரு முன்பின் பார்க்காமல் அதனைக் குடித்து விட்டார். அதனுல் அவருக்கு மிகுந்த மயக்கம் உண்டாகியது. வியாழனுடைய மகனை மறந்துவிட்டார். சாப்பாட்டு வேளையில் அவனைத் தேடத் தொடங்கினுர். நெடு நேரம்தேடியுங் காணுதபடியால் அவன் எங்கிருக்கிறுன் என்று அவர் தம்முடைய அறிவுப் பார்வையாற் பார்த்தார். தம் முடைய வயிற்றிலே இருக்கிறுன் என்று கண்டு கொண்டார். உடனே சஞ்சீவி மந்திரத்தால் அவனை அவர் பிழைப்பித்தார். அம்மறையை அவனுக்கு உரைத்தார். அவன் அவருடைய வயிற்றைக் கிறிக் கொண்டு வெளியிலே வந்தான். அதனுல் அவர் இறந்தார். அவரை அவன் அம்மறையாற் பிழைக்கச் செய்தான். இதனுல் சுக்கிரன் மிகுந்த தொல்லைக்குள்ளாஞன். கள்ளுண்பவர்களுடைய செய்கை எவ்வாறேனும் வெளிப்பட்டு விடும்.

சூது

94. தன்மர் துரியோ தனனுடன் சூதாடி
இன்மையுற்ரு ரன்றே
இரங்கேசா—நன்மைப்
பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ

யருள்கெடுத்

தல்ல லுழப்பிக்குஞ் சூது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப பெருமாளே !, தன்மர் - தருமராசன், துரியோதனனுடன் சூதாடி - துரியோதனனேடு சூதாடுதலைச் செய்து, இன்மை உற்ருர் அன்றே - வறுமையை அடைந்தார் அல்லவா?, சூது - சூதாடுதலானது, நன்மை - நன்மையை உண்டாக்கத்தக்க, பொருள் கெடுத்து - செல்வத்தை அழித்து, பொய் மேல் கொளீஇ - பொய்யை மேற்கொள்ளச் செய்து, அருள் கெடுத்து - அருளைப்போக்கி, அல்லல் உழப்பிக்கும் துன்பத்தை நுகரச் செய்யும்.



(வி - ம்.) தருமர் துரியோதனனேடு சூதாடி வறுமையை அடைந்தார் ; சூதாடுதலானது பொருளைக் கெடுத்துப் பொய்யை மேற்கொள்ளச் செய்து அருளைப்போக்கித் துன்பத்தை உண்டாக்கிவிடு மென்பதாம்.

### தருமர் சூதாடிய கதை

தருமர் துரியோதனனுடைய விருப்பப்படி சகுனியோடு சூதாடினர். அதனல் தம்முடைய நாடு

நகரம் முதலிய எல்லா வற்றையும் இழந்தார். பன்னிரண்டு ஆண்டுகள் காட்டிலே சுற்றித்திரிதலாகிய துன்பத்தையும் நுகர்ந்தார். பிறகு தம்மு டைய நாடு நகரங்களைப் பெறும் பொருட்டுத் துரியோதனனோடு போர் செய்யத்தொடங்கினர். போர் நடந்து கொண்டிருக்கிற போது துரியோதனன் பக்கத்திலேயிருந்த துரோணரைக் கொன்றொழிப்பதற்காக "அசுவத்தாமா அதா குஞ்சரா" என்று பொய்யையுஞ் சொன்னர். சூதானது பொருளைக் கெடுக்கும் பொய் பேசச் செய்யும் அருளைக் கெடுத்துப் பல துன்பங்களை உண்டாக்கும் என்பதற்குத் தருமர் தக்க எடுத்துக்காட்டாக அமைந்தார்.

### மருந்து

95. அம்பருடன் வேள்விநுகர்ந் தக்கினிக்கு மந்தமுற்ற
தேன்ப வறிந்து மிரங்கேசா—தன்பசியின்
தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, அம்பருடன் - இரகுவம்சத்தரசனாகிய அம்பரீட மன்ன னுடைய, வேள்வி-வேள்வியுணவை, நுகர்ந்து-மிகுதியாகப் புசித்து, அக்கினிக்கு - தீக்கடவுளுக்கு, மந்தம்

உற்றது - மந்தநோய் உண்டாகியது, என்பதறிந்தும் - என்பதை யுணர்ந்த பிறகும் - தன் பசியின் தீ அளவு அன்றி - தன் பசியின் எரிச்சல் அளவுக்கு அல்லாமல், தெரியான்-தெரிந்து



கொள்ளாதவனாய், பெரிது உண்ணின் - மிகுதியாக உண்பானாயின், நோய் - நோயானது, அளவு இன்றிபடும் - அளவில்லாமல் அவனிடத்திலே உண்டாகும்.

(வி - ம்.) அம்பரீடனுடைய வேள்வியுணவைத் தீக் கடவுள் மிகுதியாகப் புசித்தபடியினால் மந்தநோய் உண் டாகியது. ஒருவன் தன்னுடைய பசியெரிச்சலின் அளவுக்குத் தக்கவாறு அல்லாமல் மிகுதியாக உண்பானாயின் அவனுக்கு நோய்களானவை கணக்கில்லாமல் உண்டாகும் என்பதாம்.

## தீக் கடவுள் கதை

இரகுவமிச மன்னனாகிய அம்பரீடன் என்பவன் ஒரு காலத்தில் யானைத் துதிக்கை போல ஆகுதி கொடுத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் விடாமல் ஒரு பெரு வேள்வியைச் செய்தான். அந்த வேள்வியுணவைத் தீக் கடவுள் தன் பசியளவுக் கேற்றபடி யுண்ணாமல் அளவு கடந்து உண்டபடியினால்

*பசியின்மையாகிய மந்த நோய் உண்டாகியது. அதனால் தீக் கடவுள் நெடுங்காலம் வருந்திப் பிறகு நலம் பெற்றான். ஆகவே எத்தகையோரும் பசியளவுக்குத் தக்கவாறன்றிக் கண்டபடி யுண்டால் நோயடைவது திண்ணமாகும்.*

## ஒழிபியல்

### குடிமை

96. தூடணமா மைவருடன் துன்னுதலென்
றேகன்னன ஈடனையை நீத்தா னிரங்கேசா—நீட
அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார் குன்றுவ
செய்வ திலர்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப பெருமானே !, கன்னன் - கன்னனானவன், ஐவருடன் துன்னுதல் - பாண்டவர்களோடு சேர்ந்து கொள்ளுதல், தூடணம் ஆம் என்றுமூலமும்*



*பிறர் பழிப்பதற்கு இடம் ஆகும் என்று நினைத்து, ஈடு அனையை - தன் மக்களோடு சரியாக எண்ணியழைத்த தாயாகிய குந்திதேவியை, நீத்தான்-பிரிந்தான், நீட-வளர, அடுக்கிய - பலவாக அடுக்கப்பெற்ற, கோடி பெறினும்கோடியளவான*

பொருளைப் பெற்றாலும், குடி பிறந்தார் - உயர்ந்த குடியிலே பிறந்தவர்கள், குன்றுவ - தம் சீர்த்தி கெடுதற்குரிய செயல்களை, செய்தல் இலர் - செய்ய மாட்டார்கள்.

(வி - ம்.) குந்திதேவியானவள் உண்மையைக் கூறிக் கூப்பிட்டபோது கன்னனானவன் பாண்டவர்களையடைந்து வாழ்தல் இகழ்ச்சிக்கிடமாகுமென்று கூறித் தன்னுடைய தாயை அனுப்பி விட்டான். நல்ல குடியிலே பிறந்தவர்கள் கோடிக் கணக்கான பொருளைப் பெற்றாலும் தம்முடைய நல்லொழுக்கங் குன்றும் படியான காரியங்களைச் செய்யமாட்டார்கள் என்பதாம்.

## கன்னன் கதை

கண்ணபிரான் தூது சென்று திரும்புகையில் குந்தி தேவியைக் கண்டு கன்னன் அவளுடைய பிள்ளை யென்று உண்மையைக் கூறி, "நீ போய்க் கன்னனைக் கண்டு, அவனை உன் பிள்ளையென்று தெரிவித்து அழைத்து வந்து ஐவரோடு சேர்த்துவிடு. அப்பொழுது கன்னனுக்கும் அருச்சுனனுக்கும் உள்ள பகைமையொழியும். உன்னுடைய ஆறு மக்களும் நலமாக வாழ்வார்கள்" என்று கூறி அவளிடத்தில் அவளை அனுப்பினார். குந்திதேவி கன்னனிடஞ் சென்று அவன் தன் பிள்ளையென்று தெரிவித்தாள். தன்னோடு வந்தால் ஐவருக்கும் மூத்தவனாக அரசாளலாம் என்று

சொல்லி அழைத்தாள். கன்னன் குந்தி கூறியதை நம்பினுயினும் அவள் கூறியதற்கு உடன்படவில்லை. நீ முன்னரே இதனைத் தெரிவித்திருக்கவேண்டும். இப்பொழுது நான் துரியோதனனை நீங்கி வந்தால் எல்லோரும் என்னை நன்றி கெட்டவன் என்று இகழ்வார்கள்" என்று கூறி அவளை அனுப்பிவிட்டான். நற் குடியிற் பிறந்தவர்கள் பெருமை 134
நீதி சூடாமணி
கெடும்படியான காரியத்தைச்
செய்யமாட்டார்களென்பது கன்னனிடத்தில் அன்று நன்கு விளங்கியது.

## மானம்

97. ஆகங் குறைந்துருவே ருனில் லாளைவிடுத்
தேகிநள வேந்த னிரங்கேசா—ஆகையினுல் குன்றி
னனையாருங் குன்றுவர் குன்றுவ குன்றி யனைய
செயின்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, நளவேந்தன் - நளன், இல்லாளை விடுத்து ஏகி - தன் மனைவியாகிய தமயந்தியைக் காட்டில் விட்டுப் பிரிந்து சென்று, ஆகம் குறைந்து உரு வேறு ஆனுன் - உடல் இளைத்தும் கறுத்தும் வடிவம் மாறினுன், ஆகையினுல் -

ஆகையால், குன்றின் அனையாரும் - குடிப்பிறப்பால் மலையைப் போல் உயர்ந்தவரும், குன்றுவ - இழிவடைவதற் கேதுவாகிய செயல்களை, குன்றி அனைய செயின் - ஒரு குன்றிமணியளவாயினுஞ் செய்தால், குன்றுவர் - தாழ்வர்.

(வி - ம்.) நளனுனவன் இல்லாளை விட்டுப் பிரிந்து சென்ற படியினால் உடல் இளைத்துக் கறுத்து வடிவம் மாறினன்; குடிப் பிறப்பினால் மலையைப் போல் உயர்ந்தவர்களும் இழிவடைவதற் கேதுவாகிய செயல்களை ஒரு குன்றிமணியளவாயினுஞ் செய்தால் தாழ்வடைவார்கள் என்பதாம்.

### நளன் கதை

நளன் நடுக்காட்டில் நள்ளிரவில் தன்னுடைய இல்லாளை விட்டுப் பிரிந்து சென்றான். அதனால் பெருமை குறைந்து உடல் சிறுத்துக் கறுத்து உருமாறிப் போனான். பிறகு தன்னுடைய மனைவியைக் கண்ட பிறகு தன்னுடைய பழைய வடிவத்தை யடைந்தான். நளன் அறிவு மயக்கதால் நள்ளிரவில் நடுக் மூலமு



காட்டில் மனைவியைப் பிரிந்து பெருமைக் கேலாத காரியத்தைச் செய்த படியினால் சிறுமையடைந்தான்.

98. மண்பரவு சக்கரத்தை மாலெடுப்ப வீட்டுமனார்
எண்புகழாக் கொண்டார் இரங்கேசா—பண்பால்
பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின் அருமை
யுடைய செயல்.

(இ - ள். ) *இரங்கேசா - அரங்கநாதப பெருமானே மால் - இருமாலின் கூறுகிய கண்ணபிரான், மண்பரவும்- உலகத்தார் போற்றும், சக்கரத்தை எடுப்ப - தம்முடைய ஆழிப்படையைப பாரதப்போரில் எடுத்தபடியினால், வீட்டு மனார்-வீடுமர், எண்புகழ் ஆ கொண்டார் - தமது சூளுரை வென்றபடியினால் மதிக்கத்தக்க சீர்த்தியாக அதனை எண்ணிக்கொண்டார், பண்பால்-நற்குணத்தினால், பெருமை உடையவர் - மேன்மையை உடையவர்கள், அருமை உடைய செயல்-அருமையாகிய காரியங்களை, ஆற்றின்-செய்யும் வழி யால், ஆற்றுவார் - செய்து முடிக்கவல்லவராவார்.*

(வி - ம். ) *திருமாலின் கூறுகிய கண்ணபிரான் பாரதப் போரில் தம்முடைய உருளைப் படையை எடுத்த படியினால் வீடுமர் அதனைத் தமது சூளுரையை வெற்றிபெறச் செய்த சீர்த்தியாக*

எண்ணிக் கொண்டார். மேன்மையை உடையவர்கள் அருமையாகிய காரியங்களைச் செய்யும் வழியால் செய்து முடிக்க வல்லவராவர் என்பதாம்.

## வீடுமர் சூளுரைத்த கதை

பாரதப் போரில் கண்ணபிரான் தாம் படைக்கல மெடுக்கிறதில்லை யென்று சொன்னபோது, வீட்டுமர், "உம்மை நான் படைக்கலம் எடுக்கச் செய்கிறேன்" என்று சூளுரை 136
நீதி சூடாமணி

புகன்றார். பிறகு அவ்வாறே சயிந்தவனைக் கொல்விப்பதற்காகக் கண்ணபிரான் தம்முடைய ஆழிப்படையை எடுத்துக் கதிரவனை மறைத்தபடியினால் வீடுமருடைய சூளுரை வென்றது. இதனால் வீடுமர் அருமையான செயலைச் செய்தவரானார்.

## சான்றாண்மை

99. புத்தனேழி கற்கும் புராரி பதமளித்தான்
இத்தரணி போற்று மிரங்கேசா—மெத்தவே
இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு.

(இ - ள்.) இத்தரணி போற்றும்

இரங்கேசா - இவ் வுலகத்தார்களால் போற்றப் பெறுகிற அரங்கநாதப் பெருமானே!
புராரி-முப்புரமெரி செய்த சிவபிரான், புத்தன் எறிகற்கும் - பௌத்த சமயத்தினராகிய சாக்கிய நாயனர் தம்மீது கல்லை எறிந்த சாக்கியர்க்கும, பதம் அளித்தார்-சிவ பதம் வழங்கினர், மெத்த-மிகவும், இன்னு செய்தார்க்கும் - துன்பஞ் செய்தவர்களுக்கும், இனியவே செய்யாக்கால் - இனிமையான காரியங்களையே செய்யாமற்போனல், சால்பு - அவருடைய சான்ருண்மை ம , என்ன பயத்ததோ - என்ன பயனுடையதாகுமோ?

(வி - ம்.) சிவபெருமான் தம்மீது சாக்கியநாயனர் கல்லை எறிந்தும் அவர்க்குத் திருவடிப் பேற்றை வழங்கியருளினர். துன் பஞ் செய்தவர் களுக்கும் இன்பத்தைச் செய்யாமற் போனல் பெரியோர்களுடைய சான்ருண்மை என்பது வேறு என்ன பயனைச் செய்யக் கூடும் என்பதாம்.

## சாக்கிய நாயனர் கதை

காஞ்சிமா நகரிலே யிருந்த பௌத்த சமயத்தினராகிய சாக்கிய நாயனர்க்குச் சிவபிரான் மீது அன்பு முதிர்ந்திருந்தது. மூலமும் உரையும்

அதனால் அவர் தம்மைத் தம் மதத்தினர் ஐயப்பட்டொறுக்காத வாறு சிவலிங்கத்தின் மேல் கல்லெறிவதையே வழிபாடாகக் கொண்டு நாள்தோறும் அதனை மறவாமல் செய்து வந்தார். வெளிக்கு இவ்வாறு செய்தாராயினும் உள்ளத்திலே மிகுந்த அன்புடையவராக விருந்தார். அதனால் சிவபெருமான் வெளிப் பார்வைக்குத் தீமைபோற் காணப்பெறும் இச் செய்கையை நன்மையாகவே ஏற்றுக்கொண்டு வீடுபேற்றை வழங்கி யருளினார்.

## பண்புடைமை

100. துன்பமுறுந் தங்கையெனச் சொல்லி யுதிட்டிரனார்

இன்பமுற்று ரன்றோ இரங்கேசா—அன்பின்

நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, யுதிட்டிரனார் - தருமர், தங்கை துன்பம் உறும் என்ன சொல்லி - சயிந்தவனை அருச்சுனன் கொன்றால் தங்கை துன்பப்படுவா ளாகையால் விழிப்புடனிரு வென்று துரியோதனனுக்குச் சொல்லியனுப்பி, இன்பம்

உற்றுன் அன்றோ - அதற்காக மகிழச்சியை அடைந்தாரல்லவா?, இகழ்ச்சி - தன்னை யிகழ்தல், அன்பின் நகை உள்ளும் - அன்போடு கூடிய விளையாட்டினிடத்திலும், இன்னாது - துன்பம் தருவதாம், பாடு அறிவார் மாட்டு - பிறருடைய இயல்பை அறிந்து நடபபவரிடத்திலே, பகையுள்ளும்-பகை யுள்ள விடத்தும், பண்பு உள - நல்ல குணங்களே உண்டாவனவாம.

(வி - ம்.) சயிந்தவனிறந்தால் தங்கை துன்பத்தையடைவாள் ஆதலின் விழிப்பாக இரு என்று தருமர் துரியோதனுக்குச் செய்தியனுப்பி மகிழ்ச்சியடைந்தார். தன்னையிகழ்தல் அன்போடு



கூடிய விளையாட்டினிடத்திலும் துன்பந்தருவதாம். பிறருடைய இயல்பையறிந்து நடப்பவரிடத்திலே பகையுள்ள போதும் நல்ல குணங்களே தோன்றும் என்பதாம்.

## தருமர் செய்தியனுப்பிய கதை

பாரதப் போரின் பதின்மூன்றும் நாளில் அர்ச்சுனனுடைய மகனாகிய அபிமன்னுவைப் பகைவர்கள் தனிமையிற் பிரித்துக் கொன்றனர். இச்செய்தியை உணர்ந்த அர்ச்சுனன் தன்மகனைக்

கொன்றவன் சயிந்தவன் என்பதை உணர்ந்தான். "என் மகனைக் கொன்றவனை நாளைக்குக் கதிரவன் மறைவதற்குள் கொன்றொழிப் பேன், அவ்வாறு கொன்றொழிக்காமற் போனல் தீப்பாய்ந்து உயிர் துறப்பேன்" என்று சூளுரை புகன்றான். இதனைத் தருமர் உணர்ந்தவுடனே, "சயிந்தவனிறந்தால் தங்கை துன்பப்படுவாள் ஆகையால் நாளைப் போரில் விழிப்புடனிருந்து சயிந்தவனைக் காப்பாற்றிக் கொள்வாயாக" என்று துரியோதனனுக்குச் செய்தி யனுப்பினர். இதனால் தருமர் பகைவரிடத்திலும் பண்புடையவ ராகத் திகழ்ந்தது நன்கு வெளியாயிற்று.

## நன்றியில் செல்வம்

**101.** செப்பு மிருநிதிகள் சேர்ந்துங் குபேரனுக்
கெப்பொருளா லென்னு மிரங்கேசா—கைப்பொருள்
அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம் பெற்றா
டமியண்மூத் தற்று.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, குபேரனுக்கு - அளகாபுரிக் கிறைவனாகிய குபேரனுக்கு, செப்பும் - உயர்வாகச் சொல்லும், இருநிதிகள் - சங்கநிதி பதுமநிதிகள், சேர்ந்தும் - சேர்ந்திருந்தும், எப்பொருளால் - எந்தப் பொருளால், என் ஆம் - என்ன பயனுண்டாகும்? கைப்பொருள் அற்றார்க்கு - கையிலே பொருளில்லாத வறியவர்களுக்கு, ஒன்று ஆற்றாதான் செல்வம - ஒரு மூலமும் உரையும்

பொருளைக் கொடாதவனுடைய செல்வமானது, மிகநலம் பெற்றாள் - மிகுந்த அழகு வாய்ந்த ஒருத்தி, தமியள் - தனித்தவளாக இருந்து, மூத்த அற்று - அகவையில் முதிர்ந்த அத்தன்மையை உடையது.

(வி - ம்.) குபேரனுக்குச் சங்கநிதி பதுமநிதி முதலிய பெரும் பொருள்களிருந்தும் அப்பொருள்களால் அவனுக்கு என்ன நன்மையுண்டாகும்? வறியவர்கட்கு ஒன்றைக் கொடாதவனுடைய செல்வமானது அழகிய பெண்ணொருத்தி தனித்தவளாகவேயிருந்து அகவையில் முதிர்ந்த அத்தன்மையை உடையது என்பதாம்.

## குபேரன் கதை

திக்குப் பாலகர்களில் ஒருவனாகிய குபேரனுக்குச் சங்கநிதி பதுமநிதி முதலிய அளவற்ற பெரும் பொருள்களிருக்கின்றன. உலகத்தில் வேறெவரிடத்திலும் இல்லாத பெருஞ்செல்வம் தன்னிடத்திலே சேர்ந்திருக்க வேண்டும் என்னும் எண்ணத்தோடு அவன் அச்செல்வத்தைச் சேர்த்து வைத்திருக்கின்றான். அச் செல்வம் எட்டி பழுத்ததைப்போல் யாருக்கும் பயனற்றது. இச் செல்வம்

வள்ளல்களிடத்திலேயிருப்பின் வாரிவழங்கிப் பயன் பெறச் செய்வர். குபேரன் அவ்வாறு செய்யாதபடியால் அவன் செல்வம் அழகியபெண் திருமணமில்லாமலே தனித்திருந்து அகவையில் மூத்துப் பயனற்றுப் போதலைப் போலப் போகின்ற தாகிய பண்பினையுடையதாக அமைந்துவிட்டது.

### நாணுடைமை

102. வாவி புகுந்த மகிபன் தனதுயிரை
ஈவதற்குப் போந்தா
னிரங்கேசா—ஆவதனால்
நாணு லுயிரைத் துறப்ப ருயிர்ப் போருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, வாவி புகுந்த மகிபன்-தடாகத்திலிறங்கிய துரியோதனன், தனது உயிரை ஈவதற்கு - தன் உயிரைக் கொடுப்பதற்கு, போந்தான்-வெளிப்பட்டு வந்தான், ஆவதனால் - ஆகையால், நாண் ஆள்பவர் - நாணத்தின் சிறப்பை உணர்ந்து அதனை மேற்கொண்டிருப்பவர், நாணல்-நாணத்தைக் காக்கவேண்டு மென்னும்

துணிவால், உயிரை துறப்பர் - தம்முடைய உயிரை நீக்குவார்கள், உயிர் பொருட்டால் - உயிரின் பொருட்டு, நாண் துறவார்-நாணத்தை விடமாட்டார்கள்.

(வி - ம்.) தவஞ்செய்து இறந்தவர்களை எழுப்பும் பொருட்டுத் தடாகத்தில் புகுந்த துரியோதனன் தன்னுயிரை விடுவதற்காகக் கரையேறினான். நாணத்தின் சிறப்பையுணர்ந்து அதனை விடாது மேற்கொண்டொழுகுவோர், நாணத்தால் உயிரைத் துறப்பார்கள், உயிரின் பொருட்டு நாணத்தைத் துறக்கமாட்டார்கள் என்பதாம்.

## துரியோதனன் கதை

துரியோதனன் பாண்டவர்களோடு பதினேழுநாள் போர் செய்தான். தன்னுடைய படைகளையெல்லாம் இழந்தான். பதினெட்டாம் நாட்காலையில் அவர்களையெழுப்பிப் போருக்கழைத்துக் கொண்டு போகலாம் என்று எண்ணினான். யாருக்குந் தெரியாமல் மறைமுகமாக இருக்க வேண்டுமென்று எண்ணிய அவன் ஒரு தடாகத்தில் இறங்கிக் கண்மூடிக் கடுந்தவஞ் செய்து கொண்டிருந்தான். கண்ணன் உதவியினால் இதனையுணர்ந்து கொண்ட வீமன் சிறிதுந்தாழ்க்காமல் விரைவாக அந்த இடத்திற்கு ஓடிவந்தான். தடாகத்திலிருந்த துரியோதனனைப் போருக்கழைத்தான். துரியோதனன் நாம்

கரையேறாது இங் கிருப்பின் போர் செய்தற்கஞ்சி இங்கு ஒளித்துக் கொண் டிருப்பதாக நம்முடைய பகைவர் எண் ணுவர், அது நமக்கு இகழ்ச்சியாகும் என்று நாணங் கொண்டான். விரைவாகக் கரையேறி வந்தான். வீமனோடு போர் செய்து உயிரை



விட்டான். இவ்வாறு துரியோதனன் உயிரின் பொருட்டு நாணைத் துறவாமல் நாணத்தின் பொருட்டு உயிரைத் துறந்தான்.

## குடிசெயல்வகை

**103.** அன்னை யடிமைக் கமுதுகொணர்ந் தெள்ளலுடன் இன்னல் துடைத்தா னிரங்கேசா—உன்னுங்கால் நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த இல்லாண்மை யாக்கிக் கோளல்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!,* **அன்னை அடிமைக்கு** *- கருடன் தன் தாயினுடைய அடிமைத் தனத்தை நீக்கும் பொருட்டு,* **அமுது கொணர்ந்து** *- தேவருலகத்து உணவாகிய தேவாமுதத்தைக் கொண்டு வந்து கொடுத்து,* **எள்ளலுடன் இன்னல் துடைத்தான்** *- தாயின் இழிவையுந் துன்பத்தையும் போக்கினன்,*

உன்னுங்கால் - எண்ணுமிடத்தில் ஒருவனுக்கு நல் ஆண்மை என்பதுஒருவனுக்கு நல்ல ஆண் தன்மை என்று கூறப் படுவது, தான்பிறந்த இல் ஆண்மை ஆக்கிக் கொளல்தான் பிறந்த குடும்பத்தை ஆளுந் தன்மையைத் தனக்கு உண்டாக்கிக் கொள்ளுதலாம்.

(வி - ம்.) கருடன் தன தாயினுடைய அடிமையை நீககும் பொருட்டுத் தேவாமுதத்தைக் கொண்டுவந்து கொடுத்துத் தாயினுடைய இழிவையும் அடிமையையும் போக்கினான். ஒருவனுக்கு நல்ல ஆண் தன்மை என்று கூறப்படுவது தான் பிறந்த குடும்பத்தை ஆளுந்தன்மையைத் தனக்கு உண்டாக்கிக் கொள்ளுதல் என்பதாம்.

## கருடன் கதை

விநதை என்பவளும் கத்துருவை என்பவளுங் காசிப முனிவரிடம் போய்த் தங்கட்கு மக்கட்பேறு வேண்டுமென்று



கேட்டார்கள். இருவரும் அக்காளுந் தங்கையுமாவர். அவர் விநதையைப் பார்த்து, “உனக்கு எத்தனை மக்கள் வேண்டும்?” என்று கேட்டார். அவள், “எனக்கு இருவர் போதும்” என்றாள். கத்துருவையைக் கேட்டபோது அவள் தனக்கு ஆயிரம் பிள்ளைகள் வேண்டும் என்றாள்.

முனிவர் இருவரையும் பார்த்து, "அவ் வாறே கொடுத்தோம் போங்கள்" என்றார். சில நாட்களில் இரு வருங் கருவுற்றார்கள். இளையவளாகிய கத்துருவை ஆதிசேடன் முதலிய ஆயிரம் மக்களைப் பெற்று மகிழ்ந்தாள். மூத்தவளாகிய விநதைக்கு இரண்டு முட்டைகள் பிறந்தன. பிறந்து நெடு நாளாகியும் வெடிக்காமலிருந்த படியினால் அவைகள் அழுகிப் போயினவோ என்னவோ என்று ஐயுற்றாள். ஒரு முட்டையை உடைத்துப் பார்த்தாள். அதிலிருந்து அருணன் தோன்றினான். அவனுக்கு உருவம் இடுப்புவரையில் உண்டாகியிருந்தது. மற்றவையில்லாதபடியினால் முடவனாகவிருந்தான். அவன் தன்னுடைய தாயைப் பார்த்து, "நீ பொறுமையில்லாமல் முட்டையை உடைத்துப் பார்த்தபடியினால் நான் முடவனானேன். மற்ற நாட்களுஞ் சென்று பிறந்திருந்தால் பெரிய வீரனாவேன். என்னை நீ இவ்வாறு முடவனாக்கிய படியினால் உன்னுடைய தங்கைக்கு அடிமையாகக் கடவாய்" என்று தீ மொழி பகர்ந்தான். பிறகு தனக்குப்பின் பிறக்கப் போகுங் கருடனால் அடிமைத்தனம் நீங்குமென்றான். தான் கதிரவனுக்குத் தேரோட்டியாகச் சென்றான்.

பிறகு விநதை மற்றொரு முட்டையை விழிப்புடன் பாது காத்து வந்தாள். அந்நாள் தேவேந்திரனுடைய குதிரையாகிய உச்சைச்சிரவம்

ஓரிடத்தில் புல் மேய்ந்து கொண்டிருந்தது . அதைக்கண்ட விநதை "இக்குதிரை சுத்த வெள்ளை" யென்றாள் . கத்துருவை, "இல்லை வாலில் கருமையிருக்கிறது" என்று சொன்னாள். இதைப்பற்றி இருவருக்குஞ் சொற் போர் மூண்டது . கத்துருவையின் வஞ்சனையால் விநதை கத்துருவைக்கு அடிமையானாள். பிறகு கருடன் பிறந்தான். அவன் தாயினுடைய அடிமைத் தன்மையை உணர்ந்தான். தேவருலகத்திற்குப் போய் அமுதங்கொண்டுவந்து கொடுத்துத் தன்னுடைய தாயின் அடிமைத் தனத்தைப் போக்கினான். இவ்வாறு கருடன் தன்



னுடைய நல்லாண்மையினால் தாயின் அடிமையைப் போக்கி இல்லாண்மையாக்கிக் கொண்டான்.

உழவு

104. வன்பா ரதத்தலங்கை வைத்தார்க்
கெதிரில்லை என்பா ரதனால் இரங்கேசா—முன்பார்
உழவா ருலகத்தார்க் காணி யஃதாற்று தெழுவாரை
யெல்லாம் பொறுத்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, வன் பாரதத்து-வலிமை பொருந்திய

பாரதப் போரில், அலம் கை வைத்தார்க்கு - கலப்பைப் படையைக் கையில் வைத்துக் கொண்டிருந்த பலராமர்க்கு, எதிர் இல்லை என்பார் - எதிர் நின்று போர் செய்பவர் இல்லையென்று கண்ணன் முதலியோர் எண்ணியது போலவே நாளைக்கும் உலகோர்கள சொல்லுவார்கள், அதனல் - ஆகையால், முன்பார் உழு வார் - முதன்மையாய் நின்று நிலத்தை உழுகிறவர்கள், அஃது ஆற்ருது - அவ்வுழவுத் தொழிலைச் செய்ய முடியாமல், எழுவாரை - எல்லாம் பொறுத்து - வேறு தொழில் செய்பவர்களையெல்லாம் தாங்குகிறபடியால், உலகத்தார்க்கு - உலகத்தாராகிய தேர்க்கு, ஆணி - அச்சாணியாவார்கள்.

(வி - ம்.) பாரதப் போரில் கலப்பைப் படையைக் கையில் வைத்துக் கொண்டிருந்த பலராமர்க்கு எதிர் நின்று போர் செய்பவர் இல்லையென்று கண்ணன் முதலியோர் எண்ணியது போலவே நாளைக்கும் உலகத்தார்கன் கூறுவார்கள். ஆன படியினுல் முதன்மையாக நின்று உழவுத் தொழிலைச் செய்கிறவர்கள் அவ்வுழவுத் தொழிலைச் செய்ய முடியாமல் வேறு தொழில் செய்பவர்களை யெல்லாம் தாங்குகிறபடியால் உலகத் தாராகிய தேர்க்கு அவர்கள் அச்சாணியாவார்கள் என்பதாம்.

## பலராமர் கதை

பாரதப் போரில் பாண்டவர் பக்கத்தில் கண்ணபிரான் இருந்தார். பலராமரும் மற்ற வீரர்களும் துரியோதனன் பக்கத்தில் இருந்தார்கள். கண்ணபிரான் வெற்றி தோல்வி எவ்வாறிருக்குமோ என்று ஐயங் கொண்டார். பலராமருடைய கலப்பைப் படைக்கு முன் நின்று போர் செய்து வெற்றி பெறுவது மிக அருமை . இதனை நன்குணர்ந்த கண்ணபிரான் வஞ்சனை செய்து பலராமர் பாரதப் போரில் இருக்காமல் புனித நீர்ப்பயணத்திற்கு அனுப்பி விட்டார். பலராமரைப்போல் கலப்பையைப் படைக்கலமாக வைத்து உழுவாரெல்லாம், அவ்வாறு உழுதல் செய்யாது பிற தொழிலைச் செய்வா ரை யெல்லாம் தாங்குகிறபடியால் உலகத்தாராகிய தேருக்கு அச் சாணியாவார்கள் என்றார்.

## நல்குரவு

105. காவலனும் பாஞ்சாலன் கண்டு துரோணரைநீர்
ஏவரென்று ரன்றே இரங்கேசா— தாவில்
அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, காவலன் ஆம் பாஞ்சாலன - அரசு செய்து கொண்டிருந்த பாஞ்சால நாட்டு மன்னன், துரோணரை கண்டு - தன் பழைய நண்பராகிய துரோணரைப் பார்த்து, நீர் , எவர் என்றான் அன்றோ - நீர் யார் என்று கேட்டானல்லவோ, ஆகையால் தாவு இல் - கெடாத, அறம் சாரா நல்குரவு அறத்தொடு பொருந்தியிராத வறுமையைப் பெற்றவன், ஈன்ற தாயானும் - பெற்ற தாயினாலும், பிறன் போல நோக்கப்படும் - வேறானவனைப் போலப் பார்க்கப்படுவான்.



(வி - ம்.) பாஞ்சால மன்னன் துரோணரைப் பார்த்து அவர் பழைய நண்பராக விருந்தும் "நீர் யார்? " என்று உசாவினன், அறத்தொடு பொருந்தியிராத வறுமையமையப் பெற்றவன் தன்னுடைய தாயாலும் இகழப்படுவான் என்பதாம்.

## பாஞ்சாலன் கதை

பாஞ்சால மன்னனும் துரோணச்சாரியாரும் இளம் பருவத்தில் ஓர் ஆசிரியரிடத்திலே வில்வித்தை கற்றனர். இருவருக்கும் நட்பு மிகுதியாக இருந்தது. அப்போது பாஞ்சாலன்

துரோணரைப் பார்த்து, " நான் உம்மை என்றும் மறவேன். நான் அரசாட்சி செய்கிற காலத்தில் என்னுடைய நாட்டில் உமக்குப் பாதி கொடுக்கிறேன்'' என்று கூறினன். பிறகு பாஞ்சாலன் அரசாளுங் காலத்தில் துரோணர் பாற்பசு ஒன்றின் பொருட்டுப் பாஞ்சாலனிடஞ் சென்றார். அவன் இவரைக் கண்டதும், "நீர் யார்?'' என்று உசாவினன். மேலும் பலவாறு இகழ்ந்துரைத்தான். துரோணர் வருந்தித் திரும்பினர்.

இரவு

106. அங்கியும்பர் கோன்கா வருந்தநினைந்
தர்ச்சுனன்பால்
இங்கிதமாய்ப் பெற்ற னிரங்கேசா—மங்கா திரத்தலு
மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றுதார் மாட்டு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, அங்கி ; தீக்கடவுள, உம்பர்கோன்கா - தேவேந்திரனுடைய தாகிய காண்டவ வனத்தை, அருந்த நினைந்து - புசித்தற் கெண்ணி, அர்ச்சுனன்பால்-அருச்சுனனிடத்தில், இங்கிதம் ஆ பெற்றான் - யாதொரு தடையுமில்லாமல் மனமகிழ்ச்சி யோடு கொடுக்கப் பெற்றான்.

கரததல் - மறைத்துக் கொள்ளுதலே, கனவிலும் தேற்ருதார் மாட்டு - கனவினும்





அறியாதவர்களிடத்தில், மங்காது - கூசாமல், இரத்தலும்- ஒன்றனைக் கேட்டலும், ஈதலே போலும் - கொடுப்பதையே போன்றதாம்.

(வி - ம்.) தீக்கடவுள் தானருந்த அருச்சுனனிடத்திலே காண்டவ வனத்தைக் கேட்டு மகிழ்ச்சியோடு பெற்ருன். கொடுக்கத்தக்க பொருளை மறைத்து வைத்துக் கொள்ளாதவர்களிடத்திலே ஒன்றனைக் கேட்டலும் கொடுப்பதைப் போன்று சிறந்ததே என்பதாம்.

## காண்டவ தகனக் கதை

தீக்கடவுள் காண்டவ வனத்தை உண்ணுதற்கு எண்ணங் கொண்டு தன்னுடைய கருத்தை அருச்சுனனிடத்திலே தெரியப் படுத்தினன். அவ்வனம் உம்பர்கோனுக்குரியது. ஆயினும் அருச்சுனன் அதைக் குறித்துச் சிறிதும் கவலை கொள்ளாது "அவ்வாறே உண்ணுக" என்று கட்டளையிட்டான். தன்கா அழியாவாறு இந்திரன் முகில்களைக் கொண்டு தடுக்க முயன்றனனுயினும் பயன்படவில்லை. வனம்

முழுவதையும் தீக்கடவுள் உண்டொழித்தான். அருச்சுனனிடத்தில் அவ் வனத்தைக் தீக்கடவுள் உண்ணுதற்குப் பெற்றது தீக் கடவுளுக்கு மிகுந்த மகிழ்ச்சியையே அளித்தது.

## இரவச்சம்

107. சென்று பலிபக்கல் செங்கைவிரித்
தேற்றல்பழு தென்றுகுன்றி நின்று
யிரங்கேசா—நன்றிதரும் ஆவிற்கு நீரென் றிரப்பினு
நாவிற் - கிரவி னிளிவந்த தில்.

(இ - ள்.) இரங்கேசா – அரங்கநாதப் பெருமாளே! பலி பக்கல் - மாபலிச் சக்கரவர்த்தியினிடத்தில், சென்றுபோய், செங்கை விரித்து ஏற்றல் பழுது என்று - உன் மூலமும்



னுடைய இரண்டு கைகளையும் நீட்டி விரித்து ஏற்பது இழிவு என்று நினைத்து, குன்றி நின்றாய் - குறளாய்க் குறுகி நின்றாய், ஆவிற்கு - பசுவுக்கு, நீர் என்று-தண்ணீர் தருதல் வேண்டுமென்று, இரப்பினும்-ஒருவர் இரந்தாலும், இரவின் - அவ்விரத்தலைப் போல, நாவிற்கு - நாக்குக்கு,

இளிவந்தது இல் - இழிவை யுண்டாக்கக் கூடியது வேறொன்றும் இல்லை யென்பதாம்.

(வி - ம்) மாபலிச் சக்கரவர்த்தியினிடத்தில் சென்று மண்ணையிரத்தல் மிக இழிவு தரத் தக்கது என்று குறளாகி நின்றாய்; ஒருவன் ஆவுக்குச் சிறிது நீர் வேண்டுமென்று இரந்தாலும் அவ்விழிவு கொடிய இழிவேயாம். அவ்விரவைப் போல இழிவையுண்டாக்கக் கூடியது வேறு ஒன்றும் இல்லை என்பதாம்.

## மாபலியிடத்தில் இரந்த கதை

மாபலி மன்னன் மூவுலகையுந் தனக்கு உரிமையாக்கிக் கொண்டு அவற்றை வேள்வியில் அந்தணர்கட்குத் தானஞ் செய்ய எண்ணியிருந்தான். தேவர்கட்கு அச்சமுண்டாகியது. மாபலி இவ்வாறு செய்வானாகில் நமக்குத் தங்க இடங் கிடைக்காதே என்று அவர்கள் எண்ணினார்கள். திருமாலிடஞ் சென்று முறையிட்டுக் கொண்டார்கள். திருமால் அவர்கட்குத் தெளிவுரை கூறி அனுப்பினார். குள்ள அந்தணனாக வடிவங் கொண்டு மெள்ள வந்தார். மாபலியின் வேள்விச்சாலைக்குச் சென்றார். தமக்கு மூவடி மண் வேண்டும் என்று கேட்டார். அவன் அவ்வாறு கொடுக்கவே மண்ணுலகை ஓரடியிலும் விண்ணுலகை ஓரடியிலும் அளந்து விட்டு மூன்றாவதடியை

அவனுடைய தலையிலே வைத்து அமுத்தி அவனைத் தொலைத்தார். எல்லாவற்றையும் இரத்தல் இழிவென்றே திருமால் இவ்வாறு வஞ்சகமாகப் பற்றினார்.



கயமை

108\. தேனிருந்த சொல்லாளைத் தேர்வேந்தர்
காணவுடை ஏனுரிந்தான் மேனா
ளிரங்கேசா—ஆனதனால் நன்றறி வாரிற் கயவர்
திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, மேல் நாள் - முன்னாளிலே, தேன் இருந்த சொல்லாளை தேன்போலும் இனிய மொழியினையுடைய திரௌபதியை, தேர்வேந்தர் காண - தேரினையுடைய அரசர்கள் பலருங் காணுமாறு, உடை ஏன் உரிந்தான் - துகிலை என் உரிந் தான், ஆனதால் - ஆகையால், நன்று அறிவாரில் - தமக் குறுதியான நல்லவைகளை அறிபவரைக் காட்டினும், கயவர் திரு உடையர் - கீழ்மக்கள் நன்மையுடையவர்களாவர், நெஞ்சத்து - மனத்தினிடத்தில், அவலம இலர் - அவை

காரணமாகக் கவலையில்லாதவராவர்.

(வி - ரை.) துரியோதனன் முன்னாளிலே அரசர்கள் கூடிய பேரவையில் திரௌபதியினுடைய துகிலையுரிந்தும் அதனால் சிறிதும் கவலையற்றவனாக விருந்தான்; தமக்குறுதியான நல்லவைகளை அறிந்துள்ளவர்களைப் பார்க்கினும் அறிவற்ற கீழ்மக்கள் மனத்தினிடத்திலே கவலையற்றவர்களானபடியால் மிகுந்த நன்மையுடையவர்களாவர் என்பதாம்.

## துகிலுரிந்த கதை

துரியோதனன் அந்தப்புரத்திலேயிருந்த திரௌபதியை அரசர்கள் கூடிய அவைக்குக் கொண்டுவந்து அவளுடைய துகிலையுரியச்செய்து அதனால் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தான். அவையிலிருந்த அரசர்கள் அனைவரும் மனம் வருந்தினார்களாயினும் துரியோதனன் அறிவற்ற கயவனாக இருந்தபடியால் அதனால் ஏற்படுகிற இழிவைச் சிறிதும் எண்ணிப் பார்க்காதவ



னாக விருந்தான். அதனால் அவனுக்குச் சிறிதுங் கவலையுண்டாகவில்லை. நல்லவைகளை உணர்ந்தவர்களைப் பார்க்கினும் உணராத கீழ்மக்கள் மனக்கவலையற்றவர்களாக விளங்குவார்கள் என்பது துரியோதனனிடத்தில் நன்கு விளங்கியது.

---

# ௩. காமத்துப்பால்

## களவியல்

### தகையணங்குறுத்தல்

109. சுந்தர மாமகலி தோள்தோய்ந்து பத்துநூ
றிந்திரன்கண் பெற்றா
னிரங்கேசா—இந்துமுறி
ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, இந்திரன் - இந்திரனானவன், சுந்தரம் ஆம் - அழகிய, அகலி தோள் தோய்ந்து - கௌதம முனிவருடைய மனைவியாகிய அகலிகையினுடைய தோள்களைச் சேர்ந்து, பத்து நூறு கண் பெற்றான் - ஆயிரங் கண்கள் பெற்றான்; ஞாட்பினுள் -போர்க்களத்தில், நண்ணாரும் - பகைவர்களும், உட்கும் என் பீடு -

அஞ்சுவதற்கேதுவாகிய என்னுடைய தோள்வலி, இந்து முறி - பிறைத்திங்களைப் போன்ற, ஒள்நுதற்கு - ஒளிபொருந்திய நெற்றியினையுடைய இப் பெண்ணிடத்தே, உடைந்தது - அழிந்து விட்டது.

(வி - ம்.) இந்திரனானவன் அகலிகையினுடைய தோளைச் சேர்ந்து ஆயிரங்கண்களைப் பெற்றான்; போர்க் களத்திலே பகைவர்களும் அச்சத்தையடையும் என்னுடைய தோள்வலி ஒளிபொருந்திய நெற்றியினையுடைய இந்தப் பெண்ணி னிடத்திலே அழிந்து போய் விட்டது என்பதாம்.



## இந்திரன் கதை

கௌதம முனிவருடைய மனைவியாகிய அகலிகையிடத்திலே இந்திரன் அளவுகடந்த மோகங் கொண்டிருந்தான். எவ்வாறேனும் அவளைத் தழுவி மகிழ வேண்டுமென்று எண்ணியவனும் அதற்குத் தகுந்த சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு நாள் நள்ளிரவில் கௌதம முனிவருடைய இருப்பிடத்திற்கு அண்மையிற் சென்று கோழி வடிவம் எடுத்துக் கொண்டு கூவினான். அதனால் விழித்துக் கொண்ட கௌதமர் பொழுது விடியுஞ் சமயமாயிற்று என்று

எண்ணினர். எழுந்து நீராடுவதற்குச் சென்றார். தனிமையாக உறங்கிக்கொண்டிருந்த அகலிகையிடத்திற்கு இந்திரன் கௌதமரைப் போலவே வடிவமெடுத்துக் கொண்டு சென்றான். அவளை ஏமாற்றித் தழுவினான். நீராடச் சென்ற கௌதமர் பொழுதுவிடியவில்லை என்பதை உணர்ந்தார். அறிவுப் பார்வையினாலே தம்முடைய இருப்பிடத்திலே நிகழுந் தீமையை உணர்ந்தார். விரைந்து திரும்பி வந்தார். இந்திரன் பூனையுருக் கொண்டு ஓடினான். இந்திரனுடைய சூதைக் கௌதமர் உணர்ந்துகொண்டார். அவனுடைய உடலிலே ஆயிரம் பெண்குறிகள் உண்டாக வேண்டுமென்று தீமொழி பகர்ந்தார். அவனுடம்பில் அவ்வாறே பெண்குறிகள் உண்டாயின. போரிலே அரக்கர்களை விரட்டி யடித்து வெற்றி கொள்ளும் இந்திரனுடைய ஆற்றல் அவ் விடத்திலே யாதும் பயன்படாமல் போய் விட்டது. அவன் யாராலுங் கண்டு பிடிக்க முடியாத ஓரிடத்திலே போய் மறைந்து கொண்டான்.

குறிப்பறிதல்

110. மேதை விலோசனமு மேவு மிணைநோக்கும்
ஏது கலவிக் கிரங்கேசா—ஆதலால்
கண்ணோடு கண்ணிணை நோக்கொக்கின்
வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, மேதை விலோசனமும் - குறிப்பறியும் கண்களும், மேவும் இணைநோக்கும் - பொருந்திய ஒப்பான பார்வைகளும், கலவிக்கு - கூடுதற்கு, ஏது - காரணங்களாம், ஆதலால் - ஆகையால், கண்ணொடு கண்ணிணை - ஒருவர் கண்களோடு ஒருவர் கண்கள், நோக்கு ஒக்கின் - பார்வையால் ஒக்குமாயின், வாய்ச்சொற்கள் - வாயினாலே பேசுகிற மொழிகள்; என்ன பயனும் இல - எத்தகைய பயனும் அற்றனவாம்.

(வி - ம்.) குறிப்பறிவுள்ள கண்களும் பொருந்திய ஒப்பான பார்வைகளும் கலவிக்குக் காரணங்களாகும் ; ஒருவர் கண்களோடு மற்றொருவர் கண்கள் பார்வையால் ஒக்குமாயின் வாயினாலே பேசுகிற மொழிகளால் எத்தகைய பயனும் உண்டாகா என்பதாம்.

## காதலர் கதை

ஓர் இளைஞன் தன் நண்பனோடு பொழில் ஒன்றிலே சுற்றிக் கொண்டிருந்தான். அவன் தன்னுடைய நண்பனைப் பிரிந்து தனியாகச் செல்லும் போது ஓரிடத்திலே அழகிய மங்கை யொருத்தியைக் கண்டான். அவளுந் தன் தோழியோடு பொழிலில் விளையாட வந்து தோழியைப் பிரிந்து தனியாகச் சுற்றிக் கொண்டிருந்தாள். இவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் கண்டபோது அளவற்ற காதல் கொண்டார்கள். இருவரும் ஒருவரை யொருவர் சிறிது நேரம் பார்த்தார்கள். யாரும் வாயினால் ஒன்றும் பேசவில்லை. இருவருடைய பார்வைக் குறிப்புக்களும் கலவியின்பக் கருத்தையே வெளிப்படுத்தின. ஆகவே அவர்கள் யாதும் உரையாடாமல் ஓரிடத்திற் சென்று கலந்து மகிழ்ந்தார்கள். அதன் பிறகே அவர்களிடம் உரையாடல் நிகழ்ந்தது. கண்ணொடு கண்பார்த்தால் வாயினால் பேசுஞ் சொற்களால் எத்தகைய பயனும் இல்லையென்பது இவர்களிடத்தில் உண்மையாக முடிந்து விட்டது.



## புணர்ச்சி மகிழ்தல்

111. உம்பரிற் றுன்முகனு ருள்ளகங்கை
தோள்தோய இம்பர்வந்தா ரன்றே

இரங்கேசா—அன்பாகத் தாம்வீழ்வார் மென்றோட்
டுயிலி னினிதுகொல் தாமரைக் கண்ண னுலகு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, உம்பர்களில் - தேவர்களில், துன்முகனார் - துன்முகன் என்பவன், கங்கை தோள்தோய - கங்கையினுடைய தோளைத் தழுவுமாறு, இம்பர் வந்தார் அன்றோ - இவ் வுலகில் வந்து பிறந்தானல்லவோ?, அன்பாக - விருப்பத்தோடு, தாம் வீழ்வார் - தாம விரும்புகிற மகளிருடைய, மென்தோள் துயிலின் - மெல்லிய தோள்களிடத்திலே துயிலுந் துயிலைபோல, தாமரை கண்ணன் உலகு - தாமலரக் கண்ணனாகிய திருமாலினுடைய உலகம, இனிது கொல் - இனிமையான தாகுமோ?

(வி - ம்.) தேவர்களில் ஒருவனாகிய துன்முகன் என்பவன் கங்கையினுடைய தோளைத் தழுவும் பொருட்டு இவ்வுலகிலே பிறந்தான். தாம் விரும்பும் மகளிருடைய மெல்லிய தோள்களிடத்திலே துயிலுந் துயிலைப் போலத் தாமரைக் கண்ணனாகிய திருமாலினுடைய உலகமும் இனிதாகமாட்டாது என்பதாம்.

## துன்முகன் கதை

தேவேந்திரனுடைய அவையிலே கங்கை அமர்ந்திருந்தாள். அப்பொழுது காற்றுப்பலமாக அடித்த படியால் அவளுடைய ஆடை காற்றில் விலகியது. அவையிலிருந்தோரனைவரும் கண்களை மூடிக் கொண்டார்கள். துன்முகன் என்பவன் மட்டும் கண்களை அகலத் திறந்து கங்கையின் உறுப்புக்களை இனிது நோக்கினான். இதனைக் கண்ட இந்திரன் அவர்களிருவரும் நிலவுலகிற் பிறந்து இன்பந்துய்க்குமாறு தீமொழி பகர்ந்தான். 154
நீதி சூடாமணி

அவ்வாறே துன்முகன் யயாதிக்கு மகனாகப் பிறந்திருந்தான். கங்கையும் நிலவுலகிற் பிறந்தாள். இருவரும் திருமணம் புரிந்து உலகில் இனிது வாழ்ந்திருந்தார்கள். இவ்வாறு துன்முகனுக்குத் தேவருலகை விட மண்ணுலகமே சிறந்த இன்பம் பயக்கும் இடமாயிற்று.

நலம்புனைந்துரைத்தல்

112. ஒண்கயற்கட் பாரதியை யோது மறைநாவில்
எண்கண்ணன் வைத்தா னிரங்கேசா—பண்பில்
அனிச்சமு மன்னத்தின் றூவியு மாதர் அடிக்கு
நெருஞ்சிப் பழம்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப்

பெருமானே ! எண்கண்ணன் - எட்டுக்கண்களையுடைய நான்முகன், ஒண் கயல் கண் பாரதியை - அழகிய கயலைப்போன்ற கண்களை யுடைய கலைமகளை, மறை ஓது நாவில் வைத்தான் - மறைகளை யோதுகிற தன்னுடைய நாவினிடத்திலே வைத்துக் கொண்டான்; பண்பில் - தன்மையில்; அனிச் சமும் அன்னத்தின் தூவியும - அனிச்சமலரும் அன்னப் பறவையினிறகும், மாதர் அடிக்கு - பெண் களுடைய காலடிகட்கு, நெருஞ்சிப்பழம - நெருஞ்சிப்பழம் போலத் துன்பஞ்செய்வனவாம.

(வி - ம்.) மறைகளை யோதுகிற நான்முகன் தன்னுடைய மனைவியாகிய கலைமகளை நாவினிடத்தினிலே வைத்துக் கொண்டான்; அனிச்சப்பூவும் அன்னப் பறவைகளின் தூவி யும் பெண்களுடைய காலின் அடிப்பகுதிக்கு நெருஞ்சிப் பழத் தைப் போலத் துன்பஞ் செய்வன என்பதாம்.

## நான்முகன் கதை

நான்முகன் தன்னுடைய மனைவியாகிய கலைமகளை மிக மேன்மையாகப் போற்றுகின்றான். அவளை நிலத்திலே விட்டால் மூலமும் உரையும்



அவளுடைய அடிகள் வருந்துமென்று அவளைத்

தன்னுடைய நாவிலே வைத்து நன்கு பாதுகாக்கலானான். இவ்வாறு செய்தலைக் கண்டோர் நான்முகனை வியக்கலாயினர்.

காதற்சிறப்புரைத்தல்

**113.** சேர்ந்து திருமகளைத் தெள்ளமுதை
யும்பருக்கே ஈந்த வுதார மிரங்கேசா—தேர்ந்தக்கால்
பாலோடு தேன்கலந் தற்றே பணிமொழி வாலெயி
றூறிய நீர்.

(இ - ள்.) இரங்கேசர் - அரங்கநாதப் பெருமானே !, திருமகளை சேர்ந்து - பாற்கடலிற் பிறந்த திருமகளைச் சேர்ந்து, தெள் அமுதை- அதில் பிறந்த இனிய அமுதத்தை, உம்பருக்கு - தேவர்களுக்கு, ஈந்த உதாரம் - கொடுத்த கொடையை, தேர்ந்தக்கால் - ஆராய்ச்சி செய்தபோது, பணிமொழி - மெல்லிய சொல்லையுடையவளுடைய, வால் எயிறு ஊறிய நீர் - வெள்ளியபற்களில் ஊறிய நீரானது, பாலொடு தேன் கலந்த அற்று -பாலொடு தேனைக்கலந்தாற் போன்ற அத்தன்மையினை உடையதாம்.

(வி - ம்.) பாற்கடலில் பிறந்த தெள்ளிய அமுதம்போல்பவ ளாகிய திருமகளை நீ யெடுத்துக் கொண்டு மேலும் அதில் தோன்றிய அமுதத்தைத்

தேவர்களுக்குக் கொடுத்த தன்மையை ஆராய்ந்து பார்க்குமிடத்தில் பணிவான சொல்லையுடைய இம் மடந்தையினுடைய வெள்ளிய பற்களில் ஊறிய நீரானது பாலொடு தேனைக் கலந்தாற் போன்ற அத் தன்மையினை உடையதாம் என்னும் உண்மையை நீ அறிந்துகொண்டதே என்பதாம்.

## திருமகள் பிறந்த கதை

தேவர்களும் அசுரர்களும் ஒன்றுகத் திரண்டு ஒரு காலத்திலே பாற்கடலைக் கடைந்தார்கள். அப்பொழுது அதில் திரு- 156 நீதி சூடாமணி

மகள் தோன்றினள். திருமால் அத் திருமகளைத் தாம் எடுத்துக் கொண்டார். மேலுங் கடைந்தபோது அமுதம் தோன்றியது. திருமகளை விரும்பித் தாம் எடுத்துக் கொண்ட திருமால் அமுதத் தைத் தாம் விரும்பவில்லை. அதனை தேவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டார். இதனல் திருமால் தேவாமுதத்திலும் திரு மகளையே அதிகமாக விரும்பினர் என்பது பெறப்பட்டது.

## நாணுத்துறவுரைத்தல்

114. கீசகன்பாஞ் சாலியின்மேற் கேவலமால்

கொண்டுயிர்தோற்
றேசுதலை யுற்ருன் இரங்கேசா— ஆசையெனும்
காமக் கடும்புன லுய்க்குமே நாணுெடு நல்லாண்மை
யென்னும் புணை.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே !, கீசகன் - விராடன் மைத்துனனுகிய கீசகன் என்பவன், பாஞ்சாலியின்மேல் - திரெளபதியின் மீது, கேவலம் மால் கொண்டு - இழிவான காமமயக்கத்தை மேற்கொண்டு, உயிர் தோற்று - தன்னுயிரை இழந்து, ஏசுதலை உற்ருன் - நிந்தனையைப் பெற்ருன், நாண் ஒடு நல் ஆண்மை என்னும் புணை - நாணமும் சிறந்த வீரமுமாகிய தெப்பங்களை, ஆசை என்னும் - பெண்ணுசை என்னும், காமம் கடும்புனல் உய்க்கும் - காமமாகிய கடிய வெள்ளமானது அடித்துக் கொண்டு போய் விடும.*

(வி - ம்.) *கீசகன் என்பவன் திரெளபதியின் மீது இழிந்த காமமயக்கத்தைக் கொண்டு அதனுல் உயிரை இழந்து நிந்தனை யையும் அடைந்தான்; நாணமும் சிறந்த வீரமுமாகிய தெப்பங் களைப் பெண்ணுசையென்னும் காமமாகிய கடிய வெள்ளமானது அடித்துக்கொண்டு சென்றுவிடும் என்பதாம்.*

## கீசகன் கதை

*விராடநகரத்தில் பாண்டவர்கள் மறைந்திருந்தபொழுது விராடன் மனைவிக்குப் பணிப்பெண்ணாகவிருந்த திரௌபதையைக் கண்டு கீசகன் என்பவன் காமங்கொண்டு சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஒருநாள் திரௌபதியானவள் தனிமையில் அகப்பட்டபொழுது கீசகன் அவளை வலுக் கட்டாயஞ் செய்து துரத்தினான். அவனிடம் அகப்படாமலோடிப் போன திரௌபதை மடைப்பள்ளியில் மடைத் தொழிலாளனாக அமர்ந்திருந்த வீமனிடத்தில் செய்தியைக் கூறி வருத்தப் பட்டாள். திரௌபதியைக் கொண்டே கீசகனைக் குறிப்பிட்ட ஓரிடத்திற்கு வருமாறு கூறச் செய்து அந்த இடத்திற்கு வீமன் உருமாறிச் சென்று கீசகனைக் கொன்று தொலைத்தான். இதனால் கீசகன் திரௌபதியின்மீது கொண்ட காமமாகிய வெள்ளமானது கீசகனுடைய நாண் நல்லாண்மை என்னுந் தெப்பங்களை அடித்துக் கொண்டு சென்றமை அறியப்படும்.*

### அலரறிவுறுத்தல்

115. நீந்துகடன் மூழ்கி நெடுநாட் கெளதமனார்
ஏந்தகலி தோய்ந்தா ரிரங்கேசா—மாந்தி
களித்தோறுங் கள்ளுண்டல் வேட்டற்றுற்
காமம்

வெளிப்படுந் தோறு மினிது.

(இ -ள் ) இரங்கே சா - அரங்கநாதப் பெருமாளே !, கௌதமனார் - கௌதம முனிவர், நெடுநாள - பலநாள், நீந்து கடல் மூழ்கி - நீந்துகின்ற கடலிலே மூழ்கியிருந்து, ஏந்து அகலி - அழகையேந்திய அகலிகை என்னும் நங்கையை, தோய்ந்தார் - மணஞ் செய்து கூடினார், மாந்திகள்ளைக் குடித்து, களித்தொறும் — களிக்குந் தோறும், கள உண்டல் - கள்ளைக்குடித்தலே, வேட்டு அற்றுவிரும்புவதைப் போல, காமம - காமமானது, வெளிப்படுந்தோறும்-பிறர் அறிய வெளிப்படுகிறபொழுதெல்லாம், இனிது - இனிமையானதாக அமைந்துள்ளது.

158 நீதி சூடாமணி

(வி - ம்.) கௌதமமுனிவர் பலநாள் கடலிலே மூழ்கி யிருந்து அகலிகை யென்னும் மாதை மணஞ்செய்து கூடினார் ; கள்ளைக் குடித்துக் களிக்குந்தோறும் கட்குடித்தலே விரும்புவ தைப் போலக் காமமானது பிறரறிய வெளிப்படுகிற பொழு தெல்லாம் இனிமையானதாக அமைந்துள்ளது என்பதாம்.

## கௌதமர் கதை

திருமால் தேவர்களுக்காகத் திருப்பாற்கடலைக் கடைந்த காலத்தில் அமுதம் பிறப்பதற்கு முன்னர், திருமகள், திங்கள், அகலிகை, முதலியோர் தோன்றினார்கள். திருமகளைத் திருமால் திருமணஞ் செய்து கொண்டார். திங்களைச் சிவபிரான் அணிந்தார். அகலிகையை யார் மணப்பது என்று சொற்போர் உண்டாயிற்று. அப்பொழுது திருமால் அவர்களைப் பார்த்து, "இக்கடலில் எல்லோரும் விழுங்கள்; அப்படி விழுபவர்களில் எவன் அதிக நாள் கடலிலேயே மூழ்கியிருக்கிறானோ அவனே அகலிகையை மணப்பான்" என்று கூறினார். எல்லோரும் விழுந்து சில நாட்கள் அதிலே மூழ்கியிருந்தார்கள். பிறகு ஒவ்வொருவராக எழுந்து வந்துகொண்டேயிருந்தார்கள். கௌதமர் மட்டும் எழுந்து வராமல் அதில் விழுந்தபடியே அழுந்தியிருந்துவிட்டார். பிறகு தேவர்களும் பிறரும் கௌதமரைக் கூவியழைத்து அகலிகையை அவருக்குத் திருமணஞ் செய்து கொடுத்தார்கள். இதனால் கௌதமர் அகலிகைமீது கொண்ட காதலை அனைவரும் நன்குணர்ந்தனர்.

## கற்பியல்

116. தன்பதியின் செல்கையினுல் தாவினதி
யாயினுள்
என்பர் கவுசி இரங்கேசா— அன்பினுல்
செல்லாமை யுண்டே லெனக்குரை
மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, கவுசி - காதிமகளும இரிசிகர் மனைவியுமாகிய கவுசிகை யென்பவள், தன் பதியின் செல்கையினுல் - தன் கணவ னுடைய பிரிவாற்றுமையினுல், தாவில்நதி ஆயினுள் - அழிவற்ற கோமதியாருக மாறினுள், என்பர் - என் று கூறுவார்கள், அன்பினுல் - காதல் முதிர்ச்சியினுல், செல்லாமை உண்டேல் - நீ யென் னைப் பிரியாமை உண்டாயின், எனக்கு உரை - எனக்கு அதனைச்சொல், மற்று - அது தவிர, நின் வல்வரவு - நீ பிரிந்துபோய் விரைவில் திரும்பி வருதலை, வாழ்வார்க்கு உரை - வரும்*

வரையில் பிழைத்திருப்பவர்கட்குக் கூறு.

(வி - ம்.) கவுசிகை யென்பவள் தன் கணவனுடைய பிரி வாற்ருமையினுல் கோமதி யாருக மாறினுள் என்று கூறுவர். காதல் முதிர்ச்சியினுல் நீ யென்னைப் பிரியாமை உண்டாயின் எனக்கு அதனைக் கூறு; நீ பிரிந்து போய் விரைவில் திரும்பி வருதலை வரும் வரையில் வாழ்ந்திருக்கக் கூடியவர்கட்கு உரை என்பதாம்.



## கௌசிகை கதை

காதியரசன் மகளும் விசுவாமித்திரன் தமக்கையுமாகிய கௌசிகையை இருசிக முனிவர் திருமணஞ் செய்துகொண்டு அவ ளோடு நெடுநாள் பிரியாமலிருந்தார். மக்களைப் பெற்று வாழ்ந் தார். இறுதியில் அம்முனிவர் அவளைப் பிரிந்து பிரலோகத்திற் குப் போய்விட்டார் . அவருடைய பிரிவைப் பொருத கௌசிகை அவரை விடாமல் பின் தொடர்ந்தாள். அது கண்ட முனிவர் அவளைப் பார்த்து, "நீ என் பிரிவைப் பொறுமல் வருந்துவதற்கு யானும் வருந்துகிறேன் . ஆனுலும் நீ என்னேடு கூட வருதல் கூடாது. ஆகவே என்னுடைய பிரிவை

மறந்திருப்பதற்காக நீ யோர் ஆருகி உலகத்திற்கு உதவியாக இரு" என்று அவளைக் கோமதியாருக்கிச் சென்றார். இதனுல் கௌசிகை இருசிக முனிவரின் பிரிவைப் பொறுமை நன்கு பெறப்பட்டது.

பா.ர்மெலிந்திரங்கல்

117. குன்றெடுத்தான் மார்புகுடி கொண்டிருந்தாள் செங்கமலை
என்றும் பிரியா திரங்கேசா—நன்றிகூர் இன்பங்
கடன்மற்றுக் காம மஃதடுங்கால் துன்ப மதனிற்
பெரிது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமாளே!, செங்கமலை - செந்தாமரையில் வாழும் திருமகள், குன்று எடுத்தான் மார்பு - கோவர்த்தனமலையைக் குடையாக எடுத்த திருமாலுடைய மார்பைவிட்டு, என்றும பிரியாது - எப்பொழுதும் நீங்காமல், குடிகொண்டு இருந்தாள் - தங்கி யிருந்தாள்; காமம் - காமமானது, நன்றி கூர் - நன்மை மிகுந்த, இன்பம் - இன்பத்தைச் செய்யும்பொழுது, கடல் - கடல்போலப் பெரிதாம், மற்று - இனி, அஃது - அக் காமமானது, அடுங்கால் - பிரிவினுல் துன்பஞ்செய்யும் .

பொழுது, துன்பம் - அத்துன்பமானது, அதனில் பெரிது அக்கடலினும் பெரிதாகும்.

(வி - ம்.) திருமகளானவள் கோவர்த்தன மலையைக் குடை யாக எடுத்த திருமாலுடைய மார்பிலே தங்கியிருந்தாள். காமமானது நன்மை மிகுந்த இன்பத்தைச் செய்யும்போது கடல் போலப் பெரிதாம்; பிரிவினால் துன்பத்தைச் செய்யும்பொழுது அக் கடலினும் பெரியதாகும் என்பதாம்.

## திருமகள் கதை

திருமகள் திருமாலை நோக்கிக் கடுந்தவம் புரிந்தாள். அம்மால், "நினக்கு வேண்டியது யாது? இத்தகைய தவத்தை எதன் பொருட்டுச் செய்கின்றாய்?" என்று உசாவினர். அதற்கு அவள் "நான் உமக்கு வேறாக இருப்பின் உம்மை விட்டுப் பிரியுமாறு நேரிடவுங் கூடும் ஆகையால் எக்காலத்தும் உம்முடைய மார்பிலேயே தங்கி வாழும் அருள் செய்யவேண்டு" மென்று பேற்றை அடியேனுக்கு வேண்டிக்கொண்டாள். மாலும், "அவ்வாறே யாகுக" என்று

அருள்புரிந்தார். அங்ஙனம் வரம் பெற்ற திருமகள் திருமாலுடைய திருமார்பை விட்டு என்றும் பிரியாதவளாய் இனிது வாழ்ந்து கொண்டிருக்கிறாள்.

## கண்விதுப்பழிதல்

118. காத லருச்சுனனைக் கண்டூர் வசியடைந்த
தேதமன்றோ மேனா ளிரங்கேசா—ஓதில்
கதுமெனத் தாநோக்கித் தாமே கலுழும்
இதுநகத் தக்க துடைத்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, மேனாள் - முன்னாளிலே, ஊர்வசி - ஊர்வசியென்னும் தேவ மாதானவள், அருச்சுனனைக் கண்டு - அருச்சுனனைப் பார்த்து, காதல் அடைந்தது - காதல் கொண்டது, ஏதம்





அன்றோ - குற்றம் அல்லவா?, ஓதில் - உரைக்குமிடத்தில், தாம் - இரண்டு கண்களாகியவை தாம், கதும் என நோக்கி விரைவாகப் பார்த்து, தாமே கலுழும்-பிறகு தாமே யிருந்து அழுகின்ற, இது - இவ்வறியாமையானது, நக

தக்கது உடைத்து - நகைக்கத்தக்க இயல்பையுடையது.

(வி - ம்.) அருச்சுனனைக் கண்டு ஊர்வசியானவள் காதல் கொண்டது குற்றமன்றோ ? விரைவாகக் காதலனைப் பார்த்து விட்டுப் பிறகு தாமே யிருந்து அழுகின்ற இவ்வறியாமையானது நகைக்கத் தக்க இயல்பை யுடையது என்பதாம்.

## ஊர்வசி கதை

அருச்சுனன் தேவலோகத்திற்குச் சென்றான். நிவாத கவச காலகேயரைக் கொன்று இந்திரனுடைய மாளிகையில் இனிது தங்கியிருந்தான் . அப்போது ஊர்வசியானவள் அருச் சுனனைப் பார்த்தாள். அவனுடைய அழகு அவளுடைய உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அவனைத் தனக்கு இணங்குமாறு வேண்டினாள். இந்திரன் தனக்குத் தந்தையாகையால் அவள் தாயாகும் முறையைக் கூறி அவளுக்கு நல்லுரை கூறினான். ஆயினும் அந் நல்லுரைகளை அவள் ஏற்கவில்லை. எப்படியுந் தழுவ வேண்டுமென்று வருந்திப் புலம்பினாள். அருச்சுனன் இடங்கொடாது போகவே அவன் பேடியாகுமாறு தீமொழி கூறிச் சென்றாள் . அருச்சுன னுடைய தன்மையை உணர்ந்து கொள்ளாமல் ஊர்வசி கொண்ட காதலானது இவ்வாறு விளைவித்தது.

பசப்புறுபருவரல்

119. மன்னு மகலிகல்லாய் மாநிலத்தி
லேகிடந்தாள் என்னுமொழி கேட்டா
யிரங்கேசா—துன்னப் பசந்தா ளிவளென்ப தல்லா
லிவளைத் துறந்தா ரவரேன்பா ரில்.



(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, மன்னும் அகலி - இல்வாழ்க்கையில் பொருந்திய அகலிகை, கல்லாய் - கருங்கல்லாய், மாநிலத்தில் - நிலவுலகில், கிடந்தாள் - கிடந்தாள், என்னும் மொழி - என்கிற சொல்லை, கேட்டாய் - விசுவாமித்திரர் கூற அன்று நீ கேட்டறிந்தாய்; துன்ன - பொருந்த, பசந்தாள் இவள் என்பது அல்லால் - இவள்பசலையை அடைந்தாள் என்று என்னைப் பழி சொல்வதல்லாமல், இவளை அவர் துறந்தார் என்பார் இல் - இம்மாதை அவர் நீங்கிப் போய் விட்டார் என்று கூறுவார் எவருமிலர்.

(வி - ம்.) அகலிகை அந்நாளில் கௌதமருடைய தீமொழி யினால் கல்லாகக் கிடந்தாள் என்னுஞ் செய்தியை நீ விசுவாமித் திரர் மூலமாக உணர்ந்தாய்; இவள் பசலை நிறத்தை அடைந்தா ளென்று என்மீது

மற்றவர்கள் பழி கூறுவதல்லாமல் இவளை அவர் துறந்து போய்விட்டார் என்று கூறுவார் எவருமிலர் என்பதாம்.

## அகலிகை கதை

[அகலிகை கல்லான கதை முன்பு கூறப்பட்டது.]

### தனிப்படர்மிகுதி

120. தக்கசுவா காவைத் தருமன் விழுங்கவவள்
எக்கியனை யுண்டா ளிரங்கேசா—மிக்க
• ஒருதலையா னின்னாது காமங்காப் போல
இருதலை யானு மினிது.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே! தருமன் - இயமன், தக்க சுவாகாவை - நல்ல அழகு பொருந்திய சுவாகா என்னும் கன்னிகையை, விழுங்க -



எலுமிச்சம்பழமாக்கி உள்ளே விழுங்கிவைத்திருக்க, அவள் எக்கியனை உண்டாள் - அவள் அவன்மேல் விருப்பமில்லா திருந்தபடியினால்

தீக்கடவுளின்மேற் காதல்கொண்டு அவனை விழுங்கி உள்ளே வைத்திருந்தாள், காமம் - காதலானது, ஒரு தலையான் - ஓரிடத்தில் உண்டாயின், மிக்க - மிகவும், இன்னாது - துன்பஞ் செய்வதாகும், கா போல - காவடிச் சுமையைப்போல, இருதலையானும இனிது - இரண்டு பக்கங்களினும் ஒத்திருக்குமாயின் இன்பஞ்செய்வதாகும்.

(வி - ம்.) இயமனானவன் அழகுபொருந்திய சுவாகா தேவியை எலுமிச்சம்பழமாக்கி உள்ளே விழுங்கிவைத்திருந் தான் ; அவளோ அவன்மீது விருப்பமில்லாமல் தீக்கடவுளின் மேற் காதல்கொண் டு அவனை விழுங்கி உள்ளே வைத்திருந்தாள். காமமானது ஒருபக்கத்தில் மட்டும் உண்டாயின் துன்பஞ் செய்வதாகும், காவடிச் சுமையைப்போல இரண்டுபக்கங் களினும் ஒத்திருக்குமாயின் இன்பஞ் செய்யும் என்பதாம்.

## சுவாகாதேவி கதை

சுவாகாதேவி என்னும் பெண் மிகுந்த அழகுடையவளாக விருந்தாள் . ஆகவே நமன் அவள்மீது காதல் கொண்டு அவளைத் திருமணஞ் செய்துகொண்டான். அவனுடைய அழகை விரும்பி யாராவது அவளைக் கொண்டுபோய் விட்டால்

என்ன செய்வது என்று எண்ணிய இயமன் அவளை எலுமிச்சம்பழமாக்கி விழுங்கி உள்ளே வைத்திருந்தான். தனக்கு அவள் மீது விருப்பமுண்டான போதுமட்டும் எலுமிச்சம்பழத்தைக் கக்கிப் பெண்ணாக்கி அவளோடு மகிழ்வது வழக்கம். இந்திரவனம் என்னுமிடத்திற்குச் சென்ற இயமன் தன் மனைவியாகிய எலுமிச்சம் பழத்தைக் கக்கிப் பெண்ணாக்கி அவளோடு இனிது மகிழ்ந்து விளையாடிக் கொண்டிருந்தான். பிறகு களைப்பால் மறந்து மனைவியை எலுமிச்சம் பழமாக்கி விழுங்காமலே விட்டு விட்டு உறங்கிவிட்டான். அப்பொழுது அந்த இடத்திற்குத்



தீக்கடவுள் வந்தான். இயமன் சுவாகாதேவி மீது காதல் கொண்டிருந்தானே யல்லாமல் சுவாகாதேவிக்கு இயமன் மீது சிறிதும் காதல் கிடையாது. ஆகவே அவள் தீக்கடவுளைக் கண்ட தும் அவன்மீது காதல் கொண்டு அவனைச் சேர்ந்தாள். இயமன் விழிப்பதற்குள் தீக்கடவுளை ஓர் எலுமிச்சம் பழமாக்கி விழுங்கி உள்ளே வைத்திருந்தாள். நமன் விழித்துக்கொண்டு மனைவியை எலுமிச்சம் பழமாக்கி விழுங்கிக் கொண்டு தன்னுடைய இருப்பிடத்திற்குப் போய் விட்டான். பிறகு தேவர்களும் முனிவர்களும் தீக்கடவுளைத் தேடத் தொடங்கினார்கள். பல விடங்களிலுந் தேடியும் அவனைப்பற்றிய செய்தி யொன்றுந் தெரியவில்லை. திருமாலிடத்திலே சென்று

முறையிட்டார்கள். அவர் மெய்யறிவுப் பார்வையினால் தீக்கடவுள் இருக்குமிடத் தைப் பார்த்தறிந்தார். இயமனை அழைத்து அவன் வயிற்றி லிருந்த சுவாகாதேவியைக் கக்குவித்தார். பிறகு அவளுடைய வயிற்றிலே தீக்கடவுளைக் கக்குவித்தார். தீக்கடவுள் வெளிப் பட்டதும் இயமனுக்குத் தன்னுடைய ஒருதலைக் காமத்தின் உண்மை தெரிந்தது. சுவாகாதேவிக்குத் தன்மீது சிறிதுங் காதல் இல்லை என்பதனை இயமன் அறிந்து கொண்டு அவளை விட்டு விட்டான். ஒருதலைக் காமமுடையோர் நலமுறார் என்பது இயம னிடத்தில் நன்கு விளங்கியது.

## நினைந்தவர்புலம்பல்

**121.** சுந்தோப சுந்தரிகல் சூழ்ந்து பொருதிறந்த
தெந்தவகை மேனு ளிரங்கேசா—சிந்தையால்
உள்ளினுந் தீராப் பெருமகிழ் செய்தலால்
கள்ளினுங் காம மினிது.

(இ - ள். )
இரங்கேசா-அரங்கநாதப்பெருமானே!, மேல் நாள் — முன்னாளிலே, சுந்தோப சுந்தர் - சுந்தன் என்பவனும் உபசுந்தன் என்பவனும், இகல்சூழ்ந்து - ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டி, பொருது-பிறகு போர்செய்து, இறந்தது எந்தவகை -

யால் - மனதால், உள்ளினும் - எண்ணிஞலும், பெருமகிழ் செய்தலால் - மிகுந்த மகிழ்ச்சியைச் செய்கிற படியிஞல், கள்ளினும் - கள்ளைப்பார்க்கிஞும், காமம் இனிது - காமமானது மிகுந்த மகிழ்ச்சியைக் கொடுப்பதஞல் இனிமையானதாகும்.

(வி - ம்.) சுந்தன் உபசுந்தன் என்போர் இருவரும் முன் ஞளிலே பகைமை கொண்டுபோர் செய்து உயிரை விட்டது எதஞல்; மனதால் எண்ணிஞலும் மிகுந்த மகிழ்ச்சியைச் செய்கிற படியிஞல் கள்ளைப் பார்க்கிஞங் காமமானது மிகவும் இனிமையானது என்பதாம்.

## சுந்தோப சுந்தர் கதை

திருப்பாற் கடல் கடைந்த காலத்தில் உண்டாகிய அமுதத்தைத் திருமால் அசுரர்கட்குக் கொடாமல் தேவர்கட்கு மட்டுங் கொடுக்க எண்ணிஞர். மோகினிப் பெண்ஞக உருவம் எடுத்துக் கொண்டு தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையிலே நின்ருர்.

சுந்தன் உபசுந்தன் என்னும் இரண்டு அசுரர்கள் அந்த மாயமோகினியைக் கண்டார்கள். அவர்கள் இருவரும் உடன் பிறந்தவர்கள். அவளைக் கண்டவுடன் இவர்கள், "இவள் எனக்கு வேண்டும் இவள் எனக்கு வேண்டும்" என்று கூறிக்
காமத்தால் மயங்கி ஆளுக்கொரு கையைப் பிடித்து இழுத்தார்கள். இதனைக் கண்ட மோகினி, "இவ்வாறிழுத்தால் நான் யாது செய்வேன்? ஒருத்தியை இருவர் மணப்பது அழகாகுமா? உங்களில் வல்லவரையே மணப்பேன்" என்று கூறினாள். மோகினியின் நோக்கத்தையறியாத அவர்களிருவரும் தத்தம் ஆண்மையைக் காட்டிப் போர்செய்து இருவரும் மாண் டொழிந்தார்கள். காமம் இனிதென மகிழ்ந்து அதனைப் பாராட்டியபடியால் அவர்கட்கு இக்கதி நேரிட்டது.



கனவுநிலையுரைத்தல்

122. செய்தவஞ்சேர் வாணனது செல்வி
கனாநிலையில் எய்தின னன்றே இரங்கேசா—பைய
நனவின னல்கா தவரைக் கனவினால் காண்டலி
னுண்டேன் னுயிர்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்காதப் பெருமானே!, செய்தவம் சேர் வாணனது செல்வி கனாநிலையில் — மிகுந்த தவச்சிறப்பினையுடைய

வாணுசுரனுடைய மகளாகிய உஷை என்பவளின் கனவு நிலைமையில், எய்திணன் அன்றோ - அநுருத்திரன் தோன்றினன் அல்லவா?, பைய-மெதுவாக , நனவினல் நல்காதவரை - விழித்திருக்கையில் இன்பந்தராத தலைவரை, கனவினல் காண்டலின் - கனவிலே யான் காண்கிற படியால், என் உயிர் உண்டு - என்னுயிர் நிலைத்திருக்கின்றது.

(வி - ம்.) வாணுசுரனுடைய மகளாகிய உஷையின் கனவிலே அநுருத்திரன் சென்று அவளுக்கு இன்பம் நல்கி அவளைக் காத்தான்; விழித்திருக்கையில் இன்பந்தராத தலைவரைக் கனவிலே யான் காண்கிறபடியால் என்னுயிர் நிலைத்திருக்கின்றது என்பதாம்.

## உஷையின் கதை

வாணுசுரனுடைய மகளாகிய உஷை என்பவள் கண்ணனுடைய பேரனுகிய அநுருத்திரன் என்பவனைத் தன் கனவிற் கண்டு காதல் கொண்டு வருந்தினுள். அவனை நனவிற் காண வேண்டுமென்று மிகுந்த வேட்கை கொண்டாள். அவனை எளிதில் அவள் அடைய முடியவில்லையாயினும் கனவில் பார்ப்பதைக் கொண்டே தன்னுடைய உயிரை வைத்துக் கொண்டிருந்தாள். பிறகு பூதம் ஒன்று அநுருத்திரன்

உறங்கி யிருந்த கட்டிலோடவனை யெடுத்துக் கொண்டு வந்து உஷையின் 168 நீதி

சூடாமணி

படுக்கையறையில் அவனுடைய படுக்கைக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு மறைந்து விட்டது. இருவரும் பிறகு மகிழ்ந்திருந்தனர். நனவில் காணுதபோது அநுருத்திரனை உ.ஷை .கனவில் கண்டு உயிர் வைத்திருந்தமை இங்குப் பெறப்பட்டது.

பொழுதுகண்டிரங்கல்

123. காக்கும் பதியகலக் காட்டிற் சலர்க்காரி
ஏக்கமுற்ரு ளன்ரே இரங்கேசா— நோக்கில்
பனியரும்பிப் பைதல்கொண் மாலை துனியரும்பித்
துன்பம் வளர வரும்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !. சலர்க்காரி - சலர்க்கரை என்னும் நாகலோக மாது, காட்டில் - தவவனத்தில், காக்கும் பதி அகல - தன்னைக் காப்பாற்றுங் கணவராகிய சலர்க்கரமுனிவர் பிரிந்து போன படியினால், ஏக்கம் உற்ருள் அன்ரே -

விசனமுற்று வருந்தினாளல்லவா? ஆகவே, நோக்கில் - ஆராய்ந்தால், பனி அரும்பி பைதல் கொள் மாலை - குளிர்ச்சியைத் தந்து காம நோயை உண்டாக்கும மாலைப் பொழுதானது, துனி அரும்பி துன்பம் வளர வரும் - வருத்தத்தைத் தந்து துன்பம் அதிகரிக்க வரும்.

(வி - ம்.) சலர்க்கரையென்னும் நாகலோக மாது தன்னைக் காப்பாற்றும் கணவராகிய சலர்க்கர முனிவர் பிரிந்து போன படியினால் ஏக்கமுற்று வருந்தினாள்; குளிர்ச்சியைத் தந்து காம நோயை உண்டாக்கும் மாலைப்பொழுதானது வருத்தத்தைக் கொடுத்துத் துன்பம் மிகுதிப்படுமாறு வரும் என்பதாம்.

## சலர்க்காரி கதை

சலர்க்கர மாமுனிவர் என்பவர் நெடுங்காலந் திருமணஞ் செய்து கொள்ளாமலிருந்தார். அவருடைய பிதுர்கள் திருமணஞ் மூலமும் உரையும்



செய்து கொள்ளுமாறு அவரை வேண்டினார்கள். அதற்கு அம் முனிவர் தம்பெயருடைய பெண் அகப்பட்டால் திருமணஞ் செய்து கொள்வதாகக் கூறினார். நாகங்களின் உடன் பிறந்தாளாகிய சலர்க்காரி என்பவள் கிடைத்தபடியினால் அவளைத்

திருமணஞ் செய்து கொண்டு இல்லறத்தாராகிக் காட்டி விருந்து தவஞ்செய்து கொண்டிருந்தார். ஒருநாள் அவர் அவளுடைய மடியிலே தலைவைத்து உறங்கிக் கொண்டிருந்தார். அப்போது மாலைக்காலம் வந்தது. மாலைக்கடன் கழிக்க வேண்டிய வேளையாயிற்றே என்னும் எண்ணத்துடன் அவரை அவள் எழுப்பினாள். "என்னுடைய கட்டளையில்லாமல் என்னை நீ எழுப்பியபடியால் நீ எனக்கு ஏற்ற மனைவியல்லள்" என்று கூறி அவளைப்பிரிந்து சென்றார். அதனால் அவள் மாலை நேரங்களில் மிக வருந்தி அல்லற்பட்டாற்றினாள்.

### உறுப்புநலனழிதல்

124. மங்கையுமை யோர்பங்கு வாங்கி
மகிணன்பால்
இங்கித முற்று ளிரங்கேசா—செங்கை
முயக்கிடைத் தண்வளி போழப் பசப்புற்ற
பேதை பெருமழைக் கண்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, மங்கை உமை-மங்கையர்க்கரசியாகிய உமையவள், மகிணன் பால் - தன் கணவராகிய சிவபிரானிடத்திலே, ஓர் பங்கு வாங்கி - இடப் பாகத்தைத் தனக்குரிமையாகப் பெற்று, இங்கிதம்

உற்ருள் - இன்பத்தை அடைந்தாள், செங்கை முயக்கிடை - தலைவன் கைகளால் தன்னைத் தழுவியபோது, தன்வலி போழ - அவன் கை நெகிழ்ந்தசமயத்தில் குளிர் காற்று நுழைதலும், பேதை பெருமழைகண் - தலைவியி னுடைய குளிர்ச்சி பொருந்திய கண்கள், பசப்பு உற்ற-பசலை நிறத்தை அடைந்தன.



(வி - ம்.) உமையவள் சிவபிரானிடத்தில் இடப்பாகத்தைத் தனக்கு உரிமையாகப் பெற்று மகிழ்ச்சியை அடைந்தாள். சேர்க்கைக் காலத்தே அவன் கை நெகிழ்ந்த சமயத்தில் குளிர் காற்று நுழைதலும் தலைவியினுடைய குளிர்ச்சி பொருந்திய கண்கள் பசலை நிறத்தையடைந்தன என்பதாம்.

## உமையவள் கதை

மலைமகளாகிய உமையவள் சிவபெருமான் தன்னைப் பிரிந்திருந்தால் துன்பம் உண்டாகும் என்று எண்ணினள். ஆகவே சிவபெருமானை வழிபட்டு நெடுங்காலம் பெரிய தவத்தைச் செய்தாள். சிவபெருமான் அவளுக்குக் காட்சி தந்து உனக்கு வேண்டியதென்ன வென்று கேட்டருளினர். உமையவள் சிவபிரானைப் பார்த்துத் "தங்களுடைய இடப்பாகத்தை அடியேனுக்குத் தந்தருளவேண்டும்"

என்று வேண்டிக் கொண்டாள். சிவபிரான் அதற்கிணங்கி உமையவளுக்குத் தம் முடைய இடப் பாகத்தைக் கொடுத்துப் பிரிவில்லாமற் செய்து அன்றுமுதல் அர்த்தநாரீசுவரர் (பாதிப் பெண் வடி வக்கடவுள்) ஆனார். இதனால் உமையவள் எக்காலத்திலுஞ் சிவபெருமானைப் பிரியாத பெரும் பே ற்றைப் பெற்றாள்.

நெஞ்சொடு கிளத்தல்

125. முன்னமிர திக்கு மொழிந்த பதிதந்த
தின்னல மன்றோ இரங்கேசா—துன்ன
நினைத்தொன்று சொல்லாயோ நெஞ்சே
யெனைத்தொன்றும்
எவ்வநோய் தீர்க்கு மருந்து.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, முன்னம் - முன்னாளில், இரதிக்கு - காமன் மனைவியாகிய இரதிதேவிக்கு, மொழிந்த - அவள் கேட்ட, பதி தந்தது - கணவனாகிய காமனை எழுப்பிக் கொடுத்தது, இன்நலம் அன்றோ - மேலான நன்மை யல்லவோ?, நெஞ்சே-மனமே!,



எவ்வம் நோய் தீர்க்கும் மருந்து - காம நோயைப்

போக்கு

இன்ற மருந்து, எனைத்து ஒன்று-ஏதாவதொன்றை, துன்ன

நினைந்து ஒன்று சொல்வாயோ - பொருந்துமாறு நினைத்து ஒன்றனைக் கூறுவாயோ?

(வி - ம்.) முன்னாளில் காமன் மனைவியாகிய இரதிக்குக் கணவனாகிய காமனை எழுப்பிக் கொடுத்தது மேலான நன்மை யன்றோ? மனமே! காம நோயைப் போக்குகின்ற மருந்து ஏதாவதொன்றைப் பொருந்துமாறு நினைத்து ஒன்றனைக் கூறுவா யோ? என்பதாம்.

## இரதிதேவி கதை

சிவபெருமான் தென்முகக் கடவுளாக அமர்ந்திருந்தார். தேவர்களுடைய வேண்டுகோளால் காமன் அக்கடவுளுடைய நிலையைக் கலைக்க எண்ணினான். அவர் மீது தன்னுடைய மலர்க் கணையைச் செலுத்தினான். உடனே சிவபிரான் தம்முடைய நெற்றிக் கண்ணைத் திறந்து காமனையெரித்துச் சாம்பராக்கினார். இரதிதேவி இதனைக்கண்டு பெரிதும் வருந்தினாள். அப்பொழுது அவள் பலவாறு கூறிப் புலம்பியது எல்லோருடைய

உள்ளத்தையும் கரைத்தது. பிறகு சிவபிரான் காமனை இரதி தேவிக்கு மட்டும் உடலுடையனாய் விளங்குமாறு அருள் செய்து எழுப்பிக் கொடுத்தார்.

## நிறையழிதல்

126. பின்னைக் கினியமொழி பேசிவென்ற மாயவன்போல்
என்னைத்தொண் டாளு மிரங்கேசா—முன்னின்ற
பன்மாயக் கள்வன் பணிமொழி யன்றோநம்
பெண்மை யுடைக்கும் படை.

(இ - ள்.) என்னை தொண்டு ஆளும் இரங்கேசா - என்னை அடிமையாக ஆட்கொண்டருளும் அரங்கநாதப் 172 நீதி சூடாமணி

பெருமாளே!, பின்னைக்கு-சத்தியபாமைக்கு, இனிய மொழி பேசி - இனிமையாகிய மொழிகளைக் கூறி, வென்ற மாயவன் போல் - அவளைத் தன் வழிப்படுத்திய திருமாலைப்போல்; பல் மாய கள்வன் பணிமொழி அன்றோ - பல வஞ்சனைகளை யுடைய க்ள்வனாகிய தலைவன் சொல்லும வணக்கமும

இணக்கமுமான இனிய மொழிகளல்லவோ, நம் பெண்மை

உடைக்கும் படை-நம்முடைய பெண் தன்மையைத் தகர்க்கும்

படைக்கலமாக விளங்குகின்றது.

(வி - ம்.) திருமாலாகிய கண்ணபிரான் சத்தியபாமையி னிடத்திலே இனிய மொழிகளைப் பேசி அவளைத் தம் வழிப் படுத்தினர்; பல வஞ்சனைகளையுடைய கள்வனாகிய தலைவன் சொல்லும் வணக்கமும் இணக்கமுமான இனிய மொழிகளல்லவோ நம்முடைய பெண் தன்மையைப் போக்குகின்ற படைக்கல மாக விளங்குகின்றது என்பதாம்.

## சத்தியபாமை கதை

கண்ணபிரான் ஏழு விடைகளைத் தழுவிப் பின்னைப் பிராட்டி யாகிய சத்தியபாமையைத் திருமணஞ் செய்து கொண்டார். பிறகு அவளிடத்திற் பல இனிய மொழிகளைப்பேசி அவளைத் தம் வழிப்படுத்தினர். மேலும் பல பெண்களை மணந்து அவர்களோடு கூடி வாழ்ந்திருந்தார். சத்தியபாமையிடத்தில் அவர் பல மாய மொழிகளைக் கூறியபடியால் சத்தியபாமை கண்ண னுடையஎண்ணத்திற்கு இணங்கிவிட்டாள்.

127. வஞ்சி யுருக்குமணி மாமால் வருவழிபார்த்
தெஞ்சுமுளம் போலு மிரங்கேசா—பஞ்சணையிற்
கூடிய காமம் பிரிந்தார் வரவுள்ளிக் கோடுகோ
டேறுமென் னெஞ்சு.



(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, வஞ்சி உருக்குமணி - வஞ்சிக்கொடிபோன்ற இடையை உடைய உருக்குமணி, மாமால் வரும் வழிபார்த்து - திருமாலாகிய கண்ணபிரான வரும வழியை எதிர்பார்த்துக் கொண்டிருந்து, உளம எஞ்சும் போலும்-தன் மனவெழுச்சி குறைந்து வாடியிருந்தாள் போலும், பஞ்சணையில் - மெத்தையின்மேல், கூடிய காமம்-கூடிநுகர்ந்த இன்பத்தை மறந்து, பிரிந்தார் - பிரிந்து சென்றவருடைய, வரவு உள்ளி - வருகையை நினைத்து, கோடு கொடு ஏறும் என் நெஞ்சு - என்னுடைய மனமானது மரத்தின் கிளைகளிலும ஏறிப்பார்க்கின்றது.*

(வி - ம்.) *உருக்குமணியானவள் திருமாலாகிய கண்ண பிரான் வரும் வழியை எதிர்பார்த்து*

வாடியிருந்தாள்; கூடி நுகர்ந்த இன்பத்தை மறந்து பிரிந்து சென்றவருடைய வருகையை நினைத்து என்னுடைய மனமானது மரக்கிளைகளிலும் ஏறிப்பார்க்கின்றது என்பதாம்.

## உருக்குமணி கதை

உருக்குமணியின் தந்தை உருக்குமணி திருமணப் பருவம் அடைந்ததை எண்ணி அவளுக்குத் திருமண முயற்சி செய்து கொண்டிருந்தான். உருக்குமணி தன்னுடைய எண்ணத்தை யெல்லாம் கண்ணபிரான் மீதே செலுத்தியிருந்தாள். அவருக்குத் தூது அனுப்பினாள். அவர் வரும் வழியைப் பார்த்து நகரத்தின் புறத்திலே தவஞ் செய்துகொண்டிருந்தாள். கண்ணபிரான் வந்தவுடன் அவரைத் திருமணஞ் செய்து தன்னுடைய மனக் குறையைப் போக்கினாள்.

# அன்பியல்

## குறிப்பறிவுறுத்தல்

128. செட்டிவள்ளி யம்மை சிறுமுறுவல்
கண்டுளத்தின் இட்ட மறிந்தார்
இரங்கேசா—மட்டார் முகைமொக்கு ளுள்ளது
நாற்றம்போற் பேதை நகைமொக்கு ளுள்ளதோன்

றுண்டு.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, செட்டு - முருகக்கடவுள் , வள்ளியம்மை சிறு முறுவல் கண்டு - வள்ளியம்மையாரின் புன்முறுவலைப் பார்த்து, உள்ளத்தின இட்டம் அறிந்தார் - மனவிருப்பத்தை உணர்ந்தார், மட்டு ஆர் - தேன் பொருந்திய, முகை மொக்குள் - அரும்பினிடத்தில், நாற்றம் உள்ளது போல்மணம் அடங்கியிருத்தலைப்போல, பேதை நகை மொக்குள் - தலைவியின் புன்முறுவலிடத்தில், உள்ளது ஒன்று உண்டு- அடங்கியிருப்பதாகிய ஒருபொருள இருக்கிறது.

(வி - ம்.) முருகக்கடவுள் வள்ளியம்மையாருடைய புன் முறுவலைக் கண்டு அம்மையாருடைய உள்ளக் குறிப்பை யுணர்ந்து கொண்டார். அரும்பினிடத்திலே மணம் அடங்கி யிருத்தலைப்போலத் தலைவியின் புன்முறுவலிடத்தில் அடங்கி யிருப்பதாகிய ஒரு பொருள் இருக்கிறது என்பதாம்.

வள்ளியம்மை கதை

வள் ளியம்மையார் திணைப்புனத்திலே தங்கிப் புனங்காத்துக்
கொண்டிருந்தார். அம்மையாரைக் களவு மணம்புரிய விரும்பிய
முருப்பெருமான் திணைப்புனத்திற்குச் சென்று
திருவிளையாடல்கள் மூலமும் உரையும் 175

பல புரிந்தார். பிறகு அம்மையாருடைய உள்ளக் குறிப்பை யுணர்ந்து திருமணஞ் செய்து கொண்டார்.

புணர்ச்சிவிதும்பல்

129. காந்தன் றுகிலரிந்து கானத் தகன்றதன்மை
ஏந்தி மறந்தா லிரங்கேசா—காந்தி
எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோற்
கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.

(இ-ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, காந்தன் துகில் அரிந்து - கணவனாகிய நளன் தன்னுடைய ஆடையிற் பாதியைக் கிழித்துக்கொண்டு, கானத்துகாட்டில்,

அகன்ற தன்மை - நீங்கிய செய்தியை, ஏந்தி மறந்தாள் - தமயந்தி கணவனைக் கண்டபோது அன்பினைத் தாங்கி அதனை மறந்துவிட்டாள்; காந்தி - அழகுக்காக, எழுதுங்கால் - மையெழுதுங்காலத்திலே, கோல்காணு - எழுதுங் கோலைக் காணாத, கண்ணேபோற் - கண்களைப் போல், கொண்கன் - கணவனுடைய, பழி - குற்றத்தை, கண்ட இடத்து-கணவனைக் கண்டபொழுது, காணேன்பார்க்காதவளானேன்.

(வி - ம்.) தமயந்தியானவள் தன்னுடைய கணவன் தன்னைக் காட்டிலே நள்ளிரவில் தனியாக விட்டு விட்டு ஆடையைக் கிழித்துக் கொண்டு போன பழியை அவனைக் கண்டபொழுது அன்பு கொண்டு அப்பழியைக் காணுதவளானுள். மைதீட்டும் பொழுது தீட்டுகிற கோலைக் காணுத கண்களைப் போலக் கணவனைக் கண்டபொழுது அவன் செய்த பழியைக் காணேன் என்பதாம்.



### தமயந்தி கதை

சூதாடி நாடு நகரங்களை யெல்லாம் இழந்து காட்டிற்குச் சென்ற நளன் தன் மனைவியாகிய தமயந்தியை நள்ளிரவில் ஒரு பாழ்ங் கோயிலில் விட்டு விட்டுத் துகிலிலும் பாதியைக் கிழித்துக் கொண்டு போய்

விட்டான். இதனை எண்ணிய பொழுதெல்லாம் தமயந்திக்குத் தன்னுடைய கணவன் மீது அளவு கடந்த சினமும் வெறுப்பும் உண்டாகிக்கொண்டிருந்தன. ஆனால் பிறகு அவனைக் கண்டபொழுது அவன் செய்த குற்றங்களை யெல்லாம் மறந்து அவன் மீது மிகுந்த அன்பு கொண்டு பாராட்டலானாள்.

நெஞ்சொடுபுலத்தல்

**130.** காங்கையர்மீ தாசை கரவாம லம்பையுளம்
எங்கியெரி வீழ்ந்தா ளிரங்கேசா—ஆங்கே தனியே
யிருந்து நினைத்தக்கா லென்னைத் தினிய விருந்ததென்
னெஞ்சு

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே !, அம்பை - அம்பை என்பவள், காங்கையர் மீது - வீடுமர் மேல், ஆசை கரவாமல் - தான் கொண்ட காதலை ஒளிக்காமல், எங்கி எரி வீழ்ந்தாள - ஏக்கமடைந்து தீயிலே விழுந்து இறந்தாள், என் நெஞ்சு - என்னுடைய மனது, தனியே இருந்து நினைத்தக்கால் - தனிமையாக விருந்து எண்ணிய பொழுது, என்னை இனிய இருந்தது - என்னைத் தின்னும் பொருட்டாகவே இருக்கின்றது. ஆங்கு, ஏ : அசைநிலைகள்.

(வி - ம்.) அம்பையானவள் வீடுமர் மேல் கொண்ட காதலை மறைக்காமல் அதனால் ஏக்கமடைந்து தீயிலே விழுந்து இறந்தாள்; நான் தனியே இருந்து என்னுடைய தலைவரை நினைத்தால் என்னைத் தின்று விடுவதற்காகவே என் நெஞ்சு இருக்கின்றது என்பதாம்.

## மூலமும் உரையும் 177

### அம்பை கதை

அம்பையானவள் வீடுமரைத் திருமணஞ் செய்து கொள்ளுதற்குச் செய்த முயற்சியானது பலனளிக்காமற் போகவே அவரைப் பற்றிய எண்ணம் தன்னுடைய உள்ளத்தைப் பற்றி நின்று அரித்துத் தின்றலை உணர்ந்தாள். நாம் உயிரோடிருந்தால் அதிகத் தொல்லையை அடையுமாறு நேரிடும் என்று முடிவு செய்தவளாய்த் தீயிலே விழுந்து மாண்டாள்.

### புலவி

**131.** அன்பா திருநீல கண்ட ரணியிழைபால்
இன்பந் துறந்தார் இரங்கேசா—முன்பாக ஊடி
யவரை யுணர்த்தாமை வாடிய வள்ளி முதலரிந்
தற்று.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப்

பெருமானே . அன்பர் திருநீலகண்டர் - சிவனடியாராகிய திருநீலகண்ட நாயனார், அணி இழை பால் - அழகிய அணிகலன்களை யணிந்த மனைவியாரிடத்தில், இன்பம் துறந்தார் - தாம் நுகர வேண்டிய சிற்றின்பத்தைக் கைவிட்டிருந்தார், முன்பாக - முன்னரே, ஊடியவரை - ஊடல் கொண்டவரை, உணர்த்தாமை - ஊடல் தெளிவியாமை, வாடிய - வாடிப் போன, வள்ளி - கொடியை, முதல் அரிந்தற்று - அதன் அடியிலே அறுத்து விட்டாற் போன்றது.

(வி - ம்.) சிவனடியாராகிய திரு நீலகண்ட நாயனார் தம்முடைய மனைவியிடத்திலே நுகர வேண்டிய இன்பத்தைத் துறந் தார் ; ஊடல் கொண் டவருடைய ஊடலைத் தெளிவியாமை வாடிப்போன கொடியின் அடியை அறுத்துவிட்டாற் போன்றது என்பதாம்.





## திருநீலகண்டநாயனார் கதை

திருநீலகண்ட நாயனார் என்பவர் திருத் தில்லையிலே குயவர் குலத்தில் தோன்றினார் . சிவபெருமான் மீது அன்பு கொண் ட வராய் அவருடைய நஞ்சு பொருந்திய கண்டத்தைத் "திரு நீலக்ண்ட" மென்று

*அடிக்கடி சிறப்பித்துப் பேசிக் கொண் 'டிருந்தார். இதனால்தான் இவருக்குத் திருநீலகண்டர் என்று காரணப் பெயர் உண்டாகியது. இவருடைய இடுகுறிப்பெயர் தெரியவில்லை. இவர் ஒருநாள் விலை மகள் ஒருத்தியின் இல்லத் திற்குச் சென்று திரும்பினர். இதனல் இவருடைய மனைவி இவரிடம் ஊடல் கொண்டாள். திருநீலகண்டர் ஊடலைத் தணிக்க முயன்றும் பயனில்லை. மனைவியார் ஆணைப்படி சிற்றின்பத்தை மறந்து காலத்தைப் போக்கினர். இளமைப் பருவம் போய் முதுமைப் பருவமும் வந்தது. சிவபெருமான் இவருக்கு அருள் புரிந்தார்.*

### புலவிநுணுக்கம்

**132.** சேர்ந்து மணஞ் செய்யமறு சென்மமுனி பக்கல்வரும்
ஏந்திழையைப் போலும்
இரங்கேசா—வாய்ந்தும்மை
இம்மைப் பிறப்பிற் பிரியல மென்றேனுக்
கண்ணிறை நீர்கொண் டனள்.

(இ - ள்.) *இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே ! மறு சென்மம் - அடுத்த பிறவியில், சேர்ந்து மணஞ் செய்ய - கூடித்*

திருமணஞ் செய்துகொள்ள, முனி பக்கல் வரும் - அம்முனிவரிடத்திற்கு வந்த, ஏந்திழையைப் போலும் - ஏந்திய அணிகலன்களையணிந்த நளாயனி என்னுங் கற்புடையாளைப் போல, வாய்ந்து உம்மை-உம்மை மனைவியாக வாய்க்கப்பெற்றுள்ள (யான்), இம்மைப் பிறப்பில் பிரியலன் என்றேன் ஆ - இப்பிறப்பிற் பிரிய மாட்டேம் என்று கூறினேமாக, இதனைக்கேட்ட அவள், கண் - கண் மூலமும் உரையும் **179**

களிலே, நிறை - நிறையுமாறு, நீர் கொண்டனள் கண்ணீரைக் கொண்டாள்.

(வி - ம்.) அடுத்த பிறவியிற் கூடித் திருமணஞ்செய்து கொள்ள அம் முனிவரிடத்திற்கு வந்த நளாயனியைப்போல் எனக்குக் கிடைத்த காதலியைப் பார்த்து; இப்பிறப்பிற் பிரிய மாட்டேம் என்று கூறினேமாக இதனைக் கேட்ட அவள் கண்களிலே கண்ணீரைக் கொண்டாள் என்பதாம். கண்ணீரைக் கொள்ளக் காரணம் மறுபிறப்பில் பிரிவேன் என்றதாகக் கொண்டமை என்க.

## நளாயனி கதை

நளாயனி பன்னெடுங் காலம் தன் கணவராகிய முனிவரோடு வாழ்ந்திருந்தாள். மறு பிறப்பெடுத்த போ ம் அவரை யே மணக் க வேண்டுமென்று எண்ணித் தன்னு டைய எண்ணத்தை முனிவரிடந் தெரிவித்தாள். அதற்கவர் உடன் படவில்லை. சிவபிரானை நோக்கிக் கடுந்தவம் ,ரிந்தாள். சிவபிரான் காட்சிகொடுத்து, "உனக்கு வேண்டிய ர ரம் யாது?", என்று உசாவினர். "கணவனைக் கொடும்" என்று ஐந்து முறை கேட்டாள். ஐந்துமுறை கேட்டபடியால் ஐந்து கணவர்களை அடையுமாறு சிவபிரான் அருள்புரிந்தார். அவள் இறந்து திரௌபதியாகப் பிறந்து பாண்டவர் ஐவரையும் மணந்து கற்புடையவளாகவே வாழ்ந்திருந்தாள்.

ஊடலுவகை

**133**. சத்திய பாமாவூ டல்தணிப்பக் கற்பகத்தை
இத்தலத்தில் தந்தான்
இரங்கேசா—சித்தசற்கும்
ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின்.

(இ - ள்.) இரங்கேசா - அரங்கநாதப் பெருமானே!, சத்தியபாமா ஊடல்தணிப்ப-சத்தியபாமையின் பிணக்கைத் 

தீர்க்கும் பொருட்டு, கற்பகத்தை - கற்பகமரத்தை, இத் தலத்தில் தந்தான் - கண்ணபிரான் நிலவுலகத்திலே கொண்டுவந்து வைத்தார்; சித்தசற்கும் - காமனுக்கும், ஊடுதல் - பிணங்குதல், காமத்திற்கு - காதலுக்கு, இன்பம்இன்பமாகும்; அதற்கு - அவ்வூடலுக்கு, கூடி முயங்கப் பெறின் - கூடித் தழுவப் பெற்றால், இன்பம்-இன்பமாகும்.

(வி - ம்.) சத்திய பாமையினுடைய ஊடலைத் தணிக்குமாறு கண்ணபிரான் விண்ணகத்திருந்த கற்பக மரத்தை மண்ணகத் திலே கொண்டுவந்து வைத்தார்; ஊடுதல் காமத்திற்கு இன்ப மாகும். அந்த ஊடலுக்குக் கூடிமுயங்கப் பெறுதல் இன்ப மாகும் என்பதாம்.

### சத்தியபாமை ஊடிய கதை

நாரதர் கண்ணபிரானைக் காணவந்தார். அப்பொழுது பாரிசாத மலர் ஒன்றைக் கொண்டு வந்து கொடுத்தார். கண்ணபிரான் அம்மலரை உருக்குமணியிடம் அனுப்பினார். இதையுணர்ந்த நாரதர் சத்தியபாமையிடம் போய், "மலரை உனக்குத் தருவார் என்று எண்ணினேன். அதிக அன்பு கொண்டுள்ள உருக்குமணிக்குக் கொடுத்து விட்டாரே"

என்று கலகத்தை உண்டு செய்து விட்டுத் தம் போக்கில் போய் விட்டார். இதனைக் கேட்ட சத்தியபாமை கண்ணபிரானோடு உரையாடாமல் ஊடிப் பிணங்கினாள். கண்ணபிரான் தெய்வ லோகத்திற்குச் சென்று கற்பகமரத்தை வேரோடு பெயர்த்துக் கொண்டு வந்து தம்முடைய தோட்டத்திலே பயிராக்கிச் சத்தியபாமையினுடைய ஊடலைப் போக்கினார்.

நீதிசூடாமணி மூலமும் உரையும்
முற்றுப் பெற்றன

## செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை

[எண் : செய்யுள் எண்]


அக்கன் முதலரக்க 69
அங்கியும்பர் கோன்கா 106

அங்கியுங் குண்டலமு 23
அட்ச ளிதியோற் 70
அட்டகோ ணத்த 34
அந்தணர் மேன்மை 22
அந்தணனைக் கன்மாட 26
அம்பருடன் வேள்வி 95
அம்பிகையை நோக்கி 15
அன்பர் திருநீல 131
அன்னை யடிமைக் 103
ஆகங் குறைந்துருவே 97
ஆண்டு பதின்மூன் 49
ஆர்க்குங் கடனீ 67
ஆன்றசங்கர் போற்ற 73
ஆன்ற சபையி 13
இவ்வுலகை யாளா 89
உத்தங்க ஞேலை 29

உம்பரிற் றுன்முகனை 111
ஒண்கயற்கட் பாரதி 112
ஒன்றி மறித்தான் 39
கண்கொண்டான் பொன்னி 55
கப்பத்தி லேசுகனூர் 36
கன்னற் றெளிந்த 51
காக்கும் பதியகலக் 123
காங்கையர்மீ தாசை 130
காத லருச்சுனனை 118
காந்தன் றுகிலரிந்து 129
காவலனும் பாஞ்சாலன் 105
காளமுனி பாண்டவர் 21
கானக் குரங்கெழ 4
கீசகன்பாஞ் சாலியின் 114

குன்றெடுத்தான் மார்பு 117
கையரிந்தான் மாறன் 44
கொண்டலுறை பூர்கச்சி 2
நீ. சூ.—13

சத்திய பாமாவூ 133
சந்தனுவேந்தேழு 91
சந்யாசி யாய்விசயன் 28

சல்லியனைத் தேருக்கு 52
சார்ந்துதிதி கர்ப்பஞ் 83
சார்ந்துபறை கீறி 50
சித்திரசே னன்கையில் 87
சிந்துபதி தந்தையொடு 38

சிந்துவிடை யேழுமதில் 75
சீதரனைப் பார்த்த 43
சீரிதா மெண்ணை 74
சீர்கொண்ட காவிரி (க)
சுந்தர மாமகலி 109
சுந்தோப சுந்தரி 1
செட்டிவள்ளி யம்மை ௨8
செப்பு மிருதிகள் 101
செய்தவஞ்சேர் வாண 122
செய்துசிவ பூசை 62
சென்று பலிபக்கல் 107
சேர்ந்து திருமகளை 113
சேர்ந்துமணஞ் சய்ய 132
சொல்லுகவெ றங்க 58
சொல்வல் கத்தியர் 90

சொற்றதிகாரம் (உ)
சொல் லார் முனிக்கிறுதி 33
சொர்ணகம்பத் தேம 1
ஜென்ன நிறத்தான் 86
சோமன் சிவாற்பர 65
ஞான சம் பந்தருட 41
தக்ககுரு மைந்த 93
தக்கசுவா காவை 120
தக்க துரி யோதனன் 19
தண்ணார் சடைமுடி 54
தன்பதியின் செல்கை 116
தன்மகிணைற் றேற்றுள் 66



தன்மர் சுரியோ 94

தாக்கி விழிவதிட்டார் 31
தாடகைதன் மைந்தர் 57
தாதை சிலையொடிப்ப 85
தானவர் வேந்தை 81
துஞ்சுவிழிக் கும்ப 61
துன்பமுறுந் தங்கை 100
துன்று புலிக்கிடும்பை 56
துனனு சகுனிகன்னன் 46
தூடணமா மைவருடன் 96
தெவ்வை யிளங்கை 88
தேசஞ்சொல் பத்ரகிரி 37
தேசுபெறு மார்த்தாண்டன் 80
தேசுபெறு மாறன் 9
தேவர் குமாத்தினிடை 72
தேனிருந்த சொல்லாளை 108
தொட்ட தெரிப்பேபான் 68

'ஏதாணை ரடிபமபாடி 92
்டுவனும் பற்குனன் 76
நிட ச் சிறைக்கருடன் 11
நீங்கு டன் மூழ்கி 115
பத்து. ரைன் இல்லம் 5
பாகவத கேட்டு 42
பாந்தண் ணிமேற் 32
பார்வைகல உ ராமன் 71
பிறைசைவரு ாந்தப் (௫)
பின்னைக் இனிய மொழி 126
பீடுபெறு பட்டிவ த்து 35
புத்தனெறி கற்கும் 99
பைத லெனக்கருதி 48
மங்கையுமை யோர்பங 124
மண் பரவு சக்கரத்தை 98
மல்லல் வியாகரண 40

மன்னன்மக முங்கா 3
மன்னு மகவிகல்லாய் 119
மாண்டவியர் சாபத்தை 6
மாதாபி தாலை 84
மாயமா ரீசன் 82
மார்பத் தழுந்துகணை 78
மானவன்மாலி தேவர் 64
முந்து மரந்தறித்த 16
மும்மை யுலகு 24
முன்னமிர திக்கு 125
முன்னோனைப் போரின் 18
மூவரரிச் சந்திரற்கு 30
மேகநா தன்செய்த 59
மேதை விலோசனமு 110
மெய்கொள் கடல்போலு 77

| | |
|---|---|
| யோகமுனி ராகவனை | 45 |
| வஞ்சப் புறவினுடன் | 25 |
| வஞ்சி யுருக்குமணி | 127 |
| வன்சமர்நட் பால் | 10 |
| வன்பா ரதத்தலங்கை | 104 |
| வாசவன் தட்சன் | 79 |
| வாவி புகுந்த | 102 |
| வில் லுக் கதிபன் | 53 |
| விற்ற மனையாளை | 68 |
| வீசு புகழ்விசயன் | 60 |
| வீடணன் வன்மம் | 47 |
| வெள்ளி கொடுத்தல் | 17 |
| வெற்பின் சிறகரிய | 8 |
| வேடவான் மீகர் | 14 |
| வேதம் புகழ்நதியை | 7 |
| வேதவிதி வீமா | 12 |

